# श्रीललितासहस्रनामस्तोत्रम्

(तमिऴ् व्याख्यायुतम्)



श्रीमाते नमः

# ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம்

(தமிழ் விரிவுரையுடன்)

# श्री ललितासहस्रनामस्तोत्रम्

# ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாம ஸ்தோத்திரம்

(தமிழ் உரையுடன்)



பேருரை ஆசிரியர் :

சி. வே. ராதாகிருஷ்ண சாஸ்திரி

வெளியிடுபவர் :

பத்மபூஷணம்

N. ராமஸ்வாமி அய்யர் சாரிடீஸ் ஸொஸைட்டி

திருச்சிராப்பள்ளி-620002. (தமிழ்நாடு)



Padma Bhushan

Sri N. Ramaswami Ayyar

# ஸமர்ப்பணம்

தெய்வஸங்கல்பம் முன்னதாக அறியமுடியாதது. நான் இவ்வரிய வாய்ப்பில் பங்குகொண்டதைவிட இதற்கு வேறு சான்று இருக்கமுடியாது. என்னளவில் இது முன்னதாகத் திட்டமிடப் பெற்ற பணியல்ல. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்திற்கான இந்த அரிய விளக்க நூலை ஒரு பிரசுரகர்த்தர் என்ற அளவில் நான் வெளியிட நேர்ந்ததற்கு தெய்வஸங்கல்பத்தைத் தவிர வேறு ஒன்றும் காரணமாகாது.

நமது சமுதாயத்தின் ஆத்மீக-சமய பாரம்பரியத்தை ஆதார மாகக் கொள்ளாத எந்தக் கல்விதிட்டமும் பயனற்றதாக நிருபிக்கப் பட்டுவிடும் என்று எப்போதும் கருதிவந்த என் தந்தை திருவெய்திய பத்மபூஷண என். ராமஸ்வாமி அய்யர் அவர்களின் புனித நினைவிற்கு இந்நூல் அர்ப்பணமாகிறது. இந்நூலுடன்– வெளியிடுபவன் என்ற முறையில் மட்டுமாவது — நான் தொடர்பு கொண்டதைவிட, அன்னாரது ஆத்மாவிற்கு அதிக திருப்தி தருவது ஒன்று இருக்கமுடியாது.

இந்த விரிந்த கருத்துச்செரிவுள்ள ஸஹஸ்ரநாம விளக்கத் தின் முழுப் பெருமையும் திரு. எஸ். வி. ராதாகிருஷ்ண சாஸ்திரி அவர்களையே சாரும். அவர் தமது பரந்த அறிவாலும் கடும் உழைப் பாலும் இவ்வரிய நூலை உருவாக்கி இந்து சமுதாயத்திற்கு அளித் திருக்கிறார். நம் சமுதாயத்தின் ஆத்மீக அடிப்படையை இந்நூல் நன்கு வலுப்படுத்தும் என நான் திடமாக நம்புகிறேன்.

தேவி ஸ்ரீ அகிலாண்டேச்வரியின் கருணையாலும் அருள்மிக்க காஞ்சீ காமகோடி பீடத்து ஸ்ரீ சங்கராசாரியர்கள் அவர்களது அருள் நோக்காலும் இன்றைய சமுதாயத்திற்கு மிக அவசியமாகத் தேவைப்படும் பல அரிய நூல்களை மேலும் வெளிக்கொணரும் அரிய வாய்ப்பு கிட்டவேண்டும் என்றே நான் பெரிதும் எதிர்பார்க் கிறேன்.

திருச்சி
8—11—79

ஆர். பஞ்சாபகேசன்,
பத்மபூஷண என். ராமஸ்வாமி அய்யர்
சாரிடீஸ் ஸொஸைடி.

॥ ஶ்ரீ: ॥

# ஸ்ரீ ஆசாரியர்களின் ஸ்ரீமுகம்

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்ய ஸ்ரீமத் சங்கர பகவத்பாத ப்ரதிஷ்டித ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிப ஜகத்குரு ஸ்ரீமத் சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீபாதாதேசானுஸாரேண ஸ்ரீமத் ஜயேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீபாதை: சேமுஷீ (சிமிழி) கிராமாபிஜந வேங்கடராம சாஸ்த்ரி குமாராய த்ரிசிர:புரவாஸ்தவ்யாய வைத்ய ச்ரேஷ்டாய ப்ரும்ஹஸ்ரீ ராதாக்ருஷ்ண சாஸ்த்ரிணே க்ரியதே நாராயணஸ்ம்ருதி:

நாம் ஐஹிக ஆமுஷ்மிக மேன்மைகளை அடைவதற்குப் பரமாத்மாவின் அருள் அடிப்படையான காரணமாகும். பரமாத்மா அனேக வடிவங்களில் விளங்கியபோதிலும் அவரைத் தாய் உருவத்துடன் வழிபடுவது சீக்கிரம் நற்பயன்களைக் கொடுக்கக்கூடியதாகும். இக்காரணத்தாலேயே பண்டைய காலத்திலிருந்து துர்வாஸர் முதலிய முனிவர்கள் தேவியான ஸ்ரீ ராஜராஜேச்வரியை வழிபட்டு முக்திபர்யந்தமான பலன்களை அடைந்திருக்கிறார்கள்.

இத்தகைய மஹிமை வாய்ந்த ஸ்ரீ ராஜராஜேச்வரியை இத்தேவியின் ஆஜ்ஞையைப் பெற்று வசினீ முதலிய வாக்தேவிகள் கோடிக்கணக்கான நாமாக்களிலிருந்து மதுர மதுரமான ஆயிரம் நாமாக்களைத் தேர்ந்தெடுத்து இவைகளின் மூலம் துதித்திருக்கிறார்கள். இந்த நாமாக்கள் தான் லலிதா ஸஹஸ்ரநாமம் என்று பெயர் பெற்றிருக்கிறது.

வாக்தேவிகள் இந்த நாமாக்களைத் தொகுத்த முறையே அபூர்வமாய் அமைந்திருக்கிறது. தேவியின் ஸ்வரூபம், அவதாரகாரணங்கள், தேவி தோன்றிய அழகைக் கேசாதி பாதாந்தமாக வர்ணித்திருத்தல், தேவி வசிக்கும் இடங்கள், அவதாரகார்யமான பண்டாஸுரவதம், தேவியின் ஸூக்ஷ்ம ஸ்வரூபங்களான மந்த்ரம், யந்த்ரம், குண்டலினி இவைகளின் வர்ணனை, நிர்குண ஸ்வரூபம், படைப்பு முதலிய ஐந்தொழில்களைப் புரிதல், ஜீவனும் ஈச்வரனுமிருத்தல், தேவியின் மற்ற தோற்றங்கள் முதலியவைகள் இந்த நாமாக்களில் மிக அழகாக விளக்கப்பட்டிருக்கின்றன.

இந்த ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்திற்குச் சிறந்த தேவீ பக்தரான ஸ்ரீ பாஸ்கரராயர் ஸம்ஸ்கிருதத்தில் சிறந்த பாஷ்யத்தை இயற்றியிருக்கிறார். இந்த பாஷ்யமானது வேதங்கள் ஸ்ம்ருதிகள் புராணங்கள் மந்த்ர சாஸ்த்ரங்கள் முதலிய பிரமாண நூல்களை ஆதாரமாய்க் கொண்டு தேவி நாமாக்களின் பொருள்களைத் தெளிவாக விளக்குகிறது.



ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகள் 1977ல் ஸ்ரீ ஸாவித்ரீ வித்யாசாலா, ஸ்ரீ ஸீதாலக்ஷ்மி ராமஸ்வாமி கல்லூரி, காமகோடி வித்யாலயம்—கல்வி ஸ்தாபனங்களுக்கு விஜயம் செய்தபோது பூர்ண கும்பத்துடன் வரவேற்பு.

இப்போது இந்நூலிற்குத் தமிழில் இயற்றப்பட்டுள்ள உரையானது ஸ்ரீ பாஸ்கர ராயருடைய பாஷ்யத்தை அனுஸரித்து இந்நாமாக்களின் பொருள்களை நன்கு தெளிவாக்குகிறது. மற்றும் ஏ ஈ ஹ என்னும் அக்ஷரங்கள் யோநி—காமகலா—பகஸ்வரூபங்களாயிருப்பது பண்டைய லிபிரேகைகளை ஆராய்ச்சி செய்து விளக்கப்பட்டிருக்கிறது.

மேலும் கௌல ஸமயாசாரஸ்வரூபங்கள், தேவியானவள் பரா முதலிய ஒலி வடிவமாயிருத்தல், ஞானயோகத்தினால் தேவியை ஆராதித்தல், ஷோடா நியாஸங்களின் விவரங்கள், தேவி லோகராஜ்யத்தை நிர்வஹித்தல், பக்தர்களை அனுக்ரஹிக்கும் கிரமம், தேவியின் அனுக்ரஹத்தை அடைவதற்கான உபாயங்கள் முதலியவைகள் எல்லோருக்கும் தெளிவாக விளங்கும்படி ப்ரமாணங்களுடன் செந்தமிழில் விளக்கப் பட்டிருக்கின்றன.

'பஞ்சாசத் பீடரூபிணீ' எனும் நாமாவின் விளக்கத்தின்போது புராணங்களிலும் தந்த்ரங்களிலும் குறிப்பிட்டிருக்கும் தேவீபீடங்கள் இருக்கும் ஸ்தலங்கள், போகும் மார்க்கங்களின் விவரங்கள் உள்படத் தெளிவாக விளக்கப்பட்டிருக்கின்றன. 'தத்வமர்த்தஸ்வரூபிணீ' முதலிய நாமாக்களின் விவரணங்களின்போது அத்வைத தத்துவம் நன்கு தெளிவாக்கப்பட்டிருக்கின்றது.

மேலும் இத்துடன் இணைக்கப்பட்டிருக்கும் ஸஹஸ்ராக்ஷரஸ்தவத்தில் ஆவரண தேவதைகளின் ஸ்வரூபங்களும் ஸ்தானங்களும் சக்ர ரேகைகளின் படங்களுடன் நன்கு நிரூபிக்கப்பட்டிருக்கின்றன.

இவ்வரிய நூலை திருச்சிராப்பள்ளி காமகோடி வித்யாலயம், ஸாவித்ரீவித்யாசாலை, ஸீதாலக்ஷ்மீ ராமஸ்வாமி கலாசாலை இவைகளின் ஸ்தாபகராகத் திகழ்ந்த பத்மபூஷண என்.ராமஸ்வாமிஅய்யரின் ஞாபகார்த்த டிரஸ்டின் சார்பாக இந்த தர்மிஷ்டரின் குமாரர் ஸ்ரீ பஞ்சாபகேச அய்யர் வெளியிடுவதை அறிந்து ஸந்தோஷிக்கிறோம்.

ஆஸ்திகர்கள் இவ்வுயர்ந்த நூலைப் படித்துப் பொருளுணர்ந்து தேவியை வழிபட்டுக்கொண்டு எல்லா மங்களங்களையும் அடைவார்களாக.

இவ்வாசிரியரும் பிரசுரதாரரும் மேன்மேலும் இத்தகைய உயர்ந்த தெய்வீக நூல்களை இயற்றிக்கொண்டும் ப்ரசுரித்துக்கொண்டும் ஸ்ரீ தாயுமானவரின் அனுக்ரஹத்தினால் எல்லா மேன்மைகளையும் அடைவார்களாக."

யாத்ராஸ்தானம் வஸுமத்நகரம்
(மஹாராஷ்டிரம்)
ஸித்தார்த்த கார்த்திக
சுத்தசதுர்த்தி

} நாராயண ஸ்மிருதி:

# இரண்டு வார்த்தை

## இந்த நூல் உருவானது பற்றி.

தேவி திருவுளங்கொண்டாள், தன் ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் புதிய விரிவான உரையுடன் வெளிவரவேண்டுமென்று. பொன்மலை ஸ்ரீ ராமகிருஷ்ண சாரதா ஸமிதியினரின் உள்ளத்தில் புகுந்தாள். உரை ஆசிரியரைக் கொண்டு விரிவுரைச் சொற்பொழிவுகள் நடந்தன. சிலர் மட்டும் கேட்டுப் பயன்பெறுவது போதாதென்று எண்ணினாள். நவீன சாதனங்களைக் கொண்டு சொற்பொழிவை நாடாவில் பதிவு செய்யும்படி பணித்தாள். இதை அறிந்தார் ஒருவர். அல்லது அவரை அறியச் செய்தாள் அவள் என்பதே உண்மை அவருடைய வாக்கில் நின்றாள், வாக்களித்தாள், புத்தக உருவில் விரைவில் வெளியிடத் திட்டமிட்டிருக்கின்றேமென்று. எண்ணத்தை விதைத்தாள், ஆணையிட்டாள், ஆணையை நிறைவேற்றியும் வைத்தாள்.

## இந்த நூலின் அமைப்பு பற்றி.

அதிகாரம்-பாரா-எண் வரிசை—இந்நூலில் அதிகாரங்களின் பாராக்களுக்கு வரிசையாக எண் கொடுக்கப்பட்டிருக்கிறது. அது நான்கு எண்களைக் கொண்டது. உதாரணமாக 0109. இதில் முதல் இரண்டு எண்கள் அதிகார எண்ணைச் சுட்டும். அடுத்த இரண்டு எண்கள் பாராவின் எண்ணைச் சுட்டும். 0109 என்றால் ஒன்றாம் அதிகாரம், ஒன்பதாம் பாரா. இதேபோல் 1112 என்றால் பதினோராம் அதிகாரம் 12-ம் பாரா. இதனைத் தொடர்ந்துவரும் சொற்சுட்டில் இந்த எண்களே தரப்பட்டுள்ளன.

நாமங்களின் அகராதி வரிசை — இது நூலின் முடிவில் தரப்பட்டுள்ளது. அதில் நாம விளக்கத்தின் கடைசியில் கொடுக்கப்பட்டுள்ள நாம வரிசை எண் தரப்பட்டுள்ளது.

அடிக்குறிப்புகள் — முதலில் சில அதிகாரங்களில் அடிக்குறிப்புகள் அந்தந்த அதிகாரத்தின் இறுதியில் தொகுக்கப்பெற்றுள்ளன. நாம விளக்கத்தில் அவை பெரும்பாலும் விளக்கத்துடனேயே சேர்ந்துவிட்டன. மிகச் சில ஆங்காங்கு தனித்தும் தரப்பட்டுள்ளன.

## சொற்சுட்டும் அரும்பதப் பொருள் விளக்கமும்

சொற்சுட்டை ஆங்கிலத்தில் இன்டெக்ஸ் (Index) என்பர். ஒரு சொல்லோ சொற்றொடரோ நூலில் எங்கெங்கு வந்திருக்கிறது என்பதைச் சுட்டும் அகரனகர வரிசை இது.

இதைப் பயன்படுத்துவதற்குச் சில விளக்கங்கள் தேவை. தேவியின் இச்சாசக்தி, தேவியின் உடல் என்று வருமிடத்து 'தேவியின்' என்ற சொல்லை மீண்டும் எழுதாது ஒரு நீளக் கோட்டால் குறிப்பிடப்பட்டிருக்கும். உதாரணமாக 'தேவியின் இச்சா சக்தி 1102-02—உடல் 1105-02' என்பது போல.

ஒரே பாராவின் பல பிரிவுகளைக் குறிப்பிட நேர்ந்தால், பாரா எண் மீண்டும் மீண்டும் அச்சிடப்படாமல், பிரிவின் எண் மட்டும் தொடரும். உதாரணமாக 1106-02, 1106-03, 1106-05 என்று குறிப்பிடவேண்டுமானல் 1106-02-03-05 என அச்சிடப்பட்டிருக்கும். ஒரு பாரா எண் அல்லது பாராவின் எண் முதல் தொடர்ந்து இரண்டோ பலவோ குறிப்பிடப்பட வேண்டுமானல் 1106·02—·07 என்றோ, 1106-02—1107-02 என்றோ குறிப்பிடப்பட்டிருக்கும்.

விரும்பிய ஒரு விஷயத்தைப் பற்றி எங்கு கூறப்பட்டிருக்கிறது என்று அறியமட்டும் இச்சொற்சுட்டைப் பயன்படுத்தாமல், ஏதோ ஒரு விஷயத்தைக் குறிக்கும் சொல்லை எடுத்துக்கொண்டு அது எங்கெங்கு நூலில் வருகிறதென்று குறித்துக்கொண்டு அந்தந்தப் பாராக்களையெல்லாம் ஒரே முறையில் கோர்வையாகப் படித்தால் பெரும் இன்பமும் மாபெரும் பயனும் அடையலாம். எடுத்துக்காட்டாக 'குண்டலினீ' என்ற சொல்லைக் குறிப்பிடலாம்.

பொதுவாக, சொற்சுட்டு நூலின் இறுதியில்தான் சேர்க்கப் படும். இந்நூலில் அதற்கு மாருக நூலின் நுழைவாயிலில் இடம் பெறுகிறது. சொற்சுட்டைப் பயன்படுத்தப்படுத்த இந்த அமைப் பின் அனுகூலம் மேன்மேலும் தெளிவாகும்.

அரும்பதங்களின் பொருளும் இடையிடையே கொடுக்கப் பட்டிருக்கிறது.

பாரா எண்ணும் சொற்சுட்டும் இவ்வகை அமைப்பில் தமிழ் நூல்களில் காண்பது மிக அரிது. மறுபதிப்புகளில் பக்க அமைப்பு மாறினுலும் சிறிதும் சிரமமின்றி அப்படியே நூலை அச்சில் கொணர இம்முறை எளிதாக இருக்கும்.

இந்த முறையை அமைத்து உதவியவர் திரு. கோ. வன்மீகநாத பிள்ளை அவர்கள். பல நூல்களை வெளியிட்டுப்பெற்ற அவரது அனுபவம் இங்கு பரிமளிக்கிறது.

நூலை வெளியிட முழுப் பொறுப்பையும் ஏற்கத் தானே முன் வந்தவர் திரு. ஆர். பஞ்சாபகேசன். தேவி அகிலாண்டேசுவரியின் உறுதுணை கொண்டு மூன்று கலைக்கோயில்களைப் படைத்த திருவெய்திய பத்மபூஷணம் என். ராமஸ்வாமி அய்யர் அவர்களின் குமாரர். அய்யர் அவர்களின் அறக்கட்டளைக் கழகத்தின் நிதியிலிருந்து இதனை வெளியிட்டிருக்கிறார்.

தேவி இவர்களை உறுதுணையாக்கி இந்தப் பெரும் பணியை நிறைவுபெறச் செய்திருக்கிறாள்.

அவள் பெருமையை ஆயிரம் நா படைத்த ஆதிசேஷனாலும் சொல்லமுடியாது.

ஸ்ரீமாதா, ஸ்ரீமஹாராஜ்ஞீ, ஸ்ரீமத்ஸிம்மாஸநேசுவரீ என்று துதிப்பதல்லால் நாம் வேறு யாது செய்யமுடியும்.

உரையாசிரியன்.



ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி பரமாசார்ய ஸ்வாமிகள் 1960ல் கல்வி ஸ்தாபனங்களுக்கு விஜயம் செய்தபோது பத்மபூஷண ஸ்ரீ ராமஸ்வாமி அய்யர் தம்பதிகளின் பாதபூஜையை ஏற்கிருர்கள்.

# சொற்சுட்டும் அரும்பத விளக்கமும்

கடபயாதி—எழுத்தால் எண்ணைக் குறிக்கும் முறை (பார்க்க ப. xi)

| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 0 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 'க' ஆதி | க$^1$ | க$^2$ | க$^3$ | க$^4$ | ங | ச$^1$ | ச$^2$ | ஜ$^1$ | ஜ$^2$ | ஞ |
| | क | ख | ग | घ | ङ | च | छ | ज | झ | ञ |
| 'ட' ஆதி | ட$^1$ | ட$^2$ | ட$^3$ | ட$^4$ | ண | த$^1$ | த$^2$ | த$^3$ | த$^4$ | ந |
| | ट | ठ | ड | ढ | ण | त | थ | द | ध | न |
| 'ப' ஆதி | ப$^1$ | ப$^2$ | ப$^3$ | ப$^4$ | ம | | | | | |
| | प | फ | ब | भ | म | | | | | |
| 'ய' ஆதி | ய | ர | ல | வ | ச | ஷ | ஸ | ஹ | ள | |
| | य | र | ल | व | श | ष | स | ह | ळ | |

இவற்றை வலமிருந்து இடமாக எழுதி இடமிருந்து வலமாக வாசிக்க வேண்டும். முதலில் ஒத்தை ஸ்தானம், பிறகு பத்து ஸ்தானம், பிறகு நூறு ஸ்தானம் என்றவாறு எழுதிப் பிறகு நூறிலிருந்து படிக்க வேண்டும். உதாரணமாக 215 என்ற எண் ம$_5$ க$_1$ ர$_2$ என்று எழுதப் படும். 215 என்று வாசிக்கப்படும். 605 என்ற எண் ம$_5$ ந$_0$ த$_6$ என்று எழுதப்படும். 605 என்று வாசிக்கப்படும்.

**கூ**



**கே**



**கை**



**கோ**



**கௌ**



**க்**

III

## மா

ஸா



ஸி



ஸு



ஸூ



ஸோ



ஸௌ

## ஸ்



## ஹ



## ஹி



## ஹோ



## ஹ்



## ஸ்ரீ

# விரிவுரைக்கு உதவிய நூல்கள்

1. ஸ்ரீ லலிதாஸஹஸ்ரநாமபாஷ்யம்—பாஸ்கரராயர்
2. ,, —ஸ்ரீ G. V. கணேசய்யர் தமிழ் மொழிபெயர்ப்பு.
3. ,, —ஸ்ரீ அண்ணாவின் உரை
4. ஸௌந்தரியலஹரீ 9 உரைகளுடன்.
5. நித்யாஷோடசிகார்ணவம்—பாஸ்கரராயர் உரை.
6. வரிவஸ்யாரஹஸ்யம்—பாஸ்கரராயர், அவரது உரையுடன்.
7. தேவீமாஹாத்ம்யம்.
8. ஆர்யாதுவிசதீ ஸ்தோத்திரம்—துர்வாஸர்.
9. மூகபஞ்சசதீ—மூககவி.
10. நித்யோத்ஸவம்—உமாநந்தநாதர்.
11. ஸ்ரீவித்யாஸபர்யாவாஸநா, ஸ்ரீவித்யாஸபர்யாபத்ததி, ஸ்ரீவித்யா நித்யாஹ்நிகம், வரிவஸ்யாரஹஸ்யம் —தமிழுரை—குஹாநந்தநாதர்.
12. கல்யாண்—தீர்த்த அங்கம்.

# பொருளடக்கம்

## ஸமர்ப்பணம்

अंब त्वत्पदयोः समर्पितमिदं भाष्यं त्वया कारितं
त्वन्नामार्थविकासकं तव मुदे भूयादथ त्वां भजे ।

அம்ப த்வத்பதயோ: ஸமர்ப்பிதமிதம் பாஷ்யம் த்வயா காரிதம்
த்வந்நாமார்த்தவிகாஸகம் தவ முதே பூயாத் அத த்வாம் பஜே 1

தாயே! உன் திருவடிகளில் இந்த விரிவுரையை ஸமர்ப்பணம் செய்கிறேன். இதனை எழுதியது நீயே. உன் திருநாமங்களின் பொருளை விளக்குவதாக இது அமைந்துள்ளது. இது உனக்கு மகிழ்ச்சி தரட்டும். இனி உன்னிடம் என்னை ஒப்படைக்கிறேன்!

(பாஸ்கரராயரைத் தழுவி)

ஸ்ரீ அகிலாண்டேச்வரி, திருவானைக்கா.



अनघाद्भुतचारित्रा वाञ्छितार्थप्रदायिनी ।
अभ्यासातिशयज्ञाता षडध्वातीतरूपिणी ॥

अव्याजकरुणामूर्तिरज्ञानध्वान्तदीपिका ।
आबालगोपविदिता सर्वानुल्लंघ्यशासना ॥

உ

# ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம்

## அதிகாரம்—1

## முன்னுரை

### ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தின் வரலாறு

श्रीगुरुभ्यो नमः

श्रीमात्रे नमः । सर्वमङ्गलायै नमः । श्रीललितांबिकायै नमः ।

शुक्लांबरधरं विष्णुं शशिवर्णं चतुर्भुजम् ।
प्रसन्नवदनं ध्यायेत् सर्वविघ्नोपशान्तये ॥

वन्दे गुरुपदद्वन्द्वमवाङ्मनसगोचरम् ।
रक्तशुक्लप्रभामिश्रमतर्क्यं त्रैपुरं महः ॥

दयमानदीर्घनयनां देशिकरूपेण दर्शिताभ्युदयाम् ।
वामकुचनिहितवीणां वरदां सङ्गीतमातरं वन्दे ॥

दयिन्या श्रीमात्रा दहरकुहरे सूत्रधरया
समादिष्टा वाचामधिपतिषु काप्यन्यतमिका ।
मदाराध्यश्रीमद्गुरुचरणनिर्णेजनजलैः
पवित्रे जिह्वाग्रे नटति मम देवी करुणया ॥

श्रुतिस्मृतिपुराणानामालयं करुणालयम् ।
नमामि भगवत्पादशङ्करं लोकशङ्करम् ॥

सिन्दूरारुणविग्रहां त्रिनयनां माणिक्यमौलिस्फुरत्-
तारानायकशेखरां स्मितमुखीमापीनवक्षोरुहाम् ।
पाणिभ्यामलिपूर्णरत्नचषकं रक्तोत्पलं बिभ्रतीं
सौम्यां रत्नघटस्थरक्तचरणां वन्दे परामम्बिकाम् ॥

श्रीगुरुचरणारविन्दाभ्यां नमः ।

0102—ஸ்ரீ குருசரணங்கள், மூலத்திலும் முடியிலும் அமர்ந்து விக்நங்களை நீக்கும் விநாயகப் பெருமான், கருணையால் தாயான தாயுமானவர், அகில உலகையும் ஈன்று ஆளும் தாயான அகிலாண்டேச்வரி, மனமெனும் அரங்கம் தூய்மை பெற்று இறை நிறையுமிடமாக அமைய அருளும் ஹ்ருஷீகேசன்—ஸ்ரீ ரங்கநாதன், இவர்களது அருள் துணைகொண்டு ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தை மனனம்[1] செய்கிறோம். ஸ்ரீ தேவி தனிப்பெருங்கருணையால் தனக்குள்ள கோடிக்கணக்கான நாமங்களிலிருந்தும் மதுரமதுரமான ஆயிரம் நாமங்களை வசினீ முதலிய வாக்தேவிகளைக் கொண்டு தேர்ந்தெடுத்துத் தாமே அரங்கேற்றி உலக நன்மைக்காக அருளிய திவ்ய ஸஹஸ்ரநாமம் இது.

0103—தெய்வ வழிபாட்டிற்கான முறைகளை வேதங்களும் தந்திர சாஸ்திரங்களும் கடும் நியமங்களுடன் கூறியுள்ளன. அதே வழிபாட்டு முறைகளைப் புராணங்கள் பலதரப்பட்ட அதிகாரிகளும் எளிதில் பின்பற்றுமாறு லகுவாக அமைத்துக்கொடுத்திருக்கின்றன. சாஸ்திரங்களில் கூறப்பட்ட வழிமுறைகளையே புராணங்களில்

கதை வடிவில் அவற்றிற்கு முன்னுரைகளை அமைத்து நாம் அம் முறைகளை ஆவலுடன் பின்பற்றுமாறு அக்கதைகளின் நடுவே அந்த அந்த தெய்வத்தின் வழிபாட்டை அமைத்துக் கொடுத்திருக்கிறார்கள். வியாஸர் 18 புராணங்களை எழுதியிருக்கிறார்.[2] ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு தெய்வத்தைப் பற்றிய விளக்கங்கள் தந்திருக்கிறார். அவைகளில் பிரும்மாண்ட புராணமும் ஒன்று. ப்ரக்ரியா பாதம், அனுஷங்க பாதம், உபோத்காத பாதம், உபஸம்ஹார பாதம் என்று அதற்கு நான்கு பகுதிகள் உண்டு. நான்காவது உபஸம்ஹார பாதத்தின் கடைசியில் லலிதோபாக்கியானம் உள்ளது. அதில் மந்த்ர கண்டம், ந்யாஸ கண்டம், பூஜா கண்டம், புரச்சரண கண்டம், ஹோம கண்டம், ரஹஸ்ய கண்டம், ஸ்தோத்ர கண்டம் என்று ஏழு கண்டங்கள் உண்டு. ஏழாவது ஸ்தோத்ர கண்டத்தின் கடைசிப் பகுதியாக ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் அமைகிறது.

0104—ஸர்வ மங்களா என்று தேவிக்குப் பெயர். மங்களப் பொருள்கள் அனைத்திலும் உள்ள மங்களத் தன்மை, தேவியின் அருளால் ஏற்படுவது. மன அமைதி, ஆனந்தம், இதற்கு மேல் வேறொன்றும் வேண்டாம என்ற நிறைவு உணர்வு முதலியவை மங்களத் தன்மையைக் குறிக்கும். மனிதனின் ஆசைகளின் எல்லை இந்த மங்களம் தான். அதை அருள்பவள் தேவி ஸர்வமங்களா.

0105—மனிதன் விரும்ப வேண்டியவையாக தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் (அறம, பொருள், இன்பம, வீடு) என நான்கு புருஷார்த்தங்களைக் குறிப்பிடுவர். இவைகளில் முக்கியமானவை காமமும் மோக்ஷமும். காமம் இகவாழ்க்கையில் அடைய வேண்டிய மேனமை; மோக்ஷம் பரவாழ்வில் பெறவேண்டிய மேன்மை. தர்மத்தையும் அர்த்தத்தையும் உறுதுணையாகக் கொண்டு பெற்ற காமம் இகவாழ்வின் லக்ஷ்யத்தைப் பூர்த்தி செய்யும். ஆத்மானுபவத்தில் பிறந்த ஆனந்தத்தால் காமமே அற்று வாஸனை அழிந்து மனமிழந்த நிலையில் திரும்பத் திரும்பச் சரீரத்துடன் பந்தம் ஏற்படுவதிலிருந்தும் பெறும் விடுதலை மோக்ஷமாகும். இகவாழ்வின் முடிவிற்குப்பின், இப்பிறவியிலும் முன் பிறவிகளிலும் செய்துள்ள வினைகளில், பக்குவமடைந்து அடுத்த பிறவியை அளிக்கத் தகுதி பெற்றுள்ள வினை, எத்தகைய சரீர பந்தத்தை ஏற்படுத்தும் என்று நம்மால் அறிய முடியாது. தர்மத்தை அனுசரித்த காமத்தையே புருஷார்த்தம் என லக்ஷ்யமாகக்கொண்டால் அடுத்த பிறவி இப்பொழுது உள்ளதை விடத் தாழாது. "தர்மா விருத்த: பூதேஷு காமோஸ்மி" என் பகவான் கீதையில் கூறுகிறார். தர்மத்திற்கு

விரோதமில்லாத காமம் இறைவனது ஸ்வரூபமே. இந்த வாழ்வில் எதிர்பார்க்கும் சுகானுபவம் தர்மத்தை அனுஸரித்த வாழ்க்கை முறைகளால் அமையப் பெறுமானல் இம்மையிலும் மறுமையிலும் மேன்மை உண்டு. இப்படி மேன்மை தரக்கூடிய காமத்தையும் மோக்ஷத்தையும் தரவல்லது தெய்வ வழிபாடு. தெய்வ வழிபாட்டுடன் அமைந்த வாழ்க்கைமுறை இம்மையிலும் மறுமையிலும் ஆத்மீயத்துறையில் ஏற்றத்தைத் தரும். இப்படி தெய்வீக வாழ்க்கை வாழ்ந்த பெரியோர்களின் சரித்திர வாயிலாகப் புராணங்கள் எளிதில் புரியும்படி தத்துவத்தை உணர்த்துகின்றன. ஸ்ரீ லலிதா தேவியின் வழிபாடும் இப்படித்தான் பிரும்மாண்ட புராணத்தில் இடம் பெறுகின்றது.

0106 — ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம் 320 சுலோகங்கள் கொண்டது. முன்னுரையாக இந்த ஸ்தோத்திரத்தின் தோற்றுவாயைக் கூறும் பூர்வ பாகம் 51 சுலோகங்கள் கொண்டது. தேவியின் தியானம் ஒரு சுலோகம். ஆயிரம் நாமங்கள் 182 சுலோகங்களில் அடங்குகின்றன. பின்னுரையான 86 சுலோகங்களில் பல ச்ருதி அமைகின்றது.

0107—மற்ற தேவதைகளுக்கான ஸஹஸ்ர நாமங்களை விட அதிகமாகப் பழக்கத்திலுள்ள ஸஹஸ்ர நாமங்கள் மூன்று. முதலாவது ஸ்ரீ கணபதியின் ஸஹஸ்ரநாமம். இது கணேச புராணத்திலுள்ளது. இரண்டாவது ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர நாமம். இது மஹாபாரதத்திலுள்ளது. மூன்ருவது இந்த ஸஹஸ்ரநாமம். பிரும்மாண்ட புராணத்திலுள்ளது. இம்மூன்றிற்கும் தனிப்பெருமை ஒன்று உண்டு. ஸ்ரீ கணேச ஸஹஸ்ரநாமத்திற்கும் ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்திற்கும் ஸ்ரீ பாஸ்கர ராயர் என்ற மஹான் உரை எழுதியிருக்கிருர். ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்திற்கு ஸ்ரீ சங்கர பகவத் பாதர் பாஷ்யம் இயற்றியிருக்கிருர். ஸ்ரீ பராசர பட்டரும் உரை எழுதியிருக்கிருர். இப்படி உரை எழுதப் பெற்றுள்ள ஸஹஸ்ரநாமங்கள் மூன்றே.

0108—ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்திற்கு உரை எழுதிய பாஸ்கர ராயர் மஹாராஷ்டிரபிரதேசத்தில் பாகா என்னும் ஊரில் பிறந்தவர். கௌசிக கோத்திரத்தில் பிறந்த ஸ்ரீ கம்பீர ராயர் இவரது தந்தை. தாய் கோநாம்பிகை. காசியில் உபநயனம் செய்விக்கப்பெற்று ஸ்ரீ ந்ருஸிம்ஹாத்வரி என்பவரிடம் பதினெட்டு வித்யாஸ்தானங்களையும்[3] கற்ருர். பால்யத்தில் தந்தையிடமிருந்துபெற்ற ஸரஸ்வதீ

மந்திரத்தின் உபாஸனையால் வித்யைகளில் தேர்ச்சியை எளிதில் அடைந்தார். ஸ்ரீ கங்காதர வாஜபேயயாஜி என்ற சோழதேசத்திய வித்வானிடம் தர்க்கசாஸ்திரம் கற்றார். குர்ஜரத்திலுள்ள ஸுரத்தில் ஸ்ரீ சிவதத்த சுக்லர் என்பவரிடம் ஸ்ரீ வித்யை உபதேசிக்கப்பெற்றுப் பூர்ணாபிஷேகம் பெற்றார். ஸ்ரீ பாஸுராநந்தர் என்பது இவரது தீக்ஷா நாமம். ஆநந்தி, பார்வதி என்று இவருக்கு இரு மனைவிகள். இவர்களுடன் பாரததேசத்தைச் சுற்றி வரும்போது மந்திரசக்தியின் துணைகொண்டு காசியில் சக்ரேச்வரருக்கும் கோங்கணத்தில் கம்பீர நாதருக்கும், மூலஹ்ரதத்தில் பாண்டுரங்கனுக்கும் ராமேசுவரத்தில் வஜ்ரேசுவரருக்கும் ஸந்நதியில் சந்திரலாம்பாவிற்கும் சோழநாட்டில் கஹோளேசருக்கும் கோவில் கட்டினார். இவரது மனைவி ஆனந்தி அம்மையார் இவர் பெயரைக் கொண்டு பாஸ்கரராஜபுரத்தில் பாஸ்கரேசுவரர் என்ற பெயருடன் விளங்கும் பரமேசுவரனுக்குக் கோயில் கட்டியுள்ளார். தஞ்சை அரசன் இவரது உபாஸனையின் மேம்பாடு, பாண்டித்தியம் முதலியவைகளைக் கண்டு மகிழ்ந்து பக்தியுடன் மானியமாக அளித்த கிராமமே பாஸ்கரராஜபுரம். தனது கடைசி நாட்களை இவர் திருவிடைமருதூரில் கழித்தார் என்று இவரது வாழ்க்கை வரலாறு கூறும்.

0109 — மற்ற ஸஹஸ்ரநாமங்களைக் காட்டிலும் இதற்கு மற்றொரு ஏற்றம் உண்டு. ஆயிரம் நாமங்களை ஓரிடத்தில் தொகுக்கையில் நாமங்கள் சரியே கிடைக்காமல், ஒரே நாமமே இரு முறையோ, பல முறையோ திரும்பத் திரும்ப வரும். அவைகளை உரையாசிரியர்கள் வேறுவேறாகப் பொருள் கூறிச் சமாதானம் கூறுவர். சுலோகமாக அமைக்கும்போது, நடுவே வரும் இடைவெளிகளை 'ச', 'வை', 'து', 'ஹி', 'ஏவ' என்பது போன்ற விசேஷப் பொருளற்ற அவ்யயங்களைப் போட்டு நிரப்புவதும் வழக்கம். (பூதாத்மா பரமாத்மா ச—க்ஷேத்ரஜ்ஞோ அக்ஷர ஏவ ச என்று விஷ்ணு ஸஹஸ்ரநாமம்) இந்த இரு குறைகளும் ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில் கிடையாது. ஒரே சொல் திரும்ப வராது. 'ச', 'வை', 'து', 'ஹி', 'ஏவ' போன்றவைகளால் இடம் நிரப்பப்படுவதையும் பார்க்க முடியாது.

0110—மற்றொன்றும்கூட. மற்ற ஸஹஸ்ரநாமங்களைக் கொண்டு அந்தந்த தேவதையின் ஸ்வரூபம், உபாஸனை முறை முதலியவற்றில் முழு விளக்கம் பெற முடியாது. அதற்கெனத் தனிநூலை நாட வேண்டியிருக்கும். இங்கோ தேவியின் ஸ்வரூபம், அவள் தோன்றிய வரலாறு, அவளை வழிபட யந்திரம், மந்திரம், தத்துவம், பரிவார

தேவதைகளின் நிலே, வழிபாட்டுமுறை, வழிபடுபவருக்கான தகுதி, அவளது அருளால் பெறக்கூடிய மேன்மைகள் முதலியன போன்றனவும், தேவியைப் பற்றி அறிய விரும்புவனவுமான பல விஷயங்கள் இந்த நாமங்களிலேயே அடங்கிவிடுகின்றன. இதன் உரையாசிரியர் ஸ்ரீ பாஸ்கரராயர் தக்கபடி இவைகளுக்கு விளக்கம் தந்திருப்பது பெரும் சிறப்பாகும்.

0111—இந்த ஸஹஸ்ரநாமத்தை மந்திரமாக அல்லாமல் ஸ்தோத்திரமாகப் பாடிவரும்போது கூட அதில் உள்ள இனிமையும் இன்பமும் சொல்லுக்கடங்காது. சொல்லச் சொல்ல நமது மனம் தானே சாந்தி பெறும். தெய்வீகமான அருள் தானே நம்மைச் சூழ்ந்து நிற்கும் உணர்வு ஏற்படும்.

0112—ஸம்பிரதாயத்தில் இந்த ஸஹஸ்ரநாமத்தை யார் பாராயணம் செய்யலாம், யார் செய்யக் கூடாது என்ற விஷயத்தில் சில நியமங்கள் உண்டு. இங்கு நாம் கவனிக்க வேண்டிய விஷயம் ஒன்று உண்டு. இது தனிப்பெரும் மந்திரம் என்றே நூல்கள் கூறும். மந்திரம் என்று இதைக் கூறும்போது அதற்கான நியமங்களுக்கு நாம் கட்டுப்படத்தான் வேண்டும். ஸ்ரீவித்யா மந்திரங்களில் ஏதேனும் ஒன்றில் தீக்ஷை பெற்றிருத்தலும் ஸ்ரீசக்கிர பூஜை செய்து வருவதும் இதைச் சொல்ல முன் தகுதிகளாகும். இவைகளே முறைப்படிப் பெற எல்லோருக்கும் தகுதி இருப்பதில்லே. ஸ்தோத்திரம் என்ற முறையில் அணுகக்கூட நமக்குச் சிறிதளவு தகுதிதான் உண்டு. நமது ஈடுபாட்டின் பலத்தில்தான் இந்தத் தகுதியையும் பெற முடியும். மன நிம்மதி பெற தேவியின் அருள் பெற இதை ஸ்தோத்திரமாகப் பாராயணம் செய்யலாம்.

0113—அவன் அருளால்தான் அவன் தாளே வணங்க முடியும் என்று பெரியவர்கள் கூறுவர். அவள் அருளிருந்தால் அவள் தாளே வணங்கலாம். அவள் தாளே வணங்கினுல் அவள் அருள் பெறலாம். இதில் எது காரணம், எது காரியம் என்றே புரிந்து கொள்ள முடியாது. அவளே வணங்க, அவள் யார்? அவளே வணங்கும் நான் யார்? வணக்கம் என்பது என்ன? என்பது போன்ற பலவற்றின் அறிவு தேவைப்படுகிறது. இந்த அறிவையும் அவள் அருளால்தான் பெறலாம். அதனுல் அவளேயோ, வணங்குபவனேயோ, வணக்கத்தையோ பற்றி அறியாமல் பெரியோர்கள் சென்ற வழி என்ற ஒரே விளக்கத்தை நம்பி முதலில் வெளிப்படையாக வணங்க முற்பட, இவ்வினேயே சிறிது சிறிதாகத் தேவியின்

அருளைக் கூட்டுவிக்கிறது. இந்த அருளின் பலத்தைக் கொண்டு என்றோ ஒருநாள் அவளை அறிந்து வணங்க முடியக்கூடும். ஆகவே ஸாத்தியத்தையே முழு அறிவின்றி ஸாதனமாகக்கொண்டு முதலில் இறங்குகிறோம். ஒன்றையும் இரண்டையும் முழுவதும் அறியாத சிறுவன் 1 + 1 = 2 என்று நெட்டுருப்பண்ணுகிறான். வாழ்க்கையில் என்றோ ஒருநாள் 1 + 1 = 2 என்பது என்ன என்பதைப் புரிந்து கொள்வான். அப்போது அது பயன்படப்போகிறது. அதற்கு அவன் என்றுமறியாப் பருவத்தில் வாய்பாடு நெட்டுருப் பண்ணுவதுபோல் அவளை முழுதும் அறியாமலேயே அவளை வணங்கும் ஆரம்பப் பயிற்சி அவள் அருளைச் சிறுகச் சிறுகப் பெற உதவி புரிந்து அவளை அறிந்து வணங்கும் பேரின்பத்தை நமக்குத் தரும். இதைத் தவிர அருளைப் பெற வேறு உபாயம் கிடையாது. "தாயே! நீ எனக்குப் புரிபடாதவள். உன்னை எப்படி வணங்குவது என்பதும் எனக்குத் தெரியாது. அதனால் எனது இந்தச் செயலை வணங்குவதாக நீ பாவித்து உன்னை அறிந்துகொள்ள எனக்கு அருள்புரிவாயாக" என்றுமனத்தில் பிரார்த்தனை செய்து அவளுடன் ஏற்படுத்திக்கொள்ளும் தொடர்பே அவளை அறியும் உபாயமாகும். ஸ்ரீ வித்யா மந்திர தீக்ஷையும், ஸ்ரீ சக்ர பூஜை தீக்ஷையும் பெற்று, ஜபமும், வழிபாடும் முறைப்படி செய்பவனால் மட்டும் சொல்லப்பட வேண்டிய இந்த ஸஹஸ்ரநாமத்தைச் சொல்லும் தகுதியை ஜபமோ, வழிபாடோ செய்யத் தகுதி பெற்றிராதவனும் கூட, திரும்பத் திரும்ப ஸ்தோத்திரமாகச் சொல்வதாலேயே பெற்று விடலாம். அவளை அடைவதற்கு அவளே வழி. அதுபோல ஸஹஸ்ரநாமத்தைச் சொல்லத் தகுதிபெற ஸஹஸ்ரநாமமேதான் உபாயம்.

0114 — மந்திரங்களைக் குருமுகமாகத் தான் பெறவேண்டும். இந்த ஸஹஸ்ரநாம மந்திரமும் அப்படிக் குருமுகமாகத்தான் பெறத் தக்கது. ஆதியில் அப்படி ஸ்ரீஹயக்ரீவர் என்ற குருவிடமிருந்து அகஸ்தியர் இதை உபதேசமாகப் பெற்றார். இந்த ஆதி குருவை யும் ஆதிசீடரையும் பற்றியும் நாம் அறியவேண்டும்.

0115—ஹயக்கிரீவர் : தேவீபாகவதத்தின் முதல் ஸ்கந்தத்தில் 5-வது அத்யாயத்தில் இவரது வரலாறு காணப்பெறுகிறது. ஸ்ரீ மகாவிஷ்ணு பத்தாயிரம் ஆண்டுகள் அசுரர்களுடன் போர் புரிந்த தால் ஏற்பட்ட அயர்வைப் போக்கிக்கொள்ள நாணேற்றிய சார்ங்கம் என்ற தமது வில்லின் நுனியைத் தமது தாடையின் கீழ்த் தாங்க லாகக் கொண்டு உட்கார்ந்தபடியே பல ஆண்டுகள் தூங்கினார்.

தேவர்கள். வேள்விக்காக ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் உதவியை நாடி வந்தனர். தூங்குபவனை எழுப்புவது பாவம். ஒருவரும் இந்தப் பாவச் செயலைச் செய்ய முன்வரவில்லை. பிரமன் தான் படைத்த கரையானை (இந்திரனே கரையானாக மாறினான் என வேதம் கூறும்) பகவானை எழுப்பத் தூண்டினார். பாவச் செயலால் விளைய விருக்கும் துக்கத்திற்கு ஈடாகச் சில வரங்களைப் பெற்றுக் கரையான் சார்ங்கத்தின் நாணை அறுத்துவிட்டது. வில் நிமிருவதை உணர்ந்து பகவான் எழுந்திருப்பார் என்று தேவர்கள் எதிர்பார்த் தார்கள். அதற்கு மாறாகத் திடீரென நிமிர்ந்த வில்லின் வேகம் பகவானின் சிரத்தையே துண்டித்து எங்கேயோ எறிந்துவிட்டது. இந்தச் சங்கடத்திலிருந்து விடுபடத் தேவர்கள் தேவியைப் பிரார்த் திக்கஅவள் அருளால் யாகத்தில் அவியாக அளிக்கப்பட்டகுதிரையின் தலையைப் பகவானின் கழுத்தில் பொருத்த, ஹயக்ரீவராக (குதிரைத் தலை உடையவராக) பகவான் தோன்றுகிறார். தேவியிடமிருந்தே நேரில் உபதேசம் பெற்ற ஹயக்ரீவர் தேவி உபாஸகர்களில் மிகச் சிறந்தவராகிறார். இவரே ஸ்ரீ லலிதாஸஹஸ்ரநாமத்தை உபதே சித்த குரு. ஸரஸ்வதியைப்போல் ஞானத்தை அருளுபவராக இன்றும் இவர் உபாசிக்கப்பெறுகிறார்.

0116 அகஸ்தியர்: மித்ரன் வருணன் என்ற இரு தேவர்களின் அம்சமாகக் குடத்திலிருந்து தோன்றிய இந்த முனிவர் தன் முன்னோர்களின் ஆத்ம திருப்திக்காக நல்ல புத்திரனைப் பெற விரும்பி, அதற்கேற்ற சிறந்த பெண்ணுக்குத் தேவையான நற் குணங்களைத் தவ வலிமையால் கூட்டிப் பெண்ணாக்கி விதர்ப்ப தேசத்தரசனிடம் அளித்து வளர்க்கச்செய்து லோபாமுத்திரை என்ற அவளை மணந்து இல்லறம் நடத்தினார். இல்லறம் செவ்வனே நடக்கப் பொருள் நாடி அரசர்களை அடைந்தார். மக்களுக்கு நன்மை புரிவதற்கென்றே வரி போட்டுச் செல்வம் சேர்த்து மக்களின் நன்மைக்கு உத்தேசித்த திட்டங்களுக்கு மட்டும் அதைச் செலவழித்து மீதமிருப்பதிலிருந்துமட்டுமே தாம் யாசிக்கும் பொருளைத் தரவேண்டுமென்று அரசர்களைக் கட்டுப்படுத்தினார். ஒரு அரசனிடம்கூட அப்படி மீதமில்லை. இல்வலன் வாதாபி என்ற இரு அசுரர்கள் செல்வம் நிறையப் படைத்தவர்கள். பல அஸுர குணங்களுக்கிடையே அவைகளுக்கு ஒவ்வாத ஈகையும் அவர்களிடமிருந்தது. தனக்கு வேண்டியவைகளை அவர்களிட மிருந்து பெற்று இல்லறம் நடத்தினார் அகத்தியர் என மகாபாரதம் வனபர்வம் (96-99) கூறும்.

0117 இந்த தம்பதியர்க்கு தேவி வழிபாட்டில் மிகுந்த ஈடுபாடு உண்டு. அகஸ்தியர் ஹயக்கிரீவரைக் குருவாக அணுகி உபதேசமாகப் பெற்றது இந்த ஸஹஸ்ரநாமம். அதுவே தேவியின் வழிபாட்டில் இன்று நமக்கு உத்தம வழிகாட்டியாக அமைந்துள்ளது.

0118 பாஸ்கரராயரின் உரை ஒன்றே இன்று இந்த ரஹஸ்ய ஸஹஸ்ரநாமத்தின் ரஹஸ்யங்களுக்கு விளக்கம் தருகிறது. அதனை ஒட்டியே இந்த உரையும் அமைகிறது. பாஸ்கரராயர் தனது உரைக்கு ஸௌபாக்ய பாஸ்கரம் என்று பெயரிட்டுள்ளார். ஸௌபாக்ய—தேவியைப்பற்றி, மங்களம் நல்கும் விஷயங்களை பாஸ்கரம்—சூரியனைப்போல் விளக்குவது எனப் பொருள். தேவி வழிபாட்டில் துவக்கத்தில் வந்ஹிகலை, சூர்யகலை, சந்திரகலை முதலிய கலைகளை வழிபடுவர். அவைகளில் சூர்யகலை பன்னிரண்டு. அவை தபினீ, தாபினீ, தூம்ரா, மரீசி, ஜ்வாலினீ, ருசி, ஸுஷும்நா, போகதா, விச்வா, போதினீ, தாரிணீ, க்ஷமா என்பன. ஸௌபாக்ய பாஸ்கரம் என்ற உரையாகிய சூரியனுக்கும் பன்னிரண்டு கலைகள் (பகுதிகள்) அமைந்துள்ளன. உபோத்காதம் (முன்னுரை) எனும் பூர்வபாகம் முதற்பகுதி. ஆயிரம் நாமங்களை நூறு நூறாகப் பிரித்துப் பத்துப் பகுதிகள். கடைசியிலுள்ள பலசுருதி பன்னிரண்டாவது பகுதி. அவை பன்னிரண்டிற்கும் இப்படி சூரியகலைகளின் பெயரையே வைத்துள்ளார். அதன்படி உபோத்காதம் தபினீகலை, பிரும்மாண்ட புராணத்தில் லலிதோபாக்கியானத்தை ஹயக்கிரீவரிடம் முழுதும் கேட்ட அகஸ்தியர் இப்போது ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமத்தை அறிய ஆவலுடன் கேட்கிறார் என்று கதை தொடங்குகிறது.

## இவ்வதிகாரத்தின் குறிப்புகள்

1. **மனனம்:** குரு உபதேசித்த தத்துவத்தை மறுபடி ஆழ்ந்து சிந்தித்தலும், சிந்தனையின்போது ஏற்படும் ஐயங்களையும் விபரீதக் கருத்துக்களையும் யுக்திகளால் நீக்கி தத்துவத்தை உணர்ந்து அதே சிந்தனையில் நீடித்திருத்தலும் மனனமாகும். தேவியின் அருளால் வாக்தேவிகள் உபதேசித்த இந்த ஸஹஸ்ரநாமத்தை ஸ்ரீ பாஸ்கரராயர் தமது உரையின் மூலம் மனனம் செய்துள்ளார். அதை ஒட்டிய இந்த விரிவுரையின் மூலம் நாமும் அதை மனனம் செய்கிறோம்.

2. **பதினெட்டு புராணங்கள்:** இறைவன் தன்னுள் அடக்கிக் கொண்ட உலகை மீண்டும் படைக்க ஸங்கல்பம் கொண்டு பிரமனைத் தோற்றுவித்துப் படைப்பிற்கு உதவுதல், படைப்பு பல்முகமாகப் பெருகுதல்,

# அதிகாரம் 1 முன்னுரை

ஒவ்வொரு காலவரைக்கும் அதிபரான மனு, அவரது வம்சவழி வந்தவர்கள், அவ்வப்போது உலகைக் காக்க இறைவனது திருவவதாரங்கள், இறைவனது அடியார்கள், இறைவனுடன் தொடர்புகொள்ள ஞானம், பக்தி, வைராக்கியம் என்பனவான சாதனங்கள், ஸ்ருஷ்டி காலம் தொட்டு இறைவனிடம் ஒடுங்கும்வரை ஒரே சீராக இயங்கும் உலக இயக்கம் இவைகளைக் கதையாக சித்தரித்து வேத தத்துவங்களுக்கு விளக்கம்தரத் தோன்றியவை புராணங்கள். மத்ஸ்யம், கூர்மம், வராஹம், லிங்கம், சைவம், பிராம்மம், ஸ்காந்தம், பிரும்மாண்டம், நாரதம், பாகவதம், பத்துமம், அக்னி, பிரம்ம வைவர்த்தம், பவிஷ்யம், மார்க்கண்டேயம், விஷ்ணு, வாமனம், காருடம் என அவை பதினெட்டு. நைமிசாரண்யத்தில் பல ஆண்டுகள் தொடர்ந்து நடந்த ஸத்ர யாகத்தில் ஸூதர் சொல்ல சௌநகர் முதலான மகரிஷிகள் கேட்டவை. இங்கு குறிப்பிட்ட பாகவதம் விஷ்ணு பாகவதம்தான் எனச் சிலரும், தேவி பாகவதம் எனச் சிலரும் கூறுவதுண்டு.

**3. வித்யாஸ்தானங்கள் பதினெட்டு:** ருக், யஜுஸ், ஸாம, அதர்வ என்ற நான்கு வேதங்கள், ஆயுர்வேதம், தனுர்வேதம், காந்தர்வம், அர்த்தசாஸ்திரம் என்ற நான்கு உபவேதங்கள், சிக்ஷா, வ்யாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் என்ற ஆறு வேதாங்கங்கள், மீமாம்ஸா, நியாயம், தர்மசாஸ்திரம், புராணம் என்ற நான்கு வேதஉபாங்கங்கள் என்பன.

**4.** இக்கலைகளைப் பற்றிய விளக்கம் பின்னர் உரிய நாமங்களின் விளக்கத்தில் வரும்.



॥ श्रीः ॥

# श्रीललितासहस्रनामस्तोत्रम्

## पूर्वभागः

शुक्लांबरधरं विष्णुं शशिवर्णं चतुर्भुजम् ।
प्रसन्नवदनं ध्यायेत् [1] सर्वविघ्नोपशान्तये ॥

अगस्त्य उवाच—

1 अश्वानन महाबुद्धे सर्वशास्त्रविशारद ।
कथितं ललितादेव्याः चरितं परमाद्भुतम् ॥

2 पूर्वं प्रादुर्भवो मातुः ततः पट्टाभिषेचनम् ।
भण्डासुरवधश्चैव विस्तरेण त्वयोदितः ॥

3 वर्णितं श्रीपुरं चापि महाविभवविस्तरम् ।
श्रीमत्पञ्चदशाक्षर्याः महिमा वर्णितस्तथा ॥

ஸ்ரீலலிதாம்பிகாயை நம:

# ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்

## பூர்வபாகம்

சுக்லாம்பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்புஜம்
ப்ரஸந்நவதநம் த்யாயேத் [1] ஸர்வவிக்நோபசாந்தயே.

அகஸ்த்ய உவாச—

1 அச்வாநந மஹாபுத்தே ஸர்வசாஸ்த்ரவிசாரத ।
கதிதம் லலிதாதேவ்யா: சரிதம் பரமாத்புதம் ॥

2 பூர்வம் ப்ராதுர்பவோ மாது: தத: பட்டாபிஷேசநம் ।
பண்டாஸுர வதச்சைவ விஸ்தரேண த்வயோதித: ॥

3 வர்ணிதம் ஸ்ரீபுரம் சாபி மஹாவிபவ விஸ்தரம் ।
ஸ்ரீமத் பஞ்சதசாக்ஷர்யா: மஹிமா வர்ணிதஸ் ததா ॥

### ஸ்ரீ குருவின் திருவடிகளுக்கு நமஸ்காரம்.

0201 வெண்ணிற ஆடை தரித்தவரும், எங்கும் நிரம்பியவரும், சந்திரனுக்கொப்பான நிறமுள்ளவரும், நான்கு கைகளுள்ளவரும், மலர்ந்த முகம் உடையவரும் (மதம் பிடித்த யானை முகத்தோனும்) ஆன இறைவனை எல்லா இடையூறுகளும் நீங்க வணங்குகிறேன்.

4 षोढान्यासादयो न्यासाः न्यासखण्डे समीरिताः ।
अन्तर्यागक्रमश्चैव बहिर्यागक्रमस्तथा ॥

5 महायागक्रमश्चापि पूजाखण्डे प्रकीर्तितः ।
पुरश्चरणखण्डे तु जपलक्षणमीरितम् ॥

6 होमखण्डे त्वया प्रोक्तो होमद्रव्यविधिक्रमः ।
चक्रराजस्य विद्यायाः श्रीदेव्या देशिकात्मनोः ॥

7 रहस्यखण्डे तादात्म्यं परस्परमुदीरितम् ।
स्तोत्रखण्डे बहुविधाः स्तुतयः परिकीर्तिताः ॥

4 ஷோடா ந்யாஸாதயோ ந்யாஸா: ந்யாஸகண்டே ஸமீரிதா: I
அந்தர்யாக க்ரமச்சைவ பஹிர்யாக க்ரமஸ் ததா II

5 மஹாயாக க்ரமச்சாபி பூஜாகண்டே ப்ரகீர்த்தித: I
புரச்சரணகண்டே து ஜபலக்ஷணமீரிதம் II

6 ஹோமகண்டே த்வயா ப்ரோக்தோ ஹோமத்ரவ்ய விதிக்ரம: I
சக்ரராஜஸ்ய வித்யாயா: ஸ்ரீதேவ்யா தேசிகாத்மனோ: II

7 ரஹஸ்யகண்டே தாதாத்ம்யம் பரஸ்பர முதீரிதம் I
ஸ்தோத்ரகண்டே பஹுவிதா: ஸ்துதய: பரிகீர்த்திதா: II

*0202 அகஸ்தியர் கூறினர்—எல்லா சாஸ்திரங்களிலும் தேர்ந்த விசால புத்தியுள்ள ஹயக்ரீவரே! லலிதா தேவியின் மிக அற்புதமான சரித்திரம் இதற்கு முன் கூறப்பட்டது. முதலில் (மந்த்ரகண்டத்தில்) அன்னையின் தோற்றம், பிறகு பட்டாபிஷேகம், பண்டாஸுரனின் வதம், இவை[2] விரிவாக உம்மால் கூறப்பட்டது. மாபெரும் வைபவத்தால் விரிந்து காணும் ஸ்ரீ புரமும்,[3] ஸ்ரீ பஞ்சதசாக்ஷரீ மந்திரத்தின் பெருமையும்[4] வர்ணிக்கப்பட்டது. (1-3)*

*0203 ந்யாஸகண்டத்தில் ஷோடாந்யாஸம்[5] முதலியவை சொல்லப்பட்டன. பூஜாகண்டத்தில் அந்தர்யாகமுறை[6] பஹிர்யாக முறை, மஹாயாகமுறை விளக்கப்பட்டன. புரச்சரண-கண்டத்தில்[7] ஜபம் செய்யும்முறை விளக்கப்பெற்றது. ஹோமகண்டத்தில் ஹோம முறை, அதற்கான பொருள்களைத் தயாரிப்பது விளக்கப்பெற்றது. ரஹஸ்யகண்டத்தில் தேவி, ஸ்ரீசக்கிரம், ஸ்ரீவித்யை, குரு, சிஷ்யன் இந்த ஐவருக்குள்ளும் பேதம் காணமல் அவர்கள் எல்லோரிலும் முழு ஒற்றுமை காணும் வகை கூறப்பட்டது. ஸ்தோத்ரகண்டத்தில் பல ஸ்தோத்திரங்கள்; மந்திரிணீதேவி, தண்டினீதேவி இருவர்களின்,*

8 मन्त्रिणीदण्डिनीदेव्योः प्रोक्ते नामसहस्रके ।
न तु श्रीललितादेव्याः प्रोक्तं नामसहस्रकम् ॥
9 तत्र मे संशयो जातो हयग्रीव दयानिधे ।
किं वा त्वया विस्मृतं तज्ज्ञात्वा वा समुपेक्षितम् ॥
10 मम वा योग्यता नास्ति श्रोतुं नामसहस्रकम् ।
किमर्थं भवता नोक्तं तत्र मे कारणं वद ॥

सूत उवाच —
11 इति पृष्टो हयग्रीवो मुनिना कुम्भजन्मना ।
प्रहृष्टो वचनं प्राह तापसं कुम्भसम्भवम् ॥

8 மந்த்ரிணீ-தண்டிநீ-தேவ்யோ: ப்ரோக்தே நாமஸஹஸ்ரகே l
ந து ஶ்ரீலலிதா தேவ்யா: ப்ரோக்தம் நாமஸஹஸ்ரகம் ll
9 தத்ர மே ஸம்சயோ ஜாதோ ஹயக்ரீவ தயாநிதே l
கிம் வா த்வயா விஸ்ம்ருதம் தத் ஜ்ஞாத்வா வா ஸமுபேக்ஷிதம் ll
10 மம வா யோக்யதா நாஸ்தி ச்ரோதும் நாமஸஹஸ்ரகம் l
கிமர்த்தம் பவதா நோக்தம் தத்ர மே காரணம் வத ll
ஸூத உவாச—
11 இதி ப்ருஷ்டோ ஹயக்ரீவோ முநிநா கும்பஜந்மநா l
ப்ரஹ்ருஷ்டோ வசநம் ப்ராஹ தாபஸம் கும்பஸம்பவம் ll

*ஸஹஸ்ரநாமம் விளக்கப்பெற்றன. ஆனால் ஸ்ரீலலிதாதேவியின் ஸஹஸ்ரநாமம் மாத்திரம் கூறப்படவில்லை. (4–8)*

*0204 எனக்கொரு சந்தேகம்—தயாநிதியான ஹயக்ரீவரே! தாங்கள் கூற மறந்துவிட்டீர்களா? அல்லது நினைவிருந்தும் சொல்வானேன் என வாளாவிருந்துவிட்டீர்களா? அல்லது ஸஹஸ்ரநாமத்தைக் கேட்கும் தகுதிதான் என்னிடம் இல்லையா? அல்லது வேறு எந்தக் காரணத்திற்காகத் தாங்கள் கூறவில்லை?[6] அதைக் கூறுவீர்களாக. (9–10)*

*0205 ஸூதர் சொல்கிறார்!—(சௌநகரே) இப்படி குடமுனிவரால் (அகஸ்திய முனிவரால்) கேட்கப்பட்ட ஹயக்ரீவர் மனமகிழ்ந்து குடமுனிவரிடம் கூறினார். (11)*

श्रीहयग्रीव उवाच —

12 लोपामुद्रापतेऽगस्त्य सावधानमनाः शृणु ।
नाम्नां सहस्रं यन्नोक्तं कारणं तद्वदामि ते ॥

13 रहस्यमिति मत्वाहं नोक्तवांस्ते न चान्यथा ।
पुनश्च पृच्छते भक्त्या तस्मात्तत्ते वदाम्यहम् ॥

14 ब्रूयाच्छिष्याय भक्ताय रहस्यमपि देशिकः ।
भवता न प्रदेयं स्यादभक्ताय कदाचन ॥

15 न शठाय न दुष्टाय नाविश्वासाय कर्हिचित् ।
श्रीमातृभक्तियुक्ताय श्रीविद्याराजवेदिने ॥

ஸ்ரீஹயக்ரீவ உவாச—

12 லோபாமுத்ராபதே(அ)கஸ்த்ய ஸாவதாநமநா: ச்ருணு ।
நாம்நாம் ஸஹஸ்ரம் யந்நோக்தம் காரணம் தத்
வதாமிதே ॥

13 ரஹஸ்யமிதி மத்வாஹம் நோக்தவாம்ஸ்தே ந சாந்யதா ।
புநச்ச ப்ருச்சதே பக்த்யா தஸ்மாத் தத்தே வதாம்யஹம் ॥

14 ப்ருயாச்சிஷ்யாய பக்தாய ரஹஸ்யமபி தேசிக: ।
பவதா ந ப்ரதேயம் ஸ்யாத் அபக்தாய கதாசந ॥

15 ந சடாய ந துஷ்டாய நாவிச்வாஸாய கர்ஹிசித் ।
ஸ்ரீமாத்ருபக்தியுக்தாய ஸ்ரீவித்யாராஜ வேதிநே ॥

*0206* ஸ்ரீஹயக்ரீவர் கூறினர்—லோபாமுத்ரையின் கணவரே![9] அகஸ்தியரே! சற்றுக் கவனத்துடன் கேட்பீராக! ஸஹஸ்ரநாமம் கூறாததன் காரணம் கூறுகிறேன். ரஹஸ்யமென நினைத்து நான் சொல்லவில்லை. வேறு நோக்கமல்ல. மறுபடியும் பக்தியுடன் கேட்கிறீர், அதனால் அதைக் கூறுகிறேன். (12–13)

*0207* பக்தனான சிஷ்யனுக்குக் குரு ரஹஸ்யத்தையும் கூறவேண்டும். பக்தனல்லாதவனுக்கு நீர் இதை உபதேசிக்கக்கூடாது. சடனுக்கும்[10] கெட்ட எண்ணம் உள்ளவனுக்கும், நம்பிக்கையற்றவனுக்கும் எந்நிலையிலும் உபதேசிக்கக்கூடாது. அன்னை தேவியிடம் பக்தியுள்ளவனும், ஸ்ரீ வித்யையறிந்தவனும், அதன்படி உபாஸனை செய்பவனும் தூய மனமுள்ளவனுமான பக்தனுக்கே இதை உபதேசிக்கவேண்டும். (14–15½)

16 उपासकाय शुद्धाय देयं नामसहस्रकम् ।
यानि नामसहस्राणि सद्यः सिद्धिप्रदानि वै ॥

17 तन्त्रेषु ललितादेव्यास्तेषु मुख्यमिदं मुने ।
श्रीविद्यैव तु मन्त्राणां तत्र कादिर्यथा परा ॥

18 पुराणां श्रीपुरमिव शक्तीनां ललिता यथा ।
श्रीविद्योपासकानां च यथा देवो वरः शिवः ॥

19 तथा नामसहस्रेषु परमेतत्प्रकीर्तितम् ।
यथास्य पठनाद्देवी प्रीयते ललिताम्बिका ॥

20 अन्यनामसहस्रस्य पाठान्न प्रीयते तथा ।
श्रीमातुः प्रीतये तस्मादनिशं कीर्तयेदिदम् ॥

16 உபாஸகாய சுத்தாய தேயம் நாமஸஹஸ்ரகம் I
யாநி நாமஸஹஸ்ராணி ஸத்ய: ஸித்திப்ரதாநி வை II

17 தந்த்ரேஷு லலிதாதேவ்யா: தேஷு முக்ய மிதம் முநே I
ஸ்ரீவித்யைவ து மந்த்ராணாம் தத்ர காதிர் யதா பரா II

18 புராணாம் ஸ்ரீபுரமிவ சக்தீநாம் லலிதா யதா I
ஸ்ரீவித்யோபாஸகாநாஞ்ச யதா தேவோ வர: சிவ: II

19 ததா நாமஸஹஸ்ரேஷு பரமேதத் ப்ரகீர்த்திதம் I
யதாஸ்ய படநாத் தேவீ ப்ரீயதே லலிதாம்பிகா I

20 அந்ய நாமஸஹஸ்ரஸ்ய பாடாந் ந ப்ரீயதே ததா I
ஸ்ரீமாது: ப்ரீதயே தஸ்மாத் அநிசம் கீர்த்தயேதிதம் II

*0208 முனிவரே! தந்திர நூல்களில் உடன் சித்தி தருப வைகளாகக் கூறப்பட்டுள்ள ஸஹஸ்ரநாமங்களில் இது முக்கிய மானது. மந்திரங்களுக்குள் ககாரத்தில் தொடங்கும் மேன்மையுள்ள ஸ்ரீவித்யையைப்போல், நகரங்களுக்குள் ஸ்ரீபுரம் போல், சக்தி களுக்குள் ஸ்ரீலலிதையைப்போல் ஸ்ரீவித்யை உபாஸகர்களில் சிவபெருமானைப்போல், ஸஹஸ்ரநாமங்களில் இது சிறந்தது.(15½–19)*

*0209 இதை பாராயணம்[11] செய்வதால் தேவி எப்படி மகிழ் கிருளோ அப்படி மற்ற ஸஹஸ்ரநாமங்களின் பாராயணத்தால் மகிழ்வ தில்லை. அதனால் தேவி ஸ்ரீ மாதாவின் பிரியத்தைப் பெற தினமும் இதைப் பாடவேண்டும். ஸ்ரீ சக்ரத்தில் வில்வ இலைகளாலோ,*

21 बिल्वपत्रैश्चक्रराजे योऽर्चयेल्ललिताम्बिकाम् ।
पद्मैर्वा तुलसीपुष्पैरेभिर्नामसहस्रकैः ॥
22 सद्यः प्रसादं कुरुते तत्र सिंहासनेश्वरी ।
चक्राधिराजमभ्यर्च्य जप्त्वा पञ्चदशाक्षरीम् ॥
23 जपान्ते कीर्तयेन्नित्यमिदं नामसहस्रकम् ।
जपपूजाद्यशक्तोऽपि पठेन्नामसहस्रकम् ॥
24 साङ्गार्चने साङ्गजपे यत्फलं तदवाप्नुयात् ।
उपासने स्तुतीरन्याः पठेदभ्युदयो हि सः ॥
25 इदं नामसहस्रं तु कीर्तयेन्नित्यकर्मवत् ।
चक्रराजार्चनं देव्या जपो नाम्नां च कीर्तनम् ॥

21 பில்வபத்ரைச் சக்ரராஜே யோர்ச்சயேல் லலிதாம்பிகாம் ।
பத்மைர் வா துளஸீபத்ரை : ஏபிர் நாம ஸஹஸ்ரகை : ॥
22 ஸத்ய : ப்ரஸாதம் குருதே தத்ர ஸிம்ஹாஸநேச்வரீ ।
சக்ராதிராஜ மப்யர்ச்ய ஜப்த்வா பஞ்சதசாக்ஷரீம் ॥
23 ஜபாந்தே கீர்த்தயேந் நித்யமிதம் நாமஸஹஸ்ரகம் ।
ஜபபூஜாத்யசக்தோ(அ)பி படேந் நாமஸஹஸ்ரகம் ॥
24 ஸாங்கார்சநே ஸாங்கஜபே யத்பலம் ததவாப்நுயாத் ।
உபாஸநே ஸ்துதீரந்யா : படேதப்யுதயோ ஹி ஸ : ॥
25 இதம் நாமஸஹஸ்ரம் து கீர்த்தயேந் நித்யகர்மவத் ।
சக்ரராஜார்ச்சநம் தேவ்யா ஜபோ நாம்நாஞ்ச கீர்த்தநம் ॥

தாமரைப் பூவாலோ, துளசியாலோ இந்த ஸஹஸ்ரநாமத்தைக் கொண்டு ஸ்ரீ லலிதையை அர்ச்சனை செய்து வழிபட்டால் பேரரசியான அவள் உடனே அருள்புரிகிறாள். ஸ்ரீ சக்ர பூஜை செய்து பஞ்சதசாக்ஷரீ மந்திரத்தை ஜபித்து, ஜப முடிவில் தினமும் இதைப் பாராயணம் செய்யலாம். ஜபமும், பூஜையும் செய்ய இயலாதவனும் ஸஹஸ்ரநாமத்தைப் பாராயணம் செய்வதால் முறைப்படி ஜபம், அர்ச்சனை, பூஜை செய்வதால் ஏற்படக்கூடிய பயனைப் பெறுவான். நன்மை கிட்டும் என்பதற்காக மற்ற ஸ்தோத்திரங்களைப் படிக்கலாம். ஆனால் இந்த ஸ்தோத்ர பாராயணத்தை நித்யகர்மா[12]வைப்போல் அவசியம் செய்யவேண்டும். பக்தன் தினமும் ஸ்ரீ சக்ர பூஜை, மந்த்ர ஜபம், நாமபாராயணம் இவைகளை நித்யக் கடனாகச் செய்வது அவசியம். மற்றவைகளைச் செய்வது மேன்மைதரவல்லதே. இதன் சிறப்பிற்குள்ள காரணத்தைக் கூறுகிறேன். (20-26½)

26 भक्तस्य कृत्यमेतावदन्यदभ्युदयं विदुः।
भक्तस्यावश्यकमिदं नामसाहस्रकीर्तनम् ॥

27 तत्र हेतुं प्रवक्ष्यामि शृणु त्वं कुम्भसम्भव।
पुरा श्रीललितादेवी भक्तानां हितकाम्यया ॥

28 वाग्देवीर्वशिनीमुख्याः समाहूयेदमब्रवीत्।
वाग्देवता वशिन्याद्याः शृणुध्वं वचनं मम ॥

29 भवत्यो मत्प्रसादेन प्रोल्लसद्वाग्विभूतयः।
मद्भक्तानां वाग्विभूतिप्रदाने विनियोजिताः ॥

30 मच्चक्रस्य रहस्यज्ञा मम नामपरायणाः।
मम स्तोत्रविधानाय तस्मादाज्ञापयामि वः ॥

26 பக்தஸ்ய க்ருத்யமேதாவத் அந்யதப்யுதயம் விது: ll
பக்தஸ்யாவச்யகமிதம் நாமஸாஹஸ்ர கீர்த்தநம் ll

27 தத்ர ஹேதும் ப்ரவக்ஷ்யாமி ச்ருணு த்வம் கும்பஸம்பவ ! l
புரா ஸ்ரீலலிதாதேவீ பக்தாநாம் ஹிதகாம்யயா ll

28 வாக்தேவீர் வசிநீமுக்யா: ஸமாஹூயேத மப்ரவீத் l
வாக்தேவதா வசிந்யாத்யா ! ச்ருணுத்வம் வசநம் மம ll

29 பவத்யோ மத்ப்ரஸாதேந ப்ரோல்லஸத் வாக்விபூதய: l
மத்பக்தாநாம் வாக்விபூதி ப்ரதாநே வினியோஜிதா : ll

30 மச்சக்ரஸ்ய ரஹஸ்யஜ்ஞா : மம நாமபராயணா : l
மம ஸ்தோத்ர விதாநாய தஸ்மாதாஜ்ஞாபயாமி வ : ll

*0210* முன்னர் ஸ்ரீ லலிதாதேவி பக்தர்களின் நலனைக் கருதி வசிநீ முதலிய வாக்தேவதைகளை[13] கூப்பிட்டு உத்தரவிட்டாள்— "வாக்தேவதைகளே ! எனது சொல்லைக் கேளுங்கள் ! என் அருளால் வாக்குவன்மை பெற்ற நீங்கள் என் பக்தர்களுக்கு வாக்குவன்மையை வழங்குவதற்காக[14] நியமிக்கப்பட்டுள்ளீர்கள். நீங்கள் என் சக்ர ரஹஸ்யம்[15] அறிந்து என் நாமபாராயணத்தில் ஈடுபட்டவர்களான தால் எனது ஸ்தோத்திரத்தைத்தொகுக்க உங்களுக்கு உத்திரவிடுகிறேன். என் பெயரை முத்திரையாகப் பெற்ற ஆயிரம் நாமங்களைக்கொண்டு[16] ஸ்தோத்திரம் ஒன்றை இயற்றுங்கள். அதைக் கூறக்கேட்டு நான் மிகவும் மகிழ்வேன்." *(26½–31)*

31 कुरुध्वमङ्कितं स्तोत्रं मम नामसहस्रकैः ॥
येन भक्तैः स्तुताया मे सद्यः प्रीतिः परा भवेत् ॥

हयग्रीव उवाच—

32 इत्याज्ञप्ता वचोदेव्यः श्रीदेव्या ललिताम्बया ।
रहस्यैर्नामभिर्दिव्यैश्चक्रुः स्तोत्रमनुत्तमम् ॥

33 रहस्यनामसाहस्रमिति तद्विश्रुतं परम् ।
ततः कदाचित्सदसि स्थित्वा सिंहासनेऽम्बिका ॥

34 स्वसेवावसरं प्रादात् सर्वेषां कुम्भसम्भव ।
सेवार्थमागतास्तत्र ब्रह्माणीब्रह्मकोटयः ॥

31 குருத்வ மங்கிதம் ஸ்தோத்ரம் மம நாமஸஹஸ்ரகை: 1
யேந பக்தை : ஸ்துதாயா மே ஸத்ய : ப்ரீதி : பரா பவேத் 11

ஹயக்ரீவ உவாச—

32 இத்யாஜ்ஞப்தா வசோதேவ்ய : ஸ்ரீதேவ்யா லலிதாம்பயா 1
ரஹஸ்யையர் நாமபிர் திவ்யை : சக்ரு : ஸ்தோத்ர மநுத்தமம் 11

33 ரஹஸ்யநாம ஸாஹஸ்ரம் இதி தத் விச்ருதம் பரம் 1
தத : கதாசித் ஸதஸி ஸ்தித்வா ஸிம்ஹாஸநேSம்பிகா 11

34 ஸ்வ ஸேவாவஸரம் ப்ராதாத் ஸர்வேஷாம் கும்பஸம்பவ 1
ஸேவார்த்த மாகதாஸ் தத்ர ப்ரஹ்மாணீ-ப்ரஹ்மகோடய : 11

*0211 இப்படித் தேவி லலிதாம்பிகையால் ஆணையிடப் பெற்ற வாக்தேவிகள் பக்தரல்லாதார் அறியாவண்ணம் இதுகாறும் ரஹஸ்யமாயிருந்த திவ்விய நாமங்களைக்[17] கொண்டு உயர்ந்த ஸ்தோத்திரத்தை இயற்றினார்கள். அதற்கு ரஹஸ்ய ஸஹஸ்ரநாமம் என்று புகழ் ஏற்பட்டது. குடமுனிவரே! ஒருசமயம் தேவி ஸபையில் ஸிம்ஹாஸனத்தில் அமர்ந்து தன்னை வழிபட எல்லோர்க்கும் வாய்ப் பளித்தாள். அவளை வழிபடக் கோடிக்கணக்கான பிரும்மதேவர்களும், பிரும்ம சக்திகளும், லக்ஷ்மீசக்தியுடன் கூடிய நாராயணர்களும், கௌரியுடன் கூடிய ருத்திரர்களும்[18] மந்திரிணீ, தண்டினீ முதலிய சக்திகளும்[19] பற்பல தோற்றங்களுள்ளவர்களாய் தேவி வழிபாட்டிற் காகக் கூடினர். அவர்கள் எண்ணில் அடங்காதவர்கள். திவ்யௌக கர்கள், மானவௌகர்கள், ஸித்தௌகர்கள்[20] என்ற குருகணங்களும் கூடியிருந்தனர். (32–36½)*

35 लक्ष्मीनारायणानां च कोटयः समुपागताः ।
गौरीकोटिसमेतानां रुद्राणामपि कोटयः ॥

36 मन्त्रिणीदण्डिनीमुख्याः सेवार्थं यास्समागताः ।
शक्तयो विविधाकारास्तासां संख्या न विद्यते ॥

37 दिव्यौघा मानवौघाश्च सिद्धौघाश्च समागताः ।
तत्र श्रीललितादेवी सर्वेषां दर्शनं ददौ ॥

38 तेषु दृष्ट्वोपविष्टेषु स्वे स्वे स्थाने यथाक्रमम् ।
तत्र श्रीललितादेवीकटाक्षाक्षेपनोदिताः ॥

39 उत्थाय वशिनीमुख्या बद्धाञ्जलिपुटास्तदा ।
अस्तुवन्नामसाहस्रैः स्वकृतैर्ललिताम्बिकाम् ॥

35 லக்ஷ்மீநாராயணாநாஞ்ச கோடய: ஸமுபாகதா: l
கௌரீகோடி ஸமேதாநாம் ருத்ராணாமபி கோடய: ll

36 மந்த்ரிணீ தண்டிநீ முக்யா: ஸேவார்த்தம் யா: ஸமாகதா: l
சக்தயோ விவிதாகாரா: தாஸாம் ஸங்க்யா ந வித்யதே ll

37 திவ்யௌகா மாநவௌகாச்ச ஸித்தௌகாச்ச ஸமாகதா: l
தத்ர ஸ்ரீலலிதாதேவீ ஸர்வேஷாம் தர்சநம் ததௌ ll

38 தேஷு த்ருஷ்ட்வோபவிஷ்டேஷு ஸ்வே ஸ்வே ஸ்தாநே யதாக்ரமம் l
தத்ர ஸ்ரீலலிதாதேவீகடாக்ஷாக்ஷேபநோதிதா: ll

39 உத்தாய வசிநீமுக்யா பத்தாஞ்ஜலிபுடாஸ் ததா l
அஸ்துவந் நாமஸாஹஸ்ரை: ஸ்வக்ருதைர் லலிதாம்பிகாம் ll

0212 அங்கு அனைவருக்கும் ஸ்ரீலலிதாதேவி தரிசனம் தந்தனள். அவர்கள் தரிசனம் செய்துவிட்டுத் தன்-தன்னிருக்கையில் அமர்ந்ததும் ஸ்ரீ லலிதாதேவியின் கடைக்கண் பார்வையால் தூண்டப் பட்டவர்களாய் வசிநீ முதலிய வாக்தேவிகள் எழுந்திருந்து கைக் கூப்பியவர்களாகத் தாம் இயற்றிய ஸஹஸ்ரநாமத்தால் ஸ்ரீ லலிதாம் பிகையை வாழ்த்தினர். அதைக்கேட்ட ஸ்ரீ லலிதா பரமேசுவரி மிகவும் மகிழ்ச்சியடைந்தவளானள். ஸபையிலிருந்த அனைவரும் அதைக் கேட்டு வியப்புற்றனர். (36½-40)

40 श्रुत्वा स्तवं प्रसन्नाभूल्ललिता परमेश्वरी।
सर्वे ते विस्मयं जग्मुर्ये तत्र सदसि स्थिताः॥

41 ततः प्रोवाच ललिता सदस्यान् देवतागणान्।
ममाज्ञयैव वाग्देव्यश्चक्रुः स्तोत्रमनुत्तमम्॥

42 अङ्कितं नामभिर्दिव्यैर्मम प्रीतिविधायकैः।

43 तत्पठध्वं सदा यूयं स्तोत्रं मत्प्रीतिवृद्धये॥
प्रवर्तयध्वं भक्तेषु मम नामसहस्रकम्॥

44 इदं नामसहस्रं मे यो भक्तः पठते सकृत्।
मम प्रियतमो ज्ञेयस्तस्मै कामान् ददाम्यहम्॥

45 श्रीचक्रे मां समभ्यर्च्य जप्त्वा पञ्चदशाक्षरीम्।
पश्चान्नामसहस्रं मे कीर्तयेन्मम तुष्टये॥

40 ச்ருத்வா ஸ்தவம் ப்ரஸந்நாபூத் லலிதா பரமேச்வரீ I
ஸர்வே தே விஸ்மயம் ஜக்முர் யே தத்ர ஸதஸி ஸ்த்திதா : II

41 தத: ப்ரோவாச லலிதா ஸதஸ்யாந் தேவதாகணாந் I
மமாஜ்ஞயைவ வாக்தேவ்ய: சக்ரு: ஸ்தோத்ர மநுத்தமம் II

42 அங்கிதம் நாமபிர் திவ்யை: மம ப்ரீதி விதாயகை: II

43 தத் படத்வம் ஸதா யூயம் ஸ்தோத்ரம் மத்ப்ரீதிவ்ருத்தயே I
ப்ரவர்தயத்வம் பக்தேஷு மம நாமஸஹஸ்ரகம் II

44 இதம் நாமஸஹஸ்ரம் மே யோ பக்த: படதே ஸக்ருத் I
மம ப்ரியதமோ ஜ்ஞேய: தஸ்மை காமாந் ததாம்யஹம் II

45 ஸ்ரீசக்ரே மாம் ஸமப்யர்ச்ய ஜப்த்வா பஞ்சதசாக்ஷரீம் I
பச்சாந் நாமஸஹஸ்ரம் மே கீர்த்தயேந் மம துஷ்டயே II

*0213 அதன்பின் ஸ்ரீ லலிதாதேவி ஸபையிலுள்ளவர்களையும், தேவதைகளையும் பார்த்துக் கூறினாள்—என் ஆணையால் வாக்தேவிகள் இந்தச் சிறந்த ஸ்தோத்திரத்தை என்னை மகிழ்விக்கும் எனது திவ்ய நாமங்களைக்கொண்டு இயற்றினர். என் அருள் பெற நீங்கள் இதனை எப்போதும் பாராயணம் செய்யுங்கள். பக்தர்களிடையே இதனைப் பரப்புங்கள். இந்த ஸஹஸ்ரநாமத்தை ஒரு தடவை படித்தவனும் என் பக்தனே. அவனது எல்லா இஷ்டங்களையும் நிறைவேற்றுவேன். ஸ்ரீ சக்ரத்தில் என்னை வழிபட்டு, பஞ்சதசாக்ஷரியை ஜபித்துப் பிறகு என் அருளைப்பெற ஸஹஸ்ரநாமத்தை எப்போதும் பாராயணம்*

46 मामर्चयतु वा मा वा विद्यां जपतु वा न वा ।
कीर्तयेन्नामसाहस्रमिदं मत्प्रीतये सदा ॥

47 मत्प्रीत्या सकलान् कामांल्लभते नात्र संशयः ।
तस्मान्नामसहस्रं मे कीर्तयध्वं सदादरात् ॥

श्री हयग्रीव उवाच—

48 इति श्रीललितेशानी शास्ति देवान्सहानुगान् ॥

49 तदाज्ञया तदारभ्य ब्रह्मविष्णुमहेश्वराः ।
शक्तयो मन्त्रिणीमुख्या इदं नामसहस्रकम् ॥

50 पठन्ति भक्त्या सततं ललितापरितुष्टये ।
तस्मादवश्यं भक्तेन कीर्तनीयमिदं मुने ॥

46 மாமர்சயது வா மா வா வித்யாம் ஜபது வா ந வா ।
கீர்தயேந் நாமஸாஹஸ்ரம் இதம் மத்ப்ரீதயே ஸதா ॥

47 மத்ப்ரீத்யா ஸகலாந் காமாந் லபதே நாத்ர ஸம்சய: ।
தஸ்மாந் நாமஸஹஸ்ரம் மே கீர்தயத்வம் ஸதாதராத் ॥

ஸ்ரீ ஹயக்ரீவ உவாச—

48 இதி ஸ்ரீலலிதேசாநீ சாஸ்தி தேவாந் ஸஹாநுகாந் ॥

49 ததாஜ்ஞயா ததாரப்ய ப்ரஹ்ம விஷ்ணு மஹேச்வரா: ।
சக்தயோ மந்த்ரிணீ முக்யா இதம் நாமஸஹஸ்ரகம் ॥

50 படந்தி பக்த்யா ஸததம் லலிதா பரிதுஷ்டயே ।
தஸ்மா தவச்யம் பக்தேந கீர்த்தநீயமிதம் முநே ॥

*செய்யுங்கள். என் அருளால் எல்லா ஆசைகளும் நிறைவேறும். ஐயமில்லை. அதனால் மிக்க ஈடுபாட்டுடன் இதனைப் பாடி வாருங்கள். (41–46)*

*0214 ஹயக்ரீவர் கூறினர்—இப்படி லலிதா பரமேசுவரி பரிவாரங்களுடன் கூடிய தேவதைகளுக்கு உத்திரவிட்டாள். அதிலிருந்து அவள் ஆணைகாரணமாக பிரமன், விஷ்ணு, மகேச்வரன், மந்திரிணீ முதலிய சக்தி தேவதைகள் இந்த ஸஹஸ்ரநாமத்தை லலிதாதேவியின் அருளைப்பெற எப்போதும் பக்தியுடன் பாராயணம் செய்கின்றனர். அதனால் பக்தன் அவசியம் இதைப் படிக்கவேண்டும். இதன் அவசியத்தைப்பற்றிய காரணத்தை உனக்கு விளக்கினேன்.*

51 आवश्यकत्वे हेतुस्ते मया प्रोक्तो मुनीश्वर।
इदानीं नामसाहस्रं वक्ष्यामि श्रद्धया शृणु॥
इति ब्रह्माण्डपुराणे श्रीहयग्रीवागस्त्यसंवादे
श्रीललितासहस्रनामपूर्वभागः।

51 ஆவச்யகத்வே ஹேதுஸ்தே மயா ப்ரோக்தோ முநீச்வர I
இதாநீம் நாமஸாஹஸ்ரம் வக்ஷ்யாமி ச்ரத்தயா ச்ருணு II
இதி ஸ்ரீப்ரஹ்மாண்டபுராணே ஸ்ரீ ஹயக்ரீவாகஸ்த்ய
ஸம்வாதே ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பூர்வபாக: I

*இப்போது இந்த ஸஹஸ்ரநாமத்தைக் கூறுகிறேன். ஈடுபாட்டுடன் கேட்பாயாக! (48–51)*

**பிரும்மாண்ட புராணத்தில் ஸ்ரீ ஹயக்ரீவரும் அகஸ்தியரும் செய்த ஸம்வாதத்தில் ஸ்ரீ லலிதாஸஹஸ்ரநாம முன்னுரை முற்றிற்று.**

## இவ்வதிகாரத்தின் குறிப்புகள்

1. த்யாயேத்—தியானம் செய்யவேண்டும் என இதற்குப் பொருள். மந்திர சாஸ்திரத்தில் தெய்வத்தை இப்படித் தியானம் செய்க என்று கூறியிருக்கிறது. நாம் தியானம் செய்யும்போது தியானம் செய்கிறேன் அல்லது வணங்குகிறேன் என்று பொருள் படும்படி அமைத்துக் கூறுவது முறை. அதன்படி இங்கே வந்தே (வணங்குகிறேன்) என மாற்றிச் சிலர் கூறுவதுண்டு.

2. அன்னையின் வரலாறு—லலிதோபாக்யானம் பிரும்மாண்ட புராணத்தின் உபஸம்ஹார கண்டத்தின் கடைசியில் உள்ளது. அதில் ஸ்ரீ லலிதாதேவியின் சரித்திரம் மிக விரிவாக உள்ளது. அதன் சுருக்கம் பின்வருமாறு :—

தக்ஷனின் பெண் ஸதீதேவியாகப் பிறந்த தேவி சிவனை மணந்தபின் சிவனை தக்ஷன் அவமதித்ததால் தக்ஷன் பெண்ணாக இருக்க விரும்பாமல் தக்ஷனின் யாகசாலையில் யோகமுறையில் தன் உடலைவிட்டு ஹிமவானிடம் பெண்ணாகத் தோன்றி வளர்ந்தாள். அவள் சிவனை மணப்பதற்காகத் தவமியற்ற, சிவனும் அவளை மணக்கத் தவத்தில் ஈடுபடுகிறார். தாரகன் முதலிய அசுரர்களால் வாட்டப்பெற்ற தேவர்கள், சிவனுக்கும் பார்வதிக்கும் மணம் நடைபெறும் நேரத்தைப் பேராவலுடன் எதிர்பார்த்தனர். சிவ பார்வதிகளுடைய தவத்தால் ஏற்படும் தாமதத்தைத் தவிர்க்க எண்ணி

சிவபெருமானின் மனத்தில் காமத்தைத் தூண்ட மன்மதனைத் தேவர்கள் அவரிடம் அனுப்பினார்கள். மன்மதனின் பாணங்களால் தவம் கலைந்த சிவபெருமான் தன் நெற்றிக் கண்ணால் மன்மதனைப் பொசுக்கிவிட்டார். மன்மதனின் சாம்பலைச் சித்திரகர்மா என்ற கணநாதன் உருட்டிப் பிசைந்து மனித வடிவமாக்கினான். அதில் சிவனது பார்வை விழ அந்தச் சாம்பல் உருண்டை உயிர்பெற்றது. மன்மதனைப்போல் அழகும், அஸுர பலமும் பெற்றெழுந்தது. சிவனருள் பெற ருத்திரத்தால் வழிபட சித்திரகர்மா அவனைத் தூண்டினான். அந்தக் குழந்தை அப்படியே வழிபட்டது. சிவ பெருமான் வரம்தர இசைந்தார். "தன்னோடு போரிடும் எதிரியின் பலத்தில் பாதியைப் பெறவேண்டும். எதிரியின் ஆயுதங்கள் வலிவிழந்து போகவேண்டும்" என்று அவன் வரம் கேட்டான். "அப்படியே ஆகட்டும், ஆனால் அறுபதினாயிரம் ஆண்டுகள் வரை தான் இந்த வரம் பலிக்கும்" என சிவன் வரம் தந்தார். பிரமன் அவனைப் பண்டாஸுரன் எனப் பெயரிட்டழைத்தார். அஹங்காரத் தால் தன் நிலை மறந்த ஜீவன் பண்டன். அவன் அறுபதினாயிரம் ஆண்டுகள் தேவர்களை அடக்கி ஆண்டான். அவனது குரு சுக்கிரர் அறுபதாயிரம் ஆண்டுகளுக்குப் பிறகும் இந்த சக்தி வளர, தெய்வ வழிபாடுகளை அவனுக்குப் போதித்தார் அவன் அதன்படி நடந்த தால் அவனை அடக்கமுடியாமல் போவதை உணர்ந்த மஹாவிஷ்ணு தம் மாயாசக்தியால் அழகிய பெண்ணை உருவாக்கி அவளைச் சேடி களுடன் பண்டாஸுரனிடம் அனுப்பி, அவனை மயக்கி, தொடர்ந்து தெய்வ சக்தி வளரச்செய்த வேள்வி முதலானவற்றில் அவனை ஈடுபாடற்றவனாக்கினார். தேவர்கள் இந்த வாய்ப்பைப் பயன் படுத்திக்கொண்டு தேவியை வழிபட்டுப்பண்டனிடமிருந்து மீட்சியை எதிர்பார்த்து நின்றார்கள். மேலும் நேர்ந்த தாமதத்தைப் பொறுக் காமல் ஒரு வேள்விக்குண்டத்தை அமைத்து அதில் தமது சரீரத் தைக் கூருக்கி ஹோமம் செய்தார்கள். பிறகு தம்மையே ஹோம குண்டத்தில் போட விழைந்தபோது தேவி அந்த ஹோம குண்டத் திலிருந்தும் லலிதா மகா திரிபுரசுந்தரியாகத்தோன்றி காமேசுவரரை மணந்து மஹாராஜ்ஞியாகப் பட்டாபிஷேகம் செய்துகொண்டு தனக்காக அமைக்கப்பெற்ற ஸ்ரீபுரத்தில் விளங்கினாள். பிறகு மந்த்ரிணீ, தண்டிநீ, ஜ்வாலாமாலிநீ, பாலா, அச்வாரூடா, ஸம்பத்கரீ முதலிய முக்கிய சக்திகளுடன் கிளம்பி பண்டனுடன் போரிட்டு அவனது சேனையையும், அவனது தலைநகரான சோணித (சூன்யக) நகரத்தையும், முடிவில் அவனையும் அழித்து தேவர் களுக்கு வாழ்வளித்தாள்.

3. ஸ்ரீபுரம்—மற்ற நகரங்களுக்கெல்லாம் தனிப் பெயருண்டு. தேவியின் நகரை 'புரம்', 'நகரம்' என்றும், அவளது மந்திரத்தை 'வித்யை' என்றும், சக்கிரத்தைச் 'சக்கிரம்' என்றும் யாதொரு அடைமொழியுமில்லாமல் தனித்து நிற்கும் பெயர்களால் அழைப்பார்கள் பெரியோர்கள். மாட்சிமைமிக்க தேவியைச் சார்ந்தவை ஆனதால், புரம், நகரம், வித்யை, சக்கிரம் இவைகளை ஸ்ரீ என்ற சிறப்புமிக்க என்ற பொருள் கொண்ட அடைமொழி சேர்த்து, 'ஸ்ரீபுரம்', 'ஸ்ரீநகரம்', 'ஸ்ரீவித்யை', 'ஸ்ரீசக்கிரம்' என்று அழைக்கும் வழக்கேற்பட்டது.

4. ஸ்ரீமத் பஞ்சதசாக்ஷரீ–சிறப்புமிக்க 15 அட்சரங்கள் கொண்ட அவளது மந்திரம் என்று பொருள். ஸ்ரீ என்ற பீஜ அக்ஷரத்துடன் கூடிய அந்த மந்திரம் என்றும் பொருள் கூறுவர்.

5. ந்யாஸங்கள்—வழிபடவிருக்கும் தேவதை நம் இதயத்தினுள் தங்கி நம் உடலிலும், மனத்திலும், ஒவ்வொரு அணுவிலும் பரவி நிற்கவேண்டும். அதற்கேற்ப, உடலிலும், மனத்திலும் தூய்மை தெய்வசக்தி ஆகியவற்றிற்கு எதிரான அசுர சக்திகள் அகலுதல் அவசியம். அதற்காக மந்திர ஜபமோ, பூஜையோ செய்யத் தொடங்குமுன் அந்தந்த தேவதைகள் சம்பந்தப்பட்ட சக்திமிக்க பீஜாக்ஷரங்களைச் சொல்லி உடலின் ஒவ்வொரு பகுதியையும் தொடவேண்டும். தேவியைப்பற்றிய ஜபமோ, பூஜையோ செய்யும்போதும், தேவியினது சக்திமிக்க பீஜாக்ஷரங்களைச் சொல்லி அந்தந்த அங்கத்தைத் தொட உடல் முழுவதிலும் தேவியின் சக்தி பரவி நின்று வழிபடுபவனே தேவியாக மாறிவிடுகிறான். அந்நிலையில் அவன் இதயத்தினுள் தேவி நின்று வழிபாட்டை ஏற்கிறாள். இப்படி அந்த அந்த அவயவங்களில் இருப்பதாக பாவனை செய்வதே ந்யாஸம். (பாவனை—அது ஆகச்செய்வது, வேறு விதமாக இருப்பதொன்றை இவ்விதமாக ஆக்குவது). ஷோடா ந்யாஸம்—அறுவகை ந்யாஸங்கள். இவை கணேசந்யாஸம் (51 கணேசர்களின் பாவனை) 'க்ரஹந்யாஸம் (சூர்யன் முதலிய 9 கிரஹங்களின் பாவனை) நக்ஷத்திர ந்யாஸம் (27 நக்ஷத்திரங்களின்பாவனை) யோகிநீ ந்யாஸம்(ஏழுயோகினிகளின்பாவனை) ராசி ந்யாஸம் (மேஷம் முதலிய 12 ராசிகளின் பாவனை) பீடந்யாஸம் (ஒட்டியாணம் ஜாலந்தரம் முதலிய தேவி வசிக்கும் 50 பீடங்களின் பாவனை) என்பன. மஹாஷோடாந்யாஸம் என மற்றும் ஆறு ந்யாஸங்கள் உண்டு. அவை ப்ரபஞ்சந்யாஸம், புவநந்யாஸம், மூர்த்திந்யாஸம், மந்திரந்யாஸம், தேவதாந்யாஸம், மாத்ருகா ந்யாஸம் என்பன.

அஜ்ஞானம் என்பதே இதற்குக் காரணம். இந்த வாஸனமயமான சரீரம் இச்சா-துவேஷம் (ராகம்-க்ரோதம்) என்ற துவந்துவங்களாலானது. ஜீவர்களிடத்தில் அது முன்வினையின் பயனாக அமைகிறது. தேவியிடத்திலோ இச்சா சக்தியும் ஞான சக்தியுமாக அமைகிறது. இதனை வாக்தேவதைகள் இருநாமங்களால் விளக்குகிறார்கள்.

0705-04 தேவியின் ராகம் (விருப்பம்) பாச உருவில் வெளியாகிறது. தூரத்திலிருப்பதும் தன் வசப்படாததுமான பொருளைப் பாசமாகிற கயிற்றை எறிந்து வளைத்துத் தன் அருகே இழுத்துக் கொள்வாள் தேவி. ஆசை எனும் கயிற்றின் இரு முனைகளும் நம் கையில் அடங்காதிருந்தால், ஆசைப்படும் பொருளை நாம் வசப்படுத்த முடியாது. ஆசையும் நிறைவேறாது. அதனால் அது அடங்காது. கயிற்றின் ஒரு முனை பொருளில் உண்டான நாட்டத்தின் விளைவான மனத்தூண்டுதலையும், மற்றொரு முனை அதனை அடைவதற்கான நன்முயற்சியையும் குறிக்கும். தூண்டுதலும் முயற்சியும் பணி வெற்றிபெற உதவும். தூண்டுதல் மட்டும் இருந்தால் ஆசை வளரும். அதற்கு எல்லை இருக்காது. செயலாகப் பரிணமிக்காது. செயலின் விளைவாகப் பெற வேண்டிய இன்பம் கிட்டாது. தேவியின் இச்சாசக்தி இருமுனையுமடங்கிய பாசமானதால் ஆசை செயலாகி வெற்றி பெறும். வேறு வகையில் நாடமுடியாத தூரத்திலிருப்பதையும் கட்டிக்கொண்டு சேர்க்கும்.

0705-05 தேவியின் ஆயுதங்கள் நான்கும் அழிப்பனவல்ல; அடக்கி ஆள்பவை. நமது ஆசைகள் நல்வழிக்கானவைகளாக உருவாகி அவள் அருளால் நிறைவேறி அதனால் மனநிறைவைத் தருகின்றன. வேறு சூழ்நிலையில் தோன்றும் ஆசை மற்றோர் ஆசைக்கு வித்தாகிப் பல ஆசைகளைத் தோற்றுவிக்கும், தான்ய விதைபோல். தேவியின் அருளால் நிறைவேறும் ஆசை வறுபட்ட தான்ய விதைபோல் ஆகும். "நமது ஆசை அவள் அருளால்தான் நிறைவேறும்" என்ற நம்பிக்கை உணர்வு ஏற்பட, மீண்டும் ஆசைப்படக்காரணமாயிருந்த ஸங்கல்பமே தோன்ற இடமில்லை. அதனால் ஆசைப்படத் தேவையில்லை என்ற உணர்வு வலிவுபெற்று மனத்தை அடக்கிவிடுகிறது.

0705-06 தானியம் உணவாகும். உணவாகக்கூடிய பல தானியங்களைத் தன்னிடமிருந்தே பிறப்பிக்கும். அதனையே வறுத்துவிட்டால் ருசி மிக்க உணவாகும். மறுபடி மற்றும் பல தானியங்களைப் பெருக்கும் தன்மையை அது இழந்துவிடும். இறை

வனிடம் வைத்த பற்றும், இறைவன் அருளால் நிறைவேறும் காமமும் ஆசை கிளை கிளையாக வெடிப்பதற்கு இடமளிக்காது. (ந மய்யாவேசித தியாம் காம: காமாய கல்பதே | பர்ஜிதா: க்வதி தா தாநா: ப்ராயோ பீஜாய நேஷ்யதே—"இறைவனிடம் மனம் பதித்துள்ளவர்களுக்கு ஏற்படும் ஆசை மற்றொரு ஆசையைத் தூண்டுவதாக அமையாது. தானியம் வறுக்கப்பட்டாலும் வேக வைக்கப்பட்டாலும் தனது பீஜத்தன்மையை-தன்னைப்போல் மற்றும் பலவற்றைத் தன்னிடமிருந்தே தோற்றுவிக்கும் தன்மையை இழந்து விடுகிறதல்லவா." பாகவதம் 10-22-27) (8)

**0706-01 க்ரோத-ஆகார-அங்குச-உஜ்ஜ்வலா.—குரோதம் உருவெடுத்த அங்குசத்தால் ஒளியுடன் விளங்குபவள்.**

0706-02 அங்குசம் யானையை அடக்க அதன் பாகன் கையில் கொண்டுள்ள தொரட்டி. கூரிய முனை கொண்டது. மதம் பிடித்த யானையையும் அடக்கவல்லது. யானை பலமுள்ள மிகப்பெரிய விலங்கு. மதம் பிடித்தால் அதனை அடக்கமுடியாது. அந்த யானையும் இந்தச் சிறு தொரட்டிக்கு அடங்கும். இந்த அங்குசத்தைத் தேவி தனது வலது பின் கையில் தாங்கி நிற்கிறாள்.

0706-03 அங்குசம் ஆயுதத்தின் ஸ்தூல உருவம். அதன் வாஸனாமய சரீரம் குரோதம். மனம் தான் நாடிச் சென்றடைந்த பொருள் சுகம் தராமல் துக்கம் தரும்போது அதனை வெறுக்கும். அந்த வெறுப்பு உணர்ச்சியே குரோதம் ஆகிறது. ஆசை மென்மையைக் கொடுக்கும். அதன் எதிரான வெறுப்புணர்ச்சி கொடுமையைக் கொடுக்கும். வெறுப்புணர்ச்சி வெளியில் அடங்கி உள்ளத்தில் கொந்தளித்தால் குரோதம். அது வாஸனையாக ஆழ்ந்த தடம் அமைத்துவிடும். அதுவே பேச்சாலும் செயலாலும் வெளிப்பட்டு விட்டால் கோபமாகிவிடும். அப்படி வெளியான கோபம் வாஸனையாக-தடமாக ஆழப்பதியாது. குரோதம் துவேஷம் எனப்படும் வெறுப்பு உணர்ச்சியே, அங்குசம் எனும் ஸ்தூல உருவம் பெற்றுள்ளது. க்ரோதாகார-குரோதமே உருவெடுத்த, அங்குச உஜ்ஜ்வலா-அங்குசத்தால் ஒளியிட்டு விளங்குபவள். குரோதம் எனும் அங்குசத்தால் ஆணவத்தை அடக்குகிறாள்.

0706-04 இந்த அங்குசம் தேவியின் ஞானசக்தியுமாகும். மனம் பொறிகள் வழியே சென்று ஒரு பொருளை அடைந்ததும் அதுவாகி சித்தத்துள் அந்தப் பொருளின் அறிவை ஊட்டுகிறது. குடத்தைப்பார்த்ததும் மனம் அனுப்பும் செய்தி "நான் குடத்தை

அறிகிறேன்" என்றறிந்த உணர்ச்சி. இந்தக் குட உருவில் அமைந்த அறிவு ஆகாரஜ்ஞானம்—உருவத்துடன் கூடிய ஞானம். உருவின்றி ஏற்படும் அறிவு—உள்ளறிவு நிராகாரஜ்ஞானமாகும். அந்த அறிவில் "இதை அறிகிறேன்" என்ற விஷயஜ்ஞானம் இல்லை. விருப்போ வெறுப்போ வாஸனையாக அமையாதிருப் பதற்கு விருப்பு-வெறுப்புக்குட்பட்ட பொருளைப் பற்றிய முழு அறிவு உதவுகிறது. மேலெழுந்த வாரிய க ஒன்றை அறிந்து மனம் அதனை வெறுக்கும்போது அதனைப் பற்றிய விசேஷ ஞானம் மனத் தெளிவைத் தந்து வெறுப்பின் கொடுமையை அடக்கிவிடுகிறது.

0706-05 எழுந்த கோபத்தை அடக்கச் சிறந்த உபாயமாகப் பொறுமையைக் கடைப்பிடிக்கச் சொல்கிறுர் சங்கரர். 'க்ரோதம் து க்ஷமயா த்யஜ' "கோபத்தைப் பொறுமையால் கைவிடு" (துர்வாஸநாப்ரதீகாரதசகம்) கோபத்தைச் செயலாலும் சொல்லாலும் வெளிக்காட்டுமுன் சற்றுப் பொறுமையுடன் சிந்திக்க அவகாசம் தேவை. பொறுமை இந்த இடைவெளியைத் தரும் போது மனம் கோபத்திற்கான காரணத்தை அசைபோடுகிறது. கோபம் மனத்தின் பிரதிபலிப்பு உணர்ச்சியாகும். அறிவால் அந் தப்பொருள் அத்துணை வெறுக்கத்தக்கதல்ல என்ற உணர்வு ஏற்பட, கோபம் தானே அடங்கி மறைகிறது. அதனுல் விரும்பப் படும் அல்லது வெறுக்கப்படும் பொருள் பற்றிய ஆகாரஞானம் அங்குசம் போல் விருப்பையும் வெறுப்பையும் அடக்கிச் சரியான வழியில் அழைத்துச் செல்கிறது. க்ரோத-குரோதம், ஆகார-ஆகார ஞானம் என்ற இரண்டும், அங்குச-உஜ்ஜ்வலா—அங்குசமாகி அதனுல் ஒளியுடன் விளங்குபவள்.

0706-06 காமம், குரோதம், லோபம், மோஹம், மதம், மாத் ஸர்யம் என்ற ஆறும் அரிஷட்வர்க்கங்கள்—ஆறு சத்துருக்களின் கூட்டம் என்பர். இவைகளில் காமமும் குரோதமுமே முக்கிய மானவை. மற்றவை இவைகளின் பிரதிபலிப்பும் பின்விளைவு களுமே. காமமும் குரோதமும் எப்பொழுதும் எதிரிகள் அல்ல. நல்ல வழியில் நல்லெண்ணத்தால் ஏற்படும் காமமும் குரோதமும் நமக்கு உதவும் நண்பர்களே. நல்வழிகளில் காமம் ஈடுபடுத்துகிறது. கெட்ட வழிகளில் செல்வதற்கான எண்ணம் ஏற்படாமல் அவை களிடத்தில் வெறுப்பை ஏற்படுத்திக் குரோதம் தடுத்தாட்கொள் கிறது. நல்ல வழிகளில் நாட்டமும் கெட்ட வழிகளில் வெறுப்பும் தரும் இச்சை துவேஷம் என்ற குணங்கள் வாஸனைத்தடங்களாக

அமைந்து மனம் அவ்வழி சென்ருல் தெய்வீக வாழ்க்கை அமையும். இந்த இரு குணங்களையே தேவி தன் இருகைகளில் பாசமாகவும் அங்குசமாகவும் தாங்கி விளங்குகிருள்.

0706-07 ஆயுதம் எய்பவனின் கருத்துக்கேற்பப் பணிபுரியும். தேவியின் ஆயுதங்களான இச்சையும் துவேஷமும் தேவிக்கு அடங்கியவை. அவள் கருத்துக்கேற்ப பணிபுரிபவை. அவளை வழிபடுபவர்களுக்கும் தன்னிலை அளித்து, அவர்களுக்குப் பணிபுரியும் ஏவலாளிகளாக இச்சையையும் துவேஷத்தையும் அமைத்துத் தருகிருள் தேவி. (9)

**0707-01 மந:-ரூப-இக்ஷு-கோதண்டா—மனமாகிற கரும்பு வில்லுடையவள்.**

0707-02 தேவியின் இடது முன் கையில் கரும்பாகிற வில் உள்ளது. இதன் ஸூக்ஷ்ம உருவம் மனம். பொறிகள் மூலம் வெளிச்சென்ற மனம் தான் கண்ட பொருளைத் தன்னுள் பதித்துக் கொண்டு விரும்பத்தக்கதாயின் அதனை அடையவோ, வெறுக்கத் தக்கதாயின் அதனைத்தவிர்க்கவோ விழைகிறது. இப்படி விழைதலை ஸங்கல்பம் என்பர். இது மனத்தின் செயல். இது எனக்கு உவந்தது, இதை நான் பெறுவேன் என்ற ஸங்கல்பம் தோன்றும் போதே "இது நான் நினைத்தபடி உவந்தது தானு? உவந்ததாக இல்லாதிருந்தாலோ? இதை நான் பெறவேண்டாமே" என்று முன் கொண்ட ஸங்கல்பத்திற்கு எதிரான மாற்றுச் சிந்தனையிலும் சிறிது மனம் சுற்றி வரும். இது விகல்பம். இதுவும் மனத்தின் செயலே. இந்த மனம் தேவியின் கையில் வில்லாக அமைந்துள்ளது.

0707-03 வில் எப்போதும் வளைந்து நிமிரக் கூடியதும் அப்படி வளைந்து நிமிரும்போது எளிதாக ஒடியாததுமாக இருக்க ஈரமற்ற மூங்கில் பட்டைகளால் அதனை அமைப்பர். தேவியோ இனியதும் ஈரமுள்ளதுமான கரும்பை வில்லாக்கியுள்ளாள். அது எல்லாம் வல்ல அவள் மனத்தின் உருவமாகையால் ஈரமிருந்தும் திடமாக உள்ளது. ஆயுதமாயினும் இனியதாக, இனியதாயினும் ஆயுதமாக நிற்கிறது. அவள் மனம் கருணை நிரம்பியது. அதனுல் ஈரமும் இனிப்பும் அதனை விட்டகலாதவை.

0707-04 உடலை சரீரம் என்பர். ஒவ்வொரு நொடியிலும் தளர்ந்து கலகலத்து மாயக் கூடியது (சீர்யதே) என்பது அதன்

இயற்கை. வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம். அவ்வண்ணம் தானே மாயும் உடலைத் தன் இலட்சிய வாழ்விற்கு உற்ற சாதன மாகப் பயன்படுத்துவது அவனவன் திறத்தைப் பொறுத்தது. வில்லாளி அம்பைத் தனது இலக்கில் செலுத்தித் தன் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்வான். இலட்சியம் நிறைவேறுவது அம்பின் மதிப்பால் அல்ல ; அதனை இலக்கை நோக்கி எய்தவனின் மனத் திடத்தாலும் செயலாற்றும் வகையாலும் நிறைவேறுகிறது. மாயும் உடலை மாயாத வாழ்விற்குப் பயன்படுமாறு உபயோகப்படுத்தும் போது (சரவத் ஈர்யதே) அம்புபோல் எய்யப்படுகிறது. அந்த அம்பு மனமெனும் வில்லின் திடத்தையும் வளைந்து நிமிரும் வேகத் தையும் எதிர்பார்க்கும். ஆயுதம் கொடும் செயலைத்தான் நிறை வேற்றும் என்ற நியதி இல்லை. இனிய ஈரமுள்ள வில்லிலிருந்து கிளம்புவதால் அம்பின் இலக்கில் விளையும் மாறுதலும் அத்தன்மை களைப் பிரதிபலிப்பதாக அமையும். (10)

0708-01 பஞ்ச-தந்மாத்ர-ஸாயகா—ஐந்து ஸூக்ஷ்ம பூதங் களையே அம்பாகக் கொண்டவள்.

0708-02 உலகின் ஜடத்தோற்றத்திற்கு மூலமாக அமைந் துள்ள பூதங்கள் ஐந்தும் தன் தனக்கெனத் தனித்த குணங்களைப் பெற்றவை. (ஆகாசம்—சப்தம்—ஒலி ; வாயு-ஸ்பர்சம்-தொடும் உணர்ச்சி ; அக்நி-ரூபம்-நிறம் ; ஜலம்-ரஸம்-சுவை ; ப்ருதிவீ-கந்தம்-மணம்) இவை பூதங்களின் ஸ்தூல நிலையில் தனித்து உணரப் பெறுபவை. ஸ்தூல நிலையில் பூதங்கள் ஐந்தும் ஒன்றோடு ஒன்று கலந்து தான் காணப்பெறுகின்றன. மிகஸூக்ஷ்ம நிலையில் மட்டுமே அவை தனித்திருக்கக் கூடும். அந்நிலை உலகமாகத் தோன் றுவதற்கு முன் மூலப்ரகிருதியிலிருந்து வெளிப்படும் போதுள்ளது. அந்நிலையில் ஜடமென்றோ சக்தி என்றோ பிரித்தறிய இயலாது. சப்தம் என்ற ஒலியைக் கொண்டே ஆகாசமிருப்பதை உணரக்கூடிய நிலை. மணத்தைக் கொண்டே பிருதிவியை அறியும் நிலை. ஐந்தும் கலந்த பிறகே ஸ்தூலத்தன்மை பெற்றுத் தோற்ற நிலைக்கு வரும். இந்த ஸ்தூலத் தோற்ற நிலைக்கு வராத—பஞ்சீ கரணம் (ஐந்து பூதங்களும் ஒன்றோடொன்று கலப்பது) ஆகாத நிலையில் சப்தம் ஸ்பர்சம் ரூபம் ரஸம் கந்தம் என்ற ஐந்து பூத குணங்களைக் கொண்டே ஐந்து பூதங்களினிருக்கையை உணர முடிவதால் இந்த பூத குணங்களையே பூத உருவமாகக் கொள்வர். அந்நிலையில், அந்த குணங்களைத் தந் மாத்ரம் என்பர். ('தத் ஏவ தந்மாத்திரம்'. 'அதுவே'. தன்மாத்திரை என்றும் சிலர் சொல்வர்.)

0708-03 இந்த அதிஸூக்ஷ்ம நிலையிலுள்ள குணங்களால் மட்டும் ஊகிக்கக் கூடிய ஐந்து பூதங்களையும் தேவி தன் அம்புகளாக வலது முன் கையில் வைத்திருக்கிறுள். இவைகளின் ஸ்தூல உருவம் ஐந்து பூக்கள். அவை தாமரை, செங்கழுநீர், செவ்வல்லி, செவ்வாம்பல், மாம்பூ என்பன. அவைகள் இலக்கை நோக்கிப் பாய்ந்ததும் இலக்கில் விளையும் மாறுதல்களை ஒட்டி ஹர்ஷணம் (மகிழ்விப்பது) ரோசநம் (சுவையூட்டுவது) மோஹனம் (மயக்குவது) சோஷணம் (வற்றவைப்பது) மாரணம் (மாய்ப்பது) என்ற பெயர்களைத் தாங்கும். [ஞாஞர்ணவத்தில் இவைகளுக்கு வேறு பெயர்கள் கூறப்படுகின்றன. அவையாவன —க்ஷோபணம் (குழப்புவது) த்ராவணம் (இளக்குவது) ஆகர்ஷணம் (தன் பால் ஈர்ப்பது) வச்யம் (தன் வசப்படுத்துவது) உந்மாதனம் (மனம் பேதலிக்கச்செய்வது) என்பன.]

0708-04 எய்பவனது கருத்தின்படி, மனம் இயங்கி, அம்புகள் கிளம்பி இலக்கில் உரிய மாற்றங்களை விளைவிக்கின்றன. ஜீவன் பக்தனுனல் தேவியின் அம்புகளுக்கு நல்ல இலக்காகிருன். அதனுல் விரும்பத்தக்க சப்த-ஸ்பர்ச-ரூப-ரஸ-கந்தங்கள் என்ற குணங்களின் ஸுகமயமான அனுபவத்தைப் பெறுகிருன். பக்தனின் கருத்தில் தோஷம் இருந்தால் அம்பின் பணிகளும் க்ஷோபணமாகவும் உன்மாதனமாகவும் மற்ற வகையிலும் மாறும். (11)

## அதிகாரம் 8

# தேவியின் கேசாதி பாதாந்தவர்ணனை

निजारुणप्रभापूरमज्जद्ब्रह्माण्डमण्डला ॥ 12
4 चम्पकाशोकपुन्नागसौगन्धिकलसत्कचा । 13
कुरुविन्दमणिश्रेणीकनत्कोटीरमण्डिता ॥ 14

நிஜாருண-ப்ரபா பூர-மஜ்ஜத்-ப்ரும்ஹாண்டமண்டலா ॥
சம்பகாசோக-புந்நாக-ஸௌகந்திக-லஸத்கசா ।
குருவிந்த-மணிச்ரேணீ-கநத்-கோடீர-மண்டிதா ॥

0801-01 நிஜ-அருண-ப்ரபா-பூர-மஜ்ஜத்-ப்ரும்ஹாண்ட-மண்டலா. தனது சிவந்த மேனி ஒளிவெள்ளத்தில் உலகை மூழ்கிக்கொண்டிருக்கச் செய்பவள்.

0801-02 நமது பூமண்டலம் ஆகாசமண்டலம் நக்ஷத்திர மண்டலம் முதலியன சேர்ந்தது ஒரு பிரும்மாண்டம். இந்த பிரும்மாண்டம் போல் பல்கோடி மண்டலம் கொண்டது ப்ரும்மாண்டமண்டலம். இவை அனைத்தும் தேவியால் படைக்கப்பெற்றவை. தேவியின் திருமேனி, செங்கதிர் கொண்ட உதித்த சூர்யன்போல் யாக குண்டத்திலிருந்து தோன்றும்போது அதன் செவ்வொளி சூர்யனுக்குமுன் படரும் அருணனது செவ்வொளிபோல் எங்கும் படர்கிறது. அனைத்துப் பிரும்மாண்டங்களும் அந்த செவ்வொளியில் மூழ்கிப் பேதமற்ற நிலையில் செம்மையுடன் விளங்குகின்றன. சூரியன் தன் ஒளிமிக்க கிரணங்களை அடக்கிக்கொண்டு விடியற்காலையில் விழித்தெழுந்தவனது கண்கள் கிரகிக்கும் அளவில் இதமான செங்கதிர்களைப் பரப்பி உலகைச் செம்மையில் மூழ்கச் செய்கிறான். தேவியும் அப்படியே தன்னை தியானிப்பவர் அனுபவிப்பதற்கேற்றவாறு தமது எல்லையற்ற கல்யாண குணங்களையெல்லாம் அடக்கித் தனது சுந்தர ருபத்தின் செம்மையை அனுபவிக்கச் செய்கிறாள். அந்த செம்மை அவளுக்கே உரித்தானது. மற்ற எவரிடமும் காண முடியாது. அதனால் நிஜ-அருண-ப்ரபா. (நிஜ-தன்னுடைய. 'நிஜ' என்ற சொல் உண்மை என்ற பொருளில் வழங்கப்பெறுகிறது. எது தன்னுடையதோ அது நிஜம். தன்னுடையதுதான் உண்மையானது. மற்றொன்றின் சேர்க்கையால் பெற்றது பின் மாறுபடக் கூடும். ஆகையால் பொய்யானது. இந்தக் கருத்தை ஒட்டியே 'நிஜ' என்ற சொல் உண்மை என்ற பொருளில் வழங்குகிறது.) மஜ்ஜத்-மூழ்கி நிற்கின்ற. இதுவரை தனித்துப் பிரும்மாண்டமாகத் தெரிந்தது. தேவியின் செவ்வொளியில் மூழ்கியதும் அந்த ஒளியைத்தவிர வேறொன்றும் தெரியவில்லை. பிரும்மாண்டம் மூழ்கி விட்டது.

0801-03 இப்படிச் செவ்வொளியாகத் தோன்றிய தேவி சிறிது சிறிதாகத் தன் ஸ்தூல உருவைப் புலப்படுத்துகிறாள். தேவதையைப் பாதத்திலிருந்து கேசம் வரை (பாதாதிகேசாந்தம்) வர்ணிப்பதும் மனிதர்களை கேசத்திலிருந்து பாதம் வரை (கேசாதிபாதாந்தம்) வர்ணிப்பதும் மரபு. ஆனால் முழுத் தோற்றத்துடன் வெளிப்படும் போது நம் கண்கள் முதலில் திருவடிகளில் பதியும். அதனால் அப்போது பாதங்கள் முதல் கேசங்கள் வரை வர்ணிக்க இயலும். அடிமுடி தெரியாவிடத்தில் கேசாதி பாதாந்தமாகவோ பாதாதி கேசாந்தமாகவோ வர்ணிப்பதும் மரபு. ஸ்ரீ சங்கரபகவத்பாதர் விஷ்ணுவிற்குப் பாதாதிகேசாந்த ஸ்தோத்திரம் மட்டும் எழுதியவர்; சிவனுக்குப் பாதாதிகேசாந்த ஸ்தோத்திரமும் கேசாதி பாதாந்த

ஸ்தோத்திரமும் இயற்றியுள்ளார். இங்கு தேவி யாககுண்டத்தியிலிருந்து தோன்றும் காட்சியை ஒட்டியே கேசாதி பாதாந்தமாக ஸ்தோத்திரம் அமைகிறது. (12)

**0802-01 சம்பக-அசோக-புந்நாக-ஸௌகந்திக-லஸத்-கசா.** **சம்பகம், அசோகம், புன்னை, செங்கழுநீர் இவைகளின் பூக்களால் அழகுபெற்ற கூந்தலுள்ளவள்.**

0802-02 அக்நிகுண்டத்திலிருந்து கிளம்பும் தேவியின் திருமேனியில் முதலில் கண்களில் படுவது பூக்கள் சூடிய கூந்தலின் அழகு. பூக்களால் கூந்தல் அழகு பெறுகிறது. கூந்தலழகுடன் கூடிய பூக்கள் தாமும் அழகாக விளங்குகின்றன. (லஸத்- விளங்குகிற, விளங்கச்செய்கிற.) (13)

**0803-01 குருவிந்த-மணி-ச்ரேணீ-கநத்-கோடீர-மண்டிதா— சிவப்பு ரத்தினங்களின் வரிசைகளால் ஒளி வீசுகின்ற கிரீடத்தை அணிந்தவள்.**

0803-02 குருவிந்தம் என்பது தாமரை நிறம் கொண்ட சிவப்பு ரத்தினம். இதைத் தரிப்பதால் ஆசைகள் நிறைவேறும்; நல்ல விஷயங்களில் பற்று ஏற்படும்; வாழ்க்கை முன்னேறும்; மங்களம் பெருகும்; இறைவனிடம் பக்தியும் திடப்படும். இதனை நினைப்பதாலும் இந்த சிறப்புகள் உண்டாகும். தேவியின் சிரசில் அமைந்திருக்கும் கிரீடம் கோடீரம் என்ற வகையைச் சேர்ந்தது. (கூந்தல் அழகும் அதன் புஷ்பாலங்காரமும் மறையாதபடி இது அமைந்திருக்கும். பெண் தரிப்பதற்காக இந்த அமைப்பு. கேசம் மறையும்படி ஆண்கள் அணியும் கிரீடம் அமைந்திருக்கும். இதனை மகுடம் முகுடம் கிரீடம் என்பர்). குருவிந்தச் சிவப்புக்கற்களால் ஆனது. தேவியின் மேனிச்செம்மைக்கேற்றவாறு தாமரைபோல் சிவந்த ரத்தினங்கள் கிரீடத்தை அலங்கரிக்கின்றன. (14)

5 **अष्टमीचन्द्रविभ्राजदलिकस्थलशोभिता ।** 15
**मुखचन्द्रकलङ्काभमृगनाभिविशेषका ॥** 16

**அஷ்டமீ சந்த்ர விப்ராஜதளிகஸ்தல சோபிதா ।**
**முகசந்த்ர களங்காப ம்ருகநாபி விசேஷகா ॥**

**0804-01 அஷ்டமீ-சந்த்ர-விப்ராஜத்-அலிக-ஸ்தல சோபிதா— அஷ்டமியில் தோன்றும் சந்திரனைப்போல் விளங்கும் நெற்றியிடத்தால் அழகானவள்.**

0804-02 கிரீடத்தின் கீழுள்ள நெற்றி, யாககுண்டத்தி லிருந்தும் வெளியாகிறது. 15 கலைகளுள்ள சந்திரன் சுக்லபக்ஷத்து அஷ்டமியன்று எட்டாவது கலை நிரம்பப் பெறுபவனாகவும், கிருஷ்ண பக்ஷத்து அஷ்டமியன்று எட்டாவது கலை குறையப் பெறுபவனாகவும் காணப்பெறும்போது அவன் அரை வட்ட வடிவத்துடன் தோற்ற மளிப்பான். சந்திரனது அரைவட்ட வடிவம் கவிழ்ந்து அமைந்தது போல் மாசற்ற குளிர்ந்த ஒளியுடன் நெற்றி விளங்குகிறது. பிப்ராஜத் அலிக என்றும் பாடமுண்டு. பொருள் அதே. (15)

0805-01 முக-சந்த்ர-கலங்க-ஆப-ம்ருக-நாபி-விசேஷகா.
முகமாகிற சந்திரனின் களங்கம்போலத் தோன்றும் கஸ்தூரிப் பொட்டுடையவள்.

0805-02 சந்திரனது மண்டலத்தில் நடுவே அதற்கு அழகு தரும் கருமை நிறமுள்ள பகுதியைச் சந்திரன் எனும் தேவனின் வாழ்க்கையில் ஏற்பட்ட களங்கமெனக் கூறுவது மரபு. களங்கம் பாபத்தால் ஏற்படும் மாசு. மான்போல் அது தோன்றுவதால் சந்திரனை 'ம்ருகாங்கன்' என்பர். முயல் போலத் தோன்றுவதாகக் கொண்டு 'சசீ' 'சசாங்கன்' என்பர். தேவியின் நெற்றி அரை வட்ட வடிவமான சந்திரமண்டலம். சந்திரனானால் அதன் நடுவே களங்கம் இருக்குமே! ஆம். அதுதான் தேவியின் நெற்றியில் உள்ள கஸ்தூரிப் பொட்டு. சந்திரனிடத்தில் களங்கம்போல்—தேவி யிடத்தில் அதுவே அழகு தருவதாக அமைந்துள்ளது. (16)

6 वदनस्मरमाङ्गल्यगृहतोरणचिल्लिका । 17
वक्त्रलक्ष्मीपरीवाहचलन्मीनाभलोचना ॥ 18

வதந ஸ்மரமாங்கல்ய க்ருஹ தோரண சில்லிகா l
வக்த்ரலக்ஷ்மீ பரீவாஹ சலன்மீநாப லோசநா ll

0806-01 வதந-ஸ்மர-மாங்கல்ய-க்ருஹ-தோரண-சில்லிகா.
முகமாகிற மன்மதனது மங்கள வீட்டிற்கு முன் தோரணம் போன்று அமைந்த புருவத்துடன் கூடியவள்.

0806-02 வீட்டு வாயிலின் மேல் மழை, வெயில் படாதிருக்க எடுத்துக் கட்டியிருப்பார்கள். அதற்குத் தோரணம் என்று பெயர். தேவியின் முகம் காமேசுவரனது மனத்தை ஈர்க்கும் அழகு பெற்றது. அதனால் மன்மதன் தனது மங்களச் செயல்களின்

அலுவலகமாக அதனை அமைத்துக்கொண்டான். நெற்றியின் கீழ் அமைந்த புருவங்கள் முகமாகிய மங்கள கிருஹத்தின் வாசற்புறத்தில் அமைந்த தோரணம்போல் அழகாக விளங்குகின்றன. (17)

0807-01 வக்த்ர-லக்ஷ்மீ-பரீவாஹ-சலந்-மீந-ஆப-லோசநா.
முகத்தின் அழகு வெள்ளத்தில் செல்லும் மீன்களை யொத்த கண்களுள்ளவள்.

0807-02 முகத்தின் அழகு நொடிக்கு நொடி மாறிக்கொண்டே இருக்கிறது. இடையருது அப்படி மாறுவதால் மெதுவாகச் செல்லும் வெள்ளம் போல் அது மனத்தை ஈர்க்கிறது. அந்த அழகு வெள்ளத்தின் இடையே இரு கண்கள் இங்கும் அங்கும் பாய்ந்தோடும் இரு மீன்களைப்போல் தோன்றுகின்றன. மீன்கள் தாம் பெற்ற மீன் குட்டிகளைக் கனிவுடன் பார்த்தே அவைகளை வளர்க்கின்றன. ஊட்டி வளர்ப்பதால் ஏற்படும் வளர்ச்சியைவிட இந்த கனிந்த பார்வையால் ஏற்படும் வளர்ச்சி அதிகம். அதனுல் தான் மதுரை மாநகர்த்தேவியை மீனுக்ஷி என்று அழைப்பர். அழகு வெள்ளத்தில் நீந்தும் தேவியின் கண்கள் மீன்களுக்கு இயல்பான கனிவுப் பார்வையும் கூடி உள்ளன. அந்தப்பார்வை ஒன்ருலேயே அடியாருடைய அனைத்து விருப்பங்களும் அவர்கள் எதிர்பாராமலேயே நிறைவேறுகின்றன. (18)

7 नवचम्पकपुष्पाभनासादण्डविराजिता । 19
ताराकान्तितिरस्कारिनासाभरणभासुरा ॥ 20

நவசம்பக புஷ்பாப நாஸாதண்ட விராஜிதா ।
தாராகாந்தி திரஸ்காரி நாஸாபரண பாஸுரா ॥

0808-01 நவ-சம்பக-புஷ்ப-ஆப-நாஸா-தண்ட-விராஜிதா.
அன்றலர்ந்த சம்பகப்பூ போன்ற மூக்குத் தண்டால் அழகுடன் விளங்குபவள்.

0808-02 சம்பகப் பூ மிக மென்மையும் அழகும் காந்தியும் உள்ளது. அதன் மென்மையும் அழகும் காந்தியும் கொண்டதும் மூங்கில் குழல் போன்று நீண்டதுமான மூக்கு மிகஅழகாக உள்ளது. (19)

0809-01 தாரா-காந்தி-திரஸ்காரி-நாஸா-ஆபரண-பாஸுரா.
தாரைகளின் ஒளியை மதிப்பற்றதாக்கும் மூக்குத்தியால் ஒளியுடன் விளங்குபவள்.

0809-02 ஆகாயத்தில் பளிச்செனத் தோன்றும் ஒளிமிக்க ஜோதி மண்டலங்கள் தாரைகள். அவைகள் இரண்டு, ஒன்று சுக்கிரன், மற்றொன்று செவ்வாய். இவைகளின் ஒளியை விடப் பன்மடங்கு தேவியின் மூக்குத்திகள் இரண்டும் பிரகாசிக்கின்றன. (20)

8 कदम्बमञ्जरीक्लृप्तकर्णपूरमनोहरा । 21
ताटङ्कयुगलीभूततपनोडुपमण्डला ॥ 22

கதம்ப-மஞ்ஜரீ-க்லுப்த-கர்ணபூர மனோஹரா 1
தாடங்க-யுகலீபூத-தபனோடுப-மண்டலா 11

0810-01 கதம்ப மஞ்ஜரீ-க்லுப்த-கர்ண-பூர-மனோ-ஹரா. கடம்பின் பூங்கொத்தால் அமைந்த செவிப்பூவால் மனதை ஈர்ப்பவள்.

0810-02 காது மடல்களின்மேல் பூங்கொத்தைச் செருகிக் கொள்வது அழகை அதிகமாக்கும். கடம்பின் பூ இதற்கேற்றது. தேவியின் ஸ்ரீபுரத்தில் சிந்தாமணிகிருஹத்தின் வெளியே கடம்ப வனம் உள்ளது. அது கல்பக விருக்ஷ இனத்தைச் சேர்ந்தது. அதிலிருந்தும் கொய்த பூங்கொத்தைத் தேவி தன் காது மடல் களின்மேல் அழகாகச் செருகிக்கொண்டிருக்கிருள். (21)

0811-01 தாடங்க-யுகளீ-பூத-தபந-உடுப-மண்டலா — தாமே இரு தாடங்கங்களாக அமைந்த ஸூர்ய சந்திர மண்டலங்களுடன் கூடியவள்.

0811-02 ஸூர்யனும், சந்திரனும் தேவியின் இரு கண்க ளாகவும், தாடங்கங்களாகவும், ஸ்தனங்களாகவும் அமையும் பேறு பெற்றவர்கள். தேவிக்கு அணிகள் பூட்டும்போது ஸூர்யனும், சந்திரனும் தாமே இரு காதணிகளாக மாறித் தம்மைத் தேவிக்கு அர்ப்பணம் செய்துகொண்டார்கள். (22)

9 पद्मरागशिलादर्शपरिभाविकपोलभूः । 23
नवविद्रुमबिम्बश्रीन्यक्कारिरदनच्छदा ॥ 24

பத்மராக சிலாதர்ச பரிபாவி கபோலபூः 1
நவவித்ரும பிம்பஸ்ரீ ந்யக்காரி ரதநச்சதா 11

0812-01 பத்மராக-சிலா-ஆதர்ச-பரிபாவி-கபோல-பூ: —பத்ம ராகரத்தினக் கண்ணுடியை அவமதிப்புக்குள்ளாக்கும் கன்னங்களை உடையவள்.

0812-02 தேவியின் கன்னங்கள் மழமழவென விளங்குகின்றன. மாசற்றுப் பிரதிபிம்பம் தெரியுமாப்போல் இருக்கும் அவை சிவப்பு ரத்தினத்திலான முகக் கண்ணுடி போன்றமைந்துள்ளன. காமேசுவரன் தன் முக அழகை அதில் காணும் ஆசையால் தன் முகத்தை அதனுடன் நெருக்கமாகக் கொள்வார். ரோமகூபங்கள் கூடப் புலப்படாதபடி கண்ணுடிபோன்று பெண்களின் கன்னம் மழமழ வென்றிருக்கும். தேவியின் கன்னமோ அவளது தனி உரிமையான செம்மையும் படர்ந்து மழமழவென்றிருப்பதால் சிவப்பு ரத்தினக் கண்ணுடிபோலுள்ளது. (23)

0813-01 நவ-வித்ரும-பிம்ப-ஸ்ரீ-ந்யக்காரி-ரதநச்-சதா. புதியதான பவழம், கோவைப்பழம் இவைகளின் ஒளியைப் பழிக்கும் உதடுகளேயுடையவள்.

0813-02 தேவியின் உதடுகளில் செம்மை இயற்கையாக அமைந்தது. இயற்கையாகச் சிவந்த பொருளில் நற்பவழமும், கோவைப்பழமும் நிகரற்றவை. அவை தேவியின் உதட்டுச் செம்மையின்முன் மதிப்பிழந்து தலைகுனிகின்றன. தசநச்சதா என்றும் பாடமுண்டு. பொருள் அதே. (24)

10 शुद्धविद्याङ्कुराकारद्विजपङ्क्तिद्वयोज्ज्वला । 25
कर्पूरवीटिकामोदसमाकर्षद्दिगन्तरा ॥ 26

சுத்த வித்யாங்குராகார த்விஜபங்க்தி த்வயோஜ்ஜ்வலா ।
கர்பூர வீடிகாமோத ஸமாகர்ஷத் திகந்தரா ॥

0814-01 சுத்த-வித்யா - அங்குர-ஆகார-த்விஜ-பங்க்தி -த்வய -உஜ்ஜ்வலா. சுத்த வித்யையின் முளை போல் அமைந்த இருபற்களின் வரிசைகளால் ஒளிமிக்க தோற்றமுள்ளவள்.

0814-02 தேவியின் பற்கள் வரிசைகள் ஒளிமிக்கதாய் காணப் படுகின்றன. 'பற்கள் ஒருதடவை விழுந்து முளைப்பனவாதலால் த்விஜர்கள்-இருபிறப்புள்ளவை. தேவியின் சிறப்பு மிக்க மந்திரம் சுத்த வித்யை. அது ஐம் ஈம் ஔ: என்று மூன்று அக்ஷரங்கள் கொண்டது. மெய்யெழுத்துக் கலப்பில்லாததால் சுத்த வித்யை. மந்திரத்திலுள்ள அக்ஷரங்கள் பீஜ (விதை) அக்ஷரங்கள். அந்த விதை முளைவிட்டு இரு கூருகப் பிளந்து மேலும் கீழுமாகப் பிரிந்து காணப்படுவதுபோல் தேவியின் பற்களின் வரிசை காணப் பெறுகிறது. தேவியின் மற்றெரு சிறந்த மந்திரமான ஷோடசாக்ஷரி

யும் சுத்தவித்யை எனப்படும். அதற்கு 16 அக்ஷரங்கள். அந்தப் பதினறு பீஜாக்ஷரங்களும் முளைத்து இரு கூருகப் பிளந்து மேலும் கீழுமாகப் பிரிந்து நிற்பதுபோல் தேவியின் பற்களின் வரிசை காணப்படுகின்றது. நான் அது இது என்றவாறு பேத புத்தி அற்ற அறிவே சுத்த வித்யை ஆகும். அதுவே முளைத்துப் பிரிந்து பற்களாக விளங்குகிறது.

0814-03 மரமாக விரியக்கூடியதனைத்தையும் விதை தன்னுள் அடக்கிக்கொண்டிருக்கும். அதுபோல் மந்திரத்தின் பீஜ அக்ஷரங் களும் பல சக்திகளைத் தன்னுள் அடக்கிக்கொண்டிருக்கின்றன. அவை விதைபோல் ஊறி உப்பி முளையாகப் பிளந்து இரு கூருகப் பிரிந்து காண்பதற்கு நான்கு நிலைகளை அடையவேண்டியிருக்கிறது. மரமாக வேண்டியதனைத்தையும் பிறர் அறிய முடியாதபடி தன்னுள் அடக்கி வைத்திருக்கும் விதைபோல் அக்ஷரங்கள் தொண்டையி லிருந்து வெளிவரும் ஒலியாக மாறத்தக்க ஒலி அலைகளைத் தன்னுள் பிறர் அறிய முடியாத ஸூக்ஷ்ம உருவில் அடக்கிக்கொண்டிருக் கின்றன. குண்டலிநியில் மூலாதாரத்தில் அக்ஷர ஒலி விதை நிலையில் உள்ளது. இது பரா என்ற முதல் நிலை. விதை நீர் கொண்டு உப்பி மலர்வதற்கு ஏற்ற மாறுதல்களை உள்ளடக்கி வெடிப்பதுபோல் அக்ஷர ஒலி நாபியை அடைந்து வெடித்து வெளி யேறத் தயாராகி இருக்கிறது. இதுவே பச்யந்தீ என்ற இரண்டாம் நிலை. பின்னர் இதயத்தை அடைந்ததும், வெடித்த விதையினுள் முளை பிளந்து வெளியேறக் காத்திருப்பது போல் (முளை பிரிந்து உள்ளடங்கியிருப்பது போல்) ஒலியின் முளை பிரிந்து வெளியாகக் காத்திருக்கிறது. இது மத்த்யமா என்ற மூன்றும் நிலை. இந்த நிலை யைத் தாண்டித் தொண்டை அண்ணம் முதலான இடங்களில் மோதிக் கடினமாகி பிறர் உணரும் வகையில் நன்கு வெளிப்பட்ட ஒலியாக-விதையின் முளை நன்கு வெளிப்பட்டு மரமாக விரிவடையும் வெளித்தோற்றத்தில் வந்திருப்பதுபோல் ஒலி வைகரியாக வெளி யாகிறது. இப்படி மந்திரங்களின் அக்ஷர ஒலி விதைகள் முளையாகப் பிரிந்து நிற்பதுபோல் இரு வரிசைகளில் தேவியின் பற்கள் விளங்கு கின்றன. (பா. 1901-1906)

0814-04 நிதி போன்று மிகுந்த கவனத்துடன் மந்திரங்களைக் காப்பாற்றவேண்டும். அப்படிக் காப்பதற்காகவே மந்திரத்தாலான இரண்டாவது பிறப்பு பெற்றவர்கள் த்விஜர்கள். முதல் பிறப்பு தாயிடமிருந்து. இரண்டாவது பிறப்பு மந்திரங்களை ஏற்பதற்காக உபநயனம் தீக்ஷை முதலானவைகளால் ஏற்பட்டது. அப்படி சுத்தவித்யை முளைவிடத் தகுதி பெற்றமையால் சுத்தவித்யையின்

முளைபோல் தூய்மை மிக்கவர்களாக துவிஜர்கள் இருவரிசைகளில் அமர்ந்திருப்பதுபோல் தேவியின் இரு பற்களின் வரிசைகளும் காணப்படுகின்றன.

0814-05 வித்யை—அறிவு. அது இரண்டு வகை. சுத்த வித்யை, அசுத்த வித்யை என. சுத்தம் தூயது, கலப்பற்றது. அசுத்தம் கலப்புள்ளது. வித்யையில் ஏற்படும் கலப்பு என்பது அறிபவன், அறியப்படும் பொருள், அறிவு என்று மூன்றும் சேர்ந்தே துலங்குவது. இது திரிபுடி என்ற மூன்று கூறுகள் கொண்டதான தால் அசுத்த வித்யை. இந்த மூன்று பிரிவும் தோன்ருத சுத்தமான உள்ளறிவு சுத்த வித்யை எனப்படும். அறிபவன் அறியப்படும் பொருள் அறிவு என்ற மூன்றின் கலப்பும் தெரியாததால் மிகத் தூய்மையானது, ஸத்வ குணம் மிக்கதாயிருப்பதால், வெண்மை யானது. தேவியின் பற்களும் அந்த சுத்த வித்யையின் முளைபோல் தூய்மையுடன் வெள்ளையாகத் தெரிகின்றன.

0814-06 பற்களின் வேர்ப்பகுதி வெளியே தெரியாதபடி உதடுகளும் எயிறுகளும் மறைத்திருக்கும். வெண்ணிறத்துடன் பளபளத்துக்கொண்டிருக்கும் மேற்பகுதி மட்டும் வெளியில் தெரியும். சுத்த வித்யையும் தனது வேராக அமைந்த திரிபுடியை உள்ளே மறைத்துக்கொண்டு கலப்பற்றதும் சார்பற்றதுமான உள்ளறிவு வடிவமான தன்னைமட்டும் வெளிக்காட்டுகின்றது. சுத்த வித்யை யின் தூய்மை பிரதிபலிக்கும் பற்களோடு கூடியவள் தேவி. (25)

**0815-01** **கர்பூர-வீடிகா-ஆமோத-ஸமாகர்ஷத்-திக்-அந்தரா.** **கர்ப்பூர வீடிகையின் நறுமணத்தைத் தன் தன் பக்கம் இழுத்துக்கொள்ளும் திக்குகளின் இடை வெளியுடன் கூடியவள்.**

0815-02 தாம்பூலத்திற்கு மணமூட்ட பச்சைக் கர்ப்பூரம், ஏலரிசி, கிராம்பு, கஸ்தூரி, குங்குமப்பூ, ஜாதிக்காய், ஜாதிபத்திரி, பாக்கு, வால்மிளகு, சுக்கு, சுண்ணும்பு, கத்தக்காம்பு இவைகளைத் தக்க அளவில் வெற்றிலைகளில் வைத்து வீடிகா (சிறு சிறு பீடா) ஆகத்தயாரித்தது கர்பூரவீடிகா. அதனைத் தேவி சுவைக்க அதன் நறுமணம் வெளியாகிறது. மணத்தைத் தன் பக்கத்தில் இழுத்துக் கொள்ள எட்டு திக்குகள் போட்டிபோடுகின்றன. ஒருவர் பின் ஒருவராக வருவதனுல் கடைசியில் வருபவர்களுக்கு அளவு குறைந்து விடும் என்ற பயம். அதனுல் சற்று இடைவெளி விட்டுத் தேவி யைச் சுற்றி வரிசையாக நின்று (கிழக்கு, அதற்குப் பக்கத்தில் தென்

கிழக்கு என்று மோதாமல் நின்று) நறுமணத்தை தன் பக்கத்தில் இழுத்துக்கொள்ளுகின்றன. ஸமாகர்ஷி திகந்தரா என்றும் பாட முண்டு. பொருள் அதுவே. தேவியைச் சுற்றி திக்பாலர்கள் நின்று வழிபடுகின்றனர் என்பதும் இதன் பொருள். (26)

11 निजसल्लापमाधुर्यविनिर्भर्त्सितकच्छपी । 27
मन्दस्मितप्रभापूरमज्जत्कामेशमानसा ॥ 28

நிஜஸல்லாப மாதுர்ய விநிர்பர்த்ஸித கச்சபீ ।
மந்தஸ்மித ப்ரபாபூர மஜ்ஜத் காமேச மாநஸா ॥

0816-01 நிஜ-ஸல்லாப-மாதுர்ய-விநிர்ப்பர்த்ஸித-கச்சபீ.
தனது பேச்சின் இனிமையால் ஸரஸ்வதியின் வீணையை மதிப்பிழக்கச் செய்தவள்.

0816-02 ஸரஸ்வதியின் வீணைக்குக் 'கச்சபீ' என, நாரதரின் வீணைக்கு 'மஹதீ' என, விச்வாவஸுவின் வீணைக்கு 'ப்ருஹதீ' என, தும்புருவின் வீணைக்கு 'கலாவதீ' என சிறப்புப் பெயர்கள் உண்டு. வீணையில் அக்ஷர ஒலி கேட்காது. அந்த அக்ஷரம் பாடப் பெறும் ஸ்வர ஒலி மட்டுமே கேட்கும். ஸரஸ்வதி நாதசப்தரூபிணி யானதால் அவள் வீணையில் அக்ஷர ஒலியுடன் கூடிய ஸ்வர நாதம் கேட்கும். ஆனால் அந்த அக்ஷரங்களும் கிளி, சிசு இவர்களது மழலை போலவே நன்கு ஸ்பஷ்டமாகப் புரியமாட்டாது. ஆனால் கேட்க மிக இனிதாயிருக்கும். அக்ஷர ஒலி கேட்பதால் ஸரஸ்வதி வீணையில் பாடுவாள் (வீணை வாசிப்பாள் என்றல்ல) என்ற பெருமை உலகில் ஏற்பட்டுவிட்டது. 'விபஞ்ச்யா காயந்தீ' என்ற ஸௌந்தர்யலஹரீ சுலோகத்தின் கருத்துக்குக் கரு இந்த நாமத்தில் உள்ளது. ஸரஸ்வதி வீணையில் பெருமையுடன் பாடுகிறாள். தேவி அதனால் மகிழ்ந்து அவளைப் பாராட்டுகிறாள். இந்த தேவியின் பேச்சு வீணையைவிட இனிமையான நாதத்துடன் ஸ்பஷ்டமாக அமைந்திருந்ததால், ஸ்பஷ்டமற்ற ஸரஸ்வதியின் வீணை ஒலி மங்கியது, வீணைகானம் மதிப்பை இழந்தது. அதனால் ஸரஸ்வதி வெட்கி வீணையை உறையிட்டு மூடி வைத்துவிட்டாள். (27)

0817-01 மந்த-ஸ்மித-ப்ரபா-பூர-மஜ்ஜத்-காமேச-மாநஸா.
புன்சிரிப்பின் ஒளிப்பிரவாஹத்தில் காமேசுவரரின் மனம் முழுகிக்கொண்டிருக்கச் செய்தவள்.

0817-02 யாக குண்டத்திலிருந்து வெளியாகிக் கொண்டிருக்கும் தேவியின் முக மண்டலம் புன்சிரிப்புடன் தேவர்களுக்குப்

புலனுகிறது. என்றே நடந்த இந்தக் காட்சியை மனக்கண்முன் நிறுத்தித் தியானிக்கும் வாக்தேவிகளுக்கு இந்நிகழ்ச்சிக்குப் பின்னர் நிகழ்ந்த மற்றேர் சம்பவமும் தோன்றுகிறது. ஸ்ரீதேவி வெளி வந்ததும் தேவர்கள் அவளைப் பேரரசியாகப் பட்டம் சூட்ட விழை கின்றனர். ஆளப்படுபவர் ஆண் பெண் என்ற இரு பாலருமான தால் ஆண் பட்டம் ஏற்று அரசராணுல் அவருக்கு ஒரு அரசி தேவை. அதனுல் பட்டாபிஷேகத்திற்கு முன் அவருக்கு மணம் முடிப்பது வழக்கம். இங்கு தேவி அரசியாகிருள். அதற்குமுன் அவள் யாரை யாவது மணக்க வேண்டும் என பிரும்மா கூறுகிருர். "தேவியை மணக்கும் தகுதி பரமேசுவரனுக்கே உள்ளது. அவர் திக்கோ யானைத்தோலோ ஆடையாக, பாம்பு அணியாக, சுடலைப்பொடி பூச்சாக, தலை சடையாக நிற்கிருர். மூவுலகிலும் சுந்தரியாக நிற்கும் இவளுக்கு ஏற்றவராக அவர் தம்மை மாற்றிக்கொள்ளவில்லையே!" எனத் தேவர்கள் ஏங்கும்போது பரமேசுவரன் மிக அழகனுக—காமே சுவரனுக மாறினுர். தேவி தன் கையிலுள்ள மணமாலையைக் காட்டி "இந்த மாலை யார் கழுத்தில் விழுகிறதோ, அவரை மணப் பேன்" என்று கூறி மாலையை எறிய, மாலை காமேசுவரனின் கழுத்தில் விழுகிறது. தேவியின் உதட்டில் புன்சிரிப்பு விளையாடு கிறது. அதன் வெள்ளத்தில் காமேசுவரன் மூழ்கிருர். அதிலேயே அமிழ்ந்திருக்கும் ஆசை ஒருபுறமும், மற்ற அவயவங்களின் அழகைக் கண்டுகளிக்கும் ஆசையால் அதிலிருந்து விடுபடும் ஆசை ஒருபுறமும் இழுக்க, மூழ்குவதும் வெளிவருவதுமாகக் காமேசுவரனின் மனம் ஊசலாடி நிற்கிறது. இந்த நிகழ்ச்சியும் மனக்கண்களில் தோன்ற வாக்தேவிகள் புன்சிரிப்புடன் கூடிய முகமண்டலத்தை வர்ணிக்கப் புகுந்தவர்கள், அதன் பிரவாஹத்தில் தத்தளிக்கும் காமேசுவரனின் மனத்தையும் கண்டு அதனையும் சேர்த்தே வர்ணிக்கின்றனர். (28)

12 अनाकलितसादृश्यचिबुकश्रीविराजिता । 29
कामेशबद्धमाङ्गल्यसूत्रशोभितकन्धरा ॥ 30

அநாகலித ஸாத்ருச்ய சிபுகஸ்ரீ விராஜிதா ।
காமேச பத்த மாங்கல்ய ஸூத்ரசோபித கந்தரா ॥

0818-01 அநாகலித-ஸாத்ருச்ய-சிபுக-ஸ்ரீ-விராஜிதா. உவமை கல்பனையளவில் கூடக் காணப்பெருத முகவாய்க் கட்டின் அழகால் விளங்குபவள்.

0818-02 புரிந்துகொள்ள முடியாததை உருவகப்படுத்த இது போல் அது இருக்கும் என்று தெரிந்த பொருளைத் தெரியாத பொரு

ளுக்கு உவமையாக்கிக் கொள்வர். உவமையாகக் காட்டும் பொருளை நன்கு அறிந்திருந்தால்தான் அதனுல் அறியக்கூடிய பொருளை மனம் உணர முடியும். சில இடங்களில் உவமையையும் ஊகித் தறிய வேண்டிவரும். அழகான முகம், தங்க நிறம், தாமரையின் மென்மை, நறுமணம், பார்ப்பதில் குளிர்ச்சி இத்தனையும் காட்ட நல்ல உவமைப் பொருள் கிட்டவில்லை. தங்கத்தை மூலப் பொரு ளாகக் கொண்டு ஒரு தாமரை தோன்றி மலர்ந்திருந்தால் எப்படி இருக்குமோ அப்படி முக அழகு என்பதை தங்கத் தாமரை போல் முகம் என வர்ணிப்பது உண்டு. தங்கத் தாமரை மணக்காது. மலராது. உயிரும்·அழகும் மென்மையும் அதில் தெரியாது. ஆனுல் கல்பனையால் 'அப்படி இருந்தால்' 'சேராத மணம் சேர்ந்தால்' என்று ஊகிக்கலாம். இப்படிக் கல்பனையில்கூட தேவியின் முக வாய்க்கட்டின் அழகை மற்ருென்றுடன் உவமையிட்டு வாக்தேவி களான தம்மாலேயே பேசமுடியவில்லையே என்ற ஏக்கத்தை வாக் தேவிகள் இங்குக் காட்டுகின்றனர்.

0818-03 தேவியின் கழுத்திற்கு மேற்பட்ட பகுதி, தேவியின் பஞ்சதசாக்ஷரியின் முதல் கூருகிய வாக்பவ கூடத்தால் அமைந் தது என 'ஸ்ரீமத்வாக்பவகூடைகஸ்வருப முகபங்கஜா' என்ற (85) நாமம் கூறும். அந்த வாக்பவ கூடமாக அமையப்பெற்ற அங்கங் களின் வர்ணனை 'சம்பகாசோக புந்நாகஸௌகந்திகலஸத்கசா' என்ற 13ஆவது நாமத்தில் தொடங்கி இத்துடன் முடிவடைகிறது. (29)

**0819-01 காமேச-பத்த-மாங்கல்ய-ஸூத்ர-சோபித-கந்தரா.**
**காமேசுவரர் கட்டிய மங்கள ஸூத்திரத்தால் அழகு ததும்பும் கழுத்துடன் கூடியவள்.**

0819-02 தேவி என்றும் சுமங்கலி. பரமேசுவரனின் பத்தினி. தேவி தோன்றும் போதெல்லாம் பரமேசுவரன் கட்டியுள்ள மங்கல நாணுடன்தான் தோன்றுவாள். யாககுண்டத்திலிருந்தும் அப்ப டித்தான் தோன்றுகிருள். இந்த சம்பவத்தை மனத்திரையில் காணும் வாக்தேவிகளுக்கு மற்ருெரு சம்பவமும்கூடத் தோன்று கிறது. தேவி கணவனுக ஒருவரை வரிக்க மணமாலையை வீசுகிருள். அது காமேசுவ்ரனின் கழுத்தில் விழுகிறது. தேவர்கள் மிகக் குதூஹலத்துடன் அந்த ஆதிதம்பதியருக்கு இங்கொரு திருமணம் நடத்துகின்றனர். அதில் காமேசுவரன் மறுபடி மங்கள ஸூத்திரம் கட்டுகிருர். காலத்தால் வேறுபட்ட இந்த இரு நிகழ்ச்சிகளையும் பிணைத்து வாக்தேவிகள் வர்ணிக்கின்றனர்.

0819-03 காமனை எரித்தவர் சிவபிரான். அதனால் காமாரியாக இருந்தார். தேவியைக் கண்டவுடன் தனக்குக் காமம் ஏற்பட வேண்டுமென்ற ஆசையால் காமனைப் பிழைக்கவைத்துத் தன்னையே ஆட்டிவைக்க மன்மதனுக்கு அனுமதி தந்தார். காமன் இவருக்கு ஈசனானன் போலும். அல்லது தேவியை மணக்கும் ஆசையில் காமன் நெருங்கிய நண்பனாகி, "நீங்கள் எனக்கு ஈசன்" எனக் காமனால் வணங்கப்பெற்றமையாலும் காமேசன் ஆகியிருப்பார். இப்படிப் பல கருத்துக்கள் தோன்றுமாப்போல் ஆசையே வடிவாகிய ஈசுவரன் தேவியின் கழுத்தில் மங்கல நாணைப் பூட்டினார்.

0819-04 காமேசனால் கட்டப்பெற்ற இந்த மங்கள ஸூத்திரம், உலகில் உள்ள அனைவருக்கும் மங்களம் தருவதாக அமைந்தது. அதனால் முதலில் மங்களம் பெற்றவள் மன்மதனின் மனைவி ரதிதேவி. அவள் கழுத்தில் மங்கல நாண் துலங்குவதற்காகவே தேவி இறைவனுடன் திருமணம் செய்துகொண்டாள். திருமண மானதும் அவள் செய்த முதற்பணி மன்மதனைப் பிழைக்கவைத்ததே. அவனுக்குச் சத்துருவாக—காமாரியாக இருந்த தன் நாதனை அவனது ஈசனாகக் காமேசனாக மாற்றியவள் அவள்.

13 कनकाङ्गदकेयूरकमनीयभुजान्विता । 31
रत्नग्रैवेयचिन्ताकलोलमुक्ताफलान्विता ॥ 32

கநகாங்கத-கேயூர-கமநீய-புஜாந்விதா ।
ரத்நக்ரைவேய-சிந்தாக-லோல-முக்தாபலாந்விதா ॥

0820-01 கநக-அங்கத-கேயூர-கமநீய-புஜாந்விதா. தோளிலும் புஜத்திலும் அணியும் அங்கதம் கேயூரம் என்ற தங்கத்தாலான அணிகளால் அழகு நிறைந்து காணப்படும் புஜங்களோடு கூடியவள்.

0820-02 தேவியின் நான்கு புஜங்களையும் இரு தோள்களையும் தங்கத்தாலான அணிகள் அலங்கரிக்கின்றன. கேயூரம் அழகிற்காக அணிவது. அங்கதம் வீரனாகப் போர்புரிபவன் தோள்களையும் புஜங்களையும் பாதுகாக்க அணிவது. தேவி அரசியாகத் தோன்றுவதால் இருவகை ஆபரணங்களும் காணப்பெறுகின்றன. (31)

0821-01 ரத்ந-க்ரைவேய சிந்தாக-லோல-முக்தா-பல-அந்விதா. ரத்தினத்தால் அமைந்த அட்டிகை, பதக்கம் இவைகளில் தொங்கும் முத்துச்சரங்களுடன் கூடியவள்.

0821-02 ரத்தினங்கள் பதித்த அட்டிகை, அதன் நடுவே பதக்கம், அதனை ஒட்டித் தொங்கும் முத்துச் சரங்கள், இந்த ஆபரணங்கள் தேவியின் கழுத்திற்கு அழகு ஊட்டுகின்றன. இந்த மூன்று விதமான ஆபரணங்களும் தேவியைச் சுற்றி நிற்கும் மூன்று வகை அடியார்களைச் சுட்டிக்காட்டுவதுபோல் அமைந்துள்ளன. க்ரைவேயசிந்தாக—கழுத்தளவில் அமைந்த அட்டிகையிலுள்ள பதக்கம். சிலருடைய வாய் தேவியைப் பாடிக்கொண்டிருக்கும். அவர்களது மனம் எங்கோ சென்றிருக்கும். தேவி அவர்களது நினைவில் கழுத்தளவில் நிற்கிருள். அதனுல் அவர்கள் க்ரைவேய சிந்தாகர்கள். கழுத்தளவில்—கழுத்திற்குமேல் தேவியைப்பற்றிய நினைவுள்ளவர்கள், லோல—அட்டிகையில் தொங்கி ஆடிக்கொண்டிருப்பவை. சிலருடைய மனமும் செயலும் வழிபாட்டில் சிறிது நேரமும் வேறெங்கோ சிறிது நேரமும் ஆடிக்கொண்டிருக்கும். அவர்கள் லோலர்கள். முக்தா—முத்து. முக்த—விடுபட்டவர்கள். வெளி சிந்தையும் அதன் விளைவான பணிகளும் நீங்கி மனத்தாலும், செயலாலும், வாக்காலும் தேவியிடம் ஈடுபட்டவர்கள்.

0821-03 இவர்களுள் மூவருக்கும் கிடைக்கும் பலன் ஒரே விதமாய் இருக்காது. க்ரைவேய சிந்தாகனுக்கும், லோலனுக்கும் 'ஆ-பல' சிறிதளவு பலன். முக்தனுக்கு 'ஆ-பல' முழுப்பலன். சிறிது-முழுவதும் என்ற இரு பொருள் தரும் ஆ என்ற சொல் இங்கு இப்படி உதவுகிறது. மனம் பதியாமல் நாமம் கூறி நிற்பவர்களுக்கு பலன் சிறிதளவில்; அதிலும் நிலைத்திராமல் சஞ்சலப்படுபவர்களுக்கு அதில் குறைந்த பலன். மனம், வாக்கு, செயல் மூன்றும் ஒன்றி வழிபடுவோர்க்கு முழுப் பலன் என்ற தத்துவத்தையும் இந்த நாமம் உணர்த்துகிறது. ரத்ன க்ரைவேய-சிந்தாக-லோல-முக்த-ஆ-பல-அந்விதா க்ரைவேய சிந்தாகன், லோலன், முக்தன் இவர்களுக்கு ரத்னம் போன்ற பலன் தகுதிக்கேற்ப சிறிதளவும் முழுவதும் கூடச் செய்பவள். (82)

14 कामेश्वरप्रेमरत्नमणिप्रतिपणस्तनी । 33
नाभ्यालवालरोमालिलताफलकुचद्वयी ॥ 34

காமேச்வர-ப்ரேமரத்ந-மணி-ப்ரதிபணஸ்தநீ I
நாப்யாலவால-ரோமாலி-லதாபல-குசத்வயீ II

0822-01 காமேச்வர-ப்ரேம-ரத்ந-மணி-ப்ரதிபண-ஸ்தநீ.
காமேச்வரரது அன்பெனும் சிறந்த ரத்தினமணிக்கு ஈட்டுப் பொருளாக்கிய ஸ்தனங்களோடு கூடியவள்.

0822-02 காமேச்வரர் தேவிபால் கொண்ட அன்பு அவரது இதயத்தினுள் உயர்ந்த ரத்னமணிபோல் காப்பாற்றப்பட்டு ரஹஸ்யமாக இருந்துவந்தது. இதனைத் தேவி அறிந்தனள். அதைப் பெற விரும்பினள். விலை உயர்ந்த பொருளாயின் அதைப் பெறும் ஆசை மேலிட்டால் அதன் உடமையாளருக்கு இரட்டிப்பு மதிப்புள்ள பொருள் தந்து பெறுவது உண்டு. தேவிக்குக் காமேசுவரரிடம் உள்ள அன்பு காமேசுவரது அன்பைவிடச் சற்றும் தாழ்ந்ததல்ல. எனினும் காமேசுவரரது அன்பைப்பெற விரும்பிய தேவி அதனைவிட இரண்டுமடங்கு மதிப்புள்ள தனது அன்பை ஸ்தனங்களாக்கி அதனை ஈட்டுப்பொருளாகத் தந்து அவருக்கு உடமையாக்கிக் காமேசுவரரது அன்பைப்பெற்ருள். (33)

0823-01 நாபி-ஆலவால-ரோம-லி-லதா-பல-குச-த்வயீ. தொப்புள் எனும் பாத்தியிலிருந்து கிளம்பிய உரோம வரிசையாகிற செடியில் கிளைத்த இரு பழங்கள் போன்ற ஸ்தனங்களுள்ளவள்.

0823-02 ஆழ்ந்த தொப்புள், அதன்மேல் மெல்லிய உரோம வரிசை, மார்பில் துலங்கும் ஸ்தனங்கள் இம்மூன்றிற்கும் ஆழ்ந்த பாத்தி, கொடி, அதில் பழுத்த இரு கனிகள் இம்மூன்றையும் உவமையாக்கி வர்ணித்திருக்கிருர்கள். (34)

15 लक्ष्यरोमलताधारतासमुन्नेयमध्यमा । 35
स्तनभारदलन्मध्यपट्टबन्धवलित्रया ॥ 36

லக்ஷ்ய-ரோமலதாதாரதா-ஸமுந்நேய-மத்யமா I
ஸ்தநபார-தலன்மத்ய-பட்டபந்த-வலித்ரயா II

0824-01 லக்ஷ்ய-ரோம-லதா-ஆதாரதா-ஸமுந்நேய-மத்தியமா -உரோமவரிசையாகிற கொடிக்கு ஆதாரமாயிருப்பதை நேரிடையாகப் பார்க்க முடியாததால் ஊகிக்கப் பெறுவதான இடையுள்ளவள்.

0824-02 உரோமவரிசை எனும கொடி புலப்படுகிறது. அது தோன்றிய இடம், வேர்பதிந்துள்ள இடம் இன்னதென்று அறிய முடியவில்லை, வெட்டவெளியாக இருப்பதால். ஆதாரமில்லாமல் கொடி தோன்ருது, வளராது. இடை என்ருேர் அவயவம் இருக்க வேண்டுமே. அதுவும் புலப்படவில்லை. இடை இங்குதான் இருக்க வேண்டும். ரோமவரிசையின் வேர்ப் பகுதியும் இந்த இடை இருக்குமிடத்தில்தான் மறைந்திருக்க வேண்டும். இவ்வாறு

ஊகித்து உரோம-வரிசை தொடங்குமிடமாக இடையை-ஊகித் தறியவேண்டிவருகிறது. மிகவும் நுண்ணிய இடையுள்ளவள். (35)

0825-01 ஸ்தன-பார-தலந்-மத்ய-பட்ட-பந்த-வலி-த்ரயா. சுமையால் ஒடிந்துகொண்டிருக்கிற இடைக்குப் பட்டை கட்டியது போன்றமைந்துள்ள மூன்று மடிப்புகள் உள்ளவள்.

0825 02 தேவியின் வயிற்றில் மூன்று மடிப்புகள் காணப்படு கின்றன. அவை ஒடியும் நிலையில் உள்ளதொன்றைக் காக்க அணிவிக்கப்பெறும் தகடுகளாலான பட்டைபோன்றுள்ளன. இடை ஒடியக் காரணம் மார்பில் ஸ்தனங்களால் ஏற்பட்ட சுமை மிகுதியும், இடை அதைத் தாங்கும் சக்தியற்று இளைத்திருப்பதும். வயிற்றின் மடிப்புகள் தகட்டுப் பட்டைபோல் அமைந்து இடை ஒடியாமல் காக்கின்றனபோலும். (36)

16 अरुणारुणकौसुम्भवस्त्रभास्वत्कटीतटी । 37
रत्नकिङ्किणिकारम्यरशनादामभूषिता ॥ 38

அருணாருண-கௌஸும்ப-வஸ்த்ர-பாஸ்வத்-கடிதடீ ।
ரத்நகிங்கிணிகா-ரம்ய-ரசநாதாம-பூஷிதா ॥

0826-01 அருண-அருண-கௌஸும்ப-வஸ்த்ர-பாஸ்வத்-கடி -தடீ. மிகச்சிவந்த பட்டாடையால் பிரகாசிக்கின்ற அகன்ற இடுப்புள்ளவள்.

0826-02 அருணஅருண எனஇரட்டித்த சொல் மிகமிகச்சிவந்த எனப்பொருள்படும். சூரியனின் தேர்ப்பாகன் அருணன். சூரியன் உதிக்கு முன்னர் இவன் தன் செவ்வொளி பரப்பி சூரியனின் வருகையை உலகிற்கு அறிவிக்கிறான். அந்த அருணனைப்போன்று சிவந்த என்றும் பொருள். பட்டாடைக்குச் செந்நிறமேற்ற குசும் பாச் செடியின் சாற்றைச் சேர்ப்பர். இப்படிச் செஞ்சாயமேற்றிய ஆடை கௌஸும்பவஸ்திரம் எனப்படும். தேவி தனது மிக விரிந்த இடுப்பில் கௌஸும்ப வஸ்திரத்தை உடுத்தியுள்ளாள். (37)

0827-01 ரத்ந-கிங்கிணிகா-ரம்ய-ரசநா-தாம-பூஷிதா. ரத்னங் களாலான சதங்கைகளால் அழகாயுள்ள அரை ஞாணை அணிந்தவள்.

0827-02 தங்கத்தாலான அரைஞாணில் சதங்கைகள் தொங்கு கின்றன. அவைகளில் ரத்னக்கற்கள் பரல்களாகிக் கிண் கிண்

என்று மணி ஒலி பரப்புகின்றன. அதனை இடுப்பில் தேவி அணிந்து உள்ளாள். (38)

0827-03 தேவியின் கழுத்துக்குக் கீழ் தொடைக்கு மேற்பட்ட பகுதி தேவியின் பஞ்சதசாக்ஷரி மந்திரத்தின் நடுக்கூருகிய காம ராஜ கூடத்தால் அமைந்ததென "கண்டாத:—கடிபர்யந்த—மத்ய கூடஸ்வரூபிணீ" எனும் 86ம் நாமம் கூறும். அந்த காம ராஜ கூடமாக அமைந்த அவயவங்களின் வர்ணனை "காமேச பத்த மாங்கல்ய ஸூத்ர சோபித கந்தரா" என்ற 30 ஆம் நாமம் தொடங்கி இத்துடன் முடிவடைகிறது.

17 कामेशज्ञातसौभाग्यमार्दवोरुद्वयान्विता । 39
माणिक्यमकुटाकारजानुद्वयविराजिता ॥ 40

காமேச-ஜ்ஞாத-ஸௌபாக்ய-மார்த்தவோருத்வயாந்விதா ।
மாணிக்ய மகுடாகார-ஜாநுத்வய விராஜிதா ॥

0828-01 காமேச-ஜ்ஞாத-ஸௌபாக்ய-மார்தவ- ஊரு-த்வய-அந்விதா. காமேச்வரரால் மட்டும் அறியப்பெற்ற அழகும் மென்மையும் உள்ள இரு தொடைகள் உள்ளவள்.

0828-02 மென்மையாலும் மழமழப்பாலும் அழகாக இருப்பவை தொடைகள். அவைகளின் அழகையும் மென்மையையும் காமேச்வரர் ஒருவர்தான் அறிவார். ஆனால் அவராலும் சொல்லால் அதனை விவரித்துக் கூற முடியாது. (39)

0829-01 மாணிக்ய - மகுட - ஆகார-ஜாநு-த்வய-விராஜிதா. மாணிக்கத்தொப்பி போன்ற உருவமைப்புள்ள இரு முழந்தாள் சில்லுகளுடன் விளங்குபவள்.

0829-02 தேவியின் முழந்தாள் சில்லுகள் மிகச்சிவந்து கடினமான தொப்பிபோன்று காணப்பெறுகின்றன. தொப்பிபோன்று தலையின் நடுப்பகுதியை மட்டும் மறைக்கும் தலையணி - மகுடம். மாணிக்கக் கல்லைக்கொண்டு ஒரு தொப்பி தயாரித்து அதனை முழங்கால் பகுதியில் அமைத்துள்ளதுபோல் அந்த சில்லுகள் காணப்படுகின்றன. (40)

18 इन्द्रगोपपरिक्षिप्तस्मरतूणाभजङ्घिका । 41
गूढगुल्फा कूर्मपृष्ठजयिष्णुप्रपदान्विता ॥ 43

இந்த்ரகோப-பரிக்ஷிப்த-ஸ்மரதூணாப ஜங்கிகா ।
கூடகுல்பா-கூர்மப்ருஷ்ட ஜயிஷ்ணுப்ரபதாந்விதா ॥

0830-01 இந்த்ரகோப-பரிக்ஷிப்த ஸ்மர-தூண-ஆப-ஜங்கிகா.
இந்திர கோபமெனும் தம்பலப்பூச்சி மொய்த்துக் கொண்டிருக்கும் மன்மதனின் அம்புறுத் தூணிகளை ஒத்த கணைக்கால்களுள்ளவள்.

0830-02 கார்காலத்தில் மழை நின்றதும் பூமியிலிருந்து செந்நிறமுள்ள இந்திரகோபப்பூச்சிகள் கிளம்பும். மன்மதனின் அம்புருத்தூணியை இவை மொய்த்துக்கொண்டிருப்பதால் அது மிகச் சிவந்து காணும். தேவியின் இரு முன்னங்கால்களும் செம்மை படர்ந்து இறுகிக் காணப்படுகின்றன. அம்புருத்தூணிபோன்று கீழ் சிறுத்து மேல் சிறிது பருத்து இறுக்கத்துடன் தோன்றுவதால் உடலியக்கம் அனைத்தையும் தாங்கிச் சுறுசுறுப்புடன் நடக்க உதவுகின்றன. மன்மதன் தன்னை எரித்த சிவனிடம் வஞ்சம் தீர்க்கத் தருணம் பார்த்து நின்றான். தேவியின் அங்க அமைப்பில் ஈடுபட்டுச் சிவன் தன்னை இழக்கும் நிலையில் இருப்பதைக் கண்டான். அவர் மனத்தை ஈர்க்கும் தேவியின் கணைக்கால்களைத் தன் அம்புருத் தூணியாக்கி விரல்களை அம்புகளாக்கிப் பதுங்கி நிற்கிறான் என்று ஸௌந்தர்யலஹரீ (சு-83) இந்தக் காட்சியை விவரிக்கிறது. (41)

0831-01 கூடகுல்பா-(தசைகளால்) மறைந்த கணுக்கால்களுள்ளவள்.

0831-02 கணுக்காலின் எலும்பு முண்டமைப்பு வெளியே தெரியாவண்ணம் இறுகிய தசைகள் அதனை மூடி நிற்கின்றன. இது வலிவுள்ள அழகிய கணுக்கால்கள் என்பதனைக் குறிக்கின்றது. (42)

0832-01 கூர்மப்ருஷ்ட - ஜயிஷ்ணு - ப்ரபத - அந்விதா.
ஆமை முதுகை வெல்லும் புறங்கால்களுடையவள்.

ஆமையின் முதுகு எத்தகைய சுமையையும் தாங்கும். தேவியின் புறங்கால்களுக்கு ஏற்ற சிறந்த உவமைப் பொருளாக இது ஆகாது. இது ஹீநமான - மதிப்பில் தாழ்ந்த - உவமை எனினும், வேறு தக்க உவமை இல்லாதபோது இதனைக் கையாளவேண்டி நேர்ந்துள்ளது. (43)

19 नखदीधितिसंछन्ननमज्जनतमोगुणा । 44
पदद्वयप्रभाजालपराकृतसरोरुहा ॥ 45

நகதீதிதி-ஸஞ்சந்ந-நமஜ்ஜந-தமோகுணா I
பதத்வய-ப்ரபாஜால-பராக்ருத-ஸரோருஹா II

0833-01 நக-தீதிதி-ஸஞ்சந்ந-நமத்-ஜந-தமோகுணா. தன்னை வணங்கும் மக்களின் அறியாமையை மறைக்கவல்ல நககாந்தி உள்ளவள்.

0833-02 தேவியின் பாத நகங்களின் ஒளி அவைகளுக்கு முன் உள்ள தரையில் பரவி நிற்கின்றது. மக்கள் தேவியை அவள் கால்களில் விழுந்து வழிபடுகின்றனர். வணங்கும்போது தரையைத் தொடும் அவர்களது தலையில் நக ஒளி பரவுகிறது. அது பரவும் போதே அந்தத் தலைகளில் குடியிருந்த அறியாமையென்ற இருட்டு அகன்று மறைகிறது. நமது அறியாமையை அகற்ற தேவிக்குத் தனி முயற்சி தேவையில்லை. அவளது பாத நக ஒளி பட்டதும் அறியாமை அகன்றுவிடுகிறது. ஒளியிருக்குமிடத்தில் அதனை எதிர்த்து நிற்க இருட்டால் இயலாது. அது அதன் பலவீனம். (44)

0834-01 பத-த்வய-ப்ரபா-ஜால-பராக்ருத-ஸரோருஹா. தாமரையை மதிப்பிழக்கச்செய்யும் ஒளிக்கற்றை யுள்ள திருவடிகளுள்ளவள்.

0834-02 ஒளி, மென்மை, அழகிய அமைப்பு, இனிய தோற்றம் முதலிய தனது சிறப்புகளால் பெருமதிப்புற்றிருந்த தாமரைகளை தேவியின் திருவடிகள் வென்றுவிட்டன. அன்றலர்ந்து அன்றே வாடும் தாமரை நித்தியமாக ஒளிக்கற்றைகளை வீசிக்கொண்டிருக்கும் திருவடிகளைக் கண்டதும் தனது தோல்வியை ஒப்புக்கொண்டு ஓடி விட்டது. (பராக்ருத-வெல்லப்பட்ட-அவமதிக்கப்பட்ட-ஓடிவிடும்படி செய்யப்பட்ட) (45)

20 शिञ्जानमणिमञ्जीरमण्डितश्रीपदाम्बुजा । 46
मरालीमन्दगमना महालावण्यशेवधिः ॥ 48

ஸிஞ்ஜாந-மணிமஞ்ஜீர மண்டித-ஸ்ரீபதாம்புஜா ।
மராளீமந்தகமநா மஹாலாவண்ய-சேவதி: ॥

0835-01 ஸிஞ்ஜாந-மணி-மஞ்ஜீர-மண்டித-ஸ்ரீ-பத-அம்புஜா. ஒலிக்கின்ற ரத்தினப் பரல்களுள்ள சிலம்புகளால் விளக்கமுறும் திருவடித் தாமரைகளுள்ளவள்.

0835-02 திருவடிகளில் பூட்டியுள்ள சிலம்புகள் ரத்னப்பரல்கள் கொண்டவை. காதிற்கினிய ஒலி அவைகள் ஆடும்போது கேட் கிறது. தேவி யாககுண்டத்திலிருந்தும் வெளியேறித் தேவர்கள்

முன் நடந்துவருகிருள். அந்தச் சிலம்பொலி கூடிய தேவியின் திருவடிகள் அன்றலர்ந்த தாமரைபோல் தேவர்கள் மனத்தில் நம்பிக்கையையும் இன்பத்தையும் ஏற்படுத்துகின்றன. (46)

**0836-01** மராளீ-மந்த-கமநா. அன்னப்பேடு போல் மிருதுவாக நடப்பவள்.

0836-02 அன்னத்தின் நடை மிக மிருதுவான அழகிய நடை. ஆனுல் ஆண் அன்னத்தின் நடையில் சிறிது கம்பீரமும் ஆண்மையும் தொனிக்கக்கூடுமே? தேவியின் நடையில் அவைகளைக் காண முடியாது. அதனுல் ஆண் அன்னத்தின் நடையுடன் தேவியின் நடையை ஒப்பிடக்கூடாது. எந்த இனமாயினும் அதில் ஆணின் நடையைவிடப் பெண்ணின் நடை மிருதுவாயிருக்கும். ஆண் அன்னத்தைவிட அன்னப்பேடு இயற்கையாகவே மிகமிக மிருதுவான நடைகொண்டது. ஒப்புநோக்க வேண்டுமாயின் ஓரளவு அன்னப்பேட்டின் நடையுடன் மட்டுமே தேவியின் நடையை ஒப்பிடலாம். யாககுண்டத்திலிருந்து வெளியாகித் தேவர்களை நோக்கி வரும் தேவியின் நடையழகில் தேவர்கள் மனமிழந்து நிற்கின்றனர். (47)

0836-03 இடுப்புக்குக் கீழ் உள்ள பகுதி தேவி மந்திரத்தின் சக்தி கூடத்தால் அமைந்தது. (நா. 87) 39ம் நாமத்தில் தொடங்கிய சக்தி கூடத்தின் வர்ணனை இத்துடன் முடிவடைகிறது.

**0837-01** மஹா-லாவண்ய-சேவதி: மிகப் பேரழகின் பெட்டகமாயிருப்பவள்.

0837-02 நீரோட்டமுள்ள விலை மதிப்பற்ற ரத்தினங்களின் ஒளி அங்கும் இங்கும், மேலும் கீழும் தனித்து மிளிர்வது போன்று காணப்படும். மென்மையும், அழகும் நிரம்பிய உடலின் ஒளியும் இப்படித் தனித்து வீசும். இதனை லாவண்யம் என்பர். ஒளிமிக்கப் பேரழகு எனப் பொருள். இத்தகைய சிறப்பும், ஒளியும் மிக்கப் பேரழகைத் தன்னுள் அடக்கிக் காக்கும் பெட்டகம் போன்று மஹா த்ரிபுரசுந்தரி விளங்குகிருள். (48)

21 सर्वारुणाऽनवद्याङ्गी सर्वाभरणभूषिता । 51
शिवकामेश्वराङ्कस्था शिवा स्वाधीनवल्लभा ॥ 54

ஸர்வாருணு(அ)நவத்யாங்கீ ஸர்வாபரண பூஷிதா l
சிவகாமேச்வராங்கஸ்தா சிவா ஸ்வாதீநவல்லபா ll

0838-01 ஸர்வ-அருணா. எங்கும் சிகப்பானவள்.

0838-02 அவள் மேனி நிறம் சிவப்பு. அவள் தரித்துள்ள மாலை, ஆபரணங்கள், மேனியிலிருந்து வெளியாகும் ஒளி இவை அனைத்தும் சிவப்பானவை. பிரும்மாண்ட வரிசைகள் அனைத்திலும் செம்மை பரவச்செய்யும் கனத்த செந்நிறமுள்ளவள். யாககுண்டத்திலிருந்து வெளிவந்த பின்பும் தேவியின் மேனி சிவந்தே காண்கிறது. அக்கினியின் நடுவே தோன்றியதால் மட்டும் ஏற்பட்டதல்ல அந்தச் செவ்வொளி. அவளுக்கே உரித்தானதும் என்றும் நிலைத்திருப்பதுமான செவ்வொளி. (49)

0839-01 அனவத்ய-அங்கீ. குறைகூற முடியாத உருவமைப்புள்ளவள்.

0839-02 ஏதேனும் ஒரு சிறு உடற்பகுதியில்கூட குறைகாண முடியாதவாறு நிறைவு பொலிந்து விளங்கும் உருவமைப்புள்ளவள். தேவர்களது கண்கள் பாதாதி கேசாந்தமாகவும், கேசாதிபாதாந்தமாகவும் தேவியை மீண்டும் மீண்டும் கண்டு களிக்கின்றன. ஓரிடத்திலும் குறைகாண முடியாத அந்த திவ்விய அழகு ஆனந்தத்தைத் தருகிறது. (50)

0840-01 ஸர்வ-ஆபரண-பூஷிதா. எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பெற்றவள்.

0840-02 உடலில் அழகின்மையோ குறையோ இருந்தாலும் அதனை மறைக்க ஆபரணங்கள் உதவுகின்றன. குறைகாண முடியாத அழகியிடத்தில் ஆபரணங்கள் மேலும் அழகு ஊட்ட உதவுகின்றன. ஸர்வாங்கஸுந்தரியான தேவியிடம் மேலும் அழகு பெருக்க இவைகளால் முடியவில்லை. அவளால் அணியப் பெற்றமையால் தாம் அழகுபெற்று அவை விளங்குகின்றன. சூடாமணிமுதல் பாதாங்குலீயகம் வரை பல ஆபரணங்கள் தேவிக்கு அணிவிக்கப் பெறுவதாக கல்பஸூத்ரம் முதலியவை கூறுகின்றன. (நா. 235) ஸர்வாபரண-எல்லா ஆபரணங்களாலும், பூஷிதா-அலங்கரிக்கப் பெற்றவள். ஆபரண-ஆபரணங்கள், பூஷிதா-எவளால் அலங்காரப் பொருளாகும் தன்மையை அடைவிக்கப்பெற்றனவோ-அவள் தேவி. (51)

# அதிகாரம் 9
# தேவியின் இருப்பிடம்

**0901-01** *சிவ - காமேச்வர - அங்க - ஸ்தா.* காமேச்வரனை சிவனது மடியில் அமர்ந்திருப்பவள்.

0901-02 பரமேசுவரன் தேவியை மணப்பதற்காகத் தோன்றிய போது அவருக்குப் பெயர் காமேச்வரன். காமன்-மிக அழகாயிருப்பவன்; அத்துடன் ஈச்வரன் - எல்லாவற்றையும் தன்னிஷ்டப்படி ஆள்பவன் ஆனதால் காமேச்வரன். உலகைப் படைக்க விரும்பியதால் காமன் – பரப்பிரும்மத்தின் இச்சாசக்தி வடிவினன். சிவன் மங்களமானவன். உலகெல்லாம் தன்பால் ஈர்க்கும் மங்கள வடிவினன். 'வச்' என்ற வினைச்சொல் விரும்புதல், விருப்பப்படி செயலாற்றுதல் என்ற பொருளில் அமைந்தது. அந்தச்சொல் புரண்டு 'சிவ' ஆகியது. அந்தச் சிவனாகிய, காமேச்வரன் மடியில் வசிப்பவள். (52)

**0902-01** *சிவா – சிவமாயிருப்பவள்.*

0902-02 சிவனது மனைவியென்ற பொருளில் சிவாநீ என்றாகும். சிவனே இவள் எனும்போது சிவா. சிவனுக்கும் இவளுக்கும் வேறுபாடில்லை. மங்கள வடிவினள், மங்களத்தைத் தருபவள், பரப்பிரும்மத்தின் இச்சாசக்தி வடிவினள். மங்களமான மோக்ஷ வடிவினள். பரமேச்வரனுக்கு எட்டு வடிவங்கள் உண்டு. அவையாவன-பிருதிவீ, ஜலம், தேஜஸ், வாயு, ஆகாசம், சூரியன், சந்திரன், ஜீவன் என்பன. "பூரம்பாம்ஸ்யநலோ அநில: அம்பரம் அஹர்நாதோ ஹிமாம்சு: புமாந் இதிஆபாதி சராசராத்மகம் இதம் யஸ்யைவ மூர்த்த்யஷ்டகம்" (பூமி, ஜலம், நெருப்பு, காற்று, ஆகாசம், சூரியன், சந்திரன், புருஷன் என்பனவாகத் தோன்றுவதும் அசைவுள்ளதும் அசைவற்றதுமான இந்த உலகம் எவரது எட்டு வடிவங்களோ— தக்ஷிணாமூர்த்தி அஷ்டகம்) அதில் வாயுவாகிய சிவனுக்கு ஈசானன் எனப் பெயர். அவருக்கு சிவா என்பவள் பத்தினி. அந்த வாயுவின் பத்தினியாக விளங்கிய சிவா. (53)

**0903-01** *ஸ்வ – அதீந-வல்லபா.* தன்வயப்பட்ட அன்புமிக்க நாயகனையுடையவள்.

0903-02 சிவனது சக்தி தேவி. நெருப்பின் சக்தி சூடு. நெருப்பின்றி அது தோன்றாது. குணங்களால் தனித்திருக்க முடியாது. அது திரவியத்தை (பொருளைச்) சார்ந்துதானிருக்க்

முடியும். அவ்வாறே தேவியும் சிவனைச் சார்ந்தும் சிவனுக்கு அடங்கியுமிருப்பாள் என நினைக்கத்தோன்றும். ஆனால் அன்பு மிக்க நாயகனான சிவன் இவளுக்கு வசப்பட்டவர். தனது இயக்கங்களுக்கு தேவியின் உதவியை எப்போதும் நாடுபவர். "சிவ: சக்த்யா யுக்தோ யதி பவதி சக்த: ப்ரபவிதும். நசேத் ஏவம் தேவோ ந கலு குசல: ஸ்பந்திதுமபி" ("சக்தியுடன் கூடியிருந்தால்தான் சிவனால் செயலாற்ற முடியும். அவ்வாறு இல்லையாயின் அவர் அசைவதற்குக் கூட முடியாதவரல்லவா?" ஸௌந்தர்யலஹரீ-சுலோ-1) அதனால் இவளது வல்லபர்-அன்பு மிக்க கணவர் ஸ்வாதீநர் - இவளது வசப்பட்டவர்.

சக்தியுடன் சிவன் சேர்ந்துல கீன்றனன்
சக்தியின் றிச்சிவன் சற்றுமசை வனே.

0903-03 சிவனைச் சார்ந்து சிவனுக்கு அடங்கி தேவி நடப்பதும் உண்டு. ஸ்வ-தன்னுடையவர்க்கு, அதீநா-அடங்கி நடப்பவளும், வல்லபா-அன்பு மிகுந்த நாயகியாகவும் உள்ளவள்.

0903-04 அவருக்கு அடங்கியவளாக இல்லாமல் சுதந்திரமாயிருப்பளாயினும் பரமேசுவரனது அன்பு மனைவியாயுமிருக்கலாமே! ஸ்வாதீநா - சுதந்திரமுள்ளவளும், வல்லபா - அன்புக்குகந்தவளாயுமாவாள் தேவி.

0903-05 இவளது நினைவாலும் வழிபாட்டாலும் மன நிம்மதியின்றி விலகி நிற்கும் தம்பதிகள் மீண்டும் கூடுவர். தனது கணவன் இனி தனக்கில்லை என்ற நிலை ஏற்படினும், தேவியின் வழிபாடு கணவனை மனைவியுடன் சேர்த்துவிடும். சர்யாதி என்ற அரசனின் பெண் சுகன்யை சியவனர் என்ற முதிய முனிவரை மணக்க நேரிடுகிறது. சியவனர் தமது முதுமை நீங்க அசுவிநீ தேவர்களை வழிபட்டார். அசுவிநீ தேவர்கள் சியவநரைத் தம்மோடு காயசித்தி தரும் குளத்தில் ஸ்னானம் செய்ய அழைத்துச் சென்றார்கள். ஸ்னானம் செய்து திரும்பிய மூவரும் ஒரே தோற்றத்தினராக வந்தார்கள். 'எங்களில் ஒருவர் உனது கணவர். நீயே தேர்ந்து எடுத்துக் கொள்' என அசுவிநீ தேவர்கள் கூறியதும் மயங்கி நின்ற ஸுகன்யை, தேவியை மனத்தால் வழிபட்டுத் தன் கணவரைத் தனக்கு மீண்டும் அளிக்க வேண்ட, தேவியின் அருளால் சியவனரின் உண்மை உருவம் அறிந்து சியவனரை அழைத்து வருகிறாள் எனத் தேவீபாகவதம் (7, 3-7) கூறும். தன் கணவர் யாரென நிச்சயமாக அறியாமல் யாரேனும் ஒருவரை அவள் அழைத்திருந்

தால் அசுவிநீ தேவர்களில் ஒருவரையே கூட அழைக்க நேரிட்டு இருக்கும். அப்போது அவளது பதிவிரதைத் தன்மைக்கு ஊறு நேர்ந்திருக்கும். தேவியின் வழிபாடு இக்குறை நேராமல் பாது காத்து அவளுக்குக் கணவனைத் தந்தது. ருக்மிணி கிருஷ்ணனை அடையவும் இந்திராணி இந்திரனை அடையவும் தேவி அருள் புரிந்தாள் என்று புராண வரலாறு.

0903-06 தேவியின் இருப்பிடத்தைக் குறிப்பிட வந்த வாக் தேவிகள் காமேச்வரரான சிவனின் மடியில் தேவி இருப்பதாகக் கூறி தேவியைத் தாங்கும் சிவனுக்கும் மடியில் அமர்ந்திருக்கும் தேவிக்கும் யாதொரு பேதமும் கிடையாது ; இருவரும் சிவர்களே என 'சிவா' என்ற நாமத்தால் குறிப்பிட்டு, கணவன்-மனைவி நிலையில் தியானித்தாலும் ஒருவருக்கொருவர் அன்பால் கட்டுப்பட் டவர்கள் என்பதை 'ஸ்வாதீநவல்லபா' என்ற நாமத்தால் குறிப் பிட்டனர். சிவனின் மடி தேவியின் முக்கிய இருப்பிடம். அதனால் முதலில் குறிப்பிடப் பெற்றது. (54)

22 सुमेरुमध्यशृङ्गस्था श्रीमन्नगरनायिका । 56
चिन्तामणिगृहान्तस्था पञ्चब्रह्मासनस्थिता ॥ 58

23 महापद्माटवीसंस्था कदम्बवनवासिनी । 60
सुधासागरमध्यस्था कामाक्षी कामदायिनी ॥ 63

ஸுமேரு மத்ய ச்ருங்கஸ்தா ஸ்ரீமந்நகரநாயிகா ।
சிந்தாமணி க்ருஹாந்தஸ்தா பஞ்சப்ரும்ஹாஸநஸ்திதா ॥
மஹாபத்மாடவீ ஸம்ஸ்த்தா கதம்பவநவாஸிநீ ।
ஸுதாஸாகரமத்த்யஸ்த்தா காமாக்ஷீ காமதாயிநீ ॥

**0904-01** ஸுமேரு-மத்த்ய-ச்ருங்கஸ்தா. ஸுமேரு மலையின் நடு சிகரத்தில் வசிப்பவள்.

0904-02 ஸுமேரு எனும் தங்கமலை உலகைத் தாங்கும் ஆதாரமாயுள்ளது. ஸ்ரீ சக்கிரத்தின் நடுவே உள்ள முக்கோணம் போல் மூன்று சிகரங்கள் இதற்கு உண்டு, பிரும்மா, விஷ்ணு, ருத்ரர் என்ற மூவரும் அவைகளைத் தமது இருப்பிடங்களாகக் கொண்டுள்ளனர். இந்த மூன்று கொடுமுடிகளுக்கும் நடுவே இவைகளை விட மிக உயர்ந்ததான நடுசிகரத்தில், ஸ்ரீவித்யா நகரம் எனும் தேவியின் ஸ்ரீ நகரம் அமைந்துள்ள இடம். அங்கு தேவி வசிக்கிருள். (55)

**0905-01 ஸ்ரீமத்-நகர-நாயிகா. ஸ்ரீநகரத்தின் நாயகி.**

0905-02 தேவியின் நகரம் ஸ்ரீ நகரம். மற்ற நகரங்களைக் குறிப்பிடச் சேர்க்கப்படும் அடைமொழி தேவியின் நகருக்கு இல்லை. ஆயினும் 'நகரம்' என்று அதனைக்குறிப்பிடுவது சரியல்ல என்று எண்ணி, 'ஸ்ரீமத்' (சிறப்புள்ள) நகரம் என்று மரியாதையுடன் வாக் தேவிகள் குறிப்பிடுகின்றனர். நாமிருக்கும் பிரும்மாண்டத்தில் அமைந்த நகரம் இது.

0905-03 மற்றொரு ஸ்ரீநகரமும் உண்டு. தேவீ தான் படைத்த அனந்தகோடி பிரும்மாண்டங்களுக்கும் வெளியே தனது இருப்பிடம் ஒன்றை அமைத்துள்ளாள். அங்கு பிரும்மாண்டங்கள் அனைத்திற்கும் சக்தி தரும் ஸுதா ஸமுத்திரம் அமிருதக்கடல். அதன் நடுவே ரத்னத்தீவு. அதன் நடுவில் அமைந்த ஸ்ரீ நகரம் ஒன்று உண்டு. அங்கும் வசிப்பவள். ஸ்ரீ நகர அமைப்பு பற்றிய முழு விபரத்தை எளிதில் அறிய ஸ்ரீ துர்வாஸமுனி இயற்றிய ஆர்யா துவிசதீ ஸ்தோத்திரம் உதவும். அதன் சுருக்கம் 'ஸுதாஸாகர மத்த்யஸ்தா' என்ற (61) நாமத்தின் குறிப்பில் காணலாம்.

0905-04 ஸ்ரீ சக்கிரமும் குண்டலினியும் கூட தேவி அமர்ந்திருக்கும் ஸ்ரீ நகரம் ஆகும். ஸ்ரீ சக்கிரத்தின் நாயகியாகவும் குண்டலினியாகவும் விளங்குபவள். (56)

**0906-01 சிந்தா-மணி-க்ருஹ-அந்த:-ஸ்தா. சிந்தாமணி கிருஹத்தின் நடுவில் இருப்பவள்.**

0906-02 மனம் நினைப்பதைத் தந்து அருளும் சிந்தாமணி எனும் ரத்தினம் ஒன்று தேவர்களிடம் உள்ளது. அத்தகைய கோடிக்கணக்கான சிந்தாமணி ரத்தினங்களைக்கொண்டு அமைந்த மாளிகை சிந்தாமணி கிருஹம். அதனுள் வசிப்பவள்.

0906-03 மனம் நினைப்பதைத் தந்தருளும் சக்தி மிக்கவையானதால் சிந்தாமணியைப் போன்றவை தேவியினது மந்திராக்ஷரங்கள். அவைகளையே தம் இருப்பிடமாகக் கொண்டவள் தேவி. சிந்தாமணி போல் நாடியதை அருளும் தேவியின் மந்திர சக்திகளின் உறைவிடமான மாளிகையில் வசிப்பவள். (57)

**0907-01 பஞ்ச-ப்ரும்ஹ-ஆஸன-ஸ்திதா. ஐந்து பிரும்மங்களாலான ஆசனத்தில் இருப்பவள்.**

0907-02 சிந்தாமணி கிருஹத்தின் நடுவே தேவி அமரும் ஆஸனம் பஞ்சப்ரும்மாஸனம் எனப்படும். ஐந்து பிரும்மங்கள் அந்த

தேவியிடம் முறையிட்டதும், தேவி தன்னருகே அமர்ந்திருக்கும் காமேசுவரனை நோக்கினாள். புன்னகையால் அழகுற்ற இருவரது பார்வைகளும் ஒன்று சேர யானை முகத்துடன் ஸ்ரீ கணபதி வல்லபையெனும் ஸித்திலக்ஷ்மியை ஆலிங்கனம் செய்தவராகத் தோன்றினார். தனது 10 கைகளிலும் துதிக்கையிலும், மாதுளை, கதை, கரும்புவில், சூலம், சக்கிரம், சங்கம், பாசம், அல்லிப்பூ, நெற்பயிர் கொத்து, தனது ஒரு தந்தம், ரத்னகலசம் என்ற பதினொரு பொருள்களையும் ஸ்ரீ கணபதி தாங்கி நின்றார்.

1014-03 அறிவுக்கெதிராகச் சோம்பல் முதலியவை எழுந்து தடை ஏற்படும் போது தீவிரமான ஈடுபாட்டைக்கொடுக்கக்கூடியது யோக சக்தி ஒன்று தான். யோக சக்தியை அளிப்பதன் மூலம் தடைகளாக வந்தவைகளை எதிர்த்து நின்று மனம் நிலைக்க உதவுவதால், விக்கினங்களைப் போக்குபவனாகவும் அறிவுத்தடைகளை நீக்கி அறிவு தெளிவு பெற உதவும் ஞான தாயகனாகவும் ஸ்ரீ மஹா கணபதி துணை நிற்கிறார். காமேச்வரர் என்ற இச்சாசக்தி வடிவினரான பரமேச்வரனின் அருளை அதிகமாகப் பெறுவதற்காக தேவியின் பார்வை காமேசுவரனிடம் நிலைக்க, ஸ்ரீ கணேசன் அழகாக அமைகிறான் (கல்பித-). ஒரு செயலை அழகுறத் திறம்படப் பலன் அளிக்கும் வகையில் செய்வதைக் கல்பனை என்பர். (கல்பனை மனத்தளவில் ஏற்பட்ட திட்டம் மட்டுமல்ல. சிறந்த முறையில் திட்டமிட்டு செவ்வனே செயலாற்றி நல்ல பலன் காண்பதே கல்பனை. கல்பஸூத்திரம் முதலியவை இதற்கான முறைகளைக் கூறும்.) அப்படி கல்பனை செய்யப்பட்டவர் ஸ்ரீ கணேசர். அவரிடத்தில் தேவியின் திட்டச் சிறப்பும் செயற் சிறப்பும் நிறைவும் உருவம் பெற்றுள்ளதைக் காணலாம். (77)

31 महागणेशनिर्भिन्नविघ्नयन्त्रप्रहर्षिता । 78
भण्डासुरेन्द्रनिर्मुक्तशस्त्रप्रत्यस्त्रवर्षिणी ॥ 79

மஹாகணேச நிர்பிந்ந விக்நயந்த்ர ப்ரஹர்ஷிதா ।
பண்டாஸுரேந்த்ர நிர்முக்த சஸ்த்ரப்ரத்யஸ்த்ர வர்ஷிணீ ॥

1015-01 மஹாகணேச-நிர்ப்பிந்ந-விக்நயந்த்ர-ப்ரஹர்ஷிதா. மஹாகணேசனால் விக்னயந்திரம் தூளாக்கப் பட்டதைக் கண்டு மிகவும் மகிழ்ச்சியடைந்தவள்.

1015-02 காமேசுவரர் காமேசுவரி இவ்விருவருடைய பார்வைகள் கலந்ததில் தோன்றிய மஹாகணபதி தடையுண்டாக்கிய விக்ந

யந்திரத்தைத் தூளாக்கினர். தேவியின் படைகள் மீண்டும் உற்சாகத்துடன் போரிட்டன. இந்த நிகழ்ச்சியைப் பார்த்த தேவி மிகவும் சந்தோஷித்தாள்.

1015-03 ஜீவனிடத்திலிருந்த தெய்வ சக்திகள் அனைத்தும் சோம்பல், ஒதுங்கும் எண்ணம், தாழ்மை உணர்ச்சி முதலியவற்றால் செயலிழக்க, அசுரசக்தி வலிவு பெறுகின்றது. தேவி கருணையால் நிர்குணனை ஆத்மாவிடம் சலனத்தை ஏற்படுத்தி ஜீவனை கணேசனாக்குகிறாள். கணங்கள்—ஜீவனது ஆளுகைக்குட்பட்ட எட்டு புரங்கள்—உடல், பொறிகள், புலன்கள், மனம், புத்தி, சித்தம், அஹங்காரம், வாஸனை என்பன. இவை ஒவ்வொன்றும் தனிக் கூட்டமாக அமைந்தவையானதால் கணம் எனப்பெறும். இவைகளுக்குச் சிறப்புமிக்கத் தலைவனாக, ஸ்ரீ கணேசனாக ஜீவனை ஆக்குகிறது தேவியின் கருணை மிளிரும் பார்வை. (78)

**1016-01 பண்ட-அஸுர-இந்த்ர-நிர்முக்த-சஸ்த்ர-ப்ரத்யஸ்த்ர-வர்ஷிணீ. பண்டன் எனும் அஸுரர் தலைவன் விடுத்த ஆயுதங்களுக்கெதிராகப் பாணங்களைப் பொழிபவள்.**

1016-02 பண்டனது படைவீரர்கள் அனைவரும் அழிந்தார்கள். பண்டன் தேவியுடன் சண்டை புரிகிறான். மாயாபலம் கொண்ட தனது பல ஆயுதங்களைக் கொண்டு தேவியைத் தாக்குகிறான். தேவி அவ்வாயுதங்களின் தாக்குதலிலிருந்து விலகி நின்று அவன்மீது அம்பு மழை பொழிகிறாள். கிட்டே நெருங்கிவரும் எதிரியைத்தாக்கக் கதை, கத்தி முதலியவைகளைப் பயன்படுத்துவர். இவைகளை சஸ்திரங்கள் என்பர். இவை கைப்பிடியினுள்ளிருந்தே பயன்படுபவை. கைக்கு எட்டாத தூரத்தில் நின்று போர் புரிபவர்களை சூலம், குத்துவாள், அம்பு போன்றவற்றை எறிந்து தாக்குவார்கள். இப்படித் தாக்கும் ஆயுதங்களை அஸ்திரம் என்பர். இவை கையிலிருந்தும் விடுபட்டுப் பயன்படுபவை. பண்டன், தேவி மிக அருகே இருப்பதை உணர்ந்து கதையால் தாக்குவான். தேவி அதே நேரத்தில் வெகுதூரத்திலிருப்பவளாகி அஸ்திரங்களை—அம்பு முதலியவைகளை ஏவுவாள்.

1016-03 தெய்வம் நம் வசப்பட்டுவிட்டதென்று நினைத்தவனுக்கு அது வெகுதூரத்திலிருக்கும். தெய்வம் வெகுதூரத்திலிருப்பதாக நினைத்து ஏங்குபவனுக்கு அவனது காதினருகே நிற்கும்.

இந்த லீலை பண்டனுக்குக் காட்டப்படுகின்றது. பண்டனது சஸ்திரத்துக்குப் பதிலாக அஸ்திரங்களைப் பொழியும் தேவியின் லீலையை வாக்தேவிகள் இப்படி வர்ணிக்கின்றனர்..

1016-04 அஞ்ஞானத்தால் தெய்வத் தன்மைக்கு எதிராகப் பயன்படுத்தப்பட்ட அஸுர எண்ணங்களைத் தூரத்திலிருந்தே தெய்வக் கருத்துக்கள் தாக்கும். (79)

32 कराङ्गुलिनखोत्पन्ननारायणदशाकृतिः । 80
महापाशुपतास्त्राग्निनिर्दग्धासुरसैनिका ॥ 81

கராங்குலி நகோத்பந்ந நாராயண தசாக்ருதி: ।
மஹாபாசுபதாஸ்த்ராக்நி நிர்தக்தாஸுரஸைநிகா ॥

1017-01 கர-அங்குலி-நக-உத்பந்ந-நாராயண-தச-ஆக்ருதி:. இரு கை விரல் நகங்களிலிருந்தும் தோன்றிய நாராயணனின் பத்து உருவங்களோடு கூடியவள்.

1017-02 பண்டன் போரில் தனது மாயையால் பல ஜாலங்களைச் செய்தான். எல்லா அறிவுகளுக்கும் இருப்பிடமான வேதங்களைப் பறித்தான். தேவி தன் வலதுகையின் கட்டைவிரலிலிருந்தும் மத்ஸ்யமூர்த்தியை வெளிப்படுத்தி வேதங்களைக் கொணர்ந்தாள். கடலைப் பெருக்கி அதில் தேவியின் படைகளைப் பண்டன் மூழ்கடித்தான். தேவியின் வலது கை ஆட்காட்டி விரலிலிருந்து தோன்றிய கூர்மமூர்த்தி மூழ்கும் படைகளைத் தாங்கினர். பண்டன் மாயையால் ஹிரண்யாக்ஷனைத் தோற்றுவித்துப் போரிட, தேவியின் வலது கை நடுவிரலிலிருந்து தோன்றிய வராஹமூர்த்தி ஹிரண்யாக்ஷனை அழித்தார். அப்படியே அவன் தோற்றுவித்த ஹிரண்ய கசிபு, பலி, கார்த்தவீர்யன், ராவணன், சிசுபாலன், பிரலம்பன், கெட்ட வழியில் செல்லும் நாடாள்பவர்கள் இவர்களை முறையே நரசிம்மர், வாமனர், பரசுராமன், ராமன், கண்ணன், பலராமன், கல்கி ஆகிய நாராயணனின் அவதார உருவங்களைத் தனது கை விரல்களிலிருந்து தோற்றுவித்து அவ்வவர்களை அழித்தாள். "தன்னால் மாயையால் ஹிரண்யகசிபுவையோ பல ஹிரண்யகசிபுக்களையோ தோற்றுவிக்க முடியும். நரஸிம்ம உருவம், மாலைநேரம், வாயிற்படி, தான் தோன்றத் தூண், பிரஹ்லாதன் முதலிய ஹிரண்யகசிபுவின் அழிவிற்கான சூழ்நிலையை அமைத்துக்கொண்டாலன்றி தேவியால் ஹிரண்யகசிபுவை அழித்துவிடமுடியாது. இது எளிதானதல்ல. தேவி தனது மாயையால் கட்டுப்பட்டுவிடுவாள்" எனப் பண்டன் எதிர்பார்த்தான். அஸுரன் அவைகளைப் படைக்க எடுத்துக்

கொண்ட நேரமோ உழைப்போ மிக அதிகம். தேவிக்கு அத்தனை நேரமும் உழைப்பும் தேவை இல்லை. நொடிப்பொழுதில் விரல்களின் நுனியிலுள்ள நகங்களைச் சுண்டினாள். நாராயணனின் 10 அவதாரங்கள் தோன்றின. அஸுரர்கள் மாய்ந்தார்கள். பிரும்மத்திற்கு உலகை படைக்கவும், அழிக்கவும் க்ஷணநேரம்தான் தேவை. கண் இமைப்பதற்கு எப்படி உழைப்பு தேவையில்லையோ, தானே இயற்கையாக அது நடந்துவிடுமோ அப்படியே பிரும்மத்தின் கிருத்யங்கள் நடைபெறுகின்றன. (நா. 281) (80)

1018-01 மஹா-பாசுபத-அஸ்த்ர-அக்நி-நிர்தக்த-அஸுர-ஸைநிகா. மஹாபாசுபதம் எனும் அஸ்திரத்திலிருந்து உண்டான நெருப்பால் அசுர சேனையை எரித்தவள்.

1018-02 பாசுபதம் எனும் அஸ்திரமே உலகை எரித்துவிடும். இதனை அர்ஜுனன், வேடன் வேஷம் பூண்டு தன்னோடு போராடிய பரமசிவனிடமிருந்து பெறுகிறான். இதனைவிடப் பல மடங்கு அதிக சக்தி வாய்ந்தது மஹாபாசுபதம் எனும் அஸ்திரம். பாசுபதத்திற்கு ஈசுவரன் என்ற முக்குணஸ்வருபியான சிவன் தேவதை. மஹாபாசுபதத்திற்கு முக்குணத்திற்கும் அப்பாற்பட்ட ஸதாசிவன் தேவதை. (ஈசுவரன், ஸதாசிவன் பேத விளக்கம் நா-271, 272) மஹாபாசுபதம் எனும் ஸதாசிவாஸ்திரத்தைக்கொண்டு பண்டனது மமதையாகிற சேனைகளைத் தேவி சுட்டுச் சாம்பலாக்கிவிட்டாள். அஞ்ஞானத்தால் எழுந்த மமகாரம் அழிந்ததும் அஹங்காரம் வலிவிழந்துவிடும். (81)

33 कामेश्वरास्त्रनिर्दग्धसभण्डासुरशून्यका । 82
ब्रह्मोपेन्द्रमहेन्द्रादिदेवसंस्तुतवैभवा ॥ 83
34 हरनेत्राग्निसन्दग्धकामसंजीवनौषधिः । 84

காமேச்வராஸ்த்ர நிர்தக்த ஸபண்டாஸுர சூன்யகா ।
ப்ரம்ஹோபேந்த்ர மஹேந்த்ராதி தேவஸம்ஸ்துதவைபவா ॥
ஹரநேத்ராக்னி ஸந்தக்த காமஸஞ்ஜீவநௌஷதி: ।

1019-01 காமேச்வர-அஸ்த்ர-நிர்தக்த-ஸ-பண்டாஸுர-சூந்யகா. காமேசுவராஸ்திரத்தால் பண்டனையும் அவனோடு சூன்யகம் எனும் அவனது நகரத்தையும் எரித்தவள்.

1019-02 சோணிதம், சூன்யகம் என்பது பண்டன் தனக்கென அமைத்துக்கொண்ட அஸுர ராஜ்யத் தலைநகரம். சோணிதம்—

இரத்தம். மனிதனின் ஆணவத்திற்குப் பலமளிப்பது இரத்தம். இரத்தத் திமிர் பிடித்தவன் இரத்தம் செத்தால் மடிவான். இரத்தம் போல் செந்நிறமுள்ளதால் சோணிதபுரம். சூன்யகம்—ஒன்றுமில்லாதது. இருப்பதுபோல் தோற்றமளித்து வந்தது. தேவியின் நகரமும் செந்நிறமுள்ளதே. ஆனல் நிறைவுள்ளது—ஸ்ரீநகரம். பண்டனிடம் இதுகாறும் அழியாதிருந்தது அவனும் அவன் உறையும் நகரமும். நகரத்தையும் தான் என்றே நினைத்து தன்னைப்போல் அதுவும் அழியாதென்று இறுமாப்புடன் இருந்தான். காமேசுவர அஸ்திரம் இச்சாசக்தி வடிவானது. நினைத்ததைச் செயலாற்றும் பிரும்மத்தின் சக்தி செயலாற்றியது. சூன்யக நகரம் சூன்ய நிலையை அடைந்தது. பண்டன் என்ற ஜீவனின் தனித் தன்மையாகிற பகட்டும் அழிந்தது. "நிர்தக்த-நிச்சேஷேண தக்த-மீதமின்றி எரிக்கப்பட்ட". சாம்பல்கூட மீதமில்லை. அப்படி எல்லாம் சூன்யமாயிற்று. தான் என்ற ஜீவபாவனை அழிந்ததும் பரம்பொருள் ஒன்றே மீதமானது. (82)

1020-01 ப்ரும்ஹ-உபேந்த்ர-மஹேந்த்ர-ஆதி-தேவ-ஸம்ஸ்துத-வைபவா. பிரும்மா, நாராயணன், இந்திரன் முதலான தேவர்களால் துதிக்கப்பட்ட பெருமையுள்ளவள்.

1020-02 நாராயணன் இந்திரனுக்குத் தம்பியாக, இந்திரனின் தாயான அதிதி தேவியிடத்தில் வாமனனுகத் தோன்றி, பலியை ஜயித்து இந்திரனுக்குத் துணை நின்றதால் உப-இந்திரன் ஆனுர். தேவர்கள் அனைவரும் பண்டன் விளைவித்தக் கொடுமையால் தத்தம் தெய்விகப் பணிகளைப் புரிய முடியாதவாறு ஆயிற்று. தேவி பண்டனது கொடுமைகளிலிருந்தும் தேவர்களை விடுவித்தாள். அப்போது தேவர்கள் தேவியின் பெருமையை உணர்ந்து போற்றினுர்கள். அவளது அருளால் அவளது சக்தியின் அம்சத்தைப் பெற்றதால் தேவர்கள் தெய்வீகப் பணிகளை நிறைவேற்ற முடிந்தது. இது அவளது வைபவம்—விபுத்தன்மை—ஸர்வாத்துமத்துவம். அவளது ஸர்வாத்மத்துவத்தை—எல்லாமாயிருக்கும் தன்மையை—எல்லாப் பொருள்களிலும் ஆத்மாவாக அந்தர்யாமியாக இருந்து ஆட்டுவிக்கும் தன்மையைத் தேவர்கள் உணர்ந்து போற்றினர். (83)

1021-01 **ஹர-நேத்ர-அக்நி-ஸந்தக்த-காம-ஸஞ்ஜீவந-ஒஷதி: ஹரனின் கண்களிலிருந்து தோன்றிய அக்னியால் எரிக்கப்பட்ட காமன் மீண்டும் உயிர்த்துப் பூர்ண நிலையில் எழ உதவிய ஸஞ்ஜீவனிப் பச்சிலையாக இருந்தவள்.**

1021-02 உலகை அழிக்கப் புறப்பட்டவர் ஹரன். அவர் மிகவும் விரக்தர்—பற்றற்றவர். அவர் பற்றை-காமனை எரித்தார். அதே ஹரனைத் தன்பால் ஈர்த்துக் காமனுக்கும் ஈசுவரனுக்கினள் தேவி. தகப்பன் அதட்டி மிரட்டும்போது தாய் அணைத்து ஆறுதல் கூறுவாள். ஹரனின் கண்களில் கோபம் குடியிருந்தது. காமக் கண்ணியான காமாக்ஷியின் பார்வை பட்டதும் கோபம் மறைந்து காமம் கண்களில் மிளிர்ந்தது. காமனுன ஈசுவரன் காமேசுவரன். காமேசுவரியின் நோக்கோடு கலந்த காமேசுவரனின் நோக்கு சூன்யமாகிவிட்ட மன்மதன்மேல் விழுந்தது. மன்மதன் மீண்டும் உயிர்த்தெழுந்தான். சிவனையும் தனது சக்திக்கு உட்படுத்த முடியும் என்ற ஆணவம் அழிந்து தெய்வத் தன்மையை உணர்ந்த காமன் தோன்றினன். ரதி தன் கழுத்தில் துலங்கும் மங்கலநாணைப் பார்த்து மகிழ்ந்தாள். தேவியும் இந்தத் தோற்றத்தில் புதிதாகக் காமேசுவரனுல் தனக்குக் கட்டப்பட்ட மங்கலநாண் தோற்றுவித்த மங்களச் சூழ்நிலையைக் கண்டு அகமகிழ்ந்தாள். தேவி ஸ்ரீலலிதையாகத் தோன்றியதன் பணி மங்களமாக நிறைவேறிற்று.

1021-03 'ப்ரும்ஹ தந் மங்களம் பரம்' 'அந்த பிரும்மமே மேலான மங்களமாகும்'. ஜீவன் 'தான்' 'தனது' என்ற இரு பந்தங்களிலிருந்தும் விடுபட்டுத் தனது சுயநிலையான 'அது' வாகி நிற்கும் மங்களமானுன்.

1021-04 ஹரன் என்ற ஸம்ஹார சக்தி படைத்த பிரும்மத்தால் ஒடுக்கப்பட்ட உலகம் ஈசுவரனுல் மூலப் பொருளாக்கப்பட்டு பிரும்மத்திடம் சேர்க்கப்பெறுகிறது. மறுபடியும் தேவி காமேசுவரனது நோக்கினுல் ஸ்ருஷ்டிக்கான ஸங்கல்பம் கொண்டு ஸதாசிவன் எனும் பிரும்மமாகி உலகைப் படைக்க அருள்கிருள். மறுபடி உலகப் பணி தொடர்கிறது. உலகு மறுபடி தோன்ற அருள்பவளும் அவளே. (நா-264-274)

1021-05 காமேசுவரி தன் சக்தியின் அம்சத்தை மற்ற தேவதைகளுக்கு அளித்தது போல் மன்மதனுக்கும் அளித்து அவனையும் காமனுக்கினள். இதுவே காமஸஞ்ஜீவனம். (84)

# அதிகாரம் 11

## தேவியின் ஸூக்ஷ்மரூபம் - மந்திரம்

श्रीमद्वाग्भवकूटैकस्वरूपमुखपङ्कजा ॥ 85
35 कण्ठाधःकटिपर्यन्तमध्यकूटस्वरूपिणी । 86

ஸ்ரீமத்வாக்பவ-கூடைக-ஸ்வரூப-முக-பங்கஜா ॥
கண்டாத: கடிபர்யந்த-மத்த்ய-கூடஸ்வரூபிணீ ।

1101-01 ஸ்ரீமத்-வாக்பவ-கூட-ஏக-ஸ்வரூப-முக-பங்கஜா. சிறப்பு மிக்க வாக்பவ கூடம் தனிச்சிறப்புள்ள தனது உருவத்தில் தாமரை போன்ற முகமாக அமையப் பெற்றவள்.

1101-02 தேவியின் ஸ்தூல உருவத்தையும், அதன் தோற்றத் திற்கான காரணத்தையும் அந்தத் தோற்றத்தின் மூலம் துஷ்டர் களை சிக்ஷித்து சிஷ்டர்களைக் காப்பாற்றுதல் என்ற காத்தல் பணியை நிறைவேற்றிய விதத்தையும் வாக்தேவதைகள் 4–84 நாமங்களால் விளக்கினர். இனி தேவியின் ஸூக்ஷ்ம உருவை விளக்கிக் கூறுகின்றனர். ஸூக்ஷ்ம உரு இருவகையில் அமைகிறது. ஒன்று மந்திரமயமானது. மற்றொன்று குண்டலினீ சக்திவடிவானது. அவளது மந்திரம் ஸ்ரீவித்யை. மந்திரமயமான உருவிலும் தியானத் திற்கு ஏற்றதாக முகம், கை, கால் போன்ற அவயவ கல்பனை உண்டு.

1101-03 ஸ்ரீவித்யை 15 அக்ஷரங்கள் கொண்டது. அவை யாவன-க ஏ ஈ ல ஹ்ரீம், ஹ ஸ க ஹ ல ஹ்ரீம், ஸ க ல ஹ்ரீம். முதல் ஐந்து அக்ஷரங்களை வாக்பவ கூடம் என்றும் நடுவில் உள்ள ஆறு அக்ஷரங்களைக் காமராஜகூடம் என்றும் கடை நான்கு அக்ஷரங்களைச் சக்திகூடம் என்றும் கூறுவர். (கூடம்—கூறு)

1101-04 தேவி யாககுண்டத்திலிருந்து தோன்றியபோது முதலில் வெளியானது முகமண்டலம். மனம் வெளியே செல்லப் பயன்படுத்தும் பொறிகளில் பெரும்பாலானவை அமைந்த இடம் முகம். வாக்கை முக்கியமாகக்கொண்ட தேவியின் முகத்திலிருந்தும் தோன்றியது வாக்பவம் எனும் கூடம். அந்த வாக்பவகூடம் க ஏ ஈ ல ஹ்ரீம் என்ற ஐந்து அக்ஷரங்களால் அமைந்த கூறு அது தேவியின் மந்திரத்தாலான வடிவில் முகமாகத் தோன்றுகிறது. வாக்பவகூடம் ஞானத்தை அருள்வதால் ஸ்ரீமத்-சிறப்புமிக்கதா கிறது. இது தேவியின் ஞான சக்தி, (85)

1102-01 கண்ட-அத:-கடி-பர்யந்த-மத்த்ய-கூட-ஸ்வ்ரூபிணீ. கழுத்திலிருந்து இடுப்பு வரையுள்ள பாகமாக அமைந்த மத்தியகூடமெனும் காமராஜ கூடத்தோடு கூடியவள்.

1102-02 பஞ்சதசாக்ஷரியின் நடுவில் அமைவதால் இது மத்திய கூடம். உடலில் கழுத்திற்குக் கீழ் இடுப்புவரை உள்ள பகுதி நடு உடல். ஹ ஸ க ஹ ல ஹ்ரீம் என்ற ஆறு அக்ஷரங்கள் அமைந்த மத்திய கூடம், மந்திரமயமான தேவியின் சரீரத்தில் நடு உடலாக அமைந்துள்ளது. ஆசை—விருப்பம் வெளிப்படுமிடமாகையால் இது இச்சாசக்தி வடிவம். (86)

शक्तिकूटैकतापन्नकट्यधोभागधारिणी ॥ 87

36 मूलमन्त्रात्मिका मूलकूटत्रयकलेवरा । 89

சக்தி-கூடைகதாபந்ந-கட்யதோ-பாகதாரிணீ ॥
மூலமந்த்ராத்மிகா மூலகூடத்ரயகலேபரா ।

1103-01 சக்தி-கூட-ஏகதா-ஆபந்ந-கடி-அதோ-பாக-தாரிணீ. சக்தி கூடத்துடன் ஒன்றிய இடுப்பின் அடிப் பகுதியைத் தாங்கியவள்.

1103-02 படைக்கும் சக்தியான கிரியா சக்தி வெளிப்படுமிடம் இடுப்பின் கீழ்ப்பகுதி. மந்திரத்தின் கடைப்பகுதி படைக்கும் சக்தி அமைந்தது. ஸ, க, ல ஹ்ரீம் என்ற நான்கு அக்ஷரங்கள் பஞ்சதசாக்ஷரியின் கடைப்பகுதியான சக்தி கூடம். தேவியின் மந்திரமயமான வடிவில் இடுப்பின் கீழ்ப்பகுதியாக இது அமைந்துள்ளது. இக்கூடம் கிரியாசக்தி வடிவம். (87)

1104-01 மூல-மந்த்ர-ஆத்மிகா. மூலமந்த்ரமே தானுகி நிற்பவள்.

1104-02 தேவியின் பஞ்சதசாக்ஷரி அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு புருஷார்த்தங்களுக்கும் காரணம். ஆதலால் மூலம். மந்திராக்ஷரங்கள், அவைகளில் வெளிப்படும் தேவதாசக்தி, அந்த தேவதையின் ஸ்வரூபம் இவைகளை இணைத்து இடைவிடாது வேறு நோக்கில்லாமல் சிந்தனைசெய்வது மனனம். இதனுல் தேவியின் பூர்ண ஸ்வரூபமாகத் தான் ஆகும் உணர்வு ஏற்படும். தேவியாகும் உணர்வைத் தருவதால் ஜபிப்பவனை பிறப்பிறப்பெனும் சுழலிலிருந்து மந்திரம் காப்பாற்றுகிறது. மனனம் சிந்தனையால் தேவியுடன் ஒன்றிப்போதலாகும். திராணம் ஸம்ஸாரச் சுழலி

லிருந்தும் பாதுகாப்பாகும். இரு குணங்கள் பெற்றமையால் மந்த்ரம் ஆகிறது. (பூர்ண-அஹந்தா-அனுஸந்த்யாத்மா ஸ்பூர்ஜந் மநந-தர்மத :; ஸம்ஸார-க்ஷயக்ருத் த்ராண தர்மதோ மந்த்ர : உச்யதே.) புருஷார்த்தங்களுக்கு மூலமாயும், மனனத்தால் பிறவித் தளையிலிருந்தும் விடுவிப்பதுமான பஞ்சதசாக்ஷரி எனும் மூலமந்திர மாக இருப்பவள் தேவி.

1104-03 பஞ்சதசாக்ஷரியின் எழுத்துக்களில் சில சிவாம்சம் பெற்றவை. சில சக்தியம்சம் பெற்றவை. சில சிவசக்தியம்சம் பெற்றவை.

அதன் விளக்கம் பின்வருமாறு :—

| | வாக்பவ கூடம் | காமராஜ கூடம் | சக்தி கூடம் |
|---|---|---|---|
| மந்திரம் | க ஏ ஈ ல ஹ்ரீம் | ஹ ஸ க ஹ ல ஹ்ரீம் | ஸ க ல ஹ்ரீம் |
| சிவன் | க | ஹ க ஹ | க |
| சக்தி | ஏ ஈ ல | ஸ ல | ஸ ல |
| சிவசக்தி | ஹ்ரீம் | ஹ்ரீம் | ஹ்ரீம் |

மற்றொரு வகையிலும் சிவசக்தி அம்சங்களைப் பிரிக்கலாம். சிவன் மெய்யெழுத்து, சக்தி உயிர் எழுத்து.

அதன் விளக்கம் பின்வருமாறு :—

| | | | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| சிவன் | க் | | | ல் | ஹ்ர், | ஹ் | ஸ் | க் | ஹ் | ல் | ஹ்ர் | ஸ் | க் | ல் | ஹ்ர் |
| சக்தி | அ | ஏ | ஈ | அ | ஈ | அ | அ | அ | அ | அ | ஈ | அ | அ | அ | ஈ |
| சிவசக்தி | | | | | ம் | | | | | | ம் | | | | ம் |

1104-04 பஞ்சதசாக்ஷரியின் மொத்த சக்தி 'ஹ்ரீம்' லுள்ள 'ஈம்'ல் அடங்கியுள்ளது. 'ஈம்' ஐக் காமகலா என்பர். அதுவே மந்தி ரத்தின் மூலம் - வேர். அதனால் மூலமந்திரம். தற்போது நாம் எழுதும் 'ஈ' என்ற எழுத்துக்கு ஆதிலிபியில் மூல வடிவம் ஒரு செங்குத்துக் கோட்டின் மேல் அர்த்த சந்திர வடிவமும், கோட்டின் இருபுறமும் இரு பிந்துக்களும் அடியில் ஒரு முக்கோணமும் கொண்டது. 'ம்' என்ற பிந்துவை அதன் தலையிலிட வேண்டும். (பிந்து-சிறு வட்டம்) ஒரு பெண்ணின் உருவம் போல் அது அமையும். தலையில் உள்ள பிந்து முகம் போலவும், செங்குத்துக் கோடு உடல் போலவும், அதன் இருபுறமும் உள்ள இரு பிந்துக்கள் இரு ஸ்தனங்கள் போலவும், அடியிலுள்ள முக்கோணம் இடுப்பின் கீழ்ப்பகுதி போலவும் தியானிக்கத்தக்கதாக உள்ளதை உணரலாம்.

அந்த ஆதிலிபி வடிவத்தை ஒட்டி அதிலிருந்து தோன்றிய பல லிபிகளில் ஈயின் வடிவங்களை இன்று கல்வெட்டுகளில் * காண முடிகிறது.

1104-05 ஹ்ரீம் க்லீம் ஸ்ரீம் முதலிய பீஜாக்ஷரங்களில் உள்ள 'ஈம்' ஒரு பெண்ணுருவம் கொண்டுள்ளதையொட்டி இதனைக் காமகலையாகத் தியானம் செய்யும் முறை ஒன்று உண்டு. ஸௌந்தரியலஹரியின் 19 வது சுலோகம் இதனை விளக்குகிறது.

*முகம் பிந்தும் க்ருத்வா குசயுகம் அதஸ் தஸ்ய ததத :*
*ஹரார்த்தம் த்யாயேத்யோ ஹரமஹிஷி தே மந்மதகலாம்.*
*ஸ ஸத்ய : ஸம்க்ஷோபம் நயதி வநிதா இத்யதிலகு*
*த்ரிலோகீமப்யாசு ப்ரமயதி ரவீந்துஸ்தநயுகாம்.*

"காமேசனின் பட்டமஹிஷியே! (ஈம் என்ற அக்ஷரத்தில் உள்ள) பிந்துவை முகமாகவும் அதன் கீழ் (இரு பிந்துக்களை) இரு ஸ்தனங்களாகவும், அதன்கீழ் (முக்கோண வடிவை) பெண் வடிவிலுள்ள யோனியாகவும் காமகலாவாகத் தியானம் செய்பவன் பெண்களை மயக்குவது மிக எளிது; மூன்று உலகங்களையும் மயக்குவான்".

காமகலாக்ஷரத்தைப் பெண் வடிவிலும் பெண் வடிவைத் தேவியின் மூலமந்திரமான காம கலாக்ஷரமாகவும் தியானம் செய்பவன் வசீகரண சக்தி பெறுகிறான் என்பதும் இதன் உட்பொருள்.

---

* 1 2 3 4 5 6 7 8 9

முதல் எட்டும் கல்வெட்டுகளில் காணப்பெறும் ஈ என்ற எழுத்தின் வடிவங்கள். 9வது ஈம் என்ற காம கலாக்ஷரத்தின் வடிவம்; மந்திர நூல்களிலும் ஸௌந்தர்ய லஹரீ 19வது சுலோகத்திலும் குறிப்பிட்டுள்ளதை ஒட்டிக் கற்பனையால் வரையப்பெற்ற வடிவம். 1-8 வரை குறிப்பிட்டுள்ள லிபி வடிவிற்கு மூலமான ஆதி லிபியில் இந்த அமைப்பு இருந்திருக்கக்கூடும். மந்திர நூல்களிலும் மற்ற நூல்களிலும் காமகலாவின் வடிவம் ஒரே விதமாகக் குறிப்பிடப்பட்டுள்ளதே இந்த ஊகத்திற்குக் காரணம். 1-8 வடிவங்களில் 3வது தான் மிகப்பழையது. குகைகளிலுள்ள தமிழ் கல்வெட்டுகளில் காணப்பெறுவது. கி. மு. மூன்றாம் நூற்றாண்டில் செதுக்கப் பெற்றது. 1. க்ஷத்ரபர் கல்வெட்டு (கி. பி. 2ம் நூற்றாண்டு) 2. ஸாதவாஹனர் (கி. பி. 2ம் நூற்றாண்டு) 4. குப்தர் (கி. பி. 4ம் நூற்றாண்டு) 5. பல்லவர் (5ம் நூற்றாண்டு) 6. பிரதிஹாரர் (9ம் நூற்றாண்டு) 7. ராஷ்டிரகூடர் (9ம் நூற்றாண்டு) 8. சோழர் (13ம் நூற்றாண்டு) ஆதாரம்—திரு. C. சிவராம மூர்த்தியின் கல்வெட்டுகளும் எழுத்துக்களும். கலைக்களஞ்சியம், பகுதி 2, பக்கம் 180, பத்தி 1.

ஸௌந்தரியலஹரிக்கு உரை எழுதியவர்களுள் ஆநந்தகிரி என்பவர் மந்திர ரஹஸ்யங்கள் நன்கறிந்தவர். ஆனந்தவாரக்ருத்ஸ்னர் என்ற சங்கராசாரியரின் (சங்கரர் அமைத்த பீடங்களில் ஒன்றில் ஆசாரியராக இருந்தவர்) சீடராகத் தம்மை அறிமுகப்படுத்திக் கொள்கிருர். இவரது உரை நேபாள அரசரின் கோசாலயத்தி லிருந்த சுவடியிலிருந்து பெறப்பட்டது. இவர் இங்கு எழுதியுள்ள உரைப் பகுதி நல்ல விளக்கம் தருகிறது.

*"ஹே ஹர மஹிஷி, யஸ்தவ மந்மதகலாம், மந்மதசப்தேந காம ராஜபீஜம் 'க்லீம்' இத்யாகாரம், தஸ்ய கலாம் ஏகதேசம் ஈமிதி; தத்ர ஈங்காரஸ்ய லேகநே பிந்துத்ரயாத்மகமேவ ரூபம் ஜாயதே; தத்ர ஏகோ பிந்து: உபரி, பிந்துத்வயம் அத: தத்ர உபரிதநோ பிந்து: பரமேச்வர்யா முகத்வேந த்யேய:, அதஸ்தநம் பிந்துத்வயம் குசயுகத்வேந த்யேயம்; தஸ்ய அத: த்ரிகோணுகாரம் மோஹந மந்திரம் த்யேயமிதி; ததேவ ஹகாரார்த்தம். ஹகாரஸ்ய உபரிதநே பாகே அர்த்தலுப்தே ஸதி அதோ அர்த்தபாக: திரிகோணே யோந்யா காரஸ் திஷ்டதி."*

"மந்மத கலாம்—காமராஜபீஜமான க்லீம் என்பதன் பகுதி ஈம் என்பது. அதில் ஈம் என்பதை எழுதும்போது மூன்று பிந்துக் களுள்ள வடிவம் ஏற்படும், ஒரு பிந்து மேல், இருபிந்துக்கள் கீழ்; மேலுள்ள பிந்து தேவியின் முகமாகத் தியானம் செய்யத் தக்கது. கீழுள்ள இரு பிந்துக்கள் இருஸ்தனங்களாகத் தியானம் செய்யத் தக்கவை. அதன் கீழ் முக்கோண வடிவுள்ளது மறைவிடமாகத் தியானிக்கத் தக்கது. மறைவிடம் 'ஹ' என்ற எழுத்தின் பாதி (ஹகாரார்த்தம்) என சுலோகத்தில் குறிப்பிட்டுள்ளது. ஹ என்ற எழுத்தின் மேற்பகுதியை அழித்துவிடக் கீழ்பாதி முக்கோண வடிவில் யோநிபோல் இருக்கிறது. *இந்த காமகலா க்ஷரமே மூல மந்திரம். அதன் வடிவில் இருப்பவள் தேவி.

**1104-06** ஸ்தூலம் ஸூக்ஷ்மம் என்று இரு பிரிவில், ஸ்தூலம் உடல், ஸூக்ஷ்மம் ஆத்மா மந்திரத்தின் எழுத்து உடல். அதனை மனனம் செய்கையில் அதன் உட்பொருளாக மனத்தில் படியும் அதன் விரிவு ஆத்மா. மூலமந்திரத்தின் உட்பொருளாக உணரப் படுபவள் தேவி,

---

* இவை மௌர்யர்கள் (கி. மு. மூன்ரும் நூற்ருண்டு) பட்டப்ரோலு (கி. மு. மூன்ரும் நூற்ருண்டு) கல்வெட்டிலுள்ள ஹ எழுத்து வடிவங்கள். இவைகளின் மூல லிபியில் மந்திர நூல்கள் காணும் ஹ லிபியின் கீழ்பகுதி முக்கோணம் கொண்டதாக அமைந்திருக்கக் கூடும்.

1104-07 மூலம் என்றால் முதற்காரணம். உலகின் தோற்றத்தில் முதலாக வெளியானது சப்தம் எனும் தன்மாத்திரம்—ஒலி எனும் சக்திமிக்க ஸூக்ஷ்ம பூதமான ஆகாயம். அது கிரமமாக ஸ்தூல நிலை பெறும்போது வரும் முதல் வடிவம் அக்ஷரம்—எழுத்து. அக்ஷரம்—அழியாதது. அக்ஷரங்கள் சேர்ந்து சொல் வடிவமாகிறது. அப்போது அது க்ஷரம்—அழியக்கூடியது. இந்த சொல் என்று நன்கு வெளிப்பட்ட ஒலி வடிவத்திற்கு மூலமாக உள்ள அக்ஷரத்தை மாத்ருகா என்பர். மாதா—தாய்; மாத்ருகா – சக்திமிக்க—அழகான – ஸூக்ஷ்மமான தாய்; விஸ்தரிக்கவிருக்கும் சப்தப் பிரபஞ்சத்தைத் தன்னுள் அடக்கிக் கொண்டவள். சொல்லின் சக்தி அனைத்தும் ஸூக்ஷ்மமாய் அதன் மூலமான அக்ஷரத்தில் அடங்கியுள்ளது. ஸ்ரீ மாதாவின் மற்றோர் உருவம் மாத்ருகா.

1104-08 மந்திரங்கள் இந்த சக்திமிக்க மாத்ருகைகளாலானது. உலகியலில் 'குடம்', 'மனிதன்' முதலிய சொல் வடிவங்களில் அக்ஷரங்களின் தொகுப்பிற்குத்தான் பொருள் உண்டு. தனி எழுத்தின் பொருள் வெளிப்படுவதில்லை. மந்திரங்களில் முழுச் சொல் வடிவத்திற்குமட்டும் முக்கியத்துவமில்லை. ஒவ்வொரு அக்ஷரத்திற்கும் அக்ஷரத்தின் பகுதிகளுக்கும் கூடத் தனிப் பொருளும், சக்தியும் உண்டு. அதனால் இந்த அக்ஷரங்களை பீஜ-அக்ஷரங்கள் என்பர். பீஜம்-விதை. விதைபோல் ஒவ்வொரு அக்ஷரமும் இனி மிக விரிவான தோற்றத்தைப் பெறவிருப்பதைத் தன்னுள் அடக்கிக்கொண்டது. விதைக் குவியலிலுள்ள ஒவ்வொரு விதையும் மரமாகக் கூடியது. ஒவ்வொன்றும் தனித்த முக்கியத்துவம் கொண்டது.

1104-09 இத்தகைய சக்திமிக்கதும், உலகின் காரணமாயும் மனன-த்ராண சக்தி கொண்டதுமான அக்ஷரங்களாக வெளிவந்த முதல் சொல் தொடர் வேதம். இதுவே எல்லா மந்திரங்களுக்கும் மூலம். அதன் சக்திமிக்க அக்ஷரங்களிலிருந்து தொகுக்கப் பட்டவையே மந்திரங்கள். அதன் வடிவானவள் தேவி.

1104-10 மந்த்ரம் என்பது ரகசியமாகக் காப்பாற்றக்கூடியது. அரசாங்கத்தின் திட்ட நிலையிலுள்ள யோசனைகளை-செயல் வடிவில் வரவிருப்பவைகளை மந்த்ரம் என்பர். அதைப் பிறர் அறியாது காப்பாற்றுபவன் மந்த்ரீ-மந்திரி. திட்ட நிலையிலேயே அவை வெளிப்பட்டால் பயனற்றுப்போய்விடும். அதுபோல் ரகசியமாகக் காப்பாற்றக்கூடியது மந்த்ரம். அதனால்தான் அதை மனனம் செய்கிறோம். மனத்தினுள் அதன் ஸ்தூல-ஸூக்ஷ்ம வடிவங்களைக் காண்கிறோம், சொல் கேட்கப்படுவதாக ஆக வாய் வழியே வெளி

யாக வேண்டும். வாய்வழியே வெளியிடப்படும் அக்ஷரத்தின் சக்தி குறையும். அதனால் மனன நிலையில் காப்பாற்றக்கூடியது மந்திரம். மந்திரங்களுக்கும் மூலமான இந்த பஞ்சதசாக்ஷரீ மிகமிக ரகசிய மாகக் காப்பாற்றத்தக்கது. அத்தகைய மூலமந்திரவடிவினள். (88)

1105-01 மூல-கூட-த்ரய-கலேபரா. மூல மந்திரத்தின் மூன்று கூடங்களையே தனது உடலாகக்கொண்டவள்.

1105-02 மூலமந்திரத்தின் 'வாக்பவம்', 'காமராஜம்', 'சக்தி' என்ற மூன்று கூறுகளையும் தன் உடலாகக் கொண்டவள். மூன்று கூடங்களாக அமைந்த அக்ஷரங்களையே தன் ஸ்தூல உருவாகக் கொண்டவள். காமகலையில் மேலுள்ள பிந்து, நடுவில் உள்ள இரு பிந்துக்கள், கீழ் அமைந்த திரிகோணம் ஆக மூன்று கூறுகளாகப் பிரிந்த உடலமைப்பு கொண்டவள். (முன் நாமத்தில் கூறியுள்ள விளக்கங்கள் அனைத்தையும் இங்கு பொருத்திப்பார்க்க.) (89)

## அதிகாரம் 12

# தேவியின் ஸூக்ஷ்மரூபம்-குண்டலிநீ

कुलामृतैकरसिका कुलसंकेतपालिनी ॥ 91
37 कुलाङ्गना कुलान्तस्था कौलिनी कुलयोगिनी । 95
अकुला समयान्तस्था समयाचारतत्परा ॥ 98

குலாம்ருதைகரஸிகா குலஸங்கேதபாலிநீ ll
குலாங்கநா குலாந்தஸ்தா கௌலிநீ குலயோகிநீ 1
அகுலா ஸமயாந்தஸ்தா ஸமயாசாரதத்பரா ll

1201-01 குல-அம்ருத-ஏக-ரஸிகா. குலாம்ருதத்தில் மட்டும் ஈடுபாடுள்ளவள்.

1201-02 எங்கும் நிறைந்துள்ள ஸூக்ஷ்மமான சக்தி, மந்திரத்தின் அக்ஷரங்களில் குவிந்துள்ளது. அதனை ஒலிவடிவில் உருவகப்படுத்தமுடிகிறது. அதே சக்தி ஒவ்வொரு ஜீவனிடத்திலும் குண்டலினியாக உள்ளது. மனிதனிடத்தில் அது நன்கு வெளிப் படுகிறது. யோகியினிடத்தில் மிகச் சிறப்பாக வெளிப்படுகிறது.

1201-03 மனித உடலின் நடுப்பகுதியில் கீழ்ப்பகுதியில் உள்ள ஆஸனத் துவாரத்திலிருந்து தலையிலுள்ள பிரும்மரந்திரம் வரை குண்டலினி செல்லும் ஸூஷும்நா நாடி உள்ளது. (தலையில் உள்ள உச்சிக்குழி பிரும்மரந்திரமாகும். கருவில் உள்ள உடலில்

ஜீவன் பிரவேசித்த இடம் இது. பிரும்மத்தை உணர்ந்த யோகியின் பிராணசக்தி பிரும்மத்துடன் கலக்க இவ்வழியாக வெளியில் செல்லும். அதனுல் இது பிரும்மரந்திரம்.) ஸுஷும்நா நாடி முதுகில் உள்ள முள்ளந்தண்டில் அமைந்துள்ளது.

1201-04 வெளியுலகில் குவிந்துள்ள பிராணசக்தியை சுவாசத்தின்மூலம் உட்செலுத்துகிருேம். உள்ளே செலுத்த நாசியில் இரு துவாரங்கள் உள்ளன. ஒவ்வொன்றும் தனித்தன்மை பெற்றவை. இடது நாசித் துவாரத்தின் வழியே அந்த பிராண சக்தி கொண்ட காற்று செல்லும்போது சந்திரனது தன்மையைப் (குளிர்ச்சி) பெறுகின்றது. வலது நாசித் துவாரத்தின் வழியே செல்லும்போது சூரியனது தன்மையைப் (வெப்பம்) பெறுகிறது. காற்றிலுள்ள சக்தியை இப்படிப் பிரித்து உட்செலுத்தும் நாடிகள் இடை பிங்கலே என்பவை. அந்த சக்தியைப்போல் அதனைக் கொண்டுசெல்லும் இந்த நாடிகளும் புலன்களுக்கப்பாற்பட்டவை. இவை இரண்டாலும் உட்புகுந்த சக்தி மூலாதாரத்தில் அமைந்த குண்டத்தினுள் சேமிக்கப்பெறுகிறது.

1201-05 குண்டம்-சேமிக்கப்பெறும் பொருளைத் தாங்கி எளிதில் அது வெளியேருமல் பாதுகாக்க உதவுமிடம். அந்த இடத்தில் தங்கி மறைந்திருப்பதால் குண்டத்தில் லயம்பெறுவதால் குண்டலிநீ. பாம்பு ஓய்வெடுக்கும்போது மனிதனைப்போல் உடலை நீட்டி விரித்துப் படுப்பதில்லை. அது தன் உடலைக் குண்டலம்போல் வளையமாகச் சுருட்டிப் படுத்துகொள்ளும். அதனுல் பாம்பைக் குண்டலீ (பெண் பாம்பு குண்டலினீ) என்பர். இப்படிச் சுருட்டிப் படுத்திருக்கும் பெண் பாம்பைப் போன்று, சக்தி விரிவுபெருமல்-வெளியாகாமல், சுருட்டி அடங்கியிருப்பதால் குண்டலினீ எனப்படுகிறது. (நா. 440) (நாகினீ, போகினீ என்ற பெண் பாம்பின் மற்ற பெயர்களைக் கொண்டும் தந்திர சாஸ்திரம் இதனைக் குறிப்பிடும். சக்தியானதால் பெண்பாலாகக் குறிப்பிடுவர்.) இப்படி அடங்கிக் கிடக்கும் சக்தி கீழ்வழியே வெளிப்படாமலிருக்க கணக்கற்ற இதழ்கள் கொண்ட தாமரைபோல், மூலாதாரத்தின்கீழ் அமைந்துள்ள ‘அகுல’ சக்கிரம் தடைபோல் காப்பாற்றுகிறது. அதேபோல் மேல்வழியே வெளிப்படாமல் இருக்கத் தடையாக. மற்ருெரு அகுலசக்கிரம் (ஸஹஸ்ராரம்) பிரும்மரந்திரத்தில் அமைந்துள்ளது. உடலில் குவிந்துள்ள சக்தி இங்ஙனம் வீணுகாமல் பாதுகாக்கப்பெறுகிறது. இவ்விரு அகுல சக்கிரங்களும் சிவாம்சம் பெற்றவை. இதன் நடுவே சக்தி கீழும் மேலும் குலசக்கிரங்கள் வழியே பாய்ந்துகொண்டே இருக்கிறது.

1201-06 இந்த சக்தியின் பெருமை குறிப்பிடவொண்ணுதது. உலகெங்கும் வியாபித்து நின்று படைத்தும் காத்தும் ஒடுக்கியும் மற்றும் பல வகைகளிலும் அரும் பெரும் செயல்கள் புரியும் சக்தியே இது. நெருப்பில் சிறிதும் பெரிதும் கிடையாது. அதனைத் தாங்கும் பொருளில் தான் ஏற்றத்தாழ்வு. அதுபோல் மனித உடலில் குவிந்து நிற்கும் குண்டலினிக்கும் உலகெங்கும் பரவியுள்ள பராசக்திக்கும் செயலாற்றலில் எவ்வித வேறுபாடும் கிடையாது. ஆனல் அதன் முழு சக்தியில் கோடியின் ஓரம்சத்தைக்கூட மனிதன் பயன்படுத்துவதில்லை. அவனல் பயன்படுத்த இயலுவதில்லை.

1201-07 மனிதனிடம் பெரும்பாலும் அது தூங்கிக்கொண்டிருக்கிறது. ("ஸ்வபிஷி குலகுண்டே குஹரிணி". "குண்டலிநீ சக்தியே! துவாரமுள்ள குலம் எனும் குண்டத்தில் நீ தூங்குகிருய்" ஸௌந்தரிய லஹரீ - 10ஆம் ச்லோகம்) தூங்கிக்கொண்டிருக்கும் நிலையில் கூட அது சிறிதளவு வெளிப்படுகிறது. அதன் விளைவே நாம் பொறிகளாலும் மனத்தாலும் உணரும் அறிவு. மனமெனும் குதிரையில் ஏறிப் பொறிகள் எனும் அரண்மனை வாயில் வழியே வெளிப்பட்டுப் புலன்களாகிற ராஜ்ய சுகத்தைச் சக்தி அனுபவித்துத் திரும்புகிறது. அந்த அனுபவமே ஞானம்.

1201-08 குலம் என்பது அறியப்படும் பொருள், அறிபவன், அறிவு என்ற ஞான குலம் மூன்றைக் குறிப்பிடும். தாய், தந்தை, தநயன் என்ற மூன்றும் சேர்ந்ததை உலகில் பிரஜாகுலம் என்பர். ஆசான், சீடன், வித்தை என்ற மூன்றும் சேர்ந்தது குருகுலம். ஒரு வழியைச் சார்ந்தவைகளைக் குலம் என்பர். ("குலம் — ஸஜாதீயஸமூஹ:") "நான் புத்தகத்தைப் பார்க்கிறேன்" எனும் போது பார்க்கும் நானும், பார்க்கப்பெறும் பொருளும், பார்வையுமாக ஒரு இனத்தைச் சேர்ந்த மூன்று அதில் அடங்குகிறது. இந்த மூன்றையும் குலம் என்பர். 'அறிகிறேன்' என்றதும் யார்? எதனை அறிகிறேன்? எப்படி அறிகிறேன் என்ற விளக்கம் பார்வையென்ற அறிவிற்குத் தேவைப்படுகின்றது. இந்த அறிவு ஸாகார ஞானம்— வடிவமுள்ளது. இந்த அறிவைப் பெற உள்ளொளி ஒன்று தேவை. அது குண்டலினீ. அந்த உள்ளொளி இந்த மூன்றின் வழியே வெளிப்படுகிறது. அப்படி வெளிப்படும்போது அறியப்படும் பொருளையும் அறியும் நம்மையும் அந்த உணர்வையும் விளக்கப் பெறுகிறேம்,

1201-09 இந்த குலஞானத்திற்கு ஆதாரமாக மூலமாக உள்ள குண்டலினீ உறையுமிடம் குலகுண்டம் எனக் கூறப்பெறும் மூலாதாரம். மூலசக்தியின் இருப்பிடம். விரிவு முழு அளவில் பெறும்

இடம், ஸஹஸ்ரார கமலம் என்ற மூளை அமைந்துள்ள இடம். இவ்விரு இடங்களின் இடையே மேலும் கீழுமாகச் செல்லும் இந்த சக்தி நடுநடுவே ஸுஷும்நா நாடியில் தங்குகிறது. அப்படித் தங்குமிடங்களில் முக்கியமானவை ஆறு சக்கிரங்கள். மூலாதாரம் (எப்போதும் தங்கியிருக்கும் மூலஸ்தானம்), ஸ்வாதிஷ்டானம் (ஆஸனத் துவாரத்திற்குச் சற்று மேல் அமைந்தது), மணிபூரகம் (தொப்புள் அமைந்துள்ள இடத்திற்குப் பின் பாகம்), அநாஹதம் (இதயத்தின் பின்புறம்), விசுத்தி (தொண்டையின் பின்புறம்), ஆஜ்ஞா (நெற்றிப் பொட்டின் பின்புறம்), என்பவை அவை.

1201-10 தூங்கிக் கொண்டிருக்கும் சக்தி இந்த சக்கிரங்கள் வழியே வெளிப்பட்டு ரஸம், ரக்தம், தசை, எலும்பு முதலிய தாதுக்களில் பிரதிபலிப்பதால் உடல் வளர்கிறது, பல பரிணமங்களை ஒவ்வொரு நொடியிலும் பெறுகிறது. உலக அறிவு அனைத்தையும் தருகிறது. குலசக்கிரங்கள் என்று இந்த சக்கிரங்களுக்குப் பெயர். யோகிகள் பிராணசக்தியை அதிக அளவில் பிராணயாம பலத்தால் உட்செலுத்தித் தூங்கிக் கொண்டிருக்கும் குண்டலினியை எழுப்பி, இந்த ஆறு சக்கிரங்களிலும் முழு பலத்துடன் பரவச் செய்து, தலையிலுள்ள அகுலசக்கிரம் வரை செலுத்துகிறார்கள். சக்தியை இப்படி முழு பலத்துடன் பரவச் செய்வதால், மற்றவரால் அடையமுடியாத பல சித்திகளை யோகிகள் பெறுகின்றனர். சக்தி சிரசிலுள்ள ஸஹஸ்ரார பத்மம் என்ற அகுல சக்கிரத்தை முட்டும்போது, அங்குள்ள சக்தித் தேக்கம் வெண்ணெய்போல் உருகி, அமிருதமாகக் கசிந்து, கீழே நழுவி, உடல் முழுவதும் ஊடுருவிப் பாய்கிறது. ("ஸுதாதாராஸாரை: ... ... ப்ரபஞ்சம் ஸிஞ்சந்தீ—அமிருதத்தை மழைபோல் பொழிந்து பலதரப்பட்டதாக விரிந்த அறிவுலகை நனைக்கிறாய்"—ஸௌந்தரியலஹரீ சுலோகம் 10). இப்படி அமிருதமாகக் கசிவதே குலாம்ருதம். இந்த அமிருதத்தின் ஒரு சிறு திவிலையைத்தான் பொதுவாக நாம் பெறுகிறோம். அது எப்போதும் கசிந்து கொண்டிருக்கிறது. அதனால் அறிவு வற்றாமல் பாதுகாக்கப் பெறுகிறது. யோகி இதனை மழையாக அனுபவிக்கிறான். இந்த சக்தியைக் கொண்டுதான் குலஞானம் நமக்கு ஏற்படுகிறது. யோகிக்கு அந்தப் பேரொளியை நேராக உணரும் சக்தியும் உண்டு. நமக்கு அந்த ஒளியின் உதவிகொண்டு சிற்றறிவு பெறமட்டும் இயலும்.

1201-11 இந்த குலாம்ருதத்தில் தனித்த ஈடுபாடுகொண்டவள் தேவி. குல-அம்ருத-ஏக-ரஸிகா.

1201-12 மூலாதாரம் பிருதுவீதத்துவத்தின் இருப்பிடம், "கு"—பூமி. (பூமியின் பிள்ளை குஜன் கு—ஜன் = பூமியிலிருந்து பிறந்தவன்–செவ்வாய் கிரகம்) அந்த 'கு' பூமி தத்துவஸ்தானத்தில் "ல" தங்கியிருப்பது குலம்—குண்டலினீ. அது சுற்றிவருமிடம் குல சக்கிரங்களான ஆறும். அதன் முழு சக்தி வெளிப்படும்போது பெருகுவது குலாம்ருதம். அதைப் பெருக்கி யோகியைப் பேரானந்தத்தில் அமிழ்த்துவதில் மிகவும் சுவையுடன் ஈடுபடுபவளானதால் குலாம்ருதைக ரஸிகா. (90)

1202-01 குல – ஸங்கேத – பாலிநீ. குலத்தின் ரகசியங்களைக் காப்பவள்.

1202-02 குலம் என்ற சக்தி மிகவும் ரகசியமான இடத்தில் அடங்கியுள்ளது. அது உடல் முழுவதும் பரவிப் பல செயல்களை விளைவிக்கும் முறை நமது அறிவிற்கு அப்பாற்பட்டது, செயலின் விளைவை உணரலாம். அந்தச் செயல் விளையும் விதத்தை அறிய முடியவில்லை. இப்படி முழுதும் பயன்படாமல் உறங்கும் நிலையில் அது இருப்பது ஏன்? யோகி எப்படி இதனை எழுப்புகிறான்? எழுப்பப்பட்ட சக்தி எப்படி அத்தனை சித்திகளை அளிக்கிறது? என்பன போன்ற பல விவரங்கள் தெளிவற்ற முறையில் ஸங்கேத மொழியில் உபதேசிக்கப்பெற்றுள்ளன. யாருக்குப் புரிய வேண்டுமோ அவர்களுக்கு மட்டும் புரியுமாறு அமைந்ததும் கூறுபவனும் கேட்பவனும் முன்னர் அறிந்ததுமான மொழி ஸங்கேதம்—ரகசியமொழி. குலத்தை—குண்டலினி சக்தியைப் பற்றிய அறிவும் குலமே. அதற்கான ரகசிய மொழி குலசங்கேதம். அதனைத் தகுதியற்றவர்கள் புரிந்துகொள்ளாதபடி காப்பாற்றுபவள் தேவி – குல ஸங்கேத பாலிநீ.

1202-03 குண்டலிநீயைப் பற்றிய விரிவுரை கொண்ட நூல்கள் பல உண்டு. அதனைப் போதிக்கப் பல ஆசிரியர்களும் கிடைப்பார்கள். ஆனால் ஆசிரியன் போதித்தது மனத்தில் விளங்கவும் அதனை அடையும் வழிகளைப் பின்பற்றவும், சித்தி பெறவும் தேவியின் அருள் தேவை. (யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய:- "யாரை இறைவன் தகுந்தவன் எனத் தேர்ந்தெடுக்கிறானோ அவனே ஆசிரியன் உபதேசித்ததை அறிய முடியும்) ஏனெனில் அவள் அதை ரகசியமாகக் காப்பாற்றுகிறாள். அதனை விளக்க அவள் ஒருவளால் தான் முடியும். அந்த ஸங்கேத மொழியைத் தனக்கும் தன்னருள் பெற்ற சாதகனுக்கும் மட்டுமே புரியக்கூடியதாகத் தேவி அமைத்துக் கொண்டுள்ளாள். குலஸங்கேத பாலினீ. (91)

**1203-01** குல-அங்கநா. குலஸ்திரீயாக இருப்பவள்.

1203-02 குலத்தின் பெருமையையும் ரகசியங்களையும் அதன் அடிப்படையையும் அழியாமல் காப்பாற்றுபவள் குல—அங்கநா—குலஸ்திரீ, நற்குலத்தில் தோன்றி நற்குலத்தில் வாழ்க்கைப் பட்டுள்ள பதிவிரதை. குலத்தின் பெருமையும் சக்தியும் அவளைச் சார்ந்திருக்கும். அதுபோல் குலம் எனும் குண்டலினீ சக்தியையும் அதனைக் கூறும் சாஸ்திரங்களையும் அவைகளால் பெறப்பட்ட குலஞானத்தையும் குலாங்கனை போன்று காப்பவளான தால் தேவி குலாங்கநா. பதிவிரதை பிறர் கண்களில் படமாட்டாள். பிறர் கண்களில் படும்படியான சூழ்நிலையை அவளது குடும்பமும் ஏற்படுத்தக்கூடாது. அவளும் தன்னை அப்படிக் காப்பாற்றிக் கொள்ளவேண்டும். குடும்பமும் அவளை அப்படிக் காப்பாற்ற வேண்டும். அதுபோல்தான் இந்த குல சக்தியும் குல வித்யையும் குலஞானமும். அப்படி ஒரு குலப்பெண் இருப்பதனால் அவளிருக்கும் குடும்பமும் ஊரும் தேசமும் உலகும் நன்மைபெறும். குலரூபிணியான தேவியும் அப்படி குலஸ்திரீபோல் தன்னைக் காத்துக்கொள்வதாலும் பிறர் அப்படி அவளைக் காப்பாற்றுவதாலும் சாதகனுக்கும் அவனைச்சார்ந்த உலகிற்கும் நன்மை தருவாள்.

1203-03 ஸ்ரீவித்யை குலவித்யையாகும். மிக ரகசியமாகப் புனிதமாகக் காப்பாற்றப்படும் வித்யை. அதை அந்த குலத்தைச் சேர்ந்தவர் மட்டுமே அறியக்கூடும். பதிவிரதை பிறர் கண்களில் படாதிருந்தாலும் தன்னைச் சார்ந்தவர்களுடன் நெருங்கிப் பழகுவாள். (92)

**1204-01** குல-அந்தஸ்-ஸ்தா. குலத்தின் உள்ளே உறைபவள்.

1204-02 குலமெனும் குண்டலினியின் உள்ளே உறைபவள். அறிபவன், அறியப்படும் பொருள், அறிவு என்ற மூன்றைச் சார்ந்த குலஞானத்தினுள் பேரறிவாகத் துலங்குபவள். குல தந்திரங்களாகிற வழிபாட்டு முறை, யோகமுறை, அவைகளின் ரகசியங்கள் இவைகளைக் கூறும் நூல்களில், ரகசியமாக அவைகளால் அறியப்பெறும் பொருளாக இருப்பவள். எல்லா நற்குலங்களும் (குருகுலம், வம்சம் முதலியவைகளும்) விளங்க, அவைகளின் சக்தியாக உள்ளிருப்பவள். அப்படி ஒவ்வொரு வீட்டிலும் ஊரிலும் தேசத்திலும் உள் உறைபவள். (93)

**1205-01** கௌலிநீ. சிவனும் சக்தியும் சேர்ந்த வடிவினள்.

1205-02 குலம்—சக்தி. அதற்கு ஆதாரமாயிருப்பது, அதற்கு வேறுபட்டிருக்குமானதால் அகுலம் — சிவன். காமேசுவரனின் மடியில் காமேசுவரனை ஆதாரமாகக் கொண்டு விளங்குபவளல்லவா ? இப்படிக் குலமாயும் அகுலமாயும் உள்ள சக்தியும் சிவனும் ஒரே பொருள். ஒரே பொருள் இரண்டாகப் பிரிந்து தோன்றுவதையும், இரண்டிற்கும் இடையேயுள்ள தொடர்பையும் சிந்தித்து உணர்வது, கௌலமான ஞானம். அதனை உடையவள் கௌலிநீ.

1205-03 சிவ சக்கிரங்களையும் சக்தி சக்கிரங்களையும் (பாரா 0911-15) தனித்து உருவகப்படுத்தி அவைகளில் சிவனையும் சக்தியையும் பிரித்தும் இணைத்தும் வழிபடுவது கௌல சரியை; அதனை உடையவள் கௌலிநீ.

1205-04 குல சக்கிரங்களிலும் அகுலசக்கிரங்களிலும் இருக்கும் சிவசக்தி ரூபிணியான குண்டலிநீயாக யோகமுறையில் உணர்வது கௌலயோகம். அதனை உடையவள் கௌலிநீ.

1205-05 குலமெனும் சக்தி எப்போதும் சலனமுள்ளவள். அகுலம் எனும் சிவன் குலத்திற்கப்பாற்பட்டவர், குலத்தன்மை அற்றவர்—அசைவற்றவர். சிவனும் சக்தியும் சேரவேண்டுமானல் அசையாத சிவனை அசையும் சக்தி சென்றடைந்து அணைக்க வேண்டும். அதனல் சிவசக்திஸம்பந்தமென்பது சக்தி சிவனேடு இணைவதாக முடிவதால் அந்தத் தொடர்பை சக்தி சம்பந்தப்பட்டதென்று "கௌலம்" என்பர். அத்தகையத் தொடர்புள்ளவள் கௌலிநீ. வாக்தேவிகளில் ஒருவள் கௌலிநீ. (0214-13)

1205-06 ஸ்ரீ சக்கிரத்தில் தேவியை வெளிப்படையாக வழிபடும் முறையில் வழிபடுபவன், வழிபடப்படுபவள், வழிபாடு என்ற குலம் தோன்றுவதால் இந்த வழிபாட்டுமுறையை கௌலம் என்பர். அந்த கௌல வழிபாடுடையவள் கௌலிநீ. (94)

1206-01 குலயோகிநீ. குலத்துடன் தொடர்புள்ளவள்.

1206-02 குண்டலிநீ உறையும் மூலாதாரம் முதல் உள்ள ஆறு சக்கிரங்களுக்கும் சக்திக்கும் உள்ள தொடர்பாயிருப்பவள். அறிபவன், அறியப்படும் பொருள், அறிவு என்ற மூன்றின் தொடர்பைத் தரும் உள்ளறிவாக இருப்பவள். ஸ்ரீசக்கிர வடிவிலுள்ள தேவியை வழிபடுவதாகிற குலாசாரத்தை அமைத்துக்கொடுப்பவள்.

1206-03 யோக முறையில் அகுலத்துடன் குலத்தை இணைய விடுவது குலயோகம். அதனல் அடையப் பெறுபவள் குலயோகிநீ,

1206-04 நற்குலத்தில் பிறப்பெனும் யோகத்தை அருள் பவள். (95)

1207-01 அகுலா. குலத்திற்கப்பாற்பட்டவள்.

1207-02 குலமெனும் ஆறு சக்கிரங்கள் குண்டலினீ சக்தியின் வடிவம். காமேசுவரரின் மடியில் தேவி அமர்ந்துள்ளது போல், குல மெனும் குண்டலினீ சக்திக்கு மேலும் கீழும் இரு ஸஹஸ்ரார (ஆயிரம் இதழுள்ள)த் தாமரைகள் ஆதாரமாக உள்ளன. (பா. 1201-05) அவைகளே அகுலம் என்பர். இவை சிவனின் வடிவம். அந்த அகுலமாக இருப்பவளும் தேவியே. குலாசாரத்திற் கப்பாற்பட்டது அகுலாசாரம். அதுவே ஸமயாசாரம். ஸமயாசார மாக இருப்பவளும் அவளே.

1207-03 தோன்றுமிடம் (பெற்ருேர், வம்சம் முதலியவை) குலம் எனப்படும். அவள் பிறப்பற்றவளானதால் குலமற்றவள், அகுலா. [96]

1208-01 ஸமய - அந்தஸ் - ஸ்தா. ஸமயத்தினுள் விளங்கு பவள்.

1208-02 இதய வெளியில் சக்தியையும் சிவனையும் இணைத்துப் பாவனையால் வழிபடுவது ஸமயமாகும். வஸிஷ்டர், சுகர், ஸநகர், ஸநந்தநர், ஸநத்குமாரர் என்ற ஐவர் எழுதிய தந்திரநூல்களில் கூறியபடி அமைந்த வழிபாட்டு முறை 'ஸமயம்' எனப்படும். 'ஸம-ய-ஸம நிலையை அடைந்தவர். சக்தியும் சிவனும் ஸமநிலையை ஐந்து வகைகளில் அடைந்துள்ளார்கள். அப்படி ஸமநிலை அடைந்த சக்தியையும் சிவனையும் இதய வெளியில் பாவனை செய்து வழி படுவது 'ஸமயம்' ஆகும். ஆஜ்ஞா, விசுத்தி, அநாஹதம், மணிபூரகம், ஸ்வாதிஷ்டானம், மூலாதாரம் என்ற ஆறு சக்கிரங் களில் இவர்கள் ஸமநிலையை அடைகிருர்கள். இருக்குமிடம், பெயர், செயல், தொழில், நிறம் என்ற ஐந்து வகையிலும் ஒற்று மையைக் காட்டுகிருர்கள்.

1208-03 ஆஜ்ஞா சக்கிரத்தில் இருவரும் ஒரே இடத்தில் அமர்ந்திருக்கிருர்கள். இருவருக்கும் பரன் பரா என ஒரேவிதமான பெயர். இருவருக்கும் ஒளிமயமான வடிவம். இருவருக்கும் மோக்ஷத்தை அளிப்பது தொழில். இருவருக்கும் ஞானத்தால் நிறைவு பெற்று ஆனந்தமாய் அமர்ந்திருப்பது செயல். இப் படித் தேவியும் சிவனும் ஐந்து வகையில் ஒற்றுமையைக் காட்டு கிருர்கள். இருப்பிடத்தில் ஒற்றுமை (அதிஷ்டான ஸாம்யம்)

பெயர் ஒற்றுமை (நாமஸாம்யம்) நிற ஒற்றுமை (ரூபஸாம்யம்) தொழில் (function) ஒற்றுமை (அனுஷ்டான ஸாம்யம்) செயல் (deeds) ஒற்றுமை (அவஸ்தானஸாம்யம்) என ஐவகை ஒற்றுமை.

1208-04 விசுத்தி சக்கிரத்தில் ஒரே இடத்தில் அமர்ந்துள்ள அவர்களுக்குச் சிவன் சிவா எனப் பெயர். ஸ்படிக நிறம், உலகைப் படைக்க முற்பட்டு ஆகாசத்தைத் தோற்றுவித்தது தொழில், இருட்டை விலக்குவது செயல் என்று ஒற்றுமை உண்டு.

1208-05 அநாஹதத்தில் ஹம்ஸன், ஹம்ஸீ என்ற பெயர், வெண்ணிறம், வாயுவைத் தோற்றுவித்தல் தொழில், வித்யைகளைப் பரப்புதல் செயல் என்ற ஒற்றுமை உண்டு.

1208-06 மணிபூரகத்தில் தடித்வான், தடித்வதீ என்ற பெயர், மின்னல் நிறம், ஜலத்தைப் படைத்தல் தொழில், தாபத்தைக் குறைப்பது செயல் என்ற ஒற்றுமை உண்டு.

1208-07 ஸ்வாதிஷ்டானத்தில் மஹான் மஹதீ என்ற பெயர், நெருப்பு நிறம், நெருப்பைப் படைத்தல் தொழில், உலகை எரிப்பது செயல் என்ற ஒற்றுமை உண்டு.

1208-08 மூலாதாரத்தில் ஸமயன், ஸமயா என்ற பெயர், சிவப்பு நிறம், இந்தப் பரந்த உலகிற்குத் தாயும் தந்தையு மாயிருப்பது தொழில், நடனம் செயல் என்று ஐந்து வகையிலும் ஒற்றுமை உண்டு.

1208-09 இப்படி இவர்களிடையே உள்ள ஒற்றுமையைப் பாவனையால் உணர்வது ஸமய முறையின் நோக்கமாகும். சிவனுக்கும் சக்திக்கும் இடையே எவ்வகையிலும் பேதத்தை உணராமல் இருவரையும் தியானத்தின் மூலம் வழிபடும் முறை ஸமயம். அதனுள் அதன் லட்சியமாக விளங்குபவள் தேவி. [97]

1209-01 ஸமய-ஆசார-தத்-பரா. ஸமயாசாரத்தில் ஈடுபாடு உள்ளவள்.

1209-02 ஸமய முறையில் வழிபடும் முறை பின் வருமாறு—குருவருளால் மந்திர தீக்ஷை பெற்றவன், ரஸவாதத்தால் செம்பு தங்கமாவதுபோல், பாவனையால் தேவியாக ஆகிறான். மூலாதாரம் முதல் ஸஹஸ்ராரம் வரை தேவி பரவி நிற்பதை உணர்கிறான். அந்த பாவனையிலேயே அவளை வழிபடுகிறான். மூலாதாரத்தில் தனியே உறங்கிக் கொண்டிருந்த தேவி எழுகிறாள். தன் தனித்த இருப்பிட மான ஸ்வாதிஷ்டானத்தில் தன்னைச் சீர்படுத்திக்கொண்டு அழகி

யாக மணிபூரகத்தில் பிறர் அறிய வெளிப்படுகிருள். அங்கு ஸாதகன் அளிக்கும் பாத்யம் முதல் பூஷண தாரணம் வரை உள்ள 47 உபசாரங்களை (நா. 235) ஏற்றுத் தன் பரிவாரங்களுடன் ரத்ன பீடத்தில் அமர்கிருள். அங்கிருந்து அநாஹதம் சென்று தாம்பூல தாரணம் வரையிலுள்ள வழிபாடுகளை ஏற்கிருள். விசுத்தியில் ஆரத்தி வழிபாடுகளை ஏற்று, ஆஜ்ஞையில் நீராஜனம் பெற்று மற்ற உபசாரங்கள் முடிந்ததும் ஸஹஸ்ரார கமலத்தில் நுழைந்து திரையினுள் சிவனுடன் ஆனந்தமாக இருந்தபின், சிவனை விட்டுவிட்டுத் திரும்பி மூலாதாரத்தை அடைந்து அங்கு மறைகிருள். இப்படி சித்சக்தியின் லீலையை அனுபவிப்பதே ஸமயாசாரம்.

1209-03 புற உபகரணங்களின்றி மனத்தில் ஸ்ரீசக்கிரத்தைப் பாவித்து அதில் தேவியை வழிபடுபவன் கிரமமாக முன்னேறி, சிவ சக்திகளின் ஐக்யத்தை உணர்ந்து அதன் வழியே குரு, மந்திரம், தேவி, ஸ்ரீசக்கிரம், உபாஸகனுகிய தான் என்ற ஐந்தின் ஐக்கியத்தையும் அனுபவிக்கிருன். அப்போது மூலாதாரம் முதல் ஸஹஸ்ராரம் வரை உள்ள சக்கிரங்களே ஸ்ரீசக்கிரத்தின் 9 ஆவரணங்களாக பாவனை செய்யப்படுகின்றன. அங்கு உலவும் குண்டலினீ சக்தியே தேவியாகவும், அவளது தோற்றத்தில் முகம், உடலின் நடுப்பகுதி, கீழ்ப்பகுதியாக மந்திரத்தின் மூன்று கூடங்களும் ஒற்றுமை பெற மற்ற ஒற்றுமைகளும் தானே ஏற்பட்டு ஐக்யானுஸந்தானம் என்ற ஸமயம் சித்திக்கிறது. (ஐக்ய-அனு சந்தானம்-ஒற்றுமை பற்றிய நெடுஞ்சிந்தனை) இத்தகைய ஸமயாசாரததில் மிக்க ஈடுபாடு கொண்டவள் தேவி. (98)

38 मूलाधारैकनिलया ब्रह्मग्रन्थिविभेदिनी । 100
मणिपूरान्तरुदिता विष्णुग्रन्थिविभेदिनी ॥ 102

மூலாதாரைக நிலயா ப்ரும்ஹக்ரந்திவிபேதிநீ ।
மணிபூராந்தருதிதா விஷ்ணுக்ரந்திவிபேதிநீ ॥

1210-01 மூலாதார-ஏக-நிலயா. மூலாதாரத்தையே தன் ஒரே இருப்பிடமாகக் கொண்டவள்.

1210-02 குண்டலினீ சக்தியின் இருப்பிடம் மூலாதாரம். பல தோற்றங்களில் உணரப்படும் சக்தி அனைத்திற்கும் மூலமானது குண்டலினீ. அதற்கு ஆதாரம், ஆஸனத் துவாரத்தின் அருகில் அமைந்த இந்த மூலாதாரம் எனும் சக்கிரம். பூமிதத்துவத்தாலானது. நான்கு தளங்களுள்ளது. மூலசக்தி உலவும் ஸுஷும்நா

நாடிக்கும் இதுதான் ஆதாரம். தேவியின் குண்டிலினீ வடிவிற்கு ஏக-முக்கியமான, தனித்த-சிறப்புள்ள, நிலயம்-பிறர் கண்களில் படாமல் ஒய்வுபெறும் இடம். அங்கு ஆதாரசக்தியாக விளங்குபவள் தேவி. நாலிதழ் கமலத்தின் நடுவே அமைந்த குலகுண்டத்தினுள் மூன்றரை சுற்றுகளாகத் தன் உடலைச் சுற்றிக்கொண்ட பாம்பின் வடிவில் குண்டலினீ சக்தி உறங்குகிருள் என்பர். (99)

1211-01 ப்ரம்ஹ-க்ரந்தி-விபேதிநீ. பிரும்மக்கிரந்தியைப் பிளந்து செல்பவள்.

1211-02 மூலாதாரம் பூமி தத்துவத்திற்கும், ஸ்வாதிஷ்டானம் ஜலதத்துவத்திற்கும், மணிபூரகம் அக்னிதத்துவத்திற்கும் அநாஹதம் வாயு தத்துவத்திற்கும் விசுத்தி ஆகாச தத்துவத்திற்கும் ஆஜ்ஞா மனத்தத்துவத்திற்கும் இருப்பிடம். *

1211-03 சக்கிரங்கள் ஒளிமயமானவை. மூலாதாரத்தையும் ஸ்வாதிஷ்டானத்தையும் அக்னிகண்டம் எனவும், மணிபூரகத்தையும் அநாஹததையும் ஸூர்யகண்டம் எனவும், விசுத்தியையும் ஆஜ்ஞையையும் சந்திரகண்டம் எனவும் கூறுவர். அக்னி கண்டம் படைப்புத தொழில் கொண்ட பிரும்மனது ஸ்தானமான ஸ்ருஷ்டி சக்கிரங்களடங்கியதாகும். ஸூர்யகண்டம் காத்தலைத் தொழிலாகக் கொண்ட விஷ்ணுவின் ஸ்தானமான ஸ்திதி சக்கிரங்களடங்கியதாகும். சந்திரகண்டம் ஒடுக்குதலைத் தொழிலாக கொண்ட ருத்திரனின் ஸ்தானமான ஸம்ஹார சக்கிரங்களடங்கியதாகும்.

1211-04 ஸமயாசார முறையில் இந்த ஆறு சக்கிரங்களையே ஸ்ரீசக்கிரமாய் பாவிப்பது உண்டு. அப்போது ஸ்ருஷ்டி சக்கிரத்தை சதுரச்ரம், ஷோடசதளம், அஷ்டதளம் என்ற மூன்று ஆவரணங்களாகவும், ஸ்திதி சக்கிரத்தை சதுர்தசாரம், பஹிர்தசாரம், அந்தர்தசாரம் என்ற மூன்று ஆவரணங்களாகவும், ஸம்ஹாரசக்கிரத்தை அஷ்டகோணம், திரிகோணம், பிந்து என்ற மூன்று ஆவரணங்களாகவும் பாவனை செய்வர். (பாரா-0911-16-27)

* மணிபூரகம் ஜலத் தத்துவத்திற்கும் ஸ்வாதிஷ்டானம் அக்னி தத்துவத்திற்கும் ஸ்தானம் எனச் சில யோக நூல்கள் கூறும். இதனையொட்டியே ஸௌந்தரியலஹரியில் 39-40 சுலோகங்கள், இந்த இரண்டு சக்கிரங்களில் தியானம் கூறும் வரிசையில் அமைந்தன எனக் கூறுவர். மணிபூரகத்தை ஸ்வாதிஷ்டானம் என்றும், ஸ்வாதிஷ்டானத்தை மணிபூரகம் என்றும் பெயர் மாற்றிக் கூறுவது உண்டு எனச் சிலர் இதற்கு விளக்கம் தருவர்.

1211-05 குண்டலிநீ மூலாதாரத்திலிருந்து கிளம்பி இந்த ஆறு சக்கிரங்கள் வழியே மேல் ஏறும்போது இரு சக்கிரங்களுக் கிடையே உள்ள முடிச்சு போன்ற மிகக் குறுகிய துவாரங்கள் வழியே செல்லவேண்டும். அவைகளைக் கிரந்தி என்பர். மூலா தாரத்தைத் தாண்டி குண்டலினீ சக்தியானது ஸ்வாதிஷ்டானத்தி னுள் செல்லும்போதும், ஸ்வாதிஷ்டானத்தைத் தாண்டி மணிபூர கத்தினுள் செல்லும்போதும் கிரந்திகளைப் பிளந்து, தான் செல்ல வழி அமைத்து நுழைந்து மேலேறவேண்டும். பிரும்மஸ்தானத்தில் அமைந்துள்ளவை ஆனதால் இவை பிரும்மக் கிரந்திகள் எனப் படும். (கிரந்த் என்ற வினைச்சொல் விரிவானதாக 'இருந்ததை இறுக்கி அளவில் குறுக்குவது எனப் பொருளுள்ளது. அதனால் நூல்களைக் குறிப்பிடும் கிரந்தம் என்ற சொல், மிகவும் விரிவான பொருளைச் சிறிய நூல் வடிவில் இறுக்கி முடிச்சு உருவில் அடைத் திருப்பதைக் குறிக்கும். அதனை மேலும் இறுக்கப் பயன்படுவது ஸூத்திரம்—முறுக்கேற்றப்பட்ட வலிவுள்ள நூல், அதனை ஒத்தவை ஸூத்திரங்கள்.)

1211-06 மேலேறும் குண்டலினீ சக்தி பிடிப்பில்லாததால் திடீ ரென நழுவாமல் இருக்கவும், மேலே ஏறுவதற்குள்ள வேகம் ஏற்படாத நிலையில் தானே மேல் ஏருமல் இருக்கவும் இந்தக் கிரந்திகள் பயன்படுகின்றன. (உஷ்ணமானியில் பல்பில் (குண்டத் தில்) அமைந்த பாதரஸம் மேல் டிகிரியைக் காட்டச் சூடேறிக் கிளம்புமிடத்தில் பாதரசம் செல்லும் பாதை நன்கு குறுகியிருக்கும். பாதரஸம் சூடேற்றப் பெருமல் தானே டிகிரி குறித்துள்ள இடங் களுக்குச் செல்வதை இந்தக் கிரந்தி தடுக்கும். ஏறிய பாதரஸம் தானே (உதறினுலின்றி) இறங்காமல் இருக்கவும் இது உதவும். அதுபோல் இங்கும் கொள்ளலாம்.)

1211-07 ஸாதகன் பிராணுயாமபலத்தால் வாயு-அக்னிபலத் தைப் பெருக்கித் தூங்கும் குண்டலினியை உசுப்பி எழுப்பி ஸ்வாதிஷ்டான சக்கிரத்தினுள் செல்லும்படி தூண்டும்போது இந்த கிரந்தி அமைப்பைப் பிளந்துத் துவாரம் அமைத்துக்கொண்டு குண்டலினி மேல் செல்லுகின்றது. இப்படி ஸ்வாதிஷ்டானத்தின் இருபுறங்களிலும் அமைந்த பிரும்ம கிரந்தியைப் பிளப்பவள் குண்டலினி சக்தி வடிவிலுள்ள தேவி. ஸ்ருஷ்டி எனும் வாஸனையி லிருந்தும் ஸாதகனைக் கடத்துவிப்பவள். [100]

**1212-01** மணிபூர- அந்தர்-உதிதா.· மணிபூரகத்தின் உள்ளே வெளிப்பட்டவள்.

1212-02 நாபிக்கு அருகில் ஸுஷும்நாகாண்டத்தில் உள்ள சக்கிரம் பத்து தளமுள்ள தாமரைவடிவில் உள்ளது. ஸூர்யகண்டம், விஷ்ணுவின் ஸ்தானம், ஸ்திதி சக்கிரம் என்று பல பெருமைகள் உள்ளது. ரத்தினங்கள் பதித்த அலங்கார மண்டபமாகிய மணி பூரகத்தினுள் எல்லா ஆபரணங்களும் பூண்டு அழகாக வெளிப் படுபவள் தேவி. (1201-09, 1209-02) (101)

1213-01 விஷ்ணுக்க்ரந்தி-விபேதிநீ. விஷ்ணுக்கிரந்தியைப் பிளப்பவள்.

1213-02 மணிபூரகத்திலிருந்து அநாஹதத்திற்குச் செல்லும் போதும், அநாஹதத்திலிருந்து விசுத்திக்குச் செல்லும்போதும் இடையேயுள்ள மிகக் குறுகிய பாதை விஷ்ணுக்கிரந்தி எனப்படும். அந்த இரு கிரந்திகளையும் பிளந்து வழி ஏற்படுத்திக்கொண்டு குண்டலினியாக மேல் எழும்புகிருள் தேவி. ஸ்திதி-வாஸனையி லிருந்தும் ஸாதனைகளைக் கடத்துவிப்பவள். (102)

39 आज्ञाचक्रान्तरालस्था रुद्रग्रन्थिविभेदिनी । 104
सहस्राराम्बुजारूढा सुधासाराभिवर्षिणी ॥ 106

ஆஜ்ஞாசக்ராந்தராளஸ்தா ருத்ரக்க்ரந்திவிபேதிநீ ।
ஸஹஸ்ராராம்புஜாரூடா ஸுதாஸாராபிவர்ஷிணீ ॥

1214-01 ஆஜ்ஞா-சக்ர-அந்தரால-ஸ்தா. ஆஜ்ஞாசக்கிரத்தின் நடுவில் உள்ளவள்.

1214-02 புருவ மத்தியின் அருகே ஸுஷும்நாகாண்டத்தில் இரு தளங்களுள்ளதாக அமைந்தது ஆஜ்ஞா சக்கிரம். இது சந்திர கண்டம், ஸம்ஹார சக்கிரம், ருத்திரஸ்தானம். இங்கு குண்டலினீ சக்தியின் சிறு பகுதிமட்டும் சில நொடிகள் மட்டும் மின்னல் கொடி போல் உணரப்படுவதால் (ஆ-சிறிது, ஜ்ஞா-புலப்படுவது) இந்த சக்கிரம் ஆஜ்ஞாசக்கிரமாகும். அதன் இடையே விளங்குபவள். (பாரா. 1201-09, 1209-02) (103)

1215-01 ருத்ரக்க்ரந்தி-விபேதிநீ. ருத்திரக்கிரந்தியைப் பிளப்பவள்.

1215-02 விசுத்தியிலிருந்து ஆஜ்ஞைக்கும், ஆஜ்ஞையி லிருந்து ஸஹஸ்ராரத்திற்கும் செல்லும்போது நடுவே உள்ள குறுகிய துவாரங்கள் ருத்திரக்கிரந்திகள். இவைகளைப் பிளந்து கொண்டு மேல் எழும்பி ஸஹஸ்ராரத்தினுள் செல்பவள் தேவி. ஸம்ஹாரவாஸனையிலிருந்தும் கடத்துவிப்பவள். (104)

**1216-01** ஸஹஸ்ர-அர-அம்புஜ-ஆரூடா. ஆயிரம் தளங்களுள்ள தாமரையில் ஏறி நிற்பவள்.

1216-02 ஸமயாசாரப்படி வழிபாடுகளை ஏற்ற தேவி சிவனுடன் சேர ஆஜ்ஞா சக்கிரத்திற்கு அடுத்திருந்த ருத்திரக்கிரந்தியைப் பிளந்துகொண்டு ஸஹஸ்ராரத்தில் நுழைகிருள். ஸஹஸ்ரம்—ஆயிரம். அர—தளங்களுள்ளது இந்த சக்கிரம். இது ஸதாசிவனுடைய ஸ்தானம். தளங்கள் சக்தி வெளிப்படும் பாதைகளைக் குறிக்கும். ஆயிரம் என்பது ஆயிரக்கணக்கான—எண்ணற்ற—என்ற பொருளைத் தரும். கணக்கிடமுடியாத வழிகளில் சக்தி ஸஞ்சரிக்கும் இடம் இது. இங்கு தேவி எண்ணற்ற லீலாவிபூதிகளுடன் காமேசுவரனது மடியில் விளங்கிக்கொண்டிருக்கிருள்.

1216-03 சந்திரனது 15 கலைகள் நமது நோக்கில் அழிந்து வளரும் தன்மை படைத்தவை. கலை என்பது பதினறில் ஒரு பங்கு. 15 கலைகளை நாம் காண்கிருேம். பதினருவது கலை அழியாத் தன்மை படைத்தது. ஸதா—எப்போதும் இருப்பது. அதனுல் ஸாதாகலை. அந்த ஸாதா கலை கொண்ட சந்திரனது கண்டம் ஸஹஸ்ராரம். ஸதாசிவனது தொழிலான அனுக்கிரஹம் துலங்கும் ஸ்தானம் அனுக்கிரஹகண்டம். அங்கு விளங்குபவள் தேவி. (105)

**1217-01** ஸுதா-ஆஸார-அபிவர்ஷிணீ. அமிருதப் பிரவாஹத்தைப் பொழிபவள்.

1217-02 ஸஹஸ்ராரத்தின் கணக்கற்ற இதழ்களில் சிவாமிருதம் நிரம்பி நிற்கிறது. பரமசிவனது மடியில் வீற்றிருக்கும் தேவி தன் சரணங்களின் கிரணங்களை அதில் தோய்த்து ஒளி பாய்ச்சுகிருள். கிரணங்கள் மூலம் வெளியாகும் அம்ருதம் பெருமழை (ஆஸாரம்) போல் நம்மை உள்ளும் புறமும் நனைத்துக் குளிர்விக்கிறது. சரீரத்திலுள்ள எல்லா நாடிகளிலும் அதன் பிரவாகம் கரைபுரண்டோடுகிறது. ஸ்தூல-ஸூக்ஷ்ம-காரண சரீரங்களில் சிவாமிருதம் பெருகிப் பிரவாகமாக ஓடுமளவில் அமிருதமழை பொழிபவள் தேவி. குண்டலினீ சக்தி மூலாதாரத்திலிருந்து கிளம்பி ஸஹஸ்ராரத்தை அடைந்ததும் இதுகாறும் கோடியில் ஒரு பங்குக்கும் குறைவாகவே உணரப்பட்டிருந்த அதன் சக்தி பெருக்கெடுத்து எல்லா முனைகளிலும் பாய்ந்தோடும் உணர்வு ஏற்படுகிறது. (106)

40 **तटिल्लतासमरुचिः षट्चक्रोपरिसंस्थिता ।** 108
**महासक्तिः कुण्डलिनी बिसतन्तुतनीयसी ॥** 111

தடில்லதாஸமருசி: ஷட்சக்ரோபரிஸம்ஸ்திதா ।
மஹாஸக்தி: குண்டலிநீ பிஸதந்துதநீயஸீ ॥

1218-01 தடித்-லதா-ஸம-ருசி:. மின்னல்கொடி போன்ற ஒளியுள்ளவள்.

1218-02 குண்டலினீ சக்தியின் பெருக்கை உணர்பவன் அதன் முழு உருவத்தையும் ஒளியையும் எப்போதும் உணர்வதில்லை. வானின் அநந்தமான மின் சக்தியின் ஓரம்சத்தை மின்னல் ஒரு நொடிப் பொழுது வெளிப்படுத்துகிறது. மெலிந்த கொடி போன்ற மின்னலைப் போல் தேவி பேரொளியுடன் வெளிப்படுகிறாள். அந்த நொடிப் பொழுதிலும் அந்த மெலிந்த தோற்றத்திலும் கூட அவளை உற்றுப் பார்க்கமுடியாது. அந்தப் பேரொளி தன்னை வெளிக்காட்ட அப்படி மின்னலைப்போல் வெளியாகிறது. யோகிகளாலும் கூட சில கணப் பொழுதளவில் மட்டுமே காணப்பட்ட பேரொளி வடிவமுள்ளவள் தேவி. [107]

1219-01 ஷட்-சக்ர-உபரி-ஸம்ஸ்திதா. ஆறு சக்கிரங்களுக்கும் மேல் இருப்பவள்.

1219-02 மூலாதாரம் முதல் ஆஜ்ஞை வரையிலுள்ள ஸ்தானங்கள் (குலசக்கிரங்கள்), அவள் மேலே செல்லும்போது கணநேரம் தங்குவதற்கான இடங்களாகும். அவள் எப்போதும் தங்கியிருக்குமிடம் மூலாதாரத்திற்குக் கீழும் ஆஜ்ஞாசக்கிரத்திற்கு மேலும் அமைந்த அகுலமெனும் (இந்த ஆறு சக்கிரங்களின் ஆளுகைக்கு உட்படாத) ஸஹஸ்ரார கமலங்களாகும். அவள் தனித்திருப்பது மூலாதாரத்திற்குக் கீழ் உள்ள அகுல ஸஹஸ்ராரத்தில்; (பாரா. 1201-05) சிவனுடன் சேர்ந்திருப்பது ஆஜ்ஞைக்கு மேலுள்ள அகுல ஸஹஸ்ராரத்தில்; இவ்விரு இடங்களில் அவள் நிலைத்திருப்பாள். (ஸம்-நன்கு, ஸ்திதா-நிலைத்திருப்பவள்) (108)

1220-01 மஹா-ஆஸக்தி: உற்சவமாகக் கொண்டாடப்படும் வழிபாட்டில் ஈடுபாடுள்ளவள்.

1220-02 மஹ: – உற்சவம், ஆஸக்தி:—ஈடுபாடு. ஸஹஸ்ரார கமலத்தில் சிவனுடன் அமர்ந்துள்ள தேவியை எல்லா தேவதைகளும் பெருங்கொண்டாட்டத்துடன் வழிபடுவார்கள். எல்லையற்ற சக்தி மழை பொழியும் தேவியின் பார்வையில் நனைந்து திளைத்து ஆனந்தம் கொண்ட தேவர்கள் உற்சவமாகக் கொண்டாடுகையில் அதில் லயித்துத் தன்வசமிழந்தவள் போல் தேவி ஈடுபாட்டைக் காட்டுவாள். உற்சவத்தில் ஈடுபாடு அவளுக்கு உண்டென்பதை

யறிந்து, எளிதில் அதனைக்கொண்டு அவளைத் திருப்திப்படுத்தலாம். மஹா-ஆஸக்தி : பெருத்த நாட்டம் உள்ளவள். ஸக்தி :- சேர்க்கை. அவளது சேர்க்கை அணுவிலும் காணப்படுமானதால் எங்கும் பரவிய சேர்க்கையைப் பெருமளவில் கொண்டவள். (109)

**1221-01** குண்டலிநீ.-குண்டலம் போன்று சுற்றி வளைந்திருக்கும் வடிவமுள்ளவள்.

1221-02 மூலாதாரத்தில் அடங்கி நிற்கும் குண்டலிநீ சக்தி பாம்பு தன் உடலைச் சுருட்டி வளையமிட்டுப் படுத்திருப்பது போல் காணப்படுகிறுள். பாம்பு ஓய்வெடுத்துக் கொள்ளும்போதுத் தன் உடலைச் சுருட்டி வளையம்போலாக்கிப் பெருமூச்சு விட்டுக்கொண்டு உறங்கும். பெருமூச்சால் ஏறி இறங்கும் விலாப்புறங்களைக் கொண்டு அது அயர்ந்திருப்பதை உணரலாம். மூன்றரைச் சுற்றுள்ள வளையங்களிட்டு இவள் விடும் மூச்சே பிராண சக்தி. பெண் பாம்பின் உருவில் இவளைத் தியானிப்பர்.

1221-03 சிவலிங்கத்திற்கு நாகாபரணம் சாற்றுவது உண்டு. குண்டலிநீ யோகத்தால் எழுப்பப் பெற்ற குண்டலிநீ என்ற பாம்பு ஸஹஸ்ராரம் சென்று அங்குள்ள சிவனைத் தன் உடலால் சுற்றிக் களிப்பு மேலீட்டால் சிவன்மேலும் படமெடுத்துக் குடைபிடித்து ஆடுகிறது என்பதை நாகாபரணம் உருவகப்படுத்துகிறது. அதுவும் மூன்றரைச் சுற்றுள்ளதாக அமைக்கப்பட்டிருக்கும். (மூன்று சுற்றும் சில இடங்களில் காணப்படும்.)

1221-04 குண்டலினீயின் பெருமூச்சு எப்போதும் உணரப் படும். இரு காதுகளையும் அடைத்து மனத்தை ஸுஷும்னுகாண்டத்தில் செலுத்தினுல் இந்த பிராணசக்தியின் நாதத்தைக் கேட்கலாம். அந்தப் பிராண நாதம் கேட்காவிடில் முடிவு நெருங்கி விட்டதென உணர்வர்.

1221-05 வாக்பவபீஜம் எனப்படும் ஐம் என்ற பீஜாக்ஷரத்திற்குக் குண்டலினீ என்ற பெயர் உண்டு. அந்த வடிவிலும் உள்ளவள் தேவி. (110)

**1222-01** பிஸ-தந்து-தநீயஸீ. தாமரைநூல்போல் மிக மெல்லியவள்.

1222-02 மின்னல் கொடிபோன்று பேரொளியாகக் கணப்பொழுது எப்போதோ காணப்படுவாள் (தடில்லதாஸமருசி:) என்ற நிலைமாறி, யோகி தீவிரமாக ஸாதனையில் ஈடுபட்டால், தாமரைத் தண்டின் நடுவில் காணும் வெண்மையான தூய்மை மிக்க நூல் போல் குளிர்ந்த மிகமெல்லிய உருவத்துடன் காணப்படுவாள்.

1222-03 மூலாதாரத்தில் உறங்கும் குண்டலினியை எழுப்பியதும், தூங்கிக்கொண்டிருக்கும் சிறுமி, எழுப்பப்பட்டதால் ஏற்பட்ட ஆத்திரத்தில் அழுது புரண்டு நிலைகொள்ளாதிருப்பது போல் காணப்படுகிறாள். அதனால் அந்நிலையிலுள்ள குண்டலினியைக் குமாரீ என்பர். எழுப்பப்பட்ட காரணத்தை அறிந்து சமாதானப் படுத்தப்பெற்று சிவனாகிய பதியை அடைவதன் அவசியத்தை உணர்ந்து சுறுசுறுப்புடன் இயங்கும் யுவதிபோல் குண்டலினீ ஆஜ்ஞா சக்கிரம் வரை செல்கிறாள். அதனால் அந்நிலையில் தருணீ, யுவதீ என அழைக்கப் பெறுகிறாள். ஸஹஸ்ராரத்தில் சிவனுடன் இணைந்ததும் பதிவிரதையாக அவரைச் சுற்றிச் சுற்றி வந்து அவரை அடைந்த ஆனந்தத்தில் திளைத்து நிற்கிறாள், பதிவிரதையைப் போல். அதனால் அந்நிலையில் குண்டலினியைப் பதிவிரதை என அழைப்பர். குமரியாக மின்னல் போல் குதித்த குண்டலினி பதிவிரதையாகித் தாமரை நூல்போல் நெகிழும் வடிவைப் பெறுகிறாள்.

1222-04 குலாம்ருதைகரஸிகா என்ற 90-ஆம் நாமத்தில் ஆரம்பித்த தேவியின் குண்டலினீ ஸ்வரூப வர்ணனை இத்துடன் நிறைவு பெறுகிறது. (111)

# அதிகாரம் 13

# பக்திக்கு வசப்படும் தேவி

41 भवानी भावनागम्या भवारण्यकुठारिका । 114
भद्रप्रिया भद्रमूर्तिर्भक्तसौभाग्यदायिनी ॥ 117

பவானீ பாவநாகம்யா பவாரண்யகுடாரிகா ।
பத்ரப்ரியா பத்ரமூர்த்தி: பக்தஸௌபாக்யதாயினீ ॥

1301-01 பவாநீ. பவனது பத்தினி.

1301-02 பவன் பரமசிவன். சிவன் உலகைப் படைக்கிறார். அவரிடமிருந்து உலகம் தோன்றுவதால் அவர் பவ:—பவன். (உலகைக் காப்பாற்றும் நிலையில் அவர் ம்ருட:—மிருடன், இதமாக வருடுபவர். உலகைத் தன்னுள் ஒடுக்கும்போது ஹர:—ஹரன்.) பவனது மனைவி—பவாநீ.

1301-03 சிவனுக்கு பஞ்சபூதங்கள் ஸூர்யன் சந்திரன் யஜமானன் [வேள்வி புரிபவன்] என்று எட்டு வடிவங்கள் உண்டு. அவைகளில் ஜலவடிவில் உள்ளவர் பவன். அவரது மனைவி பவானீ.

அந்தத் தோற்றத்தில் உஷா என்று தேவிக்குத் தனித்துப் பெயர் உண்டு. மனைவி கணவனை வாழவைப்பவள். பவனை வாழவைப்ப தால் [பவம் ஆநயதி இதி] பவாநீ என்ற பெயர் அமைகிறது. உலகை வாழவைப்பது ஜலம். அதன் வடிவிலுள்ள சிவனை வாழ வைப்பவள் தேவி.

1301-04 உலகம் தோன்றி விரிவடையக் காரணமாயிருப்ப தால் மன்மதன் 'பவன்' ஆகிறான். அவனை வாழவைத்தவள் தேவி. அதனால் பவாநீ. பவன் என்ற பிறப்புள்ளதனைத்தையும் வாழவைப் பவள் பவாநீ. பவம் என்பது ஸம்ஸாரம். பிறந்து பிறந்து மறையும் பாங்குடையது. அதில் ஜீவசக்தியாக நின்று கடைத்தேற உதவு பவள் பவாநீ. ஸ்தானேசுவரக்ஷேத்திரத்தில் உறைபவள் பவாநீ என்ற திருநாமம் கொண்டவள். [112]

1302-01 பாவநா-கம்யா. பாவனையால் அடையத்தக்கவள்.

1302-02 எதனை வழிபடுகிறோமோ அதன் வடிவமாகவே ஆகிவிடுவது பாவனை. சொல்லால் மட்டும் 'நான் அதுவாக ஆகிவிட்டேன்' என்று முதலில் பேசிப் பின் உணர்வாலும் அது வாகித் தனக்கும் அதற்கும் பேத உணர்வின்றித் தன்மயமாகி விடுதல் பாவனை. முதலில் வழிபடுபவனாகத் தான் இருந்து, வழி பாட்டிற்குரியவளாகத் தேவியைக் கொண்டு, வழிபாடு என்ற கிரியையை அமைத்துக்கொண்ட பக்தன் வழிபாட்டின் இறுதியில் தேவியாகத் தான் ஆகிவிட்டதாக, சப்த-பாவனையாக வாயால் சொல்லிக் கொண்டான். பின்னர் இந்த ஸகுண உபாஸனையின் பலத்தாலேயே, வழிபடும் தான், வழிபாட்டிற்குரிய தேவி, வழிபாடு, என்ற மூன்றும் உணர்விலிருந்து மறைந்து மூன்றும் ஒன்றேயாகிய உணர்வாக மாறினான். இது அர்த்த பாவனை [பொருளாலும் அது ஆகிவிடுவது.] இந்த பாவனையால் மட்டும் அடையத் தக்கவள் தேவி. [113]

1303-01 பவ-அரண்ய-குடாரிகா. ஸம்ஸாரமெனும் காட்டைச் சிதைக்கும் கோடரி.

1303-02 பவம் எனும் ஸம்ஸாரம் ஒரு பெருங்காடு. ஸம் ஸாரத்தில் பிறப்பும் உண்டு. இறப்பும் உண்டு. ஆனால் பிறப்பு தான் கண்களில் படுகிறது. இறப்பைவிடப் பிறப்பே முக்கியத்துவம் வாய்ந்தது. பிறப்பதால் தானே மனிதன் அழிகிறான். அதனால் ஸம்ஸாரத்தை 'பவம்' 'பிறவி' என்றே குறிப்பிடுகிறோம். பிறவி ஒரு பெருங்காடு. காட்டினுள் நுழைந்த பிறகே காட்டினுள் நுழைந்துவிட்ட உணர்வேற்படுகிறது. எங்கே நுழைந்தோம்,

எங்கே இருக்கிறோம், எங்கே செல்வோம் என்பதனை அறிய முடிய வில்லை. அதன் முடிவும் தெரியவில்லை. நம்மை வழி தெரியாமல் சுற்றிச் சுற்றி வரச் செய்து களைக்கச் செய்கிறது. ஸம்ஸாரமும் அத்தகைய காடுதான்.

1303-03 காடு என்பது மரங்கள்தான். மரங்களைத் தவிர வேறு அல்ல. ஒவ்வொரு மரத்தையும் அழித்தாலன்றி காடு அழியாது. பிறர் உதவி நாடாமல் தானே மரங்களைச் சிதைக்க முற்படுபவனுக்கு தேவி கோடரியாக நின்று உதவுகிறாள். பிறப் பைத் தரும் விஷய சுகத்தில் நாட்டம் எனும் மரங்களை அறிவெனும் கோடரியாக நின்று அழித்துக் காடாகத் தோன்றி பயமுறுத்திக் கொண்டிருந்த ஸம்ஸாரத்தை மாய்த்து விடுகிறாள் தேவி. மரங்கள் அழிந்ததும் ஸம்ஸாரமாகிய காடு தானே மறைந்தது. காட்டின் பயங்கரத்தை வளர்த்த விலங்கினங்களும் பலமிழந்து ஓடிவிட்டன. எல்லை தெரிகிறது. வழி புலப்படுகிறது. மனம் அமைதி அடை கிறது. [114]

1304-01 பத்ர-ப்ரியா. மங்களத்தில் பிரியமுள்ளவள்.

1304-02 பத்ரம்-மங்களம். மங்களமான தனைத்திலும் பிரிய முள்ளவள். மங்களமான சொல், மங்களமான எண்ணம், மங்கள மான செயல், மங்களமான தோற்றம், மங்களமான பணியில் பயன் படுதல் முதலியவற்றில் பரவி நிற்கும் மங்களமே தேவிக்குப் பிரிய மான இருப்பிடம். பத்ரம் என்ற யானை இனத்தில் தோன்றிய யானையிடம் பிரியமுள்ளவள். [115]

1305-01 பத்ர-மூர்த்தி: மங்களமே வடிவானவள்.

1305-02 பத்ரமூர்த்தி :-அழகிய, மங்களமான, வடிவமுள்ளவள். மங்களமானது பிரும்மம் ஒன்றே. 'ப்ருஹ்ம தந் மங்களம் விது:, அதற்கு வடிவாக அமைந்தவள். மங்களமான சொல், எண்ணம்' செயல், பொருள் முதலியவற்றின் உள்ளே மங்களமாக நிற்பவள். 'மங்களா நாம் ச மங்களம். (116)

1306-01 பக்த-ஸௌபாக்ய-தாயிநீ. பக்தர்களுக்கு ஸௌ பாக்யத்தை வழங்குபவள்.

1306-02 பக்தி எனும் அன்பால் தேவியை அடைந்தவர்கள் பக்தர்கள். பகம் என்ற சொல் ஞானம், வைராக்கியம், செல்வம், ஆசை, பெருமை, வீர்யம், விடாமுயற்சி, ஒளி, புகழ் என்றிவ்வாறு பல பொருள்கள் உள்ளது. அதனைத்தும் நல்லதாகப் பயன்படு

மானால் 'ஸுபகம்' ஆகிறது. அவைகளைப் பெறுவது அல்லது பெறும் நிலை ஸௌபாக்யம்.

1306–03 தேவியிடத்தில் பகம் அனைத்தும் நல்லதாக அமைந்திருப்பதால் அவள் ஸுபகா (நா. 761). அவளாகவே ஆவது ஸௌபாக்யம். பக்தர்களுக்கு இவ்விருவகை ஸௌபாக்யங்களையும் அருள்பவள் தேவி. (117)

42 भक्तिप्रिया भक्तिगम्या भक्तिवश्या भयापहा। 121
शांभवी शारदाराध्या शर्वाणी शर्मदायिनी॥ 125

பக்திப்ரியா பக்திகம்யா பக்திவச்யா பயாபஹா 1
சாம்பவீ சாரதா(ஆ)ராத்யா சர்வாணீ சர்மதாயிநீ 11

1307–01 *பக்தி-ப்ரியா.* *பக்தியில் பிரியமுள்ளவள்.*

1307–02 தேவியை அடையும் ஸாதனம் பக்தி. அது இரண்டு விதம். முக்கியம், கௌணம் என. தேவியிடத்தில் வைத்த அன்பு வேறொரு எதிர் பார்வையுமற்றதானால் அந்த அன்பிற்காகவே வைத்த அன்பு முக்கிய பக்தியாகும். 'ஸா பரா அநுரக்தி: ஈச்வரே' 'பக்தி ஈசுவரனிடத்தில் வைத்த மேம்பட்ட அன்பு' என பக்தி ஸூத்திரம் பக்திக்கு இலக்கணம் கூறும். தனது மனத்திற்கும், பொறிகளுக்கும் இதம் தருவதில் வைக்கும் நாட்டமாகிய அன்பு, அபரம்—மற்றொன்றை எதிர்பார்த்து நிற்பதால் கட்டுப்பட்டது. தனக்கு அது சுகம் தருகிறதென்ற எதிர்பார்வையற்ற கலப்பற்ற அன்பு பரமானது. பரமான அன்பே முக்கிய பக்தியாகும். கௌண பக்தியானது பரபக்தியை அடைய ஸாதனமாகக்கூடியது.

1307–03 பக்தி என்ற சொல் பஜ் என்ற வினைச்சொல்லிலிருந்து உண்டானது. பஜ் என்ற வினைச்சொல்லிற்கு சேவை செய்தல், அடைதல் என்ற இரு பொருள்கள் உண்டு. பணியாள் எஜமானனுக்கும், மனைவி கணவனுக்கும், பணிவிடை புரிவதுபோல் பிறரது திருப்தியையோ, சுகத்தையோ கருதிப் பணிவிடை புரிவது பஜனம்—ஸேவை ஆகும். இது கௌணபக்தி. அன்பால் பேணும்போது பேணப்படுவோரின் மனமே தன்மனமாகி அவர்களது சுக துக்கங்களே தனது சுக துக்கங்களாகி அன்பு உணர்வால் பேணப்படுபவராகத் தான் மாறிவிடுவது பஜனம்—அடைதலாகும். இது முக்கிய பக்தி.

1307–04 ஸேவையில் உதவுபவை (1) சிரவணம் (பெருமைகளைக் கேட்பது) (2) கீர்த்தனம் (அப்படித் தான் கேட்டறிந்ததைப்

பிறரறியப் பாடுவது) (3) ஸ்மரணம் (கேட்டும், சொல்லியும் உணர்ந்த பொருளை நினைவில் நிறுத்திக் களிப்பது) (4) பாத ஸேவனம் (நேரிடையாக இறைவனுக்கோ அல்லது அடியார் களுக்கோ திருவடிகளைப் பிடித்துவிடுதல் அல்லது அவ்விதமான பாவனை) (5) அர்ச்சனம் (திருவுருவத்தை நாமங்கள் சொல்லி அர்ச்சனை செய்தல்) (6) வந்தனம் (வணங்குதல்) (7) தாஸ்யம் (அடிமைபூண்டு பணிவிடைகளைப் புரிதல்) (8) ஸக்க்யம் (தோழமை உணர்ச்சியுடன் நெருக்கம் ஏற்படுத்திக்கொள்ளுதல்) (9) ஆத்ம நிவேதனம் (தான், தனது என்ற பேத பாவனைக்கு இடமின்றி அவனுக்கே ஆட்பட்டிருத்தல்) என்பன பக்திஸாதன முறைகள். இவை கௌணபக்தியில் அடங்கும்.

1307–05 அன்பென்பது உணர்வு. உணர்வு நிலையில் அது மிகத்தூயது. அதில் போலித்தன்மை இல்லை. அது எதையும் எதிர்பார்ப்பதில்லை. ஆனால் அந்த அன்பு சொல்லாகவோ செய லாகவோ வெளிப்படும்போது, சூழ்நிலையையொட்டி அதில் தூய்மை குறையக்கூடும். போலித்தன்மை இடம்பெறும். எதிர்பார்த்தலும் ஏற்படக்கூடும். உணர்வு நிலையிலுள்ளது பரபக்தி. அந்த உணர்வே செயலாகவும் சொல்லாகவும் வெளிப்படுவது தான் கௌணபக்தி. எனினும் வெளிப்படையாகும்போது அதில் ஏற்படக்கூடிய குறைகள் மிகுந்த கவனத்திற்குரியவை. இத்தகைய குறையின்றி சூழ்நிலையால் பாதிப்பின்றி தூய்மையானதாக சிரவணம் முதலியவை அமையப்பெறின், அதுவே பர பக்தியாகிவிடும். சிரவணம் முதலியவை ஸாதனமாகி நின்று கொஞ்சம் கொஞ்சமாக பக்தனின் அன்பைத் தூயதாக்கும். அன்பே வடிவான தேவி தூய அன்பான பரபக்தியிடமும் தூய்மைபெற உதவும் கௌண பக்தியிட மும் பிரியமுள்ளவள். (118)

1308–01 பக்தி-கம்யா. பக்தியால் அடையத்தக்கவள்.

1308–02 அன்பெனும் பக்தியாலும் சேவை எனும் பக்தியாலும் அவளை அடைந்துவிடலாம். அன்பெனும் ஒளி கொண்டு தான் தேவி இருப்பதை உணரமுடியும். வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாத தேவியின் பர ஸ்வரூபத்தை அறிய உள்ளுணர்வாகிய பக்தியே உதவுகிறது. (119)

1309–01 பக்தி-வச்யா. பக்திக்குக் கட்டுப்பட்டவள்.

1309–02 அன்பெனும் தளையில் தேவி எளிதில் சிக்கிவிடுகிறாள். அதனால் கட்டுண்ட தேவிக்குத் தன்னை விடுவித்துக்கொள்ள முடிவ தில்லை. தேவி அதிலிருந்தும் விடுபட விரும்புவதுமில்லை. தேவி

மிகப்பெரியவள். அன்பு அவளைத் தன்னுள் அடக்கிக்கொண்டு அவளைவிடப் பெரிதாக விசுவரூபம் எடுக்கிறது. தேவி அன்பு வடிவானவள். தான் தன்னிடமிருந்தே விடுபட முடியாது. (120)

**1310-01 பயாபஹா. பயத்தைப் போக்குபவள்.**

1310-02 நீர் நெருப்பு போன்றவை அழிக்கும் சக்தி படைத்தவை. அவை நம் சக்திக்கு மீறுவதைக் கண்டால் பயம் தோன்றுகிறது. எல்லாவற்றையும்விட அதிகமாகப் பயமுறுத்துவது மரணம். மறு பிறவி இப்படித்தான் வாய்க்கும் என்ற நிச்சயமின்மையும், எதிர்பார்க்கமுடியாத எதிர்காலமும் பயத்தை விளைவிக்கின்றன. இத்தனை பயங்களுக்கும் காரணம் ஆன்ம சக்தியின்மை. தேவியை நினைவிற்கொண்டவனுக்கு ஆன்ம பலம் வளர்கிறது. எதனிடமும் எதிரி என்ற எண்ணம் தோன்றுவதில்லை. தேவிக்கு ஆட்பட்டவனுக்கு மறு பிறப்பு தற்போதுள்ளதைவிட மங்களமாகத்தான் அமையும். பயத்தைத் தோற்றுவிப்பவை மறைவதால் பயம் நீங்கிவிடுகிறது. பயத்தை நீக்குபவள் தேவி. (121)

**1311-01 சாம்பவீ. சம்புவின் பத்தினி.**

1311-02 சம்-மங்களம். மங்களம் உண்டாகுமிடம் சம்பு:- அவரைச் சேர்ந்தவள் சாம்பவீ. மங்கள வடிவினர் சிவன். (சிவம்-மங்களம்) மங்களத்திலிருந்துதான் மங்களம் தோன்றும். அதனால் மங்களத்தின் தோற்றுவாய் சிவன் (சம்பு:). மங்களமாயிருப்பவர் தான் மங்களத்தைச் செய்யமுடியும். மங்களத்தைச் செய்யும் (சம்-கர:) சங்கரனும் சிவன்தான். சிவனாக இருப்பவள், அவரைச் சேர்ந்தவள், அவரது பத்தினியாக இருப்பவள் தேவி. அவரது தன்மைகளனைத்தும் இவளிடமும் உள்ளன. சிவனது மங்களத்தைத் தோற்றுவிக்கும் தன்மையாயிருப்பவளே அவள்தான்.

1311-03 நவராத்திரி முதலிய உற்சவங்களில் முதல் நாளன்று அதாவது பிரதமையில் ஒரு வயதுள்ள பெண் குழந்தையையும் இரண்டாம் நாளன்று அதாவது துவிதீயையில் இரண்டு வயதுள்ள பெண்ணையும், அந்தந்த திதியில் அந்தந்த வயதுள்ள குழந்தையையும், தேவியாகப் பாவித்து வழிபடுவது உண்டு. இப்படி எட்டாவது நாளன்று தேவியாகப் பாவித்து வழிபடும் எட்டு வயதுள்ள பெண்ணை சாம்பவீ என்று பெயரிட்டழைப்பர். அந்த பெண்ணாக வழிபடப்பெறுபவள்.

1311-04 யோக வழிகளில், உள்நோக்கும், இமைக்காத சூன்யமான வெளிப் பார்வையும் கொண்ட ஒரு முத்திரை சாம்பவீ எனப்படும். அந்த முத்திரையாக இருப்பவள்.

1311-05 மந்திரத்தை உபதேசிக்கும் குரு தன் சிஷ்யனிடத்தில் மந்திரசக்தி சித்திப்பதற்காகத் தீக்ஷை செய்துவைப்பார். அது மூன்றுவகை. 1. சாம்பவீ தீக்ஷை—சிஷ்யனது சிரசில் காமேசுவரி காமேசுவரர் இருவரது இணைந்த உருவின் சிகப்பு-வெண்மை நிறமுள்ள சரணங்கள் பதிவதாகப் பாவனை செய்து அவ்விரு சரணங்களிலிருந்து பெருகும் அமிருத தாரையால் சீடனது இதயத்திலும் வெளியிலுமிருக்கும் அனைத்து மலங்களும் அகன்று தூய்மை ஏற்பட்டு விட்டதாகப் பாவிப்பதாகும். 2. சாக்தீ தீக்ஷை—சீடனது மூலாதாரத்திலிருந்து பிரும்மரந்திரம் வரை பேரொளி வடிவில் பரவி நிற்கும் சக்தி வெள்ளத்தில் சீடனது பாபங்கள் எரிந்து சக்தி உட்புகுந்து விட்டதாகப் பாவிப்பதாகும். 3. மந்திரதீக்ஷை — மந்திர சக்தியை கலசத்திலுள்ள ஜலத்தில் ஆவாஹனம் செய்து, வழிபட்டு, மந்திரசக்திமிக்க அந்த ஜலத்தால் சீடனுக்கு ஸ்னானம் செய்வித்து மந்திரசக்தி உட்புகச் செய்வதாகும். இவைகளுள் சாம்பவீ தீக்ஷையாக இருப்பவள் தேவீ.

1311-06 சிவனடியார்கள் சாம்பவர்கள். அவர்களது தாயாயிருப்பவள் சாம்பவீ. சுத்த ஞானத்தை அருளும் சாம்பவீ என்ற வித்யை ரச்மிமாலா மந்திரங்களில் ஒன்று. அதனைத் தன்வடிவாகக் கொண்டவள் (122)

1312-01 **சாரதா-ஆராத்யா. சாரதையால் வழிபடத்தக்கவள்.**

1312-02 சாரம்-ஞானம், பேரறிவு. அதைத் தருபவள் சாரதா-ஸரஸ்வதி. அவளால் வழிபடப்பட்டவள் தேவி. 'ஸசாமரரமாவாணீ ஸவ்யதக்ஷிணஸேவிதா' என்ற 614ம் நாமம் தேவியின் வலது புறத்தில் ஸரஸ்வதி தேவி சாமரம் ஏந்தி தேவிக்குப் பணிவிடை செய்வதைக் கூறும்.

1312-03 ஞானத்தைத் தருவதால் வசிநீ முதலிய வாக்தேவிகளுக்கும் சாரதா என்ற பெயர் உண்டு. அவர்களால் ஸேவிக்கப் பெறுபவள். சரத்ருதுவில் வரும் நவராத்திரி விழாவிற்கு சாரத நவராத்திரி எனப் பெயர். அந்த சாரத காலத்தில் வழிபடப்படுபவள்.

1312-04 ஞானத்தைக் கொடுக்கும் ஆசாரியர்கள், அறிவாளிகள், ஸந்யாஸிகள் முதலானவரை சாரதர் என்பர். அவர்களால் வழிபடப்படுபவள். சாரதாவாக—ஸரஸ்வதியாக—வசினீ முதலிய வாக்தேவிகளாக — ஆசாரியர்களாக — அறிவாளிகளாக—ஸன்யாஸிகளாக வழிபடப் பெறுபவள் தேவி. (123)

1313-01 **சர்வாணீ. சர்வனெனும் சிவனது பத்தினி.**

1313-02 சிவனது எட்டு மூர்த்திகளில் ஒன்று பூமி. (பாரா. 1301-03) அந்த உருவில் உள்ள சிவனை சர்வன் என்பர். சர்வன் என்ற பூமிமூர்த்தி நிலையில் அவரது மனைவியாக ஸுகேசி என்ற பெயருடன் விளங்குபவள் தேவி. (124)

**1314-01 சர்மதாயிநீ. சுகத்தைக் கொடுக்கும் பழக்கமுள்ளவள்.**

1314-02 பக்தன் நாடும் சுகமனைத்தையும் கொடுப்பதையே பழக்கமாக்கிக் கொண்டவள் தேவி. பழக்கத்திற்கடிமையான அவளால் சுகம் தராமல் கணப்பொழுதுகூட இருக்கமுடியாது. (125)

**43 शाङ्करी श्रीकरी साध्वी शरच्चन्द्रनिभानना । 129**
**शातोदरी शान्तिमती निराधारा निरञ्जना ॥ 133**

**சாங்கரீ ஸ்ரீகரீ ஸாத்த்வீ சரத்சந்த்ர நிபாநநா 1**
**சாதோதரீ சாந்திமதீ நிராதாரா நிரஞ்சநா 11**

**1315-01 சாங்கரீ. சங்கரரது பத்தினி.**

1315-02 சம்-மங்களம், சுகம். இதைச் செய்பவர் (சம் கரோதி) சங்கரன். சம் எனும் மங்களத்தைக் கரத்தில் கொண்டவர் (சம் கரே யஸ்ய) சங்கரன். அவரது சக்தி வடிவானவள் சாங்கரீ. (பா. 1311-02) (126)

**1316-01 ஸ்ரீ-கரீ. செல்வத்தைத் தருபவள்.**

1316-02 நல்வினைகளின் பயனாக ஸுகத்தை மட்டும் தருவதாக அமைந்த செல்வம் ஸ்ரீ: எனப்படும். ("யா ஸ்ரீ: ஸ்வயம் ஸுக்ருதிநாம் பவநேஷு". நற்பணிகளையே செய்பவர்களது வீட்டில் ஸ்ரீயாக—செல்வமாகத் தங்கி நிற்பவள்." துர்க்காஸப்தசதீ அத். 4 சு. 5) அந்த ஸ்ரீயை உண்டாக்குபவள். (ச்ரியம் கரோதி.) அத்தகைய ஸ்ரீயைத் தன் கைகளில் கொண்டவள் (ஸ்ரீ: கரே யஸ்யா:) ஸ்ரீகரன் என விஷ்ணுவின் பெயர். அவரது மனைவியும் சக்தியாயுமுள்ளவள் லக்ஷ்மீ தேவி. அவளாயிருப்பவள் தேவி. (127)

**1317-01 ஸாத்த்வீ. பதிவிரதை.**

1317-02 பெண்ணின் பெருமை அவள் பதிவிரதையாக இருப்பதால் நிலைக்கும். தேவியின் பதிவிரதைத் தன்மையில் ஒரு தனிச் சிறப்புண்டு. எந்த பதிவிரதைக்கும் முற்பிறவிகளிலும் அடுத்து வரும் பிறவிகளிலும் இப்பிறவியில் அமைந்த கணவனே கணவனாக இருந்திருப்பார் என்றோ, இருப்பார் என்றோ நிச்சயமாகக் கூற இயலாது. இப்பிறவியில் மனைவியாயிருப்பவள் முன் வினைப்பயனாக

முன் பிறவிகளிலும் பின் பிறவிகளிலும் ஆணுகவோ வேறு விதமாகவோ கூடப் பிறந்திருக்கவும் பிறக்கவும் கூடும். அதனுல் அவர்களது பதிவிரதைத்தன்மை இப்பிறவியில் மட்டும் நிலைக்கக்கூடியது. தேவியோ பற்பல தோற்றங்களிலும் சிவனையே கணவனுகக் கொண்டாள். அதனுல் முக்காலத்திலும் பதிவிரதையாக இருக்கும் சிறப்பு தேவிக்கு மட்டுமே உண்டு.

ஸாத்வீ எனும் சொற்றெடர் மீண்டும் 138ம் சுலோகத்தில் வரும். அங்கு ஸாது ஈ என்ற இரு நாமங்களாக அது பிரியும். இங்கு ஸாத்வீ என்று ஒரே நாமம். (128)

1318-01 சரத்-சந்த்ர-நிப-ஆநநா. சரத்ருதுவின் சந்திரனுக்கொப்பான முகமுள்ளவள்.

1318-02 வானம் முழுவதும் பரவி நின்ற மேகங்கள் மழையாகப் பொழிந்து மறைந்துவிட்டன. ஆகாயம் மழையால் அலம்பப் பட்டதுபோல், தூய்மையும் தெளிவும் பெற்று விளங்குகிறது. இத்தகைய சரத்ருதுவில் உள்ள பூர்ணிமை இரவில் தெளிந்த வானில் வேறு மறைப்பும் மாசுமுன்றி ஒளி நிறைந்து சந்திரன் காணப்படுகிறுன். சூழலும் தானும் தூய்மையுடன் ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் அந்த பூர்ண நிலவைப் போன்ற முகமுள்ளவள் தேவி. (129)

1319-01 சாத-உதரீ. இளைத்த வயிறு உள்ளவள்.

1319-02 தேவியின் வயிறு மிகவும் (சாதம்) இளைத்துள்ளது. அடங்கிய வயிறு உடையவள் (நா-847). நூற்றுக்கணக்கான (சத) குகைகள் (உதர) கொண்டவன் சதோதரன்—இமவான். அவனது புதல்வியானதால் சாதோதரீ. (130)

1320-01 சாந்திமதீ-மன அடக்கமுள்ளவள்.

1320-02 மன அடக்கம் சமம்-சாந்தி. (பொறியடக்கம் தமம்—தாந்தி) அவளது அடியார்கள் மனவடக்கமுள்ளவர்கள். அவர்கள் தேவியைச் சூழ்ந்து நிற்பதால் எங்கும் சாந்தி நிலவுகிறது தேவி சாந்தியே வடிவானவள். (நா. 447) ஆதலால் எங்கும் சாந்தியோடு கூடியவள் தேவி. (131)

## அதிகாரம் 14

# தேவியின் நிர்குணஸ்வரூபம்

1401-01 நிர்–ஆதாரா. தனக்கென ஆதாரமாக எதையும் கொள்ளாதவள்.

1401–02 தேவி மனத்திற்கும், வாக்கிற்கும் எட்டாதவள். மனமும், வாக்கும் ஒரு பொருளை எட்டிப்பிடிக்கச் சிற்சில குறிகள் தேவை. வசிக்குமிடம், பெயர், தோற்றம், நிறம், குணங்கள், இச்சை. துவேஷம் முதலியவைகளைக் கொண்டுதான் ஒன்றைப்பற்றி மனமும், வாக்கும் குறிப்பறிய முடியும். அறிய ஆதாரமானவை இக்குறிகள். தேவியிடத்தில் இத்தகைய குறிகள் எதனையும் காண முடியாது.

1401–03 ஆதாரம்–தாங்கும் தன்மை உள்ளது. தேவி உலகு அனைத்திற்கும் ஆதாரமானவள். உலகில் ஆதாரமாயிருப்பவையாக எதெதைக் கொள்கிறோமோ, அதனைத்திற்கும் அவளே ஆதாரம். அவள் இன்றி எதுவும் நிலைத்திருக்காது. அத்தகைய தேவிக்கும் ஒரு ஆதாரம் இருக்கும் என்பது பொருந்தாது. ஆதாரமாயிருக்கும் பொருளனைத்திலும் ஆதாரத்தன்மையாக இருப்பவள். நிறம். உருவமைப்பு முதலியவற்றோடு கூடிய விக்கிரஹத்தினுள் உறைப வளாக அவளை வழிபடுவது நமது மனோலயத்திற்காகவே. அவளது உண்மை நிலை அதுவேயல்ல. தான் எல்லாவற்றிற்கும் ஆதாரமாய் நின்று, தனக்கெனத் தனித்த ஆதாரம் வேண்டாதவள் தேவி— நிராதாரா.

1401–04 மனோலயம் ஏற்பட்டபின் பேரறிவே வடிவமாகக் கொண்ட தேவி தோன்றுகிறாள். சிற்றறிவிற்கு அறிபவன், அறியப் படும்பொருள், அறிவு என்ற மூன்று ஆதாரங்கள் தேவை. பேரறிவில் இந்த மூன்றும் துலங்காது. அதற்கு இந்த மூன்றின் உதவி தேவைப்படுவதில்லை. அதன் உதவிகொண்டே இந்த மூன்றும் துலங்குகின்றன. "யஸ்ய பாஸா ஸர்வம் இதம் விபாதி" "எதன் ஒளியின் உதவிகொண்டு தனித்தனியாக அறிவிற்குப் பொருளாகத் துலங்கும் இந்த உலகம் தோற்றத்தைப் பெறுகிறதோ அது". அதுவே பேரறிவு. அதற்கு ஆதாரம் தேவையில்லாததால் நிராதாரா–பேரறிவான உள் உணர்வு வடிவானவள். (132)

1401–05 இதிலிருந்து தொடங்கி 'நிரத்யயா' என்ற 187-ம் நாமம் வரை தேவியின் நிர்குண ஸ்வரூபமும் அதனைத் தியானிப்ப தால் ஏற்படும் நலனும் விளக்கப்படுகின்றன.

1402-01 நிர்-அஞ்ஜநா. கருமையாக ஒட்டும் அழுக்கற்றவள்.

1402-02 அஞ்ஜனம் என்பது கண்களுக்கிடும் மை. கண்களி லில்லாத கருமையைச் செயற்கையாகத் தோற்றுவிப்பது இது. அலங்காரப் பொருளாயினும் இது இயற்கையான தூய்மையைக் கெடுக்கும் அழுக்கே. உலகனைத்தும் வெவ்வேறு பொருளாகப் பேத புத்தியுடன் பார்ப்பது மாயை எனும் மலம். உலகனைத்திலும் ஊடுருவி நிற்கும் தேவியைப் பார்க்கமுடியாதபடி இந்த பேதபுத்தி ஆவரணமாக (மறைப்பாக) நின்று மறைக்கிறது. தமோகுணத்தால் ஏற்படுவது இந்த ஆவரணம். தமோகுணம் கருநிறமுள்ளது. அது அஞ்ஜனம்போல் ஜீவனிடம் செயற்கையாகச் சேர்ந்த மலம். நாடியது கிட்டிடின் ஏற்படும் மகிழ்ச்சியும் கிட்டாவிடில் ஏற்படும் ஆத்திரமும் இதன் விளைவே. அஜ்ஞானம்—அவித்யை எனப்படும் மாயையின் சேர்க்கையால் ஏற்படும் இந்த மாயாமலம் ஞான வடிவான தேவியினிடத்தில் காணமுடியாதாகையால் நிரஞ்ஜநா.

1402-03 எங்கும் நிறைந்த பரம்பொருளையே பலவாருகக் கண்டு மகிழ்ச்சிக்கும், தாபத்துக்கும் உள்ளானேம். பலவாருன தோற்றம் மாயை எனும் அறியாமையால் விளைந்தது. தோற்றத் திற்கு ஆதாரம் பரம்பொருள். தோற்றத்தால் விளைந்த சுக துக்கங்கள் தோற்றத்தின் ஆதாரத்தைப் பாதிக்காது. அவளை நிரஞ்ஜனுவாகத் தியானிப்பது நம்மிடமுள்ள மாயை எனும் மலத்தை அகற்றும். நி—நிரம்ப, ரஞ்ஜனம்—செம்மை, மகிழ்ச்சி. இவ் விரண்டும் நிரம்பக் கொண்டவள் தேவி. (நிதராம் ரஞ்ஜனம் யஸ்யாம்) அவளை அப்படி தியானிப்பது மகிழ்ச்சி தரும். (133)

44 निर्लेपा निर्मला नित्या निराकारा निराकुला । 138
निर्गुणा निष्कला शान्ता निष्कामा निरुपप्लवा ॥ 143

நிர்லேபா நிர்மலா நித்யா நிராகாரா நிராகுலா ।
நிர்குணு நிஷ்கலா சாந்தா நிஷ்காமா நிருபப்லவா ॥

1403-01 நிர்-லேபா. பூச்சாக ஒட்டும் அழுக்கற்றவள்.

1403-02 லேபம் — பூச்சு. இப்பிறவியில் அனுபவிக்கத்தக்க வினைகளாகச் சிலவற்றைப் பொறுக்கி எடுத்து (பிராரப்தவினைகள்) அவற்றை அனுபவிக்க ஏற்றதான உடலமைப்பைக் கொடுத்து ஜீவனை மறைத்த மலம் கார்மணம்—கன்மமலம். இந்த அழுக்கு ஞானத்தால் மட்டும் போகும். அஞ்ஞான நிலையில் இந்த கர்ம

பந்தம் மேல்பூசிய சேறுபோன்று ஜீவனது சுய உருவை மறைக்கும். ("ந மாம் கர்மாணி லிம்பந்தி" "என்மேல் வினைகள் சேறுபோல் பற்ருது"...கீதை 4-14.) ஞான ஸ்வரூபிணியான தேவியிடத்தில் வினைகள் பற்ருது. தாமரை இலையில் நீர் ஒட்டாததுபோல். ஞானத்தில் அஞ்ஞானத்தால் விளைந்த வினை ஒட்டாது. இவளது தத்துவத்தை உணர்ந்தவர்களிடத்திலும் அதனை உணர்வதற்கு முன் ஒட்டியிருந்த வினை ஞானம் வந்ததும் அகன்றுவிடும். அவளை 'நிர்லேபா'வாக தியானிப்பது வினை மலங்களை அகற்றும். (134)

1404-01 நிர்-மலா. அழுக்கற்றவள்.

1404-02 மாயை எனும் மலத்தால் ஏற்பட்ட அஞ்ஜனமும் கர்மம் எனும் மலத்தால் ஏற்பட்ட லேபமும் அற்ற தேவியிடம் ஆணவமெனும் மலமும் இல்லை. ரஜோ குணத்தால் ஏற்படும் விளைவு விக்ஷேபம். ஆத்மாவாக அல்லாத பொருளில் ஆத்மா என்ற எண்ணம், அவைகளை நீக்கியபின் ஆத்மா என்ற தனித்த தொன்று இல்லை என்ற எண்ணம், ஆத்மா ஒவ்வொரு தேகத்திலும் தனித்தனியாக உள்ளவன். கொசுவிலும் அதைவிட நுண்ணிய வடிவமுள்ள கிருமியிலும் அணு வடிவில் இருப்பவன் என்ற எண்ணம், இவை ஆணவமெனும் மலத்தால் ஏற்படும் கலக்கத்தால் ஏற்படுபவை. எங்கும் நிரம்பியதொன்றை அணுவெனவும், வெவ் வேருனதாகவும், உடல் புலன் முதலியதாகவும் மதிப்பது இந்த விக்ஷேபத்தால் விளைவது. இருப்பது ஒன்று, காண்பது வேரென்று என்பது விக்ஷேபம். எதை எப்படி அறியவேண்டுமோ அப்படி அறியாமையும், எதை எப்படி அறிவது பொருந்தாதோ அப்படி அறிவதும் விக்ஷேபம். இந்த மலமே மற்ற இரு மலங்களுக்கும் மூலகாரணமானதால் மலமென்றே குறிப்பிடப்பெறுகின்றது. தூய தான ஆத்மாவைத் தேகத் தொடர்பால் தூய்மையற்றவனுகக் கருதும் விக்ஷேபம் காரணமாக ஆத்மாவிடம் மல சம்பந்தம் காணமுடியாது. அதனுல் ஆத்மஸ்வரூபிணியான தேவி நிர்மலா. அவளை அப்படித் தியானிப்பது ஆணவம் எனும் மலத்தைப்போக்கும். (135)

1405-01 நித்யா. நித்தியமானவள்.

1405-02 தோன்றும் உலகம் அழியும்; மாறுபடும். உலகத்தின் தோற்றம், இருத்தல், மறைவு என்ற மூன்று நிலைகளிலும் அதற்கு ஆதாரமாக விளங்கும் தேவி முக்காலத்திலும் அழிவற்றவள், மாறு பாடு அற்றவள். அதனுல் என்றும் ஒரேவிதமாய் இருப்பவள்-நித்யா. அழிவற்றவளாகத் தியானிக்க அழிவு நீங்கும்.

1405-03 15 நித்யாதேவிகளாகத் (பாரா. 0911-25,1008-02) தோன்றுபவள். அவர்களுள் சுக்லதசமீ — கிருஷ்ணஷஷ்டி திதி தேவதையான நித்யா எனும் நித்யாதேவியாக இருப்பவள். (136)

1406-01 நிர்-ஆகாரா. ஆகிருதியற்றவள்.

1406-02 உலகில் காணப்படும் பொருள் ஒவ்வொன்றிலும் ஒரு தனிச்சிறப்பு உண்டு. அதனைக்கொண்டு, ஒன்றை மற்றவற்றி லிருந்து பிரித்தறிகிறோம். அவ்விதம் அறிவில் தனித்துப் புலப்படும் தோற்றச் சிறப்பை ஆகாரம், ஆகிருதி, (வடிவம்) என்று சொல்வர். ஆண், பெண், மனிதன். மிருகம், மரம், கல், மண் என ஆகிருதி யைக் கொண்டுதான் பிரித்து அறிகிறோம். தேவிக்குத் தனித்த வடிவம் கிடையாது. பலவாகத் தோன்றும் அவளது வடிவங்கள் மாயையால் ஏற்பட்டவை. அவை அவளது நிஜ வடிவங்களல்ல. வடிவற்ற நிலையே அவளது உண்மை ஸ்வரூபம். வடிவம் பரப்பால் குறுகியது. எங்கும் நீக்கமற நிரம்பியுள்ளதற்கு வடிவம் இருக்க முடியாது. அதனால் தேவி நிராகாரா. (137)

1407-01 நிர்-ஆகுலா. கலக்கமற்றவள்.

1407-02 அவித்யையின் தொடர்பால் உலகத்தின் உண்மை நிலை அறியமுடியாதபடி கலக்கமேற்படும். அவித்யைக்கும் அவள் தான் ஆதாரம். ஆனாலும், அதன் தொடர்பிருந்தும் கூட ஆகாயம் போல் அவள் கலக்கமற்றவள். தெள்ளத்தெளிந்த ஞான வடிவினள். தெளிந்த ஞான முள்ளவர்களால் மட்டும் அறியத் தக்கவள். அதனால் அவளது அடியார்களும் 'நிராகுலா'வான அவளது அருளால் தெளிந்த ஞானம் பெற்று ஆகுலம் (கலக்கம்) நீங்கப் பெறுகிறார்கள்.

1407-03 ஆகுலம்—சூன்யநிலை. சூன்யநிலை அற்றவள் தேவி. அறிவிற்கெட்டாதவள் என்பதால் அவள் இல்லை என்று வாதிக்க முடியாது. மூலகாரணத்தை அறியமுடியாதிருப்பதால் சூனியத்தி லிருந்தும் உலகம் தோன்றியது என்று கூறுவார்கள் கலக்கமுற்ற வர்கள். ஒருபொழுதும் இல்லாததிலிருந்து இருக்கும் பொருள் தோன்றாது. சூன்யத்திலிருந்து உலகம் தோன்ற முடியாது. அதனால் மூலகாரணம் 'ஸத்' — இருக்கும் பொருள்' ஆகத்தான் இருக்கவேண்டும். முக்காலத்திலும் 'ஸத்'தாக இருப்பவள் தேவி. (138)

1408-01 நிர்குணா. குணங்களற்றவள்.

1408-02 ரூபம் மணம் முதலிய குணங்கள் பூதங்களது சிறப்பம்சமானவை. அதனால் தோற்ற நிலைக்கு வந்த பூதங்களிலும் பூதங்களாலானவைகளிலும் அவை காணப்படும். பூதநிலைக்கு முற்பட்டவளும் அவைகளின் காரணங்களுக்கும் காரணமானவளுமான தேவியிடத்தில் அந்தச் சிறப்பம்சங்கள் கிடையாது. பூதங்கள் ஜடப்பொருள். ரூபம் முதலிய குணங்கள் அவைகளை அண்டியவை. அவை சுத்தமான சேதனஸ்வரூபமான தேவியிடம் காண முடியாதவை. ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்கள் உலகைப்படைக்க முற்பட்ட மாயை யெனும் பிரகிருதி எடுத்துக் கொண்ட சிறப்புகள் [நா. 397]. இவைகளும் மாயைக்கப்பாற்பட்ட தேவியிடம் பொருந்தாதவை. ஒன்றைப் பலவாகப் பெருக்குவது குணம். குண : என்றால் பெருக்குதல், மூன்றை இரண்டால் பெருக்கி ஆறு என்பது போலப் பெருக்குதல்: அவளை அப்படிப் பெருக்கமுடியாது. ஏற்கனவே எங்கும் நிரம்பியவள். இனிப் பெருக இடமில்லை. [139]

1409-01 நிஷ்கலா. கூறுபடாதவள்.

1409-02 எங்கும் நிரம்பியதொன்றைக் கூறுபோடமுடியாது. அகண்டமான தேவியிடமிருந்து தோன்றிய முதல் பூதமான ஆகாசத்தைக்கூட நம்மால் கூறுபோட்டகற்றவோ, அதன் கூறுகளை இடம் மாற்றி அமைக்கவோ முடியவில்லை. ஆகாயத்திற்கும் மூலகாரணமான தேவியைக் கூறுபோடுவதெங்ஙனம்? அகண்டமான அந்தப் பரம்பொருள் கண்டமெனை, திவ்யமங்கள விக்கிரகமாக நமக்குத் தோன்றுவது நம்மிடமுள்ள கருணையால். உண்மை நிலை அதுவல்ல. தேவியைக் குணமற்றவளாக முகம் கைகால்களின்றி வடிவமின்றி தியானிப்பது நிஷ்கலா சிந்தா எனப்படும். அத்தகைய தியானத்தில் தோன்றுபவள் நிஷ்கலா. [140]

1410-01 சாந்தா. சாந்தவடிவினள்.

1410-02 மனம் நிரம்பிச் செயலிழந்து தன்னை இழந்த நிலையில், அந்த அமைதியுற்ற அந்தக்கரணத்தின்--மனத்தின் வடிவாக அமைந்தவள்.

1410-03 மந்திர சாஸ்திரத்தில் ரகசியமாக ஓர் எழுத்தைக் குறிப்பிட, அக்ஷரமாலையில் அதற்கடுத்த எழுத்தைக் குறிப்பிட்டு, அதனைத் தன் முடிவெழுத்தாகக் கொண்டது என்று குறிப்பிடுவர். இங்கு அமிருத பீஜமான 'வம்' என்ற எழுத்தின் வடிவானவள் எனக் குறிப்பிடவேண்டும். அதற்கு 'ச-அந்தா' 'ச' என்ற எழுத்தைத் தன் முடிவெழுத்தாகக் கொண்டது எனக் குறிப்பிடுகிறார்கள்.

ய ர ல வ ச ஷ ஸ என்ற அக்ஷரத்தொடரில் 'ல' வை ஆதியிலும் 'ச' வை முடிவிலும் கொண்ட எழுத்து 'வ'. அதனால் 'வ'வை 'லாதி' என்றோ 'சாந்த' என்றோ குறிப்பிடுவர். அமிருத சக்தி பெற்ற 'வம்' என்ற பீஜாக்ஷரவடிவினள். (141)

1411-01 நிஷ்காமா. விருப்பமில்லாதவள்.

1411-02 தன்னிடமில்லாததை மனிதன் நாடுவான். தன்னிடம் இருக்கும் பொருளில் அவனுக்கு நாட்டம் ஏற்படாது. எல்லாமான தேவியிடம் இல்லாததொன்றில்லை. அதனால் நாட்டம் ஏற்பட ஏதுவில்லை. தன்னிடம் உள்ள பொருளே பிறரிடமும் இருப்பதைக் கண்ட மனிதன் பிறரிடம் அது இருக்கக் கூடாதென்ற கெட்ட எண்ணத்தால் அதுவும் தன்னிடமிருக்கவேண்டும் என்று விரும்பலாம். தேவிக்குப் பிறர் என்ற எண்ணத்தக்கவர் எவரும் கிடையாது. ஆசைப்பட இடமில்லாததால் ஆசை தோன்றவில்லை. அதனால் நிஷ்காமா. (142)

1412-01 நிர்-உபப்லவா. அழிவற்றவள்.

1412-02 பிரளயகாலத்தில் எல்லாபொருள்களும் உருக்குலைக்கப்பட்டு ஜலத்தில் கரைக்கப்படுகின்றன. ஜலத்தில் கரைந்து உலகம் மிதக்கும் நிலை (உபப்லவம்) அதன் அழிவைக் குறிப்பிடும். எந்த நிலையில் உலகமாகத் தோன்றியதோ அந்நிலை மாற்றப்படுவதே அதற்கு அழிவு. இப்படி உருக்குலைந்து அழியும் நிலை தேவிக்குக் கிடையாது. ஜடப் பொருளுக்குத்தான் தோற்ற மாறுதல் ஏற்படலாம். சேதனத்திற்கல்ல. (143)

45 नित्यमुक्ता निर्विकारा निष्प्रपञ्चा निराश्रया । 147
नित्यशुद्धा नित्यबुद्धा निरवद्या निरन्तरा ॥ 151

நித்ய முக்தா நிர்விகாரா நிஷ்ப்ரபஞ்சா நிராச்ரயா ।
நித்யசுத்தா நித்ய புத்தா நிரவத்யா நிரந்தரா ॥

1413-01 நித்ய-முக்தா. பந்தத்திலிருந்து எப்போதும் விடுபட்டவள்.

1413-02 வினைகள் தேகத்தொடர்பாகிற கட்டை ஏற்படுத்துகின்றன. அவளுக்குத் தேக பந்தம் எப்பொழுதும் கிடையாது. அதனால் இயற்கையாகவே எப்போதும் பந்தத்திலிருந்தும் விடுபட்டவள். அவளது அடியார்களும் எப்போதும் முக்தர்களே. நித்ய முக்தர்களான அடியார்களோடு கூடியவள். விடுதலையாகிய முக்தியே முக்தம். மோக்ஷ வடிவினள்.

**1413-03** ஸ்தூலம் ஸூக்ஷ்மம் காரணம் என்ற மூன்று தேகங்களும் ஜீவனைக் கட்டுகின்றன. ஆனால் கட்டுப்படுத்தும் மூன்று தேகங்களும் இருந்தும் விடுபட்டவர்கள் சிலர் உண்டு. அவர்கள் ஜீவன்முக்தர்கள், உடல் பந்தமிருக்கும்போதே விடுபட்டவர்கள். தன்னிஷ்டப்படி சுற்ற முடியாமல் பசுவை நீண்ட கயிற்றால் பிணைத்து முளையில் கட்டிவிடுவர். இந்தப் பசு எப்போதும் அடங்கி நடக்கும்; முரட்டுத்தனமில்லாததென அறிந்த மாட்டுக்காரன் முளையில் கட்டுவதற்கேற்பட்ட கயிற்றைப் பசுவின் கழுத்திலேயே சுற்றி அதனை அதன் இஷ்டப்படி சுற்றவிடுவான். முளையில் கட்ட மாட்டான். மாட்டுக்காரன் போட்ட எல்லையைப் பசு மீறுதாகையால் கயிறு மட்டும் அலங்காரமாகிக் கழுத்தில் சுற்றப்பட்டிருக்கும். அந்தக் கயிறு கட்டுவதற்கல்ல. அப்படி அதைச் சுற்றியிருப்பதே விடுதலைக்கடையாளம் தான். வினையை அனுபவித்துத் தீர்க்க இறைவன் கொடுத்தது தேகக்கட்டு. அதனை இறைவன் வகுத்த வழியில் பயன்படுத்தும்போது தேகக்கட்டை வினையாகிய முளையில் பிணைக்காமல், கட்டே அலங்காரமாகத் தோன்றுமளவில் அதனை ஜீவனின் கழுத்திலே சுற்றிவிடுகிறான். அந்த தேகமே, உள்ளிருக்கும் விடுபட்ட ஆத்மாவின் ஒளி தன்னிடம் துலங்க, வணக்கத்துக்குரிய பொருளாகிறது. அப்படி விடுதலை பெற்றவர்கள் தேவியின் அருளால் நித்திய முக்தர்களே. (144)

**1414-01** நிர்விகாரா. மாறுதல் அற்றவள்.

**1414-02** புலப்படும் பொருள் ஒவ்வொன்றும் விகாரம் அடைந்ததே. விகாரம்-பரிணாமம்-மாறுதல். மூலப்பிரகிருதி பிரும்மத்திலிருந்து பிரிந்த அதன் மாயாசக்தி. இதுவே உலகின் மூலகாரணம்' மாறுபடாததால் இது பிரகிருதி. பிரகிருதி-ஒரே நிலையில் உள்ளது. மாறுபடாதது. அதிலிருந்து வரிசையாகத் தோன்றிய மஹத், அஹங்காரம், ஐந்து தன்மாத்திரங்கள் என்ற ஏழும் பிரகிருதி-விக்ருதி என்ற இரு நிலையிலும் அமைந்தவை. தன்மாத்திரங்களிலிருந்து உண்டான மஹாபூதங்கள் (நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம்) பொறிகள், மனம், முதலியவை விகாரங்கள். இவை அனைத்தும் பரிணாமத்துக்குட்பட்டவை. மூலப்பிரகிருதிக்கும் ஆதாரமான தேவி மாறுதலுக்கு உட்படாதவள். (நா-256, 397-401)

**1414-03** பாலானது தயிர், வெண்ணெய், நெய் முதலிய பல விகாரங்களை-மாறுதல்களை அடைகிறது. மாறுதலடைந்த பொருள் மீண்டும் தனது முன் நிலையை – தனது தற்போதைய நிலைக்குக் காரணமாயிருந்த நிலையை அடைய முடியாது. ஜடப்பொருள் அனைத்தும் இவ்விதம் பரிணாமத்திற்கு உட்படுபவை. தேவி ஜடப்

பொருள் அல்ல. அதனுல் அவளிடம் மாறுதல்கள் தோன்றுவதில்லே. ஆத்ம ஸ்வருபமான தேவி மாறுதல் அற்றவள்.

1414-04 தோன்றும் பொருள் ஒவ்வொன்றும் ஆறு விகாரங்களே அடைகின்றன. அவை உண்டாகிறது—'ஜாயதே'; இருக்கிறது – 'அஸ்தி'; வளர்கிறது—' வர்த்ததே'; மாறுதலடைகிறது 'விபரிணமதே'; தேய்கிறது–' க்ஷீயதே'; மறைகிறது 'நச்யதி'; என்பன. முன்னர் இல்லாதது பிறக்கும். குறைவுள்ளது வளரும். வளர்ந்தது தேயும். வளர்ந்து தேய்வது மாறுபடும். பிறந்தது இறக்கும். தேவி நித்யா (நா. 136) நிர்விகாரா, நித்யையானவள். அதனுல் மாறுபாடற்றவள். (145)

1415-01 நிஷ்-ப்ரபஞ்சா. பிரபஞ்சத்திலிருந்தும் வெளிப்பட்டவள்.

1415-02 ஒன்று பலவாக விரிவது பிரபஞ்சம். குவிதல், விரிவடைதல் முதலியவை மாறுதலுக்குட்பட்ட பொருளின் தன்மையாகும். மாறுதலுக்குட்படாத தேவியிடம் பிரபஞ்சத் தன்மை காணப்படுவதில்லே. (146)

1416-01 நிர்-ஆச்ரயா. சார்பற்றவள்.

1416-02 உலகமனைத்தும் தேவியைச் சார்ந்திருக்கின்றன. அவளுக்கும் ஒரு சார்பு உண்டு என்பது அதனுல் பொருந்தாது. அவள் எதனேயும் சார்ந்தவள் அல்ல. (ஆதாரம் பீடம்போல்; ஆசிரயம் ஒய்விற்குச் சாயும் சுவர்போல்) (147)

1417-01 நித்ய-சுத்தா. எப்போதும் தூயவள்.

1417-02 இயற்கையாகத் தூய்மை மிக்கவள் தேவி. தூய்மையற்ற பொருளுடன் சேருவதால் தூய்மை கெடக்கூடும். மிகுந்த நெருக்க மிருப்பினும் ஆகாயம்போல் வேறு பொருளுடன் ஒட்டாத தன்மை படைத்த தேவியிடம் அவ்வகையிலும் ஸ்பர்சதோஷம் ஏற்பட வழியில்லே. எக்காலத்திலும் அவளிடம் அசுத்தம் காணப்படுவதில்லே.

1417-03 சுத்தமாயிருப்பது இயற்கை. அழுக்காவது செயற்கை இயற்கையாகக் கிடைக்கும் ஜலமும் காற்றும் தூய்மையானது. மற்றவற்றுடன் கலப்பதால் அவைகளின் தூய்மை கெடுகிறது. மற்ரென்றின் ஸ்பர்சம்-சேர்க்கை சுத்தியைக் கெடுக்கும். ஸ்பர்சம் = ஊறு, தீண்டுதல். தேவியிடம் எதுவும் ஒட்டாது. அதனுல் ஸ்பர்ச தோஷமில்லே. அதனுல் எப்போதும் தூயவள். (148)

1418-01 நித்ய-புத்தா. என்றும் அறிவாயிருப்பவள்,

1418-02 'சித்' என்ற பேரறிவாயிருப்பவள். அந்நிலையிலிருந்தும் என்றும் மாறுபடாதவள். எல்லாவற்றிற்கும் ஸாக்ஷியாகப் பேரொளியாக விளங்கும் அவளிடத்தில் அறியாமை எனும் இருட்டிற்கு என்றுமே இடமிருந்ததில்லை. அறியப்படும் பொருள் வேறு ; அறிபவன் வேறு என்ற நிலையில் சிலவற்றை அறியாதிருக்க வாய்ப்புண்டு. அறிவாகி நின்று அறியப்படுவது அறிபவன் என்ற வேற்றுமையற்ற நிலையில் அறியாமைக்கிடமில்லை. ஆகையால் அவள் நித்ய புத்தா-எப்போதும் அறிவாளி.

1418-03 ஸர்வாநந்தமய சக்கரத்தில் ஆறு தர்சனங்களுக்கும் ஈசுவரியாக தேவியை வழிபடும்போது, அந்த ஆறு தர்சனங்களில் ஒன்ருக ஜைந தர்சனமும் இடம் பெறுகிறது. ஜைநமூர்த்திகளில் சுத்தரும் புத்தரும் புகழ்பெற்றது தேவியின் அருளால் தான். ஜைனர்கள் வழிபடும் தாரா என்பவள் தேவியின் அம்சமே. அந்த சுத்தரும் புத்தரும் அவளது அருளால் சிறப்புற்றனர் என்பதையும் நித்யசுத்தா நித்யபுத்தா என்ற இரு நாமங்கள் குறிப்பிடும். (149)

1419-01 நிர்-அவத்யா. குறையற்றவள்.

1419-02 புகழ்ந்து பேசக் கூடியது வத்யம். இதற்கு நேர் எதிரிடை அவத்யம். அதனைச் சொல்லவே நா கூசும். அப்படிப் பிறர் சொல்லால் சுட்டிக் காட்டக்கூடிய குறை ஏதுமற்றவள். அத்தகைய குறைகள் ஏற்படுவது அறியாமையால். அறிவு வடிவமான தேவியிடம் குறைகளுக்கு இடமில்லை.

1419-03 அவத்யம்-நரகம். அவளது அருளால் பாபிகளும் நரகத்திலிருந்து தப்பிக்கின்ருர்கள். அதனுல் நிரவத்யா. (150)

1420-01 நிர்-அந்தரா. இடைவெளியற்றவள்.

1420-02 இடைவெளி, எல்லை, வேறுபாடு, மறைப்பு, ஒட்டை இவை அனைத்தும் அந்தரம் என்ற சொல்லுக்குப் பொருளாகும். வேருெரு பொருள் அருகேயோ தூரத்திலோ இருக்கும்போது தான் அந்தரம் ஏற்படமுடியும். எல்லாமாகி நிற்பவளிடம் அந்தரம் ஏற்பட வழியில்லை. இடைவெளிதான் பொருள்களை வேறுபடுத்துகிறது. ஆகாயத்தைப்போல் இடைவெளியற்றிருப்பவள் தேவி. அதனுல் அவளிடம் வேறுபாடும் மறைப்பும் ஒட்டையும் எல்லையும் கிடையாது. (151)

46 निष्कारणा निष्कलंका निरुपाधिर्निरीश्वरा । 155
नीरागा रागमथनी निर्मदा मदनाशिनी ॥ 159

நிஷ்காரணு நிஷ்கலங்கா நிருபாதிர் நிரீச்வரா I
நீராகா ராகமதநீ நிர்மதா மதநாசிநீ II

1421-01 நிஷ்-காரணு. காரணமில்லாதவள்.

1421-02 தானே எல்லாவற்றிற்கும் மூல காரணமாயிருப்பவள். அவளுக்கும் ஒரு காரணம் இருப்பதற்கில்லை. இந்தப் பொருள் எதனால் விளைந்ததோ எதிலிருந்தும் தோன்றியதோ அது இதற்குக் காரணமாகிறது. அப்படி அவள் தோன்றவோ புதிதாக விளையவோ வேறொன்று காரணப் பொருளாக இருக்கமுடியாது. அதனால் நிஷ்காரணு. (152)

1422-01 நிஷ்-கலங்கா. களங்கமற்றவள்.

1422-02 களங்கம் வினையின் வடு. என்றோ செய்த வினை அதன் பயனைக் கொடுத்து மறைந்திருக்கவும் கூடும். ஆனால் அந்த வினைப்பயனை அனுபவித்ததன் வடு என்றும் மறையாது. சந்திரன் வியாழபகவானின் மனைவியிடம் செய்த அபசாரம் அவனிடம் களங்கமாக, வடுவாக இன்றும் காணப்படுகிறது. இந்திரன் அகலியையிடம் செய்த பாவம் இன்றும் அவன் உடலில் உள்ள ஆயிரம் கண்களால் ஞாபகப்படுத்தப்படுகிறது. இப்படி அடையாளமாக நிலைத்துவிடும்படி கொடுமையான பாபம் புரிந்திருப்பவர் இந்த களங்கத்தை உடலில் தாங்கி நிற்பர். வினையோ வினையால் விளைந்த பாபமோ ஒட்டாத தேவியிடத்தில் களங்கத்திற்கு இடமில்லை. அதனால் நிஷ்கலங்கா. (153)

1423-01 நிர்-உபாதி:. உபாதியற்றவள்.

1423-02 சேர்க்கையால் ஏற்படும் மாறுதல், சேர்க்கை விலகியவுடன் மறைவதானால் அது உபாதி. சேர்க்கை விலகிய பின்னரும் தொடர்ந்தால் மலம். ஸ்படிகலிங்கம் நிறமற்றது. அதன்மேல் சிகப்பு மந்தாரைப்பூ சாற்றியவுடன் லிங்கம் சிவந்து காண்கிறது. நீலநிறமுள்ள சங்குப்பூ சாற்றியதும் நீலமாகக் காண்கிறது. ஆனால் இந்தப் பூக்களை அகற்றியதும் அதன் இயற்கையான நிறமின்மை காண்கிறது. சேர்க்கையால் ஏற்பட்ட மாறுதல் நிலைக்கவில்லை. தான் சேர்ந்திருக்கும் வரைத் தன் சிவப்பு நிறத்தை லிங்கத்திடம் ஏற்றிவைத்த சிகப்பு மந்தாரை உபாதி. லிங்கம் சிவந்ததாகக் காண்பது உபாதியால்; இயற்கையாக அல்ல. சேதனம் ஜடப் பொருளுடன் கூடியிருப்பதால் ஜடப்பொருளும் சேதனம் போல்

தோன்றும். சேதனத்தையும் ஜடப்பொருளாக மதித்து ஜடத்தின் குணங்களை அதன்மேல் ஏற்றிவிடுகிறோம். இவ்விரண்டும் அறியாமை எனும் உபாதியால் ஏற்படும் பிரமை. ஸ்படிகலிங்கத்தில் பூவை அகற்றியதும் செந்நிறம் காண்பதில்லை. சேதனத்தில் ஜடத்தின் சேர்க்கையை அகற்றி அறிவதால் அதன் மேலேற்றி வைத்திருந்த ஜடகுணங்கள் அனைத்தும் மறைந்துவிடுவதை உணரலாம். சித்-பேரறிவு வடிவிலுள்ள ஆத்மா இயற்கையாக குணங்கள் செயல்கள் அற்றவன். குணங்களும் செயல்களும் ஜடத்தைச் சார்ந்தது. ஜடத்துடன் சேர்த்தறிவதால் இவன் அவள் இது அது என்ற பேதபாவனைக்கிடம் ஏற்பட்டது. இந்த பேத பாவனைக்கு ஆத்மா எது, அனாத்மா-ஆத்மாவாக இல்லாதது எது என்று பிரித்தறியாதிருப்பது உபாதியாக நின்று உதவுகிறது. இதனை அகற்றியதும் உண்மை நிலை புரிகிறது. தேவி உபாதி நீக்கிய நிலையில் அறியத்தக்கவள்.

1423-03 மாறுபட்ட தோற்றத்திற்குக் காரணமான உபாதி போலியானது. உபாதி எதையும் மாற்றுவதில்லை. மாற்றும் சக்தி படைத்ததாக வேடம் தாங்கி விளையாடும். போலியான காரணமானதால் ஏமாற்றும். அறிவைத் தராது. தேவியிடம் இந்த உபாதித்தன்மை சிறிதுகூடக் கிடையாது. இது உபாதி என்று அறிந்தவனை உபாதி ஏமாற்ற இயலாது. (154)

1424-01 நிர்-ஈச்வரா. தன்னையடக்கி ஆள்பவரில்லாதவள்.

1424-02 உலகனைத்தும் அவளது ஆளுகைக்குட்பட்டவை. அவள்தான் ஈசுவரி. அவளுக்கு ஒரு ஈசுவரனில்லை. அவளது சக்தியின் ஓரம்சமாவது பெற்றவன்தான் பிறரை ஆட்படுத்தமுடியும். சிவனேகூட அவளது துணை கொள்வதால் மட்டுமே ஈசுவரனாக விளங்குகிறான். ஈசுவரருக்கும் ஈசுவரியான அவளுக்குமேல் ஒரு ஈசுவரன் கிடையாது.

1424-03 மீமாம்ஸா சாஸ்திரமும் ஸாங்கிய சாஸ்திரமும் ஈசுவரனைக் காரணப் பொருளாக ஒத்துக்கொள்வதில்லை. மீமாம்ஸையின்படி வினையே உலகின் எல்லாச் செயல்களுக்கும் காரணமாகிறது. வினையே எல்லாவற்றையும் நிர்வகிக்கக்கூடுமானதால் ஈசுவரன் என ஒன்று தேவையில்லை. ஸாங்கியத்தில் இயற்கையே அந்த சக்தி பெற்றது. அங்கும் ஈசுவரன் அவசியமில்லை, இந்த இருவரது நிரீசுவரவாதத்தின் உட்பொருளாயிருப்பவளும் அவளே. வினையும் இயற்கையும் தானேயாகி உலகை இயக்கி நிரீசுவரவாதத்திற்கு இடமளிப்பதால் நிரீசுவரமாக இருப்பவளும் அவளே. (155)

**1425-01** நீராகா. ஆசையற்றவள்.

1425-02 மனம் புத்தி சித்தம் அஹங்காரம் என அந்த:கரணம் நான்குவகைப்படும். "இது இருந்தால் நல்லது, இதைப் பெறலாம்" என்ற எண்ணம் ஸங்கல்பம்; அதனைச் செயலாற்றுமுன் "பெற்றால் நல்லதா கெட்டதா" என்று சஞ்சலப்படுவது விகல்பம்; இது இரண்டும் மனத்தின் செயல். மனப்போக்கை ஆராய்ந்து "இது நல்லதே; ஏற்போம்; இது கெட்டதே; தவிர்ப்போம்" என்று நிச்சயிப்பது புத்தியின் செயல். "இது பற்றி முன்னர் என்ன செய்தோம்? என்ன விளைந்தது" என்று முன் அனுபவத்தை புத்திக்குப் படம் பிடித்துக்காட்டுவது சித்தம். "நான் செய்வேன்; என்னால் முடியும்" என்ற ஜீவனின் தன்மானம் அஹங்காரம். இந்த நான்கும் அந்த:கரணம். ("மநோபுத்தி: அஹங்கார: சித்தம் கரணம் ஆந்தரம். ஸம்சய: நிச்சய: கர்வ: ஸ்மரணம் விஷயா: அமீ") இந்த நான்கும் ஜடமாயினும், ஆத்மாவின் பேரொளியில் பட்டமையால், தனக்குச் சேதனமென்ற போர்வை போர்த்திக் கொண்டு ஆத்மா என்றே தன்னை அறிமுகப்படுத்திக் கொள்ளும். இவைகளின் போக்கு ராகம், மதம், கவலை, மமதை, மோஹம், குரோதம், லோபம், ஸம்சயம், விகல்பம், பேத உணர்வு முதலிய பல உணர்ச்சிகளின் மூலம் வெளிப்படும். இவை ஆத்மாவின் தன்மைகள் அல்ல. ஆத்மாவிடம் சிறிதும் பொருந்ாதவை. இவைகளை ஆத்ம குணங்கள் என நம்பி அவைகள் காட்டும் வழியில் செல்பவன் அழிவிற்கு உட்படுகிறான். "இவை ஆத்மாவுடன் பொருந்தாதவை, ஜடமான அந்த:கரணத்தின் கோலங்கள்" என அறிந்து இவைகளை அடக்கவோ, இவைகளை விட்டகலவோ, இவைகளுடன் தொடர்பின்றி இருக்கவோ முயல்பவன் மேன்மை பெறுகிறான்; விடுதலை பெறுகிறான். "ஆத்ம ரூபிணியான தேவியிடம் அந்த குணங்கள் இல்லை. அப்படி அறிந்து தேவியை வழிபடுபவன் இந்த குணபந்தத்திலிருந்து விடுவிக்கப்படுகிறான்" என்பதை உணர்த்தும் வகையில் 'நீராகா' என்ற இந்த நாமத்திலிருந்து தொடங்கி 'நிரத்யயா' என்ற 187-வது நாமம் வரை ஸஹஸ்ரநாமம் விளக்கம் தருகிறது.

1425-03 ராகம்-ஆசை, காமம், இச்சை-எல்லாம் ஒரே பொருளுடையவை. 'இது வேண்டும்' என்ற விருப்பம் ராகம். அது தேவியிடம் இல்லை. ஆசைப்படுவது மனம். அது சேதனமல்ல. தேவி சேதனம். (சேதனம்—அறிவால் இயங்குவது, ஜடம்—இயக்கமற்றது அசேதனம்) 'அது நம்மிடம் இல்லை' என்ற எண்ணத்தின் விளைவு விருப்பம். அது என்றால் வேறான பொருள். தன்னிலும்

வேறுபட்ட பொருளில்லாமையால் தேவிக்கு விருப்பம் ஏற்படுவதில்லை. எல்லா ஆசைகளும் நிறைவேறிப் பூர்ணமாக (அவாப்த ஸமஸ்தகாமா) இருப்பதாலும் விருப்பமில்லை.

1425-04 'அது இருந்தால்தான் ஆனந்தம் ஏற்படும்' என்ற எண்ணமும் விருப்பத்தின் காரணம். இந்த எண்ணம் தவறானது. ஆனந்தம் பொருளிலில்லை. இது ஆனந்தம் எனக்கொள்ளும் மனப்பாங்கை ஒட்டியது. நேற்று ஆனந்தத்தைத் தந்த பொருள் இன்று ஆனந்தத்தைத் தரவில்லை. ஆனந்தம் அதனிடம் இருந்திருக்குமானால் இன்றும் அது ஆனந்தத்தைத் தந்திருக்கும். நேற்று அதனைப் பெற்றுக் களித்த மனம் இன்று அவ்வாறு அதனைப் பெற்றுக் களிக்கவில்லை. மனத்தின் சார்பு இன்று மாறுபட்டுள்ளதே காரணம். வாஸனை வசப்பட்ட மனமே இத்தகைய இச்சா துவேஷங்களுக்குக் காரணம். ஆத்மஸ்வரூபிணியான தேவி மனமாற்றத்திற்கு உட்படாதவள். அதனால் அவள் ராகமில்லாதவள். 'இது எனக்கு உவக்கும்' 'எனக்கு உவக்காது' என்ற முன் வாஸனையால் ஏற்பட்ட பற்று வினைப்பயனாக அமைகிறது. தேவி வினைக்கு அப்பாற்பட்டவள். அதனால் அவளிடம் ராகம் இல்லை. நீராகா. (156)

1426-01 ராக-மதனீ. ஆசையைக் கடைந்து வெளிப்படுத்துபவள்.

1426-02 மதனம்-கடைதல். உள் ஒளிந்து எளிதில் வெளிப்படாதிருக்கும் பொருளைக் கடைந்து வெளிப்படுத்திப் பிரிப்பர். ஆசை எதனால் ஏற்படுகிறது? ஆசை நிறைவேறினால் என்ன லாபம்? அது நிறைவு தருகிறதா? அப்படிப் பெற்ற நிறைவு நிலைத்திருக்கிறதா? மறுபடி அதுவே மற்றொரு ஆசையைத் தூண்டாதிருக்கிறதா? தூண்டுமாயின் நிறைவு பெறவில்லை என்றுதானே பொருள்? முதலில் ஆசைப்படும்போது அது கிட்டினால் நிறைவு ஏற்படும் என்று நம்பினாயா? நம்பிக்கை பொய்த்ததன் காரணம் என்ன? நிறைவு நாடப்பட்ட பொருளால் கிடைக்குமா? போதுமென்ற மனமே நிறைவை உணரும் என்பார்களே? அது உண்மையா? என்று ஆசையாகிய எண்ணங்களைக் கடைந்து அதனுள் வெண்ணெயாகிய மனநிறைவு இல்லை எனக் கண்டுகொள்ளச் செய்பவள். அதன் விளைவாக வைராக்கியம் எனும் வெண்ணெய்யை நாடிச் செல்லும் மனத்தைத் தந்து அதனால் ஈசுவரார்ப்பணமாக்கப் பெற்ற பணிகள் மூலம் மனத் தெளிவளித்து அந்த ராகமற்ற மனத்தில் 'நீராகா'வாகத் தோன்றுபவள்.

1426-03 ராகம் முழுவதும் அழியமுடியாத இடத்தில் ராகஸ்வரூபமான தன் பாசத்தால் ராகத்தை வெற்றிகொள்ளச் செய்கிருள். (பா-0705) (157)

1427-01 நிர்மதா. மதமில்லாதவள்.

1427-02 மத:—திமிர்; ஆசை நிறைவேறினல் ஆணவத்தால் திமிர் ஏற்படுகிறது. 'மற்றவருக்குக் கிட்டாதது எனக்கு கிட்டியுள்ளது' 'என்ருல்தான் ஆசைப்பட முடிந்தது.' 'என்ருல்தான் பெறமுடிந்தது' என்ற எண்ணம் திமிராகிறது. 'முடியாததொன்றைச் சாதித்தோம்' என்ற எண்ணம் தேவிக்கு வராது. தனது சாதனேயைப் பிறரிடம் காட்டிக்கொண்டால்தான் மதம் பயன்படும். பிறரையே காணுத தேவி மதத்தை எங்கு காட்டுவாள்? அதனல் தேவி நிர்மதா. (158)

1428-01 மதநாசிநீ. மதத்தை அழிப்பவள்.

1428-02 ஆசை நிறைவேறவிருக்கும்போது ஏற்படும் தடையால் மதம் அழியும். ஆசை அவள் அருளால் நிறைவேறுகிறது என்ற உண்மையை உணர்ந்தால் மதம் மறைகிறது. இரண்டு வகையாலும் தேவி மதத்தை அழிப்பவள். தேவி மதமற்றவள். நிர்மதா. அதனுல் அவள் மதநாசினி ஆவாள். மதமுள்ளவள் மற்றவர் மதத்தை அழிக்கமுடியாது. (159)

47 निश्चिन्ता निरहंकारा निर्मोहा मोहनाशिनी । 163
निर्ममा ममताहन्त्री निष्पापा पापनाशिनी ॥ 167

நிச்சிந்தா நிரஹங்காரா நிர்மோஹா மோஹநாசிநீ ।
நிர்மமா மமதாஹந்த்ரீ நிஷ்பாபா பாபநாசிநீ ॥

1429-01 நிச்-சிந்தா. சிந்தையற்றவள்.

1429-02 சிந்தை – எண்ணம், நினேவு என்று பொருள்படும். ஆனல் வேதனே தரும் நினேவே சிந்தா என்று வழக்கில் உள்ளது. பிறரை ஏமாற்றும் எண்ணத்தையும் சிந்தா என்பர். இவ்விரண்டும் அற்றவள்.

1429-03 'இல்லேயே' '' இருப்பது போய்விட்டால் ''? என்று இருவகையில் எண்ணம் வேதனே தருகிறது. இவ்விரு எண்ணங்களும் அவளுக்குத் தோன்ருதாகையால் நிச்சிந்தா. அவளே பிரபஞ்சம். அதில் அவளுக்கு எதிரி கிடையாது. அதனுல் கெடுக்கும் எண்ணம் யாருக்குமில்லே. அதனுலும் நிச்சிந்தா. (160)

1430-01 நிர்-அஹங்காரா. அஹங்காரம் அற்றவள்.

1430-02. 'தான்' அல்லாத ஜடப்பொருள் செய்ததைத் தன்னில் ஏற்றிப்பார்ப்பது ஆத்மாவிடமுள்ள அஹங்காரம். ஆத்மா என்ற பேரொளி பட்டு ஜடமான புத்தி இயங்குகிறது. அந்த புத்தி இயக்கத்தால் நடந்ததை ஆத்மாவே நடத்தியதுபோல் புத்தி விளம்பரப்படுத்தும். இது புத்தியிடமுள்ள அஹங்காரம். அகர்த்தா கர்த்தாவென்றும், கர்த்தா அகர்த்தாவென்றும் நினைப்பது அஹங்காரமாகிறது. பிரமை காரணமாக ஏற்படும் இந்த அஹங்கார மற்றவள் தேவி.

1430-03 'பலவாக மாறுவேன்' (பஹுஸ்யாம்) என்ற ஈச்வர ஸங்கல்பம் மாயையில் பிரதிபலித்துப் பல பொருள்களாக மாறத்தக்க மூலப்பொருள் தொகையாகிய மஹத் எனும் தத்துவத்தை உண்டாக்கியது. ஈசுவரஸங்கல்பம் மேலும் வலிவடைந்தபோது. தனித்தனி மூலப்பொருளாகப் பிரியத்தக்கதான அஹங்காரம் எனும் தத்துவம் மஹத்திலிருந்தும் தோன்றியது. இந்த அஹங்காரமே பூததன்மாத்திரங்களாகவும் பொறிகளாகவும் மனமாகவும் பிராணனுகவும் வடிவெடுத்தது. இவைகளிலிருந்து விரிந்த இந்த உலகம் தோன்றிற்று. உலகம் தோன்றக் காரணமாயிருந்த இந்த அஹங்காரம் தேவி அல்ல. அதற்கும் மேம்பட்டவள் அவள் – நிரஹங்காரா. (நா. 397-401) (161)

1431-01 நிர்-மோஹா. மதிமயக்கமற்றவள்.

1431-02 நாடிய பொருள் கிட்டாதபோது புத்தி மயங்குகிறது. அது எல்லாவற்றையும் இழந்துவிட்டாற்போன்ற கலக்கத்தைத் தருகிறது. ஒன்றை இழக்காதபோது அதனை இழந்துவிட்டது போன்று கலங்குவது மோஹம். இத்தகைய மதிமயக்கமற்றவளானதால் நிர்மோஹா. (162)

1432-01 மோஹ-நாசிநீ. மதிமயக்கத்தைப் போக்குபவள்.

1432-02 உண்மை அறிவால் மயக்கம் தெளியும். மயக்கம் மோகத்தால்-பிரமையால் ஏற்படுவது. உண்மை அறிவு பிரமைக்கு எதிரி. பழுதைப் பாம்பெனக் கண்டவன் கொண்டது மோகம். பழுதைப் பழுதெனக் காண்பது ஒன்றுதான் அதனைப் போக்கும், பல பொருள்களை உணர்வதால் ஏற்படுவது மயக்கம். பொருள்களினூடே துலங்கும் உண்மைப் பொருளை அறிய அம்மயக்கம் நீங்கும், அப்படி உண்மை அறிவைத் தந்து மோகத்தை நீக்குபவள் தேவி. (163)

1433-01 நிர்-மமா. மமதை இல்லாதவள்.

1433-02 மம-தா- என்னுடையது என்ற எண்ணம் பற்றை வளர்க்கிறது. அதனால் உடல்வரை விரிந்திருந்த "நான்" வீடாக, பணமாக, மற்றும் பல நாடிய பொருளாக விரிந்துவிட்டது. இப்படித் 'தன்'னுடன் சம்பந்தமில்லாத பல பொருள்களில் 'தான்' சம்பந்தப் படுவதே மமதா. பேத உணர்ச்சி அதிகமாக ஆக இது வளரும். இது வளர வளரப் பேத உணர்ச்சி வளரும். (நா. 178-179) தன்னைத் தவிர வேறு பொருள் நோக்கற்ற தேவி நிர்மமாவாக விளங்குகிறாள். (164)

1434-01 மமதா-ஹந்த்ரீ. மமதையைப் போக்குபவள்.

1434-02 உடலாகிய ஜடப்பொருளில் நான் என்ற எண்ணம்—அஹந்தை; பிரமையால் ஏற்பட்டது. அது விரிந்து அதனுடன் தொடர்பு கொண்ட 'நான்' அல்லாத பொருள்களில் சொந்தம் கொண்டாடும் மமதைக்கு இடம் தந்தது. பிரமை நீங்க, அகந்தை முன்னதாக அழிய, அதன் விரிவான மமதையும் நீங்குகிறது. பிரமை நீங்க உண்மை அறிவைத் தருகிறாள் தேவி. (165)

1435-01 நிஷ்-பாபா. பாபமற்றவள்.

1435-02 நற்செயல் புண்ணியத்தையும் கெட்ட செயல் பாபத்தையும் விளைவிக்கிறது. மனம் வாக்கு காயம் என்ற மூன்று கரணங்களும் கெட்டதான முடிவுகொண்ட செயலைப் புரிய பாபம் விளைகிறது. கெட்ட எண்ணம் கெட்ட சொல்லாகிப் பின் கெட்ட செயலாகிறது. கெட்ட எண்ணம் கெட்ட வாசஸனையால் ஏற் பட்டது. முற்பிறவிகளிலும் இப்பிறவியில் இச்செயலுக்கு முன் னரும் செய்த கெட்ட வினைகள் மனதில் ஏற்படுத்திய பாதிப்பே கெட்ட வாசனை. இன்று புரிந்த கெட்ட செயலும் இத்தகைய கெட்ட வாசனையை ஏற்படுத்தும். அதனால் இன்று புரியும் கெட்ட செயலின் விளைவு இன்று இச்செயலுடன் மாய்வதல்ல. சங்கிலித் தொடராக அது மேன்மேலும் கெட்ட செயலைச் செய்யத் தூண்டி விடும். இதனையே பாபம் என்கிறோம். கெட்ட எண்ணம் ஆசை யால் விளைவது. 'நீராகா'வான அவளிடம் பாபம் ஒட்ட முடியாது. (166)

1436-01 பாபநாசிநீ. பாபத்தைப் போக்குபவள்.

1436-02 பாப வாஸனை அழிந்தால் பாபம் செய்யும் மனப் பான்மை தொடராது. வாஸனை—மணம். கெட்ட மணத்தைப் போக்க அது உற்பத்தியாகக் காரணமாயிருந்ததை அழிப்பது;

கெட்ட மணம் தரும் பொருளை அகற்றுவது, கெட்ட மணத்திற் கெதிரான நல்மணத்தைக் கெட்டமணம் மறையுமளவிற்கு அதிகமாக பரப்புவது என மூன்று உபாயங்கள் உண்டு. அதேபோல் மனதில் உள்ள கெட்ட வாஸனையைப் போக்க (1) வாஸனைக்குக் காரணமாயிருந்த அறியாமை, அதனால் ஏற்பட்ட ராகம் என்ற இரண்டையும் அழிப்பது. (2) கெட்ட வாஸனை தூண்டிக்கொண்டிருக்கும் போதும் கெட்டதைச் செய்வதில் கோபத்தை வளர்த்துக் கெட்டதைச் செய்ய மாட்டேன் என்று வீம்பைக் கடைபிடிப்பது. (3) கெட்டதற்கெதிரான நல்ல வாஸனைகளைத் தரும் நற்பழக்கங்களைப் பலவந்தமாக ஏற்படுத்திக்கொள்வது என்ற மூன்றும் உபாயமாகும். தேவி அஞ்ஞானத்தைப் போக்குகிறாள். அதனால் வாஸனை அழிகிறது. த்ருதி: — உறுதி மனப்பான்மையாக (நா. 446) இருந்து க்ரோதம் ஞானம் என்ற அங்குசம் எனும் ஆயுதத்தைப் பயன்படுத்திக் (நா. 9) கெட்ட வழிகளில் நாட்டத்தைத் தடைசெய்கிறாள். தனது நாமபாராயணம் முதலியதில் ஈடுபடுத்தி அதனால் புண்ணியத்தை வளர்த்து (நா. 544) நல் வாசனைகளை ஏற்படுத்துகிறாள். இதன் மூலம் பாபத்தைப் போக்குகிறாள். (167)

48 निष्क्रोधा क्रोधशमनी निर्लोभा लोभनाशिनी । 171
निःसंशया संशयघ्नी निर्भवा भवनाशिनी ॥ 175

நிஷ்க்ரோதா க்ரோதசமநீ நிர்லோபா லோபநாசிநீ 1
நிஸ்ஸம்சயா ஸம்சயக்நீ நிர்பவா பவநாசிநீ 11

1437-01 நிஷ்-க்ரோதா. கோபமில்லாதவள்.

1437-02 வெறுப்பிற்குள்ளாகுபவரிடம் கோபம் வரும். ஆசை தடைபடும்போது தடைபடுவதற்குக் காரணமானவரிடம் கோபம் வரும். இந்த இரண்டிற்கும் ஏதுவில்லாததால் தேவிக்குக் கோபம் இல்லை. அவளுக்கு வேண்டாதவனும் இல்லை; வேண்டியவனும் இல்லை. அவளது ஆசை எதனாலும் தடைபடாது. அதனால் நிஷ்க்ரோதா. (168)

1438-01 க்ரோத-சமநீ. கோபத்தை அடங்கச் செய்பவள்.

1438-02 காமமும் குரோதமும் ஸாதகனுக்கு முக்கிய சத்துருக்கள். குரோதத்துடன் செய்யும் நற்பணிகள் கூட அழிவிற்குக் காரணமாகக்கூடும். பச்சை மண்ணாலான குடம் ஜலம் நிரப்பப்படின் இளகிக் கரைந்துவிடும். கோபமுள்ளவனிடத்தில்

தெய்வீக சக்தியும் உள்ளே தங்காது. செய்த நற்பணிகள் அனைத்தும் வீணாகிவிடும். பக்தனது குரோத உணர்ச்சியை அடக்க தேவி உதவுகிறாள். (169)

1439–01 நிர்லோபா. பேராசையற்றவள்.

1439–02 "பிறரிடமுள்ள பொருள் தனக்கு வேண்டும்," "தன்னிடம் அந்தப் பொருள் இருக்கிறது. எனினும் அதுவும் கிடைத்தால் தான் நல்லது." "தனக்குத் தேவை இல்லை எனினும் விரும்பாவிடினும் பிறனிடம் அது இருக்கக்கூடாது," "அவன் அதில்லாமல் வேதனைப்படுவதைப் பார்த்துக் களிக்க வேண்டும்." என்று லோப குணம் சிறுகச்சிறுக விரிவுகொள்ளும். மற்ற நல்ல குணங்களிருந்தாலும் பேராசை மற்றதை வீணாக்கிவிடும். தேவி நிறைவுள்ளவள். எடுக்க எடுக்க வற்றாச் சீருள்ளவள். கருணையால் வாரி வாரி வழங்கும் வள்ளல். அவளிடம் லோப குணம் இல்லை. நிர்லோபா. (170)

1440–01 லோபநாசிநீ. பேராசையைப் போக்குபவள்.

1440–02 லோபமற்ற தேவி பக்தனிடம் லோப குணம் இருப்பதைக் காணச் சகியாள். லோபம் எல்லாவற்றையும் கெடுத்துவிடும். காமம் குரோதம் என்ற இரு முக்கிய சத்துருக்களுக்கு ஈடான மற்றொரு முக்கிய சத்துரு லோபம். பொருள் நாட்டத்தைக் குறைத்தும் ஈகை குணத்தை வளர்த்தும் லோபத்தை அழித்துவிடுவாள். (171)

1441–01 நிஸ்-ஸம்சயா. சந்தேகமற்றவள்.

1441–02 தேவி குருவாக வர மிகவும் விரும்புவாள். குருவாகிச் சீடனது சந்தேகத்தைப் போக்குவதில் ஈடுபாடுள்ளவள். பிறரது சந்தேகத்தைப் போக்க முதல் தேவை தனக்குச் சந்தேகமில்லாதிருப்பது. இவள் இருக்குமிடத்தில் கூட ஸம்சயமிருக்காது.

1441–03 மனத்தின் குணங்களில் ஒன்று ஸம்சயப்படுவது. செய்வது நன்மை பயக்குமா என்ற சந்தேகம் அதன் சிறப்புக் குணம். இது புத்தியின் நிச்சய சக்திக்கு இடையூருகிவிடும். தேவியின் வழிபாட்டால் ஸம்சயமற்ற தன்மை வளரும். (172)

1442–01 ஸம்சயக்க்நீ. ஸந்தேகத்தைப் போக்குபவள்.

1442–02 சீடனுக்கு உபதேச காலத்தில் எழும் சந்தேகங்களைப் போக்குவது குருவின் கடமை. குருமூர்த்தியும் (நா. 603) குருமண்டல ரூபிணியுமான (நா. 713) தேவி குரு வடிவில் சீடனின் சந்தேகங்களைப் போக்குகிறாள். (173)

**1443-01** நிர்ப்பவா. பிறப்பற்றவள்.

**1443-02** பவம்-பிறப்பு, உற்பத்தி. ஆதியற்ற பரம்பொருளான தேவி பிறப்பற்றவள். பிறப்பு ஒருதடவை மட்டும் ஏற்படுவதல்ல. ஒருதடவை பிறந்துவிட்டால் பின்னர் பிறந்துகொண்டுதானிருக்க வேண்டும். பிறப்பதற்காக இறக்கவேண்டும். இப்படி பிறப்பதற்காக இறப்பதையும் இறப்பதற்காகப் பிறப்பதையும் பவம்-ஸம்ஸாரம் என்பர். தொடர்ந்துகொண்டே இருக்கும் இந்தப் பிறப்பு தேவிக்கு இல்லை. ஏனெனில் அவள் பிறந்ததே இல்லை. உத்பத்தியற்றதற்கு அழிவு கிடையாது. அழிவுறுவதே தோன்றும். (174)

**1444-01** பவ - நாசிநீ. பிறப்பை நீக்குபவள்.

**1444-02** தேவியிடம் பக்தி கொண்டவர்கள் தேவியாகி விடுகிறார்கள். விலைமதிப்பற்ற தன் தனித்தன்மையை அவள் பக்தனுக்கு வழங்கிவிடுகிறாள். அநர்க்கிய - கைவல்ய - பததாயிநீ. (நா. 926) அதனால் பக்தன் ஸம்ஸாரத்தைத் தாண்டுகிறான். பிறப்பு இறப்பு என்ற சங்கிலித் தொடரிலிருந்தும் விடுபடுகிறான். (175)

49 निर्विकल्पा निराबाधा निर्भेदा भेदनाशिनी। 179
निर्नाशा मृत्युमथनी निष्क्रिया निष्परिग्रहा॥ 183

நிர்விகல்பா நிராபாதா நிர்பேதா பேதநாசிநீ ।
நிர்நாசா ம்ருத்யுமதநீ நிஷ்க்ரியா நிஷ்பரிக்ரஹா ॥

**1445-01** நிர்-விகல்பா. விகல்பமற்றவள்.

**1445-02** கல்பம் - சீரான செய்முறை. அதற்கு எதிரிடை விகல்பம். தேவியின் செயலனைத்தும் முறையுடன் அமைந்தனவாக, பலன் தருவனவாக இருக்கும். விகல்பமான செயல் ஒன்றையும் அவளிடம் காண முடியாது.

**1445-03** விகல்பம்-வகை. உலகம் பலவகை. அதன் செயல்கள் பலவகை. எண்ணம் பலவகை. தேவி ஒரேவிதமானவள். ஒன்றேயானவள். அவளிடம் விகல்பம் கிடையாது.

**1445-04** விகல்பம்—சூன்யத்தைப்பற்றிய அறிவு. இல்லாததொன்றைப்பற்றி எண்ணமுடியும்; பேசவும் முடியும். அப்படிப் பேசி அதனால் அந்த சூன்யமான விஷயத்தைப்பற்றிப் பெற்ற அறிவு விகல்பம் எனப்படும். ("சப்த மாத்ரானுபாதீ வஸ்துசூன்யோ விகல்ப:" சொல்லை மாத்திரம் துணைகொண்டு பெறும் பொருளற்ற

அறிவு-சூன்ய அறிவு விகல்பம்"-யோகசூத்திரம்). அவள் சூன்ய மல்ல. அவளைப்பற்றிய அறிவும் விகல்பம் அல்ல. அதனால் நிர்விகல்பா.

1445-05 விகல்பம்—விருப்பத்திற்கு மாருனது. மனம் திடீரென "அப்படி நேர்ந்தாலோ" என்று கோடி காட்டும். அதன் விருப்பத் திற்கு எதிரானதொன்று விளைந்தால் அப்போது என்ன செய்வ தென்று வகை அறிய முன்னோட்டம் இந்த விகல்பம். அவள் விருப்பத்திற்கெதிரானது ஒன்றுமே விளைவதற்கில்லை. அதனால் நிர்விகல்பா. (176)

**1446-01 நிர்-ஆ-பாதா. மறுப்பிற்குட்படாதவள்.**

1446-02 முதலில் ஒருவாறிருந்ததாக அறிந்த ஒன்று பின்னர் 'அது அவ்வாறல்ல' என்ற அறிவால் மறுப்பிற்குட்படுகிறது. கிளிஞ் சல் வெள்ளிபோல் தோன்றிற்று. பிற்பாடு 'அது வெள்ளியல்ல' என்று மறுப்பிற்குட்படுகிறது. இது பாதம். ஆ-பாதம் முழுவதும் மறுப்பு. தேவி அப்படி முற்றிலும் மறுப்பிற்குட்படாதவள். அவளை எப்படி அறிந்திருந்தபோதிலும் அது உண்மையே. அவளைப் பலவிதமாக அறிந்துகொள்கிறோம். ஒன்றையொன்று மறுப்பதில்லை மஹா-ஆஸக்தி: ஆக (நா. 109) உள்ளவளே நீராகா (நா. 156) வாகவும் இருப்பாள். மிக விருப்பங்கொள்பவளே பற்றற்றவளாக இருப்பாள். (177)

**1447-01 நிர்-பேதா. பேதமற்றவள்.**

1447-02 ஒன்றின் தன்மை மற்றொன்றில் முழுவதும் இருப்ப தில்லை. அதனால் ஒரு பொருள் மற்றொரு பொருளிலிருந்தும் வேறு படுகிறது. 'இது அது அல்ல' என்றறிய உதவுவது பேத உணர்ச்சி. எல்லாவற்றிலும் தேவி பரவி நிற்பவள். இது இதுவாக இருப்பதும் அது அதுவாக இருப்பதும் அவள் அததனுள் இருப்பதால். இப்படி அததுவாக அவளே இருப்பதால் அவளிடம் வேற்றுமை காண முடியாது. தானே தன்னிடமிருந்து வேறுபடமுடியாது. தேவி அதனால் நிர்பேதா. (178)

**1448-01 பேதநாசினீ. பேத உணர்வை அழிப்பவள்.**

1448-02 அவளை வழிபடுபவன் எங்கும் எதிலும் அவளைக் காண்கிறான். அவளது கைப்பாவையாக எல்லாமே ஆடுவதை உணர்கிறான். மாறுபட்ட உலகின் ஊடே மாறுபடாத அவளைப் பார்க்கும் அவன் கண்களுக்கு மாறுபடும் உலகம் தனித்துத் தோன்றுவதில்லை. மாறுபடும் உலகம் தனித்துத் தோன்றும்போது தான் பேத உணர்ச்சிக்கு இடமுண்டு. (179)

**1449-01** நிர்-நாசா. முடிவற்றவள்.

**1449-02** ஸ்தூலமான ஜடப்பொருளில் ஏற்படும் ஆறு விகாரங்களில் கடைசியில் அமைவது நாசமாகும். (பா. 1414) விகாரங்களற்ற தேவியிடம் நாசமும் கிடையாது. (180)

**1450-01** ம்ருத்யு-மதனீ. மரணத்தைப் போக்குபவள்.

**1450-02** பகல், சந்தி, இரவு, சந்தி என்று மாறி வருவதில் பகலைக்கண்டால் மகிழ்ச்சியும் இரவில் பயமும் ஏற்படலாம். பகலில் பயமும் இரவில் மகிழ்ச்சியும் அடையலாம். இது மனநிலையைப் பொறுத்தது. மாறிக்கொண்டே வருவதில் ஒரு மாற்றநிலை மரணம். அது பிறப்பிற்கு முன்நிலை. பிறப்பு பின் தொடரவிருப்பதை அது அறிவிக்கிறது. கட்டாயம் ஏற்படக்கூடிய மாறுதலையும், முடிவற்று அது தொடர்வதையும் கண்டு பயப்படுவதும் சோகப்படுவதும் மதியீனம். சிறுவன் தான் யுவனானதை உணர்ந்து பயமோ சோகமோ உணராததுபோல், மரணத்தையும் அதனைப் பின் தொடரவிருக்கும் பிறப்பையும் உணர்ந்து வேதனையைத் தவிர்க்க வேண்டும். அழிவற்ற எவ்வித மாறுதலுக்குமுட்படாத ஆத்மாவா யிருப்பவன் தனது சட்டை போன்ற உடல் அழிவதால் தன்னிடம் ஏதும் மாற்றமேற்படுவதற்கில்லை என்பதை உணர்ந்து வேதனைப் படமாட்டான். இவ்வாறு மரணத்தைக்கடைந்து தத்துவ ஞானம் ஏற்படுத்தி மரணத்தை (ஏற்படமுடியாதது ஏற்படும் என்ற கிலியை)ப் போக்கிவிடுகிறாள். (மதனம்-பிரித்து விலக்குவதற்காகக் கடைதல்).

**1450-03** மார்க்கண்டேயனுக்கு என்றும் பதினாறு வயதினனாக அமைந்து அதிலிருந்து மாறாதிருக்கும் பாங்கைத்தந்து, அவனை நித்தியனாக்கியது போல் தன்னடியார்களை மரணத்திலிருந்தும் காப்பாற்றிவிடுகிறாள்.

**1450-04** பக்தன் பாவனையால் அவளாகவே மாறிவிடுவதால் அழிவற்றவன் ஆகிவிடுகிறான் மரணத்தைக்கடைந்து அதை உருவற்றதாக்கிவிடுகிறாள். (181)

**1451-01** நிஷ்-க்ரியா. கருமமற்றவள்.

**1451-02** முன்வினைக்கேற்ப ஜீவனை ஓர் உடலினுட்புகுத்திய தேவி, அந்த உடல் மூலம் மீண்டும் வினைச்சுமை ஏறாதிருக்க ஒரு கட்டுப்பாட்டை விதிக்கிறாள். "இதைச் செய், அதைச் செய்யாதே. இப்படி வாழ்ந்தால் நீ செய்யும் செயலனைத்தும் கடமையின்பாற் படும். கடமையாக அமைந்த பணி வினையாக மாறாது." கடமை

என்று ஸங்கேத மொழியில் குறிப்பிடுவர். 'மஹா' 9 மடங்கான 'சதுஷ்ஷஷ்டி கோடி'—64 கோடி (576 கோடி) யோகிநீ கணங்களால் ஸேவிக்கப்பெற்றவள் என்றும் பொருள் கூறுவது உண்டு.

1639-04 பாஸ்கரராயரைப் பற்றிய ரஸமுள்ள வரலாறு கூறப்படுவது உண்டு. காசியில் பாஸ்கரராயர் கௌலமார்க்கத்தில் மஹா யாகம் எனும் பெருத்த வழிபாட்டை ஏற்படுத்தி அதில் பங்கு கொள்ளுமாறு காசியிலுள்ள தேவீபக்தர்களையும் பண்டிதர்களையும் அழைத்தார். குங்குமாநந்தர் என்ற யோகியைத் தலைவராகக் கொண்டு பண்டிதர்கள் அந்த வேள்வியில் பார்வையாளர்களாகக் கலந்துகொண்டனர். குங்குமானந்த யோகி பாஸ்கரராயரது வழிபாட்டின் உயர்வைக் கண்டு மகிழ்ந்து தேவியின் அருள் சொரியும் அந்த வேள்வியில் தான் கலந்துகொண்டதில் திருப்தியடைந்தார். பொருமையால் மதியிழந்த சில பண்டிதர்கள் பாஸ்கரராயரை வாதுக்கழைத்தனர். மஹாசதுஷ்ஷஷ்டி கோடி யோகிநீ கணஸேவிதா என்ற நாமத்தில் குறிப்பிட்ட யோகினிகள் யாவர்? அவர்கள் பெயர் என்ன? என்று கேள்வி எழுப்பினர். மஹாயாகத்தில் யோகினிகளின் வழிபாடு முக்கியமானது. அவர்களை அறியாமலேயே அந்தப் பணியில் இறங்கியதாக அவரை அவமதிப்புக்குள்ளாக்க நினைத்தே இக்கேள்வியைக் கேட்டனர். பாஸ்கரராயர் உடனே யோகினிகளின் பெயர்களைக் குறிப்பிடுவதாகக் கூறி அவைகளை எழுதிக்கொள்ளச் சொன்னார். பல்லாயிரக் கணக்கான ஸஹஸ்ரநாமங்களின் விரிவுக்கொப்பான விரிவு கொண்ட அந்தப் பெயர் பட்டியல் பாஸ்கரர் வாயிலிருந்து தங்கல் தடையின்றி வந்துகொண்டிருந்தது. சில நொடிகளிலேயே பெயர் எழுதிக் களைத்த பண்டிதர்கள் அதனை நிறுத்திவிடக் கோரினர். இதை ஞான திருஷ்டியின் மூலம் கவனித்துவந்த குங்குமானந்தர், தேவி பாஸ்கரரின் தோளில் அமர்ந்து தானே பாஸ்கரர் வாயிலிருந்து யோகினிகளின் பெயரைச் சொல்லி வருவதைக் கண்டு அங்கேயே தரையில் விழுந்து வணங்கி கண்ணீர் மல்க நின்றார்.

குங்குமானந்தர் கண்டு மகிழ்ந்த தேவியின் தோற்றத்தைத் தானும் காணவேண்டுமெனப் பிடிவாதம் பிடித்த நாராயண தீர்த்தர் என்பவர் பாஸ்கரரது கருணையால் அதனைப் பெற்றார். ஆனால் அவர் உடனே கண்பார்வை இழந்தார். பாஸ்கரரது பூஜா தீர்த்தம் பெற்றுக் கண்களைத் துடைக்க மீண்டும் பார்வை பெற்றார்.

பாஸ்கரர் தேவியைப் பற்றிய ரகசியமான பல விபரங்களை அறிந்தவரானாலும் தமது உரையில் சிலவற்றை மட்டும் மிக விளக்க

மாகக் கூறிவிட்டுக் குருவினிடமிருந்து அறிந்துகொள்ளத் தக்கவை என்று சிலவற்றை குறிப்பிட்டிருக்கிருர் என்பதனைக் காணும்போது மந்திரசாஸ்திரம் மந்திரத்தை மந்திரமாகக் காப்பாற்றி வந்துள்ளதையும் அப்படிக்காப்பாற்றுவதன் அவசியத்தையும் உணர முடியும். (237)

59 मनुविद्या चन्द्रविद्या चन्द्रमण्डलमध्यगा । 240
चारुरूपा चारुहासा चारुचन्द्रकलाधरा ॥ 243

மநுவித்யா சந்த்ரவித்யா சந்த்ரமண்டலமத்தியகா I
சாருருபா சாருஹாஸா சாருசந்த்ரகலாதரா II

1640-01 மநு-வித்யா. மநுவால் உபாசிக்கப்பட்ட வித்யை.

1640-02 ஸ்ரீவித்யை பன்னிரு உபாசகர்களால் முதலில் உபதேசிக்கப் பெற்றது. அவர்கள் உபதேசித்த பன்னிரு வித்யைகளும் வேறுபட்டவை. இந்த உபாசகர்களை ருஷிகள் என்பர். (மந்த்ரத்ரஷ்டா—மந்திரத்தைக் கண்டவர் ருஷி) இந்த வித்யை ஒவ்வொன்றும் அதனை உபதேசித்த ருஷியின் பெயரைத் தன் பெயராகக் கொண்டவை. மனுவால் உபாசிக்கப் பெற்றதும் உபதேசிக்கப் பெற்றதுமான வித்யை மனுவித்யை.

1640-03 மனு, சந்திரன், குபேரன், லோபாமுத்திரை, அகஸ்தியர், மன்மதன், அக்னி, ஸூர்யன், இந்திரன், ஸ்கந்தன், சிவன், குரோதபட்டாரகர் எனப்படும் துர்வாசர் ஆகிய இவர்களே பன்னிருவர். இவர்களோடு மற்றும் விஷ்ணு, பிரும்மா, நந்தி ஆகிய மூவரும் ஸ்ரீவித்யையைக் கண்டுபிடித்தவர்களாகக் குறிப்பிடப்பெறுகின்றனர். "மஹேச - மர்தவ - விதாத்ரு - மந்மத - ஸ்கந்த-நந்தி - இந்திர - மநு-சந்திர - குபேர - அகஸ்திய-க்ரோதபட்டாரகவித்யாத்மிகே" (தேவீகட்கமாலா) இந்த நாமம் மனுவைக் குறிப்பிடுகிறது. மற்றவர்களைக் குறிப்பிடும் நாமங்கள், 289, 297, 305, 359, 375, 406, 558, 586, 647, 715, 720, 783, 785 ஆகும். (238)

1641-01 சந்த்ர-வித்யா. சந்திரனால் உபாசிக்கப்பெற்ற வித்யை.

1641-02 ஸ்ரீவித்யோபாசகர்களில் ஒருவரான சந்திரனால் உபாசிக்கப்பெற்றதும், உபதேசிக்கப் பெற்றதுமான வித்யையாயிருப்பவள். (239)

1642-01 சந்த்ர - மண்டல - மத்யகா. சந்திரமண்டலத்தின் நடுவில் இருப்பவள்.

1642-02 பௌர்ணமியன்று சந்திரமண்டலத்தின் நடுவே இருப்பவளாகத் தேவியைத் தியானித்து ஸஹஸ்ரநாமத்தைப் பாராயணம் செய்வது ரோகங்கள் விலகவும் நீண்ட ஆயுள் பெறவும் உதவும் ஆயுஷ்கரப்பிரயோகம் என பலச்ருதி (சு-22) கூறுகிறது.

1642-03 சந்திரகண்டம் என்ற சந்திரமண்டலத்தில் தேவி குண்டலினியாக வசிக்கிருள். (பாரா. 1211, 1214) ஸஹஸ்ராரத்தில் சந்திரனது ஸாதா கலை உள்ள இடத்தில் தேவி சிவனுடன் தங்குகிருள். (பாரா. 1216)

1642-04 சந்திரமண்டலம் - ஸ்ரீ சக்கிரம். சந்திரமண்டலத்தையே ஸ்ரீ சக்கிரமாக பாவித்தும் அதில் தேவியை வழிபடுவது உண்டு. அப்படி சந்திரமண்டலமாகிய ஸ்ரீ சக்கிரத்தின் நடுவில் வசிப்பவள் தேவி. (240)

**1643-01 சாரு - ரூபா. அழகிய உருவமுள்ளவள்.**

1643-02 ஸௌந்தரீ, லலிதா, திரிபுரசுந்தரீ முதலான நாமங்களால் தனித்து தேவியின் அழகு பாராட்டப்பெறுகிறது. அழகே தெய்வ வடிவம் கொண்டதா, தெய்வமே அழகு வடிவம் கொண்டதா என்றறிய முடியாத அளவிற்கு அழகானவள் தேவி. (241)

**1644-01 சாரு-ஹாஸா. அழகிய சிரிப்புள்ளவள்.**

1644-02 "ஹாஸோ ஜநோந்மாதகரீ ச மாயா." 'தெய்வத்தின் சிரிப்பு மக்களின் மனத்தை மயக்கும் மாயை' என்பர். "ஹாஸ: பரமாநந்தப்ரத: ப்ரபோத:" 'தெய்வத்தின் சிரிப்பு பரமானந்தமளிக்கும் அறிவின் தெளிவு' என்பர் சிலர். மனத்திற்கு மயக்கமும் ஆனந்தமும் அறிவுத் தெளிவும் தரவல்லதான அழகிய சிரிப்பு உள்ளவள். (242)

**1645-01 சாரு-சந்த்ர-கலா-தரா. அழகிய சந்திரகலையைத் தரிப்பவள்.**

1645-02 தேய்வும் வளர்ச்சியும் மாறி மாறி அமையாமல், அழிவற்ற பூர்ண நிலையில் உள்ள ஸாதா எனும் சந்திரகலை அழகு பெற்றது. 'சித்' எனும் தேவியின் பேரறிவு வடிவமே இந்தக்கலை. அதனால் இது மிக அழகிய கலை. இதைத் தேவி சிரசில் தரித்துக் கொண்டிருக்கிருள்.

1645-03 சந்திரகலை எனும் அழகி, தனக்குக் கணவனாக வரவிருப்பவன் தேவியை வழிபடும் ஸுதர்சனன் என ஸ்வப்னத்தில்

தேவி கூறியதால் அதனை நம்பி ஸுதர்சனனை மணந்தாள் என தேவிபாகவதம் கூறும். அந்த அழகியான சந்திரகலையைத் தாங்கி வாழ்க்கையில் மேம்பாடடையச் செய்தவள் தேவி. (243)

60 चराचरजगन्नाथा चक्रराजनिकेतना । 245
पार्वती पद्मनयना पद्मरागसमप्रभा ॥ 248

சராசரஜகந்நாதா சக்ரராஜநிகேதநா l
பார்வதீ பத்மநயநா பத்மராகஸமப்ரபா ll

**1646-01** சர-அசர-ஜகத்-நாதா. அசைவதும் அசையாதது மான உலகிற்குத் தலைவி.

1646-02 இயங்கும் வடிவிலுள்ள உலகம் ஸூக்ஷ்மமானது. கண்ணிற்குப் புலப்படாதது. இயக்கமில்லாத அசையாத ஜட உலகம் புறத்தோற்றமுள்ளது. இரண்டின் வடிவமாயிருப்பவள் தேவி. (244)

**1647-01** சக்ர-ராஜ-நிகேதநா. ஸ்ரீசக்கிரத்தைத் தன் இருப்பிட மாகக் கொண்டவள்.

1647-02 திரைலோக்ய மோஹனம் முதலான ஒன்பது சக்கிரங்களால் அது விளங்குவதால் சக்ரராஜம். யந்திரங்களாகிய சக்கிரங்களுக்குள் சிறப்பு மிக்கதும் கூட. அதனை இருப்பிடமாகக் கொண்டவள் தேவி. (245)

**1648-01** பார்வதீ. மலையரசனின் பெண்.

1648-02 பர்வதத்தை-மலையைத் தன் தகப்பனுக்கி அவருக்குப் பெருமை தருவதற்கே அவரது பெண்ணாகத் தோன்றியவள். (246)

**1649-01** பத்ம-நயநா. தாமரை இதழுக்கொப்பான கண் களுள்ளவள்.

1649-02 தாமரை இதழ்போன்று நீண்டு சிவந்து குளிர்ச்சி தரவல்ல இனிய தோற்றமுள்ள கண்கள் உள்ளவள். (247)

**1650-01** பத்ம - ராக-ஸம - ப்ரபா. பத்மராகத்திற்கொப்பான ஒளியுள்ளவள்.

1650-02 பத்மராகம்—தாமரை போன்ற சிகப்பு நிறமுள்ள ரத்தினம். அதனுக்கொப்பான மேனி ஒளியுடன் கூடியவள். பத்மம்—மலர்ந்த தாமரை, அதன் சிவப்புடன் ஒத்த செவ்வொளி கொண்டவள் தேவி. (248)

## அதிகாரம் 17

# தேவியின் ஐந்தொழிலும் ஜீவ-ஈசுவரவடிவமும்

61 पञ्चप्रेतासनासीना पञ्चब्रह्मस्वरूपिणी । 250
चिन्मयी परमानन्दा विज्ञानघनरूपिणी ॥ 253
62 ध्यानध्यातृध्येयरूपा धर्माधर्मविवर्जिता । 255

பஞ்சப்ரேதாஸநாஸீநா பஞ்சப்ரம்ஹஸ்வரூபிணீ ।
சிந்மயீ பரமாநந்தா விஜ்ஞாநகநரூபிணீ ॥
த்யாநத்யாத்ருத்யேயரூபா தர்மாதர்மவிவர்ஜிதா ।

**1701-01 பஞ்ச-ப்ரேத-ஆஸந-ஆஸீநா. ஐந்து பிரேதங்களா லான ஆஸனத்தில் அமர்ந்திருப்பவள்.**

1701-02 பிரும்மா, விஷ்ணு, ருத்திரன், ஈசுவரன், ஸதாசிவன் என்ற ஐவரும் பிரும்மத்திடமிருந்து தோன்றியவர்கள். தேவி தனது ஐந்து தொழில் புரியும் சக்தியை இவர்களுக்குப் பகிர்ந்தளிக் கிருள். தேவியின் ஆணைப்படி இவர்கள் படைத்தல், காத்தல், ஒடுக்குதல், திரோதானம், அநுக்கிரஹம் எனும் ஐந்து தொழில்களைப் புரிகின்றனர். மஹாப்பிரளயம் ஏற்பட்டதும் இந்த ஐந்து தொழில் களிலிருந்தும் விடுபட்டுத் தேவியிடம் (பிரும்மத்திடம்) லயித்து விடுகிருர்கள். அவர்கள் அடையும் லயமாவது—ஸதாசிவன் தேவி அமர்ந்துள்ள ஆஸனத்தின் மேம்பலகையாகிருர். மற்ற நால்வரும் அதன் நான்கு கால்கள் ஆகிருர்கள். அவர்கள் தத்தம் நிலையை விட்டுக் கிளம்பிச் சென்றவர்களாதலாலும் மற்றொரு நிலையை அடைந்ததாலும் பிரேதர்கள். பிர-இத:-ஓரிடத்தைவிட்டு மற்றோர் இடத்தை அடையக் கிளம்பியவர். இப்படிச் செல்வது ப்ரயாணம்-யாத்திரை. (இறந்தவனது சடலத்தைப் பிரேதம் என்பது வழக்கு. ஆனால் அதனைவிட்டு மற்றோர் சரீரத்தையோ நரகத்தையோ ஸ்வர்க்கத்தையோ அடையக் கிளம்பிய ஸூக்ஷ்ம-காரண சரீரங் களில் சிக்கிய ஜீவன்தான் பிரேதன். அவனைக்காண முடியாததால் அவன் கிளம்பிவிட்டதன் அடையாளமாக விட்டுச் சென்றதைப் பிரேதம் என வழங்குவர். பிரும்மா முதலியவர்கள் தன் நிலையை விட்டுத் தேவியிடம் லயமடையச் சென்றதால் அவர்களை ப்ரேதர்கள் என இந்த நாமம் குறிப்பிடுகிறது. (பாரா. 907-02-03, 1702-02, நா. 947) (249)

1702-01 பஞ்ச - ப்ரம்ஹ - ஸ்வரூபிணீ. ஐந்து பிரும்மஸ்வ ரூபத்தை உடையவள்.

1702-02 ஆஸனமாக அமைந்த ஐந்து பிரும்மங்களாகவும் இருப்பவள் தேவியே. (பா. 0907-02, 03) பிரும்மத்திலிருந்து தோன்றி ஐந்து தொழில் புரியும் ஐந்து பிரும்மங்களைத் தனது வடிவமாகக் கொண்டவள் தேவி. (பா. 1702-02)

1702-03 ஈசானர், தத்புருஷர், அகோரர், வாமதேவர், ஸத்யோஜாதர் என ஐந்து சிவனது தோற்றங்களையும் பஞ்சப் பிரும்மம் என்று குறிப்பிடுவதுண்டு. இந்த ஐந்து பிரும்மஸ்வரூபத் தில் விளங்குபவள் தேவி.

1702-04 க்ஷேத்ரஜ்ஞன் (புருஷன்), பிரகிருதி, புத்தி, அஹங்காரம், மனம் என்கிற ஐந்தும் பிரும்மவடிவம். ஆதியான ஐந்து தன்மாத்திரங்கள் பிரும்மவடிவம். அந்த வடிவில் அமைந்த வளும் தேவியே.

1702-05 நாராயணன், வாஸுதேவன், பிரத்யும்நன், அநிருத்தன், ஸங்கர்ஷணன் என்ற ஐந்து தோற்றங்களில் விஷ்ணு (எங்கும் நிரம்பியிருக்கும் பரம் பொருள்) உலகைக் காக்கிறது என்று கருடபுராணம் கூறும். அந்த ஐந்து வடிவங்களாயிருப்ப வளும் தேவி. (250)

1703-01 சிந்மயீ. சித்தாக உள்ளவள்.

1703-02 சித்-பேரறிவு. தனித்த பேரறிவாக இருப்பவள் தேவி. இந்தப் பேரறிவில் அறிபவன், அறியப்படும் பொருள், அறிவு என்ற முப்புரம் கிடையாது. முப்புர அறிவிற்கும் காரண மான அறிவாகி நிற்கும் பேரறிவே தேவி. (251)

1704-01 பரம-ஆநந்தா. உயர்ந்த ஆனந்தமாயிருப்பவள்.

1704-02 துண்டாடமுடிவதும் துண்டாயிருப்பதும் (கண்டம்) நிறைவால் ஏற்படும் ஆனந்தத்தைத் தராது. அகண்டமான நிறைவுள்ள பொருள்தான் நிறைவாகிய ஆனந்தத்தைத் தரும். நிறைவேதான் ஆனந்தம், குறைவே துக்கம். நிறைவே வடிவான தேவி நிறைவாகிய பரம—உயர்ந்த ஆனந்தமாயிருக்கிறாள். (252)

1705-01 விஜ்ஞான-கன-ரூபிணீ. நெருக்கம் மிக்க அறிவின் வடிவானவள்.

1705-02 பிரஜ்ஞானம் - பேரறிவு; நிராகாரஞானம் — வடிவ வரம்பிற்கு உட்படாத ஞானம், பிரும்மத்தின் வடிவம்; அறிபவன்,

அறியப்படுவது, அறிவு என்ற முப்புரமற்றது; அகண்டமானது; ஆகாயம் போன்று நீக்கமற நிறைந்திருப்பது (பா. 2340-02,03) விஜ்ஞானம் – விசேஷஞானம், ஸாகாரக-ஞானம்-வடிவவரம்பிற்குட் பட்டது; முப்புரங்கள் மூலம் அறியப்பட்ட தனிப்பட்ட பொருள் பற்றிய அறிவு; முப்புறத்தைச் சார்ந்ததனுல் கண்டம் - துண்டுபட்ட அறிவு; வடிவுள்ள பல சிற்றறிவுகள் நெருக்கம் பெற 'விஜ்ஞான கனம்' ஆகிறது. அத்தகைய சிற்றறிவுத்திரள் வடிவினள் தேவி.

1705-03 விஜ்ஞானம்-புத்தியில் பிரதிபலிக்கும் ஆத்மஸ்வருப மான ஜீவன். அவர்களது கனம்-நெருக்கமான திரள்-ஜீவர்களின் ஸமஷ்டி-அந்த வடிவு கொண்டவள் தேவி. ஜீவர்களின் ஸமஷ்டி வடிவங்களுக்கு வைச்வாநரன், ஹிரண்யகர்ப்பன், ஈச்வரன் என்று விழிப்பு கனவு தூக்கம் என்ற நிலையையும், ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்ற சரீரங்களின் சார்பையும் ஒட்டிப் பெயர் அமையும். (நா. 256-261) (253)

**1706-01** த்யான-த்யாத்ரு-த்யேய-ரூபா. தியானம், தியானிப் பவர், தியானிக்கப்படுபவர் என்ற மூன்ருயுமிருப் பவள்.

1706-02 தேவி பேரறிவு வடிவினள். (நா. 251, 253) அந் நிலையில் உள்ள அவளை அறிய ஒரே உபாயம் தியானம். புலப்படத் தக்க உருவில் இருந்தால், பொறிகளால் அறியலாம். இந்த உருவம் பொறிகளுக்கப்பாற்பட்ட ஸூக்ஷ்ம ரூபம். ஒரு பொருள் பொறிகள் மூலம் அறியப்பட்டபின் அதன் நினைவு தொடர்கிறது. பொறிகளால் அறியப்படாவிட்டாலும் கேள்வி அறிவைக் கொண்டு மனம் தானே ஒரு பொருளை உருவகப்படுத்திவிட முடியும். தேவியை அப்படித்தான் உருவகப்படுத்த முடியும். அப்படி உணரப் பட்டு உருவகப்படுத்தப்பட்டதில் மனம் ஒன்றிப்போய் நிலைத் திருந்தால் அது தியானம். (த்யானம்-சிந்தா-மா்நஸம் ஜ்ஞானம். ப்ரத்யயைகதாநதா த்யானம்) இப்படி அமையும் தியானம் எனும் நிலைத்த மன உணர்வு, தியானிப்பவன், தியானிக்கப்படும் பொருள் என்ற மூன்றும் தேவியே. (நா. 641) (254)

**1707-01** தர்ம-அதர்ம-விவர்ஜிதா. தர்ம, அதர்மங்களிலிருந்து விடுபட்டவள்.

1707-02 தர்மமும் அதர்மமும் வினைப்பயனுக உடல் பந்தத்தை அடைந்த ஜீவனுக்கு ஏற்பட்டவை. அவன் அடைந்திருக்கும் பல நிலைகளுக்கேற்ப அவை மாறுபடும். ஒரு நிலையில் தர்மமாவது

மற்றொரு நிலையில் அதர்மமாகக்கூடும். ஒருவனுக்குத் தர்மமாக அமைந்தது மற்றவனுக்கு அதர்மமாகக்கூடும். 'இதைச் செய்' என தேவியின் ஆணைவடிவான வேதமும் (நா. 287) அதை ஒட்டி அதை விளக்க வந்த ஸ்மிருதி முதலானதும் கட்டளையிட்டபடி பின் பற்ற வேண்டிய வாழ்க்கை முறை தர்மமாகும். 'இதனைச் செய்யாதே' என அவை கட்டளையிட்டபடி பின்பற்றக் கூடாத வாழ்க்கை முறை அதர்மமாகும். அந்த அந்த ஜீவன் இந்த தர்ம அதர்மக் கட்டளைகளைப் பின்பற்றி நடக்க, அவனிடம் ஒட்டியுள்ள வினைக் கட்டு தளர்ந்துவிடும். ஆகையால் ஜீவனை நல்வழிப்படுத்த ஏற்படுத்திய கட்டுப்பாடு தர்மமும் அதர்மமும். வினைக்கேற்ப உடலும் சூழ்நிலையும் அமைவதால் அதற்கேற்ப தர்மமும் அதர்மமும் நடத்தைமுறையளவில் மாறுபடும். ஆனால் தர்மம், அதர்மம் இவைகளின் லக்ஷயம் மாறுபடாது.

1707-03 தர்மம்-தாரயதீதி தர்ம: - தாங்குவதால் தர்மம். தர்மம்-வரம்பு. வயலைச்சுற்றி ஏற்பட்ட வரம்பு, அந்த வயலில் சேரவிருக்கும் நீர் உரம் போன்றதைச் சிதறாமல் காப்பாற்றவும் மற்ற வயல்களுக்குச் செல்லாமல் தடுக்கவும் பயன்படுகிறது. மற்ற வயல்களுக்கு இதில் தங்கியுள்ளவற்றால் பாதகம் விளையாதபடியும் பாதுகாக்கிறது. தனிப்பட்டவனின் வாழ்க்கைமுறை வகுப்பால் ஏற்படும் தர்மம் எனும் வரம்பு அப்படி அவனையும் சூழ்நிலையையும் காப்பாற்றுகிறது. இவனுக்கு அமைந்துள்ள தர்மம் இவன் மேம்படுவதற்காக அமைந்ததே தவிர, பிறரைத் துன்புறுத்துவதற்காக அல்ல. ஒவ்வொருவரும் அவரவரது வரம்பினுக்குட்படும்போது உலக நெறி சீராகிறது. அதர்மம் அவனவனது வரம்பை மீறிப் போகுதல். தர்மம் வரம்பினுக்குட்பட்டு நெறியாகச் செயல்படும் போது அது அவன் அவன் வேண்டுவதைத் தருகிறது; அதனால் சுகமான வாழ்க்கை அமைகிறது.

1707-04 ஜீவனது மேம்பாட்டிற்காக வகுக்கப்பட்ட தர்மம் அதர்மம் எனும் நெறி வரம்பு தேவியிடம் பயன்படுவதில்லை. வினை தீர்க்கப்படவேண்டிய நிலை அவளுக்கு இல்லை. அதற்காக ஏற்பட்ட நெறிகளும் அவளுக்கு இல்லை. வினைகளுக்கு அப்பாற்பட்ட அவள் வாழ்க்கை நெறிக்கு உட்படுவதில்லை. தர்ம-அதர்ம-விவர்ஜிதா.

1707-05 தர்மம் என்பது தன்மை. தர்மி - தர்மமுள்ளவன். சூடு தன்மை - தர்மம். சூட்டைத் தன் தன்மையாக-தர்மமாகக் கொண்ட நெருப்பு தர்மி. அது எப்போதும் சூடாகத் தான் இருக்க வேண்டும். அது அதற்குத் தர்மம். அதனை மீறி நெருப்பு குளிர்ந்த

தானல் அது அதற்கு அதர்மம். இப்படித் தன்மையால் கட்டுப் பட்டது பொருள். தேவியிடம் இந்த கட்டுப்பாடுகள் கிடையாது.

1707-06 தர்மம்—தன்மையால் ஏற்படும் கட்டு (பந்தம்). ஜீவன் பல தன்மைகளால் கட்டுப்படுகிருன். தகப்பன், பிள்ளை, கணவன், மனைவி, நண்பன் என்ற பல நிலைகளில் பல தன்மைகள் அவனுக்கு அமைகின்றன. ஒவ்வொன்றும் அவனைக் கட்டுப்படுத்து கின்றது. அந்நிலையில் அவனுக்கு பந்தம் (கட்டு) ஏற்படுகிறது. இந்தக் கட்டிலிருந்து விடுபடுவது-அதர்மம்-மோக்ஷம். கட்டுப்பட வேண்டியவனுக்குக் கட்டும் உண்டு, கட்டிலிருந்து விடுபடுவதாகிய மோக்ஷமும் உண்டு. எதிலும் எதனுலும் கட்டுப்பட வேண்டாத தேவிக்குக் கட்டுமில்லை, விடுதலையுமில்லை. தர்ம – அதர்ம -விவர்ஜிதா.

1707-07 தர்மம் தன்மை; அதன் நிலைக்கு முற்றிலும் மாறு பட்ட தர்மி (தர்மத்துடன் தொடர்பு அமைந்தவன், தர்ம முள்ளவன்) அதர்மமாகிருன். மனிதன் பிறக்கும்போதே தகப்பனகப் பிறக்கவில்லை. தகப்பனது தர்மம் பின் வந்து ஒட்டிக் கொண்டது. அதனல் தர்மம் வேறு, தர்மி (தர்மத் தொடர் புள்ளவன்) வேறு. தர்மத்திலிருந்து வேறுபடுவதால் அவன் தர்ம மல்ல. அதனல் தர்மி அதர்மமாகிருன். தர்மம், தர்மி (அதர்மம்) என்ற இரு நிலைகளுமற்றவள் தேவி. (255)

विश्वरूपा जागरिणी स्वपन्ती तैजसात्मिका । 259
63 सुप्ता प्राज्ञात्मिका तुर्या सर्वावस्थाविवर्जिता ॥ 263

விச்வரூபா ஜாகரிணீ ஸ்வபந்தீ தைஜஸாத்மிகா I
ஸுப்தா ப்ராஜ்ஞாத்மிகா துர்யா ஸர்வாவஸ்தாவிவர்ஜிதா II

1708-01 சிருஷ்டிக்கிரமம். (1614-02-04) ‘நான் பலவாக ஆவேன்’ என்று தேவி ஸங்கல்பம் கொண்டாள். உலகம் தோன்றி யது. தோன்றிய இந்த உலகத்திற்கு தேவியின் ஸங்கல்பம் நிமித்தகாரணம். பானை வனைய உதவும் சக்கிரத்தைச் சுழற்றும் தடி போல். தானே ஆவதாக ஸங்கல்பித்ததால் தேவியே உபாதான காரணமுமாயினுள், பானைக்கு மண்போல். ஸங்கல்பம் தோன்றி யதும், உலகமாக மாறவேண்டியதனைத்தும் உருவமற்ற நிலையில் ஒன்று சேர்ந்தது. இது எப்படி உலகமாகப் போகிறதென்பதை அறிய முடியாத நிலை. இந்த அறிய முடியாத நிலையை இருட்டு –தமஸ் (தமோகுணமல்ல) அவ்யக்தம் என்று குறிப்பிடுவர். இது படைப்பின் முதல் நிலை.






## ஸ்ருஷ்டிக்கிரமம்

தேவி

ஸங்கல்பம் (இச்சா சக்தி) (நிமித்தகாரணம்) — மூலப்பிரகிருதி (ஞான-கிரியா சக்தி) (உபாதானகாரணம்)

↓

ப்ரகிருதி (அவ்யக்தம்)

↓

மஹத் (வ்யக்தாவ்யக்தம்-புத்திதத்துவம்)

↓

அஹங்காரம் (வ்யக்தம்-பூதேந்திரியமனத் தத்துவம்)

↓

பஞ்சபூத தன்மாத்திரங்கள்

வ்யஷ்டி (மஹாபூதங்கள்) — ஸமஷ்டி

| | | ஆகாசம் | வாயு | அக்னி | ஜலம் | பிருதிவி | |
|---|---|---|---|---|---|---|---|
| ஞான சக்தி | குணம் | சப்தம் | ஸ்பர்சம் | ரூபம் | சுவை | மணம் | மனனம். |
| | இந்திரியம் | காது | தோல் | கண் | நாக்கு | மூக்கு | மனம் |
| கிரியா சக்தி | குணம் | வசனம் | ஆதானம் | கமனம் | ஆனந்தம் | விஸர்கம் | தாரணம் |
| | இந்திரியம் | வாக்கு | கை | கால் | லிங்கம் | பாயு | பிராணன் |
| | | | | | | | ஸ்தூலபூதம் |
| ஸ்தூல | | $\frac{1}{2}$ | $\frac{1}{8}$ | $\frac{1}{8}$ | $\frac{1}{8}$ | $\frac{1}{8}$ | = ஆகாசம் |
| பூதமாக | | $\frac{1}{8}$ | $\frac{1}{2}$ | $\frac{1}{8}$ | $\frac{1}{8}$ | $\frac{1}{8}$ | = வாயு |
| பஞ்சீ | | $\frac{1}{8}$ | $\frac{1}{8}$ | $\frac{1}{2}$ | $\frac{1}{3}$ | $\frac{1}{8}$ | = அக்னி |
| கரணம் | | $\frac{1}{8}$ | $\frac{1}{8}$ | $\frac{1}{8}$ | $\frac{1}{2}$ | $\frac{1}{8}$ | = ஜலம் |
| | | $\frac{1}{8}$ | $\frac{1}{8}$ | $\frac{1}{8}$ | $\frac{1}{8}$ | $\frac{1}{2}$ | = பிருத்வி |

1708-02 பிறகு அந்த இருட்டாகி நின்ற நிலையிலிருந்து புரிந்தும் புரியாத நிலை, உருவத்தின் குணமும் செயலும், அகலம் நீளம் கனம் ஆகிய பரிமாணங்களும் தோன்றாத நிலை, (வ்யக்த-அவ்யக்த நிலை) இரண்டாவதாகத் தோன்றிற்று. அவயவங்களாகப் பிரிந்தால் தான் பரிமாணங்களும் வெளிப்படும். அந்த அளவிற்கு வியக்தமாகவுமில்லை. அவ்யக்த நிலையிலிருந்து வ்யக்த நிலைக்கு வரும் நடுநிலை. இதனை 'மஹத்' என்பர். அளவிற்ககப்படாத அளவில் மஹத் (பெரிது). பரிமாணங்கள், அவயவப்பிரிவு, குணம், செயல் தெரியாதிருப்பதால் மஹத். இது புத்தி தத்துவத்தின் உற்பத்திஸ்தானம். இது படைப்பின் இரண்டாம் நிலை.

1708-03 மஹத்திலிருந்து அஹங்காரம் தோன்றிற்று. பரிமாணத்திற்கு உட்படவேண்டிய ஸூக்ஷ்மமான மாறுதல்கள் ஏற்பட்டுக்கொண்டிருக்கும் நிலை. தனித் தனிப் பொருளாகத் தோன்ற வேண்டியதன் மூலக்கரு இது. பிரகிருதி தன்னிடம் அடங்கியுள்ள குணத்தை மூன்றாக்கி இதற்கு உதவ இதனிடம் சேர்த்தது. ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற முக்குணங்கள் அஹங்காரத்திற்கு உதவின. அதிலிருந்து தந்மாத்திரங்கள், பஞ்சபூத ஞானேந்திரியங்கள், மனம், பஞ்சபூத கர்மேந்திரியங்கள், பிராணன், இந்திரியங்களை இயக்கும் தேவதைகள் இவை தோன்றின.

1708-04 அஹங்காரம் ஸத்வகுணத்துடன் சேர ஸாத்விகாஹங்காரமாயிற்று; ரஜோகுணத்துடன் சேர்ந்து தைஜஸாஹங்காரமாயிற்று. தமோகுணத்துடன் சேர்ந்து தாமஸாஹங்காரமாயிற்று. தாமஸாஹங்காரம் தைஜஸத்தின் துணையுடன் ஐந்து பூதங்களின் தன்மாத்திரங்களைப் படைத்தது. (அதனால் தாமஸாஹங்காரத்திற்கு 'பூதாதி' என்ற பெயருமுண்டு.) ஸாத்விகாஹங்காரம் தைஜஸத்தின் துணையுடன் ஞானகர்மேந்திரியங்கள் பத்தையும் மனத்தையும் பிராணனையும் தோற்றுவித்தது. ராஜஸாஹங்காரத்திலிருந்து இந்த இந்திரியம்-மனம்-பிராணன் ஆகிய பன்னிரண்டின் தேவதைகளும் தோன்றினர்.

1708-05 ஸாத்விகாஹங்காரம் பஞ்சபூத தத்துவத்தின் உதவி பெற தாமஸாஹங்காரத்தின் துணை நாடியது. மூலப்பிரகிருதியின் ஞானசக்தியும் கிரியாசக்தியும் ஸாத்விகாஹங்காரம் மூலம் வெளிப்பட்டன. அதனால் ஸாத்விகாஹங்காரம் பஞ்சபூததத்துவங்களின் உதவியுடன் ஞானசக்தி மூலம் வியஷ்டியான பூதங்களைக் கிரஹிக்கும் ஐந்து இந்திரியங்களைப் பெற்றது. அவை ஞானேந்திரியங்கள். ஆகாசத்தின் குணமான சப்தத்தை கிரஹிக்கக் காது, வாயுவின்

குணமான ஸ்பர்சத்தைக் கிரஹிக்கத் தோல், அக்னியின் குணமான ரூபத்தை கிரஹிக்கும் கண், ஜலத்தின் குணமான ரஸத்தைக் கிரஹிக்கும் நாக்கு, பிருதிவியின் குணமான கந்தத்தைக் கிரஹிக்கும் மூக்கு இவை ஞான சக்தி மூலம் தோன்றிய வியஷ்டியான பூதங்களின் ஞானேந்திரியங்கள். ஐந்து பூதங்களிலிருந்து ஸமஷ்டியாக ஞான சக்தி மூலம் தோன்றிய ஞானேந்திரியம் மனம்.

1708-06 ஸாத்விகாஹங்காரம் கிரியா சக்தி மூலம் பஞ்சபூத தத்துவங்களின் உதவி கொண்டு பெற்றவை ஐந்து கர்மேந்திரியங்கள். ஆகாசத்தின் கிரியை வசனம் (பேசுவது); அது வெளியாகும் வாக்கு ஆகாசத்தின் கர்மேந்திரியம். வாயுவின் கிரியை ஆதானம் (எடுப்பது); அதைச் செய்வது வாயுவின் கர்மேந்திரியமான கை. அக்கினியின் கிரியை கமனம்-சலனம் (நடப்பது); அதைச் செய்வது அக்கினியின் கர்மேந்திரியமான கால். ஜலத்தின் கிரியை ஆனந்தம்-அதனைத் தருவது ஜலத்தின் கர்மேந்திரியமான ஜநநஉறுப்பு. பிருதிவியின் கிரியை விஸர்கம் (வெளியேற்றுவது); அதனைச் செய்வது பிருதிவியின் கர்மேந்திரியமான பாயு (மலத்துவாரம்). இவ்வைந்தும் வியஷ்டி பூதங்களின் கர்மேந்திரியங்கள். பூதங்களின் ஸமஷ்டியின் கர்மேந்திரியம் பிராணன்.

1708-07 தாமஸாஹங்காரம் பஞ்சபூத ஸூக்ஷ்மங்களைத் தோற்றுவித்தது. அவை தனித்து இருக்கும் வரை பரிமாணமுள்ள உலகம் தோன்ருது. ஐந்தில் ஆகாசம் எப்போதும் ஸூக்ஷ்மதமம் (மிக மிக சூட்சுமம்), வாயு ஸூக்ஷ்மதரம் (அசைவால் மட்டும் உணரக்கூடியது), மற்றவையும் ஸூக்ஷ்ம நிலையில் உள்ளன. அதனுல் இவைகளை ஸ்தூலப் பொருளாக்க, இவைகளையே ஸ்தூலமாக்க வேண்டியதாயிற்று. அதற்காக ஐந்து பூதங்களும் ஒன்ருேடு மற்றவை கலந்தன. அப்படிக் கலக்கும்போது தனது முழு சுய நிலையையும் இழக்காதவாறு பஞ்சீகரணம் என்ற முறையில் அவை கலந்து ஸ்தூல பூதங்களாயின. ஆகாசம் தனது பாதியை மற்ற நான்கிற்கும் பங்கிட்டுக் கொடுத்துவிட்டு மற்ருெரு பாதியைத் தன் தனி நிலை தெரிவதற்காக வைத்துக்கொண்டது. அப்படியே மற்ற பூதங்களும் செய்ய எல்லாம் பஞ்சீகரணம் (ஒவ்வொன்றும் 5 பூதங்களாலானதாக) ஆகி ஸ்தூல பூதங்களாயின. அதனுல் ஆகாசம் எனும் ஸ்தூல பூதத்தில் ஆகாச ஸூக்ஷ்மம் தனது $\frac{1}{2}$ பங்குடன், வாயு ஸூக்ஷ்மம், அக்கினி ஸூக்ஷ்மம், ஜலஸூக்ஷ்மம், பிருதிவி ஸூக்ஷ்மம் ஆகிய நான்கும் தத்தம் அளவில் $\frac{1}{8}$ பங்கு அளித்ததையும் சேர்த்துக்கொண்டு ஆகாசஸ்தூல பூதமாயிற்று. மஹாபூதம் என்றும் இந்த நிலையைக் குறிப்பிடுவர். இவ்வகையில் பஞ்சீகரணமடைந்து மற்ற நான்கு மஹா பூதங்களும் தோன்றின.

1708–08 ராஜஸாஹங்காரம், இந்திரிய ஸ்ருஷ்டியில் ஸாத்விகாஹங்காரத்திற்குத் துணை நின்றது. பூதஸ்ருஷ்டியில் தாமஸாஹங்காரத்திற்கு துணை நின்றது. தானும் ஸாத்விகாஹங்காரத்தின் துணை கொண்டு, ஸாத்விகாஹங்காரம் படைத்திருந்த பன்னிரண்டையும் ஆளும் தேவதா சக்திகளைத் தோற்றுவித்து அவைகளுடன் இணைத்தது. திக்தேவதைகள் (காது); வாயு (தோல்); த்வஷ்டா எனும் ஸூர்யன் (கண்); வருணன் (நாக்கு); அச்விநீதேவதைகள் (மூக்கு); அக்னி (வாக்கு); இந்திரன் (கை); விஷ்ணு (கால்); பிரஜாபதி (லிங்கம்); மித்ரன் எனும் ஸூர்யன் (பாயு); சந்திரன் (மனம்); விராட் (பிராணன்).

1708–09 ஆக அஹங்காரம், பூததன்மாத்திரங்களையும் அவைகளின் தத்துவங்களடங்கிய 5 ஞானேந்திரியங்களையும் 5 கர்மேந்திரியங்களையும் ஸமஷ்டி ஞானேந்திரியமான மனத்தையும், ஸமஷ்டி கர்மேந்திரியமான பிராணனையும் தோற்றுவித்தபடியால் இதனை பூத-இந்திரிய–மனஸ்தத்துவம் என்று கூறுவர். இது படைப்பின் மூன்ரும் நிலை.

1708–10 ஸ்ருஷ்டிக் கிரமத்தைச் சுருக்கமாகப் பார்ப்போம். மாயை பிரும்மத்தின் இச்சா சக்தியாக அமைந்த "நான் பலவாக ஆவேன்" என்ற உலகின் நிமித்தகாரணமான ஸங்கல்பமாகவும் பிரும்மத்தை உலகிற்கு உபாதான காரணமாகச் செய்த ஞானசக்தி, கிரியாசக்தி வடிவிலுள்ள மூலப்பிரகிருதியாகவுமாயிற்று. இந்த இரண்டும் அடங்கிய முதல் நிலை. (நா. 397)

ப்ரகிருதி—பிரும்மத்திலிருந்து தோன்றிய உலகம் அவ்யக்தமாக உள்ள நிலை. ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களோ ஞானக்கிரியாசக்திகளோ வெளித்தோன்ருத நிலை அவ்யக்தம்—(இருட்டு) எனப்படுவது. (நா. 398)

மஹத்—முக்குணங்களும் சக்திகளும் உள்ளே தோன்றத் தொடங்கினுலும்கூட மலர்ந்து வெளியே தோன்ருத நிலை. வியக்தமும் அவ்யக்தமுமானது. (நா. 399)

அஹங்காரம் — முக்குணங்களும் ஞானக் கிரியாசக்திகளும் கலந்து உலகத்தோற்றத்திற்கான மூலக்கருக்கள் தோன்றிய நிலை, ஐந்து பூதங்கள், அந்த பூதங்களுக்கான தனித்த குணங்கள், அவைகளை கிரகிக்கும் பொறிகள், புலன்கள், மனம், பிராணன் அவைகளுள் இருந்து அவைகளை இயக்கிவைக்கும் தேவதாசக்திகள் அனைத்தும் தோன்றிய நிலை. (நா. 400)

ஸ்தூலமான உலகம்—பூதங்கள் சேர்ந்து பஞ்சீகரணமடைந்து ஒன்றோடொன்று சேர்ந்து வியக்தமான உலகமாக எங்கும் நிரம்பியது. (நா. 401)

1708-11 தனி மனிதனிடம் இந்த சிருஷ்டி எப்படி அமைகிறது? ஸ்தூலபூதங்கள் சேர்ந்து உருவத்தால் அறியக்கூடியதான ஸ்தூலதேகத்தைத் தந்தன. பத்து இந்திரியங்களும் மனமும் பிராணனும் அறிவாலும் செயலாலும் ஊகித்தறியக்கூடிய ஸூக்ஷ்ம தேகத்தை அமைத்துத் தந்தன. ஜீவன் இதனுட்புகுந்தான். அவன் தான் புகத் தனக்கென ஒரு சரீரத்தைத் தானே தேர்ந்தெடுத்துக் கொண்டான். அவன் பல பிறவிகளில் செய்த வினைகளில் பலன் கொடுத்துத் தீர்ந்தவை நீங்கிவிட்டன. மற்றவைகளில் இந்தப் பிறவியை அளிக்க முற்பட்டுள்ள (பிராரப்த) வினைகள் தனக்கேற்ற இடத்தை-ஸ்தூலஸூக்ஷ்மதேக அமைப்பைத் தேடிக்கொண்டன. இவைகளைத்தவிர மீதியிருக்கும் ஸஞ்சிதம் எனப்படுபவை வாஸனைகளாக ஜீவனைச் சுற்றி சிறையெடுத்தது போன்று சூழ்ந்து நிற்கின்றன. இவையே காரணசரீரம் எனப்படுபவை. இந்த மூன்று சரீரங்களுக்குள் அகப்பட்டுக்கொண்ட ஜீவன் 'நான்' ஆனான். அதனையும் சிறிது விளக்கிப் பார்ப்போம்.

1708-12 ஸ்ருஷ்டியும் பிரளயமும் மாறி மாறி வருகின்றன, தனி ஜீவனின் ஜனனமும் மரணமும் போல், பகலும் இரவும் போல், விழிப்பும் தூக்கமும் போல். பிரளயம் ஏற்படுமுன் கடைசியாக இருந்த பிராணி வர்க்கங்கள் மறைந்து அடுத்த பிறவியைப் பெற வேண்டும். அடுத்த பிறவியைத் தரவிருக்கும் வினைகளாகிற விதைகள் முளைக்கக் காலத்தை எதிர்பார்க்கின்றன. ஈச்வர ஸங்கல்பத்தால் காலம் திடீரென இயக்கமற்று நின்றுவிடுகிறது. காலத்தின் வெளித்தோற்றமான சூரியன், சந்திரன் முதலானோர் மறைந்துவிடுகின்றனர். வினைகளாகிற விதைகள் காலத்தை எதிர்பார்த்துக் குளிர்பதனத்தில் வைக்கப்பட்டதுபோல் இயக்கமற்றிருக்கின்றன. இதனைப் பிரளயம் என்கிறோம். வினை, வினையைத் தாங்கிநிற்கும் காரணசரீரம், அதனை வெளியாக்கி அனுபவிக்கும் ஸூக்ஷ்ம சரீரம் இவை அனைத்தும் மிகவும் ஸூக்ஷ்மமான மூலமான பிரகிருதிநிலைக்கு மாற்றப்படுகின்றன. அந்த பிரகிருதியும் மூலப்பிரகிருதியான மாயையினுள் அடங்கிவிடுகின்றது. மாயையும் பரம்பொருளிடம் அடங்கிவிடுகிறது. பரம்பொருள் மட்டும் தனித்தும் எல்லாமாயும் உள்ளது இந்த நிலை.

1708-13 மாயை மறுபடி எழுகிருள். காலத்தை எழுப்புகிருள். பரம்பொருளிடம் ஸங்கல்பம் தோன்றுகிறது. மாயையில் அடங்கிய பிரகிருதி வெளிவருகிறது. ஸ்தூல பூதம் வரை வெளியாகிறது. பிரளயத்திற்கு முன் கடைசியாக இருந்தவர்களின் வினையும் அதனைத்தாங்கி நிற்கும் வினையாலான காரண சரீரமும் மாயையில் அடங்கியிருந்தது. அதுவும் இப்பொழுது மற்றவைகளுடன் சேர்ந்தே மாயையிலிருந்து வெளியாகிறது. இந்தக் காரண சரீரத் தினுள் பிடிபட்டிருந்த ஆத்மாவும் வெளியானுன். பிரகிருதி ஸ்ருஷ்டியும் அவ்யக்தம் மஹத் அஹங்காரம் பூதஸூக்ஷ்மம்வரை யுள்ள பிரகிருதி விகிருதி ஸ்ருஷ்டியும் முடிந்து விகிருதி ஸ்ருஷ்டி யாகத் தொடங்கி மரம், செடி, மனிதன், மிருகம், தேவன், அசுரன் என்ற பல தோற்றங்கள் ஏற்பட்டதும் விதியின் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டு, காரண சரீரத்தினுள் சிக்கிய ஜீவன் அவைகளுக்குள் நுழைந்து அந்தத் தோற்றங்களைத் தனதாக்கிக் கொள்கிருன். மறுபடியும் ஜனனமரணச் சங்கிலித் தொடர் தொடர்கிறது.

1708-14 ஸ்தூல - ஸூக்ஷ்ம - காரண சரீரங்களில் சிக்கிக் கொண்ட (பத்தன் - பந்தமடைந்தவன் - பந்தம் – கட்டு) ஆத்மா தன்னிலிருந்து முற்றிலும் வேறுபட்ட அந்த மூன்று சரீரங்களையும் தான் ஆகவே பாவித்துக் கொள்கிருன். ஆனுல் சில சமயத்தில் ஸ்தூல சரீரத் தொடர்பற்றவனுகவும், சில சமயம் ஸ்தூல ஸூக்ஷ்ம சரீரத் தொடர்பற்றவனுகவும் காணப்படுவதுண்டு. ஆக ஸ்தூல-ஸூக்ஷ்ம சரீரத் தொடர்பு செயற்கையாக வந்ததே தவிர, இயற்கை யாக அமைந்ததல்ல என்பது பகுத்தறிவுள்ள அவனுக்குத் தெளி வாகிறது. அதே மாதிரி காரண சரீரத் தொடர்பும் செயற்கை என்ற அனுபவம் நேரிடையாக ஏற்படாவிட்டாலும் ஊகித்தறிய முடிகிறது. இதனைத் தினந்தோறும் மனிதன் பெறும் அனுபவத்தி லிருந்து விளக்கமுடியும்.

1708-15 மனிதன் விழித்திருக்கும்போது அவனுக்கு ஒரு பெயரும் உருவமும் உண்டு. தன் சரீரத்தில் 'தான்' என்ற அபிமானமிருக்கிறது. (அபிமானம்-'தான்' 'தனது' அல்லாத பொருளிடம் பற்றின் காரணமாகத் 'தான்' தனது' என்ற மதிப்பை ஏற்படுத்திக்கொள்வது.) இந்த சரீரத்திற்கான வயதைத் தன் வயதெனக் குறிப்பிடுகிருன். இந்த சரீரத்தினுள் நுழைவதற்கு முன் இப்படிப் பல சரீரங்களில் அவன் நுழைந்திருக்கிருன். அவை களைக் கணக்கிடமுடியாது. அதனுல் அவன் வயதையும் கணக்கிட முடியாது. இப்படிக் கணக்கிடமுடியாத தன் வயதை மறந்து,

இந்த உடலில் நுழைந்ததிலிருந்து தொடங்கிய ஆண்டுகளைத் தன் வயதெனக் காட்டுகிறன். இது ஸ்தூல சரீரத்தில் வைத்த 'தான்' என்ற அபிமானத்தின் விளைவு.

1708-16 'நான் நன்கு பார்க்கிறேன், கேட்கிறேன்' எனக் கூறிக்கொள்பவன், பார்க்கும் கண்ணையும் காதையும் 'தான்' என அபிமானத்தால் நினைக்கிறன். இப்படி ஸூக்ஷ்ம சரீரமாக அமைந்தவைகளிடத்தில் 'தான்' என்ற எண்ணம் கொள்கிறன்.

1708-17 ஸ்தூல தேகத்திலும் ஸூக்ஷ்ம தேகத்திலும் 'தான்' என்ற எண்ணம் பரவக் காரணமாயிருப்பது வினையும் வினையின் காரணமான அஜ்ஞானமும். (இங்கு அஜ்ஞானம் என்பது அறியாமை, அறிவின்மை என்ற அறிவிற்கு நேர் எதிரிடையான பொருளைத் தருவதல்ல. எதை எப்படி அறியவேண்டுமோ அப்படி அறியாதிருப்பது என்ற பொருளில் அமைந்தது.) அதற்குக் காரணம் முன்வினையின் வாஸனை. அதனுல் இந்த வினையும் வினைக்குக் காரணமாக அமைந்த அஜ்ஞானமும் காரண தேகமாக அமைந்தன. அதிலும் தான் என்ற அபிமானத்தால், தன்னிலை நித்யஞானனந்த ஸ்வரூபமானதென்பதை மறந்துவிடுகிறன். தன்னிலை துக்கமயமானது. அதனை மாற்றிக்கொள்வதற்குத்தான் வாழ்வின் ஆசாபாசங்கள் என நினைக்கிறன். அப்பொழுது இவனது 'தான்' உம் 'தனது' உம் உலகளவில் வியாபித்து நிற்கிறது. அதனுல் மூன்று தேக அபிமானத்துடன் இருப்பவனை 'விசுவன்' என்பர்.

1708-18 பகலிலிருந்து இரவு தானே அமைவதுபோல விழிப்பு தூக்கமாக மாறுகிறது. விழிப்பிற்கும் தூக்கத்திற்கும் நடுவே கனவு நிலை வருகிறது. கனவு காண்கிறன். அதில் நான்கு சுவர்களால் அடைக்கப்பட்ட அறையில் தூங்கும் உடலை-'தான்' 'தனது' என்று அபிமானித்திருந்த உடலை-விட்டு அது போன்ருே மாறுபட்டோ உள்ள ஓர் உடலை எடுத்துக்காசிக்கும் கல்கத்தாவிற்கும் செல்கிறன். விழிப்பிலிருந்த கால தேசக் கட்டுப்பாடு இவனை விட்டுவிட்டது. அவன் பார்க்கும் கண்களே கூட வேறு. மனம் மட்டும் அதுவே. முன் அனுபவித்ததையோ அனுபவிக்க நினைத்ததையோ தான் கனவில் அனுபவிப்பதால் அதே மனம் என்று புரிந்துகொள்ளலாம். இந்நிலையில் ஸ்தூல தேகாபிமானமற்ற ஆத்மாவாகிறன். தேஜஸ் ஆகிற மனத்தின் வடிவில் இருப்பதால் தைஜஸன் என இவனை அழைப்பர்.

1708-19 அயர்ந்த தூக்கம் ஆனந்தமாய் அமைகிறது. மறு நாள் விழித்தெழுந்ததும் தூக்கத்தில் ஆனந்தமாய் இருந்தது நினைவிற்கு வருகிறது. அந்த ஆனந்த நிலையில் ஸ்தூல-ஸூக்ஷ்ம தேகத் தொடர்பு அறவே இல்லை. காரண சரீரத் தொடர்பும் இல்லை என்றே சொல்லலாம். ஆனால் ஆனந்தத்தை அனுபவிக்கும் அந்த நேரத்தில் அந்த ஆனந்தத்தை அனுபவித்த உணர்வில்லை. மறுநாள் விழித்தெழுந்த பின் தான் நினைவில் வருகிறது. நினைவு முன் அனுபவித்ததைப்பற்றித் தான் வரும். தூங்கும் நிலையில் அஜ்ஞானம் என்ற மறைப்பு சிறிது உள்ளது. இந்த அஜ்ஞானத்தின் தொடர்பும் செயற்கை தான், 'இயற்கை அல்ல' என்று விவேகத்தால் அறியமுடிகிறது. இப்படி அறியக்கூடியவனாக இருப்பதால் அவனை பிராஜ்ஞன் என்பர். இவன் அஜ்ஞானம் என்ற காரண சரீரத்தில் மட்டும் அபிமானியான ஜீவன்.

1708-20 விச்வன், தைஜஸன், பிராஜ்ஞன் என்ற மூன்று விதமாக ஜீவன் காட்சியளிப்பது போல் ஈசுவர தத்துவமும் மூன்று விதமாகக் காட்சி அளிக்கிறது. அந்த ஈசுவரன் யார்? தனித்து (வியஷ்டியாக) இருந்தால் மரம். தனித்து அறியப்பட்டால் மரம். கூட்டமாக மொத்தமாக (ஸமஷ்டியாக) இருந்தால் காடு. கூட்டமாக அறியப்பட்டால் காடு. காட்டிலேயே மரத்தைப் பார்த்தால் காடு மறையும். காட்டைப் பார்த்தால் மரம் மறையும். இரண்டும் ஒன்றேயாயினும் ஒன்று வியஷ்டி. மற்றொன்று ஸமஷ்டி. வியஷ்டி-ஜீவன், ஸமஷ்டி-ஈச்வரன். (இந்த ஈசுவரனும் திரோதானம் எனும் தொழில் புரிபவனாக உள்ள ஈசுவரனும் வேறு. நா. 271)

1708-21 வியஷ்டி நிலையில் ஸ்தூல தேகாபிமானம் மிகுந்து உடலையும் வயதையும் பொருட்படுத்தும் ஜீவன் விச்வன். இப்படிப் பல ஜீவர்களின் – விச்வர்களின் ஸமஷ்டியும் – ஸ்தூல தேக ஸமஷ்டியில் அபிமானமுள்ளவனும் வைச்வாநரன் (விச்வநரர்களுடன் கூடியவன்).

1708-22 ஸூக்ஷ்ம சரீர அபிமானியான தைஜஸர்களின் ஸமஷ்டியும், ஸூக்ஷ்ம சரீர ஸமஷ்டியில் அபிமானமுள்ளவனும் ஹிரண்யகர்ப்பன்.

1708-23 காரண சரீர அபிமானியான பிராஜ்ஞர்களின் ஸமஷ்டியும் காரண சரீர ஸமஷ்டியில் அபிமானமுள்ளவனும் ஈச்வரன்.

1708-24 இந்த வியஷ்டி-ஸமஷ்டி நிலைகளில் முதல் நிலையில் ஸ்தூலசரீரம் உபாதியாக நிற்கிறது. இரண்டாம் நிலையில் ஸூக்ஷ்ம சரீரம் உபாதியாக நிற்கிறது. மூன்றும் நிலையில் காரண சரீரம் உபாதியாக நிற்கிறது. (உபாதி-பா.-1423)

1708-25 பரமாத்மாவும் ஜீவாத்மாவிடம் பிரதிபலிக்கிறார். அவர் பிரதிபலிக்கும் இடம் மூன்று. ஞானசக்தி வடிவமான அந்தஃகரணமாகிற புத்தியிலும் மனத்திலும் பிரதிபலிக்கும் போது மனமும் புத்தியும் உபாதியாகி அவரை மறைக்க ஹிரண்யகர்ப்பர் ஆகிறார். கிரியா சக்தியான பிராணனில் பிரதிபலித்து, பிராணன் உபாதியாகி அவரை மறைக்க அவர் ஸூத்ராத்மா ஆகிறார். ஞானசக்தியும் கிரியா சக்தியும் சேர்ந்து உபாதியாக மறைக்க அந்தர்யாமி ஆகிறார். அதே பரமாத்மா ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் என்ற முத்தொழிலை யும் உபாதியாகக் கொண்டு பிரும்மா, விஷ்ணு, ருத்திரன் என்று குறிப்பிடப் பெறுகிறார். இவை முறையே விழிப்பு, கனவு, தூக்கம் என்ற மூன்று நிலைகளை ஒத்தன.

1708-26 மூன்றுதேகங்களின் தொடர்பு இந்தமூன்று நிலைகளில் தான். நான்காவது (துரீய) நிலையில் ஸ்தூல ஸூக்ஷ்ம காரண தேகத் தொடர்பு இல்லை. ஐந்தாவது நிலையை நிலையெனக் குறிப் பிட முடியாது. அதனால் துரீயாதீதம் என்றே குறிப்பிடுவர். இந்த இருநிலைகளில் நடைபெறும் தொழில் திரோதானம், அனுக்ரஹம் என்பவை. அந்நிலைகளில் உள்ள ஜீவனானவன் வியஷ்டி நிலையில், மஹாகாரணன், சிவன் எனவும், ஜீவ ஸமஷ்டியான ஈச்வரனானவன் துரீயன், துரீயாதீதன் எனவும், பரமாத்மாவானவன் ஈச்வரன், ஸதா சிவன் எனவும் வழங்கப்படுகிறார்கள். 256-274 நாமங்களில் இவை களின் விளக்கத்தைக் காணலாம்.

1709-01 விச்வ-ரூபா. விசுவனை வடிவமாகக் கொண்டவள்.

1709-02 விழிப்பு நிலையில் ஸ்தூல பூதங்களாலான சரீரத்தில் அபிமானமுள்ள விசுவனையும் வைச்வாநரனையும் தன் வடிவமாகக் கொண்டவள் தேவி. வியஷ்டி ஜீவன்-விச்வன்; ஸமஷ்டிஜீவன்-வைச்வாநரன்; இவ்விரண்டிலும் சைதன்ய (ஞான) வடிவிலுள்ள ஆத்மா ஸ்தூல சரீரத்தை உபாதியாகக் கொண்டு 'தான்' என்ற அபிமானத்திற்கு ஆளாகிறான்.

1709-03 பிரும்மம் ஜீவத்தன்மையை ஏற்பது இழிவானது. மிகப் புத்திசாலியான மனிதன் நாயாவதுபோல் அது வெறுக்கத் தக்கது. உண்மையில் பிரும்மம் ஜீவாத்மாவாகவில்லை. நாய்

உருவம்-ச்வரூபம். (ச்வா = நாய்) நாய் எனும் பிராணி மித நீசம். அதன் உருவத்திலிருந்தும் விடுபட்டவள். 'விகதம் ச்வரூபம் யஸ்யா:' விச்வரூபா. ஜீவனாக நாய்த் தன்மையை அவள் அடையவில்லை.

1709-04 சுக்லபக்ஷத்துப் பதினைந்து இரவுகளுக்கும் வேதத்தில் தனிப் பெயர் உண்டு. அவையாவன: தர்சா, த்ருஷ்டா, தர்சதா, விச்வரூபா, ஸுதர்சநா, ஆப்யாயமாநா, ப்யாயமாநா, ஆப்யாயா, ஸூந்ருதா, இரா, ஆபூர்யமாணா, பூர்யமாணா, பூரயந்தீ, பூர்ணா, பௌர்ணமாஸீ என. அதில் நான்காவது திதியின் இரவாக இருப்பவள் தேவி; அதனால் விச்வரூபா.

1709-05 இந்த 15 திதிகளும் சந்திரனின் 15 கலைகள். சந்திர மண்டலமும் பஞ்சதசாக்ஷரியும் ஒன்றே. அதனால் திதிகள் பஞ்சதசாக்ஷரியின் 15 அக்ஷர தத்துவங்களாகும். அதன்படி விச்வரூபா என்ற நான்காம் திதி வாக்பவ கூடத்தின் நான்காவது அக்ஷரமான 'ல' வைக் குறிக்கும். அந்த அக்ஷர சக்தியாயிருப்பவள் தேவி.

(பா 1104-03)

1709-06 கிருஷ்ண பக்ஷத்துப் பகல்களுக்கு 15 பெயர்கள் வேதத்தில் காணப்படுகின்றன. அவையாவன—ப்ரஸ்துதம், விஷ்டுதம், ஸம்ஸ்துதம், கல்யாணம், விச்வரூபம், சுக்ரம், அம்ருதம், தேஜஸ்வி, தேஜ:, ஸமித்தம், அருணம், பானுமத், மரீசிமத், அபிதபத், தபஸ்வத் என. அதில் கிருஷ்ணபக்ஷத்துப் பஞ்சமீ திதியின் பகல் விசுவரூபம். அதனை வடிவாகக் கொண்டவள் தேவி. சுக்லபக்ஷம் கிருஷ்ணபக்ஷம் என இரண்டின் இரவும் பகலுமாக இருப்பவள் என்பது இதனால் தேறுகிறது. முன் சொன்னபடி பஞ்சதசாக்ஷரியின் காமராஜகூடத்தின் ஆறாவது எழுத்தாக இருப்பவள். (கிருஷ்ண பக்ஷத்தில் அக்ஷர எண்ணிக்கை வரிசை மாறும்.)

(256)

**1710-01 ஜாகரிணீ. விழிப்பு நிலையில் உணரப்படுபவனை ஜீவனாயிருப்பவள்.**

1710-02 எல்லாப் பொறிகளாலும் உணர்வைப் பெறும் நிலை ஜாகரம்-விழிப்பு. அந்த நிலையிலுள்ளவன் ஜாகரீ-ஜீவன். விச்வன் என்றும் வைச்வாநரன் என்றும் குறிப்பிடப்பட்டவன். ஜாகரீயான ஜீவனே இவள். (ஜாகரீ-ஜீவ:, தத்பிந்நா-ஜாகரிணீ) (257)

**1711-01 ஸ்வபந்தீ. கனவு காணும் ஜீவனாக இருப்பவள்.**

1711-02 ஸ்வபந்-கனவு காண்பவன். ஸ்வப்ந நிலையில் ஸூக்ஷ்ம சரீரத்தில் 'தான்' என்ற அபிமானமுள்ள ஜீவன் அவன்.

வியஷ்டியில் தைஜஸன், ஸமஷ்டியில் ஹிரண்யகர்ப்பன். அந்த ஜீவனுகவே இருப்பவள் ஸ்வபந்தீ. (258)

1712-01 தைஜஸ-ஆத்மிகா. தைஜஸன் வடிவினள்.

1712-02 தேஜஸ்-ரஜோகுணம் மிக்க மனம். அதன் சக்தி மிக்கவன் தைஜஸன். கனவு காணும் நிலையில் ஸூக்ஷ்ம சரீரத்தில் 'தான்' என்ற அபிமானம் கொண்டவன். தைஜஸன் என வியஷ்டியிலும் ஹிரண்ய கர்ப்பன் என ஸமஷ்டியிலும் பெயருள்ளவள். (259)

1713-01 ஸுப்தா. தூங்கும் ஜீவனுக இருப்பவள்.

1713-02 தூக்கம் பகுத்தறிவின்மை மிகுந்த நிலை. 'நான் சுகமாகத் தூங்கினேன். ஒன்றையும் அப்போது அறிந்திலன்' என்று தூங்கியவன் தன் அனுபவத்தைக் கூறுகிருன். நேற்று நடந்ததன் நினைவு இன்று அந்தச் சொல்லில் வெளியாகிறது. 'நான் தூங்கினேன்' எனக் கூறுவதால் நான் என்ற உணர்வும் (அஹந்தா), 'சுகமாகத் தூங்கினேன்' என்பதால் சுகமும், ஒன்றையும் அறிந்திலன் என்பதால் அஜ்ஞானமும் அந்த நிலையில் உணர்விற்குப் பொருளாக ஏற்பட்டுள்ளன. இந்த மூன்றையும் கொண்டவன், காரண சரீரத்தில் 'தான்' என்ற அபிமானமுள்ள ஜீவன். அந்த ஜீவனுக இருப்பவள் தேவி. (260)

1714-01 ப்ராஜ்ஞ-ஆத்மிகா. பிராஜ்ஞனுக இருப்பவள்.

1714-02 காரண சரீரத்தில் 'தான்' என்ற அபிமானமுள்ள வ்யஷ்டியான ஜீவன் பிராஜ்ஞன். அவனே ஜீவ சமஷ்டியில் ஈச்வரன் எனப்படுவான். அந்த ஜீவ வடிவில் உள்ளவள் தேவி. (261)

1715-01 துர்யா. நான்காம் நிலையில் உள்ள ஜீவனுக இருப்பவள்.

1715-02 விழிப்பு, கனவு, தூக்கம் என்ற மூன்று நிலைகளையும் அவைகளில் 'தான்' ஆக உணரப் பட்ட தனைத்தையும் பகுத்தறிந்து அதில் உபாதியற்ற தனித்த ஆத்ம தத்துவத்தையும், உபாதியான மூன்று சரீரங்களையும் புரிந்துகொண்டு, மூன்று நிலைகளையும் கடந்த சுத்த ஞான நிலையில் உணரப்பெறும் ஆத்மாவே 'நான்' என்று உணர்பவன் துர்யன். (துர்யன்-துரீயன் = நான்காமவன்) மறுபடியும் வியவஹாரதசையில் உலகியலில் கலக்கும்போது மூன்று நிலைகள் சூழ்ந்து நின்ருலும் தனித்துத் தன்னை உணர்பவன் துர்யன். அவன் வடிவில் உள்ளவள் துர்யா.

1715-03 பிரும்மா விஷ்ணு ருத்ரன் என்ற மும்மூர்த்திகளின் சக்திகளாக இருப்பதுடன் அச்சக்திகளுக்கும் அப்பாற்பட்ட

பராசக்தியாக இருப்பவள். ("துரீயா காபி த்வம் துரதிகம.நிஸ்ஸீம மஹிமா. ஸரஸ்வதி லக்ஷ்மீ கௌரி என்ற மூன்றிற்கும் அப்பாற்பட்டு விளக்கம் பெற முடியாத எல்லையற்ற பெருமையுள்ள நான்காமவளாக நீ விளங்குகிறாய்." ஸௌந்தர்யலஹரீ 97.) (262)

1716-01 ஸர்வ-அவஸ்தா-விவர்ஜிதா. எல்லா நிலைகளுமற்றவள்.

1716-02 முதல் மூன்று நிலைகளையும் கடந்தவன் துர்யன். நான்காம் நிலையையும் கடந்தவன் துரீயாதீதன் (துர்யாதீதன்). இந்த ஐந்தாவதை நிலையென்று குறிப்பிடுவதில்லை. இதனை 'நிலை' என்று கூடக் குறிப்பிட இயலாது. அதனால் துரீயாதீதம்-நான்காவதைக் கடந்தது என்றே குறிப்பிடுவர். அதனையே இந்த நாமம் ஸர்வாவஸ்தா-எல்லா நிலைகளையும், விவர்ஜிதா-கடந்தவள் எனக் கூறுகிறது. ஸர்வ-அவஸ்தா என்பது நான்கு நிலைகளே. அதனைக் கடந்தவள் - நிலைகள் எனும் பாகுபாட்டிற்குட்படாதவள். இதில் ஸமஷ்டி வியஷ்டி என்ற வேறுபாடும் கிடையாது. நான்கு நிலைகளைக் கடந்த ஜீவன் சிவனாகிறான். ("ஜீவமேநம் சிவம் வா கரோஷி" "தேவி நீ ஜீவனை சிவனாக்கி விடுகிறாய்." ஸ்ரீசங்கர பகவத் பாதரது தேவீபுஜங்கம்) இவனும் உலக வியவகாரத்தில் கலக்க நேரிடலாம். அப்போது அவனது பேச்சு ஜபமாகவும், உடலை வளர்க்கும் உபாயங்கள் விரதமாகவும் அமையும். மனத்தில் நினைப்பதும் சொல்வதும் மந்திரமாகும். ("ஜபோ ஜல்ப: சில்பம் ஸகலமபி முத்ராவிரசநா" என்ற சங்கரரது ஸௌந்தரிய லஹரியின் 27-வது சுலோகம் இந்நிலையைக் குறிப்பிடும்.) இந்த சிவனாகிவிட்ட ஜீவனாக இருப்பவள் தேவி. (263)

सृष्टिकर्त्री ब्रह्मरूपा गोप्त्री गोविन्दरूपिणी ॥ 267
64 संहारिणी रुद्ररूपा तिरोधानकरी(ई)श्वरी । 271
सदाशिवा(अ)नुग्रहदा पञ्चकृत्यपरायणा ॥ 274

ஸ்ருஷ்டிகர்த்ரீ ப்ரம்ஹரூபா கோப்த்ரீ கோவிந்தரூபிணீ ॥
ஸம்ஹாரிணீ ருத்ரரூபா திரோதாநகரீ(ஈ)ச்வரீ ।
ஸதாசிவா (அ)னுக்ரஹதா பஞ்சக்ருத்ய பராயணா ॥

1717-01 ஸ்ருஷ்டி கர்த்ரீ. ஸ்ருஷ்டியைச் செய்பவள்.

1717-02 அவித்யையால் கட்டப்பட்ட ஜீவன் மூன்று வகைப்படுகிறான். ஆத்ம-அநாத்ம விவேகத்தால் 'நான்' என்பதன் உண்மைப் பொருளை அறிந்து அவித்யையின் கட்டு விலகியதும்,

துரீய-துரீயாதீத நிலைகளில் நித்யமான ஆத்ம தத்துவத்தை அனுபவிக்கிறான். இவ்விரு நிலைகளில் அவித்யை என்ற கட்டு விலகி முக்தனாகி விடுதலை பெற்றவனாகிறான். இதே ஐந்து நிலைகளைப் பரம்பொருளும் தன்னிடம் மாயையால் ஏற்படுத்திக் கொள்கிறது. ஜீவனிடத்தில் 'நான்' என்பதை மறைத்த அவித்யை போல், பிரும்மா, விஷ்ணு, ருத்திரன், ஈசுவரன், ஸதாசிவன் இவர்களில் உள்ள பிரும்மம் என்ற உண்மை நிலையை மாயை மறைக்கிறது. ஜீவன் அவித்யை எனும் மாயைக்கு வசப்பட்டவன். மூல பிரகிருதியாகிய மாயை பரம்பொருளுக்கு வசப்பட்டது. ஆனால் மாயை உபாதியாகி ஸ்ருஷ்டி முதலிய தொழில்களைப் புரியும் பிரும்மா முதலானோரைப் பரம்பொருளிலிருந்து வேறுபட்டவராகக் காண்பிக்கிறது. அத்தகைய பிரும்மத்தின் தோற்றங்களும் தேவியினுடையதே.

1717-03 ஸ்ருஷ்டி என்பது உலகைப் படைப்பது. ஈசுவரனிடம் ரஜோகுணம் முக்கியமாக வெளிப்படும் நிலை படைப்பு. ரஜோகுணத்தால் நடைபெறும் படைப்பைச் செய்பவள்தேவி. (264)

**1718-01 ப்ரம்ஹ-ரூபா. பிரும்மாவின் வடிவமுள்ளவள்.**

1718-02 பிரும்மா-நான்முகக் கடவுள், படைப்புத் தொழிலின் அதிகாரி, ரஜோகுணம் மிக்கவர். அவரது வடிவில் தோன்றுபவள் தேவி. (265)

**1719-01 கோப்த்ரீ. காப்பாற்றுபவள்.**

1719-02 காப்பு ஸத்வகுணம் மிக்க ஈசுவரனது தொழில். இதனால் உலகு ஒரே சீராக அமைந்த நியதிக்குட்பட்டு நடக்கிறது. (266)

**1720-01 கோ-விந்த-ரூபிணீ. கோவிந்தன் வடிவில் உள்ளவள்.**

1720-02 காப்பு என்ற தொழிலைச் செய்பவர் ஸத்வ குணம் மிக்க ஈச்வரன். அவருக்குப் பெயர் கோவிந்தன். கோ-பசுக்களுக்கு, இந்திரன்-தலைவன் கோவிந்தன். இந்திரனுக்காக கோகுலத்தில் நடந்த வேள்வியைக் கண்ணன் தடைசெய்ய இந்திரன் வெகுண்டு பிரளய காலத்து மேகங்களை ஏவிக் கோகுலத்தை அழிக்க முற்பட்டான். பசுக்களும் கோபர்களும் அழிவதைத் தடுக்கக் கண்ணன் கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்தான். இந்திரனது முயற்சி வீணானது. இந்திரன் கண்ணனிடம் மன்னிப்புக் கோரினான். காமதேனு காரணமின்றி தன் குலத்தினரை இந்திரன்

அழித்ததைக் கண்டு ''தங்களுக்கு இனி அவன் தலைவனில்லை. கண்ணனே தங்களுக்கு இந்திரன்'' எனக் கண்ணனுக்கு இந்திர பட்டாபிஷேகம் செய்வித்தாள். ஸ்திதி காலத்தில் காப்புத்தொழிலில் உதவும் இந்திரன் போன்ற தெய்விக அதிகாரிகள் வழிகெட்டுக் காப்புத் தொழிலைக் கெடுக்கும்போது ஸ்திதி அதிகாரியாகிய நாராயணன் கோவிந்தனாகி இந்திரன் முதலியவர் செருக்கை அடக்கி வழிப்படுத்துகிறார்.

1720-03 கோ - வாக்கு. அதனால் அடையக் கூடியவன் கோவிந்தன். வாக்குக்கெட்டாதிருந்த இறைவன், காப்புத் தொழிலை ஏற்றுக்கொண்டதும் குரல் கேட்டு ஓடி வருபவனாக நல்ல காப்பாளனாக ஆகிறார்.

1720-04 கோ-பூமி, அதனை அடையச் செய்தவர் கோவிந்தர். ஸ்ருஷ்டி ஆரம்பித்ததும் பூமி நிலைகொள்ளாமல் ஜலத்தில் அழுந்தியது. அதனைத் தாங்கினார். மறுபடி ஹிரண்யாக்ஷன் அதைச் சுருட்டி எடுத்துச் சென்றதும் அதனை மீட்டார். இப்படிக் காப்புத் தொழிலைப் பொறுப்புடன் கவனிப்பவர் கோவிந்தன். கோவிந்தன் வடிவைத் தாங்கி உலகைக் காப்பவள் தேவி. (267)

1721-01 ஸம்ஹாரிணீ. ஸம்ஹாரம் செய்பவள்.

1721-02 உலகத்தைப் பரமாணுவளவில் மீதமாகும்படி உருக்குலைப்பது ஸம்ஹாரம். உலகை ஐம்பூதங்களின் ஸூக்ஷ்ம நிலைக்கு மாற்றி ஒடுக்குவதே இத்தொழில். தமோ குணம் மிகுந்த ருத்திரனால் இது நடத்தப்பெறுகிறது. அவரது உருவில் இருந்துகொண்டு ஸம்ஹாரத் தொழிலை புரிபவள் தேவி. (268)

1722-01 ருத்ர-ரூபா. ருத்திரன் வடிவினள்.

1722-02 தமோ குணம் மிக்கவனாக உலகை ஒடுக்க எடுத்த தோற்றம் ருத்திரன். தமோகுணம் மறைக்கும். ஸம்ஸாரச் சுழலில் சுற்றிச்சுற்றி வந்ததால் ஏற்பட்ட வேதனையை மறக்க செய்வதால் (ருஜம்-வேதனையை, திராவயதி-ஓடச் செய்கிறான்) ருத்திரன். அழவைப்பதால் (ரோதயதி) ருத்திரன். பிரிவு அழவைக்கிறது. அதனை விளைவிப்பவன் ருத்திரன். பிரும்மனது படைப்பில் ருத்திரன் என்ற தேவன் படைக்கப்பட்டான். அவன் தோன்றியதும் அழுதான். அதனால் ருத்திரன் எனப் பெயர் பெற்றான். ஸூர்யர்களில் ஒருவர் ருத்திரன். அவர் பிரளய காலத்தில் தோன்றித் தனது கிரணங்களால் உலகைப் பொசுக்குவார். அந்த ஆவியின் விளைவாக பிரளய காலத்தில் மேகங்கள் உருவாகி மழை பொழிந்து உலகை அழிக்கும்,

1726.03 திரோதானம் அனுக்கிரகம் என்ற இந்த இரண்டு தொழிலும் பந்தத்தையும் மோக்ஷத்தையும் குறிக்கும் என்பர் சிலர். அவனவனது வினைக்கேற்ப மறு பிறவியை அமைத்துக் கொடுப்பவர் ஈசுவரன். இதில் ஈசுவரனது செயல் வெளிப்படையாகத் தெரியும். அரசின் சட்டங்களின்படி நேர்மையை அதிகாரத்தின் மூலம் நிலை நிறுத்தி நேர்மையற்றதைக் கண்டிக்கும் அதிகாரிபோல் ஈசுவரன் என்ற நிலையில் தனது அதிகாரத்தை வெளிப்படையாகச் செய்கிருள் தேவி.

1726-04 இந்த அதிகாரத்தைச் செலுத்திக் கொண்டிருக்கும் போதே, உள்ளம் கனிந்து, சட்டதிட்டங்களுக்குட்படுபவன் அதிகக் கஷ்டத்திற்கு உட்படாமல் நன்மை அடைய வழி ஏதேனும் உண்டா எனக் கருணையால் சிந்தித்து அதற்கேற்ற வழிகளை அமைத்துக் கொடுப்பவர் ஸதாசிவன். இது உள்ளத்தில் கொண்டுள்ள கருணையின் வடிவம். வெளியில் தெரியாது. வெளியில் தெரியும் ஈசுவரத்தன்மை பாறைபோன்று இறுகிய கனிவற்ற தோற்றம். உள்ளத்தில் கருணையால் வெண்ணெய் போன்று நெகிழ்ந்து இனியதான சுபாவம் ஸதாசிவத்தன்மை. ஈசுவரத் தன்மையால் பந்தமளிக்கிருள். ஸதாசிவத்தன்மையால் மோக்ஷமளிக்கிருள். வெளியில் கடின சித்தத்துடன் கண்டிப்புள்ளவளுகத் தோன்றிலும் உள்ளத்தால் தாய்போல் மக்களுக்கு அனுகூலமானதைச் செய்யும் அரசனைப் போன்றவள் தேவி. (ஈச்வர: பஹிருன்மேஷலக்ஷண:, ஸதாசிவ: அந்தருன்மேஷலக்ஷண:- ஈச்வரன் வெளிப்படையாகத் தெரியும் செயலுடையவன், ஸதாசிவன் உள்கிடக்கும் செயலுடையவன்.) (273)

1727-01 பஞ்ச-க்ருத்ய-பராயணு. ஐந்தொழில்களில் அதிக ஈடுபாடுள்ளவள்.

1727-02 பர-அயநம்-முக்கிய நோக்கு, முக்கியப்பணி, முக்கியமான விருப்பம். ஐந்து தொழில்கள் புரிதலையும் முக்கிய நோக்காகக் கொண்டவள், அவைகளையே முக்கியமான அன்ருட நடவடிக்கைகளாகக் கொண்டவள், அதில் விருப்பத்துடன் ஈடுபடுபவள் தேவி. (274)

1727-03 ஐந்தொழில் விளக்கம்-புராணத்தில் ஸ்ருஷ்டி,ஸ்திதி, ஸம்ஹாரம் என்ற மூன்றின் விளக்கம் விரிவாகத் தரப்படுகின்றது. திரோதானம் ஸம்ஹாரத்திற்குப் பின் பிரும்ம தத்துவத்தில் உலகம் ஒடுங்கும் வகை. அனுக்கிரகம் ஸ்ருஷ்டிக்குமுன் பிரும்மத்திலிருந்தும் உலகம் வெளியாகும் முறை. இந்த ஐந்து தொழில்களும்

ஒவ்வொரு கணத்திலும் நடைபெற்று வருகின்றன. உற்பத்தி யாவதும் இருப்பதும் அழிவதும் மறைவதும் தோன்றுவதும் சங்கிலித் தொடர்போல் எப்போதும் நிகழ்ந்து கொண்டிருப்பவை. இந்த ஐந்து தொழில்களும் முழுவதும் நின்று போகும் நிலை மஹாப்ரளயம். அந்தப் பெருவிழாவில் ஸாக்ஷிணீயாகத் தேவி நிற்பதை 232, 571 நாமங்கள் கூறும். ஐந்து தொழில்களும் நின்று போகும் நிலை பிரும்மாவின் ஆயுள் முடிவில் ஏற்படுகிறது.

1727-04 பிரும்மாவின் ஆயுள்—மனிதனுக்கு நூருண்டுகள் பூர்ண வயது. பிரும்மாவிற்கும் நூருண்டுகள் பூர்ண வயது. பிரும் மாவின் வயது தேவமானத்தால் கணக்கிடப்பெறுகிறது. லக்ஷம், கோடி என்பது போல் பரம் எனும் ஓர் எண்ணளவு உண்டு. பத்து, நூறு, ஆயிரம், பத்தாயிரம், லக்ஷம், பத்துலக்ஷம், கோடி என்ற பத்து மடங்கு வரிசை போல, கோடிக்கு மேற்பட்ட பத்துமடங்கு வரிசை பின்வருமாறு. அர்புதம், அப்ஜம், கர்வம், நிகர்வம், மஹாபத்மம், சங்கம், ஸமுத்ரம், (கோடி கோடி) அந்த்யம், மத்யம், பரார்த்தம் (ஆயிரம் கோடி கோடி) என. (18 ஸ்தானங்கள் கொண்டது). பரார்த்தம் என்ற எண் பரத்தின் பாதி. அதனுல் இரு பரார்த் தங்கள் அளவுள்ள ஆண்டுகள் பரனுன பிரும்மனின் ஆயுட்காலம். 'பரார்த்த த்வயஜீவிந:' என்று ஸங்கல்பம் கூறும். இதனை மற்றொரு வகையில் புராணங்கள் விளக்குகின்றன.

1727-05 2000 சதுர்யுகங்கள் பிரும்மாவிற்கு ஒரு நாள். ஒரு சதுர்யுகம்43,20,000 ஆண்டுகள். (கலி 4,32,000; துவாபரம் 8,64,000; திரேதா 12,96,000; கிருதம் 17,28,000 ஆண்டுகள்) பிரும்மாவின் ஒரு நாளுக்கு 864 கோடி ஆண்டுகள். அதில் பகல் 432 கோடி ஆண்டுகள். இரவு 432 கோடி ஆண்டுகள். இப்படி 365 நாட்கள் கொண்ட 100 ஆண்டுகள், அவரது ஆயுட் காலம். மற்றொரு வகையிலும் கணக்கிடுவது உண்டு. நமது ஓர் ஆண்டு தேவர் களுக்கு ஒரு நாளாகும். 360 நாட்கள் கொண்ட 12000 ஆண்டுகள் பிரும்மாவின் பகல், 12000 ஆண்டுகள் பிரும்மாவின் இரவு. இதன் முடிவில் ஏற்படுவது பிரும்மப் பிரளயம் எனும் மஹாப்பிரளயம். (நா. 232, 571)

1727-06 பிரும்மாவின் பகலாகிய 432 கோடி ஆண்டுகளில் 14 மனுக்கள் உலகத்தை ஆள்கின்றனர். ஒவ்வொரு மனுவின் ஆளு கைக்காலத்தை மந்வந்தரம் என்பர். தற்போது நடைபெறும் பிரும்ம தினத்தில் ஸ்வாயம்புவர், ஸ்வாரோசிஷர், உத்தமர், தாமஸர், ரைவதர், சாக்ஷுஷர் என்ற ஆறு மனுக்களின் அந்தரங்கள் நடை

பெற்று விட்டன. வைவஸ்வத மன்வந்தரம் தற்போது நடைபெற்று வருகிறது. இதன் பின் ஸாவர்ணி, தக்ஷஸாவர்ணி, ப்ரும்ஹஸாவர்ணி, தர்மஸாவர்ணி, ருத்ரஸாவர்ணி, தேவஸாவர்ணி, இந்த்ரஸாவர்ணி என்ற ஏழு மனுக்கள் இனி வரவிருக்கின்றனர். ஒரு மனுவின் ஆட்சி காலம் $71\frac{6}{14}$ சதுர்யுகங்கள்-30,85,71,428 ஆண்டுகள். பகலில் 14 மனுக்கள் ஆண்டபின் பிரும்மாவின் இரவு தொடங்குகிறது. இரவாகிய ஆயிரம் சதுர்யுகங்களும் ஒரு பிரளய காலம்; இந்த பிரளயம் பிரும்ம தினப் பிரளயம்.

**1727-07** ஒவ்வொரு மனுவின் ஆட்சியின் முடிவிலும் ஒரு பிரளயமுண்டு. இது மந்வந்தரப்பிரளயம்-அவாந்தரப்ரளயம் – வைக்ருதிக ப்ரளயம் எனப்படும். தற்போது நடக்கும் வைவஸ்வத மந்வந்தரத்திற்கு முன் நடந்தது சாக்ஷுஷ மன்வந்தரம். அதன் முடிவில் ஏற்பட்ட அவாந்தர (இடைவெளி) பிரளயத்தில் வேதம் ஸப்தரிஷிகள் மூலப்பொருள்கள் முதலியவற்றைக் காப்பாற்ற வைவஸ்வத மனுவாக வரவிருந்த ஸத்யவிரதருக்கு உதவுவதற்காக நாராயணன் மத்ஸ்யாவதாரம் எடுத்து ஓடத்தில் அவர்களை ஏற்றிப் பிரளய காலம் முழுவதும் காப்பாற்றினர் என்று புராணம் கூறும் (நா-604).

1727-08 பிரளயம்—நமது வாழ்வில் ஒவ்வொரு க்ஷணத்திலும் முத்தொழில்களும் நடைபெறுகின்றன. ஒரு பொருள் மற்றொரு பொருளாக மாறும்போது ஒன்றின் அழிவும் மற்றொன்றின் படைப்பும் இடையில் காத்தலும் நிகழ்கின்றன. அதே வேகத்தில் வினைப்பயனைக் கணக்கிட்டு மூலப்பொருள்களை அதற்கேற்ப மாற்றி அமைத்து ஸ்தூல-ஸூக்ஷ்ம-காரண தேகங்களின் மாற்றமும் நடைபெறுகிறது. வினைப் பயனுக்கேற்ப மூன்று தேகங்களை அமைக்கும் பந்தமும். பந்தத்திலிருந்து விடுவிக்கும் அனுக்கிரகமும் இப்படி நிகழ்ந்து கொண்டிருக்கும். இது நித்தியமும் நடைபெறும் பிரளயமானதால் நித்தியப் பிரளயம் எனப்படும்.

1727-09 ஒவ்வொரு இரவிலும் அடையும் ஸுஷுப்தியும் ஒரு பிரளயமாகும். ஆத்மாவிடம் மற்றவை அடங்கும் பிரளயம் இது. இதுவும் ஒரு நித்தியப் பிரளயமே.

1727-10 மன்வந்தரத்தின் இறுதியிலும் அவாந்தரப் பிரளயம் நிகழ்கிறது. இதில் பூலோகம் மறைகிறது. அடுத்த மன்வந்தரத்தின் அதிபதியாக இருக்கத்தக்கவர், வேதத்தைக் காப்பாற்றும்

ஸப்தரிஷிகள், உணவு விதைகள், மனிதன் முதலான எல்லா பிராணி இனத்தை அடுத்த மன்வந்தரத்தில் துவக்கி வைக்கக்கூடிய வர்கள் முதலியவர்கள் மட்டும் காப்பாற்றப்படுவார்கள். மற்றவை அனைத்தும் அந்தப் பிரளய ஜலத்தில் கரைக்கப்பட்டுச் சூட்சும மாக்கப்பட்டு மஹாபூத நிலைக்குக் கொணரப்படுகின்றன. அவைகள் தன்மாத்திரங்களாக்கப்பட்டுத் திரோதானமடைகின்றன. அடுத்த மன்வந்தர ஆரம்பத்தில் பிரளய காலத்தில் காப்பாற்றப்பட்ட மனு முதலியவர்களால் ஸ்ருஷ்டி துவக்கப்படும்போது பூலோகமும் தன்மாத்திர நிலையிலிருந்து விடுவிக்கப்பட்டு (அனுக்கிரகம்) ஐந்து மஹாபூதங்களாகிப் பிராணிகளாகவும் மரம் செடி கொடி முதலியன வாகவும் படைக்கப்படுகின்றன. பிரகிருதி, பிரகிருதி-விகிருதி, விகிருதி என்ற மூன்று நிலைகளிலுள்ள மூலப்பொருள்களில் (பா-1708-13) விகிருதி என்ற நிலையிலுள்ள மூலப்பொருள்கள் மட்டும் இதில் லயமாவதால் வைகிருதிகப்பிரளயம், விகிருதிப் பிரளயம் என்பர்.

1727-11 பிரும்மதினத்தைக் கல்பம் என்பர். தற்போது நடப்பது சுவேதவராஹ கல்பம் எனும் பிரும்மதினம். பிரும்ம தினத்தின் மாலைக்குப்பின் இரவு தொடங்கும்போது ஏற்படும் பிரளயம் கல்பாந்தப் பிரளயம் எனும் பிரும்மதினப் பிரளயமாகும். இதில் பூலோகம் புவர்லோகம் ஸுவர்லோகம் எனும் மூன்றும் மறையும். மனு முதலியவர்களும் மறைவர். பிரகிருதி தவிர மற்றவை மறைவதால் இது பிராகிருதப் பிரளயமாகும். பிரும்மா வின் மறுநாள் விடியும்போது பிரகிருதி எனும் மூலப்பொருளி லிருந்து மஹத் முதலிய பிரகிருதி-விக்ருதிகளும் அதிலிருந்து புதிய உலகங்களும் தோன்றும். பிரும்ம-விஷ்ணு-ருத்திரர்கள் மறைவ தில்லை. அவர்களது உலகங்களும் மறைவதில்லை. பிரும்மலோகம் தவிர மற்ற 13 லோகங்களும் மறைந்து திரோதானமும் புது ஸிருஷ்டிக்கான அனுக்கிரஹமும் இப்போது நடைபெறுகிறது.

1727-12 மஹாகல்பம் எனும் பிரும்மாவின் ஆயுட்காலம் முடிந் ததும் ஸிருஷ்டியும் ஸ்திதியும் நின்றுவிடுகின்றன. 14 உலகங்களும் மறைகின்றன. திரிமூர்த்திகளும் செயலிழந்து தேவியிடம் அடங்கு கிறார்கள், (நா. 270-271) ஈசுவரன் மஹாபூதங்களைத் தன்மாத்திரங் களிலும், தன்மாத்திரங்களை அஹங்காரத்திலும், அஹங்காரத்தை மஹத்திலும், மஹத்தை அவ்யக்தத்திலும், அவ்யக்தத்தை மூலப் பிரகிருதியிலும் மூலப்பிரகிருதியை மாயையிலும் ஒடுக்கி விடுகிறார். மஹாகல்பத்தின் இறுதியில் மஹேசுவரன் மஹாதாண்டவமாடு கிறார். (நா. 232) தானும் கடைசியில் தேவியிடம் ஒடுங்கிவிடுகிறார்.

இது மஹாப்பிரளயம். பின்னர் தேவியிடம் ஸ்ருஷ்டிக்கான ஸங்கல்பம் எழும்போது ஸதாசிவன் தேவியிடம் ஒடுங்கியவைகளை வெளிக்கொணர்ந்து உலகப் படைப்பிற்கான மூலப் பிரகிருதி முதலியவற்றை விடுவிக்கிருர். இந்த அனுக்கிரஹம் நிகழ்ந்ததும் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்ற முத்தொழில்கள் தொடங்கு கின்றன.

1727-13 பிரகிருதி வரை ஏற்படும் இந்தப் பிரளயம் கீழ்க்கண்ட முறையில் அமைகிறது. நூருண்டுகள் பூமியில் மழை இருக்காது. உணவுப் பயிர்கள் மறையும். பிராணிகள் ஒருவருக்கொருவர் அடித்துக்கொண்டு மாண்டவரை உண்டு வாழ்வர். பூமி, கடல், பிராணிகளின் உடல் முதலியவற்றிலுள்ள நீர்ப் பகுதியை பிரளய கால சூர்யன் வரளச்செய்கிருன். திரும்ப மழையாக அதனை விடாமல் தன்னிடம் அடக்கிக்கொள்கிருன். பிரளய கால நெருப்பு நூருண்டுகள் எரிக்கிறது. நன்கு எரிந்த கோமயப் பிண்டம்போல் உலகமாகிறது. அதனைப் பேய்காற்று அனைத்து எரிந்தவற்றைச் சாம்பலாக்கிப் புழுதியாக்கிப் பறக்கவிடுகிறது. இதனைத் தொடர்ந்து நூருண்டுகள் பிரளய மேகங்கள் தொடர்ந்து பொழிகின்றன. ஜலத்தில் உலகம் கரைந்து விடுகிறது. பூமியின் இயற்கைக் குணமான மணம் ஜலத்தில் கரைந்து மறைந்ததும் பூமி தத்துவம் ஜலத்தில் லயமடைகிறது. ஜலம் வற்றி நெருப்பில் மறைகிறது. நெருப்பு காற்றில் மறைகிறது. காற்று ஆகாசத்திலும், ஆகாசமும் இந்திரியங்களும் மனமும் பிராணனும் அஹங்காரத்திலும், அஹங்காரம் மஹத்திலும், மஹத்து அவ்யக்தத்திலும், அவ்யக்தம் மூலப்பிரகிருதியிலும், மூலப்பிரகிருதி மாயையிலும், மாயை பிரும்மத்திலும் மறைகின்றன. தோன்றுவதும் அப்படியே. கடைசியில் புகுந்தது முதலில் வெளியாகி மற்றவற்றின் தோற்றத்திற்குக் காரணமாகிறது.

## அதிகாரம் 18

# தேவியின் பலவிதத் தோற்றங்கள்-விபூதிகள்

65 भानुमण्डलमध्यस्था भैरवी भगमालिनी । 277
पद्मासना भगवती पद्मनाभसहोदरी ॥ 280

பானுமண்டலமத்த்யஸ்தா பைரவீ பகமாலினீ ।
பத்மாஸநா பகவதீ பத்மநாபஸஹோதரீ ॥

1801-01 பாநு-மண்டல - மத்த்யஸ்தா, ஸூர்யமண்டலத்தின் நடுவில் இருப்பவள்.

1801-02 பகலும் இரவும் கூடும் வேளைகளான ஸந்தியா காலங்களில் சூரிய மண்டலத்தில் தேவியைத் தியானிப்பர். ஒளி மண்டலத்திற்குப் பேரொளி வழங்கும் தேவி, அந்த ஒளிமண்டலத்தின் உள்ளேயே இருக்கிருள், நமது மூன்று தேகங்களுக்கும் ஒளியும் சக்தியும் தரும் அந்தர்யாமியாயிருப்பது போல். முன்பு 'சந்த்ர மண்டல மத்தியகா'வாகத் தியானித்தோம். (நா. 240) 'வஹ்நி மண்டலவாஸிநீ'யாக 352-ம் நாமம் தேவியை அறிமுகப்படுத்தவிருக்கிறது. தேஜோமண்டலங்கள் மூன்றிலும் உள் உறைபவளாக, அவைகளுக்கும் ஒளிரும் தன்மையை அளிப்பவளாகத் தியானம் செய்து அவ்வொளி நம் இதயகுகையினுள்ளும் பரவி அருள்புரிய வேண்டுகிறோம்.

1801-03 அனுஹதத்தைக் கேந்திரமாகக் கொண்டு குண்டலினி ஸுஷும்நா காண்டத்தில் உறையுமிடம் ஸூர்ய கண்டம் (பா. 1212-02), அங்கு உறைபவள் தேவி. (275)

1802-01 பைரவீ. பைரவரது சக்தி.

1802-02 பைரவர்-பயங்கரர். முத்தொழில் புரிவதால் பயங்கரத் தோற்றம் கொண்டவர் பரமசிவன். அவரது சக்தியாயிருப்பவள் தேவி.

1802-03 பிரு: பயத்தை சுபாவமாகக் கொண்டவள், பெண். அத்தகைய பெண்களது கூட்டம் (பீருணும் ஸமூஹ:) பைரவம், அக்கூட்டமாயிருப்பவள் தேவி. பெண்களுக்குரிய தர்மங்களைப் பேணுவதில்தான் அவர்களுக்குப் பயம். தர்மத்திற்குப் பயந்து அதற்கு அடங்கி நடக்கும் அருந்ததீ, அனஸூயா, லோபாமுத்திரை முதலிய பதிவிரதைகளாக இருப்பவள் தேவி. "ஸ்திரீலிங்க சப்தவாச்யா யே ஸர்வா தேவ்யா விபூதய:" "பெண்பாலுள்ள சொற்களால் கூறப்படுபவர்கள் அனைவரும் தேவியின் சிறப்புத் தோற்றங்கள்" என்கிறது லிங்கபுராணம். பைரவரது சக்தியாயிருந்து பயம் தருபவள் அவள். பயப்படும் பதிவிரதைகளும் அவளே.

1802-04 பிரதமை முதல் பௌர்ணமி முடிய 15 நாட்களுக்குச் செய்யும் கன்னிகை பூஜையில் துவாதசியன்று 12 வயதுள்ள கன்னிகையாக பூஜிக்கப்பெறுபவள், பைரவீ. 12 வயதுள்ள கன்னிகைக்குப் பைரவீ என்று பெயர். பைரவீ என்ற மந்திரம்-ஹ்ஸைம், ஹ்ஸ்க்லீம், ஹ்ஸௌ: என்பது. அந்த மந்திர வடிவினள் தேவி. (276)

1803-01 பகமாலிநீ. பகமாலினியாக இருப்பவள்.

1803-02 பகம்–திரிகோணம், யோநி. பல பகங்களை மாலையாகக் கோர்த்துத் தன் கழுத்தில் அணிந்தவள். 15 நித்யாதேவிகளில் சுக்கில பக்ஷத்துத் துவிதீயை கிருஷ்ண பக்ஷத்து சதுர்தசி திதிகளின் நித்யாவாகவும் வழிபடப் பெறுபவள் பகமாலினீ. (277)

1804-01 பத்ம–ஆஸநா. தாமரையை ஆஸனமாகக் கொண்டவள்.

1804-02 தாமரையை ஆஸனமாகக் கொண்டவர்கள் லக்ஷ்மியும் ஸரஸ்வதியும் பிரும்மாவும். இம்மூவரின் வடிவிலிருப்பவளும் தேவியே. உலகம் நாராயணனின் தொப்புளிலிருந்து ஒரு தாமரை வடிவில் தோன்றியது. அதனுள் அமர்ந்து அதனைப் பலவாறாக அமைத்தார் பிரும்மா. நீண்டவட்ட வடிவம் கொண்டது தாமரை. சுற்றிச் சுற்றிவரும் வட்டம் நீண்ட வட்டவடிவம் பெறும். அண்டம் முட்டை. அண்ட வடிவில் நீண்ட வட்டவடிவம் கொண்டதானதால் உலகத்தை அண்டம், அண்டகோசம், பிரும்மாண்டம் என்று குறிப்பிடுகிறோம். உலகம் ஒரு தாமரை. பிரகிருதி (பா. 1708-01) அதன் இதழ்கள். விக்ருதி அதன் கேஸரங்கள் (பூக்கூந்தல்கள்). சைதன்யசக்தி இவைகளுக்கு ஊட்டம் தரும் தண்டு. இத்தகைய தாமரையைத் தனது ஆஸனமாக, தான் விளங்கக் கூடிய இடமாகக் கொண்டவள் தேவி. (278)

1805-01 பகவதீ. ஈச்வரசக்தி அனைத்தும் பெற்றவள்.

1805-02 உலகத்தின் தோற்றம், அதன் மறைவு, பற்பலவான பொருள்கள் வந்த வழி, சென்ற வழி, அஞ்ஞானம், ஞானம் இவைகளைப்பற்றிய முழு அறிவு பெற்றவளானதால் தேவி பகவதீ எனப் படுவாள். ("உத்பத்திம் ப்ரலயம் சைவ பூதாநாம் ஆகதிம் கதிம். அவித்யாவித்யயோஸ்தத்வம் வேத்தீதி பகவத்யஸெள"— தேவீபாகவதம்) உலகத்தின் தோற்றத்தையும், மறைவையும் பற்றி உலகம் தோன்றுவதற்கு முன்னும் பின்னும் இருக்கும் அவள்தான் அறிவாள். நடுவில் தோன்றும் பற்பல பொருள்களில் வந்த வழி சென்ற வழி பற்றி, எங்கும், எந்நேரத்திலும், எதிலும் நீக்கமற நிறைந்திருக்கும் அவள்தான் அறிவாள். அவித்யையையும், வித்யையையும்பற்றி ஞானஸ்வரூபிணியான அவள் ஒருவள்தான் அறிந்திருக்கமுடியும். ஆகவே பகம் என்ற பேரறிவு பெற்றவளானதால் தேவி ஒருவளே பகவதீ.

1805-03 பகம்—ஆறு குணங்கள். (1) நிறைவுபெற்ற ஐச்வர்யம் (ஆளும் சக்தி) (2) எல்லாவற்றையும் வரம்பிற்குள் அடக்கிச் சீராகத் தாங்கி நிற்கும் தர்மம், (ஒரு குடும்பத்தினுள் எல்லாவற்றையும் சீராக நடத்தி ஒருவரால் ஒருவருக்குப் பாதிப்பு விளையாமல் பாதுகாத்துக் குடும்பத்தையே தாங்கி நிற்பவளைத் தர்மபத்தினி என்கிறோம். அப்படி ஒரு ராஜ்யத்தைக் காப்பாற்றுபவனை தர்மராஜா என்கிறோம். தர்மமானது ஒன்றோடொன்று மோதாமல் வரம்பாக நின்று அததனை க்ஷேமமாக வாழச்செய்யும்). (3) புகழ் (யசஸ்), (4) செல்வம், (5) பேரறிவு (எதனையும் அறியும் திறம். இதனை ஞானம் என்பர்), (6) தனிப்பட்ட ஒரு வித்யையில் விரிந்த அறிவு (விஞ்ஞானம்) இவை ஆறும் பகம் எனப்படும். ஈச்வரனது அவதாரமாகத் தோன்றுபவர்களிடத்தில்கூட இதில் ஒன்றிரண்டு சக்திகள் கூடிச் சிறப்புற்றும், மற்றவை தனிச் சிறப்பற்றும் காணக்கூடும். எல்லாம் ஒரே சீராகச் சிறப்புற்று நிறைவுடன் காணப்பெறுமிடம் பகவதீ (பகவான்). தேவி ஒருவளே பகவதீ. பகம் எனும் ஈச்வர சக்திகளில் ஏதேனும் ஓரம்சத்தைப் பெறுவதுகூட பாக்கியம், ஸௌபாக்யம். (279)

1806-01 பத்மநாப-ஸகோதரீ. பத்மநாபனின் சோதரி.

1806-02 தேவியின் ஸங்கல்பத்தால் மூன்று அண்டங்கள் தோன்றி, அவைகளுள் மூன்று இரட்டைக் குழந்தைகள் தோன்றினர். தங்க நிறமுள்ள பிரம்மாவும், லக்ஷ்மியும் சேர்ந்து தோன்றியதால் சோதரர்கள். நீல நிறமுள்ள விஷ்ணுவும் அம்பிகையும் சோதரர்கள். வெண்ணிறமுள்ள சிவனும் சரஸ்வதியும் சோதரர்கள். ரஜஸ், தமஸ், ஸத்வம் என்ற முக்குணங்கள் கூடிய இவர்களை ஒருவருக்கொருவர் குணவழியில் உதவி நிற்பதற்காக பிரும்மனையும் ஸரஸ்வதியையும், விஷ்ணுவையும் லக்ஷ்மீயையும், சிவனையும் அம்பிகையையும் தேவி இணைத்து வைத்தாள். தாமரையைத் தொப்புளில் தோற்றுவித்த விஷ்ணுவின் சோதரியாகத் தோன்றியதால் தேவி பத்மநாப ஸகோதரீ. காஞ்சியில் வரதராஜருடன் தேவி காமாக்ஷி சேர்ந்து தோன்றினள் எனக் காஞ்சி புராணம் கூறும். அந்தத் தோற்றத்திலும் பத்மநாப ஸஹோதரீ.

1806-03 ஸஹஸ்ரநாமத்தின் ஒவ்வோர் அக்ஷரமும் மந்திரம். அதனைச் சொற்களாகப் பாவித்து இதுகாறும் நாம் பொருள்கண்டு வந்திருக்கிறோம். ஆனால் பாஸ்கரராயர் இதன் ஒவ்வோர் அக்ஷரத்திற்கும் பொருள் காணமுடியும் என்று இங்கு விளக்கம் தந்துள்ளார்.

ஸௌந்தர்யலஹரியின் ஒவ்வொரு சுலோகத்திற்கும் பல்வேறு மந்திராக்ஷரங்களைக் குறிப்பதாக ஆனந்தகிரி என்ற சங்கரர் பரம்பரையில் வந்த ஆசாரியரின் உரை விளக்கம் தருகிறது. அதே போல் 'பத்மாஸநா பகவதீ பத்மநாப ஸஹோதரீ' என்ற இந்த மூன்று நாமங்கள் பஞ்சதசாக்ஷரியின் வாக்பவகூடமாக அமைந்த 5 அக்ஷரங்களைக் குறிப்பிடுவதாக பாஸ்கரராயர் உரை தருகிறார். மந்திரங்களில் உள்ள அ, ஆ முதலிய 50 எழுத்துக்களையும் குறிப்பிட ஸங்கேதமொழியில் ஒரு கோசம் உண்டு. இந்த கோசத்தை ஒட்டி "சிவச் சக்தி: காம: க்ஷிதிரத ரவிச் சீதகிரண: ஸ்மரோ ஹம்ஸ: சக்ரஸ் ததநு ச பராமாரஹரய: | அமீ ஹ்ருல்லேகாபிஸ் திஸ்ருபிரவஸாநேஷு கடிதா: பஜந்தே வர்ணாஸ்தே தவ ஜநநி நாமாவயவதாம்" என்ற ஸௌந்தர்யலஹரியின் 32வது சுலோகம் பஞ்சதசாக்ஷரியின் அக்ஷரங்களை ஸங்கேத மொழியில் குறிப்பிடுகிறது. "சிவ: க, சக்தி: ஏ, காம: (காமேசுவரன்) ஈ, க்ஷிதி: (பூமி) ல, இத்துடன் முடிவில் ஹ்ருல்லேகா-ஹ்ரீம்; ரவி: (ஸூர்யன்) ஹ, சீதகிரண: (சந்திரன்) ஸ, ஸ்மர: (மன்மதன்) க, ஹம்ஸ: ஹ, சக்ர: (இந்திரன்) ல, இதன் முடிவில் இரண்டாவது ஹ்ருல்லேகா-ஹ்ரீம்; பரா-ஸ, மார: (மன்மதன்) க. ஹரி: (இந்திரன்) ல, மறுபடியும் ஹ்ருல்லேகா—ஹ்ரீம். இப்படி எழுத்துக்கள் உன் மந்த்ரமாகிய பெயரின் அவயவங்களாகின்றன". இதில் ஒவ்வொரு தெய்வத்தின் பெயர் ஒவ்வொரு எழுத்தை ஸங்கேத மொழியில் தெரிவிப்பதைக் காண்கிறோம். அதேமுறையில் பத்மாஸநா பகவதீ பத்மநாபஸஹோதரீ என்ற மூன்று நாமங்களும் வாக்பவகூடத்தின் க, ஏ, ஈ, ல, ஹ்ரீம் என்ற எழுத்துக்களைக் குறிப்பிடுவதைக் காண்போம். பத்மாஸந—பிரும்மா, ஸங்கேத கோசப்படி க. பகம் என்றால் யோநி. ஏ என்ற எழுத்து ஆதிலிபியில் முக்கோண வடிவில் அமைந்தது.*

---

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|

* 1–11 என்னுள்ளவை 'ஏ' என்ற எழுத்தின் கல்லெழுத்து வடிவங்கள். 12. மந்திரங்கள் குறிப்பிடும் ஆதிலிபியில் இருக்கும் 'ஏ' யின் வடிவமாக ஊகிக்கப்படுவது. 1. தமிழ் குகைக் கல்வெட்டு (கி. மு. மூன்றும் நூற்றண்டு) 2. மௌர்யன் (கி. மு. மூன்றும் நூற்றண்டு) 3, ஸாதவாஹனர் (கி. பி. 3ம் நூற்றண்டு) 4. க்ஷத்ரபர் (கி. பி. 2ம் நூற்றண்டு). 5. குப்தர் (கி. பி. 5ம் நூற்றண்டு.) 6. யசோதர்மர் (கி. பி. 6ம் நூற்றண்டு). 7. பல்லவர் (கி. பி. 7ம் நூற்றண்டு). 8. சாளுக்கியர் (கி. பி. 11ம் நூற்றண்டு). 9. சோழர் (கி. பி. 13ம் நூற்றண்டு). 10-11 விஜயநகரம் (15ம் நூற்றண்டு).

1806-04 அதனுல் யோநி என்று 'ஏ'வைக் குறிப்பிடுகிரோம். பகவதீ + ஈ என்று சேரும்போது தீர்க்கஸந்தியில் பகவதீ என்றே நிற்கும். அந்த மறைந்த 'ஈ' என்ற எழுத்து மூன்ருவது எழுத்தாகும் பத்மநாபன் வாமனுவதாரத்தில் அதிதியின் பிள்ளையாக வந்தவராதலால் இந்திரனின் ஸகோதரராகிருர். பத்மனுபனுடன் கூட இருந்தவன் பத்மநாபஸ —இந்திரன். அவனுல் குறிப்பிடப்படும் எழுத்து 'ல'. 'ஹோதரீ' 'ஹ' எனும் எழுத்து, உத–ஜலம் (ஜலம்-சொட்டு-பிந்து), 'ஹ' வுடனும், பிந்துவுடனும் கூடிய 'ரீ' (ஹோதரீ) ஹ்ரீம் ஆக 'க' 'ஏ' 'ஈ' 'ல' 'ஹ்ரீம்' என்ற ஐந்தெழுத்து 'பத்மாஸனு' 'பகவதீ' 'பத்மநாபஸஹோதரீ' என்ற மூன்று நாமங்களுக்குள் அடங்கியிருப்பதை ஸங்கேதகோச அறிவும், நுண்ணறிவும், தேவியின் திருவருள் பயனுகப் பெற்ற திவ்ய ஞானமும் பெற்றவர்கள் மட்டுமே அறிவர். (280)

66 उन्मेषनिमिषोत्पन्नविपन्नभुवनावली । 281
सहस्रशीर्षवदना सहस्राक्षी सहस्रपात् ॥ 284

**உந்மேஷ நிமிஷோத்பந்ந விபந்ந புவநாவளீ I**
**ஸஹஸ்ரசீர்ஷவதநா ஸஹஸ்ராக்ஷீ ஸஹஸ்ரபாத் II**

1807-01 **உந்மேஷ-நிமிஷ-உத்பந்ந-விபந்ந-புவந - ஆவளீ. கண்கள் திறந்து மூடுவதற்குள் உண்டாகி மறைந்த உலக வரிசையுடன் கூடியவள்.**

1807-02 தேவி காலத்தைக் கடந்தவள். ஸகுணமான வடிவில் அவளது அழகிய கண்கள் இமைப்பொழுது மூடித் திறக்கும். "தேவதைகள் அநிமிஷர்கள், மூடித் திறக்காத கண்கள் படைத்தவர்களாயிற்றே! தேவி கண்ணை மூடித்திறப்பது எங்ஙனம்? என்று சந்தேகம் எழக்கூடும். அந்த நியமம் தேவர்களாக மட்டும் இருக்க முடிந்தவர்களுக்கே. இந்திரன் முதலானவர்களால் தேவர்களாக மட்டுமே இருக்கமுடியும். அவர்கள் இமைப்பில்லாதவர்கள். தேவி எந்த எல்லையையும் கடந்தவளாயிற்றே. தேவியைத் தேவ இனத்தை மட்டும் சேர்ந்தவள் எனக் கட்டுப்படுத்தமுடியாது. அதனுல் அவள் இமைப்பாள். ஒவ்வொரு தடவையும் இமைகள் மூடித்திறக்கும் கணத்திற்குள் பல கோடி உலகங்கள் தோன்றி மறையும். இமைப்பதற்கு முயற்சி தேவை இல்லை. அதனுல் சிரமமோ களைப்போ ஏற்படாது. அதற்கான ஸங்கல்பம் தேவையில்லை. தானே நிகழக் கூடியது. இமைப்பவன் உயிருடன் இருக்கவேண்டும் என்ற ஒன்று மட்டும் தேவை. அதுபோல் தேவி உலகவரிசையைப் படைக்க

ஸங்கல்பமோ முயற்சியோ எடுத்துக் கொள்வது கிடையாது. அவளது ஸந்நிதானம் (இருக்கை) ஒன்றே உலகைப் படைத்தும் மறைத்தும் விடுகிறது. கண் இமைப்பதும் மூடுவதும் பிரும்ம நிலையில் கற்பனையால் ஏற்படுத்தப்பட்டது. படைப்பது மிக எளிதான காரியம் என்பதைக் காட்ட இந்தக் கற்பனை. (281)

1808-01 ஸஹஸ்ர-சீர்ஷவதநா. எண்ணற்ற தலைகளும், வாய்களும் உள்ளவள்.

1809-01 ஸஹஸ்ர -அக்ஷீ. எண்ணற்ற கண்களுள்ளவள்.

1810-01 ஸஹஸ்ர-பாத். எண்ணற்ற கால்களுள்ளவள்.

1810-02 தேவியின் விராட் ஸ்வருபத்தை இந்த மூன்று நாமங்களும் விளக்குகின்றன. உலகைப் படைக்குமுன் தேவியின் ஸங்கல்பம் விரிந்து ஐந்து மஹாபூதங்கள் தோன்றியதும் அவை வினைப்பயனையொட்டி அந்தந்த ஜீவன் நுழைவதற்கேற்ப விசித்திர மான பல கூட்டுகளாகச் சேர்ந்து தனித்தனி உருவங்களைப் பெற்றன. ஒவ்வொன்றையும் தனித்து அடையாளம் காட்டுவதற்காகத் தலை முதலியவைகளின் அமைப்பு ஒவ்வொன்றிலும் வேறுபட்டதாக அமைக்கப்பெற்றது. அப்படி அமைந்த தலைகளும் வாய்களும் கண்களும் கால்களும் எத்தனை எத்தனையோ! ஸஹஸ்ரம்-ஆயிரம். ஆனால் கூறுபவனது எண்ணம்போல் அதன் பொருள் விரியும். "ஆயிரம் வேலைகள் எனக்கு" என்று ஒருவன் கூறுவான். அதற்கு "999 ஓ 1001 ஓ அல்ல. சரியாக ஆயிரம்" என்ற பொருள் அல்ல. "எண்ணற்ற" எனப் பொருள். அப்படியே இங்கும் அந்தந்த அங்கங்களைத் தனித்தனியாக எண்ணற்றவையாக முதலில் படைத்து அவைகளைத் தக்கபடி பிறகு சேரச் செய்து முழு உருவமாக்குகிறாள் தேவி. (282-284)

67 आब्रह्मकीटजननी वर्णाश्रमविधायिनी । 286
निजाज्ञारूपनिगमा पुण्यापुण्यफलप्रदा ॥ 288

ஆப்ரஹ்மகீடஜநநீ வர்ணாச்ரமவிதாயிநீ ।
நிஜாஜ்ஞாரூபநிகமா புண்யாபுண்யபலப்ரதா ॥

1811-01 ஆ-ப்ரம்ஹ - கீட-ஜநநீ. பிரும்மா முதல் புழு வரை எல்லாவற்றையும் பெற்றவள்.

1811–02 எல்லா ஜீவர்களது ஸமஷ்டியான ஹிரண்யகர்ப்பன் பிரும்மா. படைக்கும் சக்தி படைத்தவனாக முதல் பிரும்மத் தோற்றம் பிரும்மா. கீடம் புழு. கண்களுக்குப் புலப்படாத மிக நுண்ணிய உருவம் உள்ளது. பெரு உருவமுள்ள நான்முகன் தொடங்கிக் கண்களுக்குப் புலப்படாத ஈனஜந்துவான புழு வரை உள்ள உலகனைத்திற்கும் தாய் தேவி. பிரும்மாவிற்கும் புழுவிற்கும் இடையே பெருத்த வேறுபாடு இருக்கக்கூடும். ஆனால் தாயான தேவிக்குத் தான் பெற்ற ஜீவர்களிடத்தில் வேறுபாடு கிடையாது. எல்லோருக்கும் அவள் தாய். (285)

**1812-01 வர்ண - ஆச்ரம-விதாயிநீ. வர்ண-ஆசிரம முறைகளை வகுத்தவள்.**

1812-02 பிரும்மா முதல் புழு ஈறாக எல்லாவற்றையும் படைத்த தேவி, படைக்கப்பட்டவர்களுக்கு நல்வழி காட்டுவதற்கெனத் தனது ஆணையே வடிவெடுத்த வேதத்தைத் தோற்றுவித்தாள். கர்மகாண்டம் பிரும்மகாண்டம் என இரண்டு பகுதிகளாக அதைப் பிரித்தாள். அதில் மனிதனைத் தவிர மற்றவர்களுக்கு வேதத்தின் கர்மகாண்டத்தில் கூறப்பட்ட முறைகளைப் பின்பற்ற வாய்ப்பில்லாததால், மனிதனை மட்டும் வர்ணங்கள் என்ற பிரிவில் அடக்கிப் பின் தகுதிக்கேற்ப நான்கு ஆசிரமங்களை வகுத்து அந்தந்த நிலையில் பின்பற்றவேண்டிய முறைகளை வேதத்தின் மூலமும் அதை ஒட்டிய ஸ்மிருதி முதலானவற்றாலும் அமைத்துத் தந்தாள். அப்படி வர்ணங்களையும் ஆசிரமங்களையும் வகுத்துத் தந்தவள் தேவி. (286)

**1813–01 நிஜ-ஆஜ்ஞா-ரூப-நிகமா. தனது கட்டளைகளின் வடிவமாக உள்ள வேதங்களை உடையவள்.**

1813-02 தேவி கட்டளைகளை வேதத்தின் மூலம் வெளியாக்கினாள். 'இதைச் செய்', 'இதைச் செய்யாதே' என்ற விதியும் நிஷேதமும் வேதத்தின் கர்மகாண்டத்தில் வெளியிடப் பெறுகின்றன. செய் செய்யாதே எனக் கட்டளையிடுபவள் தேவி. அதன் மூலம் வர்ணதர்மங்களையும் ஆசிரமதர்மங்களையும் வரையறுத்துத் தந்திருக்கிறாள்.

நிகமம்-வேதம். கார்யகாரண விளக்கத்துடன் நிரூபிப்பது நிகமநம். அப்படிக் காரிய காரண விளக்கத்துடன் வேதம் ஈசுவர தத்துவத்தைக் காட்டுவதால் வேதம் நிகமமாகும். ஈசுவரத்

தத்துவத்தில் ஆட்படுத்தும் சக்தியும் அடங்கியுள்ளது. ஆட்படுத்துபவளது கட்டளையையும் வேதம் தாங்கி நிற்கிறது. மக்களுக்கு இதத்தை நயந்து நண்பன்போல் கூறுவது புராணம். மனைவி போல் அன்பில் தோய்த்துக் கூறுவது காவியம். அரசனது கட்டளை போல் கூறுவது வேதம். மனைவியின் சொல்லை மீறமுடியாதபடி அன்பு மயக்கும். நண்பனின் சொல்லை மீறமுடியாதபடி நட்பு வற்புறுத்தும். அரசனின் ஆணையை மீறமுடியாதபடி அதன் பின்னுள்ள தண்டனை என்ற பயம் கட்டுப்படுத்தும். (287)

**1814–01 புண்ய - அபுண்ய - பல-ப்ரதா. புண்ய - பாப-வினைகளின் பலனைத் தருபவள்.**

1814–02 தான் வரையறுத்து நிலை நிறுத்தியபடி செய்ய வேண்டியதைச் செய்வதால் புண்யமும் செய்யத் தகாதவைகளைச் செய்வதால் பாபமும் விளைந்ததை தேவி கணக்கிட்டு அதற்கேற்ற பலன்களையும் அளிக்கிறாள்.

புண்ய-பாவ வினைகள் என்று கூறாமல் புண்ய அபுண்யம் என்று கூறியதில் ஒரு தத்துவமுண்டு. அபுண்ணியம் என்ற சொல்லிற்கு புண்யம் போலத் தோன்றுவது என்ற பொருளும் உண்டு. அது போல் நமது அறியாமையாலோ ஆணவத்தாலோ பாபச் செயலைப் புண்ணியமாக நினைத்துச் செய்திருப்போம். அதன் பின் விளைவை நாம் முன் அறிந்திருக்க முடியாது. அதற்காகவே வேதம் 'இதனைச் செய்யாதே' எனக் கண்டிப்பாய் பாபச் செயலைத் தவிர்க்கக் கூறியுள்ளது. அதனை மதிக்காமல் பாப வினைகளைப் புரியும்போது நீதிபதிபோல் அந்த வினைக்குப் பலன் தரவேண்டி வருகிறது. அன்புள்ளம் படைத்தவளாயினும் தவறுகளைத் தண்டிக்காமல் அவளால் இருக்க இயலாது. (288)

68 श्रुतिसीमन्तसिन्दूरीकृतपादाब्जधूलिका । 289
सकलागमसन्दोहशुक्तिसंपुटमौक्तिका ॥ 290

ச்ருதிஸீமந்தஸிந்தூரீக்ருதபாதாப்ஜதூளிகா !
ஸகலாகமஸந்தோஹ சுக்திஸம்புடமௌக்திகா !!

**1815-01 ச்ருதி-ஸீமந்த-ஸிந்தூரீ-க்ருத-பாத-அப்ஜ-தூளிகா. வேதமாதாவின் தலைவகிட்டில் தேவியின் திருவடித் தூளிகள் சிந்தூரமாகப் பதிந்துள்ளன. அத்தகைய தூளிகளைத் திருவடியில் கொண்டவள்.**

1815–02 வேத மாதாவின் தலைப்பகுதி உபநிடதங்கள். உபநிடதங்களின் நடுப்பகுதி வேதமாதாவின் தலைவகிடாக அமைந்துள்ளது. அதில் தேவியின் திருவடித்தூளிகள் மிக அழகாகச் சிந்தூரப் பொட்டுபோல் தூரத்திலிருந்தபடியே அறிந்துகொள்ளத் தக்கபடி அமைந்துள்ளன. வேதமும் தேவியின் தத்துவத்தை இவ்வண்ணம் இப்படி என்று நன்கு விளக்கி கூறத் தயங்குகிறது. இப்படி அல்ல, அப்படி அல்ல என்று மறுப்புரைகள் மூலம் விளக்கும் வேதம் பயந்தும் வெட்கியும் உண்மை நிலைக்கு வெகுதூரத்திலேயே நிற்கின்றது. தேவியைப் பற்றிக் கர்மகாண்டத்தில் விளக்கமில்லை. ஞானகாண்டமான உபநிடதங்களில் கூறப்பட்டதும் கூட தேவியின் கால்தூசி பற்றிய பெருமையே. ஆனால் அதுவே சிந்தூரப் பொட்டு போல் மிகச் சிறந்து விளங்குகிறது. தேவியின் திருவடிகளை மட்டுமாவது அதனுல் கூற முடிந்திருந்தால் எத்தனை அழகாயிருந்திருக்கும்? ஈசுவர தத்துவங்களைக் கூறுவதற்காகவே தேவியாலேயே தோற்றுவிக்கப்பட்ட வேதத்தின் சக்தியே இம்மட்டில் தான் என்ருல், அதைக் கூற வேறு யாருக்குத் தகுதி இருக்கமுடியும்?

1815–03 கர்மகாண்டத்தில் வினை எனும் பாசத்தால் பிணைக்கப்பெற்றவர்களுக்கு வழிகாட்டினுள் தேவி. சித்த சுத்திக்காகவே வேதம் கூறிய கர்மங்களைச் செய்து வினை எனும் பாசத்தை அறுத்துக் கொண்டவர் சிலர். அவர்களுக்கு வேத சிரஸ் எனும் உபநிடதங்களாகிற ஞான காண்டத்தால் வழிகாட்டுகிருள் தேவி. நெற்றியை விட நெற்றியின் மேலிட்ட சிந்தூரப் பொட்டு நன்கு துலங்கும். சிந்தூரப் பொட்டால் நெற்றி அழகுபடும். தேவியின் கால்தூசி பற்றிய விளக்கத்தால் உபநிடதங்கள் பெருமை பெறுகின்றன. கர்மகாண்டத்தை விடச் சிறந்ததாக உபநிடதங்கள் காணப்பட்டன. அதன் நடுவில் துலங்கும் சிந்தூரத்தைப் பார்த்தபின் உபநிடதங்கள் கால்தூசியால் சிறப்பு பெற்றுள்ளதை அறிய முடிகிறது. (289)

**1816–01 ஸகல-ஆகம-ஸந்தோஹ-சுக்தி-ஸம்புட-மௌக்திகா.**
**எல்லா ஆகமக் கூட்டமாகிற முத்துச்சிப்பி சம்புடத்தில் அமைந்துள்ள முத்தாக விளங்குபவள்.**

1816–02 வேதங்களுக்கொப்பான சிறப்புள்ளவை, இறைவன் முகத்திலிருந்து வெளியானவை ஆகமங்கள்–தந்திர நூல்கள். (ஆகதம் சிவவக்த்ராத்) வேதங்களைப்போல் தந்திர நூல்களும் மதிக்

கப்படுகின்றன. தந்திர நூல்களும் தேவியை வர்ணிக்கப் புகுந்து, இயலாமையால், தேவி சம்பந்தப்பட்டதொன்றை விளக்குவதுடன் திருப்தி அடைகின்றன. அதையும் வெளிப்படையாகக் கூற முடியாமல் முத்துச் சிப்பியினுள் அமைந்த முத்துபோல் மூடி வைத்தே காட்டுகின்றன. முத்துக்குளிக்கும் தைரியம் கொண்டு செயலாற்றி அறிவுநூல்களாகிற கடலில் மூழ்கி அதன் அடியில் உள்ள ஆகமமாகிற சிப்பியைக் கொணர்ந்து அதன் மதிப்பை உணர்ந்து பிரித்து உள்ளே உள்ள முத்தைக் காண்கிறோம். அந்த முத்து தேவி அணிந்த அணியில் நடுவில் பதித்துள்ளவைகளில் ஒன்று. அதனைக் கொண்டு தேவியை ஊகித்து அறியவேண்டும்.

1816-03 தேவியே சிப்பியினுள் முத்துபோல் விளங்குகிருள் எனக் கொள்ளலாம், கடலில் ஆழத்தில் உள்ள சிப்பிபோல் உள்ளது தேவியைப்பற்றிய தத்துவம். அதை மிகக் கருத்துடன் கொணர்ந்து திறந்தால் அதனுள் ஒளியுடன் விளங்கும் தேவியைக் காணலாம். முத்துச் சிப்பியைக் கொணரும் திறன்மட்டுமிருந்தால் போதாது. அந்த முத்துச் சிப்பியினுள் துலங்கும் முத்தை மதிப் பிடத் தெரிவதும் அவசியம். மதிப்பிட அறிந்தவர் மிகச் சிலரே. சில முத்துக்கள் யாராலும் உண்மையாக மதிப்பிட முடியாதபடி மிகச் சிறந்ததாக இருக்கவும் கூடும். அப்போது மிகச் சிறந்த மதிப்பிடமுடியாத முத்தைக் கண்டோம் என்றே திருப்தி அடைய வேண்டியிருக்கும். தேவி அத்தனை சிறப்புடைய முத்து போன்றவள். முத்து அதற்கேற்ற முத்துச் சிப்பியினுள் அமைந் திருக்கும்போது மிகத் தெளிவாகக் காணப்படுகிறது. அதுபோல் ஆகமங்கள் தேவி தத்துவத்தை மிக அழகாக வெளிக்காட்டுகின்றன. (290)

69 पुरुषार्थप्रदा पूर्णा भोगिनी भुवनेश्वरी । 294
अंबिकाऽनादिनिधना हरिब्रह्मेन्द्रसेविता ॥ 297

புருஷார்த்தப்ரதா பூர்ணு போகிநீ புவநேச்வரீ I
அம்பிகா (அ)நாதிநிதநா ஹரிப்ரம்ஹேந்த்ரஸேவிதா II

1817-01 புருஷ-அர்த்தப்-ப்ரதா.புருஷார்த்தங்களை அளிப்பவள்.

1817-02 அறம், பொருள், இன்பம், வீடு என்று நான்கு புருஷார்த்தங்கள். தனக்கு 'இது நல்லது', 'இது கிடைக்க வேண்டும்' என்று திட நிச்சயத்துடன் முயன்று அதில் வெற்றி காண்பவன் புருஷன். .அந்தத் தகுதிபெற்ற பெண்ணும் புருஷனே.

புருஷனால் நாடப்படுவது (புருஷேண அர்த்த்யதே) புருஷார்த்தம். நல்லதை அடையத் தகுதி, அதுபற்றிய தீர்மானத்துடன் செயலில் இறங்குபவனுக்குத்தான் உண்டு. அப்படி இறங்குபவன் வெற்றி பெறுவான். அவன் பெறும் வெற்றி தேவியின் அருளால் கிட்டு கிறது. வேதங்கள் ஆகமங்கள் காட்டும் வழியில் செல்பவனுக்குப் புருஷார்த்தங்களைக் கொடுப்பதில் மிகுந்த ஈடுபாடு கொண்டவள் தேவி.

1817-03 மனத்தையும், புத்தியையும், இந்திரியங்களையும், உடலையும் தன்வசப்படுத்திச் செயல் புரிபவன் புருஷன். அவன் தீரன். தன் இஷ்டப்படி புத்தி சக்தியைப் பயன்படுத்துபவன். அப்படிப்பட்ட தீரனிடம் தேவிக்குப் பிரியமுண்டு. அவனுக்குத் தேவையானதைத் தருபவள் தேவி. (291)

1818-01 பூர்ணா. நிறைந்தவள்.

1818-02 எங்கும் எப்போதும் எல்லாமாக இருப்பவள் பூர்ணா. ஓர் இடத்தில் இருந்து மற்றோரிடத்தில் இல்லாததும், ஒருபோது இருந்து மற்றொரு போதில்லாததும், ஒன்றாக இருந்து மற்றொன்றாக இல்லாததும் நிறைவற்றது. தேவியிடம் இந்த மூன்று குறை களும் காணமுடியாதாகையால் பூர்ணா. (தேச-கால-வஸ்துக்ருத-பரிச்சேத-ராஹித்யாத் பூர்ணா") புருஷார்த்தங்களை வாரி வழங்கி னாலும், எந்நிலையிலும் குறைவை அடையாதவள். ஆதலால் அவள் பூர்ணா.

1818-03 திதிகளில் பஞ்சமீ, தசமீ, பூர்ணிமா, அமாவாசை இவை நான்கும் பூர்ணா. சுக்லபக்ஷ சதுர்தசியின் இரவுக்குப் பூர்ணா எனப் பெயர். பூர்ணா எனும் நதி (சூர்ணா-பெரியாறு) உண்டு. இவைகளின் வடிவில் உள்ளவள் தேவி. (292)

1819-01 போகிநீ. போகமுள்ளவள்.

1819-02 போகம்-சுகானுபவம். அதை அடைந்தவள் தேவி. போகம்-பாம்பின் உடல். அதை உடைய பெண் பாம்பு-குண்டலினி யின் வடிவம். சுருட்டிக்கொண்டுள்ள பெண் பாம்பின் உடலைக் கொண்ட குண்டலினி தேவி. (293)

1820-01 புவந-ஈச்வரீ. புவனங்களின் தலைவி.

1820-02 புவனங்கள் பதினான்கு. அதலம், விதலம், ஸுதலம், தலாதலம் மஹாதலம், ரஸாதலம், பாதாளம் என்ற பூமிக்குக்

கீழுள்ள ஏழு உலகங்கள், பூமி, அதற்குமேலுள்ள புவர்லோகம், ஸுவர்லோகம், மஹோலோகம், ஜநோலோகம், தபோலோகம், ஸத்யலோகம் என்ற ஆறு உலகங்கள். இவைகளைத் தன் விருப்பப் படி ஆட்டுவிப்பவள் .

1820-03 ஹ்ரீம் என்ற மாயாபீஜம் புவனேச்வரி எனும் மந்திர வடிவம். அந்த மந்திர வடிவிலுள்ளவள் தேவி. அந்த மந்திரத் தால் வழிபடப்பெறும் புவனேசுவரியாக இருப்பவளும் தேவியே. 'ஹ்' என்ற அக்ஷரத்தால் ஆகாசத்தையும் 'ர்' என்ற அக்ஷரத்தால் அக்னியையும் 'ஈ' என்ற அக்ஷரத்தால் ஜலத்தையும் படைத்து உலகைத் தோற்றுவித்ததால் அவள் புவநேச்வரீ. 'ஹ' 'ய' 'ர' 'வ' 'ல' என்ற ஐந்து அக்ஷரங்களே ஆகாயம் முதலிய ஐந்து பூதங்களையும் தோற்றுவித்தன. பஞ்சபூதங்களின் பீஜ (விதை)- அக்ஷரங்கள் இவை. (0406) இவைகளிலிருந்து விரிந்தவை ஐந்து பூதங்கள். மானவர்கள் என்ற குருக்கூட்டத்தில் (பா. 0214-20) புவனர் (புவநாநந்தநாதர்) என்பவர் ஒருவர். அவருக்கு அருள் புரிந்தவள் புவனேச்வரியான தேவி. (294)

1821-01 அம்பிகா. சிறந்த தாய்.

1821-02 அம்பா-தாய். அம்பிகா சிறப்பு மிக்க தாய். உலக னைத்திற்கும் அவள் சிறப்பு மிக்க தாய். இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி என்ற மூன்று சக்திகளுக்கும் ஸமஷ்டி வடிவம் அம்பிகா. அவளே தேவி. அம்பிகா-இரவு. தாயைப் போல் அரவணைத்துக் கட்டாயமாக ஓய்வும் நிம்மதியும் தருபவள் இரவெனும் ராத்திரி தேவி. தேவியை ராத்திரி தேவதையாக வழிபட உதவுவது ருக்வேதத்திலுள்ள ராத்திரி ஸூக்தம். தாயின் வடிவமான இரவா யிருப்பவள் தேவி. அம்பிகா-தூக்கம். தூக்கமும் தேவியின் வடிவ மாகக் கொண்டாடப்படும். "யா தேவீ ஸர்வபூதேஷு நித்ரா ரூபேண ஸம்ஸ்திதா. நமஸ்தஸ்யை" "எவள் எல்லா பிராணி களிடத்தும் தூக்கத்தின் வடிவில் ஆட்கொண்டிருக்கிறளோ அவளுக்கு வணக்கம்." என தேவீ மாகாத்மியம் (5-25) தன் வணக் கத்தைத் தெரிவிக்கிறது. ஹரிவம்சம் தூக்கத்தைத் தேவியாகப் புகழ்ந்து கூறியது. மனிதனின் வாழ்வில் பாதி நேரத்தை விழுங்கி, பாக்கி நேரத்திலும் தனது நிழலாகிற அறியாமையைப் படரவிடு பவள் நித்ராதேவி. அவள் உள்ளே நுழைந்தவுடனேயே வீரனும் சூரனும் கொட்டாவி விடுகிறன். அவளது வேகத்தில் யாவரும் மீளமுடியாதபடி அழுந்திவிடுகிறர்கள், அவள் வேகத்தைத் தாங்கி

நிற்பவர் நாராயணன் ஒருவரே என ஹரிவம்சம் கூறும். அந்த விஷ்ணுவும் ஹயக்கிரீவரானது இந்த நித்திராதேவி ஆட்கொண்ட தால் என தேவீபாகவதம் கூறும் (பா. 0115). (295)

1822–01 அநாதி-நிதநா. ஆதியும் அந்தமுமற்றவள்.

1822–02 ஆதியும் அந்தமுமற்ற தேவியை முழுதும் அறிந்து விட முடியாது. அவளது ஆதியையும் அந்தத்தையும் யாரும் நேரில் கண்டதில்லை. அவளால் படைக்கப்பெற்ற உலகில் நடுவில் தோன்றி நடுவில் மறையும் ஒருவன், உலகிற்கு மூலகாரணமாக அதற்கு முன் உள்ளவளும் பின் மூலகாரணமாக நின்று அதனைத் தன்னுள் அடக்கிக்கொண்டவளுமான தேவியை அறிய முடியாது. ஆதியும் அந்தமும் அற்றவள் என ஊகித்தறியலாம். ஊகத்தால் அவளுக்கும் ஆதியிருப்பதாகக் கொண்டால் என்ன என்ற கேள்வி எழலாம். அவளுக்கும் ஆதி இருப்பதாக ஊகித்தால் அந்த ஆதிக்கு ஆதி எது என்று நிலையற்றதாக ஊஹம் சென்று கொண் டிருக்கும். பயனற்ற அந்த ஊஹத் தொடரைத் துண்டித்துத் தேவியே ஆதி எனக்கொள்வது மரபு. அந்த ஊஹத்திற்குப் பக்க பலம் தருவது உலகம் அவளிடமிருந்து தோன்றியதை விளக்க வரும் உபநிடத வாக்கியம். ("யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே." முதலியது, பாரா. 0506)

1822–03 நிதநம் என்ற சொல் தேவி உபாஸனைக்கு இடை யூருக இருப்பவைகளைக் குறிக்கும். ஆதி என்பது கடபயாதி எண் முறையில் 80 என்ற எண்ணைக் குறிக்கும். வதம் பாசம் என நிதனங்கள் (இடையூறுகள்) இரு வகைப்படும். வதம் 28 வகை, பாசம் 52 வகை.

1822–04 வதம் மூன்று வகை, அசக்தி, துஷ்டி, ஸித்தி என. அதில் அசக்தி 11 வகை. கண் பொட்டையாவது, காது செவி டாவது, இதுபோல் பத்து இந்திரியங்களும் மனமும் (11) தன் சக்தியை இழப்பது உபாஸனைக்கு இடையூறு. இவை அசக்தி எனும் வதமாகும்.

1822–05 துஷ்டி என்பது மனநிலை. காரியம் முழுவதும் சித்தி பெறுமுன்னரே நடுவிலேயே எல்லாம் கிடைத்து விட்டது போலத் திருப்திப்படுவது துஷ்டியாகும். அது 9 வகைப்படும். பூமி, ஜலம், அக்கினி, வாயு, ஆகாயம், அஹங்காரம், மஹத், அவ்யக்தம் என்ற 8 வகை பிரகிருதிகளிலிருந்தும் மீண்டு அவைகளில் லயிக்காமல்

பிருகிருதிக்கு அப்பாற்பட்ட இறைவனிடம் மனோலயம் ஏற்படுவது உபாஸனையின் பலன். (1) பிருகிருதி ஜடம். (நா. 341) அதனைப் பற்றிக்கொள்ளும் மனமும் ஜடமாகிவிடும். ஜடத்தில் லயித்தவுடனேயே தேவியிடம் லயித்ததாக ஏற்படும் துஷ்டி-அரை குறையான திருப்தி. மேல் சென்று சைதன்ய ரூபிணியான தேவியை நாடுவதை அது தடுத்துவிடும். இது பிரகிருதிதுஷ்டி. (2) காஷாயம் தரிப்பது போன்ற வெளிவேஷம் போட்டவுடனேயே எல்லாம் கிடைத்து விட்டதாக ஏமாறுவது உபாதான துஷ்டி. (3). காலம் தானே கூட்டுவிக்கும். தியானம் எதற்கெனச் சோம்பியிருப்பது காலதுஷ்டி. (4) அவள் அருளால்தான் அவள் தாளை வணங்க முடியும். தேவியின் கிருபை எல்லாவற்றையும் கூட்டுவிக்கும் என வாளா விருப்பது பாக்யதுஷ்டி. இவை மனத்தளவில் ஏற்படும் நான்கு வகை துஷ்டி. (5-9) காதால் அவளைப் பற்றிக் கேட்கவேண்டும். கண்ணால் திருவுருவைக் காணவேண்டும். இப்படி ஐந்து ஞானேந்திரியங்களையும் அவளிடத்தில் பதிப்பது லயம். "என் காது தேவியைப் பற்றிக் கேட்க விரும்புவதில்லை. என் செய்வது? நான் கொடுத்து வைத்தது அவ்வளவு தான்" என இந்திரியங்களைக் குறை கூறி முயற்சியைக் குறைத்துக் கொள்வது இந்திரிய துஷ்டி. இது ஐந்து வகை. ஆக துஷ்டி ஒன்பது வகைப்படும்.

1822-06 சித்தி எட்டுவகை. நமது முயற்சியால் அடையக் கூடிய விஷயத்தில் தானே தற்செயலாகச் சில சித்திகள் ஏற்பட்டு அதில் மனம் ஏமாந்து மேலே செல்லும் முயற்சியைக் கைவிடச் செய்யும். அத்தகைய சித்திகள் எட்டு. (1) உபதேசம் பெறுமலேயே பொருளை ஊகித்தறியும் சித்தி ஊஹ சித்தி. (2) தற்செயலாகக் கேட்ட ஒரு சொல்லால் பொருள் விளங்குவது சப்தசித்தி. (3) குருவினிடமிருந்து உபதேசம் பெற்ற பிறகும் அதனைப் பகுத்தறியத் தன் விவேகத்தைப் பயன்படுத்துவது அத்யயன சித்தி. (4) தேவிதத்துவமறிந்தவனது நட்பு ஸுஹ்ருத் ஸித்தி. (5) பெரியோர்களது பணிவிடைக்கான வாய்ப்பு சுச்ருஷாஸித்தி. இந்த ஐந்தால் மனத்தின் நாட்டமும் சிரத்தையும் வழிமாறிப் போகும். ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என்ற மூன்று துக்கங்களால் ஏற்படும் தடை மூன்று. ஆக சித்தி எட்டு. இந்த 28-ம் வதங்கள். (11 அசக்தி, 9 துஷ்டி, 8 சித்தி = 28.)

1822-07 மனோலயத்தில் கயிறுபோல் குறுக்கே நின்று தடை ஏற்படுத்தி யோகம் சித்திக்காமல் செய்பவை பாசம் எனப்படும். இது 52 வகைப்படும். லிங்கபுராணத்தின் 9-ம் அத்தியாயத்தில்

இது பற்றிய விளக்கத்தைக் காணலாம். இந்த 80 வித தண்டகளும் (ஆதி-நிதனங்கள்) தேவி வழிபாட்டில் தோன்றுது. அதனுல் அவள் அநாதிநிதநா. (296)

1823-01 ஹரி - ப்ரஹ்ம-இந்த்ர - ஸேவிதா. நாராயணன், பிரும்மா, இந்திரன் இவர்களால் பூஜிக்கப்பட்டவள்.

1823-02 ஸ்ரீநகரத்தில் 17-18 மதில்களுக்கிடையே உள்ள நவ ரத்தின பிராகாரத்தில் விஷ்ணுவும், 16-17 மதில்களுக்கிடையே உள்ள பிரவாளப் பிராகாரத்தில் பிரும்மாவும், 14-15 மதில்களுக் கிடையே உள்ள முக்தாப் பிராகாரத்தில் இந்திரன் முதலான திக்பாலர்களும் தேவியை வழிபடுகின்றனர். (பாரா. 0911) (297)

70 **नारायणी नादरूपा नामरूपविवर्जिता ।** 300
**ह्रींकारी ह्रीमती हृद्या हेयोपादेयवर्जिता ॥** 304

**நாராயணீ நாதருபா நாமருபவிவர்ஜிதா 1**
**ஹ்ரீங்காரீ ஹ்ரீமதீ ஹ்ருத்யா ஹேயோபாதேயவர்ஜிதா 11**

1824-01 நாராயணீ. நாராயணி.

1824-02 நர: - பரம்பொருள். அதனைச் சேர்ந்தவர்கள் நாரர்கள். அயநம்-அவர்கள் அடையவேண்டிய இடம், அடைய வேண்டியதற்கான வழி. அது நாராயணம். மஹாவிஷ்ணு வையும் சிவனையும் இந்த நாராயணம் என்ற சொல் குறிக்கும். சிவஞன நாராயணனுக்கு சக்தி நாராயணீ. விஷ்ணுவான நாராயணனைச் சேர்ந்த பெண் (சகோதரி) நாராயணீ (நா. 280).

1824-03 நர:-பரம்பொருள். நாரா:-அவனிடமிருந்து தோன் றிய உலகிற்குக் காரணமான காரணஜலம் (காரண-உதகம்). அத னைத் தன் இருப்பிடம் (அயனம்) ஆகக் கொண்டவர் நாராயணன். உலகம் அழியும்போது பிரளயகாலத்திய மேகங்கள் தொடர்ந்து பொழிந்த ஜலத்தில் நிலம் கரைந்து எல்லாம் ஜலமாகி நின்றதும், அந்த ஜலம் பிரளயகால ருத்திரனுகிய சூர்யனுல் பொசுக்கப்பட்டு மூலப் பொருளாக்கப்பட்டது. மீண்டும் படைப்புத் தொடங்கும் போது உலகின் காரணமானதனைத்தும் ஆகாசம், வாயு, அக்னி என்ற பூதங்களாகத் தோன்றிப் பின் ஜலமாக காரணோதகமாக நின்றன. அதில் கரைந்திருந்த பிருதிவியின் அம்சம் இறுகி நிலம் தோன்றிற்று. இந்த காரணோதகம் நாரா: எனப்படும். அதனைத் தன்னிருப்பிடமாகக் கொண்டவர் நாராயணன்; உலகைப் படைக்

கப் பிரும்மனைத் தன் நாபியிலிருந்து தோற்றுவித்த நாராயணன். அவரது சகோதரி, அவரது சக்தி நாராயணி.

1824-04 நாராயணனுக்கும் தேவிக்கும் பேதம் கிடையாது. சிவனது இடது பாகத்தைத் தேவியாகவும் (அர்த்தநாரி) நாராயணனாகவும் (சங்கரநாராயணன், ஹரிஹரன்) இருந்து நிரப்புவது உண்டு. இந்த அபேதத்தால் தேவியும் நாராயணனே. அதனால் நாராயணி.

1824-05 அமிருதத்திற்காகப் பாற்கடலைக் கடைந்து அமிருதத்தைப் பெற்றதும் அதனை விநியோகிக்க மோஹினி வேஷம் எடுத்து அஸுரர்களை நாராயணன் ஏமாற்றினர். அந்த மோஹினி வேடத்தைக் கண்டுகளிக்கச் சிவனும் விரும்பினர். தேவியை ஆராதித்து அவள் அருளால் அவளாக மாறி விஷ்ணு சிவனை மயக்கினர் என்பதை 'ஹரிஸ்த்வாம் ஆராத்ய' என்ற ஸௌந்தர்ய லஹரீசுலோகம் விளக்கும். அப்படி நாராயணனைத் தன் வடிவாக்கியவள் தேவி. (நா. 562)

1824-06 ஸுபார்சுவம் எனும் க்ஷேத்திரத்தில் நாராயணி என்ற நாமம் பூண்ட தேவியாக விளங்குபவள். (298)

1825-01 நாத-ரூபா. நாதமாக விளங்குபவள்.

1825-02 பரா, பச்யந்தி, மத்யமா, வைகரீ என்று ஒலியின் தோற்றத்தில் நான்கு நிலைகள் உண்டு. (நா. 366-371) மத்யமா நிலையிலிருந்து வைகரீ நிலையை அடையும் ஒலியில் ஒன்பது நாதங்கள் பிரியும். அவிக்ருதம், சூன்யம், ஸ்பர்சம், நாதம், துவனி, பிந்து, சக்தி, பீஜம், அக்ஷரம் என, அவை ஒன்பது. இந்த ஒன்பதும் அ. க. ச. ட. த. ப. ய. ச. (ஐ)ள என்ற ஒன்பது வர்க்கங்களாக விரியும் எழுத்துக்களாகப் பிரிந்து வைகரீ நிலையை (காதால் கேட்கக்கூடிய நிலையை) அடைகின்றன. இந்த அக்ஷரங்கள் அனைத்திலும் காரண வடிவில் நாதம் பரவி நிற்கிறது. அந்த நாத வடிவில் உள்ளவள் தேவி. (வரிவஸ்யா ரஹஸ்யம் முதல் அம்சம் காண்க).

1825-03 வைகரியாக வெளியான ஹ்ரீம் முதலிய எழுத்துக்களில் உள்ள ம் எனும் அரைமாத்திரை அளவுள்ள பிந்து நீண்ட கார்வை (ஒலிநீட்சி) பெற்றது. அந்தக் கார்வையினுள் 'ம்' என்ற அந்த பிந்துவின் ஒலி 8 நிலைகளை அடைகிறது. அர்த்தசந்திரம், ரோதினீ, நாதம், நாதாந்தம், சக்தி, வியாபிகா, ஸமநா, உந்மநீ, என. அவைகளுள் 3-வது நாதம். அந்த வடிவில் இருப்பவள் தேவி. பிந்துவிலிருந்து விரிந்த இந்த எட்டு நிலைகளுக்கும்

வடிவமும் நிறமும் உண்டு. இதன் விளக்கத்தை பாஸ்கரராயரது வரிவஸ்யாரஹஸ்யத்தில் காணலாம். பிந்து இந்த 8 நிலைகளைத் தாண்டியதும் மஹா பிந்துவாகிறது. பிந்துவில், அது சார்ந்துள்ள ஹ்ரீ முதலிய எழுத்துக்களின் சாயை உபாதியாக நிற்கும். மஹா பிந்துவில் மற்ற எழுத்துக்களின் சாயை தோன்ருது. நிர்க்குணப் பிரும்மத்தின் வடிவம் இது. இவைகளைப் பற்றிய குறிப்பு :—

| | | |
|---|---|---|
|  | 1. பிந்து | நெற்றியின் மத்தியில் தீபத்தைப்போன்ற ஒளியுடையதாய் வட்டமாயிருக்கும். (கீழ்க்கோடு சார்பைக் குறிக்கும்.) |
|  | 2. அர்த்தசந்திரன் | பிந்துவின்மேல் ஒளியிலும், வடிவிலும் பிறைபோலிருக்கும். |
|  | 3. ரோதிநீ | நிலவைப்போன்ற ஒளியும், முக்கோண வடிவும் கொண்டது. |
|  | 4. நாதம் | பத்மராகம் எனும் சிகப்புநிற ரத்தினத்தின் ஒளியுடன் பீஜகோசங்களுக்கு இடையே உள்ள தையல்போல்வடிவம்கொண்டது |
|  | 5. நாதாந்தம் | மின்னலைப்போல் ஒளியுடன் இடது பக்கத்தில் பிந்துவோடு ஏர்க்காலைப் போன்ற வடிவம் உள்ளது. |
|  | 6. சக்தி | குறுக்கே இரு பிந்துக்கள். இடது பிந்துவின்மேல் செங்குத்துக்கோடு. சக்தியின் வடிவமிது. |
|  | 7. வியாபிகா | கீழே பிந்துவைக் கொண்ட முக்கோண வடிவம் கொண்டது. |
|  | 8. ஸமநா | மேலும் கீழும் பிந்துவுடன் கூடிய செங்குத்துக் கோட்டின் வடிவம்கொண்டது. |
|  | 9. உன்மநீ | கீழ் பிந்துவுள்ள செங்குத்துக் கோட்டின் வடிவம் கொண்டது. |
|  | 10. மஹாபிந்து | சார்பற்ற தனி பிந்து. *(299)* |

**1826-01 நாம-ரூப-விவர்ஜிதா. பெயரும் உருவமுமற்றவள்.**

1826-02 சர-அசரமான உலகிற்கு ஐந்து வடிவங்கள். அஸ்தி, பாதி, பிரியம், நாம, ரூபம் என அவை ஐந்து. முதல் மூன்று வடிவங்கள் 'சித்'துடன் உலகுக்கேற்பட்ட முடிப்பைக் குறிக்கும். பின் இரண்டு வடிவங்கள் சித்தல்லாததுடன் அதற்கேற்பட்ட முடிப்பைக் குறிக்கும். சித் கிரந்தி, அசித் கிரந்தி, என இந்த இரண்டு பகுதியையும் குறிப்பிடுவர்.

1826-03 'நான்' என்பதனை விளக்கினுல் இந்த ஐந்தும் அதனுள்ளிருப்பது விளங்கும்.

(அ) "நான்" இருப்பவன். இல்லாததொன்றை 'நான்' எனக் கொள்ளமுடியாது. அதனுல் 'நான்' 'அஸ்தி'-இருக்கிறது. பிரும்மத்தின் ஸத் என்ற அம்சம் 'நான்'இல் பிரதிபலிப்பதால் 'நான்'இல் 'அஸ்தி' தோன்றுகிறது.

(ஆ) 'நான்' புலப்படுபவன். அறிவிற்குப் புலப்படுவதொன்றையே குறிப்பிட முடியும். அதனுல் 'நான்' பாதி (भाति) புலப்படுகிறது. பிரும்மத்தின் சித் என்ற அம்சம் 'நான்'இல் பிரதிபலிப்பதால் 'நான்'இல் 'பாதி' உணரப்படுகிறது.

(இ) நான் பிரியமானவன். 'நான்' என்ற உணர்விற்கு ஆதாரம் 'நான்' இடம் வைத்துள்ள எதிர்பார்வையற்ற நிகரற்ற பிரியம். மற்ற பொருள்களிடத்திலோ 'நான்'ஐத் தாங்கி நிற்கும் உடலிடமோ வைத்துள்ள பிரியம் எதிர்பார்வையுள்ளது. அந்த எதிர்பார்வை நிறைவேருவிடில் பிரியம் மறைந்துவிடும். ஒருசமயத்தில் ஒன்று பிரியமாயிருக்கும். மற்ருென்று மற்ருெரு சமயத்தில் பிரியமாயிருக்கும். ஒன்று பிரியமாயிருக்கும். மற்ருென்று அதை விடப் பிரியமாயிருக்கும். (பிரியதரம்). மற்ருென்று எல்லாவற்றையும் விட பிரியமாயிருக்கும். (பிரியதமம்). பிரியதமமானதும் பிரியத்திற்கு இடமில்லாததாக ஆகலாம். அந்தப் பிரியமான பொருளை இழக்க நேரிடலாம். அதனுல் அதுவே துக்கத்திற்குக் காரணமாகலாம். இவையனைத்தும் பிரியமாயிருப்பது 'நான்' என்ற பிரியமான பொருளுக்குப் பிரியமாக அமைவதால் தான். (மனைவிக்குப் பிரியமானது தனக்குப் பிரியம் என்பது போல்) மற்றப் பிரியமான பொருளில் உள்ள பிரியத்தன்மை நிலையற்றது. 'நான்'இல் உள்ள பிரியத்தன்மை நிலைத்தது, ஏற்றத் தாழ்வற்றது, (அதனுல் பிரியதரம், பிரியதமம் என்ற அடைமொழி தேவையற்றுப் பிரியம் என்றே குறிக்கப்படுகிறது). எக்காலத்திலும் இழக்க நேராதது. பிரும்மத்தின் ஆனந்தம் என்ற அம்சம் 'நான்'இல் பிரதிபலிப்பதால் ஆனந்தமயமான 'நான்' பிரியமாக இருக்கிறது. ஆக இந்த மாறுபாடற்ற மூன்றும் பிரும்மத்துடன் ஏற்பட்ட முடிப்பால் (சித்-க்ரந்தி) தோன்றுபவை.

(ஈ) 'நான்' பெயருள்ளவன். தனித்தும் உருவத்தாலும் இனத்தாலும் மற்றவற்ருலும் பிரித்தறியும்படி செயற்கையாக வைக்கப்பட்டுள்ளது நாம – பெயர். இது மாறுபாடடையக்கூடிய

'அசித்' எனும் ஸ்தூல ஜகத்தின் தொடர்பால் ஏற்பட்டது. இது மாறுபாடும் அழிவும் உள்ளது.

(உ) 'நான்' உருவமுள்ளவன். 'நான்'ஐப் பிரித்தறிய அசித் ஏற்படுத்திய ரூபம் எனும் ஸ்தூலத் தோற்றம். இதுவும் நிலையற்றது. மாறுபாடும் அழிவும் கொண்டது.

1826-04 தேவி ஸத்-சித்-ஆனந்த வடிவமானவள். நித்யமானவள். மாறுபாடற்றவள். ஏற்றத்தாழ்வற்றவள். நிலையின்மையும் மாறுபாடும் அழிவும் ஏற்றத்தாழ்வும் கொண்ட அஸத்-அசித்-அநாநந்த வடிவமான நாமரூபங்கள் அவளிடம் இல்லை. நாமத்தையும், ரூபத்தையும் கொண்டதால் உலகம் வெவ்வேருகத் தோற்றமளிக்கிறது. அந்த நாம ரூபங்களாக இல்லாமல், இந்தத் தோற்றத்திற்கு ஆதாரமாக அஸ்தி, பாதி, ப்ரியம் என்ற அழியாத அம்சமாக பிரும்ம வடிவில் உள்ளவள் தேவி. (300)

1827-01 ஹ்ரீங்காரீ. ஹ்ரீங்கார வடிவினள்.

1827-02 ஹ்ரீங்காரம் - ஹ்ரீம் எனும் அக்ஷரம். அதனை வடிவமாகக் கொண்டவள். ஹ்ரீம் என்றே தேவிக்கு ஒரு நாமம் உண்டு. (லலிதாத்ரிசதீ நா. 99) ஹ்ரீம் - மாயை, சக்தி. அந்த சக்தி ஸ்ருஷ்டி முதலிய ஐந்தொழில்களால் வெளிப்படுகின்றது. (இந்தத் தொழில்களால் மாயையை ஊகித்து அறிகிரேம்.) அந்த ஐந்தொழில்களைப் புரிபவள் (ஹ்ரீம்கரோதி) ஹ்ரீங்காரீ. ஹ்ரீம் - என்ற அக்ஷரத்தைத் தன் மந்திரவடிவமாகக் கொண்ட புவனேசுவரி எனும் தேவி. (301)

1828-01 ஹ்ரீமதீ. நாணமுள்ளவள்.

1828-02 ஹ்ரீ :-லஜ்ஜா-நாணம்.* கெட்ட செயலைப் புரிவதிலிருந்தும் தடுப்பது லஜ்ஜை. நற்குலத்தில் உதித்தவர், நற்கல்வி பெற்றவர், நல்லவர்களோடு தொடர்பு கொண்டவர், இழிவான செயலைச் செய்ய நாணுவர். இயற்கையாக அமையும் குணம் இது. (குல-ஜந-ப்ரபவஸ்ய லஜ்ஜா-தேவீமாகாத்மியம். 4-5) இந்த லஜ்ஜை உள்ளவள் தேவி. லஜ்ஜையைத் தன் வடிவமாகக் கொண்டவள். (302)

* 'நாணுடைமை' என்று திருக்குறளில் ஓர் அதிகாரம் உள்ளது. நாணுடைமை என்பது சால்பு பண்பு முதலிய குணங்களால் உயர்ந்தோர், தமக்கு ஒவ்வாத கருமங்களில் நாணுதலுடையராம் தன்மை என்று பரிமேலழகர் விளக்குகிருர். 'தீவினை அச்சம்' என்றும் ஓர் அதிகாரம் உண்டு. தீவினை அச்சம் வேறு, நாணுடைமை வேறு, இது பெண்களிடம் காணப்படும் மடமை, அச்சம், நாணம், பயிர்ப்பு என்ற நான்கில் ஒன்ருன நாணமுமன்று.

**1829-01 ஹ்ருத்யா-மனத்திற்கு உவப்பானவள்.**

1829-02 ஒரு பொருளைக் கண்டு அதை விரும்பி அதனைப் பெற எண்ணம் கொள்கிறோம். அந்தப் பொருளை நம் மனம் (ஹ்ருத்-இதயம்-மனம்) ஏற்றுக்கொண்டு விட்டது. அதற்குக் காரணம், அது மனத்திற்கு இதமாக அமைந்துள்ளதென்பதே. (ஹ்ருதே-ஹிதம் ஹ்ருத்யம்). மனத்திற்கு இதமாக அமைந்த அழகும் குணங்களும் மற்றதும் உள்ளவள் தேவி. ஹ்ருதி பவா-ஹ்ருத்யா-இதயத்தில் தோன்றுபவள். புலன்களை அடக்கி மௌனத்துடன் வெளி நாட்டமில்லாது இருப்பவர்களின் இதயத்தில் தோன்றுபவள். (303)

**1830-01 ஹேய-உபாதேய-வர்ஜிதா. தள்ளத்தக்கதும் கொள்ளத் தக்கதுமில்லாதவள்.**

1830-02 'இதைச் செய்யாதே' என்ற வேதக் கட்டளையின்படி மனிதன் தள்ள வேண்டியவை சில (ஹேயம்). 'இதைச் செய்' என்ற கட்டளையின்படி ஏற்க வேண்டியவை சில (உப-ஆதேயம்). வினைப்பயனைத் தேகபந்தம் கொண்டவர்களை வேதத்தின் கட்டளைகள் கட்டுப்படுத்தும். வினைக்கப்பாற்பட்ட தேவியை அவை கட்டுப்படுத்தா. அதனால் அவள் தவிர்க்கவேண்டியது எதுவுமில்லை, ஏற்றுக்கொள்ள வேண்டியதும் எதுவுமில்லை.

1830-03 ஹேயம்-விருப்பமின்மையால் தள்ளப்பட வேண்டியவை. உபாதேயம் - விருப்பமேற்பட்டதால் ஏற்கவேண்டியவை. இவைகள் இல்லாதவள். தேவி விருப்பும் வெறுப்புமற்றவள். பூர்ணா-நிரம்பியவள். அதனால் அடைய வேண்டியதில்லாததால் அவளுக்கு விருப்பம் ஏற்படுவதில்லை. அதனால் ஏற்கவேண்டியதொன்றுமில்லாதவள். எங்கும் நிறைந்தவளானதால் வெறுப்பு ஏற்படுத்தும் பொருளுமில்லை. வெறுப்பில்லாததால் தவிர்க்க வேண்டியதொன்றும் இல்லாதவள். (304)

71 राजराजार्चिता राज्ञी रम्या राजीवलोचना । 308
रञ्जनी रमणी रस्या रणत्किङ्किणिमेखला ॥ 312

ராஜராஜார்ச்சிதா ராஜ்ஞீ ரம்யா ராஜீவலோசனா ।
ரஞ்ஜநீ ரமணீ ரஸ்யா ரணத்கிங்கிணிமேகலா ॥

1831-01 ராஜ-ராஜ-அர்ச்சிதா. ராஜாதிராஜராலும் வழிபடப் பெற்றவள்.

1831-02 ராஜராஜன் – அரசர்களுக்கெல்லாம் அரசன். அரச வம்சத்தை உலகில் தோற்றுவித்த மனு. அவரால் பூஜிக்கப் பட்டவள். (பா. 1639-02) ராஜராஜன் - குபேரன். பன்னிரு உபாஸகர்களில் ஒருவர். (பா. 1639-03) அவரால் பூஜிக்கப் பட்டவள். ஸ்ரீநகரத்தில் 14-15 மதில் சுவர்களுக்கிடையே உள்ள முக்தாப்பிராகாரத்தில் வடக்கு திக்கில் இருந்து குபேரன் தேவியை வழிபடுகிறார். (0911-06) ராஜா பரமேசுவரன். அவரிடம் விளங்கும் ராஜா சந்திரன் – ராஜராஜன். சந்திரனால் வழிபடப் பெற்றவள். (305)

1832-01 ராஜ்ஞீ. அரசி.

1832-02 உலகை ஆள்பவள், உலகை ஆளும் காமேசுவரனது பட்டமஹிஷி. மஹாராஜ்ஞியுமாவாள் தேவி (பா. 0602-02). (306)

1833-01 ரம்யா. அழகானவள்.

1833-02 மனத்தைக் களிக்கச் செய்யும் அழகு படைத்தவள் தேவி. மற்ற மாதரிடத்தில் உள்ள அழகு மயக்கும், கொல்லும். ஆனால் தேவியின் அழகு, மனத்தைக் களிக்கச்செய்து அவள்பால் ஈர்த்துக்கொள்ளும் சக்தி படைத்தது. (307)

1834-01 ராஜீவ-லோசநா. தாமரை (மீன்-மான்) போன்ற கண்ணுள்ளவள்.

1834-02 ராஜீவம் எனும் சொல் தாமரை, மீன், மான், அரசனை அண்டிப்பிழைப்பவன் என்ற நான்கு பொருள்கள் கொண்டது. தாமரை இதழ் போன்று அழகியவை, மீனின் கண்கள் போன்று பார்வையாலேயே ஊட்டமளிப்பவை, மானுடைய கண்கள் போன்று எப்போதும் ஆடிக்கொண்டிருப்பதாலும் மருட்சி கொண்டிருப்ப தாலும் அழகுள்ளவை தேவியின் கண்கள். அரசரை அண்டிப் பிழைப்பவர்களைக் கருணையுடன் பார்த்து அருள்புரிபவள் தேவி. நேர்மையுடன் நடந்து மக்கள் நன்கு வாழ உதவுகிறார்கள் என்று அருள் நோக்குடன் அவர்களைக் காப்பவள். (308)

1835-01 ரஞ்ஜநீ. திருப்திப்படுத்துபவள்.

1835-02 சொல்லோ பொருளோ மனத்தினுள் உவப்பதாகப் பதிந்து நிறைவு தருவது ரஞ்ஜனம். பாட்டைக் கேட்பதால் உள்ளம் கனிந்து தன்மயமாகி அதில் ஈடுபட்டு நிறைவு பெறும்

போது பாட்டு ரஞ்ஜனமாகும். பக்தனின் இதயத்தினுள் புகுந்து, அதனைத் தன் வடிவமாக்கி உள்ளத்தில் நிறைவைத் தருகிறாள். அதனால் ரஞ்ஜநீ.

1835-03 ரஞ்ஜநீ – செந்நிறமடையச் செய்பவள். செஞ்சாய மேற்றுவது ரஞ்ஜனம். ஸ்படிகம் போன்று நிறமற்றவர் காமேச் வரனாகிய சிவன். அவரது மடியில் அமர்ந்து தனது செம்மையை அவர்மீது படரச்செய்து அவரை நமக்குப் புலப்படும்படி தேவி செய்கிறாள். "சிவ: ஸ்வச்சச்சாயா கடித கபடப்ரச்சதபட:| த்வதீயா நாம் பாஸாம் ப்ரதிபலநராகாருணதயா சரீரீ ச்ருங்காரோ ரஸ இவ த்ருசாம் தோக்தி குதுகம்." (ஸௌந்தர்யலஹரீ 92) என சங்கரர் தேவி புரியும் ரஞ்ஜனத்தை அழகாக விளக்குகிறார். பஞ்சப்பிரும்மா ஸனத்தில் சிவனாகிய காமேசுவரன் மடியில் வீற்றிருக்கிறாள் தேவி. (சிவகாமேச்வராங்கஸ்தா-நா. 52) உள்ளேயுள்ள பொருளைத் தெள் ளெனக் காட்டும் நிறமற்ற மேலாடைபோலுள்ள காமேசுவரனால் தேவிக்கு மறைப்பு ஏதும் ஏற்படவில்லை. ஆனால் தேவியின் உடலி லிருந்து கிளம்பும் செங்கதிர்களின் ஒளி ஸ்படிக நிறமுள்ள காமேசு வரனின் மேல் படும்போது இதுகாறும் ஸ்படிகம் போன்று நிற மற்றுப் புலப்படாதிருந்த அவரது மேனி செம்மேனியாக, சிருங்காரரஸமே வடிவெடுத்தாற்போல், சிவன் கண்களுக்கு வியப்பூட்டுகிறார் என்று அந்த சுலோகத்தின் கருத்து. (சிருங்கார ரஸம் செந்நிறமுள்ளதென வர்ணிப்பது கவிகளின் மரபு.) (309)

**1836–01 ரமணீ. விளையாடுபவள்.**

1836–02 அடியார்கள் தனது பெருமையைக் கண்டு ஒதுங்கி நில்லாமல் இருப்பதற்காகத் தன்னுடைய எளிமையைக் காட்டி அவர்களுடன் சமமாக விளையாடுபவள். (310)

**1837–01 ரஸ்யா. உணர்ந்து அனுபவிக்கத்தக்கவள்.**

1837-02 நேரிடையாக மனம் பெற்றதொரு அனுபவத்தைத் தொடர்ந்து ஏற்படும் உணர்வு ரஸமாகும். முதலில் மனம் பெறும் அனுபவம் மனக்கிளர்ச்சி அல்லது வேதனை தருவதாக இருக்கலாம். அதனை அனுபவித்தபின் அதனால் ஏற்படும் உணர்வு இனிமையான தாக இருந்தால் அது ரஸம். கசப்பாயிருந்தால் அது விரஸம். அதனால் இழிவான காமம் சிருங்கார ரஸமாவதில்லை, பின் அது விரஸமாவதால். ஹாஸ்யமும், பயமும் ரஸமாவது அதன் உணர்வு மனத்திற்கு இனிப்பதால்—ரஸமாயிருப்பதால். இத் தகைய இனிய உணர்வாக அமைபவள் தேவி. (ரஸயிதும்

யோக்யா). பரம்பொருளை ரஸமாகவே வேதம் கூறும். (ரஸோ வை ஸ:) அப்படி ரஸமாக அனுபவிக்கத்தக்கவள். ரஸ:—ஸாரம் சாறு—சுவை. பழத்தின் சாற்றைப் பழத்திலிருந்து பிரித்துச் சுவைப்பதுபோல், ஸ்தூலத்திலிருந்து ஸாரமாக ஸூக்ஷ்மத்தைப் பிரித்துப் பின் அனுபவிக்கத் தக்கவள். (311)

1838-01 ரணத்-கிங்கிணி-மேகலா. சதங்கைகள் ஒலிக்கும் ஒட்டியாணம் அணிந்தவள்.

1838-02 ரமணியான அவளது விளையாட்டில் இடுப்பிலுள்ள ஒட்டியாணத்தின் சதங்கைகள் இனிமையாக ஒலிக்கின்றன. அந்த இனிய ஒலிகளும் நம் மனத்தை அவள்பால் ஈர்த்து அனுபவிக்கச் செய்து உள்ளுணர்வைத் தருகின்றன (ரஸ்யா). ரமணியாகவும், ரஸ்யையாகவும் இருக்கும் தேவியின் வெளித் தோற்றம் ரணத் கிங்கிணி மேகலா. (312)

72 रमा राकेन्दुवदना रतिरूपा रतिप्रिया। 316
रक्षाकरी राक्षसघ्नी रामा रमणलंपटा॥ 320

ரமா ராகேந்துவதநா ரதிரூபா ரதிப்ரியா ।
ரக்ஷாகரீ ராக்ஷஸக்க்நீ ராமா ரமணலம்படா ॥

1839-01 ரமா. லக்ஷ்மி.

1839-02 ரமா — லக்ஷ்மிதேவி-செல்வம். மனத்தைக் களிப்புறச் செய்வதால் (ரமயதி) ரமா. லக்ஷ்மீதேவியின் அருள் மனக் களிப்பைத் தருகிறது. அவள் அருளால் பெற்ற செல்வமும் மனக் களிப்பைத் தருகிறது. மனக்களிப்பைத் தராத செல்வம் அலக்ஷ்மீ என்பர். (தரித்திரத்தன்மை மட்டும் அலக்ஷ்மி அல்ல) "யா ஸ்ரீ: ஸ்வயம் ஸுக்ருதிநாம் பவநேஷு, அலக்ஷ்மீ: ப்பாபாத்மநாம்". நற்பணிகளை செய்பவரது வீடுகளில் ஸ்ரீயாக லக்ஷ்மியாகத் தேவி தங்குவாள். (ஸ்ரீ:—பிறர்க்கு இடமளித்து உதவுமளவிற்குச் செல்வப் பெருக்கு. லக்ஷ்மீ:—தனவந்தன், வள்ளல் என அடையாளத்துடன் குறிப்பிடுமளவிற்குச் செல்வப் பெருக்கு) பாபச் செயல் புரிபவரது வீடுகளில் அலக்ஷ்மீயாக-இழிவாகக் குறிப்பிடும் அளவில் உள்ள செல்வமாக அமைவாள். (தேவி மாகாத்ம்யம். 4-5) (313)

1840-01 ராகா-இந்து-வதநா. பௌர்ணமி சந்திரன் போன்ற முகமுள்ளவள்.

1840-02 ராகா-பௌர்ணமி அன்று தோன்றும் பூர்ண சந்திரனுக்கொப்பான முகமுள்ளவள். முழு உருவம், குறைவற்ற

உருவம், அழுக்கற்ற உருவம், மனத்திற்குக் குளிர்ச்சிதரும் உருவம், பார்க்கப் பார்க்க தெவிட்டாத உருவம். இது பூர்ண சந்திரனது சிறப்பு. அத்தனை சிறப்புகொண்ட முகம் தேவியுடையது. (314)

1841-01 ரதி-ரூபா. ரதியின் வடிவில் உள்ளவள்.

1841-02 மன்மதனது மனைவி ரதி. அவளது வடிவத்தையே தன் வடிவமாகக் கொண்டவள் தேவி. ரதி:-என்பது ஒரு பொருளில் ஏற்படும் அளவுகடந்த ஆசையால் ஏற்படும் நிலைத்த ஈடுபாடு, அதனைப் பெற்றால் அன்றி நிம்மதி இல்லை என்றவாறு. மன்மதனது துணைவியான ரதிதேவி அவனுக்கு முன் நின்று காமிகளின் மனத்தில் ஆசையையும், ஆசைப்படும் பொருளில் ஈடுபாட்டையும் ஏற்படுத்தி உதவுகிறாள். அப்படி ரதிமூலம் வெளிப்படுவது தேவியின் சக்தியின் ஓரம்சம். அதனால் தேவி ரதி வடிவில் இயங்குகிறாள்.

"ரமா" — "ராகேந்துவதநா" — "ரதிரூபா" என்ற மூன்று நாமங்களும் ஸங்கேத மொழியில் ஈம் என்ற காமகலையைக் குறிக்கின்றன. ரமா—லக்ஷ்மியின் எழுத்து 'ஈ'. இந்து-சந்திரன் வட்டமானவன். அவன் குறிப்பிடுவது 'ం'(ம்) எனும் பிந்து. ரதி—காமனின் கலை—சக்தி. ரதிரூபா—காமகலையின் வடிவம் 'ஈ'யும் 'ం'(ம்) ம். (315)

1842-01 ரதி-ப்ரியா. ரதியிடம் பிரியம் உள்ளவள்.

1842-02 ரதி—மன்மதனின் மனைவி. அவளிடத்தில் பிரியமாய் இருப்பவள் தேவி. ரதி கணவனை இழந்து வாடும்போது அவளிடமுள்ள மிகுந்த பிரியத்தால் மன்மதனை மீண்டும் உயிர்த்தெழச் செய்து ரதியுடன் சேர்த்தவள் தேவி. (பா. 1021) ரதி—மனத்தின் நிலைத்த ஈடுபாடு. நிலைத்த ஈடுபாட்டில் பிரியமுள்ளவள். ரதி—காமவிளையாட்டு. அதில் பிரியமுள்ளவள். (316)

1843-01 ரக்ஷா-கரீ. காத்தல் புரிபவள்.

1843-02 ரக்ஷா-காத்தல். பிரும்மா முதல் சிறு புழு வரை உள்ள உலகத்தினரைத் தனித்தும் சேர்த்தும் காப்பவள் தேவி. ரக்ஷா-விபூதி-திருநீறு. திருநீறாகத் தரிக்கப்பெற்றதனால் காப்பவள். திருநீறு-சாம்பலாக்கியது. உலகைச் சாம்பலாக்குபவள். ஸம்ஹாரம் புரிபவள். (317)

1844-01 ராக்ஷஸ-க்னீ. இராக்ஷதர்களை அழிப்பவள்.

1844-02 பிரும்மாவின் கொடும் பசியே வடிவெடுத்து ராக்ஷஸர்களாயிற்று. இவர்கள் பிரும்மனின் உடலிலிருந்து வெளியானதும், தம் பசியைத் தணிக்க அனைத்தையும் உண்ண ஆரம்பித்தனர்.

இவர்களால் பீடிக்கப்பெற்றவர்கள் பிரும்மாவை அணுகி 'ரக்ஷ' 'ரக்ஷ' காப்பாற்று காப்பாற்று எனக் கதறினர்கள். இந்தக் கதறலே உண்டாக்கின இவர்கள் ராக்ஷஸர்-ரக்ஷஸ்—ஆனர்கள். எவர்களிட மிருந்து நம்மைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டுமோ அவர்கள் ராக்ஷஸர்கள். (ரக்ஷதி யஸ்மாத்) அவர்களை அழிப்பவள் தேவி.

1844-03 பிறர் அங்கம் சிதறியோ, நோய்வாய்பட்டோ, துணையின்றியோ துன்புறுவதைக்கண்டு தயை ஏற்பட்டு உதவ முன்வராத கடினமான உள்ளம் படைத்தவர் ராக்ஷஸர். "த்ருஷ்ட்வா து விகலான் அங்கான் அநாதான் ரோகினஸ் ததா। தயா ந ஜாயதே யஸ்ய ஸ ரக்ஷ: இதி மே மதி:". (ஆக்நேயபுராணம்) அவர்களை அழிப்பவள் தேவி. (318)

**1845-01 ராமா. பெண்கள் வடிவில் உள்ளவள்.**

1845-02 ஸ்திரீலிங்கச் சொற்களால் பெண்பாலாகக் குறிப் பிடப்படுபவை அனைத்தும் பெண்கள். அவர்கள் தேவியே. பெண் வடிவில் உள்ள அனைவரும் தேவியே. ஒரு வீட்டில் பெண் மகிழ்ச்சி யுடன் வாழ்ந்தால் தேவி மகிழ்கிருள். பெண் பெருமையுடன் போற்றப்பட்டால் தன்னைப் போற்றியதாகத் தேவி உணர்கிருள். பெண் கோபித்துக்கொள்ளும் சூழ்நிலையில் தேவி கோபிக்கிருள். பெண்கள் பெருமைப்படக் குலம் வளரும். பெண்கள் இகழப்பட்டால் குலம் அழியும். "ஸ்த்ரிய: துஷ்டா: ஸ்த்ரியோ ருஷ்டாஸ் துஷ்டா ருஷ்டாச் ச தேவதா:। வர்த்தயந்தி குலம் துஷ்டா: நாசயந்தி அபமாநிதா:" (பிருஹத்பராசரஸ்மிருதி) பெண்களின் சுபாவமும், அதனைத் தூண்டும் சூழ்நிலையும் மகிழ்ச்சி தருவதாக இருந்தால் தேவி அங்கு நித்யவாஸம் புரிவாள். (319)

**1846-01 ரமண-லம்படா. பதியுடன் குலவுவதை மிகவும் விரும்புபவள்.**

1846-02 தன் பதியான காமேசுவரனுடன் ஸஹஸ்ரார கமலத் தில் கூடிக் குலாவுவதில் மிகுந்த விருப்பமுள்ளவள் தேவி. ஒவ் வொரு பெண்ணிடத்திலும் தன் பதியுடன் கூடிக் குலவுவதில் உள்ள நாட்டமாக விளங்குபவள் தேவி. (பா. 1209, 1222) (320)

73 **काम्या कामकलारूपा कदम्बकुसुमप्रिया ।** 323
**कल्याणी जगतीकन्दा करुणारससागरा ॥** 326

**காம்யா காமகலாரூபா கதம்பகுஸுமப்ரியா ।**
**கல்யாணீ ஜகதீகந்தா கருணாரஸஸாகரா ॥**

1847-01 காம்யா. விரும்பப்படுபவள்

1847-02 அடைவதற்குரிய பெரும் பொருளாக நினைத்துத் தேவியை ஞானிகளும் அடைய விரும்புவர். தன்னைக் காக்கும் தெய்வமென அவள் அருளைப்பெற மற்றவர்களும் பெரிதும் விரும்புவர். இப்படி அனைவராலும் விரும்பப் பெறுபவள் தேவி.

1847-03 கிருஷ்ணபக்ஷத் துவாதசியின் இரவிற்குக் 'காம்யா' எனப் பெயர். அந்த வடிவில் உள்ளவள். (321)

1848-01 காம - கலா - ரூபா. காமகலை வடிவினள்.

1848-02 காமகலா என்பது ஈ என்ற அக்ஷரமும் பிந்துவும் சேர்ந்தது. (பாரா-1104-05, 1841-02) காமேச்வரன், காமேச்வரி, என்ற இரு காமர்களின் கலைகளும் ஒருங்கே சேர்ந்த எழுத்து காமகலா. பிந்து சிவவடிவம், 'ஈ' சக்தி அக்ஷரம். (பாரா 1104-04) சிவசக்தி ஐக்கியம் இந்த 'ஈம்'ல் உள்ளது. காமன்-மன்மதன். அவனது எழுத்து 'ஈ' (பா. 1806-03) கலா-பிந்து. இரண்டும் சேர்ந்து காமகலா. காமா என்று தேவிக்குப் பெயர். 'காமாக்யா' (காமா என்ற பெயருள்ளவள்) எனத் தேவி அஸ்ஸாமில் காமாக்கியா க்ஷேத்திரத்தில் விளங்குகிறாள். அவளது கலா - விலாஸம் - கேளிக்கை. அதன் வடிவில் அமைந்தது காமகலா எனும் அக்ஷரம். காமகலாவினால் குறிப்பிடப்பெறுபவள் காமகலாரூபா.

1848-03 ஹ்ரீம் எனும் எழுத்து சிவ அம்சமும் சக்தி அம்சமும் பெற்றது. அதனால் அது பஞ்சதசாக்ஷரியின் ஒவ்வொரு கூடத்திலும் முடிப்பெழுத்தாக உள்ளது. அதிலுள்ள ஹ்ர் என்ற இரு மெய்யெழுத்துக்களை நீக்கி உயிர் ஆக உள்ளது காமகலா. அதன் வடிவில் உள்ளவள். (பா. 1104-03) (322)

1849-01 கதம்ப-குஸுமப்ரியா. கதம்பப்பூவில் பிரியம் உள்ளவள்.

1849-02 கடம்பு மரம் நிறைந்த கதம்பவனம் தேவிக்கு மிகப் பிரியமானது. கதம்பவனம் ஸ்ரீநகரத்தைச் சூழ்ந்து உள்ளது. (பா. 0909-3, 0911-02) கதம்ப மரம் நிறைந்த வனமாயிருந்தது தென் மதுரை. அங்கு உறையும் தேவி மீனாக்ஷி கதம்பவநவாஸினீ. கடம்பின் பூவில் தேவிக்கு உள்ள அளவு கடந்த பிரியமே அவளைக் கதம்பவனத்தின் நடுவே இருக்கச் செய்தது. அப்படிக் கடம்புப் பூவில் பிரியமுள்ளவள் தேவி. (323)

1850-01 கல்யாணீ. மங்கள வடிவானவள்.

1850-02 மங்களத்தன்மையே உருவாகி நிற்பவள் தேவி. (0901-0902-02) மங்களமான பேச்சு 'கல்யா'. மங்களமான பேச்சையே பேசுபவள் (கல்யாம் அணதி) கல்யாணீ. அப்படிப் பேசும் பெண் வடிவில் உள்ளவள். தேவியை உள்ளிருத்தி வைத்திருப்பதால் குளிர்ந்து மங்களமாகி நிற்கும் உள்ளத்திலிருந்து வெளிப்படும் சொல் மங்களமாக இருக்கும். மங்களமாகப் பேசுபவளின் வடிவில் உள்ளவள் தேவியே. (324)

1851-01 ஜகதீ-கந்தா. உலகிற்கு வேர் போன்றவள்.

1851-02 உலகமாகிய தாவரத்திற்கு வேர் போன்றவள் தேவி. அதற்கு ஊட்டம் தருகிருள். அதைத் தாங்கி நிற்கிருள். நிலே பெயர்ந்து விழாமல் பிடிப்பாகி நிற்கிருள். இப்படிப் பலவகையிலும் உதவிஞலும் தற்பெருமையற்றவளானதால் வேர்போல் தன்னே வெளிக் காட்டாமல் மறைந்திருக்கிருள். தாவரத்தின் பூர்ண வளர்ச்சியை அதன் வேர் காட்டும். உலகமாகிய தாவரத்தின் மிகப் பலத்த வேர், பூர்ணத்துவம் பெற்ற வேர் அவள். அதஞல் உலகம் இன்னமும் பலமடங்கு பெருகிஞலும் தாங்கக்கூடிய சக்தி பெற்றவள் தேவி. உலகில் அவள் நீக்கமற நிறைந்து நிற்பவளானதாலும் ஜகதீகந்தா. (325)

1852-01 கருணு-ரஸ-ஸாகரா. கருணேயையே ஜலமாகக் கொண்ட கடல்களேக் கொண்டவள்.

1852-02 தேவியிடத்தில் பல கடல்கள் தோன்றுகின்றன. அவையனேத்திலும் இனிக்கும் அவளது கருணேயாகிய நீர் மட்டும் நிரம்பியுள்ளது. (326)

74 कलावती कलालापा कान्ता कादम्बरीप्रिया । 330
वरदा वामनयना वारुणीमदविह्वला ॥ 333

கலாவதீ க்லாலாபா காந்தா காதம்பரீப்ரியா I
வரதா வாமநயநா வாருணீ மதவிஹ்வலா II

1853-01 கலாவதீ. கலேகளே உடையவள்.

1853-02 64 கலேகளும் (பாரா 1638-02) அவளிடத்தில் அடங்கியுள்ளன. அதஞல் கலாவதீ. (327)

1854-01 கல-ஆலாபா. கொஞ்சும் மொழியினள்.

1854-02 கலம்-புரிந்தும் புரியாமலும் இனியதாயும் உள்ள கிள்ளேமொழி, சிறு குழந்தை பேசும் மொழி, மழலே. அதன்

தாய்க்குப் புரியக்கூடியது. மற்றவர்களால் அறியமுடியாதது. தாய்க்குக் களிப்பூட்டுவது மழலைமொழி. மற்றவர்கள் அதனை அவளளவில் சுவைக்க முடியாது அப்படி அன்புள்ளம் படைத்த அடியார்கள் மட்டும் அறிந்து சுவைக்கக்கூடிய இனிய மொழி யுள்ளவள் தேவி.

1854-03 கொஞ்சும் மொழி பேசும் குழந்தையின் வாயிலிருந்து பேச்சுடன் சொள்ளுநீர் கொட்டும். அதை வாணி என்பர். அது குழந்தையின் பேதை உள்ளத்தைக் காட்டும். தேவியின் கொஞ்சு மொழியுடன் வெளியாகும் சொள்ளுநீர் பிரும்மமாகிய அவளது உண்மை நிலையைக் காட்டும். அவள் பேச்சைக் கேட்கும்போதே பிரும்மத்தை நேரிடை அனுபவமாக அவ்வளவு எளிதாக உணரலாம். (328)

**1855-01 காந்தா. மிக அழகானவள்.**

1855-02 காந்தி மிக்கவளானதால் காந்தியால் அழகுறத் தோன்றுகிறாள் தேவீ. கம் - பரம்பொருள்; அதனையே தன் முடிவாகக் கொண்டவள். குருவாகவும் ஸகுண வடிவமுள்ள வளாகவும் தோன்றி நம்மை வலிய ஆட்படுத்திக் கடைசியில் தன் கடை நிலையான பிரும்ம வடிவைக் காட்டுகிறாள் தேவி. கிருஷ்ண பக்ஷத்து ஏகாதசியின் இரவு காந்தா. அவ்வடிவில் உள்ளவள் தேவி. கல்பநாரஹிதா காஷ்டாகாந்தா என்ற சொற்றொடர் பின்னர் வருகிறது. அங்கு காஷ்டா அகாந்தா (நா. 860) எனப் பதம் பிரியும். (329)

**1856-01 காதம்பரீ - ப்ரியா. உயர்ந்த மதுவில் நாட்ட முள்ளவள்.**

1856-02 வாமாசார வழிபாட்டில் உபயோகப்படும் மது, மாம்ஸம், மங்கை, மீன், தேன் என்ற ஐந்து வகை நிவேதனப் பொருள்களில் மதுவும் ஒன்று. அதில் அவள் தனது தனித்தப் பிரியத்தைக் காட்டி ஏற்கிறாள். (330)

**1857-01 வரதா. வரம் அளிப்பவள்.**

1857-02 வரம் - வேண்டுபவைகளில் சிறந்தது. அவைகளைக் கொடுப்பவள் தேவி. "மற்ற தேவதைகள் தான் வரம் கொடுப் பதைத் தன் கையில் வரதமுத்திரை காட்டி விளம்பரப்படுத்திக் கொள்வார்கள். நீ அப்படி அல்ல" 'த்வதந்ய: பாணிப்யாம் அபய வரதோ தைவதகண: த்வமேகா நைவாஸி ப்ரகடித வராபீத்யபிநயா. (ஸௌந்தர்யலஹரீ சு. 4) நான்கு கைகளிலும் மன அடக்கத்தைத்

தரும் ஆயுதம் தாங்கி நிற்பவளானதால் இவளது திருவடிகளும் கண்களுமே வரத்தைக் கொடுக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்டுள்ளன. விச்வகர்ப்பா ஸ்வர்ணகர்ப்பாவரதா என்ற சொற்றொடர் பின்னர் வருகிறது. அங்கு ஸ்வர்ணகர்ப்பா அவரதா (நா. 639) எனப் பதம் பிரியும். (331)

1858-01 வாம-நயநா. அழகிய கண்கள் உள்ளவள்.

1858-02 வாமம்–அழகியது. நயனம்–கண்கள். அவள் கண்கள் அழகியவை. விரும்பியதை வாரி வழங்கும் தன்மை படைத்தவை. ஆனதால் அவைகளின் அழகு நிலைத்து நிற்கிறது. (0912-01) வாமம்-வாமமார்க்கம். தேவியை வழிபடும் மார்க்கங்களில் (நா. 912) வாமமார்க்கமும் ஒன்று. அது மனத்தை இழுப்பதால் வாமம், அழகானதும் கூட. அதன் வழியே தன்னிடம் அழைத்துச் செல்பவள் தேவி. (நயனம்-அழைத்துச் செல்லுதல்). வாமம்-வினைகளின் பயன். வினைகளின் பயனை அனுபவிக்கும்படி அவனவனிடம் (நயநா) கொண்டு சேர்ப்பவள். (332)

1859-01 வாருணீ-மத-விஹ்வலா. வாருணீ மதுவால் ஏற்பட்ட மதத்தால் தளர்ந்திருப்பவள்.

1859-02 வாருணீ-வருணனுக்குப் பிரியமானது. பேரீச்சம் பழத்தின் சாரம் கொண்டு தயாரிக்கப்பெறும் மது. அதைப் பருகுவதால் ஏற்படும் கிளுகிளுப்பால் தன்னிலை மறந்து வெளிப் பொருளை உணரும் சக்தி குன்றித் தளர்ந்திருப்பவள்.

1859-03 வாருணீ - வருணனால் சுட்டிக் காட்டப்பட்ட பிரும்ம வித்யை, தைத்திரீய உபனிடதத்தில் விளக்கப்பட்டது. அதனால் விளைந்தது வெளியுலக மறதி. அதனால் தளர்ந்த ஞானிகளைக் கொண்டவள் தேவி.

1859-04 வாருணீமத்-அவிஹ்வலா என்றும் இதனைப் பிரிக்கலாம். வருணனின் பெண் வாருணீ. அவளை மணந்த ஆதி சேஷன் வாருணீமான், தேவியின் அருளால் தான் சிறிதும் களைப்பின்றி பூமியைத் தாங்குகிறான். ('வஹதி ஏநம் சௌரி: கதமபி ஸஹஸ்ரேண சிரஸாம்.' ஸௌந்தர்யலஹரீ-2.) உலகைத் தாங்கும் வாருணீமானான சேஷனைப்போல் தளராதவள் தேவி.

1859-05 வாருணீ எனும் நாடி உடலில் வாயுவின் சக்தியைப் பரப்புகின்றது. அந்த நாடி சக்தியை வென்ற யோகி வாருணீமான்-அந்த யோகியைத் தளராமலிருக்கச் செய்பவள் தேவி. (333)

75 विश्वाधिका वेदवेद्या विन्ध्याचलनिवासिनी । 336
विधात्री वेदजननी विष्णुमाया विलासिनी ॥ 340

விச்வாதிகா வேதவேத்யா விந்த்யாசலநிவாஸிநீ I
விதாத்ரீ வேதஜநநீ விஷ்ணுமாயா விலாஸிநீ II

**1860-01 விச்வ-அதிகா. எல்லாவற்றிற்கும் மேம்பட்டவள்.**

1860-02 விசுவன் என்ற ஜீவனைவிடப் பெரியவள். (பா. 1709) விசுவன் என்பதால் விச்வன், தைஜஸன், பிராஜ்ஞன் என்ற மூவரையும் குறிப்பிடலாம். அவர்களைத் தாண்டித் துரீயமாக இருப்பவள். விச்வம்-உலகம், தோன்றும் உலகைவிடப் பெரியவள். விராட் என்ற ஸ்தூலதேகாபிமானியான ஸமஷ்டிஸ்வரூபத்தில் (நா. 282-284) உலகம் என்பது கால்பங்கு. பாக்கியுள்ள முக்கால் பங்கு அழியாத நிலையில் பரமாகாசத்தில் உள்ளது. ("பாதோஸ்ய விச்வா பூதா நி-த்ரிபாத்அஸ்ய அம்ருதம் திவி") எனப் புருஷஸூக்தம் கூறும். தோன்றும் உலகைவிட அதன் காரணமான தேவி பன்மடங்கு விரிவுள்ளவள். (334)

**1861-01 வேத-வேத்யா. வேதங்களால் அறியத்தக்கவள்.**

1861-02 விச்வாதிகையான தேவியை அறிய வகை யாது? வேதங்கள் அவளை நமக்கு அறிமுகப்படுத்துகின்றன. தேவி தன்னை அறிவிக்கும் நூல்களாக வேதங்களை முதலில் படைத்தாள், அதிலுள்ள அக்ஷரங்கள்-அழியாத்தன்மை படைத்த எழுத்துக்கள். அக்ஷரமான–அழியாத் தன்மை படைத்த தேவியின் ஸ்வரூபத்தைக் காட்டவல்லவை.

1861-03 வேதங்கள் தேவியைப்பற்றி அறிவிக்க, ஸ்ரீநகரத்தின் நான்கு வாயில்களாக அமைந்துள்ளன. ருக்வேதம் கிழக்கிலும், யஜுர்வேதம் தெற்கிலும், ஸாமவேதம் மேற்கிலும், அதர்வவேதம் வடக்கிலும் வாயில்கள். வாயில்கள் வழியே சென்று தேவியை அடையவேண்டும். வாயில்களாக அமைந்த வேதங்கள் தேவியிருக்குமிடத்தை அடைய உதவுகின்றன.

1861–04 ஸ்ரீசக்கிரத்தின் நடுவில் உள்ள பிந்துவில் ஆம்நாய சக்திகளாக விளங்குபவர்களை வழிபடுகிறோம். (பா. 0911–26) அவர்கள் வேதத்தின் சக்திகள். அவர்களில் சுத்தவித்யை முதலான 24,000 சக்திகள் ருக்வேதத்தின் சக்திகள். அவர்களுக்குத் தலைவி உந்மோதிநீ. ஸௌபாக்யவித்யா முதலான 30,000 சக்திகள்

யஜுர்வேதத்தின் சக்திகள். அவர்களுக்குத் தலைவி போகிநீ. லோபாமுத்ரா முதலிய 2000 சக்திகள் ஸாமவேதத்தின் சக்திகள். அவர்களின் தலைவி குஞ்சிகா. துர்யாம்பா முதலிய 2000 சக்திகள் அதர்வண வேதத்தின் சக்திகள். அவர்களின் தலைவி காளிகா. ருக்வேத சக்திகள் பூர்வாம்நாயதேவதைகள். யஜுர்வேத சக்திகள் தக்ஷிணாம்நாயதேவதைகள். ஸாமவேத சக்திகள் பச்சிமாம்நாய தேவதைகள். அதர்வவேத சக்திகள் உத்தராம்நாய தேவதைகள். இவர்களால் அறிமுகப்படுத்தப்படுபவள் வேதவேத்யா. (335)

**1862-01 விந்த்யாசல-நிவாஸிநீ. விந்த்யமலையில் வசிப்பவள்.**

1862-02 தேவி உறையும் க்ஷேத்திரங்களில் சிறப்புள்ளது விந்தியமலை. சும்பநிசும்பர்களை அழிக்கவந்த நந்தா எனும் தேவி விந்தியமலையில் வசிக்கிறாள். நந்தகோபர் வீட்டில் யசோதைக்குப் பெண்ணாகப் பிறந்து கண்ணனுக்குப் பதிலாக வடமதுரைக்கு வசுதேவரால் எடுத்துச் செல்லப்பட்டாள். கம்ஸனின் கைகளிலிருந்து நழுவி கண்ணன் எங்கோ பிறந்திருக்கிறான் என்பதை அறிவித்து மறைந்துவிட்டாள். இவளே சும்பனையும் நிசும்பனையும் அழித்தவள். (தேவிமாகாத்ம்யம், 11-41-42) அப்படி நந்தா என்ற பெயருடன் விந்தியமலையில் வசிப்பவள் தேவி. (336)

**1863-01 விதாத்ரீ. உலகைத் தாங்குபவள்.**

1863-02 தாத்ரீ-தாய். தன் கருவில் சிசுவைத்தாங்கி, ஓரளவு அது வளர்ந்ததும், அதனை வெளிப்படுத்தி மேலும் வளர்ப்பவள். வி-தாத்ரீ-என்றுமே தாங்கும் சிறப்புமிக்க தாய். உலகைக் கருவில் சுமந்து வெளிப்படுத்தி வளர்ப்பவள். விதாதா-பிரும்மா. அவரது சக்தியாக-பத்தினியாக இருப்பவள். தாத்ரீ-நெல்லிக்கனி. அதில் (வி) தனித்த ஆவல் கொண்டவள். நெல்லிமரம் தேவி தங்கும் இடமாக வழிபடப்பெறும். (337)

**1864-01 வேத-ஜநநீ. வேதங்களின் தாய்.**

1864-02 பரம்பொருளிலிருந்து முதலில் தோன்றியவை நான்கு வேதங்கள். ("தஸ்மாத் யஜ்ஞாத் ஸர்வஹுத: ருச: ஸாமாநி ஜஜ்ஞிரே. சந்தாம்ஸி ஜஜ்ஞிரே தஸ்மாத். யஜுஸ்தஸ்மாத் அஜாயத." "எல்லாவற்றையும் ஆஹுதியாக ஏற்கும் வேள்வி வடிவிலிருந்த விராட் புருஷனிடமிருந்து ருக், ஸாம, அதர்வ,

யஜுர் வேதங்கள் தோன்றின " புருஷஸூக்தம்.) அப்படி நான்கு வேதங்களையும் படைத்தவள் தேவி. (338)

1865-01 விஷ்ணு - மாயா. பரம்பொருளின் மாயாசக்தியாக இருப்பவள்.

1865-02 விஷ்ணு-எங்கும் நீக்கமற நிரம்பியிருப்பதும் எக் காலத்திலும் உள்ளதும் எல்லாமாயுமிருப்பதுமான பரம்பொருள். அதன் சக்தியான மாயைவடிவினள் தேவி. மாயை மறைக்கும் சக்தி படைத்தது. அது கருணையால் மறைக்கிறது. பரம்பொரு ளின் உண்மை வடிவத்தையும் முழு நிலையையும் எவராலும் உணர முடியாது. பிரும்மன், விஷ்ணு, ருத்திரன் முதலிய பல வடிவங் களாக அதனைக் காட்டுகிருள் மாயை. பிரும்மத்தின் எண்ணற்ற சக்திகளில் பலவற்றை மறைத்துச் சில சக்திகள் மட்டும் வெளிப் படும் தோற்றங்களே பிரும்மன் முதலியவர்கள். மற்றும் தெய்வத் தன்மை (விபூதி) நிறைந்த வடிவங்களாகவும் காட்டுகிருள் மாயை. அதனுல் ஓரளவிற்கு அறிவிற்குப் புலனுகித் தியானம் செய்ய உகந்ததாகிறது பரம்பொருள். அப்படிக் கருணையால் தேவி எடுத்துக்கொண்ட உருவம் விஷ்ணு மாயை.

1865-03 மாயை இரு சக்திகள் கொண்டது. ஒன்று ஆவரணம். மற்ருென்று விக்ஷேபம். விக்ஷேபத்தை அடுத்த நாமத்தால் விவரிக்கிருர்கள் வாக்தேவிகள். ஆவரணம் என்பது இருப்பதனை மறைப்பது. பரம்பொருளின் உண்மை வடிவைப் பார்க்கவொண்ணுமல் மறைப்பது மாயை. மாயை ஏமாற்றும். இருப்பதை இல்லாததுபோல் காட்டும். இல்லாததை இருப்பது போல் காட்டும். எங்கும் நீக்கமற நிறைந்துள்ள அகண்டமான பரம்பொருளைப் பார்க்க முடியாமல் தடுத்து அதனிடத்தில் இல்லா ததும் தோற்றத்தால் மட்டும் இருப்பதுபோன்று மயக்குகின்றது மான உலகமாகிற துண்டு துண்டாக-கண்டமாகத் தோன்றும் பல பொருள்களைக் காட்டி மயக்குகிருள் மாயை.

1865-04 மூலப்பிரகிருதி தேவியின் ஞானக்கிரியா சக்திகளின் வடிவம். இதனை மாயை என்பர். அவ்யக்தம், வ்யக்தாவ்யக்தம், வ்யக்தம் என்ற மூன்று நிலைகளில் உலகாக மாறவிருக்கும் மூலக் கருவைத் தோற்றுவித்தவள் மூலப்பிரகிருதி. (பாரா 1708) தன் னுள் மறைந்திருந்த ரஜஸ் தமஸ் ஸத்வம் எனப்படும் முக்குணங் களை அஹங்காரத்திடம் செலுத்தி அதனைப் பல வடிவங்கள் பெற்ற உல்கமாக மாற்றியவள்.

1865-05 புலன்களால் அறிய முடியாததொன்றைப் புலன் களுக்கு உட்படுவதாகச் செய்ய வேண்டும். சுத்த வெண்மை நிறம் கொண்டதொன்றைச் சுற்றிக் கருத்த கோட்டினை வரைந் தால் வெண்மை பளிச்சென்று துலங்கும். புலப்படாதிருந்தது புலப்படும். சுற்றிலுமுள்ளதை மறைத்தால் நடுவில் உள்ளது நன்கு புலப்படும். இப்படி மறைப்பதே துலக்குவதற்குத்தான். மறைப்பை மட்டும் கண்டு, துலங்குவதைக் காணுதவன் ஏமாறுவது மறைப்பின் விளைவல்ல. ஏமாறுவது அறியாமையால். அதனுல் அறியாமையையே மாயை எனக் கூறுவர். கல் குத்தியது என் பதைப்போல். வழியில் நடக்கும் நாம் கல்லின்மேல் நம் பாதங் களை அழுத்தினேம். கால் அழுந்தியது. கல் குத்தவில்லை. அது போல் மாயை மறைத்தது. அது தோற்றத்தை விளக்கவே. நம் கண்ணை மறைக்க அல்ல. மாயை பரம்பொருளை மறைத்தது அதனை விளக்கவே. இதனை அறிந்தவர் மாயையெனும் திரையினுள் மறைந்துள்ள பரம்பொருளை நன்கு அறிவர். மாயையை அறிந்தவர் மாயையைத் தாண்டுவர். (339)

1866-01 விலாஸிநீ. விக்ஷேப சக்தியாக இருப்பவள்.

1866-02 மாயையின் ஆவரண சக்தி, பரம்பொருளின் தத்து வத்தை மறைத்து அதன் முழுநிலையையும் அறிய முடியாமற் செய்கிறது. மாயையிடம் உள்ள தமோகுணம் இதற்கு உதவு கிறது. மற்றொரு மாயையின் சக்தி விக்ஷேபசக்தி எனப்படும். ஒன்றைப் பலவாகக் காட்டுவது இது. அததன் உண்மை நிலை யைப் புலப்படாமல் செய்து உண்மை நிலைக்குப் புறம்பான தோற்றத்தை உண்மைத் தோற்றமாகக் காட்டுவது. நிறமற்ற ஒளியை மறைக்கும் சிகப்புக்கண்ணுடி ஒளியைச் செந்நிறமாகக் காட்டுகிறது. அதுபோல் மாயை ரஜோகுணத்தாலான விக்ஷேப சக்தியால் பிரும்மத்திடமிருந்து தோன்றியதனைத்தையும் பிரும்மத் தன்மையற்றவையாகக் காட்டுகிறது.

1866-03 விலாசம்-கேளிக்கை. அதில் மிகவும் ஈடுபட்டுள் ளவள் விலாஸிநீ. விலம்-பிலம்-பிரும்மரந்திரம் எனும் உச்சிக்குழி, அல்லது காஞ்சியில் காமகோட்டத்தில் உள்ள பிலம். அதனுள் அமர்ந்திருப்பவள் விலாஸிநீ. (340)

76 क्षेत्रस्वरूपा क्षेत्रेशी क्षेत्रक्षेत्रज्ञपालिनी । 343
क्षयवृद्धिविनिर्मुक्ता क्षेत्रपालसमर्चिता ॥ 345

க்ஷேத்ரஸ்வரூபா க்ஷேத்ரேசீ க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞபாலிநீ ।
க்ஷயவ்ருத்திவிநிர்முக்தா க்ஷேத்ரபாலஸமர்ச்சிதா ॥

**1867-01 க்ஷேத்ர ஸ்வரூபா. க்ஷேத்திர வடிவமானவள்.**

1867-02 வரையறுக்கப்பெற்றுப் பண்படுத்தப்பட்டுள்ள பூமியை க்ஷேத்திரம் என்பர். தெய்வ ஸாந்நித்யம் நிலேத்திருக்கும்படி யந்திர-தந்திர-மந்திர விதிகளால் பண்படுத்தப் பெற்றதும், அல்லது தானே இயற்கையாய் க்ஷேத்திரமாக அமையப்பெற்றதுமான காஞ்சி, காசி, மதுரை, ராமேசுவரம் முதலிய க்ஷேத்திரங்களேத் தன் வடிவமாகக் கொண்டவள் தேவி.

1867-03 36தத்துவங்களால் அமைந்த இந்த உடலும் க்ஷேத்திரமே. பொறிகளும் மனமும் புத்தியும் கொண்ட உடல் ஸம்ஸாரமாகிய பயிர் முளேத்து வளரக்கூடிய பூமியாக அமைந்தமையால் இதனே க்ஷேத்திரம் என்பர். " இதம் சரீரம் கௌந்தேய க்ஷேத்ரம் இத்யபிதீயதே " என்று தொடங்கி க்ஷேத்திரத்தின் அமைப்பை கீதை (13, 1-6) விளக்குகிறது. அவ்யக்தம், மஹத், அஹங்காரம், தன்மாத்திரங்கள் 5, இந்திரியங்கள் 10, ஞான இந்திரியங்களால் அறியக்கூடிய புலன்கள் 5, மனம், ஆகிய 24ம் அவைகளால் ஏற்படும் உணர்ச்சிகளான விருப்பு, வெறுப்பு, சுகம், துக்கம், தைர்யம், உணர்வு இவைகளும் மனம் பொறிகள் உடல் இவை ஒருங்கிணேந்திருப்பதும் க்ஷேத்திரம் என்ற சொல்லின் பொருளாகக் கீதையில் விளக்கப்பட்டுள்ளது. இவைகளேத் தன் வடிவாகக் கொண்டவள் தேவி.

1867-04 இந்த க்ஷேத்திரமாகிய உடல், வழிபாடு முதலியவையால் தெய்விக சக்தி பெறும். ஸம்ஸாரமாகிய பயிர் விளேயும் வயலாக அமைந்த இந்த உடல் தெய்விக வாழ்க்கையை ஏற்றுக் கொள்ளும்போது காசி, காஞ்சி போன்ற புண்ணிய ஸ்தலமாகும் பெருமையை அடைகிறது. அத்தகையப் புனித உடலேத் தன் வடிவமாகக்கொண்டு தேவி அதனுள் வசிக்கிருள். (341)

**1868-01 க்ஷேத்ர-ஈசீ. க்ஷேத்திரத்தை ஆள்பவள்.**

1868-02 க்ஷேத்திரங்களான காசி காஞ்சி முதலிய புண்ய ஸ்தலங்களேயும், க்ஷேத்திரமான உடலேயும் ஆள்பவள் தேவி. க்ஷேத்திரங்களுக்கு அதிபரான பரமேசுவரனின் சக்தி அல்லது பத்தினி தேவி. (342)

1869-01 க்ஷேத்ர-க்ஷேத்ரஜ்ஞ-பாலிநீ. க்ஷேத்திரத்தையும் க்ஷேத்திரஜ்ஞனையும் காப்பாற்றுபவள்.

1869-02 க்ஷேத்திரம்-வினையை விதைத்துப் பயிராக்குமிடமான உடல்; வழிபாடு முதலியவற்றால் தெய்விகம் நிரம்பிய புண்ய ஸ்தலம் போன்ற உடல். க்ஷேத்திரஜ்ஞன்-உடலைத் தான் என்றும் தன்னுடையதென்றும் உணர்ந்து அபிமானம் கொண்ட ஜீவன். (பா-1708-15-17) வயல் போன்ற உடலில் வினையாகிய விதையை விதைத்து நீர்வார்த்துப் பயிராக்கி உரிய காலத்தில் அறுவடை செய்து அதன் பயனைப் பெறும் விவசாயி போன்றவன் ஜீவன். க்ஷேத்திரத்தைத் 'தான்' — (ஜடமான சரீரமே நான்) என அபிமானம் கொள்வதால் அவன் க்ஷேத்திரஜ்ஞன். க்ஷேத்திரத்தை (வரையறுக்கப்பட்டுள்ளதையும் அது பண்படுத்தப்பட்டுள்ள நிலையையும்) அறிபவன் க்ஷேத்திரஜ்ஞன். "ஸ்தூல ஸூக்ஷ்ம தேகங்களைக்கொண்டு 'அவன்' ஆற்றக்கூடிய செயல்கள் நியதிக்கு உட்படுபவை; உடலும் உள்ளமும் அமைந்துள்ள பாங்கில் நிறைவேற்றக்கூடிய பணி இந்த அளவில்தான் அமையும்" என உண்மை நிலை அறிந்தவன் க்ஷேத்திரஜ்ஞன். இத்தகைய க்ஷேத்திரத்தையும் க்ஷேத்திரஜ்ஞனையும் காப்பவள் தேவி.

1869-03 வினை விதைத்துப் பயிராக்கத் தக்க க்ஷேத்திரமாக அமைந்த உடலை வினைகளை அறுத்துச் சுட்டெரிக்கும் ஞான அக்னியில் புடமிட்டுப் புண்ய க்ஷேத்திரமாக்கித் தேவி காக்கிறாள். ஜடமான பொருள்களையும் 'தான்' என அபிமானித்துள்ள ஜீவனுக்கு ஆத்மாவான சேதன ஸ்வரூபத்தையும் ஜடமான உடல் மனம் முதலியதன் நிலையையும் விளக்கி உணர்த்தி, ஜடத்திலிருந்தும் சேதனத்தைப் பிரித்தறியச்செய்து 'தான்' சேதன வடிவினன் என்பதை நேரிடையான அனுபவத்தின் மூலம் உணரச்செய்து ஜீவன்முக்தனான க்ஷேத்திரஜ்ஞனுக்கிக் காக்கிறாள் தேவி. (343)

1870-01 க்ஷய-வ்ருத்தி-விநிர்முக்தா. தேய்வும் வளர்ச்சியுமில்லாதவள்.

1870-02 க்ஷேத்திர வடிவினள், க்ஷேத்திரத்தை ஆள்பவள் என்ற இருநிலைகளிலும் தேய்வையும் வளர்ச்சியையும் மாறிமாறி அடையவேண்டியிருப்பதால் தேவியின் நித்யத் தன்மையில் குறை ஏற்படுமோ என்ற ஐயத்திற்கு இடமில்லை. ஏனெனில் அவள் க்ஷய-வ்ருத்தி-விநிர்முக்தா. தேய்வும் வளர்ச்சியுமற்றவள். குடத்தினுள் அடங்கியதால் ஆகாயத்தின் அளவற்ற தன்மைக்கு ஊறு

விளைவதில்லை. மணம் பரப்புபவைகளால் ஏற்படும் மணம் ஆகாயத்தில் கலந்தாலும் ஆகாயம் மணப்பதில்லை. மேகங்கள் வேகமாக அலையும்போதும் ஆகாயத்தில் சலனம் ஏற்படுவதில்லை. அதே போல் தேவியைச் செயலாலோ சேர்க்கையாலோ உருவ மாறுபாட்டாலோ ஏற்படக்கூடிய தேய்வும் வளர்ச்சியும் பாதிப்பதில்லை. சிறிதாயிருந்தது பெரிதாக வளரும். தேவி பூர்ணை-நிறைந்தவள். குறிப்பிட்ட பரப்பில் அடங்கியவளல்ல. அதனால் சிறிது பெரிது என்ற பாகுபாட்டிற்கு இடமில்லை. வளர்ந்தது தேயும். விரிந்தது குறுகும். என்றும் எங்கும் நிரம்பிய தேவியிடம் தேய்வையும் வளர்ச்சியையும் காணமுடியாது. (344)

1871-01 க்ஷேத்ரபால-ஸமர்ச்சிதா. க்ஷேத்திரபாலரால் நன்கு பூஜிக்கப்பெற்றவள்.

1871-02 பைரவர்களில் (பயங்கரத் தோற்றமுள்ள சிவமூர்த்திகளில்) ஒருவர் க்ஷேத்திரபாலர். வேள்விகளை அழித்து வந்த தாருகன் எனும் அஸுரனை அழிக்க சிவன் காளியைத் தோற்றுவித்தார். காளி தாருகனை அழித்த பின்னும் உக்கிரம் அடங்காதிருந்தாள். அவளை மகிழ்விக்கக்கூடியவர் சிவன் ஒருவரே. சிவன் சிறு குழந்தை வடிவினராகக் காளியை அணுக, காளி தாய்மை உணர்ச்சி மேலீட்டால் அந்தச் சிவக்குழந்தையை எடுத்துப் பாலூட்டினாள். சிவக்குழந்தை பாலுடன் அவளது உக்கிரத்தையும் குடித்துவிட்டது. காளியின் உக்கிரத்திலிருந்து — உக்கிரமான தேவதாசக்தியிடமிருந்து அந்த க்ஷேத்திரத்தைக் காப்பாற்றியவரானதால் க்ஷேத்திரபாலர் எனப் பெயர் பெற்றார். அவரால் நன்கு பூஜிக்கப்பட்டவள் தேவி. காளி பயங்கரமான உள்ளமும் தோற்றமும் கொண்டவள். அவள் மனத்தை ஈர்க்கப் பயங்கரமான தோற்றமுள்ள குழந்தையால்தான் இயலுமென உணர்ந்த சிவன் பைரவ உருவில் சிசுவாக வந்தார்.

1871-03 க்ஷேத்திரம்-உடல், அதில் காப்பாளர்களாக உள்ள திக்தேவதைகள் வாயு சூர்யன் அக்னி முதலிய இந்திரிய-அதிஷ்டாதாவான (இந்திரியத்தில் அமர்ந்து அதனைக் காப்பவர்) தேவதைகளால் வழிபடப்பட்டவள். இவர்கள் அஹங்கார தத்துவத்திலிருந்து ரஜோகுணம் மிக்க நிலையில் தோன்றியவர்கள். (பாரா. 1708-08) (345)

77 विजया विमला वन्द्या वन्दारुजनवत्सला । 349
वाग्वादिनी वामकेशी वह्निमण्डलवासिनी ॥ 352

விஜயா விமலா வந்த்யா வந்தாருஜனவத்ஸலா ।
வாக்வாதினீ வாமகேசீ வஹ்நிமண்டலவாஸினீ ॥

1872-01 விஜயா. தனிச்சிறப்புள்ள வெற்றி பெறுபவள்.

1872-02 தேவியின் வெற்றி தனிச் சிறப்புள்ளது. மற்றவர்களது வெற்றி, ஒன்று அழிவதன் விளைவாக அமையும். இவளது வெற்றி மற்றவற்றைச் சிறப்புள்ளவையாக ஆக்குவதாக அமையும்.

1872-03 விஜயா-உள்ளுணர்வு-நான் என்ற சேதனத்தின் உணர்வு. விஜயா-விஜயதசமியன்று மாலையை ஒட்டி நக்ஷத்திரங்கள் உதிக்கத்தொடங்கிய இரவின் முற்பகுதி விஜயா எனும் நல்முகூர்த்தமாகும். அரசர்கள் வெற்றிதரும் வேளையெனக் கருதி இதில் விஜய யாத்திரைக்குக் கிளம்புவர். இந்த நல்வேளை கொண்டதால் புரட்டாசி மாதத்தின் அமாவாசைக்கடுத்துவரும் தசமி விஜய தசமி எனப் புகழ்பெற்றது. அந்த நல்வேளையாக உள்ளவள் தேவி.

1872-04 சிவதீர்த்தங்கள் 68. காச்மீரத்திலுள்ள விஜயதீர்த்தம் அவைகளில் ஒன்று. அந்த தீர்த்தமாயிருப்பவள் தேவி. விசுவகர்மா எனும் தேவசிற்பி விஜயமெனும் மாளிகை அமைப்பை விளக்கி அது அரசர்களுக்கு வெற்றி தரும் எனக் கூறியுள்ளார். அந்த விஜயமாளிகையாக இருப்பவள் தேவி. நேரமும் தீர்த்தமும் மாளிகையும் தேவியின் விபூதியில் ஓரம்சம் பெற்றிருப்பதால் இவை வெற்றி தருகின்றன. (346)

1873-01 வி-மலா. அழுக்கற்றவள்.

1873-02 அறியாமையால் ஏற்படும் அழுக்கை மலம் என்பர். அவித்யைத் தொடர்பில்லாமையால் மலமற்றவள் தேவி. புருஷோத்தமமெனும் ஜகன்னாதத்தில் விமலா என்ற சக்தி பீடமாக இருப்பவள் தேவி. விசுவகர்மாவெனும் தேவச் சிற்பியால் வடிவமைக்கப்பெற்ற விமலம் எனும் மாளிகை வடிவிலுள்ளவள் தேவி. த்ருவம், தான்யம், ஜயம், காந்தம், விபுலம், விஜயம், ஸுமுகம், விமலம், நந்தம், மநோரமம் முதலிய பல மாளிகை வகைகளைச் சிற்ப சாஸ்திரத்தில் விசுவகர்மா குறிப்பிட்டுள்ளார். (347)

1874-01 வந்த்யா. வணங்கத்தக்கவள்.

1875-01 வந்தாரு-ஜந-வத்ஸலா. வணங்குபவர்களிடத்தில் வாத்ஸல்யம் உள்ளவள்.

1875-02 எல்லோரது வணக்கத்திற்கும் உரியவள் தேவி. வணங்குபவர் பால் அவள் கொண்டுள்ள நிகரற்ற அன்பினுல் அந்த உரிமை அவளுக்குக் கிடைத்தது. தேவியை வணங்குவதொன்றையே பழக்கமாகக் கொண்டவன் வந்தாரு. ஜநः- பிறவிப் பிணிக்குள்ளானவன். தான் கரையேற தேவியின் திருவடிகளே சரணம் எனக் கருதி அவைகளை வணங்குவதே வாழ்நாள் முழுவதும் செய்ய வேண்டிய பணி எனக் கொண்டவன். அவனிடம் தேவிக்கு அளவுகடந்த பிரியம். அந்தப் பிரியத்திற்கு இணையாகப் பசு தன் இளம் கன்றிடம் கொண்ட பிரியத்தைக் கூறலாம். தனது மூத்த கன்றைக்கூட முட்டி விரட்டிப் பின் தன் இளைய கன்றிற்குப் பால் ஊட்ட மடி தரும் பாங்கு, வாத்ஸல்யமாகும். பசு அத்தனை வத்ஸலா- இளங்கன்றைப் போற்றி வளர்ப்பதில் நிகரற்ற ஈடுபாடு கொண்டது. அதனைப் போல் தேவியும் வணங்கித் தன்னைச் சரணமாகக் கொண்டவனிடம் வத்ஸலா-வாத்ஸல்யம் கொண்டவள். அதனுல் அவள் வந்த்யா-வணங்கத்தக்கவள். (348-349)

**1876-01 வாக்-வாதிநீ. வாக்வாதினியாயிருப்பவள்.**

1876-02 ஸரஸ்வதியின் ஒரு தோற்றம் வாக்வாதினீ தேவி. சியாமளா தேவியின் துணை அங்க தேவதை. உத்தராம்நாய தேவதைகளில் ஒருவள். (பா. 1859-03-04) தாமரையில் அமர்ந்திருப்பாள். எழுதுகோலையும் புத்தகத்தையும் இரு கைகளில் தாங்கியிருப்பாள். முல்லை போன்ற வெண்ணிற மேனியாள். சந்திரனது பிறையுள்ள கோடீரமென்ற (பா. 0803-02) கிரீடத்தோடு கூடியவள். பேசும் சக்தி தருபவள். (350)

**1877-01 வாமகேசீ. அழகிய கூந்தல் உள்ளவள்.**

1877-02 வாம-அழகிய, கேசீ-கேசங்களுள்ளவள். வாமக-ஈசீ. வாமாசாரமுள்ளவர்களின் தலைவர் வாமகர் சிவன். அவரது மனைவி வாமகேசீ. வாமகேசம் என்று 68 சிவ தீர்த்தங்களில் ஒன்று. அதன் தலைவி, வாமகேசரான சிவன் சொல்லிய தந்திர நூல் வாமகேச்வர தந்திரம். அதில் விளக்கப்படுபவள் வாமகேசீ. வாமன்-அழகே வடிவான சுந்தரர் சிவன். சிறப்புள்ள சிவன் வாமகர். அவரது சக்தி வாமகேசீ. (351)

**1878-01 வஹ்நி-மண்டல-வாஸிநீ. அக்கினி மண்டலத்தில் வசிப்பவள்.**

1878-02 தேவியைச் சந்திர மண்டலத்திலும் (1642-02) சூரிய மண்டலத்திலும் (1801-02) வசிப்பவளாக முன்னர் தியானம் செய்தோம். மூன்ருவது ஒளிமண்டலம் அக்னி மண்டலமாகும். அதில் வசிப்பவள் தேவி. அக்கினி மண்டலம் மூலாதார ஸ்வாதிஷ்டான சக்கிரங்கள் அடங்கியதாகும். (1211-02) அதனுள் வசிப்பவள் தேவி. வஹ்நி என்பது ஸங்கேத மொழியில் 3 ஐக் குறிக்கும். கார்ஹபத்யம் ஆஹவனீயம் தக்ஷிணம் என வேள்விகளுக்கான அக்கினி மூன்ருகும். அதனுல் வஹ்நி-அக்கிநி முதலிய நெருப்பைக் குறிக்கும் சொற்கள் மூன்றைக் குறிக்கும். மூன்று மண்டலங்களான ஸோம-ஸூரிய-அக்னி மண்டலங்களில் வசிப்பவள். (352)

78 भक्तिमत्कल्पलतिका पशुपाशविमोचनी । 354
संहृताशेषपाषण्डा सदाचारप्रवर्तिका ॥ 356

பக்திமத்-கல்பலதிகா பசுபாசவிமோசநீ ।
ஸம்ஹ்ருதாசேஷபாஷண்டா ஸதாசாரப்ரவர்த்திகா ॥

1879-01 பக்திமத்-கல்பலதிகா. பக்தர்களுக்குக் கற்பகக் கொடி.

1879-02 கல்பலதா - கற்பகக்கொடி. அழகிய லதா-லதிகா. ஆணைக் குறிப்பிடும்போது கல்பவ்ருக்ஷ: – கற்பகமரம் என்றும் பெண்ணைக் குறிப்பிடும்போது கல்பலதா என்றும் குறிப்பிடுவது வழக்கம். அதனடியில் அமர்ந்துள்ளவன் வேண்டியதை அது வாரி வழங்கும். அப்படிப் பக்தர்களுக்குத் தேவி வாரி வழங்குகிருள்.

1879-03 பக்திமத்கல்பர்கள் சிலர். பக்தி நிறைந்தவர்கள் (பக்திமத்) பக்திமான்கள். அந்த நிலையை இன்னமும் அடையாதவர்களையும், பக்திமான் போன்று தோன்றுபவர்களையும் பக்திமத் கல்பர்கள் என்பர். லதா-கொடி-தானே படரக்கூடியது. அணைக்க விரும்புமிடத்தை நோக்கித் தானே படர்ந்து அதனை அணைத்து மகிழக்கூடியது. பக்திமத்கல்பர்களைக் கொடிபோலாக்கித் தன்மேல் படரவிட்டுக் கொள்பவள் - பக்திமத் - கல்ப - லதிகா. சிறிதளவு தன்னிடம் பக்தி எனும் அன்பு துளிர்விட்டதும் அதனை வளர்த்து மாபெரும் கொடியாக்கி எங்கும் படரவிட்டு, அடையத்தக்க தன்னை அடையும்படி செய்பவள்.

1879-04 லதிகா-கஸ்தூரிக்கொடி. இது கஸ்தூரியின் மணத்தைக் கொண்ட கொடி. இதனை முகர மனம் நிறையும். அமைதியும் பெறும். பக்திமத்கல்பர்களை மகிழ்விக்கும் கஸ்தூரிக்கொடி போன்றவள்.

1879-05 முறையுடனும் முறையற்றும், சிறிதளவிலும் கூடத் தேவியிடம் பக்தி அமைந்தால், அதனை முறைப்படுத்தி நிறைவுறச் செய்து விடுவாள் தேவி. அதனால் நமக்கேற்பட்டுள்ள வினைப் பாசக் கட்டிலிருந்தும் விடுவிப்பாள் என்பதை அடுத்த நாமம் கூறும். (353)

**1880-01 பசு-பாச-விமோசநீ. பசுவான ஜீவர்களைத் தளையிலிருந்தும் விடுவிப்பவள்.**

1880-02 கட்டிற்கு உட்படும் பிராணி பசு. ஜீவன் பசு. ஜீவனது அந்தர்யாமியாயிருந்து எல்லாப் பணிகளையும் நிறைவேற்றுபவள் தேவி. ஜீவன் 'நான்' என்ற உணரும் உணர்வில் 'நான்' ஆக இருப்பவள் தேவி. இந்த தேவியை அறியாதவன் பசு. இழிவான பிறவியில் பிறந்தவன். அறிவற்ற பசு தன்னிஷ்டப்படி சுற்றிவரமுடியாது. வினைக்கேற்ற பயன்தரும் ஈசுவரன் பசுபதி, இந்த அறிவற்ற பசுவைப் பாசத்தால் பிணைக்கிறுர். பா + அசம் = பாசம். பா-நீர் வேட்கை, அசம்—பசி. தாகமும் பசியுமே முக்கிய உணர்வாகக்கொண்டது பசு. அந்த உணர்வுகளையே பாசமாக்கி, அதனுல் பசுவைப் பிணைக்கிறுன். பசி தாகங்களிலிருந்து விடுபடுவதே சுகம், மோக்ஷம் என அந்தப் பசு நினைக்கும். அதற்காகவே வாழ்நாள் முழுதும் உழலும். அறியாமையால் கட்டுண்ட பசுவைப் பாசத்திலிருந்தும் தேவி விடுவிக்கிறுள். தேவி தான் உள்ளிருந்து ஆட்டுவிப்பதை அவனுக்கு உணர்த்துகிறுள். உள்ளும் புறமும் அவள் சூழ்ந்திருப்பதை அறிந்த ஜீவனுக்குப் பசியும் தாகமும் மறைகின்றன. அறியாமை அகலுகிறது. வினைகள் சாம்பலாகின்றன. தளைகள் தாமே நீங்குகின்றன. அவளது அன்பைத் தன் அன்பால் பெற்று விடுவிக்கப் பெறுகிறுன்.

1880-03 பசியும் தாகமும் ஏன் தளையாயின? இதற்குக் காரணம் ஐந்து. அவைகளும் பாசங்கள். ("அவித்யாம் அஸ்மிதாம் ராகம் த்வேஷம் ச த்விபதாம் வர. வதந்த்யபிநிவேசம் ச க்லேசான் பாசத்வமாகதான்.") அவித்யா, அஸ்மிதா, ராகம், துவேஷம், அபிநிவேசம் என்பவை அவை. 'நான்' என்ற எண்ணத்தின் ஆதாரமான ஆத்மா எது? ஆத்மாவென வேஷம் போட்டுக் கொள்பவை எவை என்பதைப் பிரித்தறியாமை அவித்யா —அஞ்ஞானம். 'நான்' ஆக இருக்க முடியாதது உடலும் பொறிகளும் மனமும். இவை மூன்றும் இயங்காத தூக்க நிலையிலும் 'நான்' இருக்கிறேன். இந்த 'நான்' அல்லாத உடலையும்

மனத்தையும் பொறிகளையும் 'நான்' என நினைத்துக்கொண்டு நான் கண்ணாக இருப்பவனாகப் பாவித்துப் 'பார்க்கிறேன்' எனக் கூறுகிறேன். இது அஸ்மிதா – (அஸ்மி-" அதாக இருக்கிறேன்." அந்த உணர்வின் தன்மை அஸ்மிதா) இது அவித்யையால் விளைந்தது. கண் ஒரு பொருளை நாடுவதால் அதனிடம் மனம் விருப்பம் கொள்கிறது. அதனை 'எனது' விருப்பமாக்கி 'நான்' அதில் ஈடுபடுகிறேன். இது 'ராகம்'. இது 'அஸ்மிதா' வால் விளைந்தது. ஆசை தடைபட்டாலோ ஆசைப்படுவது கிடைக்கா விட்டாலோ கோபமும் அதன் விளைவாக வெறுப்பும் ஏற்படுகிறது. ஆசைப்பட்ட பொருள் கிடைத்தாலும் அது கண்ணிற்கும் மனத் திற்கும் திருப்தியை எதிர்பார்த்தபடி கொடுக்காததாலும் வெறுப்பு ஏற்படுகிறது. இது **துவேஷம்**. இது ராகத்தால் விளைந்தது. இந்த விருப்பும் வெறுப்பும் தாற்காலிகம்தான். ஆனால் அதனால் மனதில் ஏற்பட்ட பாதிப்பு மனத்தில் நிலைத்ததொரு வாசனையாகக் குடியேறி விடுகிறது. இது **அபினிவேசம்**. மனம் அந்த விருப்பு-வெறுப்புகளின் வடிவமாகவே மாறி அவைகள் ஆட்டுவித்தபடி ஆடும் நிலையை அடைகிறது. இவை ஐந்துமே பாசமாக-பசிதாக உணர்ச்சியாக நம்மை பிணைக்கின்றன. ஆத்மா எது என்று அறிய தேவி அறிவைத் தருகிறாள். அறிவால் அறியாமை அகல, அதன் பின்விளைவுகளும் மறைய, அவைகளின் உருவிலிருந்த பாசங் களும் தளர்ந்து விலகுகின்றன.

1880-04 மற்றொரு வழியில் இதனை விளக்குவோம். பாசங்கள் மூன்று வகை, ஆணவம், மாயை, கர்மம் என. (இவைகளை மல மென்றும் குறிப்பிடுவர்) இந்த கயிற்றைத் திரித்தவர்களும் அதனால் தன்னைப் பிணைத்துக்கொண்டவர்களும் நாமே. கட்டிக்கொள்ள அறிந்த நாம் இதிலிருந்து விடுபடும் முறையையும் அறிய வேண்டும். எங்கும் நிரம்பியுள்ள பரம்பொருளே 'நான்'. அளவிடமுடியாத பரப்பு கொண்டதை என் சரீரத்தினுள் அடங்கியதாக அணு அளவுள்ளதாகக் குறுக்குவது **ஆணவம்**. ஆத்மாவின் பெருமை யைக் குலைப்பதால் இது மலம். பேரறிவும் பேராற்றலும் படைத்த தொன்றை உடற்கட்டிற்குள் அடங்கியவனாக்கிச் சிற்றறிவும் ஆற்றலின்மையும் கொண்டவனாகக் கட்டிவிடுவதால் இது பாசமு மாகிறது. (பா. 1404)

1880-05 ஆணவம் எனும் பாசம் மாயை எனும் பாசத்தை ஏற்படுத்துகிறது. ஒவ்வோர் உடலிற்கு ஒவ்வோர் ஆத்மா; அததற்கு வேண்டியதும் வேண்டாததும்; அதனால் ஏற்படும் விருப்பும் வெறுப்பும்; இவை அந்த ஆத்மாவைக் கட்டி மேலும்

குறுகியவனுக்குகின்றன. விருப்பும், வெறுப்புமற்ற ஆத்மாவை விரும்புபவனாகவும் வெறுப்பவனாகவும் அவதூறுக்குட்படுத்துவதால் இது மலம். விரும்பும் (வெறுக்கும்) பொருளுக்கு அவனை ஆட்படுபவனாக ஆக்குவதால் பாசம். (பா. 1402)

1880-06 விரும்புபவனாகவும் வெறுப்பவனாகவும் மாறிய ஆத்மாவை நியதி (விதி) கட்டுப்படுத்துகிறது. நியதிக்குட்பட்டதும் இதனைச் செய், இதனைச் செய்யாதே எனச் சட்ட திட்டங்கள் அவனைக் கட்டுப்படுத்துகின்றன. விருப்பும் வெறுப்பும் வலிவடைந்திருந்தால் சட்ட திட்டங்களுக்குக் கட்டுப்படாமல் செல்ல நேர்ந்து பாபம் மூட்டையாகச் சேர்கிறது. இந்த வினை மேலும் ஒரு கட்டாகிறது. ஆத்மாவை மேலும் உருக்குலைத்து விடுகிறது. இது கர்மம் எனும் பாசமும் மலமும். (பா. 1403)

1880-07 சிலருக்கு இந்த மூன்று கட்டுகளும் பலமாக இருக்கும். அவர்களை ஸகலர் என்பர். இவர்களில் சிலர் சுயநலம் நிறைவேறத் தேவியை வழிபடுகிறார்கள். அதனால் சிறிது சிறிதாக இந்த மலங்கள் பழுத்துத் தளர்ந்து விடுவதால் தேவியைப் பற்றி மேலும் அறிய ஆவல் ஏற்படுகிறது. இந்த ஆவலில் தேவியிடம் ஈடுபாடு அதிகமாகிக் கட்டுக்களின் பலம் குறைந்து, தான் அறிந்ததை அறியாதவர்களிடம் சொல்லும் கருணையுள்ள ஆசாரியர்களாக இவர்கள் ஆகிறார்கள். இதனால் தானும் கடைத்தேறிப் பிறரையும் கடைத்தேற்றுகிறார்கள். தன்னைப்பற்றிய அறிவையூட்டிப் பந்தங்களிலிருந்தும் தேவி இவர்களை விடுவிக்கிறாள்.

1880-08 சிலருக்கு முற்பிறவிகளில் செய்த தேவி வழிபாடு முதலியவற்றால் ஓரிரு பாசங்கள் தளர்ந்து போகும். இந்தப் பிறவியிலும் தொடர்ந்த தேவி வழிபாட்டால் மலங்கள் மேலும் அகலும். பிரளயாகலர், விஜ்ஞானகேவலர் என்ற மேல்நிலையை அடைந்த யோகீச்வரர்கள், மந்திரமூர்த்திகள் இந்தப் பிரிவினைச் சேர்வர்.

1880-09 இறுகப் பிணைக்கும் கயிறு தத்துவ ஞானிகளிடம் பயனற்றுவிடும், பசுவின் கழுத்திலேயே சுற்றப்பட்ட கயிறுபோல். யோகசக்தி பெற்றவர்களிடம் நெருப்பில் பொசுங்கிச் சாம்பலாகி வடிவத்தால் மட்டும் கயிறுபோன்றிருக்கும். அது செத்த கயிறு. தத்துவ ஞானமும் மனமுனைவுமின்றிப் பிறவிச் சூழலில் சுழன்று கொண்டிருப்பவரை மட்டும் அறுபடாத தடித்த கயிறுபோல் அது

இறுகப் பிணைக்கும். (ப்ரஸுப்தா: தத்வ வேத்ருணும், 'தக்ததே ஹாஸ்து யோகிநாம். அவிச்சிந்நோதாரரூபா: க்லேசா விஷய ஸங்கிநாம்-தேவீபாகவதம்).

1880-10 வாழ்க்கையில் துன்பம், நேரிடுகையில் துணையை நாடுகிறோம். துணையிருக்கிறதென்ற நம்பிக்கையே நமக்கு நிம்மதி தருகிறது. முன்செய்த ஏதோ ஒரு நல்வினை காரணமாகத் தேவியையே துணையாக நாடும் பக்குவம் ஏற்படுகிறது. தேவி துணை நின்று துக்கங்களின் அன்றாடப் பாதிப்புகளிலிருந்தும் விடுவிக்கிறாள். அதனால் தேவியிடம் ஏற்பட்ட நெருக்கம் அன்பாகித் தன்னை வாழவைக்கும் தாயாகத் தேவியை நினைக்கத் தூண்டுகிறது. தாயான தேவி தன் சுய உருவைச் சிறிது சிறிதாக அவன் மனக்கண்முன் நிறுத்தித் தன் நினைப்பை மேலும் வலிவுடையதாக்குகிறாள். அவளுக்காக வாழும் நினைவு ஏற்பட்டு அவளுக்குப் புரியும் பணிவிடையாகவே உலகப் பணிகளைச் செய்யும் பாங்கு வளர்கிறது. செய்துவரும் கர்மங்களின் பாப புண்ணியத் தொடர்பு விலகிக் கர்ம பந்தம் விலகுகிறது. விரிந்த ஆத்மஸ்வரூபம் தெளிவாகிறது. மாயை மறைகிறது. பேரொளியும் பேரறிவும் பேராற்றலும் கொண்ட பரம்பொருளுடன் தன்னையும் இணைத்துத் 'தன்'னை இழக்கிறான். எல்லா பாசங்களும் தானே மறைகின்றன. துணையாகி நின்று தேவி ஜீவனைத் தளைகளிலிருந்தும் விடுவிக்கிறாள். (354)

1881-01 ஸம்ஹ்ருத-அசேஷ-பாஷண்டா. எல்லா பாஷண்டர்களையும் அழித்தவள்.

1881-02 பாஷண்டர்கள் - வேஷம் போடுபவர்கள்; வேதத்தைப் பிரமாணமாகக் கொண்டவர்களாகத் தம்மைக் காட்டிக் கொண்டு வேதத்திற்கு மாறுபட்ட பொருளைக் கூறுபவர்கள்; வேதம் முதலியவற்றில் கூறியுள்ளபடி நடக்காதவர்கள்; தத்தம் தர்மத்தை மீறியவர்கள். (பாகண்டர்கள் எனவும் இவர்களைக் கூறுவதுண்டு. அதனால் ஸம்ஹ்ருதா சேஷபாகண்டா என்ற பாடபேதமுமுண்டு. பா-வேதம் அதன் கருத்து. கண்டர்-துண்டாடியவர். தன் விருப்பப்படி வேதத்தை ஒடித்தும் பிரித்தும் பொருள் கூறி நியாயம் காட்டுபவர்கள்,) அவர்களை ஒடுக்கியவள் தேவி. வேதமார்க்கத்தை எல்லோரும் பின்பற்றக் கட்டளையிட்டாள். (நா. 287) அந்த மார்க்கத்தில் நம்பிக்கையின்மையைக் காட்டி வழி தவறுபவர்களைக் களை பிடுங்குவதுபோல் அகற்றி விடுகிறாள். (355)

**1882-01** ஸதாசார-ப்ரவர்த்திகா. நல்வழியில் நடத்தி வைப்பவள்.

**1882-02** ஸதாம் ஆசார : - ஸதாசார: – ஆசார: – நல்லதென அறிந்து நம்பி வாழ்நாள் முழுவதும் கையாளப்பட்ட நன்னடத்தை ஆசாரமாகும். நல்லோர்களது ஆசாரம் ஸதாசாரம். ஸந் ஆசார: உயர்ந்த ஆசாரம், நிலைத்திருக்கக் கூடிய ஆசாரம். ஸத: ப்ரும் ஹண: ஆசார: - ஸத்யமான பரம்பொருளை நாடும் ஆசாரம். ஸதா சாரம் நன்கு நடைபெறுமாறு தூண்டி அதனை நடத்தி வைப்பவள் தேவி.

**1882-03** வேதங்கள் நான்கு, அவைகளின் அங்கங்கள் 6, புராணம், நியாயம், மீமாம்ஸை, தர்மசாஸ்திரம் ஆகிய 14 வித்யாஸ் தானங்களில்* முதல் 11 ஸ்தானங்களால் 'இதனைச் செய்' 'இதனைச் செய்யாதே' என மார்க்கத்தைக் காட்டுகிறாள். அந்த வழியில் நடக்கும் மேதாவிக்கு ஏற்படக்கூடிய ஐயங்களை, யுக்தி மூலம் வேதப் பொருளை விமர்சிக்கும் நியாயம் மீமாம்ஸை என்ற இரு சாஸ்திரங் களால் போக்குகிறாள். செய்யவேண்டிய தர்மத்தின் நடை முறையை தர்ம சாஸ்திரங்கள் மூலம் காட்டுகிறாள். ஸதாசாரம் இப்படி அமையவேண்டுமென வழி வகுத்து அதன்படி நடக்கத் தூண்டிவிடுகிறாள். அதன்படி நடப்பவர்களுக்கு ஏற்படும் இடர் களைக் களைந்து எறிகிறாள். துணைநின்று வழியின் எல்லைவரை அழைத்துச் செல்கிறாள் தேவி.

**1882-04** ஆசாரம்-வாழ்நாள் முழுவதும் கடைபிடிப்பது நல்ல தென அறிந்து, இடர்கள் ஏற்படினும் தளராமலும் வழுவாமலும் கடைபிடிப்பதாகும். (ஆ - ஸமந்தாத்-முடிவு வரை, சார:–நன்ன டத்தையாக ஏற்றுக்கொள்ளப்பட்டது.) புறத் தூய்மைக்கும் உள்ளத் தூய்மைக்கும் பயன்படுபவை அனைத்தும் அதில் அடங்கும். ஸத் - ஸத்துக்கள் - பெரியோர்கள். ஸத் - நிலைத்திருப்பவர்கள். அவர்கள் மறைந்த பிறகும் வழிகாட்டியாக வாழ்வதால் நிலைத்திருக் கிறார்கள். அப்படி வழிகாட்டியாக என்றும் வாழ்பவர்களானதால், பெரியோர்களை 'ஸத்' எனக் குறிப்பிடுகிறோம். அவர்கள் கடை பிடித்த வழியானதால் ஸதாசாரம். **(356)**

---

* *18 வித்யாஸ்தானங்கள் எனக் கூறுவது உண்டு. (பாரா. 0106). அவைகளில் உபவேதங்களை நீக்கி மற்றவைகளை 14 வித்யாஸ் தானங்கள் என்று குறிப்பிடுவர். உபவேதங்களாகிய காந்தர்வம் (ஸங்கீதம்) தனுர்வேதம், ஆயுர்வேதம், அர்த்தசாஸ்திரம் என்ற நான்கும் பொதுவித்யைகளல்ல-சிலர் மட்டுமே இதனைக் கற்க முடியும். அதனால் இந்த நான்கைச் சேர்ப்பதில்லை.*

79 तापत्रयाग्निसन्तप्तसमाह्लादनचन्द्रिका । 357
तरुणी तापसाराध्या तनुमध्या तमोऽपहा ॥ 361

தாபத்ரயாக்நிஸந்தப்தஸமாஹ்லாதந சந்திரிகா ।
தருணீ தாபஸாராத்த்யா தநுமத்த்யா தமோ(அ)பஹா ॥

1883-01 தாப-த்ரய-அக்நி-ஸந்தப்த ஸமாஹ்லாதந-சந்த்ரிகா. முத்தாபங்களின் கனலால் வாட்டப்பட்டுள்ளவர்களுக்கு மன அமைதி தரும் நிலவானவள்.

1883-02 ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என மூன்று தாபங்கள்-தாபத்திரயம். தனக்குத்தானே தந்துகொண்ட தாபம் **ஆத்யாத்மிகம்**; பிறராலும் விலங்கு முதலியவைகளாலும் ஏற்பட்ட தாபம் **ஆதிபௌதிகம்**. மனித சக்திக்கு மீறிய மழை இடி காற்று மின்னல் முதலியவற்ருல் ஏற்படுவது **ஆதிதைவிகம்**. இம்மூன்றும் நெருப்புபோல் மனிதனை வாட்டுகின்றன. தாபமாகிற கனலே ஸம்ஸாரத்தின் சின்னம். அதனுல் நன்கு வாட்டப்பட்டவர்களை (ஸந்தப்த) வாட்டம் நீங்கியவர்களாக்குகிருள் (ஸமாஹ்லாதனம்) தேவி நிலவுபோல். துன்பம் உடலையும், மனத்தையும் வாட்டும். குளிர்ந்த ஸ்பர்சமும் சாந்தியும் ஏற்படுத்துவதே தாபம் தணிவதற்கான உபாயம். நிலவு மன அமைதியைத் தந்து மன வாட்டத்தைப் போக்கும். குளிர்ந்த தனது கிரணங்களால் உடல் தாபத்தையும் போக்கும். தேவி நிலவுபோல் ஸம்ஸார தாபத்தைப் போக்குகிருள். (357)

1884-01 தருணீ. நித்ய யுவதி யாயிருப்பவள்.

1884-02 வளர்ச்சியும் தேய்வும் அற்றவள் தேவி. (நா-344) பால்யம் வளரும் பருவம்; முதுமை தேயும் பருவம். இவ்விரண்டு பருவங்களும் தேவியிடம் கிடையாது. உற்பத்தியுண்டானுல் வளர்ச்சி உண்டு. அழிவதானுல் தேய்வுண்டு. தேவி ஆதியும் அந்தமுமற்றவள். (நா. 296) நித்யையான (நா-136) தேவி, பூர்ண, (நா-292). எப்போதும் நிறைவு பெற்றவள். அதனுல் நிறைவு துலங்கும் யௌவனம் ஒன்றையே பருவமாகக்கொண்டு நித்திய யுவதியாக இருப்பவள் தேவி. (358)

1885-01 தாபஸ-ஆராத்த்யா. தவத்திலிருப்பவர்களால் வழிபடப்பட்டவள்.

1885-02 தவத்திலுள்ளவர்கள் தனது தவத்தால் காணத்தக்க பிரும்ம ஸ்வரூபிணியான தேவியை உள்ளத்திலும் வெளியிலும் வழிபடுகிருர்கள். தாப-ஸார-ஆத்த்யா. தாபமே உருவான

ஸம்ஸாரத்தில் ஸாரமாக பலம் தருவது அவளது தியானம். (ஆத்த்யா-முழுமைபெற்ற தியானம்) அப்படி ஸாரமாகத் தியானிக்கப்பெறுபவள் தேவி. (359)

**1886-01 தநு-மத்த்யா. மெல்லிடையாள்.**

1886-02 தேவியின் இடை மிகவும் மெலிந்தது. அதனுல் அவள் தநுமத்த்யா. (நா. 35-36) காஞ்சியில் பில்வேசுவரரது சக்தியாக தநுமத்த்யா என்ற பெயருடன் விளங்குபவள் தேவி.

1886-03 தநுமத்த்யா என்பது தகணம் யகணம் இவ்விரண்டாலும் அமைந்த பாதத்துடன் கூடிய யாப்பு- "மாம் பாது நிவாயா:, தீரே நிவஸந்தீ. பில்வேச்வரகாந்தா தேவீ தநுமத்த்யா." இது தநுமத்த்யா விருத்தத்தில் அமைந்த தநுமத்த்யா தேவியைப் பற்றிய பிரார்த்தனை. இது காயத்திரீ சந்தஸ்ஸில் அமைந்தது. சந்தஸ்ஸுகளில் காயத்திரீ இறைவனின் விபூதி என கீதை கூறுகின்றது. "காயத்திரீ சந்தஸாமஹம்". (10-35) காயத்திரீ சந்தஸ் 24 எழுத்துக்கள் கொண்டது. அதை வடிவாகக் கொண்டவள் தேவி. (பா 2140-02) அதில் அடங்கிய தனுமத்த்யா விருத்தம் பாதத்திற்கு 6 அக்ஷரங்களாக 24 அக்ஷரங்கள் கொண்டது. தநுமத்த்யா விருத்தத்தைத் தன் வடிவாகக் கொண்டவள் தேவி. (360)

**1887-01 தமோ-அபஹா. இருளைப்போக்குபவள்.**

தம: இருட்டு. அஞ்ஞானமே இருட்டு. அறிவொளி வீசி அஞ்ஞான இருளை அகற்றுபவள் தேவி. (361)

80 **चितिस्तत्पदलक्ष्यार्था चिदेकरसरूपिणी ।** 364
**स्वात्मानन्दलवीभूतब्रह्माद्यानन्दसन्ततिः ॥** 365

**சிதிஸ் தத்பதலக்ஷ்யார்த்தா சிதேகரஸரூபிணீ ।**
**ஸ்வாத்மானந்த-லவீபூத-ப்ரும்ஹாத்யாநந்தஸந்ததி: ॥**

**1888-01 சிதி:. ஞான வடிவினள்.**

1888-02 அஞ்ஞான இருளைப்போக்கவல்ல ஞானமே உருவானவள் தேவி. வாழ விரும்புபவர்களுக்கு வாழ்வின் ஒளியாக இருப்பது ஞானம். மற்றதன் உதவியை எதிர்பாராமல் தன்னியல்பாகப் பொருளை அறிய உதவுவது ஞானம். உலகம் தோன்றக் காரணமானது ஞானசக்தி-தேவியின் சித்சக்தி. அதன் வடிவானவள் தேவி. (பா-1703-02) (362)

**1889-01 தத்-பத-லக்ஷ்ய-அர்த்தா. தத் என்ற சொல்லின் லக்ஷ்யப்பொருளாக இருப்பவள்.**

1889-02 தத் த்வம் அஸி என்ற உபநிடத மகாவாக்கியம் ‘அது நீயாக இருக்கிறாய்’ எனக்கூறிப் பிரும்மத்திற்கும் ‘நான்’க்கும் வேற்றுமை இல்லை என விளக்குகிறது. தத்-அது. உலகைப் படைத்துக் காத்து ஒடுக்கும் சக்தியுள்ளதென முன் விவரிக்கப்பட்டுள்ள ‘அது’-பிரும்மமே. சிற்றறிவும் சிற்றாற்றலும் பெற்ற ஜீவனை நீயாக இருக்கிறாய் என்பது அதன் சொல்லின் நேரிடைப்பொருள் (வாச்ய அர்த்தம்). அது பொருந்தாது. பேரறிவுபெற்றதும் சிற்றறிவு பெற்றதும் ஒன்றாகாது. இப்படிப் பலதரப்பட்ட வேற்றுமை கொண்ட இரண்டை ஒன்றெனக் கூறும்போது நேரிடைப் பொருள் பொருந்தாதாகையால், இலக்ஷணையால் இங்கு வேறு பொருள் கூறுகிறோம். சிற்றாற்றல் சிற்றறிவு முதலியது ஜீவனின் தர்மம். அத்தர்மங்கள் கொண்டமையால் ஜீவன் தர்மி. பேராற்றல் பேரறிவு முதலியது பிரும்மத்தின் தர்மம். அத்தர்மங்கள் கொண்டமையால் பிரும்மம் தர்மி. தர்மியான பிரும்மத்தை மட்டும் இங்கு லக்ஷணையால் பொருளாக எடுத்துக்கொள்கிறோம். தர்மத்தை விட்டுவிடுவோம். தர்மமற்ற தர்மி கேவலன். சுத்தப்பிரும்மம். அதுவே ‘தத்’ என்ற சொல்லின் இலக்ஷணையால் கூறும் பொருள். த்வம் என்ற இடத்திலும் சிற்றாற்றலும் சிற்றறிவுமாகிய ஜீவதர்மத்தைவிட்ட கேவலனை சுத்த ஆத்மாவை நீ என்று லக்ஷணையால் குறிப்பிடுவோம். தர்மமற்ற கேவலமான பிரும்மமும் தர்மமற்ற கேவலமான ஆத்மாவும் ஒன்றே. இப்படி லக்ஷணையால் கூறப்பட்ட லக்ஷ்யப் பொருள் பொருந்துகிறது. இப்படி தத் என்ற சொல்லின் லக்ஷ்யப் பொருளாக கேவல-பிரும்மஸ்வரூபிணியாக இருப்பவள் தேவி.

1889-03 தேவதத்தன் ராமனின் நண்பன். ராமன் தேவதத்தனைப் பார்த்து 30 வருடங்களாயிற்று. 30 வருடங்களுக்கு முன் தேவதத்தன் 20 வயதுடைய இளைஞன். அன்றைய உருவமைப்பு அதற்கேற்ப அமைந்திருந்தது. இன்று பார்க்கப்படும் தேவதத்தன் முதியவன். உருவமைப்பில் முற்றிலும் மாறுபட்டவன். இன்று பார்த்ததும் ராமனுக்கு ‘அந்த தேவதத்தன் தான் இவன்’ என்று புரிகிறது. அந்த தேவதத்தனை வேறாகவும் இந்தத் தேவதத்தனை வேறாகவும் காட்டுவது அன்றிருந்த இளமையும் இன்றிருக்கும் முதுமையும். இளமையும் முதுமையும் தேவதத்தனின் தர்மங்கள். அவனைத் தனித்து அடையாளம் காட்டக்கூடியவை. அந்த தர்மங்களோடு கூடின தேவதத்தன், இவன்தான் என்பது “அந்த தேவதத்தன்தான் இவன்” என்ற சொற்றொடரில் உள்ள ‘அந்த-இவன்’

என்ற இரு சொற்களின் நேரிடைப் பொருள். இளைஞனே முதிய வன் எனக் கூறுவது பொருந்தாது. அதனால் இளமை முதுமை போன்ற தர்மங்களை விலக்கி அன்று (கேவல-தனித்த-தர்மமற்ற) தேவதத்தனாயிருந்தவனும், இன்று (கேவல-தனித்த-தர்மமற்ற) தேவதத்தனாயிருப்பவனுமான தர்மியை மட்டும் எடுத்துக் கொண் டால் பொருத்திப் பார்க்கமுடியும். அப்போதுதான் அவனே இவன் எனக் கூறுவது பொருந்தும். அப்படியே தத்-த்வம் என்ற இரண் டையும் பிரித்துக்காட்டக்கூடிய தர்மங்களை விலக்கி, இரண்டிலும் ஒன்றாகத் தோன்றும் தர்மியான ஆத்மஸ்வரூபத்தை மட்டும் கொள்வது லக்ஷணை என்ற பொருள் காணும் முறையால் இயலும். அப்படி லக்ஷணையால் தத்–என்ற சொல்லிற்குப் பொருளாக அறியப்பட்டவள் தேவி.

1889-04 'தெப்பக்குளத்தில் குடியிருக்கிறேன்' என்றான் ஒருவன். குளத்தில் குடியிருக்க இயலாது. அதனால் நேரிடை யான பொருள் இங்கு கொள்ள முடியவில்லை. இந்நிலையில் குளத் தின் அருகில் அமைந்த தெப்பக்குளம் என்ற ஊரில் அல்லது தெரு வில் குடியிருப்பதாக லக்ஷணையால் பொருள் கொள்ளவேண்டி நேருகிறது. தேவியின் உண்மை நிலைக்குப் பொருந்தாத சில தோற்றங்களாகத் தேவியை அறிய நேரும்போதும், அதன் வெளிப்படையான தோற்றத்தைப் புறக்கணித்து உட்பொருளாக நிற்கும் தேவியின் உண்மை நிலையைப் புரிந்துகொள்வது லக்ஷணா முறையால் இயலும். (363)

**1890–01 சித் - ஏக - ரஸ – ரூபிணீ. ஞானத்துடன் ஒன்றிய வடிவமுள்ளவள்.**

1890–02 தேவிக்குப் பல தோற்றங்கள் உண்டு. அவை அனைத்தும் சித் என்ற ஞானசக்தி வடிவமானவையே. சர்க்கரை யாலான பொம்மைகள் பல தோற்றங்களிலிருந்தாலும் அவைகளின் ஒவ்வோர் அணுவும் சர்க்கரையாலானது. ஒவ்வோர் அணுவும் இனிக்கும். தோற்றங்கள் தான் மாறுபாடுள்ளவை. அதுபோல் தேவி எந்த வடிவிலிருந்தாலும் அதன் ஒவ்வொரு துளியும் 'சித்' ஆல் ஆனதே, சித்துடன் ஏகரஸமாக ஒரே (சுவை-சாரம்)தன்மை யுள்ளதாக உள்ள ரூபம் உள்ளவள் தேவி. ஞான வடிவம் எனும் போது, ஞானமாகிய வடிவு வேறு, வடிவுள்ள அவள் வேறு என்ற எண்ணம் தோன்றக்கூடும். அவள் வடிவான சித்திற்கும் அவளுக் கும் எத்தகைய வேறுபாடும் கிடையாது. அது ஏகரஸமானது. (364)

1891-01 **ஸ்வ-ஆத்மா-ஆநந்த-லவீபூத-ப்ரும்ஹாதி-ஆநந்த-ஸந்ததி:. தனது ஸ்வருபமாயுள்ள ஆனந்தத்தின் ஒரு துளியாகப் பிரும்மாதி தேவர்களின் ஆனந்த வரிசையைச் செய்தவள்.**

1891-02 தேவி ஆனந்தவடிவினள். அவளது வடிவமாக உள்ள ஆனந்தம் கடல் போன்றது. மனிதன், தேவர்கள், இந்திரன் பிரஜாபதிகள், பிரும்மா, இவர்களது ஆனந்தம் அளவுக்குட்பட்டது. மனிதனின் ஆனந்தத்தைவிட மனுஷ்ய கந்தர்வர்களின் ஆனந்தம் 100 மடங்கு அதிகமானது. மனுஷ்ய கந்தர்வர்களது ஆனந்தத்தை விடத் தேவகந்தர்வர்களின் ஆனந்தம் 100 மடங்கு அதிகமானது. இப்படி வரிசையாக பித்ருக்கள், ஆஜானஜ தேவர்கள், கர்ம தேவர்கள், இந்திரன், பிருஹஸ்பதி, பிரஜாபதி, பிரும்மா இவர்களது ஆனந்தம் முன்னதைவிடப் பின்னது 100 மடங்கு அதிகமானது. இவைகளுள் பிரும்மாவின் ஆனந்தமே அதிக அளவுள்ளது. (தைத்திரீய உபநிஷத்-2-8) தேவியின் ஸ்வருபமான ஆனந்தம் கடல் போன்றது. பிரும்மாதிகளின் ஆனந்தம் அதிலுள்ள ஒரு துளி போலிருக்கும். பிரும்மாதிகளின் ஆனந்தம் ஆனந்தத்தை தரும் ஒன்றை எதிர்பார்க்கும். ஆனந்தத்தைத் தரும் பொருளின் சக்தியையும் அளவையும் அதனை ஏற்கும் பிரும்மாதிகளின் மனத்தின் நிலையையும் பொறுத்து ஆனந்தம் அமையும். ஆகையால் அது அளவுக்குட்படுகிறது. அளவற்ற - கலப்பற்ற-ஆனந்தமே தேவி. (365)

## அதிகாரம் 19

# தேவியின் ஒலி வடிவங்கள்

1901-01 பராசக்தி செயல்படும் முறை : இச்சாசக்தி ஞான சக்தி கிரியாசக்தி என்ற தேவியின் சக்திகள் மூன்றும் ஸங்கல்பமும் மூலப்ரகிருதியுமாகி உலகைத் தோற்றுவித்தன. (பாரா 1708) சக்தி வடிவமாகத் தேவி வெளிவந்ததை மேலும் விளக்குவோம். ஸச்சிதானந்தப் பேரொளி வடிவத்திலிருந்த பரம்பொருளிடம் உலகை மீண்டும் படைப்பதற்கான ஸங்கல்பம் ஏற்படக்காரணமான ஸ்புரணம்-துடிப்பு ஏற்பட்டது. அத்துடிப்பு பிரும்மத்தின் சக்திகள் அனைத்தும் திரண்டவடிவமாக 'பராசக்தி'யாக வெளிப்பட்டது. அது ஆறுவகைகளில் பிரிந்து உலகின் மூலக் கருத்தோற்றத்திற்கான செயலில் ஈடுபட்டது.

1901-02 பரா (1) ஒலியின் மூல சக்தியாக உள்ளது. இதிலிருந்தும் பச்யந்தீ மத்யமா வைகரீ என்ற நிலைகளில் பரிணாமமடைந்து ஒலி நம் காதில் விழத்தக்கதாகிறது.

1901-03 இச்சாசக்தி (2) தேவியின் ஸங்கல்பமாக முதலில் வெளிப்பட்டுச் செய்தல், செய்வித்தல், உதவுதல், எதிர்த்தல், சும்மாயிருத்தல் என்ற ஐந்து செயல்களைத் தூண்டும் விருப்பமாக வடிவெடுத்தது. (கர்தும் காரயிதும் உபகர்தும் ப்ரதிகர்தும் உதாஸிதும் ச)

1901-04 ஞானசக்தி (3) படைக்க வேண்டியவைகளைப் பற்றிய முன்னறிவாக ஏற்பட்ட ஞானசக்தி பின்னர் இரு வகையில் பிரிந்தது. ஸாலம்பஜ்ஞானம்–அறிபவன் அறியப்படும் பொருள் அறிவு என்ற மூன்றையும் பற்றிக்கொண்டு விளைந்த அறிவு. (ஆலம்ப: – பற்றுக்கோல், ஊன்றுகோல். ஞானத்திற்கு அறிபவன் முதலிய மூன்றும், பிடித்து எழ உதவும் பற்றுக்கோடாக அமைவதால், இது ஸ–ஆலம்ப–ஞானம்) இதுவே ஸாகார ஞானம். மற்றொன்று நிராலம்பஜ்ஞானம்–பற்றுக்கோடற்ற தனித்த உள்ளுணர்வு வடிவானது. இதில் நான் நீ என்றவாறு விளக்கமுடியாத வடிவம் பிரதிபலிக்கக் கூடும். நிராகாரஜ்ஞானம் என்றும் இதனைக் கூறுவர். இது அஹங்காரத்துடன் கலந்து மனத்தையும் ஞானேந்திரியங்களையும் படைத்தது. (பா. 1708-05)

1901-05 கிரியாசக்தி (4) இச்சாசக்தியில் தோன்றி ஞானசக்தியால் விளக்கம் பெற்றுச் செயலாகப் பரிணமிக்கும் மூன்றும் சக்தி இது. மூலப்பிரகிருதியாக வெளிவந்து, மஹத், அஹங்காரம் ஆகிய மூலப்பொருளாகி, அஹங்காரத்தில் தனிப்பட்டுக் கலந்து, ஐந்து கர்மேந்திரியங்களையும் பிராணனையும் தோற்றுவித்தது. (பாரா. 1708-06)

1901-06 குண்டலிநீசக்தி (5) தனித்தனி உடலின் எல்லா சக்திகளுக்கும் மூலக்கருவாகி நின்று உடல் முழுவதும் பரவி, சக்தி அனைத்தையும் உடலில் துடிக்கச் செய்வது இது. (பாரா. 1201)

1901-07 மாத்ருகா (6) ஒலிக்குப் பற்றுக்கோடாக நின்று அதனை விளக்கி உலகியல் நடைபெற உதவும் 50 அக்ஷர வடிவில் அமைந்த சக்தி.

1901-08 இந்த ஆறு சக்திகளில் பரா என்ற ஒலியின் மூல சக்தி பற்றிய விளக்கத்தை 366-371 நாமங்களில் விளக்குகிறார்கள்.

81 परा प्रत्यक्चितीरूपा पश्यन्ती परदेवता। 369
मध्यमा वैखरीरूपा भक्तमानसहंसिका॥ 372

பரா ப்ரத்யக் சிதீரூபா பச்யந்தீ பரதேவதா ।
மத்த்யமா வைகரீரூபா பக்தமாநஸ ஹம்ஸிகா ॥

1902-01 பரா. பரா எனும் மூல ஒலி வடிவினள்.

1902-02 உலகத்தோற்றத்தை வரிசைப்படுத்திக் காட்ட வந்த தைத்திரீய உபநிடதம், பரம்பொருளிலிருந்து முதலில் ஆகாயமும், ஆகாயத்திலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து அக்கினியும், அக்கினியிலிருந்து ஜலமும், ஜலத்திலிருந்து பிருதிவியும் தோன்றின என்று கூறுகிறது. ("தஸ்மாத் வா ஏதஸ்மாத் ஆத்மந ஆகாச: ஸம்பூத:। ஆகாசாத் வாயு:। வாயோரக்நி:। அக்நேராப:। அத்ப்ய: ப்ருதிவீ ॥" 2-1) இது ஒரு வகையான விளக்கம். அவ்யக்தம், மஹத், அஹங்காரம் என்ற தோற்ற வரிசையில் (பா-1708-03) அஹங்காரத்திலிருந்து ஐந்து தன்மாத்திரங்கள் தோன்றும்போது அந்த தன்மாத்திரங்கள் அமைந்த வரிசை இது. தைத்திரீயத்தில் முன் குறிப்பிட்ட ஆகாயத்தைத் தோற்றுவித்த பரம் பொருளானது அவ்யக்தம், மஹத், அஹங்காரம் என்ற மூன்று நிலைகளை அடைந்ததாகும்.

1902-03 முதலில் தோன்றியது ஆகாயம். தன்மாத்திர நிலையில், அதன் குணமான ஒலி (சப்தம்) ஒன்றே அதன் வடிவம். ஆகாயம் என்ற ஸூக்ஷ்ம பூதமும் அதன் தனிச்சிறப்புள்ள சப்தம் என்ற குணமும் என்று இரண்டாகப் பிரித்தறிய முடியாத நிலை அது. சப்தம் எனும் பூத சக்தியையே வடிவமாகக் கொண்டதால் சப்த தன்மாத்திரம் என்று இந்த முதலில் தோன்றிய ஆகாயத்தைக் குறிப்பிடுவர். ஒரு பொருளின் ஸ்தூலத் தோற்றம் அதன் வடிவம். அது புலப்படக்கூடியது. புலப்படாதபடி அதன் உள் அமைந்தது ஸூக்ஷ்மமான அதன் சக்தி. எந்தப் பொருளின் சக்தியையும் பொறிகளால் உணர முடியாது. சக்தி கொண்ட பொருளின் ஸ்தூல வடிவமே பொறிகளுக்கு அகப்படுவதாகும். ஸூக்ஷ்மத்திற்கும் காரணமான அதிஸூக்ஷ்மநிலை சக்தியாகவே இருக்கும். ஆகாசத்தின் சக்தி சப்தம். மிக ஸூக்ஷ்மமான ஆதித் தோற்றத்தில் சப்தமெனும் சக்தி வடிவில் ஆகாயமிருந்தது. ஐந்து பூதங்களுக்கும் முதலானது ஆகாயம். அதனால் அது பரம். அதன் சக்தியான சப்தம் பரா. இதுவே மற்றப் பூதங்களுக்கும் பூத சக்தி

களுக்கும் தோற்றுவாய். இந்த பூத சக்தி பொறிகளுக்கு அகப்ப டாதாகையால் அவைகளுக்கு அப்பாற்பட்டது. அதனுல் பரா. அந்த பரா எனும் ஒலி நம் காது கேட்கும்படியாக ஆக அடையும் மாறுதல்களை இனி விளக்குவோம்.

1902-04 மூலக்கரு நிலையில் உள்ள ஒலி பரா. பரம்பொரு ளிடம் பிரளய காலத்தில் ஒலி அனைத்தும் அஹங்காரம், மஹத், பிரகிருதி என மூலக்கருவாக மாறி அடங்கியது. ஸ்ருஷ்டி ஆரம் பத்தில் பிரகிருதி, மஹத், அஹங்காரம் என்ற வரிசையில் வெளி வந்த அந்த பரா எனும் ஒலி பிந்து வடிவில் வெளிப்பட்டது. அதனைக் காரண பிந்து என்பர். அதில் ஒலியின் பல வடிவங்கள் நெருக்கம்மிக்க நிலையில் திரண்டு, பிரித்தறியமுடியாதபடி இருந்தன. சிறு ஆலம் விதையில் பெருத்த ஆலமரமாக விரிவ டைய வேண்டிய பலபகுதிகள் அடங்கி, உட்பிரிவுகள் பிரித்தறிய முடியாதபடி காணப்படுவதுபோல்.

1902-05 கரு தோன்றுமுன், ஆணின் பிந்துவும் பெண்ணின் நாதமும் கலந்து பீஜநிலையை அடைகின்றன. ஒலியின் காரண பிந்துவில் உள்ள சிவாம்சம் பிந்துவாகவும், சக்தியம்சம் நாதம் ஆகவும் பிரிந்து பின் இணைந்து சிவசக்தியம்சமான பீஜம் ஆகிறது. காரண பிந்துவான ஒலி, அவ்யக்தமானது. பிந்து, நாதம், பீஜம், என்ற பரிணமம் பெற்று அது வியக்தமாகவேண்டும். விதையை விதைப்பதற்கு முன் நீரில் ஊறவைப்பர். அதனுல் விதை உப்பி விரிவடையவேண்டிய பகுதிகள் மலர்ந்து விரிவடையத் தகுதி பெறும். அப்படி உப்பிய விதை நிலையிலுள்ளது பரா எனும் வாக்கு. எல்லா சக்திகளும் தனிமனிதனிடம் அவ்யக்த நிலையிலிருந்து வியக்த நிலைக்கு வருவதற்கு ஏற்ற இடமாக மூலாதாரத்தை அமைத்துக்கொள்கின்றன. குண்டலிநீ அவ்விதம் மூலாதாரத்தி லிருந்து வெளிப்படுவதை முன்னர் பார்த்தோம். ஒலியும், தான் வெளிப்படத்தக்க இடமாக மூலாதாரத்தையே அடைந்தது. பிராண சக்தி வடிவான மூச்சுக் காற்றின் உதவிகொண்ட வாயுவானது பேச விரும்புபவனின் (இச்சா சக்தியின்) முயற்சியால் சலன மடைந்தது. அந்த சலனத்தின் மூலம் அவ்யக்த நிலையிலுள்ள ஒலியை வியக்த நிலைக்குக் கொணர்ந்தது. "தேஹே அபி மூலாதாரே அஸ்மிந் ஸமுதேதி ஸமீரண:| விவக்ஷோரிச்சயா உத்தேன ப்ரயத் நேந ஸுஸம்ஸ்க்ருத:| ஸ வ்யஞ்ஜயதி தத்ரைவ சப்தப்ரம்ஹணி ஸர்வகம்" இப்படி வாயுவின் உதவிகொண்டு வியக்த நிலைக்கு வரவிருக்கும் அவ்யக்தமான சப்தப் பிரும்ம நிலையிலுள்ள காரண

பிந்துவானது பரா வாக் எனப்படுகிறது. மூலாதாரத்திலுள்ள வாயு வின் தூண்டுதலால் பிந்து, நாதம், பீஜம் என்ற விரிவை அடைய அது நாபிக்குச் செல்லவிருக்கிறது. விரிவடையவேண்டுமென்ற இச்சாசக்தி தூண்ட விரிவடையத் தயாராக இருக்கும் மூலகாரணப் பொருளாக-காரண பிந்துவாக-பராவாக மூலாதாரத்தில் விளங்கு பவள் தேவி.

1902-06 வெளிப்படையாகவிருக்கும் பச்யந்தீ, மத்யமா, வைகரீ என்ற மூன்று நிலைகளுக்கும் அப்பாற்பட்டிருப்பதனுலும் இன்ன தென விளக்கமுடியாதபடியால் மனத்திற்கும் வாக்கிற்கும் எட்ட முடியாமல் இருப்பதனுலும், பரா-அப்பாற்பட்டவள்.

1902-07 ஸ்ரீ பராநந்தநாதர் என்ற குருவிற்கு முதலில் விளங் கியவளானதால் அவரால் முதலில் பரா என அறிமுகப்படுத்தப் பெற்றவள். (பராவாக அவளை அறிந்ததனுல் அவர் பராநந்தர் ஆனுர்.) (366)

**1903-01 ப்ரத்யக்-சிதீ-ரூபா. உள்நோக்கால் கண்ட பேரறிவு வடிவினள்.**

1903-02 பரா எனும் வாக்கு, பேரறிவு வடிவானது. உள் நோக்கால் மட்டுமே அறியக் கூடியது. உள்நோக்கு ப்ரத்யக். வெளிநோக்கு பராக். இது இயற்கையை ஒட்டியது. இதற்கு உதவும் பொறிகளும் அவை வழியே அறிய முயலும் மனமும் வெளிநோக்கிற் கேற்றவாறு அமைந்தவை. அந்தப் பொறிகளுக்கு வெளிநோக்கு அனுகூலம். (கூலம் – ஆற்றங்கரை, அனுகூலம்-கரையை ஒட்டி பிரவாகத்துடன் செல்வது, எளிதானது. தனி முயற்சியின்றி தானே நடப்பது.) உள்நோக்கு பிரதிகூலம் (கரையைவிட்டு விலகிப் பிரவாகத்தை எதிர்த்துச் செல்வது, கடும் முயற்சியால் நடைபெறக் கூடியது. ஆபத்துண்டு). பொறிகளைச் செயலிழக்கச் செய்து மனத்தை உள்திருப்புவது யோகமுறையால் நடைபெறக்கூடியது. இப்படி யோகமுறையால் உள்திருப்பப்பட்ட மனம் காண்பது வடிவமற்ற சித்ஸ்வரூபம் (பேரறிவு). பரா என்ற நிலையில் வாக்கு பிரும்மத்தின் ப்ராசக்தியாக உள்ளது. அதில் பொருள், சக்தி, குணம் என்ற வேறுபாடும் வடிவமும் இல்லை. அதனுல் வடிவமற்ற (நிராகார) ஞானமாக விளங்குகிறது. அப்படி 'ப்ரத்யக்' ஆன 'சிதி' ஆக – பேரறிவாக விளங்குபவள் தேவி. (367)

**1904-01 பச்யந்தீ. ஒலியாக வெளிவருமிடத்தைப் பார்வை யிடும் பச்யந்தீ வடிவினள்.**

1904-02 மூலாதாரத்தில் பிராணசக்தியால் எழுப்பப்பட்ட பரா எனும் ஒலிசக்தியானது, பிந்து, நாதம், பீஜம் என்ற மலர்ச்சித் தொடரைப் பெற விரும்பி, மேல் எழுந்து, நாபிக்கு வருகிறது. விதை உப்பி அதனுள் மறைந்திருந்த மரத்தின் பல்வேறு பகுதிகள் கலகலத்துத் தனித் தனி உருவம் கொள்ளத் துடித்துக்கொண் டிருக்கும் நிலையை ஒத்தது இது. பிரகாசமாயிருந்த (பேரொளியாய் சலனமற்றிருந்த) பரம்பொருளில் விமர்சம் (ஒளியின் சலனம்) ஏற்பட்டதுபோல் இந்தச் சலனமற்றுப் பிரித்தறியமுடியாதிருந்த சப்தப் பிரும்மத்திடம் சலனம் ஏற்பட்டு, மூலப் பிரிவான பிந்துவும் நாதமும் விளக்கம் பெற்று இரண்டும் இணைந்து பீஜமாகியது. காரண பிந்துவானது கார்யபிந்துவாக பீஜமாக விதையாக மாறிற்று. உள் நீர்கோர்த்து உப்பிய விதை வெடித்தது. இது முளைக்க வேண்டும். முளைக்கும் தகுதி வந்துவிட்டதா எனத் தன்னையே உற்று நோக்குவதால் பச்யந்தீ (உற்று நோக்குபவள்) அவள். வெளியே கிளம்ப நினைப்பவள் தன்னை அலங்கரித்துத் தயாரித்துக் கொண்டு ஜன்னல் வழியே செல்லவேண்டிய இடத்தைக் குறித்துக் கண்ணோட்டம் விடுவதுபோல் சப்தப்பிரும்மம்-பரா-தான் அடைய வேண்டிய நிலையை எதிர்பார்த்து நிற்கிறது. இப்படிக் கண் ணோட்டம் விடும் பச்யந்தீ எனும் ஒலி சக்தியாக இருப்பவள் தேவி.

1904-03 "பச்யதி ஸர்வம் ஸ்வாத்மநி கரணாநாம் ஸரணிமபி யதுத்தீர்ணா. தேநேயம் பச்யந்தீ இதி உத்தீர்ணா இத்யபி உதீர்யதே மாதா" "தன்னுள் ஏற்பட்டுள்ள மாறுதல்கள் போதுமானதா எனத் தன்னுள் அனைத்தையும் பார்வையிடுகிருள். (பச்யந்தீ). தான் இனி வெளிவரவேண்டிய இதயம் தொண்டை நாக்கு முதலிய அவயவ வரிசையையும் பார்வையிடத் தனது இருக்கையிலிருந்து வெளிவருகிருள். (உத்தீர்ணா). அதனல் இந்த நிலையிலுள்ள பரா வாக் சக்தியை பச்யந்தீ எனவும் உத்தீர்ணா எனவும் கூறுவர்" (368)

1905-01 பர-தேவதா. பொறிக்கு அப்பாற்பட்டு ஒளிமய மாக விளங்குபவள்.

1905-02 தேவதா-ஒளிமயமாக விளங்குபவள். இன்னமும் இதன் தோற்றம் வடிவாகி விளக்கப்பெறவில்லை. பரா-பொறிகள் ஏற்கும் நிலைக்கும் முந்திய நிலையிலிருப்பவள். இந்த ஒலி இன்ன மும் தேவதா-தெய்விக நிலையிலேயே இருக்கிறது. மனிதனது ஒலியாக மாறவில்லை. அந்த தெய்வ ஒலி வடிவில் பொறியால் ஏற்கப்படும் நிலைக்கு முந்தியவளாக இருப்பவள் பச்யந்தீ என்ற ஒலிவடிவில் உள்ள தேவி. (369)

1906-01 மத்த்யமா. நடுநிலையடைந்த ஒலியானவள்.

1906-02 சப்தப் பிரும்மம் மூலாதாரத்திலிருந்து கிளம்பி நாபியை அடைந்து அங்கு மலர்ந்து பீஜமாகி, வெடித்துத் தன்னுள் மறைந்திருந்த ஒலி வடிவை விரிவாக வெளிப்படுத்த நினைத்து, விரிவடையத்தக்க இடமும் அனுஹதம் எனும் நாதம் எழும் இடமுமான இதயத்தை அடைந்து, 'மத்த்யமா' ஆகிறது. ஒன்றோடொன்று மோதுவதால் ஒலி ஏற்படுகிறது. வாத்யங்களின் ஒலி, விரல் முதலியவை வாத்யத்தின் கம்பி முதலியவைகளில் மோதுவதால் எழும்பும். உள்ளிருந்து வெளியாகும் காற்று தொண்டை, அண்ணம், நாக்கு, உதடு, மூக்கு முதலியவற்றில் மோதி எழுத்தொலியாக வெளியாகிறது. இவை அனைத்தும் ஆஹதம்-மோதுவதால் ஏற்படுவது. இந்த ஆஹத ஒலிக்கு மூலமானது அநாஹதம்-மோதுவதால் ஏற்படாத இயற்கை ஒலி. ஒலி விளக்கம் பெற ஆஹனனம் (மோதுதல்) உதவுகிறது. இந்தச் செயற்கை உதவி தேவையில்லாமல், மூலாதாரத்திலிருந்து கிளம்பிய ஒலி சக்தி, இதயத்தில் அனுஹதமாக-இயற்கையான ஒலியாகக் கேட்கிறது. இதனை நாதம் என்பர். இந்த ஒலி எப்போதும் கேட்கும். இந்த ஒலியை (நாதத்தை)க் கேட்க யோகப்பயிற்சி தேவை. இந்த அனுஹத ஒலி வெளியாகுமிடமான ஸுஷும்னு காண்டத்தில் அமைந்த சக்கிரத்திற்கு அநாஹத சக்கிரம் என்றே பெயர். அனுஹத ஒலியாக நிச்சயமாக வெளிவந்துவிட்ட ஒலி மத்த்யமா. இந்த நிலையை அடைந்த ஒலி இனி வாய்வழியே வெளிவராமல் இருக்க இயலாது. முன்னதான பச்யந்தீ எனும் நிலையைத் திரும்ப அடையமுடியாது. விதை வெடித்து முளை பிரிய ஆரம்பித்தபின் முளைக்கவேண்டுமே தவிர விதை நிலையை மீண்டும் அடைய முடியாது. விதை வெடித்து உள்ளே முளை ஏற்பட்டுப் பிரிந்து விட்ட நிலை இது. முளை இன்னமும் வெளித்தோன்றவில்லை.

1906-03 "பச்யந்தீவ நகேவலம் உத்தீர்ணு, நாபி வைகரீவ பஹி: I ஸ்புடதாநிகிலாவயவா வாக்ரூபா மத்த்யமா தயோரஸ்மாத்"II "பச்யந்தீ போல் செல்லுமிடத்தை முன்பார்வையிடுவதுடன் நிற்காதவள், தனது அடுத்த நிலையாகிய வைகரீ போல் முழுவதும் வெளிவராதவள், தனது அவயவங்கள் அனைத்தும் நன்கு பிரிந்து விளக்கம் பெறத்தக்க நிலையில் உள்ளவள் - இந்த நடு நிலையில் உள்ள வாக்கு மத்த்யமா எனப்படும்." (370)

1907-01 வைகரீ-ரூபா. காதுக்குக் கேட்கும் ஒலி வடிவினள்.

1907-02 மத்த்யமா நிலைக்கு வந்த சப்தப் பிரும்மம் அதனை எழுப்பிக் கொணர்ந்துவந்த வாயுவின் வேகத்தால் துரிதமாக வெளியேறும்போது தொண்டை, அண்ணம் நாக்கு பற்கள் உதடு இவைகளில் மோதி 'அ' முதலிய எழுத்துக்களின் 'வடிவைப் பெறுகிறது: இந்நிலையில் அது காதுகளால் உணரப்பெறுகிறது.

1907-03 இதயத்திலிருந்து தொண்டை வழியே ஒலியைக் கொணரும் வாயுவிற்கு விகரன் எனப்பெயர். விகரன் என்ற வாயுவால் வெளியானபடியால் வைகரீ.

1907-04 வை-தீர்மானமாக, இது இன்னதென்று நன்கு புரியும்படியாக, க-(காதாக அமைந்த) ஆகாயத்தை, ரீ-அடைந்தது வைகரீ எனப் பொருளும் உண்டு. காதினுள் உள்ள வெட்டவெளி (ஆகாய) காது எனும் இந்திரியமாகும். தூலமாக உள்ளும் வெளியிலும் உள்ள காது-அதன் பொறி.

1907-05 வி-சிறப்பாக, கர:—கடினத் தன்மை பெற்ற எழுத்தின்-விகரத்தின்-ஒலி, வைகரீ. காற்று வடிவமாக நெருக்கமற்றிருந்த ஒலி, குறுகிய வாயில் வழியே மோதி வருவதால் நெருக்கமடைந்து இறுகிச் சொல் வடிவம் பெற்றுள்ளதால் வைகரீ.

1907-06 விதை முளைவிட்டு விரிந்து வெளியேறி மரமாகத் தோன்றவிருக்கிறது.

1907-07 ஒலி தொண்டையிலிருந்து கிளம்புகிறதென்று பொதுவாக நாம் கருதுகிறோம். பேச விரும்புபவனது நினைப்பு காரணமாகப் பிராண சக்தி மூலாதாரம் வரை பாய்ந்து அங்கிருந்து பரா எனும் ஒலி சக்தியைக் கிளப்பிப் பச்யந்தீ, மத்த்யமா, வைகரீ என்ற மூன்று நிலைகளை அடையச் செய்கிறது என்ற பூர்ணமான ஒலி வடிவம் இந்த ஆறு நாமங்களால் விளக்கப்பெற்றது. (371)

(இவ்வதிகாரத்தின் தலைப்பில் கொடுக்கப்பட்டுள்ள 81-ஆம் சுலோகத்தின் கடைசி நாமம் பொருள்கிரமம் பற்றி அடுத்த அதிகாரத்தைச் சேரும்.)

## அதிகாரம் 20

# தேவி அமரும் பீடங்கள்

2001-01 பக்த-மானஸ-ஹம்ஸிகா. பக்தர்கள் மனமாகிற மானஸ ஸரஸ்ஸில் அழகிய அன்னப்பேடுபோல் விளங்குபவள்.

2001-02 பனிமலையான இமயத்தின் உயர்ந்த பகுதியில் மானஸஸரஸ் என்ற ஓடை இருக்கிறது. அதில் அன்னபட்சிகள் வசிக்கும். மிகத்தூய நீரில் விருப்பம் கொண்ட அவை வேறிடத்தில் வசிக்கப் பிரியப்படுவதில்லை. மானஸம் மிகத் தெளிந்த நீருடையது. ஆதலால் அன்னங்கள் அங்குதான் வசிக்கும். தேவியும் ஒரு அன்னப்பேடு. அவள் வசிக்கத்தக்க மானஸ ஓடையாகப் பக்தர்களின் மனத்தைத் தேர்ந்தெடுத்தாள். பக்தர்கள் மனம் அன்பால் மிகத் தூய்மையானது. மிகத் தூய்மையான அடியார்களின் மனத்தையே மானஸ ஓடையாக மதித்து அதில் அன்னப்பேடுபோல் மகிழ்ந்து உலவுகிறுள் தேவி. தேவி அமரும் பீடங்களில் அடியார்களின் மனம் முதலிடம் பெறுகிறது. (372)

82 कामेश्वरप्राणनाडी कृतज्ञा कामपूजिता । 375
शृंगाररससंपूर्णा जया जालन्धरस्थिता ॥ 378

காமேச்வரப்ராணநாடீ க்ருதஜ்ஞா காமபூஜிதா 1
ச்ருங்காரரஸஸம்பூர்ணு ஜயா ஜாலந்தரஸ்திதா 11

2002-01 காமேச்வர-ப்ராண-நாடீ. காமேசுவரரது உயிர் நாடியாக விளங்குபவள்.

2002-02 காமேசுவரரது உயிர் நிலையாக இருப்பவள் தேவி. அமிருதத்தை உண்டும் பிரளய காலத்தில் தேவர்கள் மறைகின்றனர். அமிருதத்திற்காகப் பாற்கடலைக் கடையும்போது முதலில் உண்டான விஷத்தைக் கண்டு மற்றவர் பயந்து ஒதுங்க, தேவி பிராண நாடியாக இருக்கும் தைரியத்தால், சிவன் விஷத்தைக் கவளம்போல் மென்று சாப்பிட்டார். மரணத்தைக் கொடுக்கும் விஷம் தன் தன்மை இழந்தது. காமேசுவரனை வாழவைத்தப் பிராண சக்தி தேவி. காமேசுவரரின் பிராணுசயத்தில் தங்குபவள் தேவி. (பிராணுசயம்-பிராணன் தங்குமிடம்). (373)

2003-01 க்ருதஜ்ஞா. செய்ததை அறிந்தவள்.

2003-02 உலகில் வாழ்பவர் அனைவரும் செய்யும் ஒவ்வொன்றையும் தேவி அறிவாள். செய்த செயல் நல்லதா கெட்டதா என அறிவாள். சூரியன், சந்திரன், யமன், காலம், ஐந்து பூதங்கள் ஆக ஒன்பது சாக்ஷிகள், மக்கள் ஒவ்வொருவரும் செய்யும் வினைகளைக் கண்காணிக்கின்றனர். அவரவர் செய்த வினைகளைக் கணக்கிட்டு அததற்கேற்ற பலனைக் குறிப்பிடுகின்றனர். இந்த ஒன்பது சாக்ஷிகளாக இருப்பவள் தேவி. நற்செயல்கள், கெட்ட செயல்கள் நடக்குமிடங்களில் ஸாக்ஷியாக இருப்பவள் தேவி.

2003-03 செய்த வினைகளைப் பற்றி அறிவதால் அதற்கேற்ற பின்விளைவுகளை வகுப்பவள் தேவி. தெய்வ நியதி-தெய்விகச் செயல் முறை எனும் சக்கிரத்திற்கு உதவக்கூடிய நற்பணிகளைச் செய்பவர்களுக்கு நற்பயனைத் தருகிருள். கிருதஜ்ஞா – செய்நன்றியுள்ளவள்.

2003-04 கிருதம் எனும் யுகம் அளவுகடந்த ஆற்றலும் அறிவும் பூர்ணத்துவம் பெற்றிருக்கும் காலம். கிருதயுகத்தில் இருந்ததுபோல் பூர்ண ஞானம் பெற்றவள் தேவி. (க்ருதே இவ ஜ்ஞா)

2003-05 சூதாட்டத்தில் கிருதம், திரேதா, த்வாபரம், கலி என்று நான்கு ஆட்ட முறைகள் உண்டு. அவைகளில் பெரிது கிருதம். அந்த ஆட்டம் தெரிந்தவள் தேவி. சிவனுடன் தேவி பொழுதுபோக்காகச் சூதாடுவது உண்டு. தேவி கிருத ஆட்டம் அறிந்தவளானதால் தேவி தான் ஜெயிப்பாள். சூதாட்டம் ஒரு கலை. அவள் 64 கலை வடிவானவள் (பா. 1638). அதனுல் சூதாட்டத்திலும் தேர்ச்சி பெற்றிருக்கிருள் தேவி.

2003-06 க்ருதம்-செயல் வரை, ஜ்ஞா–அறிவுள்ளவள். காரியம் நிறைவேறும் அளவிற்கான அறிவுள்ளவள். தொடங்கிய செயல் நடுவே நிற்பது அறிவின்மையால். செயல் முடியும்வரை ஏற்படும் விளைவுகளை அறிவால் முன்னதாகவே அறிந்து அதற்கேற்பச் செயல் புரியும் அறிவாற்றல் தேவி. (374)

2004-01 காமபூஜிதா. மன்மதனுல் வழிபடப்பெற்றவள்.

2004-02 காம:-மன்மதன். ரதியிடம் உள்ள அன்பினுல் (பா. 1842-02) மன்மதனைத் தேவி பிழைக்கவைத்தாள். தனக்கு மறுவாழ்வளித்த தேவியைக் காமன் வழிபட்டான். காமன் வழிபட்ட இடம் காஞ்சி. காமகோட்டம், காமகோடி, காமபீடம் என்ற அதன் பெயர்களும், காமனிடம் அருள்நோக்கு கொண்டுள்ளதைக் காட்டும் காமாக்ஷீ (0912-02) என்ற தேவியின் திருநாமமும் காமனின் வழிபாட்டுச் சிறப்பை விளக்குகின்றன. தேவியின் வாத்ஸல்யம் காரணமாகப் பன்னிருதேவி உபாஸகர்களிடையே மன்மதனும் இடம் பெறுகிருன். (1640-02) காமன் தவமிருந்து தேவியை வழிபட்டுத் தேவியின் அருளைப்பெற்று சிவனை ஜயித்தான். அதனுல் சிவஜித்-க்ஷேத்திரம் என்று காஞ்சிக்கு ஒரு பெயர் உண்டு. இப்படி காமே-காமபீடத்தில், பூஜிதா-பூஜிக்கப்பெற்றவள், காமேந-மன்மதனுல், பூஜிதா—பூஜிக்கப் பெற்றவள் தேவி.

2004-03 தேவியின் முக்கிய பீடங்கள் 51. பஞ்சாசத்பீடரூபிணீ. (நா. 833) அவைகளில் பாரதத்தின் தெற்கேயுள்ள காம பீடமும், மேற்கேயுள்ள ஜலந்தர பீடமும், வடக்கேயுள்ள பூர்ணகிரி பீடமும், கிழக்கேயுள்ள ஒட்டியாண பீடமும் மிகச் சிறப்புப் பெற்றவை. காம பீடத்தை இந்த நாமம் குறிக்கிறது. மற்ற பீடங்களை அடுத்து வரும் 376, 378, 379 நாமங்கள் குறிக்கும். ஸதீ தேவியின் காஞ்சி (அரைஞாண் தரிக்கும் பகுதி) இந்த இடத்தில் விழுந்ததாகக் கூறுவர்.

2004-04 இந்த நான்கு பீடங்களும் நம் உடலாகிய க்ஷேத்திரத்தில் உள்ள நான்கு சக்கிரங்களைக் குறிப்பிடும். காம பீடம்–மூலாதாரம், பரா எனும் வாக்கின் ஸ்தானம். பூர்ணகிரி-மணிபூரகம், பச்யந்தீ எனும் வாக்கின் ஸ்தானம், ஜாலந்தரம்-அனுஹதம் மத்யமாவின் ஸ்தானம். ஓட்யாணம்-விசுத்தி, வைகரியின் ஸ்தானம். அதனுல் மூலாதாரமாகிய காம பீடத்தில், காஞ்சியிலுள்ள காம பீடத்தில் காமனுல் பூஜிக்கப் பெற்றவள் தேவி.

2004-05 தேவியை வழிபட்டதால் நாராயணன் மோகினி வேடம் ஏற்று சிவனை மயக்கினுர். நாராயணனின் மகன் மன்மதன். தந்தை சிவனை வெற்றிகண்டது போல், மன்மதனும் தேவியின் வழிபாட்டின் சிறப்பால், சிவனையும் மகாயோகிகளையும் கலக்கினுன் என ஸௌந்தர்யலஹரி 5-6 சுலோகங்கள் கூறுவதையும் இதனுடன் ஒப்பிடலாம்.

2004-06 தன்னைச் சிவனுடன் சேர்த்து வைப்பதற்காகத் தன்னையே மன்மதன் இழந்தான் என்பதை தேவி அறிந்தவள்-க்ருதஜ்ஞா. அந்த நன்றி யுணர்வால் காமனது வழிபாட்டை ஏற்று அவனுக்கு எல்லாப் பெருமைகளையும் தருகிருள். அவனது வில்லையும் அம்பையும் தானும் ஏந்தி நிற்பவளாக உலகிற்குக் காட்டுகிருள். 'க்ருதஜ்ஞா'விற்கு அடுத்த நாமமாக 'காமபூஜிதா' வருவது அப்படியும் பொருந்துகிறது. (375)

2005-01 ச்ருங்கார-ரஸ-ஸம்பூர்ணு. சிருங்கார ரஸம் நிறைந்திருப்பவள்.

2005-02 வடிவழகு மிக்க தேவி லலிதா, மனத்தில் சிருங்கார ரஸம் நிறைந்தவளாகக் காணப்படுகிருள். 'காமபூஜிதா' ஆக இருப்பவள் சிருங்கார ரஸம் நிறைந்திருப்பவளாக இருப்பது இயற்கைதானே ! சிருங்காரமாகவே இருக்கும் தேவியை வழிபட்டுக் காமன் காமத்தைத் தூண்டும் சக்தியைப் பெறுகிருன்.

2005-03 சிருங்காரம், வீரம், கருணம், ரௌத்திரம், பீபத்ஸம், ஹாஸ்யம், அத்புதம், பயானகம், சாந்தம் என ஒன்பது ரஸங்கள். வீரம் முதல் மற்ற எட்டும் சிருங்காரத்தின் பின் விளைவுகளே. எழுத்துக்கள் அனைத்தும் 'அ' என்ற முதல் எழுத்தின் மாறுபட்ட தோற்றங்களே. சுவைகளனைத்தும் இனிப்பின் மாறுபாடுகளே. சிருங்காரம், அகாரம், இனிப்பு முதலியன முதலில் தோன்றியவை யாதலால் பின் மலர்ந்து பல உருவங்களை எடுத்துக் கொள்கின்றன. அதனால் முதலில் தோன்றிய சிருங்கார ரஸம் நிரம்பியவளானதால் மற்ற ரஸங்களும் இவளிடம் நிரம்பி இருக்கும் எனக் கொள்ளலாம்.

2005-04 பூர்ண கிரி எனும் பீடத்தை 'ஸம்பூர்ணம்' என்ற தொடரால் குறிப்பிடுகிறார்கள். பூர்ண-நிரம்பியது. எதனால் என்ற கேள்விக்கு 'ச்ருங்காரரஸ' என்ற தொடர் விடையளிக்கிறது. சிறந்த மனக்களிப்பைத் தரும் சிருங்காரரஸத்தால் நிரம்பிய பூர்ண கிரி பீடமாக (பா. 2004-03) இருப்பவள் தேவி.

2005-05 மணிபூரக சக்கிரமாகிய பூர்ணகிரி பீடம், சிருங்கார ரஸம் நிரம்பிய ஸ்தானம். அதில் நிறைந்திருப்பவள் தேவி. (376)

**2006-01 ஜயா. ஜயாவாக இருப்பவள்.**

2006-02 வராஹசைலத்தில் தேவி ஜயா என்ற திருநாமம் பூண்டு விளங்குகிறாள். ஜயம்-வெற்றி. அதன் வடிவானவள் தேவி. மற்றொரு நாமம் விஜயா (பா. 1872) (377)

**2007-01 ஜாலந்தர - ஸ்திதா. ஜாலந்தர பீடத்தில் அமர்ந் திருப்பவள்.**

2007-02 ஜாலந்தரம் என்ற பீடத்தில் 'விஷ்ணுமுகி'யாக விளங்குகிறாள். ஜாலந்தரம் அனாஹத சக்கிரமாகும். (பா. 2004-04) அங்கு அமர்ந்திருப்பவள். (378)

83 ओड्याणपीठनिलया बिन्दुमण्डलवासिनी । 380
रहोयागक्रमाराध्या रहस्तर्पणतर्पिता ॥ 382

ஒட்யாணபீடநிலயா பிந்து மண்டலவாஸிநீ I
ரஹோயாகக்ரமாராத்யா ரஹஸ்தர்பணதர்பிதா II

**2008-01 ஒட்யாண-பீட-நிலயா. ஒட்டியாண பீடத்தைத் தன் இருப்பிடமாகக் கொண்டவள்.**

2008-02 நிலயம்-பிறர் கண்களில் படாமல் ஒய்வெடுத்துக் கொள்ளுமிடம் நிலயமாகும். ஒட்டியாண பீடத்தை நிலயமாகக் கொண்டவள் தேவி. விசுத்தி சக்கிரமும் ஒட்டியாண பீடமாகும். (2004-03, 04.) அங்கு தங்குபவள் தேவி. (379)

**2009-01 பிந்து - மண்டல - வாஸிநீ. பிந்துமண்டலத்தில் வசிப்பவள்.**

2009-02 பிந்துமண்டலம் ஸ்ரீ சக்கிரத்தின் ஒன்பதாவது ஆவரணம். நடுவில் உள்ள சக்தி சக்கிரமாகிய திரிகோணத்தின் நடுவே அமைந்துள்ள ஸர்வாநந்தமய சக்கிரமும் சிவசக்கிரமுமான வட்டமே பிந்து மண்டலம். (பா. 0911-26) உடலில் ஸஹஸ்ரார சக்கிரம் பிந்துமண்டலமாகும். அங்கும் வசிப்பவள் தேவி. (380)

## அதிகாரம் 21

# ஞானயோகத்தால் தேவியின் வழிபாடு

**2101-01 ரஹோயாக-க்ரம-ஆராத்யா. ரகசிய யாக முறையால் வழிபடத்தக்கவள்.**

2101-02 தேவி வழிபாட்டில் நியாஸங்கள் செய்து ஸாமான்ய-விசேஷ அர்க்ய-பாத்திரங்கள் முதலியவைகளை அமைத்து வழிபட்டபின் தேவியை ஆவாஹனம் செய்வதற்கு முன் தன்னிடமுள்ள தோஷங்களைக் களையவேண்டும். அதற்கான முறை இந்த ரஹோயாகம். இதனைப் புண்யாதிஹோமாஷ்டகம் என்பர். இது பாவனையால் நடக்கும் ஒரு ஹோமம், மூலாதாரத்தில் கேசத்தின் நுனி போன்ற மிக மெல்லிய வடிவில் குண்டலினீ எனும் என்றும் அணையாத தீ எரிந்துகொண்டிருக்கிறது. அது தானே எரியும். விறகு தேவையில்லை. நமது வாஸனைகளை விறகாக்கி அதில் போட்டுப் பெரிதாக்குகிறோம். இதுவே சிதக்னிகுண்டத்தில் அமைந்த அக்கினிமண்டலம். பாபம், புண்யம், அவை விளைவதற்குக் காரணமான நமது கெட்ட செயல், நற்செயல், செயலாற்றத் தூண்டிய மனத்தின் ஸங்கல்பம்-விகல்பம், அவைகளுக்கும் காரணமானவைகளும் நம்மைத் தனித்தனியே கட்டுப்படுத்துபவைகளுமான தர்ம-அதர்மங்கள், இவை எட்டும் நம்மைத் தேவியிடமிருந்து பிரிப்பவை. இவை அழிந்தால் தான் தேவியுடன் அபேத பாவனையாகிற அந்தர் யாகம் அமையும். அதனால் குண்டலினியில் உள்ள சிதக்னி குண்டத்தில் சிதக்னியில் புண்யம், பாபம், நற்செயல், தீச்செயல்,

ஸங்கல்பம், விகல்பம், தர்மம், அதர்மம் என்ற எட்டையும் ஹோமம் செய்து அவை சாம்பலாகிப் பயனற்றுப் போய்விட்டதாகப் பாவிப்பதே இந்த ஹோமம். பிராணன், புத்தி, தேகம், தர்மம் இவைகளுக்குக் கட்டுப்பட்டு விழிப்பு-சொப்பன-தூக்கநிலைகளில் மனத்தாலும் சொல்லாலும் செயலாலும் கைகளாலும் கால்களாலும் வயிற்ருலும் குறிகளாலும் நினைத்தும் சொல்லியும் செய்தும் விளைந்ததனைத்தையும் பிரும்மமாகிய தேவியிடம் அர்ப்பணம் செய்து ஜோதி வடிவமாக, களங்கமும் பேதமுமற்றவனாக, சிதக்னியாகவே மாறியவனாகத் தன்னைப் பாவித்துக்கொள்ள வேண்டும். ஆத்மாவைக் கட்டுப்படுத்துபவை அனைத்தும் சாம்பலாகிவிட்டபடியால், ஆத்மா பரமாத்மாவுடன் தானே இணைந்துவிடுகிறது. ஆத்மா ஒளிவடிவினன். அவனைச் சட்டைகள்போல் மறைத்திருந்ததனைத்தும் அக்கினியால் அழிக்கப்பட்டன. புடமிட்ட தங்கம்போல் ஆத்மா ஒளிவிடுகிருன்.

2101-03 இதனை ரஹோயாகம் என்பர். ரஹ:- பிறர் அறியாதபடி, யாகம்-வேள்வி. ரகசியமான இடத்தில் செய்யத்தக்கது என்ற பொருளல்ல. பேச்சு, நினைப்பு, செயல், வீடு, துணைவர்கள் முதலிய புறச்சூழ்நிலையிலிருந்தும் ஆத்மாவை ஒதுக்கி, அதனைச் சூழ்ந்துள்ளதனைத்தும் சிதக்னியில்-குண்டலினியில் கனன்றுகொண்டிருக்கும் அறிவுத்தீயில், தன்னளவில் பொசுங்கி மறைந்துவிட்டதாகப் பாவிப்பதால், ரகசியத்தில் நடைபெறுகிற யாகம் இது. பேச்சு முதலிய புறச் சூழ்நிலையில் ஈடுபட்டவன் பலரறிய இருப்பவன். அவன் ஏகாந்தத்தில் அனுபவிக்கத்தக்க சுகத்தை அனுபவிக்கமுடியாது. ஏகன் ஆத்மா. அவன் தனிப்பட்டவன். அவன் மட்டுமிருக்குமிடம் ஏகாந்தம்-தனிமை. ஜனநெருக்கடி உள்ள இடத்திலிருந்தவாறே ஆத்மாவைத் தனித்து உணர்பவன் தனிமையில் ரகசியத்தில் இருக்கிருன். மனிதஸஞ்சாரமே அற்ற இடத்தில் இருந்தால்கூட புறச் சூழ்நிலையால் பாதிக்கப்படுபவன் தனிமையில் இல்லை. தனிமையில் நடக்கும் இந்த யாகத்தினுல் வழிபடப் பெறுபவள் தேவி. (381)

2102-01 ரஹஸ்-தர்ப்பண - தர்ப்பிதா. ரகசியதர்ப்பணத்தால் திருப்தி அடைந்தவள்.

2102-02 புண்ணியம் முதலிய எட்டையும் ஆஹுதி செய்தபின் மறைப்புகள் அனைத்தும் விலகி ஒளிவடிவினனுகிவிட்டதாகத் தன்னைப் பாவனை செய்யவேண்டும். அதற்கான மந்திரங்கள் இரண்டு. "அந்தர் நிரந்தர நிரிந்தநம் ஏதமானே மோஹாந்தகார பரிபந்திநி ஸம்விதக்நௌ I கஸ்மிம்ச்சித் அத்புத மரீசிவிகாஸ

பூமௌ விச்வம் ஜுஹோமி வஸுதாதி சிவாவஸாநம் ll, என்னுள் இடைவிடாமல் விறகின்றி கனன்றுகொண்டிருப்பதும் மோகமாகிய இருட்டிற்கு எதிரியும் வியக்கத்தக்க ஒளி பரப்பிக்கொண்டிருப்பதும் இன்ன தன்மை படைத்தது என அறியமுடியாதிருப்பதுமான ஞான மாகிற அக்கினியில் பூமி முதல் சிவன் ஈருன முப்பத்தாறு தத்து வங்கள் அடங்கிய விசுவத்தை ஹோமம் செய்கிறேன் ''

2102-03 ஹோமமானதும் சொல்லும் மந்திரம் இரண்டாவது. ''ஆர்த்ரம் ஜ்வலதி ஜ்யோதிர் அஹமஸ்மி l ஜ்யோதிர் ஜ்வலதி ப்ரும்ஹாஹமஸ்மி l ஸோ(அ)ஹமஸ்மி ப்ரும்ஹாஹமஸ்மி lஅஹ மஸ்மி ப்ரும்ஹாஹமஸ்மி l அஹமேவாஹம் மாம் ஜுஹோமி ஸ்வாஹா ll, (நான் ஆஹுதியாக இட்டதும் நெருப்பிற்கு எதிரிடை யான குணமுள்ளதும் இதுகாறும் என்னுள்ளிருந்த ஆத்ம ஜோதியை அறியத் தடையாயிருந்ததுமான புண்யம் முதலியவை) ஈரமான பொருளாயினும் அதுவும் கொழுந்துவிட்டெரிகிறதே! அந்த ஜோதியாகவே நான் (ஆத்மா) இருப்பதை உணர்கிறேன். ஜோதிதான் எரிகிறது. அந்தப் பிரும்மமே நான் என்பதை உணர்கிறேன். இப்போதிருக்கும் நானே பிரும்மம். நானே இருக் கிறேன். (மற்றதொன்றையும் காணேம்) நானே இருக்கிறேன். பிரும்மமே நான். பிரும்மமாகிய நான் இதுவரை வேருகியிருந்த 'நான்' ஐ ஆஹுதி செய்துவிட்டேன்". இந்த இரு மந்திரங் களின் பொருளேயும் உணர்ந்து பாவனை செய்தல், பாவனையால் பிரும்மமாக ஆகிவிடுதல் ரஹஸ் தர்பணம் ஆகும். ரகசியத்தில் தனிமையில் பெறும் தர்ப்பணம்-ஆத்மதிருப்தி. அதனுல் திருப்திப் படுபவள் தேவி.

2102-04 விச்வம்-ஜுஹோமி. வி-ச்வம். நாளே இல்லாதது. அவித்யை அநாதி-ஆதியற்றது. ஆனுல் அதற்கு அந்தம்—முடிவு உண்டு. அவித்யையால் ஏற்பட்ட ஸம்ஸார பந்தமும் அநாதி. அதற்கும் முடிவுண்டு. இவ்விரண்டின் முடிவும் பிரும்மஞானத்தால் ஏற்படும். பிரும்மஞானம் என்பது பிரும்மமென்று ஒன்று உண்டு என்று அறிவதல்ல. எங்கும் நிரம்பிய அந்தப் பொருளே'தான்' என்ற உண்மையான உணர்வு பிரும்மஞானம். அந்த ஞானம் ஏற்பட்டதும் பூமி முதலான சிவன் ஈருன 36 தத்துவங்களும் ஞானிக்கு மறைந்து விடுகின்றன. அவனுக்கு அப்போது அவை விசுவம்—நாளே என்பது இல்லாதவை. அதற்குப்பின் அவனிடம் விசுவம்—36 தத்துவங்கள் ஒட்டாது.

2102-05 ரஹஸ் தர்ப்பணத்தால் தேவி திருப்திப்படுகிருள். "ப்ரியோஹி ஜ்ஞாநிந: அத்யர்த்தம் அஹம்; ஸ ச மம ப்ரிய:" "ஞானிக்கு நான் அதிகமாக பிரியமானவன் (ஆத்மாவான தால்). எனக்கும் அவன்தான் பிரியன். (தன்னிடமிருந்து பிரித்த அவித்யையைத் தாண்டித் தன்னைச் சேர்ந்துவிட்டவன் ஆனதால்)" (கீதை 7-17) (382)

84 सद्यःप्रसादिनी विश्वसाक्षिणी साक्षिवर्जिता । 385
षडङ्गदेवतायुक्ता षाड्गुण्यपरिपूरिता ॥ 387

ஸத்ய: ப்ரஸாதிநீ விச்வஸாக்ஷிணீ ஸாக்ஷிவர்ஜிதா ।
ஷடங்கதேவதாயுக்தா ஷாட்குண்யபரிபூரிதா ॥

2103-01 ஸத்ய:-ப்ரஸாதிநீ. உடனே அருள்புரிபவள்.

2103-02 ரஹோயாகம், ரஹஸ்தர்ப்பணம் என்ற இரண்டாலும் உடன் திருப்திப்பட்டு அருள்புரிகிருள் தேவி. பக்தனின் பாவனையை வலிவடையச் செய்து ஆத்மஞானம் ஏற்படச் செய்கிருள். தனது உண்மை நிலையை அவனுக்குக் காட்டுகிருள். இதுகாறும் தெளிவற்ற நிலையில் தன்னைக் கண்டுகொண்டிருந்த பக்தனைத் தனது தெளிவான உண்மை நிலையைக் காணச் செய்கிருள். ஸத்ய:—உடனே ப்ரஸாதிநீ—தெளிவற்றதைத் தெளிவாக்குகிருள். அருள்புரிகிருள். (ப்ரஸாதயதி—ப்ரஸீததி) (383)

2104-01 விச்வ-ஸாக்ஷிணீ. அனைத்திற்கும் சாட்சியாக இருப்பவள்.

2104-02 தேவி உலகைப் பார்க்கிருள். உலகனைத்தையும் தன் வடிவமாகப் பார்க்கிருள். தன் வடிவமான உலகை பார்க்கிருள். உலகமாயும், உலகிற்கு அப்பாற்பட்டவளாயும் இருப்பவள் அவள். தன்னையே பார்ப்பதால் முழுவதையும் அறிவாள். அதற்கு அப்பால் நின்றும் பார்ப்பதால் அதன் ஸுக துக்கம் முதலியதுவந்துவங்களால் பாதிக்கப்படாதவாறு அதனை அறிவாள். அவளது அறிவில் உலகத்தின் சுக துக்கங்கள் முதலியவை யாதொரு பாதிப்பையும் விளைவிக்காது. நடப்பதை (நடந்ததை) நன்கு அறிந்து அதன் பின் விளைவுகளால் பாதிப்புருமல் காண்பவள் தான் சாட்சியாவாள். உலகை முழு நிலையிலும் அறிந்து அதன் விளைவுகளால் பாதிப்புருமல் அதற்கப்பால் நின்று சாட்சியாக இருப்பவள் தேவி. விருப்பும், வெறுப்புமின்றி உண்மை நிலையறிந்து உதவுபவள்.

முழுவதும் அறிபவளானதால் உடன் அருள்புரிய முடியும். முன் நாமத்தை விளக்கவந்த நாமம் இது. விசுவம் தோன்றுமுன்னும், தோன்றியுள்ள நிலையிலும், மறைந்த பின்னரும் அதன் பரிணமங்களைக் காண்பவள் தேவி. (பா. 1634-02) (384)

2105-01 ஸாக்ஷிவர்ஜிதா. சாட்சியற்றவள்.

2105-02 உலகின் சாட்சியான தேவியைக் கண்ட மற்றொரு சாட்சி கிடையாது. எல்லாக் காட்சிகளுக்கும் அவள் ஒருவளே சாட்சி. உலகம் தோன்றுமுன்னும், தோன்றி மறைந்தபோதும் அதன் தோற்ற நிலையிலும் சாட்சியாய் இருப்பவள் தேவி. அவளை முழுவதும் அறிந்தவன்தான் அவளுக்குச் சாட்சியாக இருக்கமுடியும். அவள் ஆதியந்தமற்றவள். அவளே எல்லாத் தோற்றத்திற்கும் காரணம். அவளை முன்னும் பின்னும் இருந்து தொடர்ந்தும் அறிபவராக வேறொருவருமில்லை. (பா. 1634-02) (385)

2106-01 ஷடங்க-தேவதா-யுக்தா. ஆறு அங்க தேவதைகளுடன் கூடியவள்.

2106-02 தேவியின் மந்திரத்தாலான வடிவிற்கு ஆறு அங்கங்கள். ஹிருதயம், சிரஸ், சிகா, நேத்திரம், கவசம், அஸ்திரம், என. (பா. 0310) அவை ஒவ்வொன்றுக்கும் சக்தி வடிவங்களான தேவதைகள் உண்டு. ஹ்ருதய தேவீ, சிராதேவீ, சிகாதேவீ, நேத்ர தேவீ, கவச தேவீ, அஸ்திர தேவீ என. இவர்கள் பிந்து மண்டலத்தில் ஒன்பதாவது ஆவரணத்தில் லயாங்க பூஜையில் வழிபடப் பெறுகிறார்கள். இவர்களோடு கூடி பிந்து மண்டலத்தில் அமர்ந்திருப்பவள் தேவி.

2106-03 ஈசுவரத்தன்மைக்கு ஆறு அங்கங்கள். 1. ஸர்வஜ்ஞதா-எல்லாவற்றையும் அறிந்திருப்பது; 2. த்ருப்தி; - நிறைவு, பூர்ணத்தன்மை; 3. அநாதிபோதம், ஆதியற்ற ஞானம்; 4. ஸ்வதந்த்ரதா - எல்லாவற்றையும் தன்னிஷ்டப்படி நடத்திக் கொள்வது; 5. நித்யம் அலுப்தசக்தி-என்றும் எந்த செயலிலும் குன்றாத சக்தி; 6. அநந்ததா-முடிவின்மை. இத்தன்மை பெற்றவர் ஷடங்க தேவதையான மஹேச்வரன். அவருடன் கூடியவள்.

2106-04 ஈசுவரத்தன்மையான ஸர்வஜ்ஞதா முதலியதற்கு மாறுபட்ட ஆறு தன்மை படைத்தவன் ஜீவன். அவனைக் கட்டுபடுத்துபவை-வித்யை, ராகம், அவித்யை, நியதி, கலா, காலம் என்ற ஆறு தத்துவங்கள். குறிப்பிட்டதொன்றில் விரிவான அறிவு கொடுப்பது வித்யை. அதனால் அவனால் எல்லாமறிந்தவனாக-

ஸர்வஜ்ஞனாக இருக்க முடியவில்லை. ராகம்-ஆசை. அது திருப்தியை-நிறைவைப் பாதிக்கிறது. அவித்யை - ஈச்வரனையும் தன்னையும் பிரித்த அநாதியான அஜ்ஞானம். அது அநாதி போதத் தன்மைக்கு எதிரானது. நியதி-தலை எழுத்து-விதி. அது ஸ்வதந்த்ரத்துடன் தன்னிஷ்டப்படி நடக்கவொண்ணாமல் தடுக்கிறது. கலா-செயல்களில் ஏதேனும் ஒன்றில் தனித்திறமை. இது எல்லாவற்றையும் செய்ய இயலாமல் தடுக்கிறது. காலம-இவனை முடிவிற்கு அழைத்துச் செல்கிறது. ஜீவனைக் கட்டுப்படுத்தும் இந்த மாயா தத்துவங்களிலிருந்தும் விடுதலைப் பெற்று ஈசுவரனாவதே தெய்விக வாழ்வின் பயனாகும்.

2106-05 தேவி வேத வடிவினள். வேதத்திற்கு ஆறங்கங்கள். அவை-சிக்ஷா, வியாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் என. சிக்ஷா—அக்ஷர இலககணம்-அக்ஷரங்களை உச்சரிக்கும் வகை பற்றிய அறிவு நூல்; வியாகரணம்-சொல் இலக்கணம். சநதஸ்—யாப்பு இலக்கணம். நிருக்தம்—பொருள் இலக்கணம். ஜ்யோதிஷம-கால இலககணம். கல்பம்-செயல் இலக்கணம். இவை முறையே வேத மாதாவின் மூக்கு, வாய், கால்கள், காதுகள், கண்கள், கைகள் ஆகிய அங்கங்களாக அமைந்தவை. அதனால் வேதம் ஷடங்கமாகும. • (இந்த ஷடங்கங்களின் துணைகொண்டு புரியும் வேள்வி முதலியவற்றை சடங்கு எனக் கூறுகிறோம்.) அந்த ஆறு அங்கங்களாகிற தேவதைகளுடன் கூடியவள் வேதமாதா. அந்த வேத மாதாவாக இருப்பவள் தேவி. (386)

2107-01 ஷாட்குண்ய-பரிபூரிதா. ஆறு குணங்களால் நிறைவு பெற்றவள்.

2107-02 ஷாட்குண்யம்-ஆறு குணங்களின் தொகை. ஈசுவரத் தன்மை (பா. 2106-03), வீர்யம் (உலகைத் தாங்கும் தன்மை), புகழ், செல்வம், ஞானம், வைராக்யம் என்று ஆறு குணங்கள் 'பகம' எனப்படுபவை (1705-02). இவை ஆறும் நிரம்பியிருப்பவள். அவதாரங்களாகக் கருதப்படும் மூர்த்திகளில் இந்த ஆறில் சிலவற்றின் ஏற்றமும் சிலவற்றின் குறைவும் காணப்படும். தேவியிடத்தில் இவை ஒவ்வொன்றுமே நிறைவுடனுள்ளன.

2107-03 தேவி பேரரசி. (பா. 0602-2, 1832-02). அரசியலுக்கு ஆறு குணங்கள் தேவை. அஸுரர்களோடு போரிடும் போது தேவி தன் சக்திகளில் பலவற்றை மறைத்துக்கொண்டு அவர்களுக்குச் சமமாகத் தன்னைச் செய்துகொண்டு போர்த்திறனைக் காட்டுவாள். அவளுக்கு அது ஒரு லீலை. அரசன் கையாள

வேண்டிய குணங்கள் – போர்த் தந்திரங்கள் ஆறு (1) சண்டை வீணெனத் தோன்றினல் சமனுன அரசனுடன் ஒப்பந்தம் செய்து கொள்ளுதல் ஸந்தி. (2) போர் அவசியமெனத் தோன்றினல் போரிடுவது விக்ரஹம். (3) போரிட எதிரியை எதிர்க்க அவனிடத்திற்கே செல்லுதல்-யாநம். (4) எதிரி தன்னை எதிர்த்து வரும்படி அமைந்திருத்தல்-ஆஸனம். (5) எதிரிகளுக்கிடையே கிளர்ச்சி ஏற்படுத்தி ஒருவருக்கொருவரை மோதவிட்டு எதிரியின் வலிவைக் குறைத்தல்-த்வைதீபாவம். (6) எதிரி பலவானுயின் தக்க துணை நாடுதல்-ஸமாசிரயம். இந்த ஆறு போர்த் தந்திரங்களும் நிறைந்தவள். (387)

85 नित्यक्लिन्ना निरुपमा निर्वाणसुखदायिनी । 390
नित्याषोडशिकारूपा श्रीकण्ठार्धशरीरिणी ॥ 392

நித்யக்லிந்நா நிருபமா நிர்வாணஸுகதாயிநீ I
நித்யாஷோடசிகாருபா ஸ்ரீகண்டார்த்த சரீரிணீ II

**2108-01 நித்ய-க்லிந்நா. எப்போதும் உள்ளக்கசிவுள்ளவள்.**

2108-02 தயையால் தேவியின் இதயம் எப்போதும் ஈரமுள்ளதாக இருக்கும். அங்கு கருணையின் கசிவு எப்போதும் இருந்து கொண்டே இருக்கும். நித்யக்லிந்நா-என்ற சுக்லபக்ஷத்துத் திருதீயா திதியின் நித்யையாகவும் கிருஷ்ண பக்ஷத்துத் திரயோதசி திதியின் நித்யையாகவும் இருப்பவள் தேவி. (388)

**2109-01 நிர்-உபமா. உவமையற்றவள்.**

2109-02 ஒரு பொருளுக்கு எது சமமானதோ அதைவிடச் சிறப்புள்ளதோ, அதுதான் உவமையாகக் கூறத்தக்கது. தேவிக்கு ஈடானவரும் மிக்காருமில்லை. அதனல் யாரையும் உவமையாகக் கூறமுடியவில்லை. (389)

**2110-01 நிர்வாண-ஸுக-தாயிநீ. மோக்ஷசுகம் தருபவள்.**

2110-02 வாணம்-சரீரம். நிர்வாணம் சரீரமற்றது. சரீரத்தின் துணை நாடாதது. (தேவர்களை அசரீரிகள் என்பர். அசரீரியாக வாக்கு ஒலித்தது எனக் குறிப்பிடுவர். தேவர்களுக்கு நம்மைப் போல் பஞ்சபூதங்களாலான சரீரம் கிடையாது. அதனல் அசரீரிகள். அவர்களது பேச்சால் தான் அவர்களிருப்பதை உணர முடியும். சொல்லையே சரீரமாகக் கொண்டவர்களாதலால் கீர்-வாணர்கள் என்றும் கூறுகிறோம் கீர்-சொல்.) மோக்ஷ சுகம் சரீரத்

தொடர்புள்ளவரை கிட்டாது. அது சரீரத் தொடர்பு அற்றதும் உணரக்கூடியது. மற்ற சுகங்கள் சரீரத் தொடர்பிருந்தால்தான் உணரமுடியும். சரீரத் தொடர்பிருந்தால் உணரமுடியாத சுகம் இது ஒன்றே. அதனால் நிர்-வாண சுகம். அதை அளிப்பவள் தேவி. (390)

2111-01 நித்யா-ஷோடசிகா-ரூபா. 16 நித்யைகளின் வடிவானவள்.

2111-02 காமேச்வரீ, பகமாலினீ, நித்யக்லிந்நா, பேருண்டா, வந்ஹிவாஸிநீ, மஹாவஜ்ரேச்வரீ, சிவதூதீ, த்வரிதா, குலஸுந்தரீ, நித்யா, நீலபதாகா, விஜயா, ஸர்வமங்களா, ஜ்வாலாமாலிநீ, சித்ரா, என்று 15 நித்யாதேவிகள் திதிகளாயிருக்கும் சந்திரனின் 15 கலைகள். 16-வது கலையான ஸாதாகலையாயிருப்பவள் ஸ்ரீ லலிதா தேவி. அவள் மஹாநித்யா. இந்த 16 திதிநித்யைகளின் வடிவானவள் தேவி.

2111-03 நித்யைகளில் தேவி பதினாருமவள் - ஷோடசீ. ஷோடசீ என்பதைத் தன் பெயராகவே கொள்கிருள். மற்ற 15 நித்யைகளையும் தினமும் பக்தர்கள் நினைவில் கொள்ளவேண்டும். அப்போதுதான் பதினாருவது நித்யையான தன்னை வழிபடும் தகுதி அவர்களுக்கு ஏற்படும். அதற்காகத் தன்னை நித்யா-ஷோடசிகா-ரூபா-16 வது நித்யை வடிவினளாக ஆக்கிக் கொண்டவள்.

2111-04 சந்திரனது கலைகள் தேய்வதும் வளர்வதும் உண்டு. சுக்லபக்ஷத்து அஷ்டமி என்ருல் 'சந்திரனுக்கு முதல் எட்டு கலைகள் மட்டும் தான் உள்ளது. 9-வது முதல் 15-வது கலைகள் வரை இனி வளரவேண்டும்' என்று பொருள்படும். இது தவருன கருத்து. நித்யைகளாக-அழிவற்ற வர்களாக எப்போதும் திதிகள் இருக்கிருர்கள். 16-வது நித்யை யான தேவி எப்படி அழிவற்றவளோ அப்படி மற்ற 15 திதிகளும் அழிவற்றவை. 16 கலைகள் கொண்ட சந்திரன் எப்போதும் பூர்ணன், நித்யனும்கூட. ஆனால் நம் கண்களுக்குக் குறைவுள்ளவனாகவும் அழிந்துவிடுபவனாகவும் தோன்றுவது ஆவரணத்தால்-மறைப்பால். கலை என்று சந்திரனைப் பிரித்துப் பார்ப்பதே தவறு. சந்திரன் எப்போதும் பூர்ணன். அகண்டமான பொருளைக் கண்டமாக-துண்டு துண்டாகப் பார்ப்பது நமது அஞ்ஞானத்தால் என்பதைக் காட்டவே திதிகளை நித்யைகளாக்கித் தன்னையும் ஷோடசியாக ஆக்கிக்கொண்டவள் தேவி. (391)

2112-01 ஸ்ரீகண்ட-அர்த்த-சரீரிணீ. பரமசிவனைப் பாதி உடலாகக் கொண்டவள்.

2112-02 ஸ்ரீ: என்ற சொல்லுக்கு உள்ள பல பொருள்களில் அழகுள்ளது, விஷம் என்ற இரண்டும் உட்பட்டவை. விஷத்தைக் கழுத்தில் கொண்டமையால் சிவனின் கழுத்து அழகாகத் தோன்றுகிறது. விஷமும் சிவனிடத்தில் அழகாகத் தோன்றுகிறது. (சிலரிடம் அழகே விஷமாகத் தோன்றக்கூடும்.) உலக நன்மைக்காக விஷத்தைப் பருகியதால் கருணை விஷத்தைக் கூட அழகிய பொருளாக்கிவிட்டது. விஷத்தை அழகாகக் கழுத்தில் கொண்ட பரம சிவனது பாதி உடலாக இருப்பவள் அல்லது பரமசிவனைப் பாதி உடலாகக் கொண்டவள் தேவி.

2112-03 அர்த்தநாரீச்வர ரூபத்தில் இடப்பகுதியாயுள்ள தேவியின் கழுத்தும் விஷத்தால் அழகானதே. விஷத்தை அருந்தியதில் அவளுக்கும் பாதிப் பங்கு உண்டு. ஸ்ரீகண்ட - விஷம் கொண்ட கழுத்துள்ள, அர்த்தசரீரிணீ-பாதி உடலைக் கொண்டவள்.

2112-04 ஸ்ரீகண்டனாகிய சிவன் தன் உடலில் தேவியாகிய இடப்பகுதி சிவப்பாகவும் தானாகிய வலப்பகுதி வெளுப்பாகவும் கொண்டவர். ஸ்ரீகண்டனைப் போல் தேவியும் வலப்பகுதி வெளுப்பாகவும் (கௌரீ) இடப்பகுதி கருப்பாகவும் (காளீ) கொண்டவள். (ஸ்ரீகண்டவத் அர்த்தசரீரம் யஸ்யா:) அப்படியும் ஒருவடிவம் தேவிக்கு உண்டு. (392)

86 प्रभावती प्रभारूपा प्रसिद्धा परमेश्वरी । 396
मूलप्रकृतिरव्यक्ता व्यक्ताऽव्यक्तस्वरूपिणी ॥ 399

ப்ரபாவதீ ப்ரபாரூபா ப்ரஸித்தா பரமேச்வரீ ।
மூலப்ரக்ருதிரவ்யக்தா வ்யக்தாவ்யக்த ஸ்வரூபிணீ ॥

2113-01 ப்ரபாவதீ-பிரபை உள்ளவள்.

2113-02 பிரபை-ஒளிவட்டம். 'அணிமாதிபி: ஆவ்ருதாம் மயூகை: அஹமித்யேவ விபாவயே பவாநீம்' என்று தியானம் செய்தோம். (பா. 0401) தேவியின் உடலிலிருந்து வெளியான கிரணங்கள் வடிவெடுத்து அணிமாதிஸித்திகளாகவும் மற்ற யோகினிகளாகவும் தோன்றின. இப்படி பிரித்தறியுமளவில் தனித்தன்மை

பெற்ற ஒளி வட்டம் கொண்டவள் தேவி. மற்றவர்களின் மேனி ஒளி, சாயலாக உடலுடன் சேர்ந்தே காணும். தேவியின் மேனி ஒளி தனித்தும் காணப்படுகிறது. (393)

2114-01 ப்ரபா-ரூபா. பிரபைகளான அணிமா முதலியவர்களின் வடிவிலுள்ளவள்.

2114-02 அணிமா முதலிய சித்திகள் அடங்கிய யோகினிகளின் கூட்டம் தேவியின் மேனி ஒளியின் கிரணங்களாயினும், தனித்த தேவி வடிவங்களாகவே தோன்றுகின்றது. அப்படி அணிமா முதலியவர்களின் வடிவையே தன் வடிவமாகக் கொண்டவள் தேவி. (394)

2115-01 ப்ரஸித்தா. எல்லோராலும் நன்கு அறியப்பட்டவள்.

2115-02 ப்ரஸித்தா-நாம் அறிவதற்கு முன்பே நன்கு பூர்ண உருப்பெற்றவள். அதனால் எல்லோராலும் நன்கு அறியப் பெற்றவள். தேவியை அறியாதவர்கள் பலர் இருக்கிறார்களே என்ற ஐயம் எழும். நான் அவளை அறியவில்லை என்பான் ஒருவன். அந்த ‘நான்’ ஆக இருப்பவளே தேவி தானே! ‘நான்’ ஐ யாவரும் அறிவர். அந்த ‘நான்’ஐத் தேவியாக அறியார் பலர். எல்லோராலும் உணரப்படும் ‘நான்’ ஆக இருப்பதால் தேவி எப்போதும் பிரஸித்தமானவள். (395)

2116-01 பரம-ஈச்வரீ. சிறந்த ஈச்வரி.

2116-02 ஈச்வரத் தன்மையால் மேம்பட்டவள். ஈசுவரத் தன்மை பெற்றவர்களுக்குள் முக்கியமானவள். பர-பரம்பொருளின் மா-சக்தியாகிய ஈசுவரி. (396)

2117-01 மூலப்-ப்ரக்ருதி:. ஆதிகாரணமான பிரகிருதியாயிருப்பவள்.

2117-02 ஸிருஷ்டிக் கிரமத்தை மறுபடி ஐந்து நாமங்களால் விளக்குகிறார்கள் வாக்தேவிகள். பிரகிருதி, பிரகிருதி – விகிருதி, விகிருதி என்று தத்துவங்கள் மூன்று நிலைகளில் உள்ளன. (பா. 1708-01-26)

2117-03 பிரகிருதி - முதற்காரணமான மூலப்பிரகிருதி. இது மற்றவற்றிற்கெல்லாம் மூலகாரணம். இதற்கும் காரணம் (ப்ரக்ருதி) ஒன்றுமில்லை.

2117-04 பிரகிருதி-விகிருதி—தான் ஒன்றிற்குப் பிரகிருதியாகவுமிருந்து கொண்டு, தான் ஒன்றின் விக்ருதியாகவும் (காரியமாகவும்) இருப்பது. ஆகாசம் அஹங்காரத்திலிருந்து தோன்றியதால் விகிருதி. அதுவே வாயுவிற்குக் காரணமாதலால் பிரகிருதி. அதனுல் பிரகிருதியாயும் விகிருதியாயும் உள்ளது. மஹத், அஹங்காரம், தந்மாத்திரங்கள் 5, ஆக 7ம் இந்த வகையைச் சேர்ந்தவை. காரணப் பிரபஞ்சம் இத்துடன் முடிவடைகிறது.

2117-05 விகிருதி—தன்மாத்திரங்களிலிருந்து தோன்றிய மகாபூதங்கள், இந்திரியங்கள், மனம் முதலியவை. இவை எதற்கும் காரணமாகவில்லை. கார்யப் பிரபஞ்சம் இவைகளிலிருந்தும் தொடங்குகிறது. இந்த மூன்று நிலைகளிலும் உள்ள காரண காரியப் பிரபஞ்சமான தத்துவங்களனைத்தும் தேவியே என 397-401 நாமங்கள் விளக்குகின்றன.

2117-06 அவ்யக்தம், பிரகிருதி, தமஸ் எனக் குறிப்பிடப்பெறும் முதல் தத்துவத்திற்கும் மூல காரணமான மாயையாக இருப்பவள். (பா. 1708-01, 10) ஸ்ருஷ்டிக்கும் மூலமாயிருப்பவள். இச்சாசக்தி, கிரியா சக்தி, ஞான சக்தி, குண்டலினி, பரா, மாத்ருகா என்ற ஆறு சக்திகளும் இணைந்த வடிவம். (பா. 1901-02) (397)

2118-01 அவ்யக்தா. அவ்யக்தம் எனும் தத்துவ வடிவினள்.

2118-02 அ-வ்யக்தம் வெளிப்படையாகத் தோன்ருதது. முக்குணங்களும் இருந்தாலும் அவை எதனையும் வெளிப்படையாக விளக்க முன்வராமல் அடங்கியிருக்கும் நிலை. பிரதானம், யோநி, பிரகிருதி, தமஸ் என்று இதற்கு வேறு பெயர்கள் உண்டு. (பா. 1708-01, 10). அவ்யக்தமெனும் தத்துவ வடிவத்தில் தோன்றுபவள் தேவி. (398)

2119-01 வ்யக்த-அவ்யக்த-ஸ்வரூபிணீ. வ்யக்தமாயும் அவ்யக்தமாயுமுள்ள வடிவமுள்ளவள்.

2119-02 அவ்யக்தத்திலிருந்து தோன்றிய மஹத் எனும் தத்துவம் அவ்யக்தத்தைக் காட்டிலும் வெளிப்படையாக ஓரளவு அறியக்கூடியது. எனினும் அதன் முழு உருவம் காண முடியாதபடி அதன் மஹத்துவம்-பெரிதாயிருக்கும் நிலை குறுக்கிடுகிறது. ஓர் அளவிற்கு மேற்பட்ட பெரிய உருவமுள்ளதும் கீழ்ப்பட்ட சிறிய உருவமுள்ளதும் புலப்படாது. ஆகாயமே மஹத்தாக இருப்பதால் புலப்பட்டும் முழுவதும் புலப்படவில்லை. அதற்கும் காரணமான

அஹங்காரமும் மஹத்தத்துவமும் ஆகாயத்தைவிட மகத்தானவை. அதனால் வியக்தமும் அவியக்தமுமாயிருக்கும் நிலையிலுள்ளவை. மஹத், அஹங்காரம், இவைகளின் வடிவில் வெளிப்படையாய் தோன்றியும் தோன்றுமலும் இருப்பவள். (1708-02, 03, 10)

2119-03 மஹத் எனும் வடிவம் பெற்றதால் வ்யக்தம், முழுவதும் புரியாததால் அவ்யக்தம். (ஆவ்யக்தம் என்று பிரிப்பதும் உண்டு. அஹங்காரம் முக்குணப் பிரிவிற்கு இடமளிப்பதால் மஹத்தைவிட பொதுவாக (ஆ) அதிக அளவில் விளங்கும் நிலையிலுள்ளது. அதனால் அஹங்காரம் ஆவ்யக்தம்.) (399)

87 व्यापिनी विविधाकारा विद्याविद्यास्वरूपिणी । 402
महाकामेशनयनकुमुदाह्लादकौमुदी ॥ 403

வ்யாபிநீ விவிதாகாரா வித்யா(அ)வித்யாஸ்வருபிணீ I
மஹாகாமேசநயநகுமுதாஹ்லாதகௌமுதீ II

2120-01 வ்யாபிநீ. எங்கும் பரவுபவள்.

2120-02 அஹங்காரமானது முக்குணங்களின் உதவிகொண்டு பூததந்மாத்திரங்கள், ஞான-கர்மேந்திரியங்கள், மனம், பிராணன், இந்திரிய தேவதை ஆனவற்றைப் படைத்து விராட் ஆகி ஸஹஸ்ர சீர்ஷவதநா, ஸஹஸ்ராக்ஷீ, ஸஹஸ்ரபாத் என (பா. 1808-1809-1810) உலகம் முழுவதும் வியாபித்தது. (பா. 1708-03-10) அது தேவியின் வடிவம். (400)

2121-01 விவிதாகாரா. பல பல வடிவங்களுள்ளவள்.

2121-02 தாவரம், ஜங்கமம், தேவர், மனிதர், பிராணி, மண், கல், புல், பூண்டு என பலவித வடிவங்களைக் கொண்டவள் தேவி. (401)

2122-01 வித்யா - அவித்யா - ஸ்வருபிணீ. வித்தியை அவித்தியை வடிவானவள்.

2122-02 ஆத்மாவை அறிய உதவுவது வித்தியை. ஆத்மஞானத்திற்கு ஸாதனமானவைகளை அறிய உதவுவது அவித்தியை. (இங்குள்ள அவித்தியை என்ற சொல் அஜ்ஞானம் என்று பொருள்படும் அறியாமையைக் குறிப்பிடாது.) அவித்தியையை அபரவித்தியை என்றும் கூறுவர். வித்தியை-ஆத்மஞானமும், ஆத்மஞானத்திற்கு உதவும் உபநிடதம் முதலிய ஆத்மானவைப்

போதிக்கும் நூல்களும். அவித்தியை - கர்ம மார்க்கத்தைப் போதிக்கும் கர்மகாண்டம் முதலியன. கர்மகாண்டத்தில் கூறப்பட்டுள்ள கருமங்களையும் ஈசுவரனுக்கு அர்ப்பணம் செய்யும் கருத்துடன்செய்து வர அதுவும் ஞானத்திற்குத் தேவையான வைராக்கியத்தையும் மனத் தூய்மையையும் அளிப்பதால் வித்தியைக்கு உதவுவதாகக் கருதி அவித்தியை எனப் பெயர் தரப்பட்டது. அவித்தியையால் ஈசுவரார்ப்பண நோக்குடன் செய்த கருமங்கள் கர்ம பந்தத்தை ஏற்படுத்தமாட்டா. அதனுல் அந்த கர்மங்கள் சித்த சுத்தியைத் தந்து ஆத்மஞானம் பெறத் தகுதியை ஏற்படுத்துகின்றன. அந்த வித்தியையாகவும், அவித்தியையாகவும் இருப்பவள் தேவி.

2122-03 வித்தியை—உண்மை அறிவு. அவித்தியை—பிரமை ஏற்படுத்தும் அறிவு. வித்தியை விடுதலை அளிக்கும். அவித்தியை பந்தத்தைத் தரும். தகுதிக்கு ஏற்ப வித்தியையும், அவித்தியையும் ஆக இருப்பவள் தேவி. (402)

2123-01 மஹா-காமேச-நயந-குமுத - ஆஹ்லாத - கௌமுதீ. பெருமைமிக்க காமேசனின் கண்களாகிற அல்லியை மலரச்செய்யும் நிலவுபோன்றவள்.

2123-02 காமம்- பரம்பொருளின் ஆசை- இச்சாசக்தி. நமது ஆசைகள் சிறு எதிர்பார்வைகள். இவை நிறைவேறுவது நிச்சயமில்லை. அது மஹாகாமம், பெருமைமிகக பெருங் காமம். அதற்கு ஈசனுன பரமேசுவரன். அவரது கண்கள் அல்லிப் பூபோல் அழகாகத் தோன்றுகின்றன. தான் மலர்ச்சி அடைவதற்கு நிலவு போன்ற தேவியை அவை எதிர்பார்க்கின்றன. கௌமுதீ-நிலவு. கார்த்திகை மாதத்திய மிகத் தெளிந்த பூர்ணிமை நிலவிற்கும் கௌமுதீ எனப் பெயர். தேவியைக் கண்டதும் மிகவும் மகிழ்ச்சியுற்ற காமேச்வரரின் இரு கண்களும் அன்பால் மலர்ந்து அழகாக விளங்குகின்றன. (403)

88 भक्तहार्दतमोभेदभानुमद्भानुसन्ततिः। 404
शिवदूती शिवाराध्या शिवमूर्तिः शिवङ्करी॥ 408

பக்தஹார்ததமோபேதபாநுமத்பாநுஸந்ததி: 1
சிவதூதீ சிவாராத்யா சிவமூர்த்தி: சிவங்கரீ 11

2124-01 பக்த-ஹார்த-தமோ-பேத-பாநுமத்-பாநு-ஸந்ததி:. பக்தர்களின்- இதயத்திலுள்ள இருளைப் போக்குவதில்

ஒளிக்கதிர் அடர்ந்த சூரியர்களின் வரிசையாக இருப்பவள்.

2124-02 குளிர்ந்த நிலவொளியாகித் தாபத்தை அகற்றும் தேவி, ஒளிமிக்க சூர்யனின் கிரணங்களாகி அக இருளேயும் போக்கு கிருள். பக்தர்களின் இதயத்திலுள்ள இருட்டு- பக்த-ஹார்த-தம:. ஹார்தம்-இதயத்திற்குப் பிடித்தது என்ற பொருளுமுண்டு. இருட்டு அவர்களுக்கு உவப்பானதாயிருக்கக்கூடும். அதனே அவர்களே போக்கிக்கொள்ள விரும்பாவிடினும், இவள் போக்கிவிடுவாள். நாம் விரும்பினுலும் விரும்பாவிட்டாலும் கதிரவன் இருட்டைப் போக்கும் பாங்குடையவன். இருள் தமோகுணத்தின் மறைப்பால் உண்டாவது. தெய்வத்தன்மை உள்ளத்தில் புலப்படாதபடி தமோகுணம் தடுக்கிறது. தமோகுணமே தமஸ்-இருட்டு. தமஸ் நம்மை உணர் வற்றுப் போகும்படி செய்யும். அந்த நிலேயில் நிலவாக இருக்கும் தேவியைவிட (பா.2123-02) சூடுதந்து உணர்வூட்டும் சூரிய ஒளியாயிருக்கும் தேவி அதிகமாக உதவுகிருள். அகத்தில் இருட்டைப் போக்க ஒரு சூரியன் போதாதென, சூர்யர்களின் வரிசையாக இருப்பவள் தேவி. (404)

2125-01 சிவதூதி. சிவனேத் தூதனுகக் கொண்டவள்.

2125-02 தேவி மாஹாத்ம்யத்திலுள்ள வரலாறு-சும்பனுடனும் நிசும்பனுடனும் (சும்பன் – ஆணவத்தால் நன்கு பிரகாசிப்பவன். அசடல்ல. நிசும்பன் சும்பனேவிட வல்லவன்.) போர் புரிவதற்காகக் கௌசிகீ தேவி (பார்வதியின் உடலிலிருந்து வெளிவந்தவள்) ஸிம்ஹத்தை வாஹனமாக்கிப் புறப்பட்டாள். சண்டன் முண்டன் என்ற இரு அசுரதளபதிகள் போரிடவந்தனர். கௌசிகியின் கோப முற்றுச் சிவந்த முகத்திலிருந்து சண்டிகை தோன்றி (காளீ-சாமுண்டா என இவளுக்குப் பெயருண்டு) சண்டமுண்டர்களே அழித்தாள். (நா. 756). சண்டிகையின் சரீரத்திலிருந்து கிளம்பியவள் சிவதூதீ எனும் சக்தி. நூறு நரிகள் ஊளேயிடுவது போன்று கோரமான பேரொலி எழுப்பவல்லவள் அவள். இவள் யுத்தத்தில் கலந்துகொள்ளவந்த சிவபெருமானேத் தூதனுகச் சும்பனிடம் அனுப்பி அவனேத் தேவியிடம் சரணடையும்படி செய்தி அனுப்பினுள். அப்படிச் சிவபெருமானேயே தூதனுக்கிய பெருமையைத் தன் பெயரால் விளக்கிக் கொண்டிருக்கும் சிவதூதியும் தேவியே.

2125-03 தன்னேப்பற்றி அறிவூட்டுவதற்காகச் சிவபெருமானே முன்னறிவிப்பாளராக அனுப்புவாள் தேவி. அவள் அருளால்,

சிவன் ஆசாரியனாகத் திகழ்ந்து தேவீ தத்துவத்தை அடியாருக்கு உபதேசிப்பார். (405)

**2126—01 சிவ-ஆராத்த்யா. சிவனால் வழிபடப்பெற்றவள்.**

2126-02 தேவியின் பன்னிரு உபாஸகர்களுள் சிவன் ஒருவர். அவரால் உபாசிக்கப்பட்ட நான்குகூடங்களுள்ள வித்யையாயிருப்பவள் தேவி. இவளை வழிபட்டதால் சிவன் எல்லா வித்தியைகளுக்கும் சித்திகளுக்கும் ஈசனானான் என பிரும்மாண்ட புராணம் கூறும். ("அதஸ் த்வாமாராத்த்யாம் ஹரிஹர விரிஞ்சாதிபிரபி" ஸௌந்தர்யலஹரீ சுலோ. 1) சிவேந-ஆராத்த்யா, சிவனால் வழிபடப்பட்டவள் தேவி.

2126-03 தேவியும் சிவனை வழிபடுவதுண்டு. மாயூரம், மயிலை, ஜம்புகேசுவரம் முதலிய க்ஷேத்திரங்களில் தேவி வழிபட்டதாக வரலாறு கூறும். அப்படி (சிவ: ஆராத்த்ய: யஸ்யா: ஸா) சிவனை ஆராதிக்கத்தக்கவனாகக் கொண்டவள், சிவனை ஆராதிப்பவள் தேவி. (406)

**2127—01 சிவ-மூர்த்தி:. மங்களமான உருவமுள்ளவள்.**

2127-02 மங்களத்தன்மையையே தன் வடிவமாகக் கொண்டவள் தேவி. மங்களத்தன்மையே வடிவான சிவபெருமானின் உடலாகி நிற்பவள் தேவி. "சரீரம் த்வம் சம்போ:" (ஸௌந்தர்யலஹரீ சுலோ. 34) பரப்பிரும்மமே மங்களம். "ப்ருஹ்ம தந் மங்களம் பரம்". அதனை உருவகப்படுத்துபவள் தேவி. ஆத்மஸ்வரூபமே சிவம். அதுவே மங்களம். ஆத்மஸ்வரூபமாக ஆவதே மோக்ஷம்-விடுதலை. விடுதலையே சிவம். மோக்ஷமாக விளங்குபவள் தேவி. (407)

**2128—01 சிவங்கரீ. மங்களத்தைச் செய்பவள்.**

2128-02 மங்களத்தைச் செய்பவள் (சிவம் கரோதி). மங்களத்தைக் கையில் கொண்டவள் (சிவம் கரே யஸ்யா:). தூய்மையற்றதும் அறிவற்றதும் அழுக்கே வடிவமாகி நிற்பதுமான உடலை-அமங்களமான பொருளை 'நான்' என்று அபிமானித்திருப்பவன் ஜீவன்-அதனால் அசிவன். அவனுக்கு 'நான்' ஆகிய ஆத்மஸ்வரூபத்தை விளக்கி அவித்யை எனும் பாசத்தை அறுத்து விடுவித்து அவனைத் தூய்மைமிக்கதும் ஞானமே வடிவானதும் மங்களமுமான ஆத்மஸ்வரூபமாக-சிவனாக மாற்றுபவள் (அசிவம் சிவம் கரோதி) தேவி. ("ஜீவம் ஏநம் சிவம் வா கரோஷி"-சங்கரரின் தேவீ புஜங்கம், சு-4) (408)

89 शिवप्रिया शिवपरा शिष्टेष्टा शिष्टपूजिता । 412
अप्रमेया स्वप्रकाशा मनोवाचामगोचरा ॥ 415

சிவப்ரியா சிவபரா சிஷ்டேஷ்டா சிஷ்டபூஜிதா I
அப்ப்ரமேயா ஸ்வப்ரகாசா மநோவாசாம் அகோசரா II

2129-01 *சிவப்ரியா. சிவனுக்குப் பிரியமானவள்.*

2129-02 தேவியிடத்தில் அதிகப் பிரியம் கொண்டவர் சிவ பெருமான். (சிவஸ்ய ப்ரியா) தேவி சிவனிடத்தில் அதிகப் பிரியம் கொண்டவள். (சிவ: ப்ரியோ யஸ்யா:) சிவமான மங்களப் பொருள் களில் அதிக நாட்டம் கொண்டவள் (சிவம் ப்ரியம் யஸ்யா:) (409)

2130-01 *சிவபரா. சிவனைப் பரனாகக் கொண்டவள்.*

2130-02 பரன்-மேம்பட்டவன். சிவன் ஒருவரையே தனக்கு மேம்பட்டவராகக் கொண்டவள் தேவி. (சிவ: ஏவ பர: யஸ்யா:). சிவனுக்கு மேம்பட்டவளாக இருப்பதும் உண்டு. சிவஸ்ய பரா ("சிவ: சக்த்யா யுக்தோ யதி பவதி சக்த: ப்ரபவிதும்." ''தேவி துணை புரிந்தால்தான் சிவன் பிரபுவாக ஆகமுடியும்'' 'ஸௌந்தர்ய லஹரி சு. 1) சிவமாகிய பரம்பொருளை விளக்க வந்தவள். (410)

2131-01 *சிஷ்ட-இஷ்டா. சிஷ்டர்களை விரும்புபவள்.*

2131-02 தெய்விக வாழ்க்கை முறையின் கட்டுப்பாடுகளுக்கு அடங்கி நடப்பவர்கள் சிஷ்டர்கள். அவர்களால் தேவி இஷ்டா-வழிபடப் பெறுபவள். சிஷ்டர்களது இஷ்டா – விருப்பமான பொருள். சிஷ்டர்கள் தேவியின் அருளையே நாடுவர். வேதத்தில் கூறப்பட்டவை சிஷ்டம்-வேள்விகள். அவைகளை விரும்புபவள். (சிஷ்டாநி இஷ்டாநி யஸ்யா:) பரம்பரையாக வந்ததும் வேதத்தில் கூறப்பட்டதுமான ஆசாரங்களில் ஈடுபாடுள்ளவர்கள் சிஷ்டர்கள். அவர்கள் தான் தேவிக்கு இஷ்டர்கள் – நெருங்கிய தொடர்புள்ள வர்கள். (சிஷ்டா: இஷ்டா: யஸ்யா: ஸா.) (411)

2132-01 *சிஷ்ட-பூஜிதா, சிஷ்டர்களால் வழிபடப்பட்டவள்.*

2132-02 இஷ்டர்களான சிஷ்டர்களால் வழிபடப் பட்டவள் தேவி. (சிஷ்டை: பூஜிதா) அவளது அருள் பெற்ற சிஷ்டர்கள் எங்கும் நன்கு மதிக்கப் பெறுகிறார்கள், (சிஷ்டா: - பூஜிதா:, யஸ்யா:) (412)

2133-01 அப்ரமேயா-அளவிட முடியாதவள்.

2133-02 ப்ரத்யக்ஷம், அனுமானம், சப்தம் என்ற மூன்று பிரமாணங்களைக்கொண்டு எல்லாவற்றையும் அறிகிறோம். தேவியை நேரில் உணர முடியாது. அதனால் ப்ரத்யக்ஷத்தால் தேவியை அளவிடமுடியாது. முன் அடைந்த அனுபவத்தைக்கொண்டு தான் அனுமானம் துணைபுரியும். தேவியிடம் அத்தகைய அனுபவம் பெற வாய்ப்பில்லை. அறிய வேண்டியதை அறிந்த ஆப்தர்களிடமிருந்து வந்ததானால் சப்தம் துணைபுரியும். தேவியை முழுவதும் அறிந்த ஆப்தர்கள் இல்லை. வேதம் மிகவும் நம்பிக்கையான சொல் படைத்தது-ஆப்ததமம். "மனத்தாலும் சொல்லாலும் அறிய முடியாத தத்துவம்" என அந்த வேதமும் கூறுகிறது. தேவியை நாமறிவதற்குப் பிரமாணங்கள் ஒன்றும் பயன்படவில்லை. அவள் அப்ரமேயா-பிரமாணங்களால் அளவிட முடியாதவள். (413)

2134-01 ஸ்வ-ப்ரகாசா. ஒளியைத் தன் தனித்தன்மையாகக் கொண்டவள்.

2134-02 பார்க்கப்படும் பொருள்களனைத்தும் விளங்க சூரியனின் ஒளி முதலிய ஒளியின் உதவி தேவைப்படுகிறது. ஸ்தூலமான பொருளைத்தான் பார்க்க முடியும். தேவி பார்க்க முடியாத அளவிற்கு ஸூக்ஷ்மமானவள். அவளது தனிப்பட்ட தன்மை (ஸ்வம்) பிரகாசம்-ஒளிதான். அவளது ஒளிகொண்டு உலகை விளக்க முற்படும் ஸூரியன் முதலானோர் அவளை விளக்க இயலாதவர்கள். அவளைத் தவிர மற்றொன்றில்லாமையால், மற்றொன்றால் தேவி விளக்கப் பெறாதவள். அவளே தன்னை விளக்கிக் கொள்ளும் பேரொளியாக இருக்கிறாள். பேரொளியைச் சிற்றொளி விளக்காது. சூரியனைப் பார்க்க மற்றொரு ஒளி பயன் படாது. தேவியாகிற பேரொளியை சூரியன் விளக்குவதும் அவ்விதமே பயன்படாது. "ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ரதாரகம் நேமா வித்யுதோ பாந்தி குதோ(அ)யமக்நி:1 தமேவ பாந்தமனு பாதி ஸர்வம் தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி". "அவளது எதிரில் சூரியன் இருப்பதே தெரியவில்லை. சந்திரன், நக்ஷத்திரங்கள் மின்னல் போன்ற பேரொளி மண்டலங்களும் விளங்கவில்லை எனில் அக்கினி எங்கே தெரியப்போகிறது? (தன்னையே விளக்கிக்கொள்ள முடியாத இவை தனக்குக் காரணமான பரம்பொருளை எப்படி விளக்கப் போகின்றன?) பரம்பொருள் விளங்குவதாலேயே இவைகளும் தான் இருப்பதைக் காட்டிக்கொள்கின்றன. பரம்பொருளின் ஒளியிலேயே இந்த உலகனைத்தும்

விளக்கப் பெறுகின்றன." அது விளக்கப்பெற வேண்டுமாயின் ஒளி வடிவமான அதனைக்கொண்டே அதனை அறியவேண்டும். ஸ்வயம் ஜ்யோதி: - ஸ்வயம் ப்ரகாசமாக இருக்கும் பரம்பொருளே தேவி. (414)

**2135–01** மநோ - வாசாம் – அகோசரா. மனத்திற்கும் வாக்கிற்கும் எட்டாதவள்.

2135–02 மனம் தன் வழியில் படுவதை அறிகிறது. வாக்கு தன் வழியில் படுவதைப் பேசுகிறது. இப்படியே கண் முதலிய பொறிகளும் அதன் வழியில் படுபவைகளை உணர்கின்றன. இவை உணர்வதற்குப் பொருளானது கோசரம்–(அவைகளின் வழியில் படுவது–செல்வது) ஆக இருக்கவேண்டும். தேவி மனம் வாக்கு முதலியவற்றின் வழியில் இருப்பவள் அல்ல. அதனால் அகோசரா. மனம் வாக்கு இவைகளுக்குக் கோசரமாகக் கூடியதொன்றும் தேவியிடமில்லை. அதனால் மநோவாசாம் அகோசரா. அளவிற்குட் பட்டதே அப்படிக் கோசரமாகும். தேவியிடம் உள்ளது அனைத்தும் அநந்தம் - அளவிற்குட்படாதது. (415)

90 चिच्छक्तिश्चेतनारूपा जडशक्तिर्जडात्मिका । 419
गायत्री व्याहृतिः सन्ध्या द्विजवृन्दनिषेविता ॥ 423

**சிச்சக்திச் சேதநாருபா ஜடசக்திர் ஜடாத்மிகா 1**

**காயத்ரீ வ்யாஹ்ருதி: ஸந்த்யா த்விஜப்ருந்தநிஷேவிதா ll**

**2136–01** *சித்-சக்தி:.* **ஞானசக்தி வடிவினள்.**

2136–02 ஞானமே வடிவான தேவியிடம் சிலசமயம் ஞானம் சக்தியாகத் தனித்துப் புலப்படும். அந்த ஞான சக்தியாக இருப்பவள் தேவி. இதுகாறும் அறியாத பொருளை முன்னமே அறிந்த வேறொரு பொருளை அதற்கு உவமையாக்கி விளக்கப்பெறுகிறோம். அப்படி உபமானம் கூறுவதை சித்சக்தி என்பர் யாஸ்கர் என்ற வேத பாஷை இலக்கணம் வகுத்த ரிஷியும் பாணினி என்ற லௌகிக பாஷை இலக்கணம் கூறிய ரிஷியும். அந்த விளக்கப்படி தேவி உவமையால் ஏற்படும் அறிவாக விளங்குகிறாள். அறியாமையைப் போக்கும் உள்ளறிவே சித்சக்தி எனத் தேவீ பாகவதம் கூறும். அது இல்லாவிடில் மனிதன் சவமே. அந்த சித்சக்தி வடிவில் உள்ளவள் தேவி. (416)

**2137-01 சேதநா-ரூபா. உள்ளறிவால் அறியத்தக்கவள்.**

2137-02 அவள் இருப்பதை அறியும் சக்தி அவளே. அவளே எல்லோர் உள்ளத்திலும் உள்ளறிவாக 'சேதநா'ஆக இருக்கிறுள். (சேதநா-சைதன்யம், உள்ளறிவு. சேதநன்-உள்ளறிவு உள்ளவன்) அந்த சேதனு சக்தியால் தான் கண் காது மனம் முதலியவை காட்டுவதை அறிகிரேம். அந்த சேதனுசக்தியை எதனுல் அறிவது ? அதன் இயக்கத்தைக் கொண்டுதான் அதனை அறிய முடியும். அதனை வேருென்றின் உதவியால் அறியமுடியாது. (சேதநயா ரூப்யதே-சேதநாரூபத்வேந) உள்ளறிவின் இயக்கத் தைக் கொண்டு உள்ளறிவு ஒன்றிருப்பதை அறிகிரேம். கண்ணி ருந்தும் பார்க்கமுடியாமல், மனமிருந்தும் நினைக்கமுடியாமல் ஆவது சேதநாசக்தியின் ஒளி, கண் மனம் முதலியவைகளில் படாததால். இந்த நிலையைப் பிறகு கண், மனம் முதலியவற்றில் சேதனுசக்தி பட்டதனுல் ஏற்படும் அறிவைக் கொண்டு ஊகிக்கிரேம். (417)

**2138-01 ஜட-சக்தி:. உலகப்படைப்பிற்குக் காரணமான சக்தியாயிருப்பவள்.**

2138-02 மாயை எனும் பிரும்ம சக்தியானது ஜடம் சேதனம் என இரண்டுவிதமாக உலகைப் பிரித்துப் படைத்தது. ஜடமானது அறிவற்றது, ஸ்தூலம், பார்க்கப்படுவது (த்ருச்யம்). சேதன மானது அறிவுள்ளது, ஸூக்ஷ்மம், பார்க்கும் தன்மை படைத்தது. (த்ருக் - பார்ப்பது - அறிவது) ஜடமானது அபரா ப்ரகிருதி (தாழ்ந்தது) எனவும் சேதனமானது பரா பிரகிருதி (உயர்ந்தது) எனவும் கீதை கூறும். ஸ்தூலமாயும் ஜடமாயும் உள்ள உலகமாக மாறுபாடடைந்த பிரும்ம சக்தியான மூலப்பிரகிருதி ஜடசக்தி யாகிறது. அந்த ஜடசக்தியாயிருப்பவள் தேவி. (418)

**2139-01 ஜட-ஆத்மிகா. ஜடமான பிரபஞ்சத்தைத் தன் வடிவ மாகக் கொண்டவள்.**

2139-02 ஆத்மா-சரீரம். மாயை உலகமாகத் தோன்றிய-மாறுபாடடைந்த நிலை ஜடம். அந்த ஜடத்தைத் தன் வடிவமாகக் கொண்டவள் தேவி. அதனுள் சேதனுசக்தியாக விளங்கு பவள். (419)

**2140-01 காயத்ரீ. காயத்திரியாயிருப்பவள்.**

2140-02 வேதத்தின் தாயென மதிக்கப்படும் காயத்திரீ எனும் மந்திரம் 24 அக்ஷரங்கள் கொண்டது. 24 அக்ஷரங்களுள்ள யாப்பு

காயத்திரி எனப்படும். அந்த மந்திரத்தைப் பாடுபவனை அது காப்பாற்றுவதாலும் (காயந்தம் த்ராயதே) மனத்தை ஆநந்த நிலைக்கு உள்ளாக்கி மெய்மறந்து பாடவைத்துக் காப்பாற்றுவதாலும் காயத்ரீ எனப்படுகிறது. ('காயதி ச த்ராயதே ச—' சாந்தோக்யம்).

2140-03 பத்மபுராணத்தில் ஒரு வரலாறு-பிரம்மா ஒரு வேள்வியினைத் தொடங்க எண்ணித் தன் பத்தியான ஸரஸ்வதியை அதன் தொடக்கத்தில் தன்னுடனிருக்கப்பணித்தார். ஸரஸ்வதி மற்றவர் வருகையை எதிர்பார்த்துச் சற்றுத் தாமதித்தாள். பிரும்மா தாமதத்தைப் பொறுக்கமாட்டாதவராகக் கோபர் குலத்தில் பிறந்த தெய்வசக்தி நிரம்பிய காயத்திரி எனும் பெண்ணை அழைத்துவந்து மணந்து அவளது சகாயத்துடன் வேள்வியை ஆரம்பித்தார். அந்த காயத்திரியே வேதமாதாவான காயத்திரியின் அம்சம். (நாக்கை அடக்கியவர்கள், வேதத்தைக் காப்பவர்கள் கோபர்கள். கோ-வேதம், நாக்கு) அந்த காயத்திரியாக இருப்பவளும் தேவியே. (420)

2141-01 வ்யாஹ்ருதி:. வியாஹ்ருதியாயிருப்பவள்.

2141-02 வ்யாஹ்ருதி:-உச்சரிப்பது. உலகைப்படைக்குமுன் மூன்று வேதங்களிலிருந்தும் அததன் முதல் எழுத்தான 'அ'. 'உ'. 'ம்' என்ற மூன்றைச் சேர்த்துப் பிரணவத்தை பிரும்மா உச்சரித்தார். மூன்று உலகைப் படைக்க எண்ணி இதைப் படைக்கிறேன் என ஸங்கல்பத்திற்காக பூ: புவ: ஸுவ: என உச்சரித்தார். அதன் பின் மூன்று உலகங்களையும் படைத்தார். முதலில் சொன்ன சொற்களானதால் அவை நிலைத்து நிற்கின்றன. மூவுலகங்கள் விரிவடைந்து பூ:, புவ:, ஸுவ:, மஹ:, ஜந:, தப:, ஸத்யம் என்ற சொற்களாக உச்சரிக்கப்பட்டபின் ஏழு உலகங்களாக விரிந்தன. அதனால் பிரணவத்தையும் பிரணவத்துடன் கூடிய பூர் புவஸ்ஸுவ: என்ற மூன்றையும் பிரணவத்துடன் கூடிய பூ: புவ: ஸுவ: மஹ: ஜந: தப: ஸத்யம் என்ற ஏழையும் வியாஹ்ருதி எனக் கூறுவர். அந்த வியாஹ்ருதியாயிருப்பவள் தேவி. (421)

2142-01 ஸந்த்யா. ஸந்தியா தேவியாயிருப்பவள்.

2142-02 ஸந்தௌ பவா ஸந்தியா-பகலும் இரவும் கூடும் நேரம் ஸந்தி. காலையிலும் மாலையிலும் இந்த ஸந்தி அமைகிறது. அந்த ஸந்தி வேளையில் தோன்றுபவள் ஸந்தியா தேவி. ஸூர்யன் மூலம் வெளியாகிய பிரும்ம சக்தி ஸந்தியா. உலகைத் தோற்று

விப்பது, காப்பது, மறைப்பது என்ற பிரும்மசக்தியின் ஓரம்சம் காலை ஸந்தியில் தொடர்ந்து மாலை ஸந்தி வரை வெளியாகிறது. ஸந்தி வேளையில் வெளிப்படுவதால் ஸந்த்யா.

2142-03 ஸம்யக் த்யாயதே-நன்கு தியானிக்கப்படுவதால் ஸந்தியா. பிரும்மத்தின் தோற்றத்தை ஒளிவடிவில் உணர்ந்து அந்த ஒளியே தன்னுள் விளங்கும் "நான்" என தியானிப்பது தான் ஸந்தியா வந்தனம். அஸௌ ஆதித்யோ பிரஹ்ம, பிரம்ஹ ஏவ அஹம் அஸ்மி-அதோ தெரியும் ஆதித்யனே பிரும்மம், அந்தப் பிரும்மமே நான் என தியானிக்கப் பெறுவ்து ஸந்தியா எனும் பிரும்மசக்தி. அந்த சக்தியே தேவி.

2142-04 பிரும்மா பரம்பொருளைத் தியானித்திருக்கும்போது அவரது தியானத்தில் ஈடுபட்ட மனத்திலிருந்தும் தோன்றிய பெண் ஸந்தியா எனும் தேவி. இவளே அருந்ததியாகவும் பின்னர் தோன்றினுள் என காளிகாபுராணம் கூறும். ஓராண்டு நிரம்பிய கன்னியையும் ஸந்தியை என்பர். (422)

2143-01 த்விஜ-ப்ருந்த - நிஷேவிதா. இருபிறப்பாளர் கூட்டத்தால் சூழப்பட்டவள்.

2143-02 தாயிடமிருந்து ஒரு பிறப்பு, பின்னர் மந்திரத்தைத் தாங்கும் சக்தி பெறுவதற்காக உபனயனம் என்ற சடங்கால் பெற்ற மறுபிறவி என இரு பிறப்புள்ளவர்கள் த்விஜர்கள். இவர்களது கூட்டத்தால் ஒரே சமயத்தில் வழிபடப் பெறுபவள், ஸந்தியா தேவி யாக விளங்குபவள் தேவி.

2143-03 வ்யாஹ்ருதி:, ஸந்த்யா, த்விஜப்ருந்த நிஷேவிதா என்ற மூன்று நாமங்களும் விழிப்பு, கனவு, தூக்கம் என்ற மூன்று நிலைகளைக் குறிக்கும். வியாஹ்ருதி என்பது பேச்சு. அது விழிப்பில் பொறிகள் இயங்குவதைக் குறிக்கும். ஸந்த்யா-இரு நிலைகளின் சந்தியில் தோன்றுவதைக் குறிக்கும். விழிப்பும் தூக்கமும் கனவில் சந்தித்து இரண்டின் அம்சமும் மறைந்தும் வெளியாகியும் காண கின்றனவாதலால் 'ஸந்த்யா' கனவைக் குறிக்கும். த்விஜப்ருந்த நிஷேவிதா என்பது- த்விஜ-இரு பிறப்புள்ளவர்கள். முதலில் முட்டையாகவும் பிறகு முட்டையிலிருந்து குஞ்சாகவும் வெளி யாகும் பட்சி இனத்தைத் துவிஜர்கள் என்பர். அத்தகைய பட்சிக் கூட்டம் இரவில் ஓய்விடத்தைச் சென்றடைவதுபோல் ஜீவர்களும் தன் சுய நிலையைச் சென்றடைவதான தூக்கத்தைக் குறிக்கும்,

அந்த மூன்று நிலைகளிலும் ஜீவர்களால் தன் ஆசிரயமாக-தான் சாரும் பொருளாக உணரப்பெறும் ஆத்ம ஸ்வரூபமாயிருப்பவள் தேவி. (423)

91 तत्त्वासना तत् त्वं अयी पञ्चकोशान्तरस्थिता । 428
निस्सीममहिमा नित्ययौवना मदशालिनी ॥ 431

தத்த்வாஸநா தத்த்வம் அயீ பஞ்சகோசாந்தரஸ்திதா I
நிஸ்ஸீமமஹிமா நித்யயௌவநா மதசாலிநீ II

2144-01 தத்த்வ – ஆஸநா – தத்துவங்களை ஆஸனமாகக் கொண்டவள்.

2144-02 தத்துவங்கள் 36. ஐந்து தன்மாத்திரங்கள், ஐந்து மஹாபூதங்கள், ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்து கர்மேந்திரிங்கள், மனம், அஹங்காரம், புத்தி, (மஹத்) பிரகிருதி என்ற 24 ஜடதத்துவங்கள். ஜீவன், நியதி, காலம், ராகம், கலா, வித்யா, மாயா என்ற ஏழு மாயா தத்துவங்கள். சுத்த வித்யா, ஈச்வரன், ஸதாசிவன், சக்தி, சிவன் என்று ஐந்து சிவதத்துவங்கள். ஆக (24+7+5)36 தத்துவங்கள். பிரகிருதி ஈருக உள்ள 24-ம் ஜீவனும் சேர்ந்து 25 தத்துவங்கள் என சில சாஸ்திரங்கள் கூறும்.

2144-03 இந்த 36 தத்துவங்களையும்(பா. 1605-02, 1723-1727, 2106-03) தனது இருக்கையாகக் கொண்ட பரம் பொருள் தத்த்வாஸநா. தத்துவங்களைத் தன்னிடமிருந்து வெளிப்படும்படி (தத்வாநி அஸ்யதி) செய்பவளானதாலும் தத்த்வாஸநா. (424)

2145-01 தத். 'அது' ஆக இருப்பவள்.

2145-02 தத்துவங்கள் என்ருல் 'தத்'தின் தன்மைகள் எனப்பொருள். அந்த 'தத்' ஆக இருப்பவள் தேவி. புத்தியால் மட்டும் உணரக் கூடியதும், மனத்தாலும் பொறிகளாலும் காண முடியாததும் அவைகளுக்கப்பாற்பட்டதுமானதொன்றை 'அது' என்று குறிப்பிடுவோம். 'அது' என்று ஒன்று இருக்கிறது. அது எங்கு எப்படி இருக்கிறது என்பது புரியவில்லை. உள்ளுணர்வால் மட்டும் அறியக்கூடியது. அது 'தத்' ஆகும். 'அது'வாக இருப்பவள் அவள். தத்த்வமஸி என்ற மகா வாக்கியத்தில் தத் என்று குறிப்பிடப்பட்டவளும் அதன் லக்ஷ்யப் பொருளாய் இருப்பவளும் அவள். (பாரா. 1889-02) (425)

**2146-01** த்வம். 'நீ' ஆக இருப்பவள்.

**2146-02** ஜீவன் முதலிய எல்லா பிரபஞ்சமும் அந்த 'தத்'ஐக் காட்டிலும் வேறுபட்டதாக அஜ்ஞான நிலையில் உணரப்பட்டவை. அவை 'நீ' என இங்கு குறிப்பிடப்படுகின்றன. "தான் தனிப் பட்டதென உணரும் பிரபஞ்சமே! நீ அதிலிருந்து வேறுபட்ட தல்ல" என்று தத் த்வம் அஸி என்ற மகா வாக்கியம் உணர்த்து கிறது. அந்த 'நீ' யாக இருப்பவளும் அவளே. (426)

**2147-01** அயீ. அன்புடன் அழைக்கப்படுபவள்.

**2147-02** தாய் சகோதரி போன்ற அன்பு மிக்கவர்களை அன்பு டனும் நெருக்கத்துடனும் இனிதாகவும் விளிக்கப் பயன்படும் சொல் 'அயி!' அயி கிரிநந்திநி என்ற மஹிஷாஸுரமர்த்தினீ ஸ்தோத் திரம் தாயான தேவியை அயி என்ற விளித்துத் தொடங்குகிறது. எல்லோருக்கும் அன்புக்குகந்த தாயானதால் அவள் அயீ. (மராட்டி முதலிய மொழிகளில் தாயை அயி ஆயீ என அழைக்கிறார்கள்.)

**2147-03** அய:, மங்களமாக நிறைவேற்றப்பட வேண்டிய விவாஹம் முதலிய நற்கருமங்கள். அவைகளின் வடிவத்தில் இருப்பவள்.

**2147-04** தத்த்வமயீ என்ற இந்த தொடர் தத் த்வம் அயீ என்ற மூன்று நாமங்களாலானது. தத்த்வமயீ என்று மீண்டும் வரும் தொடர் ஒரே நாமம். (நா. 907) (427)

**2148-01** பஞ்ச-கோச-அந்தர-ஸ்திதா. ஐந்து கோசங்களின் உள்ளமர்ந்திருப்பவள்.

**2148-02** ஜீவனைச் சுற்றி அவனது தத்துவம் புலப்படாதபடி மறைக்கவல்ல ஐந்து கோசங்கள் உண்டு. அவை அந்நமய கோசம் (ஸ்தூல உடல்); பிராணமய கோசம் (கிரியா சக்தி மிக்க 5 கர்மேந்திரியங்களும் பிராணனுமானது); மனோமயகோசம் (ஞானசக்தி மிக்க 5 ஞானேந்திரியங்களும் மனமுமானது); (4) விஜ் ஞானமயகோசம் (மஹத் எனும் புத்தியானது); (5) ஆநந்த மய கோசம் (அஜ்ஞானமயமானது). முதல் கோசத்தை ஸ்தூல தேகம் என்றும் நடு மூன்றை ஸூக்ஷ்ம தேகம் என்றும் ஐந்தாவதைக் காரண தேகம் என்றும் கூறுவர். இந்த ஐந்தும் கத்தியை உறை மறைத்திருப்பதுபோல் ஆத்ம தத்துவத்தை மறைத்திருக்கின்றன. அவைகளுள், அவைகளின் நடுவே, ஆத்மாவாக இருப்பவள் தேவி.

2148-03 ஒன்பதாவது ஆவரணத்தில் பிந்து சக்கிரத்தில் தேவி அமரும் ஸிம்ஹாஸனத்தைப் பாவனை செய்து அதன் மேலும் நாற்புறத்திலும் முறையே ஸ்ரீவித்யை, பரஞ்ஜோதி, நிஷ்கல சாம்பவீ, அஜபா, மாத்ருகா என்ற ஐந்து கோசாம்பிகைகளை வழி படுவர். அவர்களாக வழிபடப்படுபவள் தேவி. இந்த ஐந்து கோசாம்பிகைகளும் முறையே ஆனந்தமயம், விஜ்ஞானமயம், மனோ மயம், பிராணமயம், அன்னமயம் என்ற ஐந்து கோசங்களின் தனித்த சக்தி வடிவங்கள். ஒவ்வொரு கோசத்தின் நடுவே அததன் தனித்த சக்தியாயுமிருப்பவள் தேவி. (428)

2149-01 நிஸ்ஸீம-மஹிமா. எல்லையற்ற பெருமையுள்ளவள்.

2149-02 ஸீமா-எல்லை, நிஸ்ஸீமா எல்லையற்றது. அவளது பெருமை வரையறையில் அடங்காதது. (429)

2150-01 நித்ய-யௌவநா. அழியாத யௌவனமுள்ளவள்.

2150-02 வளர்ச்சியும் தேய்வுமற்று ஒரே நிலையில் தருணி யாக இருப்பவள். [பாரா. 1884-02] (430)

2151-01 மத-சாலிநீ. ஆனந்தமதத்தால் விளங்குபவள்.

2151-02 வேறு பொருள் நாட்டமின்றி ஆனந்தமொன்றையே உணர்ந்துகொண்டிருக்கும் மனநிலை மதமாகும். அந்த மதநிலை யால் நன்கு பிரகாசிப்பவள் தேவி. [431]

92 मदघूर्णितरक्ताक्षी मदपाटलगण्डभूः । 433
चन्दनद्रवदिग्धांगी चांपेयकुसुमप्रिया ॥ 435

மதகூர்ணிதரக்தாக்ஷீ மதபாடலகண்டபூ: ।
சந்தனத்ரவதிக்தாங்கீ சாம்பேயகுஸுமப்ரியா ॥

2152-01 மத - கூர்ணித - ரக்த-அக்ஷீ. மதத்தால் சுழலும் சிவந்த கண்களுள்ளவள்.

2152-02 தேவியின் கண்கள் இயற்கையாகச் சிவந்தவை. ஆனந்த மதத்தால் மேலும் அவை சிவந்திருப்பதுடன் வேறு வெளிப்பொருள் ஒன்றிலும் நாட்டமின்றி சுழன்று கொண்டிருக் கின்றன. [432]

2153-01 மத - பாடல - கண்ட-பூ:. மதத்தால் பாதிரிப் பூ போன்று சிவந்த கன்னத்தடமுள்ளவள்.

2153-02 ஆனந்த வெறியால் தேவியின் கன்னங்களும் சிவந்து பாதிரிப்பூவின் நிறத்துடன் காணப்படுகின்றன. மதம்-கஸ்தூரி, பாடலம் - செந்நிறம். கன்னத்தில் கஸ்தூரியையும் செந்நிறமுள்ள வர்ணக் கலவையும் கொண்டு மகரிகா எனும் அழகான ரேகைகள் வரையப்பட்டுள்ளன. அதனால் அழகாயிருப்பவள். [433]

2154-01 சந்தந-த்ரவ-திக்த-அங்கீ. மெல்லிய சந்தனப் பூச்சு பெற்ற அங்கங்களுள்ளவள்.

2154-02 சந்தனத்தை நன்கு அரைத்து மெல்லியதாகக் கரைத்து உடல் முழுதும் பூசிக்கொண்டிருக்கிறாள் தேவி. (பாரா. 1637-03) [434]

2155-01 சாம்பேய-குஸும - ப்ரியா. சம்பகப்பூவில் பிரியமுள்ளவள்.

2155-02 சாம்பேயம்-சம்பகப்பூ. (புன்னாகப்பூ எனச் சிலர்) அதில் தேவிக்குப் பிரியம் அதிகம். (435)

93 कुशला कोमलाकारा कुरुकुल्ला कुलेश्वरी । 439
कुलकुण्डालया कौलमार्गतत्परसेविता ॥ 441

குசலா கோமலாகாரா குருகுல்லா குலேச்வரீ ।
குலகுண்டாலயா கௌலமார்க்கதத்பரஸேவிதா ॥

2156-01 குச-லா. திறமையுள்ளவள்.

2156-02 கெடுதலிலிருந்தும் விடுபட்டவள். (குசாத் லாதி) மிக நுண்ணிய பொருளையும் கையாளும் திறமையுள்ளவள். (குசான் லாதி) படைத்தல் முதலிய பல தொழில்களையும் திறம்படச் செய்பவள். (சல:-சந்திரன். குத்ஸித: சல: யஸ்யா:)-சந்திரனை அவமதிக்கும் காந்தியுள்ளவள் தேவி, [436]

2157-01 கோமள - ஆகாரா. மென்மையான வடிவமுள்ளவள்.

2157-02 மிருதுவும் அழகியதுமானது தேவியின் வடிவம். [437]

2158-01 குருகுல்லா. குருகுல்லா எனும் தேவி வடிவில் இருப்பவள்.

2158-02 ஸ்ரீ நகரத்தில் அஹங்காரப் பிராகாரத்தில் விமர்சவாபீ எனும் ஓடையுள்ளது. அதனை நிர்வகிக்கும் பொறுப்புள்ளவள் குங்குமம் பூசிய உடலுள்ள குருகுல்லாதேவி. [438]

2159-01 குல-ஈச்வரீ. குலத்திற்கு ஈச்வரீ.

2159-02 ஒரு இனத்தைச் சார்ந்த அளக்கும் கருவி (மாத்ரு) அளக்கப்படுவது (மேய) அளவை (மானம்) என்ற மூன்றையும் குலம் என்பர். இத்தகைய குல அறிவிற்கு – ஸாகார ஞானத் திற்குத் தலைவி தேவி. பேரறிவின் ஒளிகொண்டு இந்த சிற்றறி வுகள் புலப்படுவதால் பேரறிவு வடிவமாகிய தேவி சிற்றறிவுகளுக்கு ஈச்வரியாகிருள். (பாரா. 1201–08) (439)

2160-01 குல-குண்ட-ஆலயா. குலகுண்டத்தைத் தங்குமிட மாகக் கொண்டவள்.

2160-02 மூலாதாரத்திலுள்ள பிந்துஸ்தானம் (சிவ ஸ்தானம்) குலகுண்டம் எனும் அகுல சக்கிரம். அகுல ஸஹஸ்ராரம் என்றும் இதனைச் சொல்வர். (பாரா. 1201–05) அந்தக் குல குண்டத்தை ஆலயமாக-உறையுமிடமாகக் கொண்டவள் தேவி. ஆலயம்-மறைந்து தங்கி ஓய்வுடன் தூங்குமிடம். (ஆ–ஸமந்தாத், லய: ஸுஷுப்தி:). "அவாப்ய ஸ்வாம் பூமிம் புஜகநிபம் அத்யுஷ்டவலயம் ஸ்வம் ஆத்மாநம் க்ருத்வா ஸ்வபிஷி குலகுண்டே குஹரிணி" "குண்டலினியான தேவியே! (சிரசிலுள்ள ஸஹஸ்ராரம் வரை சென்று திரும்பி) தன்னிடமான மூலாதாரத்தை அடைந்து சிறு துவாரமுள்ள குல குண்டத்தினுள் உடலைச் சுருட்டிப் படுத்துக் கொண்டிருக்கும் பாம்பின் வடிவில் தன்னை அமைத்துக்கொண்டு நீ தூங்குகிருய்!" (ஸௌந்தர்ய லஹரீ சு. 10) (440)

2161-01 கௌல-மார்க்க – தத்பர – ஸேவிதா. கௌல முறையில் ஈடுபட்டவர்களால் பூஜிக்கப் பெற்றவள்.

2161-02 அவரவரது வம்சபரம்பரை மூலமே அறிந்து கொள்ளக்கூடிய ரகசிய மார்க்கமானதால் கௌல மார்க்கம். மிகவும் நுண்ணிய தத்துவங்களுள்ளது கௌல மார்க்கம். வெளிப்படை யான ஆசாரம் கர்வத்திற்கும், உபசாரப் பொருள்கள் போக உணர்ச்சிக்கும் இடமளித்துக் கீழ் தள்ளக்கூடியது. தகப்பன் பிள்ளையிடம் மட்டும் அல்லது ஆசாரியன் சீடனிடம் மட்டும்

அதன் ரகசியங்களைக் கூறி நேரிடையாகப் பயிற்சி தருவார். நேரிடையாகக் கண்காணித்து அவ்வழியில் சீரிய தேர்ச்சியும் மனத் திடமும் வரும்வரை கூட இருப்பார். நிவேதனப் பொருளான மது, மீன், மாம்ஸம், தேன், மங்கை இவைகளும் கூட்டு வழிபாடும் மனிதனைக் கீழ்த்தர உணர்ச்சிகளுக்கு அடிமைப்படுத்தி வழி மாற்றிடக் கூடும். கத்திமுனை போன்று கூருன வழியில் செல்வது ஆபத்து. அவ்வழி சென்று சித்தி பெற்றவர்களின் கண்காணிப்பு அவசியம்.

2161-03 கௌலமார்க்கம் ஸமய மார்க்கம் மிச்ரமார்க்கம் என மார்க்கங்கள் மூன்று. வஸிஷ்டர் சுகர் முதலிய ஐவரால் வகுக்கப்பட்ட மார்க்கம் சமயம். (பா. 1208-02). 64 தந்திரங்களால் வகுக்கப்பட்ட மார்க்கம் கௌலம். (பா. 1638-05). இரண்டு மார்க்கங்களும் கலந்தது மிச்ரம். சந்திரகலா, ஜ்யோத்ஸ்நாவதீ, கலாநிதி, குலார்ணவம், குலேச்வரி, புவநேச்வரி, பார்ஹஸ்பத்யம், தூர்வாஸ மதம் எனும் எட்டு தந்திரங்களில் மிச்ரம் கூறப்பட்டுள்ளது. கௌல மார்க்கத்திற்கான வழிபாட்டுமுறை, அவைகளைச் செய்யும் தகுதி முதலியவை கௌல தந்திர நூல்களில் விளக்கப்பட்டுள்ளன. அவ்வழியில் ஈடுபாடு கொண்டவர்களால் வழிபடப்பெற்றவள் தேவி. (441)

94 कुमार-गणनाथांबा तुष्टिः पुष्टिर्मतिर्धृतिः । 446
शान्तिः स्वस्तिमती कान्तिः नन्दिनी विघ्ननाशिनी ॥ 451

குமாரகணநாதாம்பா துஷ்டி: புஷ்டிர் மதிர் த்ருதி: ।
சாந்தி: ஸ்வஸ்திமதீ காந்தி: நந்திநீ விக்னநாசிநீ ॥

2162-01 குமார-கணநாத - அம்பா. குமாரனுக்கும் கணநாதனுக்கும் தாய்.

2162-02 என்றும் இளமையுள்ளவன் குமாரன். மன்மதனைப் பழிக்கும் அழகு படைத்தவனுனதால் குமாரன். (குத்ஸிதோ மாரோ யேந). கெட்டவர்களை அழிப்பவன், (குத்ஸிதான் மாரயதி) சுப்ரமண்யன். தனித்தனியாக இருந்து துன்புறுத்தும் சக்திகளனைத்தையும் கூட்டமாக ஓரிடத்தில் சேர்த்து அவர்களின் தலைவராக ஆகி அவர்களைத் தம் ஆணைக்குள் அடக்கியவரும் வெளியே செல்லும் இந்திரிய கணங்களை யோக சக்திக்கு உட்படுத்தித் தன்னைக் காணும்படி செய்பவருமான கணநாதர் விநாயகப் பெருமான். அவர்கள் இருவருக்கும் தாய், (அம்பா- அம்பதே-பத்நாதி-அன்பினுல் கட்டுப்படுத்துவதால் அம்பா.)

2162-03 கெட்ட காம எண்ணங்களின் கூட்டம் கு-மார-கண:, அவர்களின் தலைவர்களாக இருக்கும் காமம் க்ரோதம் போன்ற வைகளைக் கட்டுப்படுத்துபவள். அதனால் கு - மார - கண-நாத-அம்பா (நா. 606-706-719). (442)

2163-01 துஷ்டி:. சந்தோஷ வடிவினள்.

2163-02 இந்த நாமம் முதல் 7 நாமங்களில் தேவியின் கல்யாண குணங்களை வர்ணித்து அந்த குணங்களையே தேவி தனது வடிவமாகக் கொண்டுள்ளதை வர்ணிக்கிறார்கள். துஷ்டி-மன நிறைவு, போதும் என்ற மனப்பான்மை, சந்தோஷம். வஸ்திரேச்வரம் எனும் க்ஷேத்திரத்தில் துஷ்டி என்ற நாமத்துடன் விளங்குபவள். (443)

2164-01 புஷ்டி:. புஷ்டி வடிவினள்.

2164-02 புஷ்டி :- உடல் நிறைவு-அங்கங்களும் தாதுக்களும் தேய்வின்றி நிறைவு பெற்றிருக்கும் நிலை. தேவதாரு வனம் எனும் க்ஷேத்திரத்தில் புஷ்டி எனும் நாமம் பூண்டு வசிப்பவள். (444)

2165-01 மதி :. புத்தியாக இருப்பவள்.

2165-02 மதி :- புத்தி. தன் மதிப்பைக் கொள்வது, பகுத்தறிவது, உடலாலும் மனத்தாலும் பெற்ற போகத்தைத் தான் அனுபவிப்பதாக உணர்வது. இது புத்தியின் சக்தி. அந்த புத்தி வடிவினள். மதிக்கத்தக்கதை மதிப்பதும் மதி. வேதம், மங்களமான பணிகள், தெய்வம், பெரியோர்கள் முதலியவற்றில் நன்மதிப்பு கொள்ளும் தன்மை மதி. அதனை வடிவமாகக் கொண்டவள். ஸ்வாஹா ஸ்வதாமதிர் மேதா என்ற சொற்றொடர் பின் வருகிறது. அங்கு ஸ்வதா அமதி: எனப் பதம் பிரியும். (நா. 537) (445)

2166-01 த்ருதி :. தைர்ய வடிவினள்.

2166-02 த்ருதி :- தாங்கும் தன்மை. மனத்தையும் உடலையும் பாதிப்பவைகளால் குலையாமல் தன்னிலையில் ஊன்றி நிற்பது. தாமறிந்த ஒன்றைப் பிடித்து நிற்பது. பிண்டாரகம் எனும் க்ஷேத்திரத்தில் த்ருதி என்ற நாமம் பூண்டு வசிப்பவள். (446)

2167-01 சாந்தி:. மனவடக்கத்தை வடிவாகக் கொண்டவள்.

2167-02 சாந்தி, சமம்-மன அடக்கத்தையும் அதனால் பெறும் மன அமைதியையும் குறிக்கும். பொருள்களின். நாட்டத்திலி

ருந்தும் பொறிகள் விடுபடுதலும் சாந்தியாகும். அதனைத் தன் வடிவமாகக் கொண்டவள் தேவி. நிவ்ருத்தி, பிரதிஷ்டை, வித்யா, சாந்தி, சாந்தியதீதா என்று ஐந்து கலைகள். இதில் சாந்தி எனும் கலை ஸதாசிவ தத்துவமாகும். வாயு தத்துவத்தின் கலை என்பர். சுத்த ஸ்படிக நிறமும் ஐந்து முகங்களும் கொடி, அபய முத்திரை, ஜபமாலை, தாமரை ஏந்திய நான்கு கைகளும் உபவீதமும் கொண்ட தேவி வடிவத்தில் இந்த கலையை உருவகப்படுத்தித் தியானம் செய்வர். இக்கலையின் வழிபாட்டால் மாயாமலம் அகன்று மன அமைதி ஏற்படும். (447)

2168-01 ஸ்வஸ்தி - மதீ. க்ஷேமத்தை உடையவள்.

2168-02 ஸு-அஸ்தி:, ஸ்வஸ்தி:- நல்ல நிலையில் இருப்பது, நிலைத்திருப்பது, க்ஷேமமாயிருப்பது, க்ஷேமமாயிரு என வாழ்த்துவது, புண்யம், மங்களம் எனப் பொருள்படும். இவை எல்லாவற்றுடனும் இருப்பவள். என்றும் மாறுபடாத அழியாத மங்களமான பிரும்மமாயிருப்பவள். (448)

2169-01 காந்தி:. மேனி ஒளியாயிருப்பவள்.

2169-02 பிறரை ஈர்க்கும் மேனி ஒளி, பரம்பொருளின் இச்சா சக்தி, காமத்தின் சக்தி, மனத்தின் நாட்டம் காந்தியாகும். இவை தேவியே.

2169-03 இந்த 7 நாமங்களும் எல்லா பிராணிகளிடத்திலுள்ள தேவியின் அம்சத்தைக் குறிப்பிடுகின்றன. தேவீ மாஹாத்ம்யத்தில் (5 அத் 19-77 சுலோகங்கள்) ஒவ்வொரு உயிரினத்திலும் சேதநா, புத்தி, நித்திரை, பசி, சாயல், சக்தி, வேட்கை, பொறுமை, ஜாதி, வெட்கம், அமைதி, சிரத்தை, சாந்தி, செல்வம், ஜீவனோபாயம், ஞாபகசக்தி, தயை, துஷ்டி, தாய், பிரமை முதலிய பல வடிவங்களிலும் தேவி இருப்பதைக் குறிப்பிட்டு அவ்வவ்வடிவிலுள்ள தேவியை மூன்று முறை வணங்குகிறோம் எனக் கூறப்பட்டுள்ளது. இப்படி ஒவ்வோர் ஜீவனிடத்திலும் தேவி பல வடிவங்களில் அமைந்து உதவுவதை உணர்வதே தேவியின் அருள்பெறச் சிறந்த உபாயம். (449)

2170—01 நந்திநீ. நந்தினியாக இருப்பவள்.

2170-02 காமதேனுவின் பெண் நந்தினியெனும் பசு. கங்கைக்கும் நந்தினி என்ற பெயருண்டு. (காமதேனுவின் பெண் நந்தினியைப் பின் தொடர்ந்து மேய்த்து அவளருளால் ரகு என்ற

மகனைப் பெற்றான் திலீபன் என்ற கதை காளிதாஸனின் ரகுவம்சத்தில் வர்ணிக்கப் பெறுகிறது.) நந்தனுக்கும் யசோதைக்கும் பெண்ணாகப் பிறந்து கண்ணனுக்காக இடம் மாறி கம்ஸனை ஏமாற்றி வானேறிய தேவி நந்தா என்றும் பெயர் கொண்டவள். மனத்தைக் களிப்படையச் செய்பவளானதால் தேவி நந்தினீ. (450)

2171—01 விக்ந-நாசிநீ. இடையூறுகளைப் போக்குபவள்.

2171-02 தேவியை அறிவதற்கான ஸ்ரீ வித்யா உபாஸனத்தில் இடையூறுகளாக வருபவைகளை அழிக்கவல்லவள். விக்ந நாசனன் எனப் புகழ்பெற்ற விநாயகனின் சக்தியாயிருப்பவள். (451)

95 तेजोवती त्रिनयना लोलाक्षीकामरूपिणी । 454
मालिनी हंसिनी माता मलयाचलवासिनी ॥ 458

தேஜோவதீ த்ரிநயநா லோலாக்ஷீகாமரூபிணீ 1
மாலிநீ ஹம்ஸிநீ மாதா மலயாசலவாஸிநீ 11

2172—01 தேஜோவதீ. தேஜஸ் படைத்தவள்.

2172-02 தேஜ:-ஒளி, பிறரை ஆட்படுத்தும் தன்மை, பிறரை எதிர்க்கும் சக்தி, பிறரால் ஏற்படும் அவமதிப்பைத் தாங்கவொணாத சீற்றம், வலிமை, சாரம், நெருப்பின் தன்மையான சூடு, இவை அனைத்தும் உள்ளவள். தேஜோமண்டலங்களாகிற ஸூர்ய சந்திரர்களின் ஆதாரமாயிருப்பவள் தேவி. (452)

2173-01 த்ரி-நயநா. முக்கண்கள் உள்ளவள்.

2173-02 சூரியன், சந்திரன், அக்கினி என்ற மூன்று தேஜோ மண்டலங்களையும் தனது மூன்று கண்களாகக் கொண்டவள். ஸ்வதா ஸ்வாஹா வஷட் வௌஷட் ச்ரௌஷட் என ஐந்தும் அக்கினியில் ஆஹுதி செய்யும்போது சொல்லப்படும் சொற்கள். 'வௌஷட்'டிற்கு திரிநயநா என்ற பெயருண்டு. அந்த மந்திரவடிவினள். பிரத்யக்ஷம், அனுமானம், சப்தம் என்ற மூன்று பிரமாணங்களும் நயனங்கள், அறிவை நோக்கி அழைத்துச் செல்பவை. சிரவணம் (காதால் கேட்பது) மநநம் (மனத்தால் அதை ஆராய்வது) நிதித்யாஸனம் (கேட்டு மனத்தால் ஆராய்ந்ததை உள்ளுணர்வால் நீண்டகாலம் ஆழ்ந்து சிந்தித்து அதுவாக ஆகிவிடுதல்). இந்த மூன்றும் பரம்பொருளை அடைய உதவும் மூன்று உபாயங்கள். கேட்பது-சப்தம், மனனம் - அனுமானம், நிதித்தியாஸனம்-பிரத்

யக்ஷம்; தன்னை அறிய இந்த மூன்று பிரமாண (நயன)ங்கள் உள்ளவள். தேவியை அடைய தக்ஷிணம் வாமம் பிரும்மமார்க்கம் என மூன்று வழிகள் உள்ளன. அந்த மார்க்கங்களாக இருப்பவள் தேவி. நயனம்-மார்க்கம். (நா. 441-912) (453)

2174-01 லோலாக்ஷீ-காம-ரூபிணீ. பெண்களின் காமமாயி ருப்பவள்.

2174-02 சுழலும் கண்களுள்ள அழகான பெண்களின் காம மாகவும், அவர்களை அடைவதற்கான காமமாகவுமிருப்பவள் தேவி. காமம் என்ற குணத்தின் ஈசுவரியாக இருப்பவள் தேவி. காமம், குரோதம், லோபம், மதம், மோஹம், மாச்சரியம், பைசுந்யம், அஸூயா என்ற எட்டு குணங்களுக்கும் யோகேசுவரீ, மாஹேசுவரீ வைஷ்ணவீ, பிரும்மாணீ, ஸ்வயம்பூ (கல்யாணீ), இந்திரஜா, யமதண்டதரா, வாராஹீ என்ற எட்டு சக்திகள் உண்டு. அவை களில் காமத்திற்கான சக்தியாக யோகேசுவரியாக இருப்பவள் தேவி. (454)

2175-01 மாலிநீ. மாலையுள்ளவள்.

2175-02 மாலையைத் தரிப்பதால் மாலினீ. 51 மாத்ருகா=அக்ஷ ரங்களின் தேவதை மாலிநீ, அக்ஷமாலையைத் தாங்கியிருப்பவள். அ முதல் ள வரை 50 அக்ஷரங்கள். 'க்ஷ' கூட்டெழுத்து. இதனைச் சேர்த்து 51 அக்ஷரங்கள். அ முதல் க்ஷ வரை உள்ள அக்ஷரங்களை மணியாகக் கொண்ட மாலை அக்ஷமாலை. அதில் க்ஷ என்பது நடுவில் தொங்கும் மணி. மேரு என இதற்குப் பெயர். அக்ஷ மாலையில் ஜபம் செய்யும்போது மேருவைத் தாண்டக்கூடாது. 'அ' முதல் 'ள' வரை ஜபித்த பிறகு 'ள' முதல் 'அ' வரை ஜபிப்பது வழக்கம். 'க்ஷ'வை முடித்து உடன் 'அ'வை மறுபடி ஆரம்பித்தால் மேருவைத் தாண்டியதாகும். அக்ஷ மாலை என்ற 51 மணிகள் கொண்ட மாலையிலும் 'ள' வென்ற 50வது மணி வந்ததும் மறுபடி ள ஹ ஸ என்ற மணி வரிசையில் எண்ணுவது மேருவைத் தாண் டாமல் ஜபம் செய்வதாகும். (நா. 775) இந்த அக்ஷமாலையைக் கொண்டவள். ஸரஸ்வதி பாலா பிராம்ஹீ முதலிய வடிவங்களில் அக்ஷமாலையைக் கையில் ஏந்தி நிற்பவள் தேவி. (455)

2176-01 ஹம்ஸிநீ. ஹம்ஸர்களோடு கூடியவள்.

2176-02 ஹம்ஸ:— அன்னப்பட்சி, துறவி, அஜபாமந்திரம். அன்னப்பட்சிகள் தேவியைச் சூழ்ந்துநின்று நடைபயிலும். (ஸௌந் தர்யலஹரீ : சு. 91) பிரும்ம வித்யா ஸ்வரூபிணியான தேவியைப்

பரமஹம்ஸர்கள் நாடுவார்கள். நம்மை அறியாமல் வாய்விட்டு ஜபிக்காமல் நிமிடந்தோறும் நம் பிராணசக்தி ஜபிக்கும் மந்திரம் ஸோஹம் ஹம்ஸ: என்பது. மூச்சிழுக்கும்போது 'ஸோ' என்றும் மூச்சு விடும்போது 'ஹம்' என்றும் நாத வடிவில் உணரும் மந்திரம் இது. ஹம்ஸ மந்திரம், அஜபா மந்திரம் என்பர் இதை. அந்த மந்திர வடிவில் இருப்பவள் தேவி. (456)

2177-01 மாதா. மாதாவானவள்.

2177-02 மாதா-மாதாவாயிருப்பவள் (பா 0602-01-07) மாத்ருகை எனும் சக்தி வடிவினள். (1901-07) மந்திரங்களுக்குத் தாயானதால் மாத்ருகா-அக்ஷர வடிவினள். சுக்ல தசமீ-கிருஷ்ண ஷஷ்டி திதிகளுக்கான நித்யாதேவி நித்யா என்றே பெயர் பெற்றவள். அவளது மந்திரத்தை மாதா என்று மந்திர சாஸ்திரம் கூறும். காயாவரோஹண க்ஷேத்திரத்திலுள்ள தேவி மாதா எனத் திருநாமம் பூண்டவள். ஸ்ரீம் எனும் லக்ஷ்மீ பீஜத்திற்கு மாதா எனப் பெயர். இந்த வடிவங்களுள்ளவள் தேவி. (457)

2178-01 மலய-அசல-வாஸிநீ. மலயமலையில் வசிப்பவள்.

2178-02 பகவதீ என்ற பெயருடன் மலயாசலமாகிய கேரள தேசத்தில் கோயில் கொண்டவள் தேவி. (மலயாலயா பகவதீ—மலையாள பகவதியானுள்). (458)

96 सुमुखी नलिनी सुभ्रूः शोभना सुरनायिका । 463
कालकण्ठी कान्तिमती क्षोभिणी सूक्ष्मरूपिणी ॥ 467

ஸுமுகீ நலிநீ ஸுப்ரூ: சோபநா ஸுரநாயிகா ।
காலகண்ட்டீ காந்திமதீ க்ஷோபிணீ ஸூக்ஷ்மரூபிணீ ॥

2179-01 ஸுமுகீ. அழகிய முகம் உள்ளவள்.

2179-02 அகத்தின் அழகு முகத்தில் தெரியும். தேவியை அகத்தில் கொண்டவனது முகம் மிக அழகாக இருக்கும். "ப்ரும்ம வித: இவ தே ஸௌம்ய முகம் ஆபாதி". பிரும்மத்தை அறிந்தவனது முகம் போல் உன் முகம் அழகாக விளங்குகிறது. (சாந்தோக்ய உபநிடதம் 4-14-2) பிரும்மத்தை அறிந்தவனது முகமே ஸுமுகம் (அழகான முகம்) ஆனால், அந்த பிரும்மவித்தியை ஆக இருப்பவள் முகம் மிகமிக அழகிய முகம். அழகிய முகம் உள்ளவள் தேவி.

2179-03 ஸுமுக: என விநாயகப் பெருமானது 16 திவ்ய நாமங்களில் முதல் பெயர். கணேச ஸஹஸ்ரநாமத்திலும் இந்த நாமம் உள்ளது. கணேச ஸஹஸ்ரநாமத்திற்குச் செய்யுள் வடிவில் கத்யோதம் எனும் உரைநூல் எழுதிய பாஸ்கர ராயர் "ஆரம்பா: சோபநா யேந யஸ்ய சோபநமாநநம்। ஸ ஏவ ஸுமுக: தஸ்மை ஸுமுகாய நமோ நம:". "தொடங்கிய பணிகள் மங்களமாக எவரது அருளால் நிறைவு பெறுகின்றனவோ, (ஸு-மங்களமான, முகம்-ஆரம்பம்) எவரது முகம் அழகியதோ அந்த ஸுமுகருக்கு நமஸ்காரம்" எனத்தநயனுக்குக் கூறியது தாய்க்கும் பொருந்தும். (ஸுமுகர்,ஏகதந்தர். கபிலர், கஜகர்ணகர், லம்போதரர், விகடர், விக்நராஜர், கணாதிபர், தூமகேது, கணாத்யக்ஷர், பாலசந்த்ரர், கஜாநநர், வக்ரதுண்டர், சூர்பகர்ணர், ஹேரம்பர், ஸ்கந்தபூர்வஜர் என்று கணேசருக்கு 16 திருநாமங்கள். எல்லா இடையூறுகளையும் இவரது நாம பாராயணம் போக்கும்.) ஸுமுகரின் சக்தி ஸுமுகீ. (459)

2179-04 ஷோடசியின் அங்கதேவதைகளில் ஒருவள் ஸுமுகீ.

2180-01 நலிநீ. தாமரைக் குவியலாக இருப்பவள்.

2180-02 நலிநீ-தாமரைக் குவியல். கைகள், கால்கள், முகம், கண்கள் முதலிய அவயவங்கள் தாமரைக் கொப்பானவைகளாக இருப்பதால் தேவியைக் காணும்போது தாமரைகளைக் குவியலாக வைத்துள்ளதுபோலக் காண்கிறது. நெருக்கமாகத் தாமரைகள் பூத்துள்ள ஓடையும் நலிநீ ஆகும். சிவபெருமானது ஜடையிலிருந்து கங்கை இமயத்தில் ஏழு தாரைகளாகப் பிரிந்து விழுந்தது. கிழக்கு திக்கு நோக்கிச் சென்ற மூன்று தாரைகளில் நலிநீ என்பது ஒன்று. (ஹ்லாதிநீ, பாவநீ, நலிநீ என்ற மூன்றும் கிழக்கு நோக்கிச் சென்றன. ஸுசக்ஷுஸ், ஸீதா, ஸிந்து என்ற மூன்றும் மேற்கே சென்றன. அலகநந்தா பகீரதனது ரதத்தைத் தொடர்ந்து பூமியை அடைந்தது. ராமாயணம் பால-43) (460)

2181-01 ஸுப்ப்ரூ:. அழகிய புருவம் உள்ளவள். (461)

2182-01 சோபநா. அழகி, மங்களமானவள்.

2182-02 இந்த சோபநா என்ற தொடரை ஒத்த மற்ற இரு நாமங்கள் 683, 972 ஆகும். 683-வது நாமம் சோபநா ஸுலபா கதி: என்ற மூன்று பதங்கள் கொண்டது. தனித்து சோபநா என அங்கு பிரிப்பது கூடாது. 972-வது நாமம் ஆசோபநா. ஆ மறைந்திருக்கும். பிரித்துச் சொல்லும்போது 'ஆசோபநா'-ஆகும். இந்த மாற்றம் கவனிக்கத் தக்கது. (462)

2183-01 ஸுரநாயிகா. தேவர்கள் தலைவி. (463)

2184-01 காலகண்ட்டி. காலகண்டரது மனைவி.

2184-02 விஷத்தை அருந்தியதால் கருத்த கழுத்து உள்ளவர் சிவபெருமான். அவரது பத்தினி. அர்த்தநாரீசுவரவடிவில் இவள் கழுத்தும் கருப்பாக அமையுமானதால் காலகண்டி. 68 சிவ தீர்த்தங்களில் ஒன்ருன காலஞ்ஜரம் எனும் க்ஷேத்திரத்தில் காலகண்டர் எனும் சிவனது தேவியாக விளங்குபவள். கலம்-காலம்-இனிமையான மொழி. இனிமையாகப் பேசும் தொண்டையுடன் கூடியவள் காலகண்டி. தாருகாஸுரனைக் கொல்ல சிவன் படைத்த காளிக்குக் காலகண்டி எனப் பெயர். (பா. 1871-02) (464)

2185-01 காந்திமதீ. காந்தியுடையவள்.

2185-02 காந்தி-மேனி அழகு, களை, மேனியின் ஒளி, ஆசை, இச்சாசக்தி முதலியவை (பா. 2169-02) காந்தியுடன் கூடியவள் காந்திமதீ. (465)

2186-01 க்ஷோபிணீ. உணர்ச்சிக் கொந்தளிப்பை உண்டாக்குபவள்.

2186-02 ஸ்ருஷ்டி தொடங்குமுன் பரம்பொருள் மட்டும் தனித்திருந்த நிலையில் அவரிடம் மாயை சலனம் ஏற்படுத்தியதும் உலகம் தோன்றியது. உலகம் தோன்றக் காரணமாயிருந்த அந்தச் சலனத்தை ஏற்படுத்தியவள் தேவி. (பா. 1708-01, 13)

2186-03 வைஷ்ணவீ சக்தியாகத் தோன்றிய தேவி மந்தர மலையில் தவம்புரியச் சென்றபோது அவளது மனம் கொந்தளித்தது. அந்தக் கொந்தளிப்பிலிருந்தும் அழகிய வடிவில் சக்திகள் கோடிக்கணக்கான பெண்கள் வடிவில் தோன்றினர். அவர்கள் தோன்றக் காரணமாயிருந்த மனக் கொந்தளிப்பை ஏற்படுத்தியவள் தேவி.

2186-04 நமது இந்திரியங்கள் அயர்ந்து செயலற்றிருக்கும் போது அவைகளை உசுப்பி எழுப்பிச் செயலாற்றத் தூண்டுபவள் தேவி. (466)

2187-01 ஸூக்ஷ்மரூபிணீ. மிக நுண்ணிய வடிவமுள்ளவள்.

2187-02 மிக நுண்ணிய வடிவமுள்ளவளானதால் எளிதில் அறியமுடியாதவள். மூலாதார மத்தியிலுள்ள குண்டலிநீ எனும் அக்கினியில் செய்யப்படும் ஹோமம் ஸூக்ஷ்மமாகும். ரஹோயாகம் என அதற்குப் பெயர். (பா. 2101-02) அந்த ஹோம வடிவத்

திலுள்ளவள் தேவி. ஸூக்ஷ்மமான மந்திரவடிவம், குண்டலினி வடிவம், வாஸனுவடிவம் படைத்தவள் தேவி. (பாரா. 0704-02, 1102-02-1201-02) (467)

97 वज्रेश्वरी वामदेवी वयोऽवस्थाविवर्जिता 470
सिद्धेश्वरी सिद्धविद्या सिद्धमाता यशस्विनी ॥ 474

வஜ்ரேச்வரீ வாமதேவீ வயோ(அ)வஸ்தாவிவர்ஜிதா 1
ஸித்தேச்வரீ ஸித்தவித்யா ஸித்தமாதா யசஸ்விநீ 11

2188-01 வஜ்ரேச்வரீ. வஜ்ரேசுவரியாயிருப்பவள்.

2188-02 ஜாலந்தர பீடத்தில் வஜ்ரேசுவரீ எனும் திருநாமம் பூண்டிருப்பவள் தேவி. சுக்லபக்ஷத்து ஷஷ்டி-கிருஷ்ண பக்ஷத்துத் தசமி திதிகளின் நித்யாதேவிக்கு வஜ்ரேசுவரி எனப் பெயர். ஸ்ரீ புரத்தில் வஜ்ரப் பிராகாரத்தில் உள்ள வஜ்ரா என்ற நதியின் தலைவி யாக அதன் கரையில் மாளிகை கொண்டவள், வைர ரத்தினங் களாலான ஆபரணம் பூண்டிருப்பவள், இந்திரனுக்கு வஜ்ரம் எனும் ஆயுதத்தை அளித்தவள், வஜ்ரேசுவரீ எனத் திருநாமம பூண்டவள். தேவியின் திருமேனியிலிருந்து புறப்பட்ட கிரணங்கள் எடுத்த யோகினீ வடிவங்களில் இவளும் ஒருவள். (நா. 944) (468)

2189-01 வாமதேவீ. வாமதேவரது பத்தினி.

2189-02 ஈசானர், தத்புருஷர், அகோரர், வாமதேவர், ஸத் யோஜாதர் என்று ஐந்து சிவமூர்த்திகள். அதில் ஒருவர் வாம தேவர். வாம: தேவ:- மிக அழகான தேவர். அர்த்தநாரீசுவர வடிவில் இடது பகுதியில் தேவியைக் கொண்டமையால் அழகாக இருப்பவர். (வாமேந தீவ்யதி) இடது பகுதியால் உலகை ஜயிப் பவர். (வாமேந தீவ்யதி) ஐந்து முகமுள்ள சிவபெருமானின் வடக்கு நோக்கிய முகமாயிருப்பவர் வாமதேவர். வாமதேவரின் பத்தினி அல்லது சக்தி.

2189-03 வாமா தேவீ-மிக அழகான தேவி. வாமா-கர்ம பலாநி. வினைப்பயன்கள். (பா. 1858-02) அவைகளின் தேவியா யிருந்து ஜீவர்களைக் கட்டுப்படுத்துபவள். வாமாசாரத்தில் ஈடுபட்ட வர்கள் வாமர்கள். அவர்களது தேவதை. (469)

2190-01 வயோ-அவஸ்தா-விவர்ஜிதா. வயதால் மாறுதல் அற்றவள்.

2190-02 பால்யம், கௌமாரம், யௌவநம் முதலிய வயதால் ஏற்படும் மாறுதல்கள் அவளிடம் காணப்படுவதில்லை. அவள் நித்யா. (பா. 1405) தருணீ (பா. 1884) நித்யயௌவநா (பா. 2150) என்ற நாமங்களால் விளக்கியபடி அழிவு அற்றவள். நிறைவு பெற்றவள். வளர்ச்சி தேய்வு பெறத்தக்க மாறுதலற்றவள். **(470)**

2191-01 ஸித்த-ஈச்வரீ. ஸித்தர்களின் ஈசுவரீ.

2191-02 அணிமா மஹிமா முதலிய ஸித்திகளைப் பெற்றவர்கள் ஸித்தர்கள். இவர்கள் மனித இனத்தைச் சார்ந்தவர்களாயினும் இயற்கைக்குக் கட்டுப்படும் மனிதத் தன்மையிலிருந்தும் சித்திகள் மூலம் விடுபட்டவர்கள். இவர்களைப் பூமியாலான உடல் நெருக்கம், பரிமாணம், எடை முதலியன தடை செய்யாது. ஜலம் நனைக்காது, உள்ளே அமுத்தாது. நெருப்பு சுடாது. காற்று அசைக்காது. ஆகாயத்தைப் போல் எங்கும் பரவி நிற்கவும் காதுக் கெட்டாத ஒலிகளைக் கேட்கவும் முடியும். இப்படி மனிதனைக் கட்டுப்படுத்தும் பூதசக்திகளை வென்றவர்களாதலால் ஸித்தர்களைத் தனித்துக் கூறுவது வழக்கம். குரு மண்டலத்தில் திவ்யௌகர்கள், மானவௌகர்கள், ஸித்தௌகர்கள் என்று மூன்று பிரிவு உண்டு. (பாரா. 0214-20) இவர்களை ஸ்ரீ சக்கிரத்தில் ஸர்வ ஸித்திப்பிரத சக்கிரமாகிய நடுமுக்கோணத்தைச் சுற்றி உள்ள ஸர்வரோகஹரம் எனும் அஷ்டகோணத்தில் நடுமுக்கோணத்தின் கிழக்குக்கோட்டின் வெளியில் (கிழக்கு பற்றிய விளக்கம் 0911-14) நான்கு கோணம் போன்ற அமைப்பின் நடுவே மூன்று கோடுகளிட்டு நடுக்கோட்டில் இவர்களைப் பூஜிப்பது வழக்கம். ஸித்தர்கள் நால்வர். இவர்களைத் தவிர பல சித்தர்கள் உண்டு. அவர்களுக்கு சக்தி அளிக்கும் ஈச்வரி தேவி. ஸித்தேசுவரி என்ற திருநாமம் பூண்டு காசியில் வசிப்பவள்.

2191-03 உடலை அழியாமலும் வெயில் மழை முதலிய இயற்கைப் பாதிப்புகளால் வேதனைப்படாமலும் திடப்படுத்தித் தவமியற்றுவதற்கு இடையூறுகளில்லாமல் செய்து கொள்ளும் யோகப் பயிற்சிகளால் சித்தி ஏற்படும். சித்திகளைப் பெறுவதே லக்ஷ்யமல்ல. சித்திகளைக் கொண்டு மனோலயம் ஏற்படுத்தித் தவம் புரிவதுதான் லக்ஷ்யம். தவத்திற்குரிய சாதனங்கள் இவை.

2191-05 குருவின் குருவை (பரமகுருவை) ஸித்தர் என அழைப்பர். அந்த ஸித்தரது ஈசுவரியாயிருந்து குருவின் ஈசுவரியாக ஆகித் தனக்கு ஈசுவரியாக இருப்பவள் தேவி. குரு பரமகுரு-ஸ்மரணத்துடன் தேவியின் தொடர்பைக் காட்டும் நாமம் இது. **(471)**

2192-01 ஸித்த வித்யா. சித்தமான வித்தியையாயிருப்பவள்.

2192-02 வித்தியை - பெண்ணைத் தேவதையாகக் கொண்ட மந்திரம். அது பலன் தருவதற்கு புரச்சரணம் முதலிய வழிபாட்டு முறைகளைக் கையாள வேண்டும். திருமணம் நடத்து முன் பெண்ணிற்கும் பிள்ளைக்கும் மணவாழ்க்கை சரியாக அமையுமா என்று பொருத்தம் பார்ப்பது போல் மந்திரங்களுக்கும் மந்திரங்களை ஏற்க விருப்பவனுக்கும் பொருத்தம் பார்ப்பதுண்டு. ஸித்தாரி கோஷ்டம் என இதைக் கூறுவர். மந்திரங்கள் ஸித்தம், ஸுஸித்தம், ஸாத்யம் அரி என நான்காகப் பிரியும். மந்திரங்களின் சித்தி பெறப் பொதுவாக மந்திரத்திலுள்ள அக்ஷரங்களைக் கணக்கிட்டு அக்ஷர எண் எவ்வளவோ அவ்வளவு லக்ஷம் மந்திர ஜபம் புரிய வேண்டும். மூன்று அக்ஷரங்களுள்ள பாலா மந்திரத்திற்கு 3 லக்ஷம் ஜபம். ஐந்து அக்ஷரங்களுள்ள சிவ பஞ்சாக்ஷரிக்கு 5 லக்ஷம் ஜபம். ஜப எண்ணிக்கைக்கு ஏற்றவாறு ஹோமம், போஜனம், தர்ப்பணம், மார்ஜனம் என்ற நான்கும் செய்யவேண்டும். இது புரச்சரணம் எனப்படும். (0214-07)

2192-03 புரச்சரணம் செய்வதால் அந்த மந்திரம் நினைத்த பலனைக் கொடுக்குமளவிற்குச் சித்தியாகிவிடும். குறிப்பிட்ட அளவு ஜபம் முதலியவை செய்தால் கட்டாயம் சித்தியாகுபவை சில. அவை ஸித்த மந்திரங்கள். குறிப்பிட்ட அளவு ஜபம் செய்யாமலேயே குருவிடமிருந்து உபதேசம் பெற்றதும், அல்லது குறைந்த அளவு ஜபம் செய்ததும், சித்தி தரவல்லது ஸுஸித்தம். முன் பிறவியில் இப்படி சித்திக்கான முயற்சிகளைத் தொடங்கி ஏதோ வினையால் அம்முயற்சி தடைபட்டு விட்டதால், அந்த மந்திரம் நமக்குக் கடன்பட்டது போலாகி, விட்ட குறை தொட்ட குறையாக இப்பிறவியில் உரிய புரச்சரணம் செய்யாமலேயே சித்தியாகும். குறிப்பிட்ட அளவிற்கு மேல் ஒரிரு மடங்கு அல்லது மந்திரசித்தி பெறும் வரை ஜபம் முதலியவற்றைச் செய்து மிகவும் வருந்திப் பயன்பெற்றது ஸாத்தியம் ஆகும். முன் பிறவிகளில் மந்திரத்தைத் தவறான முறையில் சக்திக்கு மீறிப் பயன்படுத்தியதால் அதற்கு நாம் கடனாளியாகி அதிக அளவு ஜபம் முதலியதை எதிர்பார்க்கிறது என்று பொருள். மந்திர தேவதையிடம் தவறாக நடந்து அதனை எதிரியாக்கிக் கொண்டவன் அந்த மந்திரத்தை ஜபம் செய்யும்போது மந்திரம் காப்பாற்றும் தன்மையைக் கைவிட்டு அவனையும் குடும்பத்தையும் அழிக்க முற்படும். இதனை அரி (சத்துரு) மந்திரம் என்பர். சித்தம் முதல் அரி வரையுள்ள மந்திரங்களை அறிய கட்டங்கள்

போட்டு, ஜாதகம் பார்ப்பதுபோல் விடை காண்பது ஸித்தாரி-கோஷ்டம். ஸித்தாரி கோஷ்டம் போட்டு ஸித்தமாகவோ ஸுஸித்தமாகவோ அமையும் மந்திரத்தைத் தேர்ந்தெடுத்து உபதேசிப்பது வழக்கம்.

2192-04 சில மந்திரங்களுக்கு இந்த கோஷ்டம் பார்ப்பது வழக்கமில்லை. ஓரக்ஷரமுள்ளவை, மூன்று அக்ஷரங்களுள்ளவை, மிருத்யுஞ்ஜயம், காளீ, சியாமளா, சண்டிகா, ராமன், ஸ்ரீவித்யா, புவனேச்வரீ, ராஜசியாமளா முதலியவைகளுக்கு இந்த கோஷ்ட பரிசீலனை கிடையாது. எப்போதும் யாவருக்கும் ஸித்தமான மந்திரங்கள் இவை. அதனால் பஞ்சதசாக்ஷரீ எனும் ஸ்ரீவித்தியை ஸித்தமான மந்திரமாகும். ஸித்த வித்யாவாக இருப்பவள் தேவி. (472)

2193-01 ஸித்த மாதா. சித்தர்களைக் காப்பாற்றும் தாய்.

2193-02 சித்தி பெற்றவர்களைத் தாய் போன்று அரவணைத்து அவர்களுக்கு இதமானவைகளை அளிப்பவள். சித்தர்கள் விஷயத்தில் மாதா என்ற சொல்லால் குறிப்பிடும் தன்மைகள் அனைத்தும் கொண்டவள். (பாரா 0601, 2177) சித்தர்களைத் தன்னுள் அடக்கிக் கொண்டு காப்பவள், அவர்களை எல்லை மீறிச்செல்லாமல் தடுப்பவள், அவர்களுக்கு வேண்டியதையெல்லாம் அவர்கள் கோராமலிருக்கையிலேயே வாரி வழங்குபவள், சித்தர்களின் தாயான தேவி. (473)

2194-01 யசஸ்விநீ. புகழ் உள்ளவள்.

2194-02 இயற்கையாகவே அவள் புகழுள்ளவள். வியக்கத்தக்க செயலாலும் அன்பு, கருணை முதலியவைகளை அவ்வப்போது காட்டுவதாலும் ஏற்படும் செயற்கையான புகழ் மாறுபடும். இவைகளை எதிர்பாராமல் இயற்கையாகவே ஏற்பட்ட புகழ் மாறுபடாதது. அத்தகைய புகழைத் தன்மையாகக் கொண்டவள். (474)

## அதிகாரம் 22

# தேவியின் யோகினீ வடிவங்கள்

**2201-01** நியாஸங்களைப்பற்றிச் சுருக்கமாக முன்னர் விளக்கம் தரப்பட்டுள்ளது (பா. 0214-05). நியாஸம்-பதித்து வைப்பது. தேவதையின் சக்தி நம் உடலிலும் உள்ளத்திலும், ஒவ்வொரு பகுதியிலும் பதியவேண்டும் என்ற உள்ளமார்ந்த பிரார்த்தனையுடன்

அந்தந்த மந்திராக்ஷரங்களைச் சொல்லி அந்தந்த தேவதை வடிவைத் தியானம்செய்து அந்த அந்த இடத்தைத் தொட்டு அங்கு தேவதா சக்தி பதிந்துவிட்டதாகப் பாவனை செய்வதே நியாஸம்.

2201–02 ஷோடா நியாஸம் என்பது தேவி வழிபாட்டிலுள்ள தனித்த நியாஸ முறை (பா. 0214-05). இது ஆறு வகைப்படும். 1. கணேச நியாஸம், 2. கிரஹ நியாஸம், 3. நக்ஷத்திர நியாஸம், 4. யோகினீ நியாஸம், 5. ராசி நியாஸம், 6. பீட நியாஸம் என. நான்காவதாகிய யோகினீ நியாஸம் 475-534 நாமங்களால் விளக்கப்பெறுகின்றது. ஆறுவது பீட நியாஸம் பஞ்சாசத்பீட ரூபிணீ என்ற 833ம் நாமத்தால் விளக்கப் பெறுகிறது. இந்த நியாஸங்கள் 'அ' முதல் 'க்ஷ' வரை உள்ள மாத்ருகாக்ஷரங்களாலும் செய்யப்படுவதால் மாத்ருகா நியாஸங்களின் உட்படும். "கணேச-க்ரஹ-நக்ஷத்ர யோகினீ-ராசி-ரூபிணீம்1 தேவீம் பீடமயீம் வந்தே மாத்ருகாம் ஸுந்தரீம் பராம்" என்று ஆறு நியாஸங்களில் குறிப்பிட்ட தேவதைகள் அனைவரையும் தேவியாகப் பாவித்து நியாஸம் செய்வர். இந்த அதிகாரத்தில் யோகினீ-பீட நியாஸங்களைத் தவிர மற்ற நான்கு நியாஸங்களைப் பற்றி முன்னதாக அறிவோம்.

2201–03 (1) கணேச நியாஸம்: 51 கணேசர்கள். இளம் சூரியனுக்கொப்பான நிறம், யானை முகம், முக்கண்கள், பாசம், அங்குசம், வரம், அபயம் தாங்கிய நான்கு கைகள், இடது தொடையில் அமர்ந்த கணேச சக்திகள். இப்படிக் காட்சி தருவர். கணேச சக்திகள் இடது கையில் தாமரை தாங்கி வலது கையால் கணேசரை அணைத்து சிந்தூர வர்ணம் கொண்டவர்களாகக் காணப்படுவர். அவர்களின் பெயர்கள், அவர்களை நியாஸம் செய்ய வேண்டிய உடல் பகுதி இவைகளின் குறிப்பு பின்வருமாறு: (முதலில் சக்தியின் பெயர், அடுத்து கணேசரின் பெயர், நகக் குறியினுள் நியாஸத்திற்கான உடற்பகுதி).

1. ஸ்ரீ, விக்நேசர், (தலை)
2. ஹ்ரீ, விக்நராஜர் (முகம்)
3. துஷ்டி, விநாயகர் (வலது கண்)
4. சாந்தி, சிவோத்தமர் (இடது கண்)
5. புஷ்டி, விக்நஹ்ருத் (வலது காது)
6. ஸரஸ்வதீ, விக்நகர்த்தா (இடது காது)
7. ரதி, விக்நராஜர் (வலது மூக்கு)
8. மேதா, கணநாயகர் (இடது மூக்கு)
9. காந்தி, ஏகதந்தர் (வலது கன்னம்)

10. காமிநீ, த்விதந்தர் (இடது கன்னம்)
11. மோஹிநீ, கஜவக்திரர் (மேல் உதடு)
12. ஜடா, நிரஞ்ஜநர் (கீழ் உதடு)
13. தீவ்ரா, கபர்தப்ருத் (மேல் பல்வரிசை)
14. ஜ்வாலிநீ, தீர்க்கமுகர் (கீழ் பல்வரிசை)
15. நந்தா, சங்கு கர்ணர் (நாக்கின் நுனி)
16. ஸுரஸா, விருஷத்வஜர் (தொண்டை)
17. காமரூபிணீ, கண நாதர் (வலது புஜம்)
18. ஸுப்ப்ரு, கஜேந்திரர் (வலது முழங்கை)
19. ஜயிநீ, சூர்ப்பகர்ணர் (வலது மணிக்கட்டு)
20. ஸத்யா, திரிலோசனர் (வலது கைவிரல் அடிப்பகுதி)
21. விக்நஸ்ரீ, லம்போதரர் (வலது கைவிரல் நுனி)
22. ஸுரூபா, மஹாநாதர் (இடது புஜம்)
23. காமதா, சதுர்மூர்த்தி (இடது முழங்கை)
24. மதவிஹ்வலா, ஸதாசிவர் (இடது மணிக்கட்டு)
25. விகடா, ஆமோதர் (இடது கைவிரல் அடிப்பகுதி)
26. பூர்ணு, துர்முகர் (இடது கைவிரல் நுனி)
27. பூதிதா, ஸுமுகர் (வலது தொடையிடுக்கு)
28. பூமி, பிரமோதர் (வலது முழங்கால்)
29. சக்தி, ஏகபாதர் (வலது கணுக்கால்)
30. ரமா, த்விஜிஹ்வர் (வலது கால்விரல் அடிப்பகுதி)
31. மானுஷீ, சூரர் (வலது கால் விரல் நுனி)
32. மகரத்வஜா, வீரர் (வலது தொடை இடுக்கு)
33. வீரிணீ, ஷண்முகர் (இடது முழங்கால்)
34. ப்ருகுடீ, வரதர் (இடது கணுக்கால்)
35. லஜ்ஜா, வாமதேவர் (இடது கால் விரல் அடிப்பகுதி)
36. தீர்க்ககோணு, வக்ரதுண்டர் (இடது கால் விரல் நுனி)
37. தநுர்தரா, த்விரண்டகர் (வலது விலா)
38. யாமிநீ, ஸேநாநீ (இடது விலா)
39. ராத்ரி, கிராமணீ (முதுகு)
40. சந்த்ரிகா, மத்தர் (தொப்புள்)
41. சசிப்ரபா, விமத்தர் (வயிறு)
42. லோலா, மத்தவாஹனர் (இதயம்)
43. சபலா, ஜடீ (வலது தோள்)
44. ருத்தி, முண்டீ (மென்னி-கழுத்தின் பின்புறம்)
45. துர்பகா, கட்கீ (இடது தோள்)
46. ஸுபகா, வரேண்யர்
(இதயத்திலிருந்து வலதுகை விரல் நுனி வரை)

47. சிவா, விருஷகேதனர்
(இதயத்திலிருந்து இடது கை விரல் நுனி வரை)
48. துர்கா, பக்ஷயப்ரியர்
(இதயத்திலிருந்து வலது கால் விரல் நுனி வரை)
49. காளீ, கணேசர் (இதயம் முதல் இடதுகால் நுனிவரை)
50. காலகுப்ஜிகா, மேகநாதர் (இதயத்திலிருந்து குறிவரை)
51. விக்நஹா(கா)ரிணீ, கணேச்வரர்
(இதயத்திலிருந்து தலை வரை)

2201-05 கிரஹந்யாஸம் — கிரகங்கள் 9. அவர்கள் திவ்யா பரணங்கள் பூண்டவர்களாய் இடது தொடையில் இடது கையை வைத்து வலது கையில் வரத முத்திரை தாங்கி உட்கார்ந்திருப் பார்கள். அவர்களது மடியில் அவர்களது சக்திகள் வரத-அபய முத்திரை தாங்கியவர்களாக அமர்ந்திருப்பார்கள். சக்தியின் பெயர், கிரஹத்தின் பெயர், நிறம், நியாஸம் செய்யுமிடம் (நகக் குறி யினுள்) என்ற வரிசையில் குறிப்பு :

1. ரேணுகா, சூர்யன், சிகப்பு (மார்புக் குழியில்)
2. அமிருதா, சந்திரன், வெண்மை (புருவ நடுவில்)
3. தர்மா, அங்காரகன், சிகப்பு (இரு கண்களில்)
4. யசஸ்விநீ, புதன், கார்மேக நிறம்
(காதுகளுக்குக் கீழுள்ள குழியில்)
5. சாங்கரீ, பிருஹஸ்பதி, மஞ்சள் (கழுத்தில்)
6. ஜ்ஞான ரூபா, சுக்கிரன், மஞ்சள் படர்ந்த வெண்மை
(இதயம்)
7. சக்தி, சனைச்சரன், கருப்பு (தொப்புள்)
8. கிருஷ்ணா, ராஹு, புகை நிறம் (முகம்)
9. தூம்ரா, கேது, அடர்ந்த புகைநிறம் (ஆஸனத் துவாரம்)

2201-06 நக்ஷத்திர நியாஸம்: பேரொளியுடன் எரிகின்ற நெருப்பு போன்ற தோற்றம், வரத-அபய முத்திரை தாங்கிய இரு கைகள், கூப்பிய இரு கைகள், (நான்கு கைகள்) இப்படி எல்லா ஆபரணங்களும் அணிந்தவர்களாகத் தோன்றுகிறார்கள்.

1. அச்விநீ (நெற்றி)
2. பரணீ (வலது கண்)
3. கிருத்திகா (இடது கண்)
4. ரோஹிணீ (வலது காது)
5. மிருகசிரஸ் (இடது காது)
6. ஆர்த்ரா (வலது மூக்கு)
7. புனர்வஸு (இடது மூக்கு)
8. புஷ்யா (தொண்டை)
9. ஆச்லேஷா (வலது தோள்)
10. மகா (இடது தோள்)

11. பூர்வ பல்குநீ (முதுகு)
12. உத்தர பல்குநீ (வலது முழங்கை)
13. ஹஸ்தா (இடதுமுழங்கை)
14. சித்ரா (வலது மணிக்கட்டு)
15. ஸ்வாதி (இடது மணிக்கட்டு)
16. விசாகா (வலது கை)
17. அநுராதா (இடது கை)
18. ஜ்யேஷ்டா (தொப்புள்)
19. மூலா (இடுப்பு)
20. பூர்வாஷாடா (வலது தொடை)
21. உத்தராஷாடா (இடது தொடை)
22. சிரவண (வலது முழங்கால்)
23. தனிஷ்டா (இடது முழங்கால்)
24. சததாரகா (வலது கணைக்கால்)
25. பூர்வபாத்ரபதா (இடது கணைக்கால்)
26. உத்தரபாத்ரபதா (வலது பாதம்)
27. ரேவதீ (இடது பாதம்)

2201-07 ராசி நியாஸம்: 12 ராசிகள். ஒவ்வொன்றுக்கும் தனிநிறம். (ராசியின் பெயர், நிறம், நியாஸம் செய்யவேண்டிய இடம் என்ற வரிசையில்)

1. மேஷம், சிகப்பு (வலது பாதம்)
2. விருஷபம், வெண்மை (குறியின் வலதுபுறம்)
3. மிதுனம், பச்சை (வயிற்றின் வலதுபுறம்)
4. கர்கடகம், மஞ்சள் படர்ந்த வெண்மை (இதயத்தின் வலது புறம்)
5. ஸிம்ஹம், பல நிறங்களின் கலவை (வலது புஜம்)
6. கந்யா, கருப்பு (தலையின் வலது புறம்)
7. துலா, கருமையும் மஞ்சளும் படர்ந்த சிகப்பு (தலையின் இடதுபுறம்)
8. விருச்சிகம், கருமை கலந்த சிகப்பு (இடது புஜம்)
9. தனுஸ், செம்பட்டை (இதயத்தின் வலதுபுறம்)
10. மகரம், பொட்டு பொட்டாகப் பல நிறங்கள் கலந்தது (வயிற்றின் இடது பாகம்)
11. கும்பம், கருப்பு (குறியின் இடது பாகம்)
12. மீனம், புகை நிறம் (இடது பாதம்)

2202-01 யோகினீ நியாஸம்-யோகினிகள் பற்றிய விளக்கம் முன் (பாரா. 0911-12, 1639-02) தரப்பட்டுள்ளது. மீண்டும் 653-655 நாமங்களிலும் மேலும் விளக்கம் பெறலாம். தேவி, தேவியை பூஜிக்குமிடமான ஸ்ரீ சக்கிரம், அவளது மந்திரமான ஸ்ரீ வித்யை, அதனை உபதேசித்த குரு, வழிபடும் சிஷ்யன் என்ற ஐவரும் ஒரே தத்துவம்

என உணரும் ஐக்கிய பாவனை யோகமாகும். அந்த யோக சக்தி மிக்கவர்களானதாலும் யோக சக்தியை அருள்பவர்களானதாலும், இவர்கள் யோகினிகள்.

2202-02 டாகினீ, ராகினீ, லாகினீ, காகினீ, ஸாகினீ, ஹாகினீ, யாகினீ என ஏழு யோகினிகள், 51 சக்திகளால் சூழப் பட்டவர்களாக, முறையே விசுத்தி, அனாஹதம், மணிபூரகம், ஸ்வாதிஷ்டானம், மூலாதாரம், ஆஜ்ஞை, ஸஹஸ்ராரம் என்ற ஏழு சக்கிரங்களில் வசிக்கிறார்கள். இந்த ஏழு சக்கிரங்கள் நம் உடலில் அமைந்த ஸ்ரீ சக்கிரமாகும்.

2203-01 யோகினிகள் அமர்ந்துள்ள சக்கிரங்கள், பொது வாக இந்த சக்கிரங்களைக் குறிப்பிடும்போது மூலாதாரம் தொடங்கி விளக்கம் தருவது மரபு. ஆனால் இங்கு நான்கு சிறப்பான காரணங் களால் விசுத்தி முதல் ஆறு சக்கிரங்கள் கணக்கிடப்பெறுகின்றன.

2203-02 1. 'தஸ்மாத்வா ஏதஸ்மாத் ஆத்மந: ஆகாச: ஸம்பூத:' என உபநிடதம் முதலில் தோன்றிய தத்துவமாக ஆகாயத்தைக் குறிப்பிட்டுள்ளது. ஆகாயத்திலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து அக்கினியும், அக்கினியிலிருந்து ஜலமும், ஜலத்திலிருந்து பிருதிவி யும் உண்டாயின. ஐந்து பூதங்களும் சேர்ந்து ஞானசக்தியின் உதவியால் மனத்தை உண்டாக்கின. அதனால் இந்த ஸிருஷ்டிக் கிரமத்தை ஒட்டி, ஆகாயத்தின் ஸ்தானமாகிய விசுத்தி சக்கிரம் முதலில் குறிப்பிடப்பட்டுள்ளது. அதே வரிசையில் வாயுஸ்தான மாகிய அனாஹதம், அக்கினிஸ்தானமாகிய மணிபூரகம், ஜலஸ்தான மாகிய ஸ்வாதிஷ்டானம், பிருதிவீஸ்தானமாகிய மூலாதாரம், மனஸ் ஸ்தானமாகிய ஆஜ்ஞை என்ற வரிசையில் அந்தந்த சக்கிரங்களி லுள்ள யோகினிகள் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

2203-03 2. ஆகாயம் முதலில் தோன்றியது. அதனால் விசுத்தி சக்கிரத்தில் வீற்றிருக்கும் டாகினீ என்ற யோகினி ஆகாச தத்துவத்துடன் யோகம் கொண்டவளாதலால் ஒரு முகம் உள்ளவ ளாக இருக்கிறாள். ஆகாயத்திலிருந்து வாயு தோன்றியது. அதில் ஆகாய தத்துவமும் வாயு தத்துவமும் அடங்கியிருப்பதால் அவைக ளுடன் யோகம் கொள்ள அநாஹதத்தில் இடம்பெற்ற ராகினீ இரண்டு முகம் கொண்டுள்ளாள். வாயுவிலிருந்து அக்கினி தோன் றியது. அக்கினியில் அக்கினி தத்துவத்துடன் அதன் காரணங்க ளான ஆகாச-வாயு-தத்துவங்களும் கூடியிருப்பதால் அவைகளுடன் யோகம் கொள்ள அக்கினிஸ்தானமான மணிபூரகத்தில் லாகினிக்கு

மூன்று முகங்கள். அக்கினியிலிருந்து ஜலம் தோன்றியது. ஜலத்தில் ஆகாச-வாயு-அக்கினி-ஜலதத்துவங்களுள்ளதால் ஜலஸ்தானமான ஸ்வாதிஷ்டானத்தில் உள்ள காகினிக்கு 4 முகங்கள். அப்படியே மூலாதாரத்திலுள்ள ஸாகினிக்கு 5 முகங்கள். ஆஜ்ஞையில் பஞ்ச பூதங்கள் மனம் என்ற ஆறின் யோகம் கொள்ள ஹாகினிக்கு ஆறு முகங்கள். இப்படி வரிசையாக 1-2-3-4-5-6 என்ற முகங்கள் கொண்டமையாலும் விசுத்தி முதல் கணக்கிட நேர்ந்தது.

2203-04 3. இந்த யோகினிகள் சரீரத்தில் உள்ள ஏழு தாதுக்களில் தங்கி அவைகளை நிறைவுள்ளவைகளாகச் செய்கிறார்கள். அந்த ஏழு தாதுக்கள் வளர்ந்து புஷ்டிபெற உதவும் ஏழு அன்ன வகையில் நாட்டமுள்ளவர்கள். அந்த தாதுக்கள் உடலில் ஏற்படும் வரிசை பின்வருமாறு :—நாம் உண்ட உணவின் சாரம் ரஸமாக மாறுகிறது. அந்தப் பால் போன்ற சாரமான ரஸம் உடலில் உள்ள தாத்வக்னிகளால் பாகம் செய்யப்படுகிறது. பாலில் ஏடுபோல் அந்த ரஸத்தின் பெரும் பகுதி தோலாகவும் ஜவ்வுகளாகவும் மாறுகிறது. இதை த்வக் என்பர். ரஸமும் பாகமடைந்து அதிலிருந்தும் சாரம் பிரிந்து இரத்தமாகிறது. இரத்தத்திலிருந்து ஸாரமாக மாம்ஸம், (தசை) அதிலிருந்து ஸாரமான மேதஸ், (கொழுப்பு) அதிலிருந்தும் ஸாரமாக அஸ்தி, (எலும்பு) அதன் சாரமாக மஜ்ஜா, (எலும்பினுள் உள்ள கொழுப்பு) அதிலிருந்தும் சாரமாக சுக்கிலம் என்ற ஜீவதாது இவை உண்டாவதாக ஆயுர் வேதம் தாதுக்களின் இயற்கையான உற்பத்தியை வரிசைப்படுத்தி யுள்ளது. அந்த வரிசையில் ரஸத்தின் அம்சமாகிய தோலில் வசிக்கும் டாகினீ முதலில் இடம் பெறுகிறாள். மற்றவர்களும் தாது வரிசையை ஒட்டித் தொடர்ந்து விளக்கப்படுகிறார்கள்.

2203-05 4. இந்த யோகினிகள் எழுவருக்கும் 51 மாத்ருகா அக்ஷர சக்திகள் பரிவாரமாக அமைந்துள்ளனர். விசுத்தியில் அ முதல் அ: வரை உள்ள அக்ஷரங்களின் சக்திகள், அநாஹதத்தில் க முதல் ட[2] வரை உள்ள அக்ஷரசக்திகள் என்றவாறு வரிசை அமைவதாலும் விசுத்தி முதல் கணக்கிட நேர்ந்துள்ளது.

2204-01 இவர்கள் எல்லோரும் தேவியின் வெவ்வேறு தோற்றங்களே. யோகசக்தி மிக்க இவர்களை வழிபடுவதாலும் உடலில் அமைந்த சக்கிரங்களில் அமர்ந்திருக்கும் இவர்களை ஐக்யபாவனையுடன் தியானிப்பதாலும், அந்தந்த ஸ்தானத்திலுள்ள பூதஜயம் ஏற்படும். அந்தந்த ஸ்தானத்தின் விசேஷ சக்திகளுடன் யோகம் நமக்கு ஏற்படும். யோகசக்தி மிக்க யோகினிகளாக இருப்பவளும்

தேவியே. (நா. 653) அவர்களை வழிபடும் நமக்கு யோக சக்தி அளிப்பவளும் தேவியே. (நா. 654) யோகத்தால் ஐக்யபாவனை யுடன் அனுபவிக்கப்பெறுபவளும் தேவியே (நா. 655).

2204-02 இந்த ஏழு யோகினிகளைப்பற்றி நாமங்கள் தரும் விளக்கத்தைக் காண்பதற்கு முன் அவற்றின் பெயர், அவை வாழும் சக்கிரம் முதலிய விவரங்களைப் படரூபமாகக் கண்டு விளக்கம் பெறுவது பயன் தரும்.

| யோகினீ | சக்கிரம் | நிறம் | முகம் | எழுத்து | தாது |
|---|---|---|---|---|---|
| டாகிநீ | விசுத்தி | ஆரக்தம் | 1 | அ-அ: | தோல் (ரஸம்) |
| ராகிநீ | அநாஹதம் | ச்யாமம் | 2 | க-ட² | ரக்தம் |
| லாகிநீ | மணிபூரகம் | ரக்தம் | 3 | ட³-ப² | மாம்ஸம் |
| காகிநீ | ஸ்வாதிஷ் -டானம் | பீதம் | 4 | ப³-ல | மேதஸ் |
| ஸாகிநீ | மூலாதாரம் | புகைநிறம் | 5 | வ-ஸ | அஸ்தி |
| ஹாகிநீ | ஆஜ்ஞா | சுக்லம் | 6 | ஹ-க்ஷ | மஜ்ஜா |
| யாகிநி | ஸஹஸ்ராரம் | எல்லா | எண் ணற்றவை | எல்லா | சுக்கிலம் |

## டாகினீயோகினி

98 विशुद्धिचक्रनिलया(आ)रक्तवर्णा त्रिलोचना । 477

खट्वांगादिप्रहरणा वदनैकसमन्विता ॥ 479

விசுத்திசக்ரநிலயா (ஆ)ரக்தவர்ணா த்ரிலோசநா ।

கட்வாங்காதிப்ரஹரணா வதனைகஸமன்விதா ॥

**2205-01 விசுத்திசக்ரநிலயா. விசுத்தி சக்கிரத்தில் தங்குபவள்.**

2205-02 விசுத்தி சக்கிரம் ஸுஷும்நா காண்டத்தில் தொண்டைக்குழிக்குப் பின் 16 தளங்களுள்ள தாமரை போன்று அமைந்துள்ளது. இது ஆகாச தத்துவம் தோன்றிய இடம். அதன் நடுவில் உள்ள மொட்டில் தங்கி நிற்பவள் தேவி. (475)

**2206-01 ஆரக்தவர்ணா. சிகப்பு கலந்த வெண்ணிறமுள்ளவள்.**

2206-02 பாதிரிப்பூவின் நிறம் ஆரக்தம் -(ஆ-சிறிது, ரக்தம்-சிவந்தது). பாதிரிப்பூவின் நிறமுடைய மேனி உள்ளவள். விசுத்தி

சக்ரநிலயாரக்தவர்ணா என்று இரு சொற்கள் சேரும்போது 'ஆ' மறைந்துள்ளது. ரக்தவர்ணா என்ற நாமம் (நா-499) பின்வருகிறது. இந்த மாறுதல் கவனிக்கத்தக்கது. (476)

2207-01 த்ரிலோசநா. மூன்று கண்கள் உள்ளவள். (477)

2208-01 கட்வாங்க-ஆதி-ப்ரஹரணா. கட்வாங்கம் முதலிய ஆயுதங்களை உடையவள்.

2208-02 கட்வாங்கம்-கட்டில் கால். அதனைப்போல் மேல் பெருத்துக் கீழ் சிறுத்து அமைந்துள்ள தடி கட்வாங்கம் என்ற ஆயுதமாகும். ஒரு குண்டாந்தடியின் மேல் மனிதன் தலையோட்டைப் பதித்தது இந்த ஆயுதம் என்பர் சிலர். டாகினி எனும் இந்த யோகினிக்கு நான்கு கைகள். அவைகளில் கட்வாங்கம், கத்தி, சூலம், கேடயம் இவைகளைக் கொண்டவள் தேவி. (478)

2209-01 வதன-ஏக-ஸமந்விதா. ஒரு முகத்துடன் கூடியவள்.

2209-02 ஆகாச தத்துவத்தை விளக்கும் ஒரு முகமுள்ளவள் டாகினிதேவி. (479)

99 पायसान्नप्रिया त्वक्स्था पशुलोकभयङ्करी । 482
अमृतादिमहाशक्तिसंयुता डाकिनीश्वरी ॥ 484

பாயஸாந்நப்ரியா த்வக்ஸ்தா பசுலோகபயங்கரீ ।
அம்ருதாதிமஹாசக்திஸம்யுதா டாகிநீச்வரீ ॥

2210-01 பாயஸ-அந்ந-ப்ரியா. பாயஸான்னத்தில் விருப்பமுள்ளவள்.

2210-02 பாலில் வேகவைத்த அன்னம் பாயஸான்னமாகும். இது ரஸ தாதுவை வளர்க்கவல்ல புஷ்டிகரமான உணவு. இதனை விரும்பி நிவேதனமாக ஏற்பவள் தேவி. (480)

2211-01 த்வக்ஸ்தா. தோலில் இருப்பவள்.

2211-02 உட்கொண்ட உணவு, ஜீர்ணகோசத்தில் உள்ளே உள்ள பஞ்சபூதாக்கினி, ஜாடராக்கினி முதலிய ஜீர்ணத்திற்கு உதவும் அக்கினி சக்தியால் ஜீர்ணமாகி மலமாக வெளியேற்றப்பட வேண்டியவை பிரிக்கப் பெற்றதும், ரஸாயனிகள் மூலம் சாரம் உறிஞ்சப்பெற்று ரஸம் எனும் தாதுவாகச் சுற்றி வருகிறது. அப்போது

அதனையும் நாத்வக்னி பாகமடையச் செய்கிறது. அப்போது பால் ஏடுபோல் ரஸ தாது தோலாக மாறுகிறது. அந்தத் தோலில் இருப்பவள் தேவி. (481)

2212-01 பசு-லோக-பயங்கரீ. பசுக்களாக இருப்பவர்களுக்கு பயத்தை விளைவிப்பவள்.

2212-02 விருப்பு-வெறுப்புகளுக்கு ஆட்பட்டு ஒவ்வொன்றையும் வேறுபட்டவைகளாகக் காண்பவன் பசு. தேவதை வேறு; அதனை உபாசிக்கும் தான் வேறு என நினைப்பவன் பசு. (நா-354) வேறுபட்டவன் (தன்னைச் சேர்ந்தவன் அல்ல) என எண்ணிய நொடியிலேயே அவனிடமிருந்து பயம் ஏற்படுகிறது. அப்படி பயந்தவர்களுக்கு - பசுவாயிருப்பவர்களுக்குத் தேவி பயத்தை விளைவிக்கிறாள். தேவதையிடம் ஆத்ம பாவனையுடன் நெருங்கி வழிபடுபவர்களுக்குப் பயத்தைப் போக்குகிறாள். தடிகொண்டவனைக் கண்டதும் அவனைத் தனக்கெதிரி என நினைத்துப் பசு மருண்டு ஓடும். அவன் பசுவைக் காப்பாற்றுவதற்காகவும் அதற்கேற்படக்கூடிய கெட்ட விளைவுகளிலிருந்தும் தடுத்தாட்கொள்ளவுமே தடி ஏந்தியிருக்கிறான். தடியிடம் உள்ள வெறுப்பால் தடிகொண்டு தன்னைக் காப்பவனை அறியாமல், அவனை வேற்றானாக மதித்துப் பசு பயப்படுவது போல், மனிதன் தெய்வத்திடம் வேறுபட்டதென்ற எண்ணத்துடன் நெருங்கும்போது தெய்வம் பயங்காட்டிச் சோதிக்கிறது. (482)

2213-01 அம்ருதா-ஆதி-மஹாசக்தி-ஸம்வ்ருதா. அமிருதா முதலிய பெருமை மிக்க சக்திகளால் சூழப்பட்டவள்.

2213-02 விசுத்தி சக்கிரம் 16 இதழ்கள் கொண்டது. அதன் தளங்களில் உயிர் எழுத்துக்கள் பதினாறின் சக்திகள் அமர்ந்து டாகினியோகினியைச் சூழ்ந்திருக்கின்றனர். அவர்களின் பெயர்கள் அந்த உயிர் எழுத்துக்களையே முதல் எழுத்தாகக் கொண்டிருக்கும். அவை பின்வருமாறு: அம்ருதா, ஆகர்ஷிணீ, இந்திராணீ, ஈசாநீ, உமா, ஊர்த்வகேசீ, ருத்திதா, ரூகாரா, லுகாரா, லூகாரா, ஏகபதா, ஐச்வர்யாத்மிகா, ஓங்காரா, ஔஷ்தி, அம்பிகா, அக்ஷரா என்பனவாகும். (483)

2214-01 டாகினீ-ஈச்வரீ. டாகினீச்வரீ எனும் யோகினி வடிவம் பெற்றவள்.

2214-02 இந்த 10 நாமங்களால் விசுத்தி சக்கிரத்தில் அமர்ந்த யோகினியின் நிலை விளக்கப்பெற்றது. இந்த யோகினி வடிவில் அமர்ந்திருப்பவளைத் தேவி என்ற பாவனையுடன் அவளுக்குப் பிரிய

மான பாயஸான்னத்தை நிவேதனம் செய்து வழிபடத் தோலிலும் ரஸதாதுவிலும் அவளது சக்தி சிறப்பாக விளங்கும். பசு எண்ணம் நீங்கும்.

2215-01 "கழுத்தில் 15 தளமுள்ள விசுத்திஸ்தானத்தில் ரஸதாதுவில் அபிமானமுள்ளவளும் ஒருமுகமுள்ளவளும் கட்வாங்கம் முதலிய ஆயுதங்கள் ஏந்தியவளும், வெண்ணிறமுள்ளவளும், தத்துவம் அறியாதவர்களுக்குப் பயம் தருபவளும், பாயஸான்னத்தில் விருப்பமுள்ளவளும், அம்ருதா முதலிய சக்திகளால் சூழப்பட்டவளுமான டாகினீ எனும் யோகினியை தியானம் செய்கிறேன்." எனத் தொண்டைக் குழியில் தொடுவது முதல் யோகினி நியாஸமாகும். (484)

## ராகிணீயோகிநீ

100 अनाहताब्जनिलया श्यामाभा वदनद्वया । 487
दंष्ट्रोज्ज्वलाऽक्षमालादिधरा रुधिरसंस्थिता ॥ 490

அநாஹதாப்ஜநிலயா ச்யாமாபா வதநத்வயா I
தம்ஷ்ட்ரோஜ்வலா(அ)க்ஷமாலாதிதரா ருதிரஸம்ஸ்திதா II

2216-01 அநாஹத-அப்ஜ-நிலயா. அனாஹதமெனும் தாமரையில் வசிப்பவள்.

2216-02 இதயத்தின் பின் பக்கத்தில் ஸுஷும்நாகாண்டத்தில் உள்ள அநாஹதம் எனும் சக்கிரத்தில் தங்கியிருப்பவள் தேவி. இதற்குப் பன்னிரண்டு இதழ்கள். வாயுவின் ஸ்தானமிது. தாமரையின் நடுவில் உள்ள மொக்கின்மேல் ராகிணீ எனும் யோகினியாகத் தேவி அமர்ந்திருக்கிருள். (485)

2217-01 ச்யாமாபா. பசுமை கலந்த கருநிறமுள்ளவள்.

2217-02 ச்யாமம்-பசுமை கலந்த கருநிறம். மேகம் முதலியவற்றில் காணப்படுவது. அந்நிறமுள்ள திருமேனி கொண்டவள் தேவி. ச்யாமா-யௌவனத்தின் செழிப்புமிக்க பருவத்திலுள்ள, பெண், 16 வயதுடையவள். அவளைப் போன்ற தோற்றமுள்ளவள். (486)

2218-01 வதநத்வயா. இருமுகங்களுள்ளவள்.

2218-02 ஆகாசம் வாயு என்ற இரு தத்துவங்களை விளக்க இரண்டு முகங்கள் உள்ளவள். (487)

2219-01 **தம்ஷ்ட்ரா - உஜ்ஜ்வலா. தெற்றிப்பற்களால் ஒளி மிக்கவள்.**

2219-02 தம்ஷ்ட்ரா-கோரைப்பற்கள், காட்டுப்பன்றியுடையது போன்றவை. கருமையான உடலிற்கு ஒளியூட்டுவதாக-வெண்மை மிக்கதாகப் பளிச்சிடுவதாக வெளியே தோன்றுகின்றன. அதனுல் அழகாகத் தோன்றுபவள் தேவி. (488)

2220-01 **அக்ஷமாலா-ஆதி - தரா. அக்ஷமாலே முதலியதைத் தாங்கி நிற்பவள்.**

2220-02 'அ' முதல் 'க்ஷ' வரையிலுள்ள எழுத்துக்களாகப் பாவனே செய்யத்தக்க 51 மணிகள் கொண்ட மாலே அக்ஷமாலே-ஜபம் செய்ய உதவுவது. அக்ஷமாலே, சூலம், கபாலம் (மண்டை ஓடு), டமரு (உடுக்கை) இவைகளே நான்கு கைகளில் ஏந்தியவள் ராகிணீ யோகினி வடிவில் உள்ள தேவி.

2220-03 அக்ஷமாலேக்குப் பதில் சக்கிராயுதத்தைக் கொண்டவள் என்று சிலர் கூறுவர். அக்ஷம்-தேரின் அச்சு, அதன் மா-அழகு-லம்-அதனே கொண்டு சேர்ப்பது, அச்சில் கோர்த்துள்ள தேர்சக்கிரம், அதன் வடிவில் அமைந்த சக்கிராயுதம் முதலியவற்றை ஏந்தி நிற்பவள் எனப் பொருள் கூறவேண்டும். (489)

2221-01 **ருதிர-ஸம்ஸ்திதா. இரத்தம் எனும் தாதுவின் அபிமானி தேவதையாக விளங்குபவள்.**

2221-02 இரத்தம் எனும் தாதுவைத் தன்னுடையது என அபிமானித்து அதன் வளர்ச்சியிலும் சிறப்பிலும் அக்கரை காட்டும் தேவதையாக இருப்பவள் ராகிணீ. அந்த யோகினி வடிவில் உள்ளவள் தேவி. (490)

101 **कालरात्र्यादिशक्त्यौघवृता स्निग्धौदनप्रिया। 492**
**महावीरेन्द्रवरदा राकिण्यम्बास्वरूपिणी॥ 494**

**காலராத்ர்யாதிசக்த்யெளகவ்ருதா ஸ்நிக்தெளதநப்ரியா 1**
**மஹாவீரேந்த்ரவரதா ராகிண்யம்பாஸ்வரூபிணீ ll**

2222-01 **கால-ராத்ரியாதி - சக்தி-ஔக - வ்ருதா. காலராத்திரி முதலிய சக்திக் கூட்டத்தால் சூழப்பட்டவள்.**

2222-02 தாமரையின் 12 இதழ்களில் க முதல் ட[2] வரை உள்ள 12 அக்ஷரங்களின் அபிமானி தேவதைகளான காலராத்திரீ, கண்டிதா, காயத்ரீ, கண்டாகர்ஷிணீ, ஙார்ணு, சண்டா, சாயா, ஜயா,

ஜங்காரிணீ, ஞானரூபா, டங்கஹஸ்தா, டங்காரிணீ என்ற 12 சக்திகளின் கூட்டம் சூழ நிற்பவள் தேவி.

2222-03 ருத்திரனின் சக்தி காலராத்திரி; தமோ குணத்தின் வடிவானவள். ஸம்ஹார சக்தி பெற்றவள். மரணமடையும் தினத்தின் முந்தைய நாளிரவு காலராத்திரி எனப்படும். அந்த இரவில் மறுநாள் முடிவு நெருங்குவதை உணர்த்தும் கனவு முதலியன முன்னறிவிப்பாகத் தோன்றும் என்பர். (491)

**2223-01 ஸ்நிக்த-ஓதந-ப்ரியா. நெய்ப்பு மிகுந்த உணவில் நாட்டம் கொண்டவள்.**

2223-02 நெய் நிறையச் சேர்ந்து நெய்ப்பு மிகுந்த உணவு-ஸ்நிக்த-ஓதநம். அதனிடத்தில் ராகிணீ யோகினிக்கு நாட்டம் அதிகம். இரத்தத்தை வளர்க்கும் சக்தி மிக்க உணவு இது. இரத்தத்திலிருந்து மாம்ஸதாது தோன்றத்தக்கதாக, இரத்தத்தைச் சாரமிக்க தாதுவாக ஆக்கவல்ல உணவு ஸ்நிக்த-ஓதநம். (492)

**2224-01 மஹா-வீர-இந்த்ர-வரதா. மஹாவீரத் தலைவர்களுக்கு வரமளிப்பவள்.**

2224-02 இரா-ஈரா-சொற்கள்-பேச்சு. வி-இரா (ஈரா) யேஷாம்-பலவகைப்பட்ட பேச்சுக்கள், சிறப்பு மிக்க பேச்சுக்கள். அவைகளோடு கூடியவர்கள் மஹாவீரர்கள், சிறப்பு மிக்க பேச்சாளர்கள். அவர்களுக்கு இந்திரன் தலைவர். அவரவர்களுக்கு அவரவர் கோரியதை அளிப்பவள். தேவியின் புகழ்பாடிச் சிறப்புற்றவர்களுக்குக் கோரியதை வழங்குகிருள் தேவி.

2224-03 மஹாவீரம்-ஸோமயாகத்தில் ஸோம மது வைத்திருக்கும் கிண்ணம். அதனைக் கையில் ஏந்தியவர்கள் மஹாவீரர்கள். வேள்விக்காக மதுக்கிண்ணம் ஏந்திய மஹா வீரர்கள் தலைவருக்குக் கோரிய வரமளிப்பவள்.

2224-04 பிரும்மமே ஸோமரஸம். அதுவே மது. அதனைப் பருகுவதில்-பிரும்மானந்த பானத்தில்-ஈடுபட்டவர்கள். அதனால் இந்திரர்கள்-சிறப்பு மிக்க (பிரும்ம) நோக்குள்ளவர்கள். விழித்திருக்கும்போதும் கனவு காணும்போதும் தூங்கும்போதும் கூட துரிய 'நிலையில் காணத்தக்க பிரும்ம தர்சனம் பெற்றவர்கள். அவர்கள் கோரும் பிரும்ம சுகத்தை அளிப்பவள் தேவி.

2224-05 மஹாவீரன் பிரஹ்லாதன், இந்திரன் தேவேந்திரன், இவர்களிருவருக்கும் வரமளிப்பவள். தேவீபாகவதத்தில் இந்திரனுக்கும் பிரஹ்லாதனுக்குமிடையே நூருண்டுகள் கடுமையான

போர் நிகழ்ந்தபோது கடைசியில் தேவி தோன்றி இருவரையும் சமாதானப்படுத்தி அவர்கள் கோரிய வரத்தைத் தந்தாள் என்ற வரலாறு காண்கிறது. (493)

**2225-01 ராகிணீ-அம்பா-ஸ்வரூபிணீ. ராகிணீ என்ற யோகினி வடிவில் இருப்பவள்.**

2225-02 இந்த யோகினியை நெய்ப்பு மிக்க நெய்யன்னம் நிவேதனத்துடன் வழிபட ரத்ததாது சிறப்புடன் விளங்கும். பிரும்ம ஞானமும் அழகிய பேச்சும் உள்ளவராகலாம்.

2225-03 "அனுஹதத்தில் தெற்றிப் பற்கள் துலங்கும் இரு முகமுள்ளவளும் ரத்தாபிமானியும், அக்ஷமாலை முதலியதை ஏந்திய வளும் காலராத்திரி முதலிய சக்திகளால் சூழப்பட்டவளும், மஹா வீரர்களுக்கு வரமளிப்பவளும் முக்கண்கள் கொண்டவளுமான ராகிணீயை தியானிக்கிறேன்" என நெஞ்சுக்குழியைத் தொடுவது இரண்டாவது யோகினியின் நியாஸமாகும். (494)

## லாகிநீ யோகினி

102 **मणिपूराब्जनिलया वदनत्रयसंयुता ।** 496
**वज्रादिकायुधोपेता डामर्यादिभिरावृता ॥** 498

மணிபூராப்ஜநிலயா வதநத்ரயஸம்யுதா ।
வஜ்ராதிகாயுதோபேதா டாமர்யாதிபிராவ்ருதா ॥

**2226-01 மணிபூர-அப்ஜ-நிலயா. மணிபூரமெனும் தாமரையில் வசிப்பவள்.**

2226-02 மணிபூரம் என்ற சக்கிரம் 10 தளங்களுள்ளது. நாபியின் பக்கத்தில் ஸுஷும்நா காண்டத்தில் அமைந்தது. அக்கினியின் ஸ்தானம். அங்கு லாகினி யோகினி என்ற திருநாமம் பூண்டு தேவி வசிக்கிறாள். (495)

**2227-01 வதந-த்ரய-ஸம்யுதா. மூன்று முகங்கள் உள்ளவள்.**

2227-02 ஆகாசம் வாயு அக்கினி என்ற மூன்று பூததத்துவங்களை விளக்க மூன்று முகங்கள் கொண்டுள்ளாள் தேவி. (496)

**2228-01 வஜ்ர-ஆதிக - ஆயுத - உபேதா. வஜ்ரம் முதலான ஆயுதங்களுடன் கூடியவள்.**

2228-02 தன் நான்கு கைகளில் வஜ்ஜிரம், வேல், குண்டாந் தடி எனும் ஆயுதங்களையும் அபய முத்திரையையும் ஏந்தி நிற்கிருள் லாகினியாக விளங்கும் தேவி. (497)

**2229-01 டாமரீ-ஆதிபி:-ஆவ்ருதா. டாமரீ முதலிய சக்திக ளால் சூழப்பட்டவள்.**

2229-02 பத்து இதழ்கள் $ட^3$ முதல் $ப^2$ வரை உள்ள 10 அக்ஷரசக்திகளைத் தாங்கி நிற்கின்றன. அக்ஷரசக்திகள்—டாமரீ, டங்காரிணீ, ஞார்ணு, தாமஸீ, ஸ்தாண்வீ, தாக்ஷாயணீ, தாத்ரீ, நாரீ, பார்வதீ, பட்காரிணீ என்ற பெயர்களுள்ளவர்கள். அவர் களால் சூழப்பட்டவள் தேவி. (498)

**103 रक्तवर्णा मांसनिष्ठा गुडान्नप्रीतमानसा । 501**
**समस्तभक्तसुखदा लाकिन्यम्बास्वरूपिणी ॥ 503**

**ரக்தவர்ணு மாம்ஸநிஷ்ட்டா குடாந்நப்ரீதமாநஸா ।**
**ஸமஸ்தபக்தஸுகதா லாகிந்யம்பாஸ்வரூபிணீ ॥**

**2230-01 ரக்தவர்ணு. செந்நிறமுள்ளவள்.**

2230-02 மற்ருெரு நாமம் ஆரக்தவர்ணு-(பாரா. 2206-01) இது ரக்தவர்ணு. இரத்தம் தனது தாத்வக்னியால் பாகமடைந்ததும் அதன் ஸாரம் தசைக்கான மாம்ஸ தாதுவாக மாறுகிறது. அதனுல் செந்நிறம் ஏற்படுகிறது. (499)

**2231-01 மாம்ஸ-நிஷ்ட்டா. மாம்ஸத்தில் அபிமானமுள்ளவள்.**

2231-02 தசைகளாக அமையும் தாது மாம்ஸம். லாகினீ யோகினி அதனைத் தன்னிருப்பிடமாகக் கொண்டுள்ளாள். அதனி டத்தில் "தன்னுடைய தாது" என்ற அபிமானம் அவளுக்கு உண்டு. (500)

**2232-01 குட-அந்ந-ப்ரீத-மாநஸா. வெல்லப் பொங்கலால் மனத்திருப்தியடைந்தவள்.**

2232-02 வெல்லத்தோடு கலந்து வேகவைக்கப்பட்ட அன்னம் குடான்னம். அதனைப் பெறுவதால் அவளது மனம் மகிழ்ந்து நிறைவுறுகிறது. (501)

**2233-01 ஸமஸ்த-பக்த-ஸுகதா. எல்லா பக்தர்களுக்கும் சுகமளிப்பவள்.**

2233-02 பொறிகளும் மனமும் திருப்தி பெறச் செய்வது சுகம். அதனைத் தருபவள் தேவி. (502)

2234-01 லாகினி-அம்பா - ஸ்வரூபிணீ. லாகினி அம்பாளின் வடிவம் கொண்டவள்.

2234-02 "நாபிக்கு அருகிலுள்ள பத்து தளமுள்ள தாமரை வடிவிலுள்ள மணிபூரகத்தில் மூன்று முகங்களும் நான்கு கைகளும் செந்நிறமும் கொண்டு 10 சக்திகளால் சூழப்பட்டு வெல்லப் பொங்கலைப் படையலாகப் பெற்று மாம்ஸ தாதுவின் நிறைவை அளித்து எல்லா பக்தர்களையும் மகிழ்விக்கும் லாகினி தேவியை வணங்குகிறேன்" எனத் தொப்புளைத் தொடுவது லாகினி யோகினிக்கான நியாஸமாகும். (503)

## காகினீ யோகினீ

104 स्वाधिष्ठानाम्बुजगता चतुर्वक्त्रमनोहरा । 505
शूलाद्यायुधसंपन्ना पीतवर्णा(अ)तिगर्विता ॥ 508

ஸ்வாதிஷ்டானாம்புஜகதா சதுர்வக்த்ரமனோஹரா ।
சூலாத்யாயுதஸம்பந்நா பீதவர்ணா (அ)திகர்விதா ॥

2235-01 ஸ்வாதிஷ்டான - அம்புஜ - கதா. ஸ்வாதிஷ்டான மெனும் தாமரையை அடைந்தவள்.

2235-02 ஆறு தளங்களுள்ள தாமரை வடிவிலுள்ள ஸ்வாதிஷ்டானம் என்ற சக்கிரத்தில் தேவி அமர்ந்துள்ளாள், காகினீ என்ற யோகினியின் வடிவில். தொப்புளுக்கும், மூலாதாரத்திற்கும் இடையே இந்த சக்கிரம் அமைந்துள்ளது. (504)

2236-01 சதுர்-வக்த்ர-மநோ-ஹரா. நான்கு முகங்களால் மனதை ஈர்ப்பவள்.

2236-02 ஸ்வாதிஷ்டானம் ஜலமென்ற பூதத்தின் இருப்பிடம். ஜலத்தில் அதன் மூலகாரணமான ஆகாசம், வாயு, அக்னி என்ற மூன்று பூத சக்திகளும் ஜலத்தின் தனித்த சக்தியான ரஸமும் உள்ளபடியால் இந்த நான்கு பூத சக்திகளை விளக்குவதற்காக நான்கு முகங்களைக் கொண்டுள்ளாள் தேவி. (505)

2237-01 சூல-ஆதி-ஆயுத-ஸம்பந்நா. சூலம் முதலிய ஆயுதங்களுடன் கூடியவள்.

2237-02 சூலம், பாசம், கபாலம் எனும் மூன்று ஆயுதங்களையும் அபய முத்திரையையும் தனது நான்கு கைகளில் தாங்கி நிற்பவள் காகினீ. (506)

2238-01 பீத-வர்ணா. மஞ்சள் கலந்த செந்நிறமுள்ளவள். (507)

2239-01 அதிகர்விதா. மிக்க கர்வமுள்ளவள்.

2239-02 கொழுப்பு தாதுவில் வசிப்பவளானதால் கர்வமுள்ளவள். கர்வமுள்ளவனைக் கொழுப்பு அதிகமானவன் எனக் கூறுவர். (508)

105 मेदोनिष्ठा मधुप्रीता बन्धिन्यादिसमन्विता । 511
दध्यन्नासक्तहृदया काकिनीरूपधारिणी ॥ 513

மேதோநிஷ்ட்டா மதுப்ரீதா பந்திந்யாதிஸமந்விதா ।
தத்ய்ன்னாஸக்தஹ்ருதயா காகினீரூபதாரிணீ ॥

2240-01 மேதோ-நிஷ்ட்டா. கொழுப்பு தாதுவில் தங்குபவள்.

2240-02 உடலில் கொழுப்பாக மாறும் தாது மேதஸ் எனப்படும். மாம்ஸ தாது தனது தாது அக்னியால் பாகமடையும்போது அதன் ஸாரமாக மேதஸ் வெளிப்படுகிறது. நீர்த்து விடுவதால் சற்று மஞ்சள் படர்ந்த செந்நிறம் கொண்டது. அதனைத் தன்னிடமாகக்கொண்டு அதனிடத்தில் தனதென்ற அபிமானம் கொண்டவள் தேவி. (509)

2241-01 மது-ப்ரீதா. தேனில் விருப்பமுள்ளவள்.

2241-02 மது-தேன், தேறல் ஆன போதை தரும் பானகம். இரண்டிலும் பிரியமுள்ளவள். (510)

2242-01 பந்திநீ-ஆதி-ஸமந்விதா. பந்திநீ முதலியவர்களுடன் கூடியவள்.

2242-02 ப³ முதல் 'ல' முடிய ஆறு எழுத்துக்களின் தேவதைகளாகிய பந்திநீ, பத்திரகாளீ, மஹாமாயா, யசஸ்விநீ, ரக்தா, லம்போஷ்டீ என்ற சக்திகளால் சூழப்பட்டவள் காகினீ. (511)

2243-01 ததி-அந்ந-ஆஸக்த-ஹ்ருதயா. தயிர் அன்னத்தில் ஈடுபட்ட மனமுள்ளவள்.

2243-02 தயிர் கலந்து பிசையப்பட்ட அன்னம் தத்யன்னம். அதில் அதிக நாட்டமுள்ளவள். (512)

2244-01 காகினீ-ரூப-தாரிணீ. காகினீ வடிவைத் தாங்கியவள்.

2244-02 "ஸ்வாதிஷ்டானமெனும் சக்கிரத்தில் நான்கு முகங்களும் நான்கு கைகளும் மஞ்சள் கலந்த செந்நிறமும் கொண்டவளும் கர்வம் மிக்கவளும் கொழுப்பு தாதுவின் அபிமானி தேவதையும் தேனிலும் தயிரன்னத்திலும் விருப்பமுள்ளவளும் பந்திநீ முதலிய ஆறு சக்திகளால் சூழப்பட்டவளுமான காகினீ என்ற யோகினியை வணங்குகிறேன்" என்று தொப்புளுக்கும் குறிக்கும் நடுவே உள்ள பகுதியைத் தொடுவது காகினீயோகினிக்கான நியாஸமாகும். (513)

## ஸாகினீ யோகினி

106 मूलाधाराम्बुजारूढा पञ्चवक्त्राऽस्थिसंस्थिता । 516
अङ्कुशादिप्रहरणा वरदादिनिषेविता ॥ 518
107 मुद्गौदनासक्तचित्ता साकिन्यम्बास्वरूपिणी । 520

மூலாதாராம்புஜாரூடா பஞ்சவக்த்ரா(அ)ஸ்திஸம்ஸ்திதா 1
அங்குசாதிப்ரஹரணு வரதாதி நிஷேவிதா 11
முத்கௌதநாஸக்தசித்தா ஸாகிந்யம்பாஸ்வரூபிணீ 1

2245-01 மூல-ஆதார-அம்புஜ-ஆரூடா. மூலாதாரக் கமலத்தில் வீற்றிருப்பவள்.

2245-02 நான்கு தளமுள்ளது குண்டலினீ சக்தியின் ஆதாரமான மூலாதாரம். ஆஸனத்துவாரத்தின் மேல் அமைந்துள்ள சக்கிரம் இது. ஸாகிநீவடிவில் தேவி இங்கு அமர்ந்திருக்கிருள். (514)

2246-01 பஞ்சவக்த்ரா. ஐந்து முகமுள்ளவள்.

2246-02 மூலாதாரம் பிருதுவீதத்துவத்தின் ஸ்தானமாகும். பிருதுவீதத்துவத்தில் அதற்குக் காரணமான மற்ற நான்கு பூதங்களின் சக்திகளும் அடங்கியிருப்பதால் ஐந்து பூததத்துவங்களையும் விளக்குவதற்காக இந்த ஸ்தானத்தில் அமர்ந்துள்ள ஸாகினீ எனும் யோகினி ஐந்து முகம் கொண்டிருக்கிருள். (515)

2247-01 அஸ்தி-ஸம்ஸ்த்திதா. எலும்பில் உறைந்திருப்பவள்.

2247-02 எலும்பு எனும் தாது மேதஸ் தாதுவின் ஸாரமாக உண்டாகிறது. அதனிடம் 'தன் தாது' என்ற அபிமானம் கொண்டவள் ஸாகிநீ. அதனைத் தன்னிருப்பிடமாகவும் கொண்டிருக்கிருள். (516)

2248-01 அங்குச-ஆதி-ப்ரஹரணா. அங்குசம் முதலிய ஆயுதங்கள் உள்ளவள்.

2248-02 அங்குசம், தாமரை, புத்தகம், ஞானமுத்திரை இவைகளை நான்கு கைகளில் ஏந்தியவள் தேவி. தாமரை அமைதியின்மையை அழிப்பதால் ஆயுதமாகிறது. புத்தகமும் ஞான முத்திரையும் அறியாமையை அழிப்பதால் ஆயுதமாகின்றன. (517)

2249-01 வரதா-ஆதி-நிஷேவிதா. வரதா முதலியவர்களால் வழிபடப்பட்டவள்.

2249-02 மூலாதாரத்தின் நான்கு இதழ்களும் வ. ச. ஷ. ஸ என்ற நான்கு அக்ஷரங்களின் இருப்பிடம். அங்கு அந்த அக்ஷர சக்திகளான வரதா, ஸ்ரீ:, ஷண்டா, ஸரஸ்வதீ என்ற நால்வரும் ஸாகினீ தேவியை வழிபடுகிறார்கள். (518)

2250-01 முத்க-ஓதந-ஆஸக்த-சித்தா. பயற்றுப் பொங்கலில் ஈடுபட்ட மனமுள்ளவள்.

2250-02 பயறு தானியத்தை முக்கியமாகக் கொண்டது முத்க ஓதநம். அதனைத் தயாரிக்கும் முறை. அரிசி 32 பங்கு, பயற்றம் பருப்பு 16 பங்கு, வெல்லம் 8 பங்கு, தேங்காய் துருவல் 8 பங்கு, மிளகு 2 பங்கு, இந்துப்பு 1 பங்கு, ஜீரகம் ½ பங்கு, நெய் 8 பங்கு இவைகளை வேகவைக்கத் தேவையான பசுவின்பால், இவைகளைக் கொண்டு இளந்தீயில் வெந்த பொங்கல் முத்க ஓதனம் ஆகும். ஸாகினீ யோகினிக்கு அதனை உட்கொள்வதில் மிகுந்த விருப்பம் உண்டு. (519)

2251-01 ஸாகிநீ-அம்பா-ஸ்வரூபிணீ. ஸாகிநீ தேவியைத் தன் வடிவமாகக் கொண்டவள்.

2251-02 “மூலாதாரம் என்ற சக்கிரத்தில் வசிப்பவளும், ஐந்து முகமுள்ளவளும், அஸ்தி தாதுவில் உறைபவளும், அங்குசம் முதலியவற்றை ஏந்தியவளும், வரதா முதலிய நான்கு சக்திகளால் சூழப்பட்டவளும் பயறுப்பொங்கலில் விருப்பம் கொண்டவளுமான தேவியை வணங்குகிறேன்” என்ற பாவனையுடன் மூலாதார ஸ்தானத்தைத் தொடுவது ஸாகினீ நியாஸமாகும். இந்த யோகினியின் மேனி நிறம் இங்கு குறிப்பிடப் பெறவில்லை. புகை போன்ற நிறமுள்ளவள், முக்கண்களுள்ளவள், மதுவருந்தியதால் மதமுடையவள் என்றும் இவளது தியான சுலோகம் கூறும். (520)

## ஹாகினீ யோகினீ

आज्ञाचक्राब्जनिलया शुक्लवर्णा षडानना । 523
108 मज्जासंस्था हंसवतीमुख्यशक्तिसमन्विता । 525
हरिद्रान्नैकरसिका हाकिनीरूपधारिणी ॥ 527

ஆஜ்ஞாசக்ராப்ஜநிலயா சுக்லவர்ணா ஷடாநநா ।
மஜ்ஜாஸம்ஸ்த்தா ஹம்ஸவதீமுக்க்யசக்திஸமந்விதா ॥
ஹரித்ராந்நைகரஸிகா ஹாகிநீரூபதாரிணீ ॥

2252–01 ஆஜ்ஞா–சக்ர–அப்ஜ-நிலயா. ஆஜ்ஞாசக்கிரமெனும் தாமரையில் உறைபவள்.

2252–02 ஆஜ்ஞாசக்கிரம் புருவங்களுக்கிடையே உள்ளது. ஈரிதழ் தாமரை வடிவுடையது. அதில் ஹாகிநீ எனும் யோகினீ யாக இருப்பவள் தேவி. (521)

2253–01 சுக்ல-வர்ணா. வெண்ணிறமுள்ளவள். (522)

2254–01 ஷட்-ஆநநா. ஆறுமுகங்களுள்ளவள்.

2254-02 ஆஜ்ஞாசக்கிரம் மனத்தின் ஸ்தானம். மனத்தின் மூலப்பொருளான ஐந்து பூதங்களின் சக்திகளேயும் மனத்தின் சக்தியையும் விளக்குவதற்காக ஆறு முகங்கள் கொண்டவள். ஆஜ்ஞாசக்கிரமானது விசுத்தி முதலிய ஐந்து சக்கிரங்களுக்கும் தலைமை இடமானதால் அந்த சக்கிரங்களின் செயல்களேயும் கட்டுப்படுத்தும் சக்தி படைத்தது. அதனுல் ஆறு சக்திகளேயும் விளக்குவதற்காகத் தேவி ஆறுமுகங்களேக் கொண்டு செயலாற்று கிருள். (523)

2255–01 மஜ்ஜா-ஸம்ஸ்த்தா. மஜ்ஜை எனும் தாதுவில் இருப்பவள்.

2255–02 எலும்பினுள் உள்ள சத்து மஜ்ஜை. அதைத் தனது இருப்பிடமாகக் கொண்டவள். அதன் அபிமானி தேவதையாக அதனுள் உறைபவள் தேவி. (524)

2256–01 ஹம்ஸவதீ – முக்க்ய-சக்தி – ஸமந்விதா. ஹம்ஸவதியை முன்னிட்ட சக்திகளுடன் கூடியவள்.

2256-02 ஆஜ்ஞா சக்கிரத்தின் இருதளங்களிலும் ஹ – க்ஷ என்ற இரு அக்ஷர சக்திகள் ஹம்ஸவதீ க்ஷமாவதீ என்ற பெயருடன் விளங்குகின்றனர். அவர்கள் இருவரோடு கூடியவள் தேவி. (525)

2257-01 ஹரித்ரா-அந்ந - ஏக-ரஸிகா. மஞ்சள் பொங்கலில் தனித்த ஈடுபாடுள்ளவள்.

2257-02 மஞ்சள் பொடி சேர்த்துப் பொங்கிய அன்னம் ஹரித் திரான்னம். அதனிடம் அதிக ஈடுபாடு கொண்டவள் தேவி. (526)

2258-01 ஹாகிநீ-ரூப - தாரிணீ. ஹாகிநீ என்ற வடிவைக் கொண்டவள்.

2258-02 ''ஆஜ்ஞை சக்கிரத்தில் ஹம்ஸவதீ க்ஷமாவதீ என்ற இரு சக்திகள் சூழ மஜ்ஜை எனும் தாதுவின் அபிமானி தேவதை யாகவும் வெண்ணிறமும் ஆறுமுகங்களும் கொண்டவளாகவும் மஞ்சள் பொங்கலில் பிரியமுள்ளவளாகவும் ஹாகிநீ தேவியை வணங்குகிறேன்'' எனப் புருவ நடுவில் தொடுவது ஹாகிநீ யோகினியின் நியாஸமாகும். ஞான முத்திரை, உடுக்கை, அக்ஷ மாலை, கபாலம் இவை ஏந்திய நான்கு கைகளுள்ளவள், முக்கண்க ளுள்ளவள், எல்லா ஸுகங்களையும் அளிப்பவள் என்ற சிறப்புகள் அதிகமாகத் தியான சுலோகத்தில் கூறப்பட்டுள்ளன. (527)

## யாகினி யோகினி

109 सहस्रदलपद्मस्था सर्ववर्णोपशोभिता । 529
सर्वायुधधरा शुक्लसंस्थिता सर्वतोमुखी ॥ 532
110 सर्वौदनप्रीतचित्ता याकिन्यम्बास्वरूपिणी । 534

ஸஹஸ்ரதளபத்மஸ்த்தா ஸர்வவர்ணோபசோபிதா ।
ஸர்வாயுததரா சுக்லஸம்ஸ்திதா ஸர்வதோமுகீ ॥
ஸர்வௌதநப்ரீதசித்தா யாகிந்யம்பாஸ்வரூபிணீ ।

2259-01 ஸஹஸ்ர-தள-பத்மஸ்த்தா. ஆயிரம் தளங்களுள்ள தாமரையில் இருப்பவள்.

2259-02 பிரும்மரந்திரத்தில் ஆயிரம் தளங்களுள்ள தாமரை போல் இருப்பது ஸஹஸ்ரார சக்கிரம். அதில் யாகிநீ என்ற யோகினியாக இருப்பவள் தேவி. (528)

2260-01 ஸர்வ-வர்ண-உபசோபிதா. எல்லா நிறங்களாலும் அழகாக இருப்பவள்.

2260-02 யாகிநீ எல்லா யோகினீ சக்திகளும் பொருந்தியவள். டாகினி முதலிய யோகினிகளிடத்தில் ஒவ்வொருவரது மேனி ஒவ்வொருநிறம் கொண்டது. இவள் எல்லா நிறங்களும் துலங்கும்

மேனி படைத்தவள். வர்ணம் எழுத்து. அ முதல் க்ஷ வரை உள்ள எல்லா எழுத்துக்களின் சக்திகளும் இவளைச் சூழ்ந்து நிற்கின்றன. 'அ' முதல் 'ள' வரை எழுத்துக்கள் ஐம்பது. அவைகளைத் திருப்பித் தலைகீழாகச் சொல்லும்போது 'ள' முதல் 'அ' வரை எழுத்துக்கள் ஐம்பது. உப என்ற சொல் கடபயாதி முறையில் '10'ஐக் குறிக்கும். ஸர்வவர்ணங்களை–நூறுனதைப் பத்து தடவை திருப்பிச் சொல்ல ஆயிரம் ஆகிறது. ஆயிரம் இதழ்களில் ஆயிரம் எழுத்துக்களின் சக்திகள் அமைந்திருக்கின்றன. 'ஆயிரம்' என்பது எண்ணற்றது என்றும் பொருள் கொண்டது. அதுபோல் '10'ம் எண்ணற்றது என்ற பொருள் கொண்டதே. அந்த 100 அக்ஷரங்களையும் எண்ணற்ற தடவை திருப்பிச் சொல்ல எண்ணற்ற அக்ஷரங்களாகி அவற்றின் சக்திகள் நிரம்பிய எண்ணற்ற இதழ்கள் கொண்ட ஸஹஸ்ராரத்தில் யாகினியாக விளங்குபவள் தேவி. (எழுத்துக்களைக் கொண்டு எண்களைக் குறிப்பது உண்டு. 'க' முதல் ச⁴ வரை ஒன்பது, 'ட' முதல் 'த'⁴ வரை ஒன்பது, 'ப' முதல் 'ம' வரை ஐந்து, 'ய' முதல் 'ள' வரை ஒன்பது. உயிர் எழுத்து 'ஞ', 'ந' பூஜ்யத்தைக் குறிக்கும். இதனைக் கடபயாதி முறை என்பர்.) (529)

**2261–01** ஸர்வ-ஆயுத-தரா. எல்லா ஆயுதங்களையும் தாங்கியிருப்பவள்.

**2261–02** ஆயிரக்கணக்கான கைகளில் ஆயிரக்கணக்கான ஆயுதங்களைத் தாங்கி நிற்பவள். (530)

**2262–01** சுக்ல-ஸம்ஸ்த்திதா. சுக்கில தாதுவில் அமர்ந்திருப்பவள்.

**2262–02** சுக்கிலமானது ரஸம் முதலிய எல்லா தாதுக்களின் ஸாரமானது. உடலின் சக்திகள் அனைத்திற்கும் இருப்பிடம். ஆண் பெண் இரு பாலரிடம் உள்ளது. இரு பாலருக்கும் நிறைவைக் கொடுப்பது. (உடலுறவின்போது ஆணிடம் வெளியாகும் சுக்கிலம். இந்த சுக்கிலத்தின் ஓரம்சம், உடல் முழுவதும் சுற்றி வலிவு, ஸகிப்புத் தன்மை, ஜீவ சக்தி ஊட்டுவது தாதுஸாரமான சுக்கிலம். இது ஆண், பெண் இருவரிடமும் உண்டு. முதுமையிலும் உடலைத் தாங்குவது இது.) அதில் அமர்ந்திருப்பவள் தேவி. சுக்கிலம் எனும் தாதுவில் அபிமானமுள்ள தேவி. (531)

**2263–01** ஸர்வதோ-முகீ. எங்கும் முகமுள்ளவள்.

**2263–02** ஆயிரக்கணக்கான முகமுள்ளவளானதால் எல்லா திக்குகளையும் நோக்கி இவளது முகங்கள் அமைந்துள்ளன. (பா. 1808–1810) (532)

**2264-01** ஸர்வ-ஓதந-ப்ரீத-சித்தா. எல்லா உணவுகளிலும் விருப்பம் கொண்ட மனமுள்ளவள்.

**2264-02** பாயஸான்னம் முதல் ஹரித்ரான்னம் வரை முன் கூறப்பட்ட அன்னங்களிலும், மற்றும் பலவகைப்பட்ட அன்னங்களிலும் ஈடுபாடு கொண்டவள். (533)

**2265-01** யாகிநீ - அம்பா - ஸ்வரூபிணீ. யாகினீ தேவியின் வடிவைக் கொண்டவள்.

**2265-02** "ஸஹஸ்ராரகமலத்தில் பல நிறங்களுள்ளதும் பல முகங்களுள்ளதும் பல ஆயுதங்கள் கொண்ட பல கைகளுள்ளதுமான வடிவம் தாங்கி சுக்கில தாதுவின் அபிமான தேவதையாகவும் எல்லா அன்னங்களையும் விரும்பி ஏற்பவளாயும் உள்ள யாகினீ யோகினியை வணங்குகிறேன்" எனப் பிரும்மரந்திரத்தைத் தொடுவது யாகிநீ யோகினியின் நியாஸமாகும். ('அ' முதல் 'ள' வரை வரிசையாகவும் திருப்பியும் அக்ஷரங்களை ஒவ்வொரு தடவையும் கூறிப் பத்து தடவை நியாஸம் செய்வது மரபு.)

**2265-03** இங்கு கவனிக்கத் தக்கது—ஒவ்வொரு யோகினிக்கும் ஒரு தாது இருப்பிடம் அல்லது அபிமான தாதுவாக உள்ளது. அந்த யோகினிக்கு ஒரு தனிப்பட்ட உணவு வகையில் விருப்பமும் காணப்படுகிறது. அந்த தாதுவை அளவில் அதிகமாக்கி சக்தி மிக்கதாகச் செய்வதற்கு அந்த உணவு ஏற்றதென்பதாலேயே அவைகளை நிவேதனப் பொருளாக ஆக்கி அந்தந்த யோகினிக்கு அர்ப்பணம் செய்வது முறையாக அமைந்துள்ளது. உலகியலிலும் இது பொருந்தக் கூடியதே. வழிபாட்டிலும் அந்தத் தொடர்பு நல்லதெனத் தெளிவாகிறது. பால்பொங்கல் அன்னச் சத்து மிக்க உணவு. அது ரஸதாதுவை வளப்படுத்தித் தோலை நன்கு பாதுகாக்கக் கூடியது. அதனால் தோலின் அபிமான தேவதையான டாகினிக்கு அது நிவேதனப் பொருளாகிறது. இப்படியே மற்றவற்றையும் பொருத்திப் பார்க்கலாம். (534)

## அதிகாரம் 23

# தேவியின் சில விபூதிகள்

स्वाहा स्वधाऽमतिर्मेधा श्रुतिः स्मृतिरनुत्तमा ॥ 541
111 पुण्यकीर्तिः पुण्यलभ्या पुण्यश्रवणकीर्तना । 544
पुलोमजार्चिता बन्धमोचनी बर्बरालका ॥ 547

ஸ்வாஹா ஸ்வதா(அ)மதிர்மேதா ச்ருதி: ஸ்ம்ருதிரனுத்தமா ।
புண்யகீர்த்தி: புண்யலப்யா புண்யச்ரவணகீர்த்தநா ।
புலோமஜார்ச்சிதா பந்தமோசநீ பர்பராலகா ॥

**2301–01** ஸ்வாஹா. ஸ்வாஹா வடிவானவள்.

2301-02 அக்கினியில் ஹோமம் செய்யும்போது தேவதையின் பெயரைக் குறிப்பிட்டு 'இது அர்ப்பணம்' என்ற பொருளில் 'ஸ்வாஹா' என்று குறிப்பிடுவர். 'ஸ்வாஹா' என்பது போல் 'ஸ்வதா' 'வௌஷட்', 'வஷட்' 'ச்ரௌஷட்' என்ற சொற்களும் வேள்விகளில் பயன்படும். தன் குலத்திலுதித்த தந்தை பாட்டனார் முதலானோர்க்கு சிராத்தத்தில் அர்ப்பணம் செய்யும்போது ஸ்வதா என்பர். அக்நயே ஸ்வாஹா எனும்போது அக்கினி தேவருக்கு இது அர்ப்பணமாகிறது என்று பொருள். தான் கொடுக்கும் ஆஹுதியைப் பெறுவதற்குத் தேவர்களை அழைப்பதற்கேற்ற இனிய சொல் 'ஸ்வாஹா'. தேவதை இதனால் நன்கு மகிழ்ச்சி அடையும்படி கூப்பிடப்படுவதால் ஸ்வாஹா. (ஸுஷ்ட்டு ஆஹூயதே அநயா) புகழும் இனிய சொற்களில் மகிழ்பவர்கள் தேவர்கள். அக்நயே ஸ்வாஹா என்றவுடன் அக்னி தேவதையை அடையாளம் கண்டுகொண்டு ஹோமம் பண்ணப்பட்ட பொருள் அவரிடம் செல்கிறது. (ஸ்வகீயாந் ஆஜிஹீதே, கச்சதி, ஸ்வீயத்வேந ஸம்யக் ஜாநாதி). அதனால் அடைய வேண்டியவர்களை அடையாளம் கண்டு அடையும் தெய்விக சக்தி நிரம்பிய சொல் ஸ்வாஹா. அதன் வடிவாக இருப்பவள் தேவி.

2301-03 அக்கினி தேவனின் மனைவி ஸ்வாஹா. சிவனது எட்டு மூர்த்திகளில் அக்னி மூர்த்தியான சிவன் பசுபதி என்பவர். அவரது மனைவியாயிருப்பவள் ஸ்வாஹா. மாஹேச்வரம் என்ற பீடத்தில் உறைந்திருப்பவள் ஸ்வாஹா தேவி. (535)

**2302–01** ஸ்வதா. ஸ்வதாவாக இருப்பவள்.

2302–02 பித்ரு தேவதைகளுக்காகச் செய்யப்படும் சடங்குகளில் 'இது அர்ப்பணம்' என்ற பொருளில் வழங்கப்படும் சொல் ஸ்வதா. மிகுந்த சிரத்தையுடன் பித்ரு தேவதைகளுக்கு இது அர்ப்பணம் செய்யப்படுகிறது என்றும் இதற்குப் பொருள் உண்டு. (ஸுஷ்டு ஆதீயதே அநயா). பொருள் வழங்கும் முறையாலும் அதில் காட்டும் சிரத்தையாலும் மகிழ்பவர்கள் பிதிருக்கள். அவர்களுக்குத் திருப்தி அளிக்கும் ஸ்வதா என்ற சொல் தேவி. (536)

**2303–01** அமதி:. அவித்யை வடிவானவள்.

2303-02 இங்கு ஸ்வதாமதி: எனும்போது ஸ்வதா அமதி: என்று இரண்டு நாமங்கள் பிரிக்கப்படுகின்றன. மதி: என்ற நாமம் 445 ஆவதாக முன்வந்துவிட்டது. அவித்யை-அறியாமை. ஓரளவு அறிந்திருந்தும் அறிய வேண்டியதை எப்படி அறியவேண்டுமோ அப்படி அறியாததால் நமது அறிவு அவித்யை அறியாமை எனப் படும். ஈஷத் மதி: அமதி:. சிறிதளவுள்ள அறிவு, இந்திரியங்கள் மூலம் பெறும் அறிவு சிற்றறிவு. அந்த சிற்றறிவாக இருப்பவள் தேவி.

2303-03 அவ்யக்தம் மஹத் அஹங்காரம் முதலிய முதலில் படைக்கப்பட்ட தத்துவங்களில் மஹத் என்பது புத்தி தத்துவம். அதற்கு மூலமான அவ்யக்தத்தில் புத்தி தத்துவம் விரிவு பெருதிருந்தது. (பா. 1708-02) அப்படிப் புத்திதத்துவம் விரிவு பெருத அவ்யக்தமானது, அமதி: (புத்தி வெளிப்படாதது) என்ற சொல் லால் இங்கு குறிப்பிடப்பெறுகிறது. படைக்கப்படவிருப்பவர் அனைவரது அவித்யையின் ஸமஷ்டி உருவம் அவ்யக்தம். அந்த வடிவில் இருப்பவள் தேவி. (537)

2304-01 மேதா. மேதையாயிருப்பவள்.

2304-02 அறிந்து வெகுநாட்களுக்குப் பிறகு அறிந்த பொருளின் வடிவு தேய்ந்தும் மறைந்தும் போகக்கூடும். மிகச் சிரமப்பட்டு நினைவிற்குக் கொணரவேண்டியிருக்கும். அவ்விதச் சிரமமின்றி, அறிந்தது மனத்தில் ஆழப்பதிந்து எப்போதும் புத்தம் புதிதாகவே நினைத்த உடன் தெள்ளெனத் தோன்றுவதற்கு மேதா சக்தி நன்கு அமைந்திருக்க வேண்டும். ஆழ்ந்த தெளிந்த அறிவு மேதை. அதன் வடிவாக இருப்பவள் தேவி.

2304-03 அமதி: என்ற முன் நாமத்தில் குறிப்பிட்டபடி மஹத் எனும் புத்தி தத்துவமாகவும் அதற்குப் பின்னருள்ள படைப்பு களாகவும் உள்ளவை மேதா என்ற தேவியின் வடிவங்களாகும்.

2304-04 காச்மீரத்தில் கோவில் கொண்டுள்ள தேவி மேதை எனப்படுவாள். (538)

2305-01 ச்ருதி:. வேதங்களாயிருப்பவள்.

2305-02 ருக், யஜுஸ், ஸாமம், அதர்வணம் எனும் நான்கு வேதங்களாயிருப்பவள் தேவி. (ச்ருதி: - கேட்டே ஓதத்தக்கது. புத்தகத்தில் படிக்கத்தக்கது அல்ல.) சிரவணம் (பரம்பொருளைப் பற்றிக் கேட்பது) மனனம் (பரம் பொருள் பற்றிச் சிந்திப்பது) நிதித்யாஸனம் (கேட்டுச் சிந்தித்த பரம் பொருளைத் தியானம்

செய்வது) என்ற ஆத்ம ஞானத்திற்கான மூன்று வழிகளில் சிரவணம் என்ற முதலானதும் முக்கியமானதுமான வழியா யிருப்பவள் தேவி. (ச்ருதி:- கேட்பது) (539)

**2306-01** ஸ்ம்ருதி :. ஸ்மிருதியாயிருப்பவள்.

2306-02 வேதத்தில் கூறப்பட்டுள்ள தர்ம-அதர்மங்களைத் தெளிவாக வரையறுத்து ருஷிகள் எழுதியவை ஸ்மிருதி எனப்படும் நூல்கள். வேதத்திலுள்ளதை நினைவிற்கொண்டு அதன் வழி யிலேயே விஷயங்களைத் தொகுத்துள்ளபடியால் ஸ்மிருதி என்று இவைகளுக்குப் பெயர். (நினைவு நூல்-ஸ்ம்ருதி:)

2306-03 சிரவணம் என்ற ஆத்ம ஞான வழியில் கேட்டதைத் தனித்திருந்து பகுத்தறிந்து ஐயங்களைப் போக்கிக்கொள்ளும் உபாயம் மனனம் ஆகும். மனனத்திற்குக் கேட்டதை நினைவு படுத்திக்கொள்வது அவசியமானதால் மனனம் ஸ்ம்ருதி ஆகிறது. மனனமாகிய ஆத்ம ஞானஸாதனமாக இருப்பவள் தேவி. சென்றதை நினைத்து நடப்பதை அறிந்து அதன் அடிப்படையில் நடக்கவிருப்பதை அகக்கண்கொண்டு ஊஹிக்கும் சக்தியை ஸ்மிருதி என்பர். அதனை வடிவாகக்கொண்டவள் தேவி. (540)

**2307-01** அநுத்தமா. தன்னைக்காட்டிலும் மிக்கார் இல்லாதவள்.

2307-02 தேவியைவிடச் சிறந்ததெதுவும் எங்கும் இல்லை. அதனால் அவள் அநுத்தமா. (யஸ்யா உத்தமம் நாஸ்தி)

2307-03 ந நுத்தா மா யஸ்யா:- அநுத்தமா. 'மா' என்பது செல்வம் புத்தி சக்தி இவைகளைக் குறிக்கும். செயற்கையாகப் பிறர் உதவியாலும், பிறபொருள் சேர்க்கையாலும் ஏற்பட்டவை நுத்தா. தேவியிடமுள்ள செல்வமும் புத்தியும் சக்தியும் இயற்கையாக ஏற்பட்டவை-அநுத்தா. இயற்கையாகச் செல்வம் புத்தி, சக்தி முதலியவற்றைப் பெருதவர்கள் பிறர் உதவியாலும் பிறபொருளைச் சேர்த்துக்கொள்வதாலும் அவைகளை அடை கின்றனர். தேவி "சென்றடையாச் சீர் உடையாள்" சீர் அவள் ஸ்வரூபம். அதனை அடையவேண்டியதில்லை. சீர் தனிப்பட்டி ருந்தால் அது நம்மைச் சென்றடையும் அல்லது நாம் அதனைச் சென்றடைவோம். செல்வமும் புத்தியும் சக்தியும் ஸ்வபாவமாகவும் ஸ்வரூபமாகவும் கொண்டவள் தேவி. (நுத்தா-பரப்ரேரிதா) (541)

**2308-01** புண்ய-கீர்த்தி:. புண்யமான கீர்த்தி உள்ளவள்.

2308-02 நற்செயல்களின் பின் விளைவு புண்ணியம். இந்தப் பின் விளைவு உடன் அனுபவிக்கத்தக்கதாயிருக்கலாம். அல்லது காலம் கடந்து இப்பிறவியிலோ வேறு பிறவியிலோ அனுபவிக்கக் கூடியதாகவும் இருக்கலாம். பணிகளின் தன்மைக்கு மாறுபட்ட தாகவும் அதன் பின் விளைவு அமையக்கூடும். உடலை வருத்தியும் தனதென இருந்ததைப் பிறர்க்கு அளித்தும் செய்த வேள்வி தானே அனுபவிக்கும் போகமான ஸ்வர்க்க ஸுகத்தைத் தரக்கூடியது. வேள்வியால் ஏற்பட்ட புண்யம் ஸ்வர்க்க ஸுகமாக மாறி அனுபவத்தைக் கொடுத்தது. நற்பணிகளால் விளைந்ததும் ஸுகானுபவம் தரவல்லதுமான பின் விளைவு புண்ணியம். இது கண்களுக்குப் புலப்படாததாகையால் அத்ருஷ்டம் எனப்படும். புண்யத்தை விளைவிக்கவல்ல நற்பணிகளையும் (ஸுக்ருதம்) புண்ணியமென்பர். நற்பணிகளைப் புரிவதால் மீண்டும் நற்பணிகளில் ஈடுபடும் விருப்பம் ஏற்படும். அப்படி நற்பணிகளில் ஈடுபடத் தூண்டுமளவிற்கு ஆழ்மனத்தில் ஏற்பட்ட தடத்தையும் (வாஸனையையும்) புண்ணியம் என்பர். அத்தகைய புண்ணியம் தரவல்ல புகழுடன் கூடியவள் தேவி. (கீர்த்தி:- புகழ்) (542)

2309-01 புண்ய-லப்யா. புண்ணியத்தால் அடையக் கூடியவள்.

2309-02 முன் பிறவிகளிலும் இப்பிறவியிலும் செய்துள்ள நற்பணிகளால் விளைந்த புண்ணியத்தாலேயே தேவியை அடைய முடியும். அவளை அறிவதும், அவளை வழிபடுவதும், அவளது அடியாராவதும் புண்ணியத்தால் மட்டும் கிட்டக்கூடியவை. கெட்ட வழிகளில் சென்று கெட்ட பணிகள் புரிந்து கெட்ட வாஸனை நிரம்பிய மனத்தில் அவள் தங்கமாட்டாள். கெட்ட வினைகள் நம்மை அவளிடமிருந்து வெகுதூரத்திற்கு அகற்றிவிடும். நல்வினைகள் அவளிடம் நம்மைச் சேர்க்கும். புண்ணியத்தால் அடையக்கூடியவள் தேவி. (543)

2310-01 புண்ய-ச்ரவண-கீர்த்தநா. புண்ணியம் தரவல்ல சிரவண கீர்த்தனங்கள் உள்ளவள்.

2310-02 சிரவணம்-அவள் புகழ் பாடப்படுவதைக் கேட்பது. கீர்த்தனம்-அப்படிக் கேட்டறிந்த அவள் புகழைத் தானே பாடுவது. இப்பிறவியிலும் முற்பிறவிகளிலும் சேமித்த புண்ணியத்தின் பயனாகவே தேவியின் புகழைக் கேட்கவும் பாடவும் வாய்ப்பு கிட்டும். அவ்விதம் கிடைத்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொள்வதால் அதில் ஈடுபாடு மிகுந்து மீண்டும் மீண்டும் அவள் புகழ்பாடச் செய்யும்.

அதனுல் இவ்வாழ்விலும் மறுவாழ்வுகளிலும் க்ஷேமம் தரவல்ல புண்ணியம் சேரும். இதுகாறும் பற்பல கெட்ட பணிகளில் ஈடுபட்டிருந்ததால் ஆழ்மனத்தில் ஏற்பட்டிருந்த கெட்ட வாஸனைத் தடம் அழியும். நல்வாஸனைத் தடம் அமையும். அத்தகைய புண்ணியம் தரவல்ல கேட்கக்கூடியதும் பாடக்கூடியதுமான புகழுடன் கூடியவள் தேவி. (544)

2311-01 புலோமஜா-அர்ச்சிதா. இந்திராணியால் பூஜிக்கப்பட்டவள்.

2311-02 புலோமன் எனும் அஸுரனின் பெண் சசீதேவி. புலோமனை அழித்துச் சசீதேவியை இந்திரன் மணந்தான் எனப் புராணம் கூறும். இந்திரனது மனைவியானதால் இந்திராணீ. இந்திரன் ஒளிந்து வாழ்ந்துகொண்டிருந்த சமயத்தில் நஹுஷன் தாற்காலிகமாக இந்திரப் பதவி பெற்ருன். இந்திரனது மனைவியும் தன் மனைவியாக வேண்டுமென்று அவன் விரும்பினுன். இந்திராணி தேவியை வழிபட்டு நஹுஷனது துன்புறுத்தலிலிருந்தும் விடுபட்டாள் எனத் தேவீ பாகவதம் கூறும். இந்திரனது நல்வாழ்விற்கும் தன் கற்பின் பாதுகாப்பிற்கும் இந்திராணியால் வழிபடப் பெற்றவள் தேவி. (545)

2312-01 பந்த-மோசநீ. தளைகளிலிருந்து விடுவிப்பவள்.

2312-02 மனிதனைப் பல தளைகள் கட்டுப்படுத்துகின்றன. சில தளைகள் தர்ம வடிவில் அமைந்து நன்மையைத் தருபவை. சில தளைகள் அதர்ம வடிவில் அமைந்து கெடுதியை விளைவிப்பவை. சில காலம் கடந்து தளையாகும், சில உடனடியாகத் தளையாகிவிடும். சிறைவாசம் முதலியவைகளும் தளைகளே. மனிதனின் சுதந்திரத்தைத் தடைபடுத்தும் தளைகள் பந்தங்கள் எனப்படும். இத்தனை தளைகளுக்கும் மூலகாரணமாக உள்ளது அஜ்ஞானம் என்ற பிறவியைத் தரும் தளை. பிறந்ததால் மற்ற தளைகள் சூழ்ந்தன. அத்தகைய தளைகளனைத்திலிருந்தும் விடுவிப்பவள் தேவி. பந்தமோசநீ என்ற இந்த நாமத்தை மட்டும் ஜபம் செய்வதாலேயே தளைகள் விலகும். மற்ற நாமங்களையும் ஜபித்துத் தேவியையும் வழிபட்டு அவளது அருள் பெற்றுவிட்டால் நீங்காத தளைகளும் உண்டோ?

2312-03 உஷாவை மணப்பதற்குச் சென்ற அநிருத்தன் என்ற கிருஷ்ணனின் பேரன் உஷாவின் தந்தையான பாணனுல் சிறைப்படுத்தப்பட்டான். அநிருத்தன் தேவியை வழிபட்டான்- தளைகள் நீங்கின என ஹரிவம்சம் கூறும். ஏகாவளீ என்ற பெண் காலகேது எனும் அஸுரனுல் சிறைப்படுத்தப்பட்டாள். ஏகாவளியின் தோழி

யசோவதீ, தேவியை வழிபட்டு, மந்திர பலத்தால் ஏகாவளியை மீட்டாள் எனத் தேவீபாகவதம் கூறும். இப்படிச் சிறைகளி லிருந்தும் விடுவிப்பவள் தேவி. (546)

2313-01 பர்பர-அலகா. நுனி சுருண்டு குட்டையான முன் தலையிலுள்ள கேசங்களோடு கூடியவள்.

2313-02 முன் தலையிலுள்ள கேசங்கள் குட்டையாகவும் அடுக் கடுக்காகவும் நுனி சுருண்டும் அமைந்து நெற்றியின் மேல்புறத்தை அழகாக மறைக்கின்றன. 'பந்துராலகா' என்ற பாடமுமுண்டு. பொருள் அதே. (547)

112 विमर्शरूपिणी विद्या वियदादिजगत्प्रसूः। 550
सर्वव्याधिप्रशमनी सर्वमृत्युनिवारिणी॥ 552

விமர்சரூபிணீ வித்யா வியதாதிஜகத்ப்ரஸூ: 1
ஸர்வவ்யாதிப்ரசமநீ ஸர்வம்ருத்யுநிவாரிணீ 11

2314-01 விமர்ச-ரூபிணீ. விமர்சவடிவினள்.

2314-02 திரிபுடியால் அறியத்தக்க வடிவமற்றிருப்பதால் மனத்தாலும் வாக்காலும் எட்ட முடியாத பேரொளியாகப் பரம் பொருள் விளங்குகிறது. அதிலிருந்தும் தனித்துப் பிரித்துப் பார்க்க முடியாதபடி பரம்பொருளின் சக்தி பரம்பொருளிடம் அடங்கி யிருந்தது. உலகைப் படைக்கும் எண்ணமாக அந்த சக்தி பரம் பொருளிடமிருந்து முதலில் வெளிப்பட்டது. சக்தியின் இயற்கை யான உருவம் துடிப்பு (ஸ்புரணம்). அலையின்றிச் சலனமற்றுக் காணப்படும் பேரொளிக்கடலாக இருந்த பரம்பொருள் துடிப்புத் தன்மை கொண்ட சக்தியின் சலனத்தால் தானும் அலையுள்ள கடல் போல் சலனம் அடைந்ததாகி ஐந்தொழில்கள் புரியும் ஐந்து பிரும் மங்களான பிரும்மா விஷ்ணு ருத்திரன் ஈசுவரன் ஸதாசிவன் என்ற ஐவரைத் தோற்றுவித்தது. பிரகாசமாக – பேரொளியாகப் புலப் படாதிருந்த பரம்பொருளிடம் சலனமேற்படுத்தி அதனைப் புலப்பட வைத்தது இந்த சக்தி. விமர்சம்-விளக்கம். இதுகாறும் விளங்கா திருந்த பரம்பொருள் சக்தியின் துடிப்பால் வடிவம் குணம் செயல் முதலியவற்றைப் பெற்று உருவகப்படுத்தக்கூடியதாயிற்று. பரம் பொருளை விளக்கிய சக்தியாயிருப்பவள் தேவி.

2314-03 மனத்தால் கருதப்பட்ட பொருள் பிறருக்கு விளங்கச் சொல் வடிவத்தைப் பெறவேண்டியிருக்கிறது. சொல்லின்றிப் பொருள் விளங்காது. பொருளின்றிச் சொல் தோன்றாது. பரம்

பொருள் விளங்க, விமர்சம் அடைய, செயலாற்றச் சக்தி உதவுகிறது. அந்த சக்தி பரம்பொருளைவிட்டுத் தனித்திருக்காது. இதனையே "வாகர்த்தாவிவ ஸம்ப்ருக்தௌ...பார்வதீ பரமேச்வரௌ" "சொல்லும் பொருளும் போல் இணைந்தவர்கள் பார்வதீ பரமேசுவரர்கள்" என ரகுவம்சத்தின் முதல் சுலோகத்தில் காளிதாஸன் குறிப்பிடுகிறான். சொல்லாகி விளங்குபவள் தேவி. விளக்க உதவும் சொல்லிற்குப் பொருளாக ஆதாரமாகி நிற்பவர் பரமேசுவரன். விளக்கின்றிப் பொருள் துலங்காது. பொருளின்றி விளக்கு எதனையும் விளக்கமுடியாது. சக்தியின்றிச் சிவன் செயலாற்ற முடியாது. சிவனின்றிச் சக்தி தன் துடிப்பைக் காட்டமுடியாது. இப்படிப் பிரகாச விமர்ச வடிவிலுள்ள பரம்பொருள் சக்தி என்ற இருவருள் விமர்ச-வடிவினள் தேவி. ஒரு பொருளையும் தனித்துப் புலப்படுத்தாத பேரறிவு (நிராகார ஞானம்) பேரொளி-பிரகாசம் ஆகும். அறிபவனையும் அறியப்படும் பொருளையும் பிரித்துக்காட்டும் ஸாகாரஞானம் விமர்சமாகும். விமர்சவடிவினள் தேவி. விமரிச வடிவமே பிரகாசத்தை அறிய உதவுகின்றது. (548)

**2315-01 வித்யா. முக்தி தரும் வித்தியையாயிருப்பவள்.**

2315-02 விமர்ச ரூபிணியான தேவியே வித்தியையாகவுமிருக்கிறாள். அறிவைத் தருவது வித்யை. பரம்பொருளை உணர்த்துவதே உண்மையான வித்தியை. பரம்பொருளை வேறுபட்ட பல பொருள்களாக அறிவிப்பவை அனைத்தும் அவித்தியை. பரம் பொருளைப் பரம்பொருளாக உணர்த்துவது மாயையை விளக்கி ஞானத்தைத் தரும் வித்தியை. பிரும்ம வித்யா ஸ்வரூபிணியாக இருப்பவள் தேவி. (549)

**2316-01 வியத்-ஆதி-ஜகத்-ப்ரஸூ:. ஆகாசம் முதலாகத் தோன்றிய உலகின் தாய்.**

2316-02 பரம்பொருளான ஆத்மாவிடமிருந்து ஆகாயமும், ஆகாயத்திலிருந்து வாயுவும், வாயுவிடமிருந்து அக்னியும், அக்னியிலிருந்து ஜலமும், ஜலத்திலிருந்து பிருதிவியும் அதனிடமிருந்து பயிர்களும், பயிர்களிலிருந்து உணவும், உணவிலிருந்து மனிதனும் தோன்றியதாக தைத்திரீய உபநிடதம் (2-1) கூறும். பரம்பொருளிடமிருந்து தோன்றிய முதல் பூதம் ஆகாசம். அதனைத் தொடர்ந்து மற்ற பூதங்கள் தோன்றின. அவை எப்போதும் சலனத்தையே தன் ஸ்வபாவமாகக் கொண்ட (ஜகத்-எப்போதும் சென்று கொண்டே இருப்பது) உலகின் காரணமாக அமைந்தன. ஆகாசம் முதலான உலகைத் தோற்றுவித்த அன்னை தேவி. வியத்-

(வ்யேதி இதி) விலகி நிற்பது. ஆகாசம் புலப்படுவது போலத் தோன்றி நெருங்கும்போது காண்பவனை விட்டு விலகி நிற்கும். (புலப்படாது.) பரம்பொருள் புலப்படுவது போல் தோன்றும். புலப்பட்டுவிட்டது என்ற உணர்வு தோன்றும்போதே அது புல னுக்கு வெகுதூரத்தில் இருப்பதாகத் தெரியும். இந்த நிலை அதனி டமிருந்து முதலில் தோன்றிய ஆகாயத்திலும் உண்டு. அதனால் அதற்கு வியத்-புலனுக்கு எட்டிப்போவது என்று பெயர். அதனை முதலில் வெளியில் விடுவித்தவள் தேவி. (பா-1708-02)

2316-03 "கருவாகத் தாங்கிய சிசு இனித் தன்னுள்ளிருந்து ஊட்டம்பெறத் தேவையில்லை. அதனால் தனித்திருக்க முடியும். வெளியிலிருந்து ஊட்டம் பெற முடியும்" என்ற நிலை ஏற்பட்டதும் தாய் அதனைத் தன்னிடமிருந்து பிரித்து வெளியிடுகிறாள். அந்தத் தாய் ப்ரஸூ:-பிரஸவிப்பவள். ஆகாசம் முதலியவற்றைக் கருவாகத் தன்னில் கொண்டு சிறிது காலம் வளர்த்துப் பின்னர் தனி உருவம் கொண்டவைகளாக அவைகளை வெளிப்படுத்திய தாய் 'வியதா திஜகத்ப்ரஸூ:'. (550)

**2317-01 ஸர்வ-வ்யாதி-ப்ரசமநீ. எல்லா நோய்களையும் அடக்குபவள்.**

2317-02 வ்யாதி:-விசேஷத: ஆதீயதே. செயற்கையாக நம் மேல் அழுத்தமாகப் படிவதால் நோய்களுக்கு வியாதி என்ற பெயர். உடலின் இயற்கை நிலை ஆரோக்கியம். நோய் செயற்கையாக நம் மேல் பலாத்காரமாகத் திணிக்கப்படுகிறது. ஆதி:-(ஆதீயதே இதி) என மன நோயைக் குறிப்பிடுவர். அதுவும் அப்படிச் செயற்கை யாக வெளியிலிருந்து மனத்தின் மேல் படிகின்றது. மனநோய் இருப்பது வெளியில் தெரியாது. அதன் குறிகளைக் கொண்டே அறிய முடியும். உடல் நோய் வியாதி. இது உடலில் படிந்தி ருப்பது வெளிப்படையாகத் தெரியும் (விசேஷத: ஆதீயதே). வியாதியினுள் ஆதி-மனநோயுமடங்கும். எல்லா மனநோய்களும் உடன் தீராவிட்டால், அது உடல்நோயாகவும் மாறும். அத்தகைய உடல் மனநோய்கள் அனைத்தையும் தீர்ப்பவள் தேவி. ஸர்வவ்யாதி ப்ரசமநீ என்ற நாமமே ஜபத்தால் நோய் தீர்க்கவல்லது. (551)

**2318-01 ஸர்வ-ம்ருத்யு-நிவாரிணீ. எல்லா மரணங்களையும் தடுப்பவள்.**

2318-02 வயது முதிர்ந்து ஏற்படும் உடல்மறைவு காலமரணம். 120 ஆண்டுகள் பூர்ணமாக வாழ்ந்து நவக்கிரகங்களின் தசைகளை ஒரு தடவை வாழ்நாளில் பூர்ணமாக அனுபவிப்பது பூர்ணவாழ்வு.

இதன் எல்லையில் கால மரணம் தோன்றும். இதற்குக் காரணம் காலமாகிற வயது. வினைப்பயனாகக் கடும் உடல் மனநோய்களாலும் அபாயங்களாலும் ஏற்படுவது அகால மரணம். இதற்குக் காரணம் ஆயிரம். மரணத்திற்குக் காரணமான அவை ஒவ்வொன்றும் ம்ருத்யுக்கள், அபமிருத்யு, அகால ம்ருத்யு, காலம்ருத்யு என்பவை. இவைகளைப் போக்குபவள் தேவி. ம்ருத்யுவைப் போக்க இந்த நாமமே மந்திரமாகி உதவுகிறது.

2318-03 இறப்பிற்குக் காரணமாக இருப்பவை பிறப்பிற்குக் காரணமான வினைகள். பிறந்ததால் இறக்கிறான். இறந்ததால் பிறக்கிறான். இப்படிப் பிறந்திறக்கக் காரணமாகச் சுமந்துள்ள வினைகள் எண்ணற்றவை. இவை அனைத்துமே ம்ருத்யுக்கள். தன் ஸ்வரூபத்தை உணர்த்தி வித்தியையால் அமிருத நிலையை அடையச் செய்து மிருத்யுவின் வாயிலிருந்து காப்பாற்றுகிறாள். "ஜ்ஞாத்வா தேவம் ம்ருத்யு முகாத் ப்ரமுச்யதே", "பரம்பொருளை உணர்ந்து மரணவாயிலிருந்தும் விடுபடுகிறான்". (உபநிடதம்) (552)

113 अग्रगण्याऽचिन्त्यरूपा कलिकल्मषनाशिनी । 555
कात्यायनी कालहन्त्री कमलाक्षनिषेविता ॥ 558

அக்ரகண்யா (அ)சிந்த்யரூபா கலிகல்மஷநாசினீ 1
காத்யாயநீ காலஹந்த்ரீ கமலாக்ஷநிஷேவிதா 11

**2319-01** அக்ர-கண்யா. முதலாவதாகக் கணக்கிடப் படுபவள்.

2319-02 காரியப்பொருளுக்கும் முன்னதாகக் காரணப் பொருள் இருக்கும். எது முதல் தத்துவம் என்று கணக்கிடும் போது எல்லாவற்றிற்கும் காரணமான முதல் பூதமான ஆகாயத்திற்கும் மூலகாரணம் தேவி என்றறிந்ததனால் தேவியே எல்லாவற்றிற்கும் முதன்மையானவளாகக் கணக்கிடப்பெறுகிறாள். (பா. 2316) நெருக்கடி நேரத்தில், காப்பாற்றுபவர் யாரென்று திகைக்கும்போது முதலில் மனக்கண்முன் தோன்றுபவள் தாயான தேவி. காப்பாற்றக்கூடியவள் என முதலில் மதிப்பிடப்பெறுபவள். (553)

**2320-01** அசிந்த்ய-ரூபா. சிந்திக்க இயலாத வடிவமுள்ளவள்.

2320-02 மனத்தின் செயல் சிந்தை-எண்ணம், எண்ணத்திற்கு உட்படுவதற்கு வடிவமைப்பு குணங்கள் செயல்கள் போன்ற குறிப்பு தேவை. ஒரு குறிப்புமற்ற தேவி அசிந்த்யரூபா. சிந்தை-கவலை. மனத்தை அரித்து எரிக்கக்கூடியது, தேவியின் வடிவம் உள்ளே தோன்றியதுமே அங்கு இனி சிந்தைக்கிடமில்லை. (554)

**2321-01** கலி-கல்மஷ-நாசிநீ. கலிதோஷத்தைப் போக்கு பவள்.

2321-02 கெட்ட எண்ணங்கள் மலிந்து, ஒருவருக்கொருவர், நெருங்கியவராயிருந்தும் மனம்விட்டுப் பழகமுடியாதபடி வஞ்சம் நெஞ்சில் நிரம்பியிருக்கச் செய்வது கலியின் இயல்பு. கெட்ட எண்ணத்தால் கெட்ட செயல்களில் ஈடுபடுவதால் பாபமூட்டை கழுவாய் காணமுடியாத அளவில் எளிதில் சேரும். மனத்தில் ஆழ்ந்த தடத்தை ஏற்படுத்தி மீண்டும் கெட்ட செயலில் தூண்டு வதால் கழுவாய்கள் பலனற்றுப்போகும். அத்தகைய கலிதோஷத் தைப் போக்குவதற்குத் தேவியின் திருநாமங்களே கதி. இவை மனத்தடத்தை அழித்துத் தூய்மையை ஏற்படுத்திப் பாபச் செயல் தூண்டலை நிறுத்திவிடுகின்றன. தேவியை மனத்தில்கொண்டு நிறுத்துவதால் முன் சேர்ந்த வினைகள் பொசுங்கிவிடுகின்றன. நல் வினைகளில் ஈடுபாடு இயற்கையாக ஏற்படுவதால் கலிதோஷத் திற்கு இனி இடமில்லை. (555)

**2322-01** காத்யாயநீ. காத்யாயனி என்ற தேவியின் வடிவினள்.

2322-02 கதர் என்ற ருஷியின் பெண்ணாகத் தோன்றி அவருக்குப் பெருமை தருகிறாள் தேவி. அந்தத் தோற்றத்தில் அவள் பெற்ற பெயர் காத்யாயனீ. எல்லாத் தேவர்களின் சக்தியும் இவளி டத்தில் அடங்கிவிட்டன. ஒட்டியாண பீடத்தில் உறையும் தேவிக்கும் காத்யாயனீ என்று பெயர். கோபிகள் மார்கழி மாதத்தில் காத்யாயனியை வழிபட்டு நோன்பிருந்தனர். அதன் பயனாகக் கிருஷ்ணனின் அருள் பெற்று ராஸ லீலைகளில் பங்கு பெற்றனர் எனப் பாகவதம் கூறும். காத்யாயனி என்ற சொல் மருவி காத்தாயி என்றாகிவிட்டது. காத்தாயி என்ற வடிவில் வழிபடப்பெறுபவள் காத்யாயனி தேவியே எனப் பெரியோர்கள் கூறுவர். (556)

**2323-01** கால-ஹந்த்ரீ. காலனை அழிப்பவள்.

2323-02 கால:- யமன், காலம். பிராணிகளின் உயிரை மாய்ப் பவன் யமன். சிவசக்தியாயிருந்து மார்க்கண்டேயனுக்காக யமனை மாய்த்தவள் தேவி. பிறவிப் பிணியில் அகப்படுபவர்களை அழிப்பவன் யமன். தேவியின் அருளால் பிறவிப்பணி நீங்கியவர்களிடம் யமன் அடங்கிவிடுகிறான். அப்படி யமனை அடக்கிவிடுபவள் தேவி. தேவியை நினைக்காத நேரம் நகர்ந்து செல்லும் நேரம், கழியும்நேரம், அழியும் நேரம். நேரம் செல்லச் செல்ல யமன் நெருங்குகிறான். இந்தக் காலம் அந்தக் காலனிடம் அழைத்துச் செல்கிறது.

தேவியை நினைக்கும் நேரம் நகராத நேரம். அத்தகைய நேரச் சேமிப்பு உள்ளவர்களிடத்தில் காலம் நெருங்கத் தாமதமாகும். இடைவிடாது நினைப்பவர்களிடம் யமன் நெருங்கவே முடியாது. அப்படி காலத்தின் சக்தியை (யமனை அருகில் கொணரும் சக்தியை) அழிப்பவள் தேவி. (557)

**2324-01 கமலாக்ஷ-நிஷேவிதா. விஷ்ணுவால் ஆராதிக்கப் பெற்றவள்.**

2324-02 தேவியின் உபாஸகர்களில் ஒருவர் கமலக்கண்ணனான நாராயணன். (1640, 1723) நாராயணன் தேவியை உபாசித்து மோஹினி வடிவம் தாங்கி சிவபெருமானின் மனத்தைக் கலக்கினார் என்று ஸௌந்தரியலஹரீ (சுலோ 5) கூறும். இந்திர நீலக் கல்லாலான தேவியின் வடிவத்தை நீலமேக வர்ணனான நாராயணன் வழிபடுகிறார் எனப் பாத்ம புராணம் கூறும்.

2324-03 சிவன் தனது இடது பக்கத்தில் தேவியைக் கொண்டிருக்கிறார். சில இடங்களில் இடது பாகத்தில் நாராயணனையும் கொண்டிருப்பார். சங்கரநாராயணன் ஹரிஹரன் என்ற மூர்த்திகளில் அந்தத் தோற்றத்தைக் காணலாம். சிவனாகிய பரம்பொருளின் சக்தியாகி இடது பக்கத்தில் இணையும் பெருமை தேவி வழிபாட்டால் நாராயணனுக்கு கிடைத்தது.

2324-04 வழிபடுபவனைத் திருப்திப் படுத்துவது ஸேவை-பணிவிடை. தன்னை மறக்குமளவில் அவனைத் திருப்திப் படுத்துவது நிஷேவா. தேவி நாராயணனையே தன் உருவமாக்கிக்கொண்டு தன் கணவனான சிவனை மோகிக்கச் செய்கிறாள், நாராயணனது மோஹினி வேடத்தில். அதில் சிவன் ஏமாந்ததாகப் பிறர் அறியச் செய்யுமளவிற்கு நாராயணன் வழிபாட்டில் தேவி திருப்திப்படுகிறாள். (558)

114 ताम्बूलपूरितमुखी दाडिमीकुसुमप्रभा । 560
मृगाक्षी मोहिनी मुख्या मृडानी मित्ररूपिणी ॥ 565

தாம்பூலபூரிதமுகீ தாடிமீகுஸுமப்ரபா ।
ம்ருகாக்ஷீ மோஹிநீ முக்யா ம்ருடாநீ மித்ரரூபிணீ ॥

**2325-01** தாம்பூல – பூரித-முகீ. தாம்பூலம் நிறைந்த வாயினள்.

2325-02 ஸுமங்கலிப் பெண்டிர் எப்போதும் தாம்பூலம் தரிப்பர். தாம்பூலம் தரிப்பது மங்களமானது. தேவி எப்போதும் தாம்பூலம் தரிப்பாள். அவள் தாம்பூலம் சுவைத்துச் சக்கையை துப்பும்போது அதனை ஏந்தத் தேவேந்திரன் காளாஞ்சி

ஏந்தி (பதத்க்ரஹ:- வாயிலிருந்து விழுவதைப் பிடிப்பவன்)நிற்பார். தேவி வாக்கு சக்தியை அருளும்போது தாம்பூலச் சாற்றை அடியாரின் வாயில் உமிழ்வாள். ஞானத்தை அருளும்போது தன் ஸ்தன்யத்தைத் தருவாள்.

2325-03 இயற்கையாகச் சிவந்தது தேவியின் மேனி. தேவியின் சிவந்த மேனியைவிட அவள் உதடு அதிகச் சிவப்புள்ளது. அந்த இயற்கைச் சிவப்பும் போதாதென தாம்பூலத்தால் சிவப்பாக்குகிருள் தேவி. ஏதோ ஒரு பொழுது தாம்பூலம் போட்டாள் என்றில்லை. எப்போதும் தன் வாயைத் தாம்பூலத்தால் நிரப்பிக் கொண்டிருக்கிருள். இத்தனை செம்மையும் சிவனை மயக்குவதற்காக. நாராயணனின் வழிபாட்டால் களித்த தேவி சிவமோஹினியாகத் தோன்ற இத்தனை முன் ஏற்பாடுகள். (559)

2326-01 தாடிமீ-குஸுமு-ப்ரபா. மாதுளம் பூவின் சாயல் கொண்டவள்.

2326-02 பூத்துக் காய்க்கும் மாதுளை மரம் உண்டு. பூத்து ஆனல் காய்விடாத மாதுளையும் உண்டு. பூத்துக் காய்க்கும் மாதுளையின் பூவைவிடப் பூத்துக் காய்விடாத மாதுளையின் பூ செம்மை மிக்கது. அந்தப் பூ தேவியின் பூஜைக்கு ஏற்றது. அதன் நிறங்கொண்ட மேனி உள்ளவள் தேவி. மோஹினியாகத் தோன்றும் தேவி தாம்பூலத்தை எப்போதும் வாயினுள் நிரப்பிக் கொண்டிருப்பதால், உடல் முழுவதும் அதனல் ஏற்பட்ட சுறுசுறுப்பு பரவி மேலும் சிவந்துவிட்டதை மேனியின் மாதுளம் பூ நிறம் உணர்த்துகிறது. ஆசை அளவிற்கு மீறி ஏற்பட்டு வெளிப்படும் போதும், அதனை நாணத்தால் வெளிக்காட்டாமல் அடக்கும்போதும் உடல் சிவக்கும். ராகம்-ஆசை எனும் உணர்ச்சி செந்நிறங்கொண்டதென்பர். தேவி சிவமோஹனத்தில் ஈடுபட்டதும் சிவனிடமுள்ள அடங்காக் காதலை வெளிப்படுத்தியும் அடக்கியும் நடனம் புரியும் போது மிகச் சிவந்த தேவியின் மேனி மேலும் அடர்ந்த செந்நிறமடைகிறது. (560)

2327-01 ம்ருக-அக்ஷீ. மானுடைய பார்வை உள்ளவள்.

2327-02 மோஹினி வேடத்தில் தன் உள்ளக் கிடக்கையை நேரிடையாக வெளிப்படுத்த முடியாமல் கண்களால் உணர்த்தியும் நாணத்தால் அதனைத் தொடர்ந்து செய்ய முடியாமல் பார்வையைத் தாழ்த்தியும் அங்குமிங்கும் செலுத்தியும் சஞ்சலத்திற்குள்ளான தேவியின் கண்கள் மானின் கண்கள்போல் ஓரிடத்தில் நிலைக்காமல்

மருட்சியுடன் காண்கின்றன. காதல் வசப்பட்ட பெண் தன் காதலை வெளிப்படுத்தி ஆடவனை மயக்கும் நிலைக்கேற்ற பார்வை இது. (561)

2328-01 மோஹிநீ. மயக்குபவள்.

2328-02 அமிருதம் கடைந்தபோது அசுரர்களை மயக்கவும் பின்னர் சிவபெருமானை மயக்கவும் நாராயணன் தேவியின் அருளால் எடுத்த தோற்றம் மோஹிநீயாகும். நாராயணன் தேவியைப் பாவனை செய்ததால் மஹாமாயாஸ்வரூபிணீயான தேவியாகவே மாறிவிட்டார். அதனால்தான் தேவி ஒருவளிடம் மட்டுமே மயங்கும் சிவபெருமான் அந்த மோஹினியிடம் மயங்குகிறார். அந்த நாராயணனிடம் தோன்றிய சிவமோஹினியாக இருப்பவள் தேவி.

2328-03 உலகனைத்தையும் தன்னிடம் மோஹிக்கச் செய்பவள் தேவி. தேவியை உணர்ந்தவர்களை வேறொன்றையும் நாடாமல் தேவியை மட்டும் சிந்திப்பவர்களாக மாற்றும் மோஹினி அவள். பக்தியற்றவன் தன்னை அறியமுடியாதபடிப் பல விஷயங்களில் அவனை ஈடுபடுத்தித் தடுமாறச் செய்யும் மோஹினியும் அவளே.

2328-04 பிரவரா எனும் நதியின் கரையில் நிவாஸபுரத்தில் கோயில் கொண்டுள்ளதேவி மோஹிநீ என்ற திருநாமம் பூண்டவள். கமலாக்ஷநிஷேவிதா (558) என்ற நாமம் முதல் இந்த நாமம் வரை நாராயணன் தேவியை வழிபட்டு அடைந்த பேறு விளக்கப்படுகிறதென்பர். (562)

2329-01 முக்ய்யா. முக்கியமாக இருப்பவள்.

2329-02 சிசு பிறக்கும்போது முதலில் தோன்றுவது முகம். அதனால் முகமாக முதலாவதாக மதிக்கத்தக்கவைகளை முக்கியம் என்போம். உடலின் அவயவங்களில் பிரதான இந்திரிய வாயிலாகவும் மூளையின் இருப்பிடமாகவும் அமைந்த முகம் பிரதானமானது. அதனால் பிரதானமானதை முக்கியம் என்போம். (முக்ய்யம் — முகஸ்தானத்தில் இருப்பது) தோன்றிய பொருள்களுக்கெல்லாம் முன் இருப்பவள் தேவி. தேவர்கள் முதலிய சக்திமிக்கவர்களிடையே பிரதானமாயிருப்பவள் தேவி. பிரும்மா விஷ்ணு சிவன் முதலிய தேவர்களை ஆவரண தேவதைகளாக்கி ஸ்ரீ சக்கிரத்தின் நடுவில் பிந்துஸ்தானத்தில் முக்கிய தேவதையாகத் தான் அமர்ந்து வழிபாட்டை ஏற்றுக்கொள்வதால் தேவி முக்ய்யா. (563)

**2330-01 ம்ருடாநீ. மிருடன் எனும் சிவனது பத்தினீ.**

2330-02 காத்தல் தொழிலிலுள்ள சிவனை ம்ருடன் என்பர். (பாரா. 1613) சுகத்தைத் தருவதால் அவர் ம்ருடன். அவரது சக்தி யாகவும் பத்தினியாகவும் இருப்பவள் அதே குணமுள்ளவள். (564)

**2331-01 மித்ர-ரூபிணீ. சூரிய வடிவினள்.**

2331-02 உலகிற்கு எல்லா உதவிகளையும் வேறு பயனை எதிர் பாராமல் நண்பன் போல் தேவைப்பட்டபோது கோரிக்கையின்றி புரிவதால் சூரியனுக்கு மித்திரன் என்று பெயர். (மித்திரன்-நண் பன்) சூர்யர்கள் பன்னிரண்டு. அவர்களில் மித்ரனும் ஒருவர். (மித்ரன், ரவி, ஸூர்யன், பானு, ககன், பூஷா, ஹிரண்யகர்ப்பன், மரீசி, ஆதித்யன், ஸவிதா, அர்க்கன், பாஸ்கரன் எனப் பன்னி ருவர்.) பன்னிருவர் வடிவிலுள்ள ஸூரியனாகவும் பன்னிருவரில் ஒருவரான மித்திரனாகவும் இருப்பவள் தேவி.

2331-03 உயிரினம் அனைத்திற்கும் நெருங்கிய நண்பனாக இருப்பது ஆத்மஸ்வரூபம். அந்த ஆத்மாவாக இருப்பவள் தேவி. புற உலகில் நெருங்கிய நண்பனாக இருப்பதும் இறைவியின் வடிவமே. தோழனைத் தவறான வழியில் செல்லாமல் தடுத்துக் காப்பவன் மித்ரன். (மாதி-அடக்குகிறான், த்ராயதே-காப்பாற்று கிறான்.) தேவி அடியாரைக் கெட்டவழியிலிருந்தும் திருப்பி நல் வழிப்படுத்தி மித்ரனாகிறாள். (565)

115 नित्यतृप्ता भक्तनिधिर्नियन्त्री निखिलेश्वरी । 569
मैत्र्यादिवासनालभ्या महाप्रलयसाक्षिणी ॥ 571
நித்யத்ருப்தா பக்தநிதிர் நியந்த்ரீ நிகிலேச்வரீ ।
மைத்ர்யாதிவாஸநாலப்ப்யா மஹாப்ரளயஸாக்ஷிணீ ॥

**2332-01 நித்யத்ருப்தா. எப்போதும் மனநிறைவுள்ளவள்.**

2332-02 போதும்; இனித் தேவையில்லை என்ற அளவிற்கு நிறைவுணர்வு திருப்தியாகும். எப்போதும் எல்லாம் பூர்ணமாக உள்ளவள் தேவி. அவளிடம் எப்போதும் எதற்கும் குறை கிடை யாது. (நித்யம் த்ருப்தா)

2332-03 அநித்யமான (நிலையற்ற) பொருளால் ஏற்படும் நிறைவும் நிலைத்திருக்காது. அதனால் நித்தியமானவற்றால் திருப்தி யடைந்தவள் தேவி. நித்தியமானது ஆத்மானந்தம் ஒன்றே. எதிர்பார்வையற்ற உத்தமமான அன்பும் நித்யமான திருப்தி தர வல்லது. அத்தகைய நித்யமான அகச்சாதனங்களாலான வழி பாட்டால் திருப்தி அடைபவள். (நித்யேந த்ருப்தா).

2332-04 மூர்த்தாமூர்த்தா நித்யத்ருப்தா என்ற சொற்றொடரில் அநித்ய த்ருப்தா (நா-815) என்ற நாமம் வருகிறது. அந்த வேறுபாடு கவனத்திற்குரியது. (566)

**2333-01 பக்த-நிதி:. பக்தர்களின் செல்வக் குவியல்.**

2333-02 பக்தர்களின் விருப்பங்களை நிறைவேற்றி வைக்கும் செல்வக் குவியலாகத் தேவி விளங்குகிறுள். தான் ஈட்டிய பொருளிலிருந்து பின்னர் தோன்றவிருக்கும் தேவைக்காக நன்கு பாதுகாப்புடன் வைக்கப்பட்ட பெரும் பொருள் சேமிப்பு நிதியாகும். பக்தர்கள் அப்படி சேமித்து வைத்துள்ள நிதியாக பக்தர்களின் பாக்கிய விருத்திக்கான புண்ணியச் சேமிப்பாக, தேவி விளங்குகிறுள். (567)

**2334-01 நியந்த்ரீ. கட்டுப்படுத்துபவள்.**

2334-02 உலகனைத்தையும் தன் ஆளுகைக்குள் கட்டுப்படுத்துபவள் தேவி. (568)

**2335-01 நிகில-ஈச்வரீ. எல்லாவற்றிற்கும் ஈச்வரி.**

2335-02 உலகனைத்தையும் அப்படிக் கட்டுப்படுத்தும் திறமை கொண்ட ஈச்வரி அவள். (569)

**2336-01 மைத்ரீ-ஆதி-வாஸநா-லப்யா. மைத்ரீ முதலிய வாஸனைகளால் அடையத்தக்கவள்.**

2336-02 மனத்தைத் தூயதாக்க நல்ல வாஸனைகளை ஏற்படுத்திக்கொள்ளவேண்டும். அவை முன்னதாக உள்ள கெட்ட மன வாஸனைகளை அகற்றவல்லவையாகவும் இருக்கவேண்டும். யோக நூல்கள் நல்ல வாஸனைகளை மனத்தூய்மைக்காக ஏற்படுத்திக் கொள்ளக் கூறுகின்றன. மைத்திரீ, கருணு, முதிதா, உபேக்ஷா என அவை நான்காகும்.

2336-03 சுகப்படுபவனைப் பார்க்கும்போது பொருமை கெட்ட வாஸனையாக ஏற்படக்கூடும். பொருமை ஏற்படக்கூடிய அந்த இடத்தில் நட்பைக் கடைப்பிடிப்பதன் மூலம் அவனுக்கு ஏற்பட்டுள்ள சுகத்தில் தான் மகிழ்ச்சிப்பெறப் பழக்குவது மைத்திரீ வாஸனை.

2336-04 துக்கமனுபவிப்பவனைக் கண்டு எள்ளி நகையாடவோ அதனுல் மகிழ்ச்சியுறவோ தோன்றும். அந்த வாஸனையை ஜயிப்பதற்கு, துக்கப்படுபவன் எதிரியாகவோ விருப்பிற்கோ வெறுப்பிற்கோ உட்படாத உதாஸீனனுகவோ இருந்தாலும் அவனிடம் கருணையைத் தானே ஏற்படுத்திக்கொண்டு அவனது துக்கத்திற்குக்

காரணமானவைகளை அகற்றி மகிழ்வுறச் செய்வதைப் பழக்கமாக்கிக் கொள்வது கருணா எனும் வாஸனை.

2336-05 ஒருவன் சுகப்படுவதற்குக் காரணம் அவன் முன் செய்த நல்வினையாலான புண்ணியம். அவனுக்குச் சுகமளிக்க முன் வினை பயன்பட்டதே என்ற மகிழ்ச்சியடையும் பழக்கத்தை ஏற்படுத்திக்கொள்வது முதிதா எனும் வாஸனை.

2336-06 ஒருவனது கஷ்டத்திற்கு அவன் முன் செய்த கெட்ட வினை காரணமாயிருக்கக்கூடும். "உன் கஷ்டத்திற்கு நீ முன் செய்த கெட்ட வினைதான் காரணம். அதனால் இந்தக் கஷ்டம் எப்படி விலகும்? நீ அதனைச் செய்யாதிருந்திருக்கலாம். இப்போது நொந்து என்ன பயன்? கஷ்டத்தை அனுபவி!" என்று முன்னரே நொந்துள்ள அவனைக் கொடுஞ்சொல்லால் மீண்டும் வருத்தத் தோன்றலாம். இந்த எண்ணத்தை அடக்கி "முன் வினைப் பயனாக இந்த கஷ்டம் விளைந்ததே" என அவனே நொந்து கொண்டாலும் முன் வினையைக் காரணமாகக் கொள்வது உசிதமல்ல என்று அதனைச் சிறிதும் பொருட்படுத்தாமலிருப்பதும் கஷ்டத்தை விலக்குவது எளிதே என்ற எண்ணத்துடன் செயல்படுவதும் நற்பழக்கங்கள். இது உபேக்ஷா எனும் வாஸனையாகும்.

2336-07 இந்த நான்கு வாஸனைகளும் உள்ளத்தில் அன்பை நிலைக்கச் செய்பவை. வெறுப்பு, பொறாமை முதலிய கொடும் எண்ணங்களுக்கு இடம் தராதவை. மனத்தில் தூய்மை நிறைய உதவுபவை. இவைகளைப் பழக்கிக்கொள்ள தேவியிடம் பக்தி நிலைக்கும். தேவியை எளிதில் அடையலாம். (570)

**2337-01 மஹா-ப்ரளய-ஸாக்ஷிணீ. மஹாப்பிரளய காலத்தில் ஸாக்ஷியாயிருப்பவள்.**

2337-02 செயல் நிகழும்போது கூட இருந்து முழுவதும் அறிந்துகொள்பவன் ஸாக்ஷீ. அவனுக்கு அந்தச் செயலில் பங்கு இல்லை. அந்த செயலின் பின் விளைவால் பாதிப்பு இல்லை. இப்படி நிகழ்ந்த செயலைக் கூட இருந்து நன்கு பார்த்தவன் ஸாக்ஷியாகும். படைப்பு காப்பு என்ற இரு தொழில்களும் தொடர்ந்து நடந்து கொண்டே இருக்கின்றன. அவைகளுடன் அழித்தல் என்ற தொழிலும் எப்போதும் நடைபெறுகிறது. ஆனால் அழித்தல் நடைபெறுவதைத் தனித்து உணரமுடிவதில்லை. மஹாப்ரளய காலத்தில் படைத்தல் காத்தல் என்ற இரு தொழில்களும் நிறுத்தப்பெற்றதும், அவற்றைப் புரிந்துவந்த பிரும்மா விஷ்ணு என்ற இரு பிரும்மத் தோற்றங்களும் தேவியைச் சென்றடைந்து மறைந்துவிடுகின்றன.

அழித்தலும் மறைத்தலுமான இரு தொழில்களை ருத்திரன் ஈசுவரன் என்ற இரு பிரும்மத் தோற்றங்கள் நிறைவேற்றிக் கொண்டிருக் கின்றன. இந்த இரு தொழில்களும் நிறைவேறுவதால் உலகமாகத் தோன்றியதனைத்தும் மூலப்பொருளாக மூலப்பிரகிருதியாக மாறித் தேவியிடம் ப்ர-லயம் (விசேஷமான லயம்-மறைவு) அடைகின்றன. அந்த அழித்தல்-மறைத்தல் (ஸம்ஹாரம்-திரோதானம்) என்ற இரு பணிகளும் நடைபெறும்போது மஹாப்பிரளயகாலத்தில் ருத்திரனும் ஈசுவரனுமே மீதி உள்ளனர். அவர்கள் புரியும் பணியை ஸாக்ஷி யாகப் பார்த்துக் கொண்டிருப்பவள், அவர்களும் தன்னுள் ஒடுங்கு வதை எதிர்பார்த்து நிற்கும் தேவி. (பாரா. 1727)

2337-03 விழிப்பு நிலையில் ஸ்தூலம் ஸூக்ஷ்மம் எனும் இரு தேகங்களும் நன்கு உணரப்பட்டும், மூன்ருவதான காரணதேகம் சற்றே மறைந்து ஊகத்தால் அறியப்பட்டும் உள்ளன. கனவு நிலையில் ஸ்தூல தேகமானது மற்ற இரு தேகங்களில் லயமாகி விட்டதை உணர்கிருேம். ஸ்தூலதேக உணர்வு அப்போது இல்லை. ஸுஷுப்தி என்ற ஆழ்ந்த தூக்கநிலையில் ஸ்தூலம் ஸூக்ஷ்மம் என்ற இரு தேகங்களும் மறைந்து அஹங்காரம் என்ற மறைப்பிற் குட்பட்ட ஆனந்த வடிவான ஆத்மா என்ற காரணசரீரம் மட்டும் இருப்பதை உணர்கிருேம். பிறகு தோன்றும் ஞாபகத்தால் ஸுஷுப்தியில் உணர்ந்தது சரியென அறிகிருேம். ஸ்தூல-ஸூக்ஷ்மதேகத் தொடர்பின்றி தனித்துள்ள அந்த ஆத்மாவைப் பற்றி ஆராயும்போது அந்த மஹாப்ரளயத்தில் (ஸ்தூல தேகலயம் ப்ரளயம்-கனவில் நேர்வது. ஸ்தூல-ஸூக்ஷ்ம தேகலயம் மஹா ப்ரளயம்-ஸுஷுப்தியில் நேர்வது) ஸாக்ஷியாக, ஸ்தூல-ஸூக்ஷ்ம தேகத் தொடர்பற்றவனுக அந்தந்த தேகங்களால் விளைந்த செயல் களின்மீது யாதொரு பொறுப்பும் அற்றவனுக, ஒருவித சார்புமற்ற வனுக ஆத்மஸ்வரூபத்தை உணர்கிருேம். அப்படி உணரப்பெறும் ஆத்மஸ்வரூபமாக இருப்பவள் தேவி. (571)

116 पराशक्तिः परा निष्ठा प्रज्ञानघनरूपिणी । 574
माध्वीपानालसा मत्ता मातृकावर्णरूपिणी ॥ 577

பராசக்தி: பரா நிஷ்ட்டா ப்ரஜ்ஞானகனருபிணீ ।
மாத்வீபானாலஸா மத்தா மாத்ருகாவர்ணருபிணீ ॥

2338-01 பரா சக்தி:. மேலான சக்தி வடிவினள்.

2338-02 உடலில் உள்ள ரஸம் ரக்தம் முதலிய தாதுக்கள் ஒவ்வொன்றும் உடலைத் தாங்குபவை. அவை உடலைத் தாங்குவது அவைகளுக்கும் மேம்பட்ட சக்தி ஒன்று இருப்பதால். அந்த மேம்

பட்ட சக்தியாயிருப்பவள் தேவி. ஒவ்வொரு பொருளிலும் மேம்பட்ட சக்தியாக இருந்து அதனை விளங்க வைப்பவள்.

2338–03 சிவத்திடம் முதன் முதலாயுதிக்கும் ‘அஹம்’ என்ற உணர்வு ‘சக்தி’ எனப்படும். இதனை ஆதிசக்தி என்பர். (நா. 615) பிரகாசமான சுத்த சிவத்தை விமர்சம் செய்வது இந்த ஆதிசக்தியே. (பா. 2314) ஆதிசக்தியை ஆதாரமாகக்கொண்டு உலகைத் தோற்றுவிக்கும் மாயை தான் பராசக்தி, ஜடசக்தி, மாயா சக்தி என்றப் பெயர்களால் குறிப்பிடப்பெறுகிருள். இந்தப் பரா சக்தியே, நாமரூபங்களால் பலபேதங்களுற்று விளங்கும் உலகின் காரணமானவள். (1708–01) இவளது தோற்றங்களே இச்சாசக்தி ஞானசக்தி கிரியாசக்தி என்ற மூவர். (572)

**2339–01 பரா நிஷ்ட்டா. சொல் எண்ணம் செயல் முதலிய வற்றின் எல்லையாக இருப்பவள்.**

2339-02 எல்லா சொற்களும் எண்ணங்களும் செயல்களும் எதனை அடைந்தபின் மீண்டும் அடையவேண்டியதொன்றிருப்ப தாகக் கருதாமல் ஓய்வு பெறுமோ, அத்தகைய நிஷ்டா-ஸ்வானு பவம் எனும் தன்னுணர்வு வடிவில் இருப்பவள் தேவி. ஆசாரியனி டமிருந்து கற்க வேண்டியதைக் கற்றும், பகுத்தறிவுகொண்டு விவாதித்தும், முறையான அப்பியாசங்களால் ஒவ்வொன்ருக அனு பவித்தும் தனது ஆத்மாவைக் காட்டிலும் வேறுபட்டதாக இது காறும் அறிந்திருந்ததனைத்தும் சுத்தப் பிரும்ம ஸ்வரூபம் தான் என்றும் அந்த சுத்தப் பிரும்ம ஸ்வரூபம் தான் தன்னுள் ஸாக்ஷி யாகத் துலங்கும் ஆத்மா என்றும் உணர்வது தான் அறிவின் எல்லையும் செயலின் எல்லையுமாகும். அப்படி அறிவால் தேர்ந்த முடிவான ஆத்மானுபவ வடிவினள் தேவி. (573)

**2340–01 ப்ரஜ்ஞாந-கந-ரூபிணீ. அடர்ந்த பேரறிவு வடி வானவள்.**

2340-02 மனமானது பொறிகளின் மூலமோ தனித்தோ அடைந்த ஒரு பொருளின் வடிவைச் சார்ந்து அறிவு அமைவதால் அறிவு குறுகியதாகிறது. வடிவம் முதலிய கட்டுப்பாட்டிற்குட் பட்டதாகிறது. அதனுல் நிலையற்றதாகிறது. இது சிற்றறிவு. இதனை விருத்தி ஜந்ய ஞானம் என்பர். மனமானது ஒரு பொருளைச் சார்ந்து அவ்வடிவமாக அமைவதே விருத்தியாகும். மனம் கண் வழியே சென்று ஒரு பொருளைப் பார்த்ததும் பார்க்கப்பட்ட பொருளின் முழுவடிவத்தைப் புத்தியினுள் பதியவைக்கிறது. இதுவே விருத்தி-ஞானம், மன விருத்தியால் பெற்ற ஞானம்.

குறுகிய வட்டத்தில் உள்ள இந்த அறிவு தாற்காலிகமானது, அல்பமான பயன் தரவல்லது. இந்த விருத்திஜ்ஞானம் உள்ளே உள்ள பேரறிவின் ஒளியால் கிடைத்த பிரதிபிம்பமான அறிவு. அந்த உள்ளறிவு பிரஜ்ஞானம்-ஆத்ம ஸ்வரூபம். சூரியனின் ஒளி கண்ணுடியில்பட்டு ஓர் அறையை விளக்குகிறது. அந்த பிரதிபிம் பத்தால் பெற்ற ஒளி வரையறுக்கப்பட்டதாகும். அதன் மூல காரணமான சூரியனது பேரொளியில் இது ஓர் அம்சமே. கண்ணுடிக்கு மற்றென்றை விளக்கும் தன்மை இயற்கையாகக் கிடையாது. சூரியனது ஒளியைப் பிரதிபலிக்கும் சக்தி அதனிடம் இருப்பதால் அது பொருளே விளக்குகிறது. அந்தக் கரணம் எனும் கண்ணுடியில் பிரதிபலிக்கும் ஆத்ம ஒளியால் விருத்தி ஞானம் ஏற்படுகிறது. விருத்தி ஞானம் முழுமையானதல்ல. ஒளியைப் பிரதிபலிக்கும் கண்ணுடியின் குறைகள் ஒளிப் பிரதிபலிப்பைப் பாதிக்கும். அவ்வகையில் ஸத்வம், ரஜஸ், தமஸ் எனும் முக்குணச் சார்பு பெற்ற அந்தக் கரணத்தில் பிரதிபலிக்கும் ஆத்ம ஒளி குறையுள்ளதாகத் தோன்றுகிறது. அது பேரொளியிடமுள்ள குறையால் அல்ல, பிரதிபலிக்கும் அந்தக் கரணத்தின் குறையால் ஏற்படுவதாகும். குறையற்ற பேரொளியாக விளங்கும் பேரறிவு அடர்ந்தது. ப்ரஜ்ஞான கனம் என்பர் அதை.

2340-03 உப்பளங்களில் உப்பைக் காய்ச்சி மலரச் செய்கிறுர்கள். தனித்தனி வடிவம் கொண்ட உப்புக் குவியலாக அது உள்ளது. இந்துப்பு மலேப்பாறை போல் இறுகிய உப்பு. அதனே ஸைந்தவம் என்பர். ஸிந்து தேசத்தில் அப்படிப் பாறையாக உப்பு கிடைக்கிறது. கடலுப்பைப்போல் அதில் தனிவடிவம் கிடையாது. மிக நெருக்கமாக இறுகிய உப்பு. அதன் உள்ளும் புறமும் ஒரே உப்புதான். வேறு இடைவெளி கூடக்கிடையாது. அதனே ஸைந்தவ கனம் என்பர். அதுபோல் இறுகிய ஞான வடிவம் பிரஜ்ஞானம். அதனல் பிரஜ்ஞானகனம். அதில் வேற்றுமையை உணர்த்தும் இடைவெளியோ வேறு பொருளோ கிடையாது. அத்தகைய பிரஜ்ஞானகனமாக இருப்பவள் தேவி. (574)

**2341-01 மாத்வீ-பாந-அலஸா. மதுவருந்தியதால் சோம்பியிருப்பவள்.**

2341-02 திராக்ஷையும் தேனும் சேர்ந்து அமைந்த மது மாத்வீ எனப்படும். அதனே அருந்தியதால் வெளிப்பொருளில் நாட்டம் குறையுமளவு சோம்பலும் செயலின்மையும் தேவியிடம் காணப்படுகின்றது. திராக்ஷ மது போன்று மனத்தை ஈர்க்க

வல்லது ஆத்மானந்தம். அதனைப் பருகுவதால், அனுபவிப்பதால் வெளி நாட்டம் குறைந்து காணப்படுபவள் தேவி. நித்யத்ருப்தா. (பாரா 2332)

2341-03 'அலஸா'-விளக்கமற்றவள், சோம்பியிருப்பவள். 'ந லஸதி'-பளிச்சென்று சுறுசுறுப்புடன் முன்பு விளங்கியதுபோல் தற்போது விளங்கவில்லை. நாட்டமும் உற்சாகமும் குறைந்து மனம் அடங்கிக் காணப்படுகிறாள். ஸத்துவ குணம் மேலிட்டாலும் நாட்டமும், உற்சாகமும் குறையும். அப்போது மனம் பற்றற்றிருப்பதாலும், அடைய வேண்டியதை அடைந்த திருப்தியாலும் மனம் அடங்கியிருக்கும். தமோகுணம் மேலிட்டாலும் சோர்வுற்று நாட்டமும் உற்சாகமும் குறையும். திராக்ஷை மதுவால் மனம் மகிழ்ச்சியால் நிரம்பியுள்ளது. உற்சாகத்திற்குத் தேவையில்லாததால் சுறுசுறுப்பின்றி காணப்படுவாள். மதுபோன்ற ஆத்மானந்தத்தால் உள்ள நிறைவேற்பட்டும் அடங்கியிருப்பாள். இரண்டும் தேவியிடம் காணப்படுகிறது. (575)

2342-01 மத்தா. மதம் கொண்டவள்.

2342-02 மாத்வீ எனும் திராக்ஷை மதுவை அருந்தியதால் வெளிநாட்டம் குன்றிச் செயலிழந்து சோம்பியிருக்கும் தேவி எந்த வெளிப்பொருளையும் உணர முடியாமல் மதம் பிடித்த நிலையில் இருக்கிறாள். ஆத்மானந்த அனுபவத்தால் வெளிநாட்டம் குன்றித் தன்னிடமே ஆனந்தத்தைக் காணும் யோகி, புறப்பொருள் வலிய அவனைச் சென்றடைந்தாலும் அதன் இருப்பை உணராது உணர்வற்றிருப்பான். அத்தகைய வெளி உணர்வற்ற மத்த நிலையில் இருப்பவள் தேவி.

2342-03 'மத்' என்ற சொல்லிற்கு 'என்னுடைய' என்று பொருள். மத்-தா-எனது தன்மை. ஜீவனிடமுள்ள 'நான்' சிறிய 'நான்'.பிரதிபிம்பஒளிவடிவானது. தேவியாகிய பரம்பொருளிடமுள்ள 'நான்' உலகனைத்தையும் தன்னுள் அடக்கும் 'பெரும் நான்'-'பர-அஹம்'. அதன் தன்மை-பர-அஹந்தா-. பர-மத்தா ; அந்த பராஹந்தா வடிவினள் தேவி. (576)

2343-01 மாத்ருகா-வர்ண-ரூபிணீ. மாத்ருகாக்ஷரங்களை வடிவமாகக் கொண்டவள்.

2343-02 'அ' முதல் 'க்ஷ' வரை உள்ள 51 எழுத்துக்கள் மாத்ருகாக்ஷரங்களாகும். சொல்லிற்கு நிறம்-வடிவம் தருவதால், எழுத்துக்களை வர்ணங்கள் என்பர். மாதா-தாய். சப்தம் எனும் உலகின்

தாய் போன்றிருப்பவை அக்ஷரங்கள். அதனால் மாத்ருகா வர்ணங்கள். அவைகள் வடிவில் உள்ளவள் தேவி.

2343-03 ஒவ்வோர் அக்ஷரத்திற்கும் தனித்த நிறம் உண்டு. யோகினி நியாஸத்தில் ஒவ்வொரு சக்கிரத்திலும் அமைந்த அக்ஷரங்களுக்கும் (பா-2202-2261) தனி நிறம் உண்டு. விசுத்தி சக்கிரத்தில் உள்ள உயிர் எழுத்து 16ம், புகை நிறமுள்ளவை. அநாஹதத்திலுள்ள க-ட² எழுத்துக்கள் சிந்தூர நிறமுள்ளவை. மணிபூரகத்திலுள்ள ட³-ப² எழுத்துக்கள் முல்லைப்பூ போன்ற வெண்ணிறமுள்ளவை. ஸ்வாதிஷ்டானத்திலுள்ள ப³-ல எழுத்துக்கள் செந்நிறமுள்ளவை. மூலாதாரத்திலுள்ள வ-ஸ எழுத்துக்கள் தங்க நிறமுள்ளவை. ஆஜ்ஞையிலுள்ள ஹ-க்ஷ மின்னல் போன்ற ஒளி நிறம் கொண்டவை.

2343-04 சில நூல்களில் நிறங்கள் வேறுபட்டுக் கூறப்பட்டுள்ளன. உயிரெழுத்துக்கள் நிறமற்ற ஸ்படிகம் போன்றவை. தான் சார்ந்துள்ள மெய்யெழுத்தின் நிறத்தைக் காட்டக் கூடியவை. க-ச-ட-த-ப வர்க்க எழுத்துக்கள் பவழ நிறங்கொண்டவை. 'ய-ள' மஞ்சள் கலந்த செந்நிறமுள்ளவை. 'க்ஷ' செந்நிறமுள்ளது. 51 எழுத்துக்களும் 51 வர்ணமுள்ளதாக உள்ளன என்றும் கூறுவர். இப்படி மாத்ருகாக்ஷரங்களின் நிறமாக, அவைகளைத் தனித்துக் காட்டும் சக்தியாக இருப்பவள் தேவி.

2343-05 'அ' முதல் 'க்ஷ' வரை உள்ள எழுத்துக்களையே தன் வடிவமாகக் கொண்டது அக்ஷமாலை எனும் ஜபமாலை. மந்திரங்களை 50 தடவை ஜபிப்பதற்கு இந்த அக்ஷமாலை உதவும். மானஸ ஜபத்தில் அக்ஷரங்களே எண்ணுவதற்குப் பயன்படும். விரல்களால் அல்லது மாலை மணிகளால் எண்ணும்போது புறச்சாதனங்களைப் பயன்படுத்தியதாகிறது. மானஸ ஜபத்தில் அக்ஷரங்களை உச்சரிக்கும் வாயின் பகுதிகளுக்கும், எண்ணும் மாலை முதலானதற்கும் தேவை இல்லை. 'நமச்சிவாய' எனும் மந்திரத்தை மனத்தால் உருப்போடுகிறோம். அதனை எண்ண அம் நமச்சிவாய, ஆம் நமச்சிவாய எனத் தொடங்கி ளம் நமச்சிவாய என்று மனத்தால் ஜபித்து முடித்ததும் 50 தடவை ஜபித்ததாகிவிடும். இத்தகைய மாத்ருகா ஜபம் மிகச் சிறந்தது. அதன் உருவகமே நிறமற்ற ஸ்படிகத்தாலான அக்ஷமாலையாக ஸரஸ்வதி பாலா முதலிய தேவியின் தோற்றங்களின் கையில் காணப்படுகிறது. அத்தகைய மானஸ ஜபத்திற்கான அக்ஷரமாலையாக இருப்பவள் தேவி.

2343-06 அத்தகைய மாத்ருகாக்ஷரங்களையே ஸ்ரீ சக்கிரத்தின் கோணங்களாகவும் தளங்களாகவும் பாவித்து ஸ்ரீ வித்யை மந்திரத்தால் அந்த அக்ஷர சக்தியாக அமர்ந்துள்ள தேவியின் தோற்றங்களை வழிபடுவது ஓர் அந்தர்யாகமுறை. இங்கு மாத்ருகாக்ஷரங்களையே ஸ்ரீ சக்கிர வடிவமாகக் கொள்வது கைலாஸப்பிரஸ்தாரம் என்ற ஸ்ரீ சக்கிர அமைப்பாகும். மேருப்ரஸ்தாரம், ஸ்ரீ சக்கிர (பூ) ப்ரஸ்தாரம் என வேறு இரு பிரஸ்தாரங்கள் உண்டு. (0911-10) மாத்ருகாக்ஷரம், அதனால் அமைந்த ஸ்ரீசக்கிரம், அதனில் பல அக்ஷர சக்திகளாக அமைந்த யோகினிகள் சூழ்ந்த தேவி, இவர்களை ஐக்கிய பாவனையுடன் தியானிப்பது இதற்குள்ள தனிச் சிறப்பு. அத்தகைய கைலாஸப்ரஸ்தாரம் எனும் ஸ்ரீ சக்கிரமாக அமைந்த மாத்ருகா வர்ணங்களின் வடிவில் உள்ளவள் தேவி. (577)

117 महाकैलासनिलया मृणालमृदुदोर्लता । 579
महनीया दयामूर्तिः महासाम्राज्यशालिनी ॥ 582

மஹாகைலாஸநிலயா ம்ருணாலம்ருதுதோர்லதா 1
மஹநீயா தயாமூர்த்திः மஹாஸாம்ராஜ்யசாலிநீ 11

2344-01 மஹா - கைலாஸ - நிலயா. மஹாகைலாஸத்தில் வசிப்பவள்.

2344-02 முன் நாமத்தில் குறிப்பிட்ட அக்ஷரவடிவில் தியானத்தால் உருவகப்படுத்தப்பட்ட கைலாஸப் பிரஸ்தாரம் எனும் ஸ்ரீ சக்கிரத்தில் வசிப்பவள் தேவி.

2344-03 கைலாஸம் எனும் சிவன் வசிக்குமிடம் இமய மலைத் தொடரினுள் உள்ளது. உலக வெளிக்கப்பாற்பட்ட பெருவெளியில் உள்ளது சிவஸ்தானமான மஹாகைலாஸம். அங்கு சிவசக்தியாகத் தேவி வசிக்கிறாள். மனித சரீரத்தில் பிரும்மரந்திரத்தில் அமைந்த அகுலஸஹஸ்ராரசக்கிரமே (பா. 1207-02) மஹா கைலாஸம். அதனுள் வசிப்பவள் தேவி. (578)

2345-01 ம்ருணாள-ம்ருது-தோர்-லதா. தாமரைத்தண்டு போன்று மென்மையான கைகள் உள்ளவள்.

2345-02 தாமரைத்தண்டு போல் நீண்டு மெல்லியதாய் மென்மையுள்ளதாய் துவளுவதாய் அழகாய் தேவியின் கைகள் இருக்கும். (579)

2346-01 மஹநீயா. கொண்டாடத்தக்கவள்.

2346-02 விழாக்களிலும் விவாஹம் முதலிய சிறந்த நிகழ்ச்சிகளிலும் அவள் அருள் பெறச் சிறப்பான முறையில் கொண்டாடத் தக்கவள் தேவி. (580)

**2347-01 தயா-மூர்த்தி:. தயை வடிவானவள்.**

2347-02 வேறு எதிர்பார்வையின்றி தானே முன்வந்து பிறரது கஷ்டங்களைப் போக்கி மகிழ்விக்கும் எண்ணம் தயை. அதனையே தன் வடிவமாகக் கொண்டவள். (581)

**2348-01 மஹா-ஸாம்ராஜ்ய-சாலிநீ. பேரரசாண்மை படைத்தவள்.**

2348-02 பல சிற்றரசர்களை அடக்கி ஆள்பவன் **ஸம்ராட்**. பல ஸம்ராட்டுகளையும் அடக்கி ஆள்பவன் மஹாஸம்ராட். அவனது ஆண்மை—ஆளும் தன்மை அல்லது அவனது ஆளும் எல்லைப் பரப்பு மஹாஸாம்ராஜ்யம். அதனை எப்போதும் தன்னியல்பாகக் கொண்டவள், உலகங்களாகிற மஹாஸாம்ராஜ்யத்தின் தலைவி தேவி. ஸ்தூல - ஸூக்ஷ்ம - சரீர ஸமஷ்டியில் அபிமானியான ஈசுவரன் ஸம்ராட். (ஸ்தூலசரீரஸமஷ்டி அபிமானி, விராட், விச்வன். ஸூக்ஷ் சரீர ஸமஷ்டி அபிமானி ஹிரண்யகர்ப்பன், ஸ்வராட். இரண்டிலும் அபிமானமுள்ள ஈச்வரன் ஸம்ராட்) அவனது ஆண்மை மஹாஸாம்ராஜ்யம். அதனுடன் கூடியவள் (பா. 1708) (582)

118 आत्मविद्या महाविद्या श्रीविद्या कामसेविता । 586
श्रीषोडशाक्षरीविद्या त्रिकूटा कामकोटिका ॥ 589
119 कटाक्षकिङ्करीभूतकमलाकोटिसेविता ॥ 590

**ஆத்மவித்யா மஹாவித்யா ஸ்ரீவித்யா காமஸேவிதா 1**
**ஸ்ரீஷோடசாக்ஷரீவித்யா த்ரிகூடா காமகோடிகா 11**
**கடாக்ஷகிங்கரீபூத கமலாகோடிஸேவிதா 1**

**2349-01 ஆத்ம-வித்யா. ஆத்மாவை அறிய உதவும் வித்யையானவள்.**

2349-02 பொருளின் தத்துவத்தை அறிய உதவும் கல்வி வித்யா. ஆத்மஸ்வரூபத்தைப் போதிக்கும் பிரும்மவித்யையாக இருப்பவள் ஆத்மவித்யா. "பரோ ரஜஸே ஸாவதோம்" என்ற துரீயகாயத்ரீ மந்திரமாக ஆத்மவித்யையாக விளங்குபவள் தேவி. (பெண்ணைத் தேவதையாகக் கொண்ட மந்திரம் வித்யை.) (583)

**2350-01 மஹாவித்யா. பெருமைமிக்க மந்திர வடிவினள்.**

2350-02 எல்லாக்கஷ்டங்களேயும் போக்கவல்லதாகையால் ஸ்ரீ வித்யை, மஹாவித்யை-பெருமைமிக்க வித்யையாகிறது. ஐம் ஹ்ரீம் க்லீம் சாமுண்டாயை விச்சே என்ற துர்க்கா நவாக்ஷரீ மந்திரத்திற்கு மஹாவித்யை எனப் பெயர். அந்த மந்திர வடிவினள் தேவி. (584)

**2351-01 ஸ்ரீவித்யா. 15 அக்ஷரங்களுள்ள ஸ்ரீவித்யை மந்திர வடிவினள்.**

2351-02 தேவியின் பஞ்சதசாக்ஷரீ மந்திரம் ஸ்ரீவித்யை, மற்ற மந்திரங்களே விடச் சிறப்புமிக்கது. (585)

**2352-01 காம-ஸேவிதா. மன்மதனுல் வழிபடப்பெற்றவள்.**

2352-02 காமன்-மன்மதன். அவனுக்கு அருள்புரிந்த காமேசனும் காமன் எனப்படுவார். இருவராலும் வழிபடப் பெற்றவள். ஸேவிதா என்ற சொல்லுக்கு நூலில் மணிபோல் கோர்க்கப்பட்டவள் என்றும் பொருள் உண்டு. "லக்ஷ்மியின் புதல்வனுன மன்மதன் உடலற்றவன். அவனுக்கு ஒரு மணி கிடைத்தது. விரலற்ற அவன் அதனே நூலில் கோர்த்தான். கழுத்தற்ற அவன் அதனேத் தன் கழுத்தில் தரித்தான். நாக்கற்ற அவன் அதனேச் சுவைத்தான். இவனே அறியாமல் நகரத்தில் நுழையக்கூடாது". "புத்ரோ நிர்ருத்யா வைதேஹ:, அசேதா யச்ச சேதந:, ஸ தம் மணிமவிந்தத். ஸோ (அ) நங்குலிராவயத். ஸோ (அ) க்ரீவ: ப்ரத்யமுஞ்சத். ஸோ (அ) ஜிஹ்வோ அஸச்சத. நைதம்ருஷிம் விதித்வா நகரம் ப்ரவிசேத்" (அருணம் 11-54) என்று வேதம் கூறும். காமன் உடலில்லாதவன். அவன் கண்டெடுத்த மணி ஸ்ரீவித்யை. அவன் அதனேக் கோர்த்து இதயத்தில் தாங்கினுன். மந்திரத்தைக் கண்டுபிடித்தவனுனதால் அவன் அதற்கு ரிஷி. அவனே அறியாமல் ஸ்ரீ நகரத்திற்குள் நுழையமுடியாது என்பது இந்த வேத மந்திரத்தின் பொருள். அப்படிக் காமனுல் கோர்க்கப்பட்ட மணி போன்றவள் தேவி.

2352-03 காமபூஜிதா எனும் (375) நாமம் காமபீடத்தில் பூஜிக்கப்பெற்றவள் என்ற பொருளே முக்கியமாகக் கொண்டது. அந்த நாமத்திற்கு முன்னும் பின்னும் பீடங்களின் விளக்கம் காணப்படுகிறது. அதனுல் பீடத் தொடர்பு அந்த நாமத்தில் உண்டு. (586)

**2353-01 ஸ்ரீ ஷோடசாக்ஷரீ வித்யா. ஷோடசாக்ஷரீ வித்யையாக இருப்பவள்.**

2353-02 பஞ்சதசாக்ஷரீ மந்திரத்துடன் ஸ்ரீபீஜம் சேர்த்த 16 அக்ஷரங்கள்கொண்ட மந்திரம் ஸ்ரீஷோடசாக்ஷரீ எனப்படும். ஷோடசாக்ஷரீ-16 அக்ஷரங்கள் கொண்டது. அதனைத் தன் வடிவமாகக்கொண்டவள் தேவி. 28 அக்ஷரங்கள் கொண்டது பராஷோடசீ. அதன் நடுவே உள்ள பஞ்சதசாக்ஷரியின் மூன்று கூடங்களை மூன்று எழுத்துக்களாகக் கணக்கிட்டு அதனை ஷோடசீ என்பர். பஞ்சதசாக்ஷரீ தவிர மற்ற எழுத்துக்கள் 13, பஞ்சதசாக்ஷரியின் மூன்று கூடங்கள்-3 எழுத்துக்கள், ஆக 16 எழுத்துக்கள் கொண்டது பராஷோடசீ. (ஸ்ரீம் ஸௌ : க்லீம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் ஹ்ரீம் ஓம், பஞ்சதசாக்ஷரீ, ஹ்ரீம் ஸ்ரீம் ஐம் க்லீம் ஸௌ :) இந்தப் பராஷோடசியாக இருப்பவளும் தேவியே.

2353-03 ஆத்ம வித்யா, மஹாவித்யா, ஸ்ரீ வித்யா, ஸ்ரீ ஷோடசாக்ஷரீவித்யா என்ற நான்கு நாமங்களும் கர்ம மார்க்கத்தைப் போதிப்பதான கர்மவித்யை, பிரும்மம் உலகமாகத் தோன்றுவதற்காக எடுத்த விராட்-மஹத்-ஸ்வரூபத்தைப் போதிப்பதான விசுவரூபவித்யை, மந்திரவடிவான தேவியைப் போதிப்பதான ஸ்ரீவித்யை, பரப்பிரும்ம ஸ்வரூபிணியான தேவியைப் போதிப்பதான பிரும்ம வித்யை என்ற இந்த நான்கை குறிப்பிடுகின்றன எனச் சிலர் சொல்வர். (587)

2354-01 த்ரி-கூடா. மூன்று தொகுதிகள் உள்ளவள்.

கூடம்-தொகுதி, கூறு. தேவியின் மந்திரம் மூன்று கூடங்களாலானது. (நா. 85-87) பிரும்மத்தைக் குறிப்பிடும் பிரணவம் 'அ' 'உ' 'ம்' என மூன்று தொகுதிகள் உள்ளது. வேதங்கள் மூன்று. (அதர்வ வேதம் மற்ற மூன்றின் காம்ய கர்மங்களின் விதித் தொகுப்பென அதனைக் கணக்கிடாமல் மூன்று வேதங்கள் என்பர்.) உலகம் மூன்று. தொழில் மூன்று – படைத்தல் காத்தல் அழித்தல் என. அதனைப்புரியும் தேவர்கள் மூன்று. ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்கள் மூன்று. விழிப்பு, கனவு, தூக்கம் என நிலை மூன்று. ஸூக்ஷ்மம், ஸ்தூலம், காரணம் என்று தேகங்கள் மூன்று. நடந்தது, நடப்பது, நடக்க விருப்பது எனக் காலம் மூன்று. கண்டங்கள் அக்நி கண்டம், ஸூர்ய கண்டம், சந்திர கண்டம் என மூன்று. அறிவின் திரிபுடி, இச்சா–ஞான–கிரியா சக்திகள், இப்படி மூன்று கூறுகளாகப் பிரிந்ததனைத்துமாக இருப்பவள் தேவி. (588)

2355-01 காமகோடிகா. காமகோடியாயிருப்பவள்.

2355-02 காம:– காமேச்வரனாகிய சிவன், அவரைக் கோடியாக ஒரு பகுதியாகக் கொண்டவள் தேவி. சிவனுக்கு ஸமமாயிருப்பவள்

சிவனுடன் இரண்டறக் கலந்திருப்பவள்; காம கோட்டத்தில் அமைந்த காமகோடி எனும் பீடமாக இருப்பவள்; காமம் என்ற மூன்ருவது புருஷார்த்தத்தின் எல்லையான மோக்ஷமாயிருப்பவள்; காமன்–மன்மதன், அவனது லக்ஷ்யமாயிருப்பவள் தேவி. (589)

2356–01 **கடாக்ஷ-கிங்கரீபூத-கமலா-கோடி-ஸேவிதா. கடைக் கண் பார்வையால் இட்ட ஏவலை நிறைவேற்றும் கோடிக்கணக்கான லக்ஷ்மீ தேவிகளால் வழிபடப் பட்டவள்.**

2356–02 தேவியின் கடைக்கண் பார்வை விழுமிடத்தில் கிங்கரிகளாக-என்ன செய்யவேண்டும்? செய்யக் காத்திருக்கிறேன் என்று கூறி நிற்கும் ஏவலாளிகளாகக் கோடிக்கணக்கான லக்ஷ்மீ தேவிகள் காத்து நிற்கின்றனர். தேவியின் கடைக்கண் பார்வை அடியார்கள் மேல் படுகிறது. அந்த அடியார்களுக்கு லக்ஷ்மீ பணிவிடை புரிகிருள். (590)

## அதிகாரம் 24

# தேவியின் பாவனுவடிவங்கள்

शिरःस्थिता चन्द्रनिभा भालस्थेन्द्रधनुःप्रभा । 594
120 हृदयस्था रविप्रख्या त्रिकोणान्तरदीपिका ॥ 597

சிரஸ்ஸ்த்திதா சந்த்ரநிபா பாலஸ்த்தேந்த்ரதனு:ப்ரபா ll
ஹ்ருதயஸ்த்தா ரவிப்ரக்க்யா த்ரிகோணுந்தரதீபிகா l

2401–01 **சிரஸ்-ஸ்திதா. சிரசில் இருப்பவள்.**

2401-02 சிரஸ் – பிரும்மரந்திரத்தில் உள்ள அகுல (சிவ) ஸஹஸ்ரார சக்கிரம். தேகமாகிய ஸ்ரீ சக்கிரத்தில் பிந்துஸ்தானம். (பாரா. 1201–05) அங்கிருப்பவள் தேவி. மந்திரவடிவினளாக தேவியைப் பாவனை செய்யும்போது முதலில் செய்யப்படுவது குரு நியாஸம். (பா. 0303). அந்த குரு ரூபத்தில் பிரும்ம ரந்திரத்தில் தேவி இருக்கிருள். அங்கு ஹ்ரீம் முதலிய பீஜங்களில் உள்ள 'ம்' என்ற பிந்துவின் உட்பிரிவுகளான பிந்து முதல் மஹாபிந்துவரை உள்ள 10 ஸ்தானங்களில் கடைசியான மஹாபிந்துவில் உறைபவள். (பா. 1825–03) (591)

2402–01 **ச்ந்த்ரநிபா. சந்திரன் போன்றவள்.**

2402-02 பிரும்மரந்திரத்திலுள்ள ஸஹஸ்ரார கமலத்தில் ஸாதா என்ற 16வது நித்யாகலையாகப் பூர்ண சந்திரனாகத் தேவி தோன்றுகிறாள். அங்குள்ள சந்திரன் நித்யன்; தேய்வும் வளர்ச்சியு மற்றவன். அந்தப் பூர்ண சந்திரனையே தன் வடிவமாகக் கொண்டவள். (சந்த்ராத்மநா நிபாதி). ஒளியால் சந்திரனுக்கொப்பான வளாக, ஸாதா சந்திர கலை வடிவினளாக தேவி சிரஸில் பாவனை செய்யப்படுகிறாள். (பா. 2111-02) (592)

**2403-01 பாலஸ்த்தா. நெற்றியில் இருப்பவள்.**

2403-02 நெற்றியில் உள்ள ஆஜ்ஞாகமலத்தில் ஹ்ரீம் முதலிய பீஜாக்ஷரங்களில் உள்ள 'ம்' என்ற பிந்துவாக தியானிக்கப் பெறுபவள். (593)

**2404-01 இந்த்ர-தநு:-ப்ரபா. வானவில்லுக்கொப்பான ஒளி யுள்ளவள்.**

2404-02 ஆஜ்ஞா கமலத்தில் தியானிக்கப்பட்ட பிந்துவின் மேல் வானவில் போன்ற ஒளி காணப்படும். அது பிந்துவின் பிரிவான அர்த்தசந்திரம் என்ற நாதவடிவினுடையது. தீப ஒளி போன்ற பிந்துவின்மேல் இது அமைந்துள்ளது. அந்த வடிவில் தியானிக்கப்படுபவள் தேவி. (பா. 1825) (594)

**2405-01 ஹ்ருதயஸ்த்தா. இதயத்தில் இருப்பவள்.**

2405-02 மந்திரத்தின் தேவதையை இதயத்தில் தியானிப்பர். (பா. 0304) ஸ்ரீவித்யையின் தேவதையாக, இந்த ஸஹஸ்ரநாமத்தின் தேவதையாக, தேவி இதயத்தில் இருப்பவளாகத் தியானிக்கப் படுகிறாள்.

2405-03 பாலாமந்திரத்தின் மூன்றாவது கூடம் 'ஸௌ:' என்ற சக்தி பீஜாக்ஷரம். இதனைப் பராமந்திரம் என்றும் ஹ்ருதய பீஜம் என்றும் கூறுவர். நமது உடலில் உள்ள சக்தி அனைத்தும் இதயத்தில் அடங்கி உள்ளது, விதையில் மரத்தின் கரு அடங்கி யிருப்பதுபோல். உலகிலுள்ள சராசரமனைத்தின் சக்தியும் இந்த ஹ்ருதய பீஜத்தில் அடங்கியுள்ளது. இந்த மந்திரசக்தி வடிவில் தேவி இதயத்தினுள் வீற்றிருப்பதாகப் பாவனை செய்யப்படுவதை இந்நாமம் குறிப்பிடுவது.

2405-04 தேவி அந்தர்யாமியாக (நம்மை ஆட்டிவைப்பவளாக) இதயத்தில் இருக்கிறாள் எனப் பரமேச்வரஹ்ருதயம் எனும் உபநிடதம் கூறும். அந்த உபநிடதத்திற்கே ஹ்ருதயம் என்ற

பெயரும் உண்டு. ஹ்ருதயம் என்ற உபநிடதத்தில் ஹ்ருதயத்தில் அந்தர்யாமியாக இருப்பவளாகப் பாவனை செய்ய உபதேசிக்கப்படுபவள் தேவி. (595)

**2406-01 ரவிப்ரக்க்யா. சூரியனைப் போன்று விளங்குபவள்.**

2406-02 இதயத்தில் விளங்கும் தேவி ஸூரியனைப் போல் ஒளிமிக்கவள். இதயம் அநாஹதமெனும் சக்கிரமாக ஸூரியகண்டமாக விளங்குவது. அதில் ஸூரியனாக விளங்குபவள், ஸூரியனுக்கொப்பான காந்தி உள்ளவள் என்று பாவனை செய்யப்படுகிறாள்.

2406-03 மூகர் என்ற காமாக்ஷீபக்தர் தனது ஆர்யா சதகத்தில் ‘மத்ய்யே ஹ்ருதயம் மத்ய்யே நிடிலம் மத்ய்யே சிரோ (அ)பி வாஸ்தவ்யாம். சண்டகர-சக்ரகார்முக-சந்த்ரஸமாபாம் நமாமி காமாக்ஷீம்’ (சு. 15) என்று தேவியைப் பிரார்த்திக்கிறார். “இதயத்தின் நடுவிலும் நெற்றியின் நடுவிலும் தலையின் நடுவிலும் முறையே சூரியன் வானவில் சந்திரன் இவர்களுக்கொப்பான ஒளியுள்ளவளாக விளங்கும் தேவியை வணங்குகிறேன்’’ என 591–596 நாமங்களில் குறிப்பிட்ட வடிவங்களை பாவனை செய்கிறார் மூகர். (596)

**2407-01 த்ரிகோண – அந்தர – தீபிகா. முக்கோணத்தின் இடையே சிறு தீபம் போன்று விளங்குபவள்.**

2407-02 மூலாதாரத்தில் நடுவில் உள்ள முக்கோணத்தில் அக்னிமண்டலத்தில் சிறு தீபம் போலிருந்து கொண்டு குண்டலினீ சக்திஸ்தானத்தை விளக்குபவளாகத் தேவி பாவனை செய்யப்படுகிறாள்.

சூரியனைப் போன்ற ஒளி உள்ளவள் தேவி என்று 596 வது நாமம் கூறியது. சூரியன் உலகை விளக்கும் விதத்தை இந்த நாமம் விவரித்துக் கூறுகிறது. மேருவை சூரியன் வலம் வருவதாகப் புராணங்கள் கூறும். மேருவின் எட்டு திக்குகளிலும் இந்திரன் முதலிய எட்டு திக்பாலர்களின் நகரங்கள் அமைந்துள்ளன. ஸூரியன் கிழக்குதிக்கில் இந்திர நகரத்தில் இருந்து வலமாகச் செல்லும்போது இந்திரனின் நகரில் முழு வெளிச்சமிருக்கும். அவன் செல்லும் பாதையில் தென்கிழக்கில் உள்ள அக்னியின் நகரில் ஒளி காணும். அவ்விதமே அவன் முன் ஸஞ்சரித்த பாதையிலிருந்த வடகிழக்கில் அமைந்த ஈசானனின் நகரில் அப்போது ஒளியிருக்கும். தெற்கில் உள்ள யமனது நகரிலும் வடக்கில் உள்ள குபேரபுரியிலும் ஒளிமங்கி விடியற்காலை போலும் மாலை போலும்

இருக்கும். மற்ற தென்மேற்கு, மேற்கு, வடமேற்குப் பக்கங்களில் முழு இருட்டிருக்கும். கிழக்கைவிட்டு தென்கிழக்கு வந்தவுடன் கிழக்கு தென்கிழக்கு தெற்கு என்ற மூன்று திக்குகளில் வெளிச்ச மிருக்கும். தென்மேற்கிலும் வடகிழக்கிலும் சந்தி வேளைபோல் மங்கிய ஒளி நிற்கும். மற்ற மூன்று திக்குகளிலும் (மேற்கு வட மேற்கு வடக்கு) இருட்டாகியிருக்கும். இப்படி மூன்று கோணங் களில் (திக்குமூலை-கோணம்) மட்டும் ஒளி காட்டும் சூரியனைப்போல் தேவியும் முக்கோணங்களில் ஒளிவிட்டுப் பிரகாசிக்கிருள். தானி ருக்கும் கோணத்திலும் அக்கோணத்துடன் இணைந்த பக்கத்தி லுள்ள இரு கோணங்களிலும் தேவி பிரகாசத்தைத் தருகிருள் என்றும் பொருள் கூறுவர். (597)

## அதிகாரம் 25

# அருள் புரியும் தேவியின் வடிவங்கள்

दाक्षायणी दैत्यहन्त्री दक्षयज्ञविनाशिनी ॥ 600
121 दरान्दोलितदीर्घाक्षी दरहासोज्ज्वलन्मुखी । 602
गुरुमूर्तिर्गुणनिधिर्गोमाता गुहजन्मभूः ॥ 606

தாக்ஷாயணீ தைத்யஹந்த்ரீ தக்ஷயஜ்ஞவிநாசிநீ ll
தராந்தோலிததீர்க்காக்ஷீ தரஹாஸோஜ்ஜ்வலன்முகீ 1
குருமூர்த்திர் குணநிதிர் கோமாதா குஹஜந்மபூ: ll

2501-01 தாக்ஷாயணீ. தக்ஷனின் பெண்.

2501-02 பிரும்மாவின் புதல்வர் தக்ஷன். ஒன்பது பிரஜாபதி களில் (மக்கள் தலைவர்களில்) ஒருவர், தகுதிச் சிறப்பால் அவர் களின் தலைவருங்கூட. (பிரஜாபதிபதி:) மூவுலகிலும் பெருமைமிக்க வனைத் திகழவும் மும்மூர்த்திகளைவிடச் செல்வாக்கு மிக்கவனுக விளங்கவும் தக்ஷன் விரும்பினர். பிரும்மாவும் விஷ்ணுவும் தந்தை யும் பாட்டனுருமானதால் அவர்களிடம் செல்வாக்கு உண்டு. சிவ பெருமானையும் தனக்கு மாப்பிள்ளையாக்கிக் கொண்டுவிட்டால் நிறைவு பெறலாம் என நினைத்துத் தேவியை வழிபட்டார். தேவி கருணையால் ஸதீ என்று திருநாமம் பூண்டு அவருக்கு மகளானுள். தக்ஷனின் பெண் தாக்ஷாயணீ.

2501-03 தக்ஷனுக்கு 60 பெண்கள். சந்திரனுக்கு 27 பெண் களை மணம் செய்வித்தார். அவர்களே 27 நட்சத்திரங்கள். தக்ஷனின் பெண்களானதால் தாக்ஷாயணிகள். அந்த நக்ஷத்திரங்களாயிருப்ப

முறையே பூமி, ஜலம், அக்கினி, வாயு, ஆகாசம், ஸூர்யன், சந்திரன், யஜமானன் (புருஷன்) என்ற எட்டைக் குறிப்பிடு பவை. அவைகளின் சக்தியாக இருப்பவளும் அவளே.

2565-03 பிரகிருதி இருவகைப்படும். ஒன்று பரா- உயர்ந்த பிரகிருதி, மூலப்பிரகிருதி எனப்படுவது. மற்றொன்று அபரா- உயர்ந்ததல்லாத பிரகிருதி. அது எட்டு வகை. பூமி, ஜலம், அக்கினி, வாயு, ஆகாசம், மனம், புத்தி, அஹங்காரம் (கீதை 7-4) என அந்த எட்டு பிரகிருதியுமாயிருப்பவள் தேவி.

2565-04 (1) லக்ஷ்மீ (செல்வம்) (2) மேதை (3) தரா (பூமி யாக உலகைத் தாங்குவது) (4) புஷ்டி (உடல் நிறைவு) (5) கௌரீ (தூய்மை) (6) துஷ்டி (மன நிறைவு) (7) பிரபா (மேனி ஒளி), (8) திருதி (தைரியம்) என்று தேவி எட்டு வடிவம் கொண்டவள். வசிநீ முதலிய எட்டு வாக்தேவிகள் (0911-24) பிராம்மீ முதலிய எட்டு மாதாக்கள் (0911-18) இவர்களும் தேவியின் வடிவங்களே. (662)

2566-01 அஜா-ஜேத்ரீ. அவித்தியையை வெல்பவள்.

2566-02 அவித்தியை எனும் அஜ்ஞானம் ஒவ்வொரு பிறவி யிலும் தொடர்கிறது. முதல் பிறவி எப்போது தொடங்கியது என்பது அறியவொண்ணாதது. உலகத்தைப் படைக்க முற்பட்ட போது முதலில் தோன்றியது எனக் கொள்ளவும் முடியாது. உலகம் அதற்கு முன் நிகழ்ந்த பிரளயத்தில் பிரும்மத்தின் உள்ளடங்கியது. பின்னர் வெளிவருகிறது. அப்படி வெளிவருவதே படைப்பு. அழிவும் படைப்பும் தொடர்ந்து நடைபெறுவதால் அதற்கு ‘ஆதி’ எது எனக் கண்டுபிடிக்க முடியாது. அதற்கு மூலமான அவித் தியையும் என்று தொடங்கியது என்று அறிய முடியாதாகையால் அதனை அஜா (பிறப்பற்றவள்-அனாதி) என்கிறோம். அனாதியான அவித்தியைக்கு முடிவு மட்டும் உண்டு. தனது பிரும்ம நிலையை உணர்வதே அதன் முடிவு. அதனால் அது முடிவுடன் கூடியது- அநந்தா அல்ல. ஞானரூபிணியான தேவி ஞானத்தைத் தந்து அஜாவான அவித்யையை வெல்கிறாள். (663)

2567-01 லோக-யாத்ரா-விதாயிநீ. உலகத்தின் தொடர்ந்தப் பிரயாணத்தை நடத்துபவள்.

2567-02 ஒவ்வொரு நொடியிலும் தோன்றி இருந்து மறையும் தன்மை படைத்த உலகம் முடிவில்லாத வழிப்பயணம் கொண்டது. அதனைச் சீராக நடக்கச் செய்பவள் தேவி. ஒவ்வொரு நிலையை அடையும் போதும் அதுவே பயணத்தின் எல்லையாகத் தோன்றும்.

ஆனால் அதனையும் கடந்து தொடர்ந்து செல்ல நேர்வதால் முடிவற்றது இந்த வழிப்பயணம். அதை நடத்திவைப்பவள் 'விதி' வடிவில் உள்ள தேவி. (664)

2568-01 ஏகாகிநீ. தனித்து இருப்பவள்.

2568-02 தன்னையல்லாது வேறின்றித் தனித்து இருப்பவள். பதினான்கு உலகங்களின் யாத்திரையையும் தனித்து எங்கும் எல்லாமாக எப்போதுமிருந்து நடத்தித் தருபவள் அவளே. அவளுக்குத் துணை தேவையில்லை. (665)

2569-01 பூம-ரூபா. அனைத்துமாக இருப்பவள்.

2569-02 தனித்து இருப்பவள் எனும்போது இடத்திலோ காலத்திலோ குறுகி நிற்பவள் என எண்ணத் தேவையில்லை. அவளைத் தவிர வேறொன்றுமில்லை எனக்கூறுமளவிற்கு எல்லாமாக இருப்பதனால் பல வடிவங்கள் கொண்டவள். (666)

2570-01 நிர்-த்வைதா. துவைதமற்றவள்.

2570-02 துவைதம்-தன்னைத் தவிர வேறொன்றிருப்பதை உணர்தல். தன்னையன்றி வேறில்லாமல் தனித்து 'ஏகாகிநி'யாக இருக்கும் தேவி எங்கும் நிரம்பியவளாக எல்லாமானவளாக 'பூமா' வாகவும் இருப்பதால் தன்னைத்தவிர வேறொன்றிருப்பதன் உணர் வில்லாதவள் ஆகிறாள். துவைதம் எனும் பேத உணர்ச்சி உலக மாகத் தோன்றும் நிலைக்கு முன்னும் பின்னுமிருக்க முடியாது. தோன்றும் நிலையிலும் 'பூமா'வாக அவளே இருப்பதால் துவைதம் இருக்கமுடியாது. அவளது கருணையால் அவள் அருள்பெற்றவர் களுக்கும் துவைத உணர்ச்சி நீங்கி ஸர்வாத்ம பாவனை-எல்லாவற் றிலும் பரம்பொருளை உணரும் பாவனை ஏற்படும். (667)

2571-01 த்வைத - வர்ஜிதா. துவைதத்திலிருந்தும் நீங்கி நிற்பவள்.

2571-02 துவைதம் முன்னிருந்து இப்போது நீங்கிவிட்ட தென நினைப்பது தவறு. என்றுமே த்வைதம் அவளிடம் இருக்க முடியாது. துவைதம் அவளிடத்தில் பொருந்தாது. அவளைத்தவிர வேறு பொருள் என்றும் எவ்விடத்திலும் எவ்விதமாகவும் இல்லை. அதனை அழித்தாள், இதனைக் காப்பாற்றினாள், அவருக்கு அருளி னாள் என்பதெல்லாம் பாரமார்த்திக நிலையில் பொருந்தாதவையே. வியவஹாரதசை எனும் உலகத்தோற்ற நிலையில் அவள் வேறு அவளது செயல்கள் வேறு என உணரப்படலாம். தோற்ற அளவில்

காணப்படும் உண்மை முற்றிலும் உண்மையாக இருக்காது. காணப் படும் வேற்றுமை தத்துவரீதியில் மெய்யல்ல. தத்துவரீதியில் அவள் வேற்றுமையற்றவளே. (668)

132 अन्नदा वसुदा वृद्धा ब्रह्मात्मैक्यस्वरूपिणी । 672

बृहती ब्राह्मणी ब्राह्मी ब्रह्मानन्दा बलिप्रिया ॥ 677

அந்நதா வஸுதா வ்ருத்தா ப்ரும்ஹாத்மைக்யஸ்வருபிணீ 1
ப்ருஹதீ ப்ராம்ஹணீ ப்ராம்ஹீ ப்ரம்ஹாநந்தா பலிப்ரியா 11

2572-01 அந்ந-தா. உணவளிப்பவள்.

2572-02 வாழவைப்பது உணவு-அன்னம். தேவி அன்ன பூர்ணா. ஒருகையில் உணவு நிரம்பிய பாத்திரமும் மற்றொருகையில் அதனை வாரிவழங்கும் கரண்டியும் கொண்டவள். அவள் அளிக்கும் உணவு ஊட்டமளிப்பதுடன் ஞானமும் வைராக்கியமும் தரவல்லது. அன்னமளிப்பவரின் மனப்பான்மையும் அளிக்கப்படும் அன்னத் துடன் அதனைப் பெறுபவரைச் சேரும். தேவி பேரறிவு வடிவினள். அவள் தரும் உணவு ஞானமூட்டவல்லது. "அந்நபூர்ணே ஸதா- பூர்ணே சங்கரப்ராண வல்லபே. ஜ்ஞான வைராக்கிய ஸித்த்யர்த்தம் பிக்ஷாம் தேஹி ச பார்வதி" "சங்கரரது உயிரைப் போன்ற பிரிய நாயகியே, அன்னம் நிரம்பியவளே, எப்போதும் எல்லாம் நிரம்பிய வளே! ஞானமும் வைராக்கியமும் நிலைத்திருக்க எனக்கு உணவிடு வாயாக!" (சங்கரரது அன்னபூர்ணாஷ்டகம்). சாப்பிடுமுன் இந்த சுலோகத்தைக் கூறித் தேவியே அன்னமளிப்பதாகப் பாவித்து உண்பதால் அன்னதோஷம் சேராது. அறிவும் வைராக்கியமும் நிலைக்கும். (669)

2573-01 வஸு-தா. செல்வமளிப்பவள்.

2573-02 வஸு-செல்வம். வாழ்விற்குப் பயன்படுவதனைத்தும் வஸு. (வஸ்யதே அநேந) அதனை வழங்குபவள் தேவி. வாழ்க் கைக்கு உதவும் பொருள்களைப் பெறும்போது தேவி தந்தருளியதாக உணர்ந்து அதனைப் பயன்படுத்திக் கொள்வதால் அது நிலைத் திருக்கும். நாம் பெறும் வாழ்க்கை வசதிகள் அனைத்தும் அவளரு ளால்தான் கிடைக்கின்றன. அதனை உணர்வதொன்றே முக்கிய மானது. (670)

2574-01 வ்ருத்தா. முதிர்ந்தவள்.

2574-02 முழு வளர்ச்சி பெற்றவள் தேவி. முழுவளர்ச்சி பெற்று அது குறைவதற்கான முதுமை வரும்போதே விருத்தர்

என்பர். தற்போதுள்ள குறைவால் முன்னிருந்த நிறைவு ஊகிக்கப் பெறுவதே அதற்குக் காரணம். விருத்தி-வளர்ச்சி. அதனைப் பெற்றவள் வ்ருத்தா. ஆனால் கிழத்தனம் வராத விருத்தி இது. வயதில் மூத்தவள் வ்ருத்தா. எல்லோருக்கும் முன்னிருப்பவளான தால் அவளைவிட வயதால் மூத்தவரில்லை. மூத்தவளானதால் தன்னிடமிருந்து தோன்றியவர்களிடமுள்ள பரிவால் அன்னதாவாகவும் வஸுதாவாகவும் இருக்கிறாள். (671)

2575-01 ப்ரஹ்ம - ஆத்ம - ஐக்ய - ஸ்வரூபிணீ. பிரும்மமும் ஜீவனும் ஒன்றேயான நிலையை வடிவமாகக் கொண்டவள்.

2575-02 'ஸோ அஹம்', 'அஹம் ஸ:' அந்தப் பிரும்மம் நான், நான் அந்தப் பிரும்மம் என்று ஹம்ஸ (அஜபா) மந்திர பாவனையால் தன் நிலையை ஒவ்வொரு மூச்சிலும் உணரும்போது வேற்றுமையற்ற எங்கும் நிரம்பியுள்ள (ப்ரம்ஹ) எல்லாம்வல்ல(ஆத்ம) தனித்திருக்கும் (ஏகம்) பரம்பொருளாக ஆகிறான். அந்த அனுபூதி வடிவில் உள்ளவள் தேவி. அவளது அருளால் பெற்ற அன்னமும் செல்வமும் அதனை உணர்ந்து அனுபவிக்கப் பெறும்போது 'அன்னத்தைத் தருபவளும் அவளே', 'அன்னமாயிருப்பவளும் அவளே', 'அதனை ஏற்கும் ஜீவனாக இருப்பவளும் அவளே' என்று உள்ளறிவைத் தெளிவு பெறச் செய்கின்றன. நிலைத்த அந்த பாவனை ஆத்ம தர்சனத்திற்கு உதவியாக நின்று அறியாமையை அழிக்கிறது. தடை நீங்கியதும் பூர்ணப் பேரொளியாக நிற்கும் ஆத்மாவாக ஆகிவிடுகிறான். அந்த வேற்றுமையற்ற, கலப்பற்ற, தூயப் பேரொளியான ஆத்மாவாக ஆக்குவதைத் தன் தனித்தன்மையாகக் (ஸ்வரூபமாக) கொண்டவள் தேவி.

2575-03 ஹம்ஸ மந்திரம், (அஜபமாமந்திரம்) என ஒரு மந்திரமுண்டு. 'ஸோஹம் ஹம்ஸ:' என்பது அதன் வடிவம். 'அது' நான், நான் 'அது' எனப் பொருள்படும். இந்த மந்திரத்தை வாயால் ஜபிப்பதில்லை. நாம் ஜபிக்கத் தேவையில்லாதபடி இயற்கை நாம் மூச்சுவிடுவதை இந்த ஜபமாக அமைத்துள்ளது. மூச்சை உள்ளிழுத்து வெளியே விடும்போது ஸோஹம் என்ற சொல்லமைப்பு உணரப்படும். ஜபிக்காமல் மந்திரஜபம் நிறைவேறுவதால் அஜபாஜபம் என்பர். மூச்சின் முழு வடிவத்தை ஹம்ஸ மந்திரமாக உணர்வதே இங்கு ஜபமாகிறது. ஸோஹம் என்பதை அமைப்பு மாற்றிக் கூறும்போது (அ)ஹம் ஸ: என ஆகிறது. அதனால் ஹம்ஸமந்திரம்.

2575-04 திருவாரூரில் தியாகராஜப் பெருமானின் நடனத்தை அஜபா நடனம் என்பர். திருமாலின் மூச்சுக்காற்றுக்கேற்ப அவரது மார்பு ஏறி இறங்கும். தியாகராஜப் பெருமான் திருமாலின் மார்பில் நடனம் புரிகிருர். இது பரமேசுவரனது நடனத்தில் ஒரு சிறப்பு. அஜபா கூறுவது பிரும்ம – ஆத்ம – ஐக்யம். அதன் வடிவில் உள்ளவள் தேவி. (672)

2576-01 ப்ருஹதீ. பேருருவம் கொண்டவள்.

2576-02 பெரிதுக்கெல்லாம் பெரியவள். பிருஹதீ என்று 36 அக்ஷரங்கள் கொண்ட செய்யுளமைப்பிற்குப் பெயர். ஸாமங்களில் பிருஹத் எனும் ஸாமமும் ஒன்று. இவைகளாக இருப்பவளும் தேவியே. (673)

2577-01 ப்ராம்ஹணீ. அந்தணப்பெண்.

2577-02 மும்மூர்த்திகளில் சிவன் அந்தணர். (விஷ்ணு க்ஷத்திரியர்) அந்தணருக்கு அவர் தெய்வம். அவரது சக்தியாக அந்தணப் பெண்ணுக இருப்பவள் தேவி. பிரும்மத்தின் சக்தி பேரறிவு. பேரறிவாக இருப்பவள் அவளே. அந்தணரின் சக்தியாகிய காயத்திரி வடிவினள். (674)

2578-01 ப்ராம்ஹீ. பிரும்மாவின் சக்திவடிவினள்.

2578-02 எட்டு மாதாக்களில் ஒருவள். (0911-18) அன்னபட்சி வாஹனத்தில் அமர்ந்தவள். ஜபமாலே கமண்டலு ஏந்தியிருப்பவள். தர்ப்பைகளே முடிந்து கமண்டலுவிலுள்ள ஜலத்தில் நனேத்துத் தெளித்து எதிரிகளே மாய்ப்பவள். அறிவைத் தருபவள். ஸரஸ்வதி எனும் பிரும்மாவின் சக்தி, வாக்கின் சக்தி. (675)

2579-01 ப்ரம்ஹ-ஆநந்தா. பிரம்மானந்த வடிவினள்.

2579-02 பிரும்மாத்ம ஐக்கிய பாவனேயால் பெறும் ஆத்மானந்தத்தையே தன் வடிவமாகக் கொண்டவள். ஆநந்தம் என்பது இனம் பிரித்தறியமுடியாத மகிழ்ச்சி. பொதுவாக மகிழ்ச்சி, இதனுல் இப்போது பெற்றது, இந்த உருவில் உள்ளது என இனம் பிரித்துக் காண முடியக்கூடியதே. தூக்கத்தின் முழுமையில் பெறும் ஆநந்தம் பிரும்மானந்தத்திற்கு மாதிரியாக அமையும். தூக்கத்தில் கிட்டும் ஆனந்தம் மனம் பொறிமுதலியவற்ருல் வெளி விஷயங்களே நாடிப் பெற்றதல்ல. அதனுல் அதற்கு வடிவம் கிடையாது. அஜ்ஞானநிலேயான தூக்கத்தில் கிட்டும் அந்த ஆநந்தமே அத்வைத பாவனே தரவல்லதெனில், விழித்திருக்கும்போது

விஷயநாட்டமின்றி மனத்தின் விகல்பமின்றி ஸமாதி நிலையில் பெறும் ஆனந்தம் வடிவமற்றது. முழுமையானது. துண்டிட முடியாதது. தன்னைவிட்டுப் பிரிக்கமுடியாத தன்னிலையாக இருப்பது. அந்த ஆனந்தமே தேவியின் வடிவம். (676)

**2580-01 பலி-ப்ரியா. பலசாலிகளிடத்தில் பிரியமுள்ளவள்.**

2580-02 அஜ்ஞானத்தைத் தானே போக்கிக்கொள்ள முனைவுள்ளவனே பலசாலி. காமம் குரோதம் லோபம் முதலிய உள்ளெதிரிகளை வென்றவன் பலசாலி. அவனே சரியான வழியில் முயல்பவன். இச்சா-ஞான-கிரியா சக்திகளை முறைப்படி பயன்படுத்துபவன். தேவி அவனிடத்தில் பிரியமுள்ளவள். அவனுக்குப் பிரியமானவளும்கூட. பலி என்ற அசுரனிடம் பிரியத்தைக் காட்டுபவள். தேவதைகளின் திருப்திக்கெனப் படைக்கப்படுபவை 'பலி'-அர்ப்பணம் செய்யப்பெற்ற வழிபாட்டுக்குரிய பொருள். பக்தியுடன் அளிக்கப்பெறும் பொருளை மனமுவந்து ஏற்பவள். (677)

133 भाषारूपा बृहत्सेना भावाभावविवर्जिता । 680
सुखाराध्या शुभकरी शोभना सुलभा गतिः ॥ 683

பாஷாரூபா ப்ருஹத்ஸேனா பாவாபாவவிவர்ஜிதா ।
ஸுகாராத்யா சுபகரீ சோபநா ஸுலபா கதி: ॥

**2581-01 பாஷா-ரூபா. மொழி வடிவினள்.**

2581-02 உலகில் உள்ள ஸம்ஸ்க்ருதம் முதலான மொழிகள் அனைத்தும் அவளது வடிவங்களே. எதற்கும் எட்டாத அவளை மொழிகள் மனத்தில் பதியவைக்கின்றன. (பாஷாபி: ரூப்யதே) மனம் உணர்ந்ததை வாய் பேசுகிறது. திரும்பத் திரும்ப நினைத்துப்பேசப் புரியாத பொருளும் ஓரளவு புலப்படும். அர்ப்பணம் பண்ணப்பெறும் பொருள்களைத் தேவி மனம் உவந்து ஏற்பவள். அர்ப்பணத்திற்கான பொருள்களில் மிகவும் சிறந்தது மொழி. மொழி ஒரு சாதனம். அதில் எது உயர்ந்தது? பேசும் மொழியா எழுதும் மொழியா என்ற சிந்தனைக்கிடமில்லை. சிசுவின் எண்ணத்தை அறிந்துகொள்ளத் தாய்க்கு இலக்கண சுத்தமான மொழி தேவையில்லை. அது எந்த மொழியில் எப்படிப் பேசினாலும் மொழி வடிவமே இல்லாத மழலை பேசினாலும் தாய் புரிந்துகொள்வாள். பேச்சால் அறியப்படுபவள் தேவி. (678)

**2582-01 ப்ருஹத்-ஸேநா. பெருஞ்சேனையுள்ளவள்.**

2582-02 தானே ஆக்கிக் காத்து அழிக்கவல்லவளாயினும் பலருக்கு அவ்வகைப் பணிகளை நிறைவேற்றுவதற்கு வாய்ப்பளித்துப் பெருமை தருவதற்காகவே பெருத்த சேனையைத் தன்னிடம் வைத்திருக்கிறாள் தேவி. பிறர் உதவி சிறிதும் தேவைப்படாத போதிலும் உலகில் உள்ளதனைத்தையும் தனக்கு சாதனமாகக்கொண்டு பணிகளை நிறைவேற்றுகிறாள். (679)

2583-01 பாவ – அபாவ – விவர்ஜிதா. பாவமும் அபாவமும் இல்லாதவள்.

2583-02 பாவம்-ஒரு பொருள் தோன்றி இருக்கும் நிலை. அபாவம்-புலன்களுக்கு அகப்படாதிருப்பதால் இல்லாதிருக்கும் நிலை. இருக்கும் நிலை, இல்லாத நிலை என்ற இரண்டு மற்றவள். இருக்கும் நிலை அற்றவள் என்றால் இல்லாத நிலை கொண்டவள் எனவும், இல்லா நிலை அற்றவள் என்றால் இருக்கும் நிலையுள்ளவள் எனவும் பொருள் படுமே? இரண்டும் அற்றநிலை எப்படிப் பொருந்தும்? என்ற ஐயம் எழலாம். அரிசியானது உணவாயிற்று. அரிசி அழிந்தது. உணவு உள்ளது. உணவு எனும் நிலையில் உணவின் இருக்கையும் அரிசியின் இன்மையும் கூடி உள்ளன. உணவு சாப்பிடப்பட்டது. உணவு அழிந்தது. உண்பவனின் ரத்தமாயிற்று. மண்குடம் உடைந்தது. மண்ணாயிற்று. ஒன்றின் அபாவமே மற்றொரு பாவமாக உள்ளது. அதனால் உலகில் உள்ள பொருளனைத்திலும் பாவமும் அபாவமும் சேர்ந்தே நிற்கும். தேவியிடத்திலோ? புதிதாக ஒன்றும் தோன்றுவதில்லை. அதனால் முன்நிலை அழிவதில்லை. அழிவும் தோற்றமுமற்ற என்றுமுள்ள நித்தியப் பொருள் பாவப்பொருளா அபாவப் பொருளா பாவ-அபாவப் பொருளா என்ற சர்ச்சை எழவே இடமில்லை. தோற்ற நிலையில் ஏற்படும் மாறுதல்களே உற்பத்தியும் அழிவும். தோற்றத்திற்கு ஆதாரமாயுள்ள பரம்பொருளில் தோற்றத்தால் ஏற்படும் மாறுதல்கள் மாற்றத்தை உண்டாக்காது. ஆதாரம் ஸத்யம். ஸத்யமானது புதிதாகத் தோன்றாது, அதனால் அழியாது. அதனால் தேவியிடத்தில் பாவமும் (உற்பத்தியும்) அபாவமும் (அழிவும்) இல்லை. (680)

2584-01 ஸுக-ஆ-ராத்தியா. சுகமாக வழிபடத்தக்கவள்.

2584-02 எளிதில் உடலை வருத்தாமல் செய்யக்கூடியது சுகமாயிருக்கும். தேவியின் வழிபாட்டிற்கு உடலை வருத்த வேண்டாம். மனத்தை அடக்கவேண்டாம். "தேவிக்கு இன்ன வடிவம்தான் உண்டு. அதனையே தியானிக்கவேண்டும்" என்ற வரையறை

கிடையாது. எல்லாமாயிருப்பவளானதால் எந்த வடிவிலும் அவளைத் தியானம் செய்யலாம். ஒரே வடிவில் நிலைத்திருக்க வேண்டிய நிர்ப்பந்தமும் கிடையாது. தியானிக்கும் வடிவத்தை அவள் வடிவமாக உணர்வதொன்றே நமது செயல். அதனால் எளிதில் வழிபடத் தக்கவள் தேவி. நித்தியமான அவளை நித்தியமான பொருளைக் கொண்டுதான் வழிபடவேண்டும் என்றும் கவலைப்பட வேண்டியதில்லை. வழிபாட்டு முறைகளில் காணப்படும் நிர்ப்பந்தங்கள், தமோ குணமும் ரஜோ குணமும் மாறவும், ஸத்வ குணம் மேலோங்கவும் அவசியமானவை. மனம் ஓரிடத்தில் பதிய இவை உதவுகின்றன. ஆனால் இந்தக் கட்டுப்பாட்டில்தான் தேவி திருப்திப்படுவாள் என்பது கிடையாது. காயக்கிலேசமின்றி மனத்தை அவளிடம் பதிக்க முடியுமானால் அதனால் திருப்திப்படுபவள் தேவி. மனம் பதியப் பக்தி தேவை. அதற்கு வெளிச்சாதனம் தேவையில்லை. அதனால் அவளது ஆராதனம் எளிதானது. (681)

2585-01 சுப-கரீ. மங்களத்தைச் செய்பவள்.

2585-02 எளிதானமுறை நல்ல பலன் தருவதாக அமையுமா என ஐயம் எழக்கூடும். எந்த வகையில் வழிபட்டாலும் அதற்குப் பலன் ஒன்றே. அதுதான் மங்களம். மங்களத்தைச் செய்வதையே தம் செயலாகக் கொண்டவள் தேவி. (0902, 1306, 1315, 1505, 1602, 2128,) அசுபத்தைச் சுபமாக்குபவளும் கூட. அசுபம் ஜீவத்தன்மை, சுபம் சிவத்தன்மை. அதனை அருள்பவள் தேவி. (682)

2586-01 சோபநா ஸுலபா கதி:. உயர்ந்ததும் எளிதில் அடையக்கூடியதுமான இலக்காக இருப்பவள்.

2586-02 கதி:-இலக்கு, அடையவேண்டிய இடம், செயல், போக்கு, வினையின் பின்விளைவு, ஞானம் என்ற பல பொருள்கள் கொண்டது. (பா. 1603) புண்ணியத்தையும் நித்யானந்தத்தையும் மங்களத்தையும் தரவல்லவளானதால் சோபநா - அதே சமயத்தில் எளிதில் அடையக்கூடியவளானதால் ஸுலபா. சோபனமாயும் ஸுலபமாயும் உள்ள கதியாயிருப்பவள் தேவி.

2586-03 சோபநா ஸுலபா கதி: என மூன்று நாமங்கள் போலத் தோன்றினும் இது ஒரே நாமம். ஸுமுகீ நலிநீ ஸுப்ரூ: சோபநா என்ற தொடரில் சோபநா (நா. 462) எனத் தனி நாமம். ஸுவாஸிந்யர்சநப்ரீதாசோபநா என்ற தொடரில் ஆசோபநா எனப் பிரிக்கப்பட்ட நாமம், (நா. 972) இங்கு சோபநா ஸுலபா கதி:

என்ற நாமம். இந்த மாறுபாடுகள் கவனிக்கத்தக்கவை. தேவியை வழிபடுவது கஷ்டம் என்ற எண்ணமுள்ளவனுக்கு சோபநா அஸுலபா கதி :-எளிதில்அடையமுடியாதவள். (683)

# அதிகாரம் 26

# தேவியின் பேராண்மை

134 राजराजेश्वरी राज्यदायिनी राज्यवल्लभा । 686
राजत्कृपा राजपीठनिवेशितनिजाश्रिता ॥ 688

ராஜராஜேச்வரீ ராஜ்யதாயிநீ ராஜ்யவல்லபா I
ராஜத்க்ருபா ராஜபீடநிவேசிதநிஜாச்ரிதா II

2601-01 ராஜ - ராஜ - ஈச்வரீ. ராஜராஜர்களுக்கும் ஈசுவரி.

2601-02 எட்டு திக்குகளையும் காப்பவர்களான இந்திரன், அக்னி, யமன், நிர்ருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்ற எட்டு திக்பாலர்கள் ராஜாக்கள். அவர்களுக்குத் தலைவர்களான பிரும்மா, விஷ்ணு, ருத்திரன் என்ற மும்மூர்த்திகள் ராஜராஜாக்கள். திக்பாலர்களுக்குத் தலைவனான இந்திரன் ராஜராஜன். பரமேசுவரனது நண்பனானதால் செல்வாக்குமிக்க திக்பாலர் குபேரன். திக்பாலர்களுடைய சக்திபெற்ற சிறந்த பேரரசர்கள் ராஜராஜர்கள். பிரும்மாதிகளுக்கும் ஈசுவரன் தேவர்களுக்குள்ளே பெருமைமிக்கவர்-மஹாதேவனான காமேச்வரன். இவர்களனைவருக்கும் ஈசுவரி தேவி. (684)

2602-01 ராஜ்ய – தாயிநீ. அரசுரிமை அளிப்பவள்.

2602-02 அரசனது ஆளுகைக்குட்பட்டது ராஜ்ஜியம். ராஜராஜர்களான பேரரசர்கள், திக்பாலர்கள், பிரும்மா, விஷ்ணு, ருத்திரன், மஹாதேவன் முதலானோரது ஆளுகைக்குட்பட்ட ராஜ்ஜியங்கள் அனைத்தையும் தேவி அளிப்பாள். அவளது அருளால்தான் பேரரசர் முதலானோருக்கு இந்த அரசுரிமைகள் கிடைத்துள்ளன.

2602-03 ஸ்தூலமாகத் தோன்றும் பொருளின் ஸமஷ்டியின் ஆட்சி வைராஜ்யம் - (விராட்டைச் சேர்ந்தது). இந்திரியம் மனம் அடங்கிய ஸூக்ஷ்ம சரீர ஸமஷ்டியின் ஆட்சி ஸ்வாராஜ்யம். (ஸமஷ்டி ஸூக்ஷ்மசரீர அபிமானி - ஸ்வராட்). இரண்டிற்கும் மூலகாரணமான அவ்யக்தமெனும் பிருகிருதியின் ஆட்சி ஸாம்ராஜ்யம். (அவ்யக்தம் ஸம்ராட்). இந்த மூன்று ஆட்சிகளையும்

அருளுபவள் தேவி தனி மனிதனுக்கு (வ்யஷ்டி) ஸ்தூல-ஸூக்ஷ்ம - காரண சரீரங்களை ஆளும் திறமையைத் தருபவளும் தேவி. இம்மூன்று சரீரங்களை அடக்கி ஆளும் திறமையே அரசாட்சியைக் காட்டிலும் சிறப்புமிக்கது. அதனைத் தருபவள் தேவி. (பா. 1708-09) எல்லாவற்றிற்கும் மேம்பட்ட பேரரசு தேவியின் அருளாட்சி. அதனையும் தருபவள் தேவி. (685)

**2603–01** ராஜ்ய-வல்லபா. ஆட்சியில் ஈடுபட்டுள்ளவள்.

**2603–02** முன் நாமங்களில் குறிப்பிட்டுள்ள ராஜ்யங்களனைத்திலும் தேவிக்கு மிகுந்தப் பிரியமுண்டு. அவைகளின் மேம்பாட்டில் மிகுந்த ஈடுபாடுகொண்ட பேரரசி தேவி. உடலுக்கும் மனத்துக்கும் 'ஆத்மா' பிரியமாயிருப்பதுபோல், (பா. 1620–02) அந்தப் பல வகைப்பட்ட ராஜ்யங்களுக்கும் தேவி தான் மிகமிகப் பிரியமானவள். ராஜ்யம் என்பதால் அவைகளை ஆளும் பேரரசர்களையும் குறிப்பிடலாம். ஸ்ரீ நகரத்தில் தேவி வழிபாட்டிற்காக இந்திரன் முதலான திக்பாலர்களும் பிரும்மா முதலானோரும் கூடி நிற்கிறார்கள். (பாரா 0911-06,07) சில பேரரசர்கள் தங்கள் மனைவியருடன் 13–14 மதில்களுக்கிடையே உள்ள பிராகாரத்தில் தங்கித் தேவியை வழிபடுகின்றனர் என துர்வாஸரின் ஆர்யாதுவிசதீ கூறும். அவர்களிடத்தில் மிகுந்தப் பிரியமுள்ளவள் தேவி. (686)

**2604–01** ராஜத்-க்ருபா. பெருமையுடன் விளங்கும் கிருபையுள்ளவள்.

**2604–02** அன்னையின் கருணை மிகவும் புகழ்பெற்றது. அது எங்கும் பிரகாசிக்கிறது. வேறு காரணகாரியத் தொடர்பைக் கொண்டு ஊகித்தறியவேண்டியிராமல் கருணை தானே தன்னை வெளியிட்டுக்கொண்டுள்ளது. தந்தையின் கருணை வெளித்தோற்றமடையாமல் அடங்கியிருக்கும். அன்னையின் கருணை பரிவும் அன்புமாக வடிவெடுத்து மறைக்கமுடியாதபடி வெளியே துலங்கும். அன்னை வடிவமான தேவியிடம் கருணை மிகவும் பிரகாசத்துடன் துலங்குகிறது. அதனால் எல்லா அரசுரிமைகளையும் வழங்குகிறாள் தேவி. (687)

**2605–01** ராஜ–பீட–நிவேசித–நிஜ–ஆச்ரிதா. தன்னை அண்டியவர்களை அரச பீடத்தில் அமர்த்துபவள்.

**2605–02** தன்னை அண்டியவர்களைத் தேவி அரச பீடத்தில் அமர்த்துகிறாள். உலகில் உள்ள ராஜ பதவிகளனைத்தையும் அளித்தாலும் வேண்டாமெனப் புறக்கணித்துத் தேவியை மட்டும் பற்றி

அடைந்தவர்கள் நிஜ-ஆச்ரிதர்கள். தன்னலமற்ற அந்த அடியார்களே தனது தெய்விக அரசாட்சியைத் திறம்பட நடத்தவல்லவர்கள் எனக் கண்டு, தேவி அவர்களை அரசர்களாக்குகிருள். அனுமானுக்கு அடுத்த பிரும்மாவின் ஸ்தானத்தையும், மஹாபலிக்கு அடுத்த இந்திர பதவியையும் இறைவன் அளித்துள்ளதாகப் புராணங்கள் கூறும். அவர்கள் அப்பதவிகளைத் தமக்கென வேண்டாதவர்கள். இறைவனின் அருளாட்சிக்கு அத்தகைய தன்னலமற்ற மஹான்களின் சேவை தேவைப்படுகிறது. அதனுல் இறைவனே வலியவந்து அந்த ஸ்தானங்களை அவர்களுக்குத் தருகிருர் என்பதே இதன் கருத்து.

2605-03 தன்னை அண்டியவர்கள் வினைக்கட்டிலிருந்தும் விடுபட்டவர்கள். தேவி அவர்களிடம் அரசுப் பொறுப்பைத் தந்தாலும் அதன் சுகதுக்கங்களில் சிக்கிக்கொள்ளாமல் தாமரையில் நீர்போல் பற்றற்று வினைத் தொடர்பின்றி அவர்கள் கர்மயோகிகளாக அரசாள்வார்கள். (688)

135 राज्यलक्ष्मीः कोशनाथा चतुरङ्गबलेश्वरी । 691
साम्राज्यदायिनी सत्यसन्धा सागरमेखला ॥ 694

ராஜ்யலக்ஷ்மீ: கோசநாதா சதுரங்கபலேச்வரீ 1
ஸாம்ராஜ்யதாயிநீ ஸத்யஸந்தா ஸாகரமேகலா 11

**2606-01 ராஜ்ய-லக்ஷ்மீ:. ராஜ்யலக்ஷ்மியாயிருப்பவள்.**

2606-02 அரசாங்கத்திற்குப் பெருமை தரக்கூடிய செல்வம், தானியக் குவியல், படை, அறிவாளிகளின் சேர்க்கை முதலியதனைத்துமாக இருப்பவள். (689)

**2607-01 கோசநாதா. பொக்கிஷத்தின் தலைவி.**

2607-02 அரசனது பொக்கிஷத்தின் தலைவியாக இருப்பவள் தேவி. மற்றும் நமது ஸ்தூல-ஸூக்ஷ்ம-காரணதேகங்கள், அன்னமயகோசம், பிராணமயகோசம், மனோமயகோசம், விஜ்ஞானமயகோசம், ஆனந்தமயகோசம் என்ற ஐவகைக் கோசங்களாக ஆத்மாவை மறைத்துத் தம்மையே ஆத்மாவாகக் காட்டிக்கொண்டிருப்பவை (கோசம்-வாளை மறைக்கும் வாளின் உறை). அன்னமயகோசம்-ஸ்தூல உடல். பிராணமயகோசம்-பிராணனும் கர்மேந்திரியங்களுமாகும். மனோமய கோசம்-ஞானேந்திரியங்களும் மனமுமாகும். விஜ்ஞானமயகோசம்-'எனது'-'நான்' என்ற எண்ணத்தால் கட்டுப்படுத்தும் புத்தி தத்துவமாகும். ஆனந்தமயகோசம்-ஆத்மாவின் பரமானந்த வடிவத்தை மறைக்கும் அஜ்ஞான மறைப்பாகும்.

இந்த ஐந்து கோசங்களின் நாயகியாயிருந்து, முறையே தோற்றம், உயிர்ப்பு, எண்ணம், அஹங்காரம், ஆனந்தம் இவைகளை ஏற்படுத்துபவள் தேவி. (690)

2608-01 சதுர்-அங்க-பல-ஈச்வரீ. நான்கு வகைப்பட்ட படைகளின் தலைவி.

2608-02 காலாள், குதிரை, யானை, தேர் என்ற அரசைக் காக்கும் நான்கு வகைப் படைகள்; மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் என்பவை ஜீவனுக்கு உலகியலில் உதவும் நான்கு படைகள். (பா-1425-02). படைப்பு, காத்தல், ஒடுக்குதல் என்ற முத்தொழில் புரிபவர்கள், அவர்களை மேம்பார்வையிடுபவர் ஆகிய பரம்பொருளின் வ்யூஹங்கள் (படையமைப்பு) எனப்படும் நால்வர்; நாராயணனைப் பரம்பொருளாகக் கொள்பவர்கள் குறிப்பிடும் பிரத்யும்நர், அநிருத்தர், ஸங்கர்ஷணர், வாஸுதேவர் என்ற நால்வர்; தேவியைப் பரம்பொருளாகக் கொள்பவர் குறிப்பிடும் வாமா, ஜ்யேஷ்டா, ரௌத்திரீ, அம்பிகா என்ற நால்வர் (நா-295) பிரும்மா, விஷ்ணு, ருத்திரன், ஈச்வரன் என்ற நால்வர் (நா-264-271). இப்படி நான்கு அங்கங்களுள்ள சேனைகளுக்குத் தலைவியாயிருப்பவள் தேவி. (691)

2609-01 ஸாம்ராஜ்ய-தாயிநீ. ஸாம்ராஜ்யத்தை அளிப்பவள்.

2609-02 அரசர்களுக்கும் அரசன், பேரரசன், சக்கிரவர்த்தி 'ஸம்ராட்' எனப்படுபவன். பல அரசர்களை வென்று பேரரசர்களால் மட்டும் நிறைவேற்றத்தக்க ராஜஸூயம் முதலிய வேள்விகளைப் புரிந்தவன் ஸம்ராட். அவனது ஆளுகை ஸாம்ராஜ்யம். அதனையும் அதனை ஆளும் சக்தியையும் அருள்பவள் தேவி.

2609-03 ஸ்தூல பூதங்களாலான ஸ்தூல சரீர ஸமஷ்டியிலும் ஸூக்ஷ்ம பூதங்களாலான ஸூக்ஷ்ம சரீர ஸமஷ்டியிலும் அவைகளின் அவ்யக்த நிலையில் அபிமானியாயுள்ள ஈச்வரனை ஸம்ராட் எனக் குறிப்பிடுவர். அவரது ஆளுகை-உலகிலுள்ள ஸ்தூல-ஸூக்ஷ்ம சரீரங்கள் அனைத்தையும் ஆளுவது-ஸாம்ராஜ்யம். அதனைத் தருபவள் தேவி. (பா-2602-03) (692)

2610-01 ஸத்ய-ஸந்தா. மீற முடியாத எல்லையுள்ளவள்.

2610-02 ஸந்தா-எல்லை, சூளுரை. தேவி வகுக்கும் எல்லையை எவராலும் மீறமுடியாது. தேவி தான் உரைத்த சூளுரையைத் தானே மீறுவதில்லை. அதனால் அது எக்காலும் ஸத்தியமாக

இருக்கும். அவளது சூளுரையைப் பொய்யாக்க எவராலும் முடியாது. அவள் அருள் பெற்றால் நம் சூளுரையும் ஸத்தியமாகும். (693)

**2611-01 ஸாகரமேகலா. கடலை இடுப்பணியாகக்கொண்டவள்.**

2611-02 இடுப்பில் அணியக்கூடிய ஒட்டியாணம் முதலிய ஆபரணங்கள் மேகலா. தேவி பதினான்கு உலகங்களையும் தன் உருவமாகக் கொள்ளும்போது பூமி அவள் இடுப்பாகும். பூமியைச் சுற்றியுள்ள கடல் இடுப்பைச் சுற்றி அமையும் மேகலையாக விளங்கும். கடலை மேகலையாகக்கொண்ட பூமி வடிவினள் தேவி. சூழ்நிலையில் கடலைப்போல் கொந்தளிப்பிருந்தாலும் அதன் நடுவே பூமிபோல் பொறுமையுடனும் திடத்துடனும் உள்ளவள் தேவி. அப்படி அவளை நினைப்பவருக்குப் பொறுமையையும் திடத்தையும் அவளே அருள்வாள். (694)

136 दीक्षिता दैत्यशमनी सर्वलोकवशङ्करी । 697
सर्वार्थदात्री सावित्री सच्चिदानन्दरूपिणी ॥ 700

**தீக்ஷிதா தைத்யசமநீ ஸர்வலோகவசங்கரீ l**
**ஸர்வார்த்ததாத்ரீ ஸாவித்ரீ ஸச்சிதாநந்தரூபிணீ ll**

**2612-01 தீக்ஷிதா. அறிவூட்டுபவள்.**

2612-02 தீக்ஷா-அறிவூட்டுதல்; சீடனுக்கு மந்திரத்தை உபதேசித்து அவனது பாபத்தைப் (அஜ்ஞானத்தை) போக்குதல்; (பாரா. 1311-05) அதில் ஈடுபாடு கொண்டவளானதால் தீக்ஷிதா. (தீயதே க்ருபயா சிஷ்யே க்ஷீயதே பாபஸஞ்சய: l தேந தீக்ஷேதி கதிதா). தீக்ஷா-பலன் தரும் வகையில் செயலாற்றுவதில் முனைவும் உறுதியும்; அதனைக் கொண்டவள். அடியார்களைக் காப்பாற்றுவதும் கொடியவர்களை அடக்குவதும் அவளுக்கு விருப்பமான செயல்கள். அதில் ஈடுபட்டவள். மந்திர உபதேசம், சிறந்த விரதம், வேள்வி முதலானவைகளில் கடைப்பிடிக்கப்பெறும் உணவிலும் நடத்தையிலும் மற்றவற்றிலும் உள்ள கடுமையான கட்டுபாடுகளைத் தீக்ஷை என்பர். அத்தகைய நியமங்களைக் கொண்டவர் வடிவில் உள்ளவள் தேவி, (695)

**2613-01 தைத்ய-சமநீ. அசுரர்களை அடக்குபவள்.**

2613-02 கசியபரின் மனைவி திதி. அவளுக்குப் பிறந்தவர்கள் தைத்யர்கள் எனப்படும் அசுரர்கள். (அதிதி மற்றொரு மனைவி

அவளுக்குப் பிறந்தவர்கள் ஆதித்தியர்கள் எனும் தேவர்கள்.) அசுரர்களை அடக்குபவள் தேவி. அசுர எண்ணம் பரவாமல் தடுப் பவள் தேவி. (696)

**2614-01 ஸர்வலோக-வசம்-கரீ. உலகமனைத்தையும் வசப் படுத்துபவள்.**

2614-02 இச்சா சக்தி வடிவில் உள்ள தேவி எல்லாவற் றையும் தன் விருப்பப்படி நடத்தும் சக்தி படைத்தவள். அவள் படைத்த உலகம் அவளுக்கு அடங்கி நிற்கிறது. அடியார்களுக்கு உலகை வசமாக்கித் தருபவள் தேவி. (697)

**2615-01 ஸர்வ-அர்த்த-தாத்ரீ. எல்லாப் பொருள்களையும் தருபவள்.**

2615-02 அடியார் வேண்டும் பொருள்கள் அனைத்தையும் அளிப்பவள் தேவி. (698)

**2616-01 ஸாவித்ரீ. உலகைப் படைக்கும் சக்தி வடிவினள்.**

2616-02 உலகைப் படைப்பவர் ஸவிதா எனும் பரமசிவன் (பவன்). அவரது சக்தி ஸாவித்ரீ. உலகம் தோன்ற-புலப்படக் காரணமாயிருப்பதால் ஸூரியனும் ஸவிதா. அவனது சக்தியாகவும் அவருக்கு ஒளிதரும் சக்தி அளிப்பவளாகவுமிருந்து புத்தியைத் தெளி வுடையதாக்கி நற்பணிகளில் மனிதனை ஈடுபடுத்துபவள் ஸாவித்ரீ. காயத்ரீ மந்திரத்தின் உட்பொருளான பரம்பொருளின் சக்தியும் அவளே. புஷ்கரம் எனுமிடத்தில் திருக்கோயில் கொண்டுள்ள தேவி ஸாவித்ரீ எனப்படுவாள். (699)

**2617-01 ஸத்-சித்-ஆநந்த-ரூபிணீ. ஸத்-சித்-ஆனந்த வடி வினள்.**

2617-02 எக்காலும் எங்கும் எல்லாமாயும் நிறைந்திருப்பது ஸத் ஆகும். பேரறிவு சித் ஆகும். பேரானந்தம் ஆநந்தம் ஆகும். வேறு பொருளின் உதவியின்றியும் கலப்பின்றியும் உள்ள அறிவு பேரறிவு. (நிராகாரஜ்ஞானம்) பிறபொருளின் உதவியின்றி (ஆநந் தத்தோடு கூடியவள் என்றில்லாமல்) ஆநந்தமாகவே இருப்பது ஆநந்தம். இம்மூன்றையும் ரூபமாக-தன்னை அடையாளம் காட்டக் கூடியவையாக (ரூபயதி) வடிவமாகக் கொண்டவள் தேவி. (700)

137 देशकालापरिच्छिन्ना सर्वगा सर्वमोहिनी। 703
सरस्वती शास्त्रमयी गुहाम्बा गुह्यरूपिणी॥ 707

தேசகாலாபரிச்சிந்நா ஸர்வகா ஸர்வமோஹிநீ ।
ஸரஸ்வதீ சாஸ்த்ரமயீ குஹாம்பா குஹ்யரூபிணீ ॥

**2618-01** தேச–கால–அபரிச்சிந்நா. பரப்பிற்கும் நேரத்திற்கும் உட்படாதவள்.

**2618-02** எங்கும் இருப்பவளானதால் தேசப்பரப்பால் பகுக்கப்படாதவள் தேவி. எல்லாமாயும் எல்லாமல்லாமல் தனித்தும் இருப்பதால் அவள் எங்கும் இருக்கிறுள். (தேச–அபரிச்சிந்நா) உலகம் தோன்றுவதற்கு முன்னும் பின்னும், அதனைப் படைத்துக் காத்து அழிப்பவர்கள் தோன்றுவதற்கு முன்னும் பின்னும் இருப்பவளானதால் கால அளவிற்குட்படாதவள். காலத்தால் பகுக்கப்படாதவள். (கால–அபரிச்சிந்நா). (பா. 2545-02) (701)

**2619-01** ஸர்வ-கா. எல்லாவற்றிலும் உள்ளவள்.

**2619-02** இது அதுவாக இருக்கமுடியாது. அது இதுவாக இருக்கமுடியாது. இப்படி ஒரு பரிச்சேதம் (கூறுபாடு) உண்டு. தேவி எல்லாவற்றிலும் அந்தர்யாமியாக நிறைந்து எல்லாமாயிருப்பவள் ஆனதால் தேவி அதுவாகவோ இதுவாகவோ இல்லை என்றும் கூறமுடியாது. (பா. 2545-02) எல்லா திவ்விய க்ஷேத்திரங்களிலும் அந்தந்த தேவதையாக விளங்குபவளும் அவளே. (702)

**2620-01** ஸர்வ–மோஹிநீ. எல்லோரையும் மயக்குபவள்.

**2620-02** எங்கும் எல்லாமாய் எப்போதும் உள்ளவளை ஏன் அறியமுடியவில்லை ? பரம்பொருளிடமிருந்து வேறுபட்டதாகப் பார்க்கச் செய்யும் அஜ்ஞானம் எனும் மாயை அங்கு குறுக்கிடுகிறது. அந்த மயக்கம்தரும் மாயையாயிருப்பவள் தேவி. உலகனைத்தையும் தன்பால் மோஹன சக்தியால் ஈர்ப்பவள். திரைலோக்யமோஹனம் எனும் சக்கிரத்தின் நாயகியாயிருந்து மூவுலகை வசப்படுத்துபவள் தேவி. (பா. 0911-17) (703)

**2621-01** ஸரஸ்வதீ. ஸரஸ்வதியாயிருப்பவள்.

**2621-02** ஸரஸ்வதீ - அறிவைத் தரும் தேவதை. அறிவு தூயது. அதனைத் தரும் தேவியும் தூயவள், வெண்ணிறமுள்ளவள், வெண் தாமரையில் அமர்ந்திருப்பவள், ஸ்படிகத்தாலான 'அ' முதல் 'க்ஷ' வரையிலான எழுத்துக்களை மணிகளாகக் கொண்ட அக்ஷ மாலையை ஏந்தியிருப்பவள். அறிவு ஆனந்தத்தைத் தரும், வீணையின் ஒலிபோல். அதனைக்காட்ட வீணையைக் கையில் ஏந்தியவள். அறிவிற்குத் தொடக்கமும் முடிவும் கிடையாது. அதன் பெருக்கில் ஆரவாரமும் கிடையாது. துவங்குமிடம் தெரியாதவாறு தோன்றிச் சல சலவென நிதானத்துடன் ஒரே சீராக எப்போதும் ஆரவாரமற்று ஓடிக்கொண்டிருக்கும் தெளிந்த நீரோட்டமுள்ள ஓடையை 'ஸரஸ்'

என்பர். (மானஸஸரஸ் எனும் ஓடை மிகவும் புகழ்பெற்றது) அறிவும் அப்படித் தாரையாக இடைவிடாமல் ஓடைபோல் அவள் அருளால் பெருகிக்கொண்டிருக்கும். அத்தகைய ஞானமாகிற ஓடையைக் கொண்டவள் ஸரஸ்வதீ. எல்லோரையும் மயக்குப வளே (நா. 703) அறிவூட்டி மயக்கம் தீர்ப்பவளாகவும் மயக்கம் தெளிந்த நிலையில் பரம்பொருளின் அனுபவத்தைக் கூட்டுவிப்பவ ளாகவுமாகிறாள்.

2621-03 ஸரஸ்வதி எனும் நதிவடிவிலும் இரண்டு வயதுள்ள கன்னி வடிவிலும் இருப்பவள் தேவி. (704)

**2622-01 சாஸ்த்ர-மயீ. அறிவு நூல்களாயிருப்பவள்.**

2622-02 மயக்கம் தெளிய உள்ளே அறிவுப் பெருக்கை அருள் பவள், அறிவால் அறியப்படவேண்டியவைகளை வகைப்படுத்தி அறியவேண்டிய முறைப்படி போதிக்கும் அறிவு நூல்களான சாஸ் திரங்களாயுமானாள். யுக்திகளிலும் அனுபவங்களிலும் உள்ள தடுமாற்றங்களை அகற்றி, வேறு புறச்சாதனங்களால் அறிய முடியாதவற்றையும் புலப்படுத்தி, நமது நோக்கைக் கட்டுப்படுத்தி, நல்வழியில் அழைத்துச் செல்பவை வேதம், ஸ்ம்ருதி, ஆகமம் நியாயம், தர்க்கம் முதலிய வித்யாஸ்தானங்கள் - சாஸ்திரங்கள் எனப்படுபவை. (பா. 0118-03) அவைகளை வடிவமாகக் கொண்ட வள் தேவி. (705)

**2623-01 குஹா-அம்பா. குகையில் விளங்குபவள்.**

2623-02 ஞானத்தை அருளும் தேவியும் இருக்கிறாள். அறி வைச் சீராக்கச் சாஸ்திரங்களும் உள்ளன. அப்படியும் அறியமுடிய வில்லையே! தேவி குகையில் விளங்குகிறாள். வெளிவெளிச்சத்தில் பழகிய கண்களுக்குக் குகையினிருட்டில் உள்ள பொருள் துலங் காது. குகையினுட் சென்று அவ்விருட்டிற்குப் பழகிய பின்னரே அங்குள்ள பொருள் துலங்கும். வெளிப் பொருள் நாட்டம் நீங்கி, இதயகுகையின் உள் துலங்கும் பொருளைக் காணும் உள்நோக் குள்ளவர்களால் மட்டும் அறியக்கூடியவாறு குகையில் பிரகாசிப் பவள் தேவி. உள்நோக்குள்ளவர்கள் மட்டும் அறியக்கூடிய குகப் பெருமானின் தாயும் அவளே. (குஹ-அம்பா) (706)

**2624-01 குஹ்ய-ரூபிணீ. ரகசிய வடிவம் கொண்டவள்.**

2624-02 குஹ்யம்-மறைக்கத்தக்கது. பிறர் எளிதில் அறியா வண்ணம் காப்பாற்றத்தக்க ரகசியம். குருவின் அருளின்றிப் பெற

முடியாதபடி அவளது வடிவம் ரகசியமாக மறைத்துவைக்கப் பட்டுள்ளது. அவ்விதம் மறைப்பது அசிரத்தையுடன் அணுகித் தவருகப் புரிந்துகொள்ளாமல் இருப்பதற்கே. சாஸ்திரங்கள் தேவி யைப்பற்றி விரிவாக விளக்கம் தந்திருந்தாலும் சூட்சுமமான தேவீ தத்துவம் நூலறிவால் மட்டும் பெறமுடியாததாகையால் அதனைச் சுட்டிக்காட்டி நேர்முகமாகப் போதிக்கும் குருவின் உதவி தேவைப் படும். அதனால் குஹ்யமான ரகசியமான வடிவிலுள்ளவள் தேவி. அவளது தத்துவமறிந்த அந்தப் பெரியோர்களும் தம்மைத்தாமே அறிமுகப்படுத்திக்கொள்ள விரும்புவதில்லை. அதனால் அவர்களும் குஹ்யர்கள். அவர்களால் அடையாளம் காட்டப்பெறுபவள் தேவி. (707)

138 सर्वोपाधिविनिर्मुक्ता सदाशिवपतिव्रता। 709
संप्रदायेश्वरी साध्वी गुरुमण्डलरूपिणी॥ 713

ஸர்வோபாதிவினிர்முக்தா ஸதாசிவபதிவ்ரதா 1
ஸம்ப்ரதாயேச்வரீ ஸாத்த்வீ குருமண்டலரூபிணீ 11

2625-01 ஸர்வ-உபாதி – விநிர்முக்தா. எல்லா உபாதிகளிலி ருந்தும் விடுபட்டவள்.

2625-02 சேர்க்கையால் மாறுபாடு தோன்றும். அந்த மாறு பாடு சேர்க்கை விலகியதும் மறையுமானல் மாறுபாடு ஏற்படுத்தும் அந்தப் பொருள் உபாதி. (பா. 1423-02) ஸ்படிகலிங்கத்தின் மேலிட்ட சிகப்பு மந்தாரைப்பூ நிறமற்ற லிங்கத்தைச் சிவப்பாக் கியது. பூவை அகற்றியதும் லிங்கம் தன் நிறமற்ற தன்மையை அடைந்தது. சிகப்புப்பூ இங்கு உபாதி. அதுபோல் தாற்காலிக மாக வேறுபட்ட பொருளாகக் காட்டும் உபாதிகளால் தேவி மாறு படுவதில்லை. அதனல் உபாதிகளின் பாதிப்பிலிருந்தும் தேவி விடுபட்டவள். தேவியை நாம் காணமுடியாமல் மறைக்கும் உபாதிகள் நீங்கியதும் குஹ்யநிலையிலிருந்து அவள் வெளிப்படு கிருள். மறைப்பவை பேதபாவனையும் தேவியின் தத்துவத்தை அறியாதிருப்பதும். அஜ்ஞானம் அகன்றதும் 'நான்' 'எனது' என்ற உபாதிகளகன்றதும் ஜீவன் சிவனுகிவிடுகிருன். அப்படி எல்லா உபாதிகளிலிருந்தும் விடுவிக்கப்பட்ட சிவனுன ஆத்மாவா யிருப்பவள் தேவி. (708)

2626-01 ஸதா – சிவ - பதி - வ்ரதா. ஸதாசிவனுகிய பதியை முக்கியமானவராகக் கொண்டவள்.

2626-02 கணவரே முக்கியமானவரெனக் கொண்டு எப்போதும் எங்கும் அவரைப் பேணுவதிலேயே மனைவி கருத்துக்கொண்டால் அது பதிவிரதமாகிறது. அதனை விரதமாகக் கொண்டவள் பதிவ்ரதா. எப்போதும் சிவன்-மங்களமாயிருப்பவர் ஸதாசிவன். (நா. 272, 911) சிவனுக்குப் பதிவிரதையான மனைவியாக தேவி இருப்பதும் ஸதா-எக்காலத்திலும் நிலைத்தது. உபாதிகளிலிருந்தும் விடுவிக்கப்பட்டுச் சிவனுகை-ஜீவப்ரம்ஹ ஐக்கிய அனுபவம் பெற்றவனிடத்தில் நீங்காதிருப்பவள். (709)

2627-01 ஸம்ப்ரதாய-ஈச்வரீ. ஸம்பிரதாயத்தின் தலைவி.

2627-02 ஸம்-ப்ரதாயம்-நன்கு சீடர்களுக்கு அளிப்பது; முறைப்படி மந்திரங்களையும் வழிபாட்டு முறைகளையும் போதித்தும், உடனிருந்து முறைதவறுது பாதுகாத்தும் சீடனிடத்தில் தெய்வானுக்கிரகம் பூர்ணமாய் ஏற்படும்படி செய்வித்தல் ஸம்பிரதாயமாகும். குருவினிடமிருந்து மந்திரம் முதலியவைகளைப் பெற்று சீடன் குருநிலையை அடைகிருன். அவன் மீண்டும் சீடனுக ஒருவனை ஏற்று அவனுக்கு போதிக்கிருன். இது ஸம்பிரதாயம். இந்த குரு சிஷ்யக் கிரமத்திற்கும் தேவி தலைவி ஸம்ப்ரதாய யோகினிகள் என ஸ்ரீ சக்கிரத்தின் நான்காவது ஆவரணத்தில் வசிக்கும் யோகினிகள். (பா. 0911-124) அவர்கள் வடிவில் உள்ளவளும் தேவியே.

2627-03 ஸதாசிவ பதிவ்ரதா என்ற (709) நாமத்தில் கூறியபடி கணவனும் பதிவிரதையான மனைவியுமாக சிவனையும் தேவியையும் பாவனை செய்கிருேம். இருவரும் பிரும்ம ஸ்வரூபமே. அங்கு சிவனுக்கு உள்ள கணவன் என்ற நிலை உபாதியால் ஏற்பட்டது, தேவிக்கு மனைவி என்ற நிலை உபாதியால் ஏற்பட்டதெனக் கொண்டால் ஸர்வ உபாதிவிநிர்முக்தா என்ற 708வது நாமத்தில் விளக்கியபடி உபாதிகள் நீங்கியவளாகத் தேவியைப் பாவனை செய்வது எப்படி என்ற ஐயம் எழும். பிரும்மஸ்வரூபமான சிவனது சக்தியே தேவி. சக்தி சக்திமானைவிட்டு விலகியிருக்காது. அதை விளக்கவே இந்த கணவன் மனைவி என்ற கல்பனை. அப்பொழுதும், சிவன் தர்மீ, சக்தி தர்மம், (தர்மம் தன்மை, தர்மீ-தன்மையுடையவன். பா. 1707-05) என்பதும் கல்பனையே. அவள் தர்ம-அதர்ம விவர்ஜிதா. (நா. 255) பரம்பொருளான பிரும்மத்திடம் தர்மீ, தர்மம் என்ற இருநிலைகளும் கிடையாது. கல்பனையால் பாவனை செய்யப்படும் தேவியின் பல்வேறு வடிவங்களுக்கும் முக்காலும் உண்மையான பரம்பொருளாகிய தேவீ தத்துவத்திற்கும் உள்ள பொருத்

தத்தை அறிய உதவுவது சாக்தஸம்பிரதாயம். சிவனும் சக்தியும் ஒன்றே. அதில் சிவனைத் தர்மியாகவும் சக்தியைத் தர்மமாகவும் பிரித்துக் கூறுவது கல்பனையால் நெருப்பைவிட்டுச் சூட்டைப் பிரிக்கமுடியாது. சூடில்லாதது நெருப்பாயிருக்காது. அதனால் தனித்த இரு பொருள்போல் தர்மத்தையும் தர்மியையும் பிரித்துக் கூறினாலும் இவ்விரண்டிற்கும் தனித் தன்மை கிடையாது. அவ்விதமே சக்திக்கும் சிவனுக்கும் தனித்தன்மை கிடையாது. ஆனால் இரு தனிப் பொருள்கள் போல் பிரித்துப் பேசப்படுகிறது விளக்கம் பெறுவதற்காக. இதனை சாக்தஸம்பிரதாயம் விளக்கும். அதன் தலைவி தேவி. (710)

2628-01 ஸாது. எவ்வகையிலும் பொருந்துபவள்.

2628-02 ஒரு செயலைச் சீராகச்செய்து முடிப்பது ஸாதனை. ஸாதனை புரியவல்லது ஸாது. எதனையும் செய்து முடிக்கவல்லது. தர்மியான சிவனுக்குத் தர்மமாகப் பிரிந்திருப்பது போல் காட்டவும், தர்மமாக மாத்திரமோ தர்மியாக மாத்திரமோ தனித்திருப்பதுபோல் காட்டவும் அவளால் முடியும். அந்த சக்தி பெற்ற அவள் பரப்பிரும்மமே. அதனால் இந்த நாமம் அஃறிணை, 'பிரும்ம' என்ற அஃறிணைச் சொல்லிற்கு அடைமொழியாக உள்ளது. தேவியால் பற்பல வடிவங்களில் தோன்றியவாறே ஒன்ருகவும் இருக்க முடியும். அதனால் ஸாது. ஸாது என்ற சொல் வழக்கில் கையாலாகாதவன், பிறர் துன்புறுத்தும்போது அதனைத் தவிர்க்கமுடியாமலும் அவர்களை எதிர்க்க முடியாமலும் துன்பத்தைப் பொறுத்துக் கொள்பவன் எனப் பொருள்கொண்டது. பிறர் துன்புறுத்தும்போது அதனைப் பொறுத்துக்கொண்டு, அதனால் பாதிப்புருமல் தன் உடலையும் மனத்தையும் பலப்படுத்திக்கொண்டபெரியோர்கள், ஸாதுக்கள். அவர்களுக்கு இழைத்த துன்பம், அவர்களைப் பாதிப்பதில்லை. விளைவித்தவனைப் பாதிக்கும், கல்லில் கையால் அடித்த அடிபோல். அந்தப் பெரியோர்கள் வடிவில் உள்ளவள் தேவி. (711)

2629-01 ஈ. ஈ என்ற காமகலாக்ஷர வடிவினள்.

2629-02 வாக்பவ கூடத்தின் மூன்றும் அக்ஷரம் 'ஈ'. சக்த்யம்சம் பெற்றது (பா-1104-03-05, 1841-02, 1848-01). காமகலா என்று அதற்குத் தனிச்சிறப்புப் பெயர். காமனுன காமேசுவரனது சக்தி வடிவம் அது. மன்மதனைக் குறிப்பிடும் எழுத்தும் அதுவே. ஸங்கேதக் கோசப்படி 'அ' என்ற எழுத்து விஷ்ணுவைக் குறிப்பிடும். அவரது சக்தியும் சகோதரியும் மனைவியும் 'ஈ'. (நா. 280, 298, 339, 892, 893)

2629-03 ஸாத்த்வீ என்ற சொற்றொடர் இங்கு 'ஸாது' 'ஈ' என்ற இரு நாமங்களாகப் பிரிகிறது. சாங்கரீ ஸ்ரீகரீ ஸாத்த்வீ என்ற சுலோகத்தில் ஸாத்த்வீ என்று ஒரே நாமம். (நா. 128) (712)

**2630-01 குரு – மண்டல – ரூபிணீ. குரு மண்டல வடிவில் உள்ளவள்.**

2630-02 குருமண்டலம் நீண்டது. ஸதாசிவன் தொடங்கி நமது குரு வரை அது இடையறாமல் தொடர்கிறது. எங்கு தொடங்கிற்று, எங்கு முடிவுறும் என்றறிய முடியாதபடி ஆதியும் அந்தமும் பிரித்தறிய முடியாதவாறு வட்ட வடிவில் அமைந்துள்ளமையால் குருமண்டலம். நமக்கு உபதேசிக்கும் குருவும் ஸதாசிவனே. தேவியே குருவுருவில் வருகிறாள். 'தேசிகரூபேண தர்சிதாப்யுதயாம்' எனத் தேவியே மங்களமான குரு வடிவில் வழிகாட்டி, மங்களத்தை அனுபவிக்கச் செய்கிறாள் என்று சியாமளா நவரத்னமாலிகா ஸ்தோத்திரம் கூறும். அதனால் ஸதாசிவனாக ஆதிகுருவாக ஸம்பிரதாயத்தைத் தோற்றுவித்து, அந்த ஸம்பிரதாயத்தில் நம்மைப் பொருந்தவைக்கும் நமது குருவாகவுமாகி அந்த முடிவற்ற குருமண்டலமாக இருப்பவள் தேவி. அவளால் ஸம்பிரதாயமாகவும் மந்திரமாகவும் குருவாகவும் சீடனாகவும் அறிவாகவுமிருக்கமுடியும். ஸம்ப்ரதாயேச்வரீ, ஸாது, ஈ, குருமண்டல ரூபிணீ என்ற தொடர் மிக அழகாக ஒன்றோடொன்று பொருந்தி நிற்கிறது.

2630-03 ஒரு குருவிடமிருந்து உபதேசம் ஏற்றவன் அதனைச் சீடனுக்கு உபதேசிக்கக் கடமைப்பட்டுள்ளான். அறுபடாதவாறு குருசிஷ்ய பரம்பரை தொடர்வது அந்த பரம்பரையில் சேர்ந்தவரது பொறுப்பில் உள்ளது. நல்ல குரு கிடைக்காமல் ஏங்கித் தேவியிடம் கோரிநிற்கும் சீடனுக்கு நல்ல குருவாகவும், நல்ல சீடன் கிடைக்காமல் ஏங்கும் குருவிற்குச் சீடனாகவும் தேவியே வருவாள். ஏனெனில் குருமண்டல வடிவில் இருப்பவள் அவளே. (713)

139 कुलोत्तीर्णा भगाराध्या माया मधुमती मही । 718
गणांबा गुह्यकाराध्या कोमलाङ्गी गुरुप्रिया ॥ 722

குலோத்தீர்ணா பகாராத்யா மாயா மதுமதீ மஹீ I
கணாம்பா குஹ்யகாராத்யா கோமளாங்கீ குருப்ரியா II

2631-01 குல-உத்தீர்ணா. திரிபுடிக்கு அப்பாற்பட்டவள்.

2631-02 குலம்-புலன்கள். புலன்களுக்கெட்டாதவள். புலன்களால் ஏற்படும் அறிவானது அறிபவன், அறியப்படும் பொருள், அறிவு என்ற திரிபுடியைச் சார்ந்திருக்கும். அதனால் அது குறுகிய

அறிவு. தேவி பேரறிவு. (நா. 96) குல அறிவைக் கடந்து, குல அறிவு ஏற்படக் காரணமாயிருப்பவள். குலமெனும் குண்டலினியிலுள்ள சக்கிரங்களுக்கு மேல் இருப்பவள் (நா. 108). ஸ்ரீசக்கிரத்தின் ஐந்தாவது ஆவரணத்தில் உள்ள குலோத்தீர்ணயோகினீ வடிவில் உள்ளவள். (பா. 0911-12-5) குரு பரம்பரையாக விரிந்துகொண்டே போகும் யோகினி வடிவில் உள்ளவள். (714)

2632-01 பக-ஆராத்த்யா. சூரியனால் வழிபடத்தக்கவள்.

2632-02 பகம் எனும் ஈசுவரசக்தியனைத்தையும் கொண்டவர் பகன்-ஸூர்யன். (பா. 1805-02) பன்னிரு உபாஸகர்களில் ஒருவர். (பா. 1640-03) ஸூர்யன் பூர்ண திருப்தியடையும்படி தேவியை வழிபடுகிறார். ஸூர்ய மண்டலத்தில் தேவி வழிபடப்பெறுகிறாள். (நா. 275) அப்படி வழிபடும்போது சந்திரமண்டலத்தில் தியானிப்பதுபோல் சூர்ய மண்டலத்தை உற்று நோக்கி அதில் தேவி இருப்பதாகத் தியானிப்பது இயலாது. அங்கு சூர்ய மண்டலத்தை மனத்தில் பாவனை செய்து அதன் நடுவே தேவி வீற்றிருப்பதாகப் பாவனை செய்து பாவனையால் வழிபாடு செய்யவேண்டும். இந்த பாவனை வழிபாடு குலோத்தீர்ணவான தேவியைத் திருப்தி செய்விக்கும். அப்படி ஸூர்ய மண்டலத்தில் வழிபடப் பெறுபவள் தேவி.

2632-03 பகம்-யோநி. திரிகோண வடிவில் அமைந்த யந்திரத்தில் வழிபடப்பெறுபவள். தேவியை வழிபடுவதற்கான ஹோம முறையில் திரிகோண வடிவில் குண்டம் அமைப்பர். யோநி குண்டம் என இதற்குப் பெயர். அதில் வழிபடப் பெறுபவள். பகம் எனும் ஈசுவரத் தன்மையைப் பெறுவதற்காக வழிபடப் பெறுபவள். பகம் என 'ஏ' என்ற எழுத்தைக் குறிப்பர். (பா. 1806-03) சக்தியம்சம் பெற்ற அந்த மந்திராக்ஷரத்தால் வழிபடப்பெறுபவள். (715)

2633-01 மாயா. மாயை.

2633-02 விசித்திரமாகச் செயல் புரிபவள், எதிர்பாராத முடிவை ஏற்படுத்துபவள். பொருந்தாததைப் பொருந்த வைப்பவள். எது எப்படி இல்லையோ அப்படி இருப்பதாக தோன்றச் செய்பவள். எது எப்படி இருக்கிறதோ அப்படி இல்லாததாக தோன்றச் செய்பவள். மிகவும் பிரஸித்தமாக இருப்பதைக்கூடப் புலப்படாதவாறு செய்பவள். அளவிடமுடியாத சக்தி படைத்தவள். பரம்பொருளின் சக்தியான மாயை. உலகைத் தோற்றுவிப்பதும் ஒடுக்குவதும் மறைப்பதும் அதற்கு நிமித்த காரணமாயும் உபாதான காரணமாயுமுள்ள பரம்பொருளை மறைத்து உலகாகக் காட்டி

மறைப்பதும் அவளது விசித்திரப்பணி. (பா. 1617, 1708, 1865). ஹ்ரீம் எனும் மாயா பீஜவடிவிலும் புவனேச்வரிவித்யையாகவும் இருப்பவள் அவளே.

மாயை மயக்குகிறது என்பர். உண்மையில் மயங்குவது நமது அறியாமையால். சூரியனுக்கு உதயமும் அஸ்தமனமும் கிடையாது. எப்போதும் ஒரேவிதமான பேரொளியுடன் விளங்குகிறார். இதனை நாம் நன்கு அறிவோம். அறியும்போதே உதிக்கும் ஸூர்யனாக அவரைக் காண்கிறோம். அது மாயை. கிளிஞ்சல் தான் வழியில் இருக்கும். வெள்ளி இருக்காது என்றறிவோம். ஒரு புறம் பேராசை, மற்றொருபுறம் வெளிச்சக் குறைவு. கிளிஞ்சலை வெள்ளி என நினைத்தோம். ஏமாற்றியது கிளிஞ்சலா? அறிவையும் கொடுத்து, அதனைச் சோதிப்பதற்காக ஏமாற்றம் தரும் சூழ்நிலையையும் அமைத்து அதில் நிதானம் தவறாமல் இருக்கிறோமா என்பதைச் சோதிக்கிறாள் தேவி. சொந்த விருப்புகளால் தடுமாறாமல் இருந்தால் கரையேற்றுகிறாள். அறிந்தும் அறியாதவனாக இருப்பவனுக்கு மாயையாயிருந்துப் பின்விளைவை அனுபவிக்க விடுகிறாள். **(716)**

**2634-01** மது-மதீ. தேனை முக்கிய வழிபாட்டுப் பொருளாகக் கொண்டவள்.

**2634-02** மது-தேன், போதை தரும் மதுவினம். தேனையோ மதுவையோ இரண்டையுமோ தனக்குப் பிரியமான நிவேதனப் பொருளாகக் கொண்டவள். உபநிடதங்களில் கூறப்படும் மதுமதீ வித்யையாகவும், யோக சாஸ்திரத்தில் யோகப்படிகளில் கூறப்படும் மதுமதீ பூமிகையாகவும் மதுமதீ எனும் நதியாகவும் இருப்பவள். **(717)**

**2635-01** மஹீ. பூமி வடிவினள்.

**2635-02** விரிந்த அளவற்ற பரப்புள்ளமையால் பூமியை மஹீ என்பர். பூமியாயிருப்பவள், பூமியைப்போல் பிருதுவீ தத்துவம் போல் மிகவும் வெளிப்படையாகத் (ஸ்தூல தரம்) தெரிபவள், மஹீ எனும் நதி வடிவினள். மஹத் எனும் தத்துவ வடிவினள். (பா. 1708) **(718)**

**2636-01** கண-அம்பா. கணங்களுக்கும் கணபதிக்கும் தாய்.

**2636-02** தேவர்கள், ஸித்தர்கள், ஸாத்தியர்கள், கிந்நரர்கள், கந்தர்வர்கள் என்றவாறு பல இனங்களாகத் தேவர்கள் பிரிந்து நிற்பவர்கள். அவர்களைக் கணங்கள் என அழைப்பர்.

(பா. 1001-03). சிவனது பரிவாரங்கள் கணங்கள் பிரமத கணங்கள் எனப்படுவர். இவர்களுக்குத் தாய், இவர்களை விளங்க வைப்பவள். எல்லா கணங்களுக்கும் தலைவரான கணபதியைக் கணர் என அழைப்பர். அவருக்குத் தாய் தேவி. கூட்டமாகச் செயல்படும் புலன்களுக்கும் அவள் தாய். கூட்டமாக வழிபடுபவர்களும் கூட்டு வழிபாட்டால் ஆராதிக்கதக்க தாய். (719)

2637-01 குஹ்யக-ஆராத்த்யா. ரகசிய வழிபாட்டு முறையால் வழிபடத்தக்கவள்.

2637-02 குஹ்யகர் - குபேரன், பன்னிரு உபாஸகர்களில் ஒருவர். (பா. 1640-03) அவரது பரிவாரங்களை குஹ்யகர்கள் என்பர். குபேரனுலும் குஹ்யகர் என்ற குபேர பரிவாரங்களாலும் வழிபடப்பெறுபவள். பிறர் அறியாத வண்ணம் ரகசியத்தில் செய்யப்பெறும் வழிபாடு, (பா. 2101-02-03) அந்தர்யாகம் முதலிய சில மானசிக பாவனையால் நடைபெறும் வழிபாட்டு முறைகள். இவைகளால் ஆராதிக்கத்தக்கவள். தாம் தேவியை வழிபடுபவராகப் பிறர் அறிந்து கொள்ளாதபடி, ஜடர்களாகவும், பித்தர்களாகவும் காணப்படும் யோகிகள் வழிபடும் தெய்வம். (720)

2638-01 கோமல-அங்கீ. மென்மையான அவயவங்களை உடையவள். (721)

2639-01 குருப்ரியா. குருவிடம் பிரியமுள்ளவள்.

2639-02 குரு-தேவர்களுக்குக் குருவான பிருஹஸ்பதி. அவரது மனைவியான தாரா தேவியாயிப்பவள்; குருவிற்குப் பிரியமான ஸ்ரீவித்யையாயிருப்பவள், குருவின் ஆராதனையை ஏற்று அவரிடம் பிரியமாயிருப்பவள். உலகிற்கெல்லாம் ஆதி குருவாக, எல்லா வித்யைகளுக்கும் ஈசனுக உள்ள பரமசிவனிடம் பிரியமாக உள்ள மனைவி, பரமசிவனைப் பிரியனுகக் கொண்டவள். நமக்கு மந்திரத்தை உபதேசித்த ஆசாரியனுக்குப் பிரியமானவள். ஆசாரியனிடம் பிரியமுள்ளவள். ஆசாரியனது மனைவியாயிருப்பவள். (குருவை மதிப்பதுபோல் குருவைச் சார்ந்தவர்களையும் வணங்கி மதிப்பது அவசியம் எனப் பொருள்.) (722)

140 स्वतन्त्रा सर्वतन्त्रेशी दक्षिणामूर्तिरूपिणी ॥ 725
सनकादिसमाराध्या शिवज्ञानप्रदायिनी ॥ 727

ஸ்வதந்த்ரா ஸர்வதந்த்ரேசீ தக்ஷிணமூர்த்திரூபிணீ ।
ஸநகாதிஸமாராத்த்யா சிவஜ்ஞானப்ரதாயிநீ ॥

**2640-01** ஸ்வ-தந்த்ரா. தன் விருப்பப்படி செயலாற்றுபவள்.

2640-02 எதனையும் தன் விருப்பப்படி நிறைவேற்றுபவள் தேவி. ஒரு செயல் நிறைவேற அதற்குரிய சாதனங்கள், தேசம், காலம் முதலிய பலவற்றின் உதவி தேவை. அத்தகைய சாதனம் முதலியவற்றின் உதவி இல்லாமல் தேவியின் ஸங்கல்பமே செயலாற்றும். அதனால் ஸ்வதந்த்ரா.

2640-03 கணபதி முதலான மற்ற தேவதைகளை அததன் விக்கிரகம் அல்லது யந்திரத்தில் வழிபடத் தொடங்குகையில், அவற்றில் அந்தந்தப் பிராணசக்தியைப் பிரதிஷ்டை செய்த பின்னரே ஆவாஹனம் ஆஸனம் பாத்யம் முதலிய உபசார முறைகளைச் செய்யவேண்டும். விக்கிரகம் அல்லது யந்திரத்தினுள் அந்த தேவதை தன் பிராணசக்தி நுழைந்த பின்னரே பூஜையை ஏற்கும் என்பது மரபு. தேவியே அந்தப் பிராண சக்தியாவாள். அதனால் தேவியின் உதவியின்றி மற்ற தேவதைகளின் வழிபாடு நிறைவுறாத படியால் அவர்கள் பிற உதவியை நாடுபவர் பரதந்திரர்கள். தேவியின் வழிபாட்டில் அவளே பிராண சக்தியாகவும் பின்னர் வழிபாட்டை ஏற்பவளாகவுமாவதால் ஸ்வதந்திரா. பிறர் உதவியை நாடாதவள்.

2640-04 தனக்கெனத் தனித்த வழிபாட்டு முறைகொண்டவள் தேவி. அவ்வழிபாட்டு முறையைக் கூறும் தந்திரம் ஸ்வதந்திரம் எனப்படும். 64 தந்திரங்களால் தெய்வ வழிபாட்டை வெளியிட்ட பரமசிவன் தேவியின் விருப்பத்தை ஒட்டி மோக்ஷம் ஈறான எல்லா புருஷார்த்தங்களையும் தந்தருளும் வழிபாடுகளைக் கொண்ட ஸ்வதந்திரத்தை இயற்றினர் என ஸௌந்தரிய லஹரீ (சு. 31) கூறும்.

2640-05 தன்னுடையவரான (ஸ்வ) சிவபெருமானது விருப்பப்படி நடப்பவள். தன்னுடையவரைத் தன்னிஷ்டப்படி ஆட்டி வைப்பவளும் கூட. (723)

**2641-01** ஸர்வ-தந்த்ர-ஈசீ. எல்லா தந்திரங்களுக்கும் ஈசுவரி.

2641-02 உலகில் நடக்கும் எல்லாச் செயல்களையும் நடத்தி வைப்பவள் தேவி. அச்செயல்களுக்கான வழிமுறை (தந்த்ரம்)யாக இருப்பவளும் அவளே. வழிபாட்டு முறைகளை விளக்கவந்த தந்திர நூல்களால் விளக்கப்படுபவளும் அவளே. (724)

**2642-01** தக்ஷிணா-மூர்த்தி-ரூபிணீ. தக்ஷிணாமூர்த்தி வடிவினள்.

2642-02 தெற்கு நோக்கியிருக்கும் சிவனது உருவம் தக்ஷிணு மூர்த்தி. மிக எளியமுறையில் அரிய கருத்தை உபதேசிக்கத் திறமையுடைய (தக்ஷிணு-சாமர்த்தியமுள்ள) உருவம் அது. தெற்கு அழிவைக் குறிக்கும். வடக்கு அழியாத அமிருத வாழ்வைக் குறிக் கும். அடியார்களைத் தம்மை நோக்கச் செய்து அமரத்தன்மையை அடையச் செய்யும் வடிவம் அது. ஆசாரியர்களுக்கெல்லாம் ஆசா ரியன். போதிக்கவேண்டிய பொருளுக்கேற்ப போதனை முறை அமையும். மனத்திற்கும் வாக்கிற்கும் எட்டாத பரம்பொருளை மனத்திற்குக் கட்டுபட்ட வாக்கால் காட்டமுடியாது. அனுபூதி வடிவில் உள்ளதற்கு சொல்லால் விளக்கம் தரமுடியாது. அதனுல் எவ்விதச் செயலுமற்ற மௌனத்தைக் கடைபிடித்து ஆனந்தத்தை அனுபூதியாகத் தம் உணர்வால் வெளிப்படுத்திச் சலனமற்றுத் தம் மிடம் கரைந்துள்ள சீடர்களின் உள்ளத்தில் அந்த ஆனந்தத்தை முழுவதும் பரவச் செய்து பிரும்ம நிலையை உணர்த்தும் பரம் பொருளின் வடிவம் அது. அறியச் சக்தி பெற்றவர் மட்டும் அறியு மாறு போதித்த உருவமது. அதனைத் தன் வடிவமாகக் கொண் டவள் தேவி.

2642-03 சிவனும் தேவியும் மூன்றுவிதமாகக் காட்சியளிக் கிருர்கள் (1) சிவனும் தேவியும் தனித்தனி உருவில் காணப்படு வது (2) இருவரும் ஒருடலில் இரு பகுதிகளாகத் தோன்றுவது அர்த்தநாரீசுவரராக (3) ஒருவரில் மற்றவர் அடங்கியிருக்கும் வடிவம். தேவியிடத்தில் சிவன் அடங்கியிருக்கும் வடிவம் காமாக்ஷி. சிவனிடத்தில் தேவி அடங்கிய வடிவம் தக்ஷிணுமூர்த்தி. சக்தியை வெளிப்படுத்தாத வெளித் தோற்றத்தில் சலனமற்ற சிவ வடிவம். ஞானஸ்வரூபிணியான தேவி உள் நிரம்பியுள்ளதைக் காட்டும் ஸச்சிதானந்த வடிவம். பேரானந்தத்தை வெளிப்படுத்தாமல் உள்ளடக்கிக் கொள்ளத் திறமை மிகத் தேவை. அந்தத் திறமை மிக்க (தக்ஷிணு)மூர்த்தி குருவின் வடிவில் தான் உள் அடங்கிச் சிவனுகத் தோன்றுபவள் தேவி. (725)

**2643-01** ஸநக-ஆதி-ஸமாராத்யா. ஸநகர் முதலானவர்க ளால் ஆராதிக்கத்தக்கவள்.

2643-02 ஸநகர், ஸநந்தனர், ஸநாதனர், ஸநத்குமாரர் என்ற நால்வர், தக்ஷிணுமூர்த்தி வடிவில் நின்ற தேவியிடம் உபதேசம் பெற்றவர்கள். அவர்களால் குருவாக தக்ஷிணுமூர்த்தியாக வழிபடப் பெற்றவள். தேவி வழிபாட்டிற்கான ஸமய மார்க்கத்தை விளக்கும் சுபாகமங்கள் எனப்படும் ஐந்து ஆகமங்களை வெளியிட்டவர்கள்

ஸநகர், ஸநந்தனர், ஸநத்குமாரர், சுகர், வஸிஷ்டர் என்ற ஐவர். அந்த ஸமயமுறை வழிபாட்டினுல் ஆராதிக்கத்தக்கவள் தேவி. (726)

**2644-01** சிவ-ஜ்ஞான-ப்ரதாயிநீ. மங்களமான பேரறிவைத் தருபவள்.

**2644-02** சிவம்–மங்களமான பிரும்மம். "பிரும்ஹ தந் மங்களம் விது:". அதனைப்பற்றிய அறிவு பிரும்மமாகிய அறிவே. அந்நிலையில் அந்தப் பேரறிவிற்கும் பிரும்மத்திற்கும் வேற்றுமை கிடையாது. சிவத்தின் ஞானமே சித்-ஆனந்தவடிவான-சிவமான ஞானமாகியது. அதனைத் தருபவள் தேவி.

**2644-03** தேவியைப்பற்றிய தந்திரங்களை இயற்றியவர் சிவ பெருமான். அதனுல் சிவனை ஞானதாயகனுக, ஞானமளிப்பவ னுகக் கொண்டவள். சிவனைப்பற்றிய ஞானத்தைத் தருபவள் குரு வடிவில் அமர்ந்துள்ள தேவி. இப்படி ஒருவர்க்கொருவர் தம்மைப் பற்றி விளக்காவிடில் அவர்களை அறியமுடியாது. (சிவ: ஜ்ஞானப்ர தாயீ, யஸ்யா மந்த்ராணும், சிவஸ்ய ப்ரம்ஹண: ஜ்ஞானப்ரதாயிநீ) (727)

141 चित्कलाऽऽनन्दकलिका प्रेमरूपा प्रियङ्करी । 731
नामपारायणप्रीता नन्दिविद्या नटेश्वरी ॥ 734

சித்கலா(ஆ)நந்தகலிகா ப்ரேமரூபா ப்ரியங்கரீ I
நாமபாராயணப்ரீதா நந்திவித்யா நடேச்வரீ II

**2645-01** சித்-கலா. சித்தின் கலையாகத் தோன்றுபவள்.

**2645-02** பிரும்மத்தை உருவகப்படுத்த முடியாது. அதன் நிலையை அடையாளம் காட்ட உதவுபவை மூன்று. ஸத்-(முக்காலும் நிலைத்திருப்பது) சித்-(பேரறிவாயிருப்பது) ஆனந்தம்–(பேரானந் தமாயிருப்பது) என. மூன்றும் தனித்ததல்ல. ஒன்றிலிருந்து மற் றென்றைப் பிரிக்க முடியாது. பூர்ணமான பிரும்மத்தின் பூர்ணத் தன்மையை மூன்றுமே விளக்கும். அதனுல் மூன்றும் பூர்ணமே. ஆனுலும் மூன்றும் தனித்தனி அம்சங்களாக அறியப்படும் நிலையில் மூன்றும் பிரும்மத்தின் அம்சங்களாகின்றன. அத்தகைய விளக்கத் திற்கு உட்பட்டு, சித் எனும் பிரும்மத்தின் அம்சமாக கலையாக இருப் பவள் தேவி.

**2645-03** சித்–சைதன்ய சக்தி. அந்த பிரும்மத்தின் சைதன்ய சக்தி நமது அந்தஃகரணத்தினுள் நமது சைதன்யமாக கலையாக விளங்குகிறது. குடத்தினுள் காணும் ஆகாயம் குடத்தின் ஆகாயம்

எனப்படுவதுபோல் ஜீவனின் அந்தஃகரணத்தினுள் பிரதிபலிக்கும் பிரும்ம சைதன்யம் அந்த ஜீவனின் சைதன்யமாகிறது. அப்படி ஜீவனிடம் துலங்கும் சைதன்ய சக்தியாக விளங்குபவள் தேவி. அஜ்ஞானமாகிற ஆவரணத்தால் மறைந்துள்ளதால் சைதன்யசக்தி பூர்ணமாயிருந்தாலும் அதன் ஒரு அம்சம்-கலை மட்டும் அறியப்படுகிறது. நமது சிற்றறிவுகள் அனைத்தும் உணர மூலகாரணமாக இருக்கும் பேரறிவின் கலை அது. (728)

**2646–01** ஆநந்த-கலிகா. ஆனந்த கலையாக இருப்பவள்.

**2646–02** அழகிய மிகச்சிறிய கலை கலிகா. விரிந்து மணத்தைத் தராமல் தன்னுள் மணம் அழகு முதலியவற்றை அடக்கிக்கொண்டிருக்கும் பூவின் மொட்டைக் கலிகா (CALYX) என்பர். மிகச்சிறிய அளவில் தான் அதில் பூவின் தன்மை வெளிப்படுகிறது எனப் பொருள். ஆனந்தம் எனும் பரம்பொருளின் அம்சமாக-கலையாக இருப்பவள் தேவி. ஜீவனிடத்தில் அறியப்பெறுமல் மொட்டுபோல் விரிவை-விரிவிற்குரிய தருணத்தை எதிர்பார்த்து நிற்கும் ஆனந்த கலிகையாக இருப்பவள் தேவி. சித் எனும் கலையைவிட ஆனந்தத்தின் கலை மிகச் சூட்சுமமாக வெளிப்படுவதை இந்த கலிகா என்ற சொல் விளக்குகிறது. அந்த பிரும்மானந்தத்தின் மிகச் சூட்சமமான அம்சத்தையே நாம் உணர்கிறோம். அதுவும் தேவியின் வடிவமே. (729)

**2647–01** ப்ரேம-ரூபா. அன்பின் வடிவானவள்.

**2647–02** மொட்டான ஆனந்தம் விரிவடையும்போது எடுக்கும் பல தோற்றங்களில் ஒன்று அன்பு. ஒரு கைமாற்றை எதிர்பார்க்கும் அன்பு உண்மையான அன்பு அல்ல. நம் அன்பிற்கு இடமான பொருளின் நலனே, தன் நலன். அதன் துக்கமே தன் துக்கம். அதனை விட்டுத் தனக்குத் தனி இருப்பு இல்லை என்ற அளவிற்கு அன்புக்குரிய பொருளாகவே ஆகிவிடுவது பேரன்பு. அதன் வடிவில் காணப்படுபவள் தேவி. அன்பு, வைக்கப்படும் இடத்திற்கேற்பப் பெயர் மாறுபடும். பெரியோர்களிடத்தில் அன்பு பக்தியாகும். சம நிலையிலுள்ளவர்களிடத்தில் நட்பாகும். சிறியவர்களிடத்தில் வாத்ஸல்யமாகும். அன்பால் எனக்கு என்ன லாபம் என்ற கேள்விக்கு இவைகளில் இடமில்லை. அந்த அன்புதான் தேவி. அன்பை வளர்த்துத் தேவி அதனுள் அகப்பட்டுவிடுவாள்.

**2647–03** ஸித்திகளில் மிகச் சிறந்தது அஹிம்ஸை-எதனையும் எவ்வகையிலும் எப்போதும் துன்புறுத்தாமலிருப்பது. இதற்கு மற்றொரு உருவம் பூதஸௌஹ்ருதம், உலகில் தோன்றியவை

அனைத்திடமும் நல்லெண்ணத்துடனிருப்பது. யாரிடத்தில் நல்லெண்ணம் என்ற பாகுபாட்டிற்கு இடம் இல்லாமல் பூத உலகில் தோன்றியதனைத்திடமும் ஸௌஹ்ருதம் - நல்ல இதயத்துடனிருப்பது. அஹிம்ஸை ஸித்தியானல் நமக்கும் எதனிடமும் துவேஷம் இருக்காது. நம்மையும் எதுவும் வெறுப்புடன் அணுகாது. நம்மிடமுள்ள அன்பின் அலை நமது சூழ்நிலையை அன்பு மயமாக்கிவிடும். புலிக்கு ஆட்டைத் தின்னும் குரூர மனப்பான்மையும் ஆட்டிற்குப் புலியிடம் தன்னைத் தின்றுவிடுமே என்ற பயமுமின்றி இரண்டும் ஒரு ஆற்றுத் துறையில் நீர் பருகும் விந்தை இந்த அன்பின் விளைவே. அந்த அன்பாயிருப்பவள் தேவி. (730)

**2648-01** ப்ரியம்-கரீ. விருப்பத்தை நிறைவேற்றுபவள்.

2648-02 அன்பின் வசப்பட்ட தேவி அடியார்களின் விருப்பத்தை நிறைவேற்றுகிருள். இது காறும் வெறுக்கப்பட்டதைக் கூடப் பிரியமாக்கித் தருகிருள். (அப்ரியம் ப்ரியம் கரோதி) நாம் ஏற்கும் வரை பிரியத்தைக் கையில் ஏந்தி நிற்கும் சிவனின் சக்தி அவள். (ப்ரியம் கரே யஸ்ய தஸ்ய இயம்) தேவி நம் மனதினுட் புகுந்து சிரத்தை வடிவில் நின்று நல்லவற்றைச் செய்ததால் புண்ணியத்தைச் சேமித்துப் புண்ணியத்தின் விளைவாகப் பிரியமான சுகத்தை ஏற்படுத்துகிருள். ப்ரேயஸ், (பிரியம்) சிரேயஸ் என இரண்டு. நாம் வேண்டிப்பெறும் இம்மைச்சுகம், ப்ரேயஸ், நமக்குப் பிரியம் மிக்கது. நமக்கு 'சிரேயஸ்' ஆகிய விடுதலையில் அவளுக்குப் பிரியம். நமது பிரியத்தையும் அவளது பிரியத்தையும் நிறைவேற்றுபவள் தேவி. இம்மையிலும் சுகம் தந்துப் பிறவியையும் நீக்கிப் பேரானந்தம் தருகிருள். (731)

**2649-01** நாம-பாராயண-ப்ரீதா. நாம பாராயணத்தால் மகிழ்பவள்.

2649-02 தேவியே தனிப்பெருங் கருணையால் தனது கோடிக் கணக்கான நாமங்களிலிருந்தும் சக்தி மிக்க ஆயிரம் நாமங்களை வாக்தேவிகளைக்கொண்டு தொகுத்துத் தனக்குமுன் அரங்கேற்றச் செய்தாள். ஸ்ரீ சக்ரபூஜை ஸ்ரீ வித்யாஜபம் செய்யாதவரும்கூட, ஸஹஸ்ரநாமபாராயணம் செய்வதாலேயே தனது திருப்தியைப் பெறமுடியும் என்று கூறியபடி (பூர்வபாகம் சு. 46) தேவி இந்த ஆயிரம் நாமங்களைப் பாராயணம் செய்வதால் திருப்தி அடைகிருள்.

2649-03 தேவி வழிபாட்டில் ஆறுவகை பாராயணங்கள் முக்கியமாக இடம் பெறுபவை. நாதபாராயணம், கடிகாபாராயணம், தத்துவ பாராயணம், நித்தியா பாராயணம், நாமபாராயணம்,

மந்த்ர பாராயணம் என. இதில் கூறப்படும் நாமபாராயணம், ஸஹஸ்ரநாம பாராயணத்திலிருந்தும் வேறுபட்டது. இதன் முறையை 'ஆ ஈ பல்லவிதை: என்று தொடங்கும் லகுஸ்துதியின் 19-வது சுலோகம் சுருக்கமாகக் கூறுகிறது. இதனைப் பற்றிய விபரம் ஸ்ரீவித்யா நித்யாந்ஹிகம் முதலிய நூல்களில் கூறப்பட்டுள்ளது. அந்த நாமபாராயணத்தால் மிகவும் திருப்தி அடைபவள் தேவி. பாராயணம் என்பது (பா. 0214-12) அதுவே சிறந்த வழி என்ற சிரத்தையுடன் நாமத்தைச் சொல்வது. அந்த நம்பிக்கையில் தேவி திருப்திப்படுகிறாள். (732)

2650-01 நந்தி-வித்யா. நந்தி தேவரால் உபாசிக்கப்பெற்ற மந்திர வடிவினள்.

2650-02 தேவி உபாஸகர்களில் முக்கியமானவர் நந்தீ. (பா. 1640-03) அவரால் உபாஸிக்கப் பெற்ற மந்திரம் ஸ்ரீ வித்யைகளில் ஒன்று. அந்த மந்திரவடிவினள் தேவி. (733)

2651-01 நட-ஈச்வரீ. நடேசனைச் சேர்ந்தவள்.

2651-02 சிதம்பரத்தில் சித்தெனும் பரவெளியில் நர்த்தனம் புரியும் நடராஜப்பெருமானுடன் கூட ஆடுபவள் சிவகாமஸுந்தரி எனும் தேவி. (734)

142 मिथ्याजगदधिष्ठाना मुक्तिदा मुक्तिरूपिणी । 737
लास्यप्रिया लयकरी लज्जा रंभादिवन्दिता ॥ 741

மித்யாஜகததிஷ்டானா முக்திதா முக்திரூபிணீ ।
லாஸ்யப்ரியா லயகரீ லஜ்ஜா ரம்பாதிவந்திதா ॥

2652-01 மித்யா-ஜகத்-அதிஷ்டானா. தனித்த பொருளாகத் தோன்றுமளவில் மெய்யாகவும் பகுத்தறியும்போது தனித்த இருப்பில்லாததால் மெய்யல்லாததாகவும் உள்ள உலகிற்கு ஆதாரமாயிருப்பவள்.

2652-02 உலகிற்கு ஆதாரமாயிருப்பவள் தேவி. அவளையே உபாதான காரணமாகவும் நிமித்த காரணமாகவும் கொண்டு உலகம் தோன்றிற்று. (பா. 1708). உலகமாகத் தோன்றுவது தேவியே. உலகமாக அதனைக் காணும்போது அதன் ஆதாரமாகவும் காரணமாகவுமுள்ள தேவியை நாம் காண்பதில்லை. அந்நிலையில் உலகம் மெய்ப்பொருளே. உலகம் எதிலிருந்து தோன்றியது என்று அதன் ஆதாரத்தைக் கண்டுகொள்ளும்போது, முன்பு தனித்துத் தெரிந்த உலகம் மறைந்து ஆதாரமான தேவியை மட்டும் காண்கிறோம். அந்நிலையில் உலகம் தனித்தில்லை. ஒரு நிலையில் மெய்யாக இருந்து

மற்றோர் நிலையில் இல்லாதது மித்தியை. உலகம் எப்போதும் இல்லாத அஸத் பொருளும் அல்ல. எப்போதும் உள்ள 'ஸத்' பொருளுமல்ல. 'ஸத்'தா 'அஸத்'தா என நிர்ணயித்துக் கூற முடியாதது. (அநிர்வசநீயம்). அதனால் 'மித்யா'வாகிறது.

2652-03 பானை என்பது பெயராலும் வடிவாலும் தனித்த பொருளாக உணரப்பட்டது. அதன் அத்தோற்றத்திற்குக் காரண மான மண்ணாக அதனை அறிந்தபோது பெயரும் வடிவமும் பொய் யென ஆகிறது. மோதிரம் என்பது பெயராலும் வடிவாலும் தனித்துப் பொருளாகிறது. தங்கமெனக் கண்டபோது அதன் மோதிரத்தன்மை மறைகிறது. மண் என்பதும் தங்கமென்பதும் எக்காலத்திலும் உண்மை நிலை. பானை என்பதும் மோதிரம் என்பதும் ஒரு நிலையில் மெய்போலும் காரண நிலையைக் கண்டதும் பொய்போலும் காண்பதால் மித்தியை. சிப்பியை வெள்ளியெனக் கண்டான் ஒருவன். வெள்ளி எனும் தோற்றத்திற்கு அதிஷ்டானம் சிப்பி. சிப்பியின்மேல் வெள்ளி தோன்றிற்று. தோற்றத்தில் வெள்ளியைக் கண்டபோது வெள்ளி மெய்யே. ஆனால் அதன் ஆதாரமான சிப்பியைக் காணும் வரையில் தான் மெய். சிப்பியைக் கண்டதும் வெள்ளி மறைந்தது. முன்னர் கண்ட வெள்ளிதான் தற்போது சிப்பியாக உள்ளது. சிப்பி எப்போதும் உள்ளது. வெள்ளி என்ற தோற்றம் நடுவில் வந்தது. நடுவில் மறைந்தது. முக்காலும் ஸத்தியமாயுள்ள தேவியிடம் உலகம் நடுவில் தோன்றி நடுவில் மறைந்தது. உலகமாகத் தோன்றுமளவிலும் தேவி ஸத்தியம், தேவியாகக் கண்டபோதும் தேவி ஸத்தியம். மித்தியை யான உலகின் ஸத்தியமான அதிஷ்டானமாயுள்ளவள் தேவி.

2652-04 அதிஷ்டானமாகத் தேவியை கண்டபோதும் அவளிடம் தோன்றும் உலகமும் உண்மையானதெனக் கொள் வதிலும் தவறில்லை. உலகம் தேவியைக் காட்டிலும் வேறுபட்டது என்று இதுகாறும் ஏற்பட்டிருந்த பேத உணர்வுதான் மித்தியை. அதிஷ்டானமாகத் தேவியையும் அவளது பரிணாமமான உலகையும் காணும்போது அந்த பேத உணர்வு நீங்கிவிடுகிறது. மோதி ரத்தைத் தங்கமெனக் கண்டபோது தங்கம் வேறு மோதிரம் வேறு என்ற பேத உணர்வகன்று தங்கமாகிற மோதிரம் என்று அறி கிறோம். உலகத்திற்கு அதிஷ்டானம் எனும்போது உலகம் வேறு, அதற்கு ஆதாரமான தேவி வேறு என்ற 'மித்யா' ஜ்ஞானத்தால் உலகத்திற்கு ஆதாரமாகத் தனித்திருப்பதாக அறியப்பட்ட தேவியே உலகாகவுமுள்ளாள் என்று தந்திர சாஸ்திரத்தை ஒட்டிப் பொருள் கூறுவர். (735)

2653-01 முக்தி-தா. விடுதலையை அளிப்பவள்.

2653-02 அறியாமையால் மூன்று தேகங்களுடன் ஏற்பட்ட தொடர்பைத் தன் சுயநிலை என்று கொண்டிருந்த ஜீவன் உண்மையான தன் நிலையை அறிந்ததும் தேகத்தொடர்பு நீங்கி விடுதலை பெறுகிறான். இந்த விடுதலை முக்தி (மோக்ஷம்) யாகும். விடுதலை அடையு முன்னும் அவன் முக்தனே. ஆனால் தன்னைப் பந்தத்திற்கு உட்பட்டவனாகக் கண்டான். தற்போது விடுபட்டவனாகக் காண்கிறான். புதிதாக எந்த நிலையையும் அவன் அடையவில்லை. அப்படி அறியாமையால் ஏற்பட்ட பந்தத்திலிருந்தும் ஞானத்தால் விடுதலை அளிப்பவள் தேவி. (பா–2919–02) (736)

2654-01 முக்திரூபிணீ முக்தியாகவிருப்பவள்.

2654-02 முக்தி என்பது தனிப்பட்ட புதியநிலை அல்ல. தன் சுய உருவமே. அந்த சுய உருவமான ஆத்மாவாக இருப்பவளும் அவளே. (பா-2919-02) (737)

2655-01 லாஸ்ய-ப்ரியா. லாஸ்ய நர்த்தனத்தில் விருப்பமுள்ளவள்.

2655-02 பெண்கள் ஆடுவது லாஸ்யம். ஆண்கள் ஆடுவது தாண்டவம். முறைப்படி பல்வேறு மனோபாவங்களை அங்க அமைப்பால் ரஸிகர்களுக்கு உணர்த்தி ஆடுவது லாஸ்யம். அதில் ஈடுபாடும் விருப்பமும் கொண்டவள் தேவி. (738)

2656-01 லய-கரீ. லயத்தை ஏற்படுத்துபவள்.

2656-02 வேறுபட்ட உணர்ச்சி உள்ளவனையும் நடனத்தால் தன்பால் ஈர்த்துத் தான் நர்த்தனத்தால் உணர்த்தும் மனோபாவங்களையே கொள்ளும்படி செய்வது லயம். ஆட்டத்திற்கும் பாட்டுக்கும் ஏற்றபடி தாளம் போடுவது லயம். ஒன்றில் மற்றொன்று மறைவது லயம். முக்தி எனும் நிலையில் இதுகாறும் மனத்தாலும் புத்தியாலும் தான் தனிப்பட்டவன் என்று கொண்ட உணர்வகன்று மனமும் புத்தியும் ஆத்மாவிடம் கரைவது லயம். இந்த லயங்களை ஏற்படுத்துபவள் தேவி. அபிநயமும் தாளமும் மனோலயத்திற்காக ஏற்பட்டவையே. ஈசுவரியின்பால் மனம் லயமடைய பரதர் எனும் முனிவர் கீதத்தையும் நர்த்தனத்தையும் தனிக் கலையாக ஸாதனமாகக் கண்டார். அதையே முக்தி ஸாதனமாகக் கொண்டார். அதனால் 'முக்திதா'வான தேவி 'லாஸ்யப்ரியா'–, லயகரீ' ஆக ஆனாள். (739)

2657-01 லஜ்ஜா. லஜ்ஜை வடிவினள்.

2657-02 கெட்ட செயலிலிருந்தும் தடுத்தாட்கொள்வது நாணம். குலப்பிறப்பு, கல்வி, சூழ்நிலை முதலியவற்றால் நாணம் ஏற்பட்டுக் கெட்ட செயலிலிருந்தும் விடுபடுகிறோம். அந்த நாணத்தின் வடிவில் இருப்பவள் தேவி (பா-1828-02). ஹ்ரீம் என்ற பீஜாக்ஷரத்திற்கு ஹ்ருல்லேகா, மாயா, லஜ்ஜா என்று பல பெயர்கள் உண்டு. அந்த பீஜாக்ஷர வடிவினள். (740)

2658-01 ரம்பா-ஆதி-வந்திதா. ரம்பை முதலானோரால் வணங்கப்பட்டவள்.

2658-02 ரம்பை, ஊர்வசி முதலான அப்ஸரஸ் கூட்டங்களால் தமது பணிகள் நிறைவேறுவதற்காக வணங்கப்படுகிறாள் தேவி. (741)

## அதிகாரம் 27

# தேவி உதவும் வகை

143 भवदावसुधावृष्टिः पापारण्यदवानला । 743
दौर्भाग्यतूलवातूला जराध्वान्तरविप्रभा ॥ 745

பவதாவஸுதாவ்ருஷ்டி: பாபாரண்யதவாநலா l
தௌர்ப்பாக்யதூலவாதூலா ஜராத்த்வாந்தரவிப்ரபா ll

2701-01 பவ-தாவ-ஸுதா-வ்ருஷ்டி:. ஸம்ஸாரம் எனும் காட்டுத் தீயை அணைக்கும் அமிருத மழையாக இருப்பவள்.

2701-02 பவம் பிறப்பு. பிறப்பு இறப்பு எனும் தொடரும் சங்கிலி போன்ற ஸம்ஸாரத்தில் பிறப்பு தொடங்குமிடமாகிறது. இந்த ஸம்ஸாரம் பிறப்பு மூலம் நமக்கு அறிமுகமானது. மரணம் இனி வரும். முன் வந்த மரணத்தை மறந்துவிட்டோம். ஸம்ஸாரத்தைப் பிறப்பால் அறிகிறோம். அதனால் ஸம்ஸாரத்தைப் பவம்-பிறவி என்பர். (மரணம் என்று கூறுவதில்லை) பவம் காட்டுத் தீ போல் சூழ்ந்துவிட்டது. அந்தத் தீ எப்படி ஏற்பட்டது? வாழ்விற்குக் காரணமானதே அழிவிற்குக் காரணமானது. இரு பசும் மூங்கில்கள் சிறு காற்றால் ஒன்றோடு ஒன்று உரசின. பசுமரத்தில் நெருப்புக் கிளம்பாது. ஆனால் உரசலில் நெருப்புத் தோன்றியது, பரவியது. அதனை அணைக்கத் தனி மனிதனின் முயற்சி பயன்பட

வில்லை. அத்தனை வேகத்துடன் எளிதில் காடு முழுவதும் பரவி விட்டது. வானிலிருந்து கடும் மழை பெய்தால் அதனை அணைக் கலாம். எரிவதை அணைத்தால் கரியோ சாம்பலோ கிடைக்கும். அதுவும் பயனற்றது. காட்டுத் தீயை வராமல் தடுக்கமுடியாது. இரு மரங்களைக் காற்றில் ஆடாமல் தடுக்கமுடியாது. தீயாகப் பரவிய பின்னரும் அடக்க முடியாது. பவம் எனும் காட்டுத் தீயும் அத்தகையதே. தடுக்கவும் அடக்கவும் முடியாத அந்தத் தீ சூழ்ந் தெரிக்கும்போது தேவி இதய வானில் மழைபோலத் தோன்றித் தீயை அணைத்தாள். அந்த மழை கருணை எனும் அமுத நீரைப் பெய்தது. கருகிவிடாமல், சாம்பலாகிப் பயனற்றுவிடாமல் அது காப்பாற்றியது. நெருப்பால் சூழப்பட்டவனைச் சிறிதுகூட வாடாமல் அகற்றி மேலும் தழைத்து வளர்பவனாக அமரனாக ஆக்கியது. தேவியின் கருணை மழை செய்த உதவி இது. தேவி இப்பிறவி யைப் பயனுள்ளதாக மாற்றிவிடுகிறாள். அதனால் பின்வரும் பிறப்புத் தொடர்களுக்கு ஆட்படாமல் இருக்கச் செய்கிறாள். பிறந் தால் இறக்கவேண்டும். இப்பிறப்பு பயனுள்ளதாக இருந்தால் மரணத்திற்குப் பின் பிறவி கிடைப்பதானாலும், மேம்பட்டதாக, மேம்பட்ட ஆத்ம சாதனைக்குத் தக்கதாக அது அமையும். ஆத்ம சாதனையால் அமரநிலை அடைய உதவுகின்றாள் தேவி. (742)

2702-01 பாப-அரண்ய-தவாநலா. பாபமென்னும் காட்டை அழிக்கும் காட்டுத் தீயாக இருப்பவள்.

2702-02 ஏன் பிறந்தேன் என வருந்த நேரிடுகிறது. வாழ்வின் துன்பம் அப்படி வருந்தச் செய்கிறது. முன்வினை கெட்ட தாக இருப்பதால் இந்த வாழ்வில் துன்பம் ஏற்பட்டது. முன்வினை எத்தனை உள்ளது? அதனைக் கடக்க முடியுமா? கடக்கும் வழி எது என்று அறிய முடியாதவாறு அது காடுபோல் அடர்ந்து பயங் கரமாக உள்ளது. முன்வினை கெட்டதென்பதை வினைப்பயனை அனுபவிக்கும்போதுதான் உணர்கிறோம். காட்டை நெருங்கும் போது மரங்கள் அடர்ந்த குளிர்ச்சியான இடம் என்ற எண்ணத்தில் வேகமாகக் காட்டினுள் புகுந்து காட்டின் மத்தியை அடைந்தவன் வழிதடுமாறித் திரும்பிச் செல்லவோ, காட்டைக் கடக்கவோ அறியா தவாறு திக்குமுக்காடும்போதுதான் காட்டிற்குள் அறியாமையால் நுழைந்துவிட்டோம் எனப்புரிந்து கொள்வான். அதுபோல் கொடும் துன்பத்தில் மாட்டிக்கொண்ட பின்னரே முன் வினைப்பயன் என அறிய முடிகிறது. அந்நிலையில் மீட்சி நம் வசப்பட்டதல்ல. திடீரெனக் காட்டுத்தீ பரவியது. காட்டை அழித்தது. மரங்கள் வேருடன் பொசுக்கப்பட்டதால் காடு மறைந்தது. காட்டில்

மறைந்து துன்புறுத்தக் காத்திருந்த விலங்குகள் அழிந்தன. வழி தெரிகிறது; வெளியேறுகிறோம். பாபமென்பது சிறுசிறு வினைகள் மரமாக வளர்ந்து காடாக மாறியது. ஒவ்வொரு வினையையும் தேவியின் கருணை எனும் காட்டுத்தீ அழித்தது. வினையை அழித்த தீ நம்மை மட்டும் காத்தது. துன்பத்திற்குக் காரணமாயிருந்த வினைக்காடு அழிந்தது. வினையிலிருந்து விடுபட்ட நம்முன் க்ஷேமப் பாதை தெரிகிறது வினை அழிந்ததால் பிறப்பிருக்காது. தேவியின் கருணை புரியும் மற்றோர் உதவி இது. (743)

2703-01 தௌர்பாக்கிய-தூல-வாதூலா. துர்ப்பாக்கியமாகிய இலவம் பஞ்சைப் பறக்கச்செய்து சிதறச்செய்யும் சுழற்காற்றாக இருப்பவள்.

2703-02 இந்தப் பிறவிக்குக் காரணமாயிருந்த வினைப்பொதியிலிருந்து ஒவ்வொரு வினையாக வெளியாகி ஒன்றைத் தொடர்ந்து மற்றொன்றாக வாட்டி வருகிறது. அனுபவிப்பது (பாக்கியம்) அனைத்தும் துன்பம் தருவதால் செய்த வினை அனைத்தும் கெட்டதெனத் தெரிகிறது. அதன் விளைவே இந்த தௌர்பாக்கியப்பொதி. அது பஞ்சுப்பொதி போல் எதிரில் காண்கிறது. அதிலுள்ள ஒவ்வொரு பஞ்சுத்துளியும் துன்பம் தருவதே. அந்தப் பொதி முழுவதும் தீரும் வரை துன்பமனுபவித்தாக வேண்டும். அவரவர் செய்த வினையாதலால் பகிர்ந்தளித்துச் செலவழிக்க முடியாது. தேவியின் கருணை இங்கும் உதவுகிறது. கருணை காற்று வடிவம் எடுக்கிறது. அதன் வேகத்தில் மலை பறக்கும். துர்பாக்கியமாகிய பஞ்சுப்பொதி சிதறி உருத்தெரியாமல் மறைகிறது. தேவியின் கருணை புரியும் உதவி இது. (744)

2704-01 ஜரா-த்த்வாந்த-ரவி-ப்ரபா. மூப்பாகிய இருட்டைப் போக்கும் கதிரவன் ஒளியாக இருப்பவள்.

2704-02 ஜரா-மூப்பு. அது இருட்டுப்போல் கவ்வுகிறது. மூப்பைவிட 'மூப்பு வரக்கூடும்', 'மூப்பு வந்துவிட்டதே' என்ற திகில் அதிகமாகத் துன்புறுத்தும். அதன் வருகையை முன் உணர முடியாது. வந்த பின்னர் அதனை அனுபவிக்கும்போது தான் அது வந்து விட்டதை உணர முடியும். மாலை நெருங்க நெருங்க இருள் பரவிக் கொண்டிருக்கிறது. எனினும் இரவு தொடங்கிய பின்னரே இருள் வந்துவிட்டதை உணர்கிறோம். மரணத்தின் முன்னோடி அது என்ற உணர்வால் மூப்பிடம் பயம் ஏற்படுகிறது. மூப்பிடம் பயம் நீங்க ஒரே வழி 'மூப்பு உடலுக்குத் தான்' 'எனக்கல்ல' என்று அறிவதே. இருட்டு விலகும், பகலவன் தோன்றுவான் என்ற

அறிவு இருட்டிடமுள்ள பயத்தைப் போக்கும். ஆனால் இருட்டு விலகக் காத்திருப்பதில் சிரமம் உண்டு. தேவியின் கருணை இங்கும் உதவுகிறது. இருட்டை உணர்ந்து பயம் தோன்றியதும் அவளைச் சரண் புக அவளது கருணை கதிரவனின் செவ்வொளியாகப் பரவுகிறது. இருள் தானே மறைந்தோடி விடுகிறது. தேவியின் கருணை ஒளியால் பேரறிவு பலம் பெறுகிறது. ஆத்மா நித்தியன் என்ற உணர்வால் கிழிந்த சட்டை தானே விலகிப் புதிய சிறந்த சட்டை மூடும்போது சட்டை மாறுதலில் ஒரு துன்பமும் ஏற்படாதென்றறிகிறோம். மூப்பும் மூப்பிடமுள்ள பயமும் மறைகிறது. தேவியின் கருணை இப்படியும் உதவுகிறது. (745)

144 भाग्याब्धिचन्द्रिका भक्तचित्तकेकिघनाघना । 747
रोगपर्वतदंभोलिः मृत्युदारुकुठारिका ॥ 749

பாக்ய்யாப்திசந்த்ரிகா பக்தசித்தகேகிகநாகநா 1
ரோகபர்வததம்போளி: ம்ருத்யுதாருகுடாரிகா 11

2705-01 பாக்ய-அப்ப்தி-சந்த்ரிகா. பாக்கியமெனும் கடலைப் பொங்கி எழச் செய்யும் நிலவாயிருப்பவள்.

2705-02 சுகத்தைத் தரும் பாக்கியம் உள்ளது. ஆனால் அதனை அனுபவிப்பதை நாம் உணராவிட்டாலோ, பிறர் அறிய அதனை அனுபவிக்காவிட்டாலோ, பாக்கியத்தை அனுபவித்த திருப்தி ஏற்படாது. அதனால் பாக்கியம் அமைதியாயிருப்பதை விடக் கடலைப்போல் பொங்கி எழுவதைத்தான் விரும்புகிறோம். பொங்கி எழுவதால் அளவு கூடுவதில்லை. பொங்கி எழுவதால் அப்படியே பொங்கிய உச்ச நிலையிலேயே நிற்கவும் முடியாது. எனினும் பொங்கி எழுவதில் ஓர் ஆனந்தம் உண்டு. வானில் சந்திரனைக் கண்ட கடல் பொங்குகிறது. கடலில் அதனால் ஒருதுளி ஜலம் கூட அதிகமாகாது. ஆரவாரமும் கொந்தளிப்பும் மனத்திற்குப் பிடித்தமானவை. பாக்கியம் அப்படிப் பொங்கி எழுவதை விரும்பினால் தேவி அதற்கும் உதவுகிறாள். கருணையை நிலவாக்கி அதன் ஈர்ப்பினால் பாக்கியமாகிய கடலைப் பொங்கி எழச் செய்கிறாள். விரும்பியதை விரும்பியபடி வழங்கும் வள்ளலாகத் தேவி புரியும் உதவி இது. (746)

2706-01 பக்த-சித்த-கேகி-கநாகநா. பக்தனின் மனமாகிய மயிலைக் கூத்தாடச் செய்யும் கார்மேகமாக விளங்குபவள்.

2706-02 பக்தனும் பாக்கியத்தை அனுபவிப்பான். ஆனால் அமைதியாக, அதனால் இறுமாப்பு ஏற்படாதவாறு அடக்கத்துடன் அனுபவிப்பான். அவனும் குதூஹலத்துடன் கூத்தாடும் நேரம் ஒன்று உண்டு. தேவியின் கருணை ததும்பும் தோற்றத்தைக் கண்டதும் ஆனந்தத்தை அடக்க முடியாமல் அப்படிக் கூத்தாடுவான், நீருண்ட மேகத்தைக் கண்ட மயில் போல். தேவியைத் தான் கண்டதால் ஏற்பட்ட களிப்பு மட்டுமல்ல அது. "மேகம் தோன்றிவிட்டது, மழை பொழியும்; மக்களின் வாழ்க்கை வளம் பெறும்" என்ற களிப்பால் மேகத்தைக் கண்டு மயில் ஆடுகிறது. தேவியின் அருள் எங்கும் பரவி எங்கும் ஆனந்தம் பரவவிருப்பதை உணர்ந்து பக்தனது உள்ளம் கூத்தாடுகிறது. கருணை புரியும் விசித்திர உதவி இது. கருணையால் தனக்குத் தாயானவளை எல்லோருக்கும் தாயாக உணர்ந்ததால் பக்தனுக்கு ஏற்படும் களிப்பை இந்த நாமம் விளக்குகிறது. (747)

**2707-01** ரோக-பர்வத-தம்போலி:. நோயாகிய மலையைப் பிளக்கும் வஜ்ஜிராயுதமாயிருப்பவள்.

2707-02 துன்புறுத்துவதெல்லாம் நோய். பசி, தாகம், தரித்திரம், பொறாமை என்றவாறு இது பல வகைகளில் தோன்றும். (ருஜந்தி இதி ரோகா:) எல்லா நோய்களும் வேதனை தருபவையே. நோய் ஏதேனும் ஒரு சிறு பகுதியில் வந்தால்கூட மலைபோல் தோன்றுகிறது. பின் என்ன நேருமோ என்ற கவலையைத் தருகிறது. மலை தனக்கு அப்பாற்பட்டதை நம் கண்ணிலிருந்து மறைப்பதுபோல் நோயானது வருங்காலத்தை மறைக்கிறது. நோயைத் தவிர வேறொன்றிலும் நம் கருத்து செல்லாதபடி ஆக்கிரமித்து விடுகிறது. மலையை அப்படியே அகற்ற முடியாது. அதனைப் பிளந்து தூளாக்கிச் சிதற அடித்தால் மாயமாய் மறையும். அதன் பின்னிருந்தது எதிரே பளிச்செனத் தெரியும். இந்திரனின் வஜ்ஜிராயுதம் மலைகளைச் சிதற அடிக்கும். நோய் மலைபோல் எதிரில் நிற்க, நாம் அதனைக் கண்டு மலைத்து நிற்கும்போது தேவியின் கருணை வஜ்ஜிராயுதம் போன்று நோயாகிய மலையைச் சிதறடித்து, சிறந்த வருங்காலத்தை நம் கண்களின் முன் நிறுத்துகிறது. (748)

**2708-01** ம்ருத்யு-தாரு-குடாரிகா. மரணமெனும் மரத்தைப் பிளக்கும் கோடரியாக விளங்குபவள்.

2708-02 பூமியைப் பிளந்துகொண்டுத் தன்னைத் தானே வெளிக்கொணர்வதால் மரம் தாரு (தா்ரயதி இதி) எனப்படுகிறது. அந்தப் பூமியையே தனக்கு உணவூட்டச்செய்து அதன் பலத்தில்

நின்று வளர்கிறது. பிறக்கும்போதே மரணமும் தோளின் மேல் ஏறி நிற்கிறது. வாழ்வதற்காக நாம் செய்யும் செயல்களைத் தன்னிடம் நெருக்கிக் கொள்வதற்காக அது பயன்படுத்திக்கொள்கிறது. வாழும் ஒவ்வொரு க்ஷணத்தையும் தன்னைப் பலப்படுத்திக் கொள்ள உபயோகித்துக்கொள்கிறது. பூமியால் மரத்தை அழிக்க முடியாது. மரத்தின் உதவி கொண்டே கோடரியால் அதனை வீழ்த்த முடியும். தேவி தன் கருணையைக் கோடரியாக்கி மரணம் எனும் மரத்தைப் பிளந்து வீழ்த்துகிருள். மரணத்திடமுள்ள பயம் மரணத்தைவிடக் கொடியது. முக்கிய விருந்தாளியை எதிர்பார்ப்பது போல் மரணத்தை எதிர்பார்ப்பவன், பயமின்றி மரணத்தை எதிர்நோக்கு வதன் மூலம் மரணத்தை வெல்கிருன். விருந்தாளியால் நன்மை ஏற்படுமென அறிந்தால், அவனுல் துன்பம் வராது என உணர்ந் தால், அவனை மகிழ்ச்சியுடன் வரவேற்கலாம். மரணத்தை அப்படி வரவேற்க முடியாதிருப்பதற்குக் காரணம், "முன்வினையால் இப்போதுள்ளதைவிடத் தாழ்ந்த பிறவி கிட்டினுல் என் செய்வது" என்ற பயமே. "தேவியின் அருளால் இப்போதிருப்பதை விட நல்ல பிறவியே ஏற்படும். பாபம் பொசுங்கிவிட்டது. பாக்கியம் பொங்கிக் கொண்டிருக்கிறது" என்பதை உணர்ந்தவன் புதிய பிறவியைத் தரவிருக்கும் மரணத்தைப் பயமில்லாமல் பிரியத்துடன் வரவேற் பான். மரணத்திடமுள்ள பயத்தைப் பிளந்து நற்பிறவி அளிக்கிருள் தேவி.

2708-03 தாரு-கடபயாதி எண்ணிக்கைமுறைப்படி 28. முன்பு விளக்கப்பட்ட மந்திர ஸித்தியைக் கெடுக்கவல்ல அசக்தி, ஸித்தி, துஷ்டி என்ற 28 வதங்கள் ம்ருத்யு, தாரு என்ற பதத்தால் குறிப் பிடப்படுகின்றன. (பா-1822-03) தேவி அவைகளைப் பிளந்து பயனற்றதாக்கிவிடுவாள். (749)

## அதிகாரம் 28

# தேவியின் திவ்விய லீலைகள்

145 महेश्वरी महाकाली महाग्रासा महाशना । 753
अपर्णा चण्डिका चण्डमुण्डासुरनिषूदिनी ॥ 756

மஹேச்வரீ மஹாகாளீ மஹாக்ராஸா மஹாசநா ।
அபர்ணு சண்டிகா சண்டமுண்டாஸுரநிஷூதிநீ ॥

2801-01 மஹா-ஈச்வரீ. பெருமை மிக்க ஈச்வரீ.

2801-02 முன் அதிகாரத்தில் கூறியபடி எட்டு வகையிலும் பெருமை மிக்க ஈச்வரியாயிருந்து உதவுகிறுள். மாஹேச்வரீ என்றெரு நாமம் (நா. 208) முன் வந்துள்ளது. (750)

2802-01 மஹா-காளீ. மஹா காளீ.

2802-02 காளீ-காலீ என்று இரண்டு விதமாயும் உச்சரிப்பது உண்டு. பொருள் ஒன்றே. காளீ-கருநிறமுள்ளவள், பலரைப் பல திசைகளில் செல்வதிலிருந்தும் திருப்பி ஒரு முகமாக்கி நடத்திச் செல்பவள், (காலயதி இதி) அழிப்பவள். பெருமை மிக்க காளீ மஹாகாளீ. நாராயணன் யோக நித்திரையில் ஆழ்ந்திருந்தபோது தொப்புள் கொடியில் விளைந்த தாமரையில் தோன்றிய பிரும்மா மது கைடபன் என்ற இரு அசுரர்களால் துன்புறுத்தப்படுகிருர். பிரும்மா தேவியைத் துதிக்கத் தேவி மஹாகாளியாகத் தோன்றுகிருள். பத்து கைகளில் வாள், சக்கிரம், கதை, பாணம், வில், இரும்புத்தடி, சூலம், குத்துவாள், தலை, சங்கம் இவற்றை ஏந்தி நீலக்கல் நிறமுள்ளவளாகப் பத்து முகங்களும் பத்து கால்களும் மூன்று கண்களும் உள்ளவளாகத் தோன்றி மதுகைடபரை மாய்த்தாள். (தேவீ மாகாத்ம்யம் அதி-1)

2802-03 மஹாகாலர் என்று 12 சிவலிங்கங்களுள் ஒன்ருன பரமசிவன் உஜ்ஜயினியில் கோவில் கொண்டுள்ளார். அவரது சக்தியாக விளங்குபவள்.

2802-04 மாட்டு மந்தையை மேய்க்கும் இடையன் எண்ணற்ற மாடுகளைத் தன் விருப்பப்படி ஓட்டுவதுபோல், பெரும் மேகக் கூட்டத்தைக் காற்று தன்னிஷ்டப்படி கலைத்து உருக்குலைப்பது போல் உலகத்தைத் தன்னிஷ்டப்படி விரட்டுவதாலும் அழிப்பதாலும் மஹா காளீ. உலகை விரட்டுபவன், அழிப்பவன் காலனான யமன். அவனையும் விரட்டுவதால் அழிப்பதால் மஹா காளீ. (751)

2803-01 மஹா-க்ராஸா. பெருங்கவளமாக உலகை உண்பவள்.

2803-02 தாவரம் ஜங்கமம் எனப் பிரியும் பெரும் உலகத்தை ஒரே கவளமாக உட்கொண்டு ஒடுக்குபவள். (க்ராஸம்-கவளம், சோற்றின் பிடியளவு, வாயால் விழுங்குமளவு) மாயையால் தன்னிடம் ஒடுக்கப்பட்டவைகளை விழுங்கித் தான் மாத்திரம் மீதி

யாயிருப்பவள். உலகை ஒரே கவளத்தால் உண்பவளுக்கு யமன் ஊறுகாயாக உதவுகிறுன். (''யஸ்ய ப்ரும்ஹ ச க்ஷத்ரம் ச உபே பவத ஓதந: l ம்ருத்யுர் யஸ்ய உபஸேசநம்'' கடஉபநிஷத்து) (752)

**2804-01** மஹா-அசநா. பெருந்தீனி கொள்பவள்.

**2804-02** உலகம் அனைத்தும் தோன்றும் முன் உள்ள மஹத் அவ்யக்தம் எனப்படும் மூல தத்துவங்களையும் உணவாகக் கொள்வதால், தன்னிடம் ஒடுக்கிக் கொள்வதால் மஹாசநா. (மஹாஸநா என்ற நாமம் முன் வந்துள்ளது. (நா. 229) 'ச' 'ஸ' வேறுபாடு கவனிக்கத் தக்கது.) (753)

**2805-01** அபர்ணா-இலையையும் நீக்கியவள்.

**2805-02** பார்வதியாக இமயத்தின் புதல்வியாகத் தோன்றிய தேவி சிவனை அடையத் தவமியற்றினுள். சமைத்த உணவு கிழங்கு பழம் முதலியவைகளை விரதத்திற்காக நீக்கிய தேவி பின்னர் இலை-காய்ந்த சருகு முதலியவைகளை உண்டாள். பின்னர் அவற்றையும் நீக்கினுள். அதனுல் அவள் அ-பர்ணுவானுள். (பர்ணம்-இலை) பெருந்தீனி கொண்டவளே (நா. 752-753) இலையைக்கூட ஏற்காதிருக்கிறுள்.

**2805-03** கொடுக்க வேண்டியதைக் கொடுக்காதவன் கடன் படுகிறுன். தேவி கொடுக்க வேண்டியதைவிட அதிகமாகவே வழங்குபவள். அதனுல் கடன்படுவதில்லை.

**2805-04** மந்திரங்களை ஏற்கும்போது ருணருணி பாவத்தைச் சோதிப்பது வழக்கம். தேவியின் மந்திரங்களுக்கு அந்த சோதனை கிடையாது. ஸித்தம், ஸுஸித்தம், ஸாத்யம், அரி என மந்திரங்களை அவரவரது நாமாக்ஷரங்கள் முதலானதைக்கொண்டு பிரித்துள்ளார்கள். (பா. 2192-02-04) ஸுஸித்தமான மந்திரம் ஜபிப்பவனுக்குக் கடன் பட்டிருக்கிறது. அதனுல் ஜபம் உடன் பலிக்கும். இப்படி ஸித்தாரி கோஷ்டம் என்ற முறையில் கடன் பட்டுள்ளதைச் சோதனை செய்வதும் தேவி மந்திரத்திற்குக் கிடையாது. ஜபிப்பவனது மந்திர ஜப எண்ணிக்கையைக் கருதாமல் தேவியும் பலனளிப்பதால் அவள் அபர்ணு. (754)

**2806-01** சண்டிகா-கோபிக்கும் சுபாவமுள்ளவள்.

**2806-02** பக்தி எனும் அன்பு கொள்ளாதவரிடமும் பக்தர்களைத் துன்புறுத்துபவர்களிடமும் கோபம் கொள்பவள். மது, கைடபன், மஹிஷன், சும்பன், நிசும்பன் என்பவர்களைக் கொல்வ

தற்காக மஹாகாளீ, மஹாலக்ஷ்மீ, மஹாஸரஸ்வதீ ஆகத் தோன்றியவளும் ரக்ததந்தீ, சாகம்பரீ, பீமா, ப்ராமரீ முதலிய பல தோற்றங்களைக் கொண்டு அஸுரர்களை அழித்தவளுமான துர்க்காதேவி சண்டிகா எனப்படுவாள். ஏழு ஆண்டு நிரம்பிய கன்னிகை சண்டிகை. (755)

2807-01 சண்ட - முண்ட - அஸுர - நிஷூதிநீ. சண்டன் முண்டன் என்ற அசுரர்களைக் கொன்றவள்.

2807-02 சண்டன், முண்டன் என்று சும்பன் நிசும்பன் என்ற இரு அசுரர்களின் சேனைத் தலைவர்கள் துர்க்காதேவியுடன் போரிட வரும்போது, அவர்களைக் கண்டதும் தேவியின் முகம் கோபத்தால் சிவந்து இறுகிக் கருத்தது. அவளது நெற்றியிலிருந்து காளி தோன்றிச் சண்டனையும் முண்டனையும் அழித்தாள். அதனால் மகிழ்ச்சியுற்ற தேவி காளியைச் சாமுண்டா என்ற பெயர் சூட்டி அழைத்தாள். அந்தக் காளி வடிவில் தோன்றியவளும் தேவியே.

2807-03 சண்டன் மூளை வலிவு கொண்டவன், முண்டன் தலையின்றி (மூளைவலிவின்றி) உடல் வலிவுமிக்கவன். மூளை வலிவால் மக்களைத் துன்புறத்துபவர் சிலர். மூளை வலிவின்றி மூர்க்கத்தனம் கொண்டு உடல் வலிவால் பாதிப்பவர் சிலர். இவ்விருவகை அசுரத் தன்மைபடைத்தவர்களை அழிப்பவள் தேவி. (756)

146 क्षराक्षरात्मिका सर्वलोकेशी विश्वधारिणी । 759
त्रिवर्गदात्री सुभगा त्र्यंबका त्रिगुणात्मिका ॥ 763

க்ஷராக்ஷராத்மிகா ஸர்வலோகேசீ விச்வதாரிணீ ।
த்ரிவர்க்கதாத்ரீ ஸுபகா த்ர்யம்பகா த்ரிகுணாத்மிகா ॥

2808-01 க்ஷர-அக்ஷர-ஆத்மிகா. அழிவுறுவதும் அழிவற்றதுமாயிருப்பவள்.

2808-02 தோன்றி மாறுபட்டு அழிவது க்ஷரம். நித்யமாயிருப்பது, க்ஷரத்திற்கு மாறுபட்டது அக்ஷரம். சொற்கள் க்ஷரம். எழுத்து அக்ஷரம். சொற்கள் மாறுபடும், சிதைவுறும். எழுத்து அழியாதது. உலகம் க்ஷரம், பரம்பொருள் அக்ஷரம். இவ்விரண்டு வடிவிலுமுள்ளவள் தேவி. (757)

2809-01 ஸர்வ-லோக-ஈசீ. உலகமனைத்திற்கும் ஈச்வரி.

2809-02 பொறிகளுக்கும் மனத்திற்கும் புலப்படுவது லோகம்-உலகம். (லோக்யதே இதி). உலகனைத்தையும் தன்னிஷ்டப்படி ஆட்டிவைப்பவள் தேவி. (758)

2810-01 விச்வ-தாரிணீ. உலகைத்தாங்குபவள்.

2810-02 ஒன்று பலவாக மாறியதும் நாளையில்லாத அநித்தியப் பொருளும் விச்வம்-உலகம். அதனைத்தாங்கி அதற்கு அதிஷ்டானமாக-காரணமாக இருப்பவள். (பா. 2652-02) விசுவமாக வடிவம் தாங்கியவள். (பா. 1709-02). (759)

2811-01 த்ரி-வர்க்க-தாத்ரீ. அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றையுமளிப்பவள்.

2811-02 அறம் பொருள் இன்பம் இவை அர்த்தம் – கேட்டுப் பெறக்கூடியவை. மோக்ஷம் என்பது கேட்டுப் பெறக்கூடியதல்ல. நம்மிடமில்லாததையும் பிறரிடம் மட்டும் இருப்பதையும் நம்மைக் காட்டிலும் வேறுபட்டதையும் கேட்டுப் பெறலாம். தர்மம் முதலிய மூன்றும் அத்தகையவை. நாமாகவே இருப்பதும், நம்மைக்காட்டிலும் வேறுபடாததுமான ஆத்மஸ்வரூபத்தை உணர்வதான மோக்ஷம் கேட்டுப் பெறுவதல்ல. அம்மூன்றும் வர்க்கம்–பலவாறுக உள்ளவையானதால் மூன்று இனங்களாகப் பிரித்துவைக்கப் பட்டவை. (மோக்ஷம் ஆத்மஸ்வரூபமானதால் ஒரேவிதமானது. அதனுல் அது அபவர்க்கம்-வர்க்கப்பிரிவு இல்லாதது.) வர்க்கங்களான மூன்று-அறம் பொருள் இன்பம் என்பவற்றை அளிப்பவள் தேவி. (760)

2812-01 ஸுபகா. அழகானவள்.

2812-02 செல்வம், பெருமை, வீர்யம், ஆண்மை, விடாமுயற்சி, புகழ், உடல் அழகு, பெருமனம் முதலியவை அழகு தருபவை-பகங்கள். அவை மங்களமாகத் தேவியிடம் அமைந்துள்ளன. பகம் ஈசுவரத்தன்மை. (பா. 1805-02) அதுவும் மங்களமாக அமைந்துள்ளது. உலகில் ஸௌபாக்கியப் பொருள்களாகக் கருதப்படும் கரும்பு பசுவின்பால் மஞ்சள் முதலியவையும் ஸுமங்கலி முதலியவர்களும் ஸுபகர்கள். அவர்கள் வடிவில் இருப்பவள் தேவி. மங்களமான அழகுப் பொருளைப் பெற்றிருப்பதும் மங்களமான அழகுடன் கூடியிருப்பதும் ஸௌபாக்கியம் – ஸுபகத்தன்மை.

அத்தகைய ஸுபகர்களாக இருப்பவள் தேவி. பகன் எனப்படும் சூர்யன், தேவியின் வழிபாட்டால் பெருமை பெற்றமையால் ஸுபகா. (சோபந: பக: யயா) (761)

**2813-01** த்ரி-அம்பகா. மூன்று கண்கள் உள்ளவள்.

**2813-02** அம்பகம்-கண்கள். சூரியன் சந்திரன் அக்கினி என்ற மூன்று ஒளிமண்டலங்களைக் கண்களாகக் கொண்டவள். சூரியன்-வலது கண். சந்திரன்-இடது கண். அக்கினி-நெற்றிக்கண். வலது கண்ணால் சூரியனுக்கும் இடது கண்ணால் சந்திரனுக்கும் நெற்றிக் கண்ணால் அக்கினிக்கும் ஒளியூட்டும் சக்தியைத் தருபவள். வலது கண்ணால் பகலையும் இடது கண்ணால் இரவையும் நெற்றிக்கண்ணால் இரு சந்தி வேளைகளையும் அமைப்பவள். (ஸௌந்தர்யலஹரீ சு. 48) அன்போடு அணைப்பவள் அம்பா. (அம்பதே பத்நாதி) அம்பகா அழகிய பெருமைமிக்க தாய். பிரும்மா, விஷ்ணு, ருத்திரன் என்ற மும்மூர்த்திகளுக்கும் தாய். ஸுபகா த்ரியம்பகா. மூன்று கண்களிருந்தாலும் அழகான தாய். மாறுபட்ட ஒளிக்கதிர்களை வெளியிடுவதாயினும் அழகாயிருக்கும் கண்கள். கண்களின் அமைப்பில் வேறுபாடில்லை. பார்வையில்தான் வேறுபாடு. சூர்யக் கண்ணால் நன்கு பிரகாசிக்கச் செய்பவள். சந்திரக் கண்ணால் குளிர்ச்சி தருவாள். நெருப்புக்கண்ணால் அழிப்பாள். (762)

**2814-01** த்ரிகுண-ஆத்மிகா. முக்குண வடிவினள்.

**2814-02** ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற முக்குணங்களைத் தன்னை விளக்குபவையாகக் கொண்டவள். பிரும்மாவை ரஜோ குணத்தைக்கொண்டும், விஷ்ணுவை ஸத்வகுணத்தைக்கொண்டும், ருத்திரனைத் தமோகுணத்தைக்கொண்டும் தொழில் புரிபவர்களாகப் படைத்ததால் அந்த முக்குணங்களையே தன்னை விளக்குபவையாகக் கொண்டவள். ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற குணங்களை முறையே அதிகமாக வெளிக்காட்டும் பார்வதி, துர்க்கா, காளி என்ற மூன்று தோற்றங்களைக் கொண்டவள். (763)

147 स्वर्गापवर्गदा शुद्धा जपापुष्पनिभाकृतिः । 766
ओजोवती द्युतिधरा यज्ञरूपा प्रियव्रता ॥ 770

ஸ்வர்க்காபவர்க்கதா சுத்தா ஜபாபுஷ்பநிபாக்ருதி: ।
ஓஜோவதீ த்யுதிதரா யஜ்ஞரூபா ப்ரியவ்ரதா ॥

**2815-01** ஸ்வர்க்க-அபவர்க்க-தா. ஸ்வர்க்கத்தையும் மோக்ஷத்தையும் தருபவள்.

2815-02 ஸ்வர்க்கம்–ஸுவர்க்கம் - புண்ய சேமிப்புக்கேற்ப சுகானுபவத்தை வகுத்துத் தருவதால் அது ஸுவர்க்கம்-வர்க் கங்கள்–பாகுபாடுகள் உள்ளது. அந்த உலகில் இருக்கும்வரை துக்கக் கலப்பு இருக்காது. ஆசைப்பட்டது கிடைக்கும். ஆனுல் புண்ணியம் இருக்கும் வரைதான் சுகம் கிடைக்கும். புண்ணியம் தீர்ந்ததும் சுவர்க்கத்தில் இருக்க முடியாதாகையால் அது முடி வுள்ள அநித்யமான சுகம். அபவர்க்கம்-பாகுபாடற்ற அழிவற்ற சுகம். ஞானத்தால் தேக பந்தத்திலிருந்தும் விடுதலேயால் கிடைப்பது. வினே செய்வதால் ஸ்வர்க்கம்; வினேயற்றிருப்பதால் வினேத்தொடர்பை நீக்கிக்கொள்வதால் அபவர்க்கம். இந்த இரண்டு சுகங்களேயும் விருப்பத்திற்கேற்ப அளிப்பவள். (பா. 2811-02) (764)

2816-01 சுத்தா. தூய்மையானவள்.

2816-02 இயற்கையாகவே தூய்மையானவள். அவளி டத்தில் இயற்கையான அழுக்கும் கிடையாது. செயற்கையாக அறியாமையால் ஏற்படும் அஞ்சனங்களும் மலங்களும் லேபங் களும் கலக்கமும் விகாரங்களும் கிடையாது. (பா. 1402, 1403, 1404, 1407, 1414, 1419, 1422) (765)

2817-01 ஜபா–புஷ்ப-நிப–ஆக்ருதி:. செம்பரத்தம்பூ நிறமுள்ள தோற்றமுள்ளவள்.

2817-02 நல்ல செந்நிறமுள்ளது செம்பரத்தம்பூ. தேவி ஸர்வாருணு–எல்லாம் சிகப்பாக உள்ளவள். சிகப்பில் பல சாயைகள் உண்டு. அத்தனே சாயைகளிலும் தேவியைக் காணலாம். (பா. 0703, 0801, 0838, 1650, 2326, 3021, 3063) (766)

2818-01 ஓஜோ–வதீ. தாதுசாரம் உள்ளவள்.

2818-02 சரீரத்திலுள்ள ரஸம், ரக்தம், மாம்ஸம், மேதஸ், மஜ்ஜா, அஸ்தி, சுக்கிலம் என்ற ஏழு தாதுக்களின் சாரம் ஒவ்வொரு கணத்திலும் சேர்கிறது. அதனுல் திடீரென ஏற்படும் நெருக்கடி களால் அழிவுருமல் உடல் பாதுகாக்கப்பெறுகிறது. அந்த தாது ஸாரம் ஓஜஸ் எனப்படும். அந்த சேமிப்பு குறைந்தால் அன்ருடம் எத்தனே புஷ்டி அளித்தாலும் உடலில் ஒட்டாது. உடல் வெல வெலத்துப் போகும். அந்த ஓஜஸ் எனும் சக்தி நிரம்பப்பெற்றவள். (767)

2819–01 த்யுதி-தரா. காந்தி பொருந்தியவள்.

2819–02 உடலிலும் உள்ளத்திலும் உள்ள நிறைவு மேனிமேல் ஒளிபோல் படரும். மேனியின் காந்தி பிறரை வசீகரிக்கும். காந்தியைத் தாங்கி நிற்பவள் தேவி. (768)

2820–01 யஜ்ஞ-ரூபா. வேள்வி வடிவினள்.

2820–02 வேள்விகள் ஐந்து. (1) தேவயஜ்ஞம் – தேவதைகளைக் குறித்துப் பிரியமான பொருளை 'இது என்னுடையதல்ல; தேவதையுடையதாகட்டும்' என்று மமதை எண்ணத்தைத் தியாகம் செய்து, அர்ப்பணம் செய்வது. (2) பித்ருயஜ்ஞம்–தனது முன்னோர்களை முன்னிட்டுச் செய்வது. (3) பிரும்மயஜ்ஞம்–நமக்கு அறிவூட்டியவை, முனிவரால் உபதேசிக்கப்பெற்றதும், இயற்றப்பெற்றதுமாயுள்ள வேதம் முதலிய வித்யாஸ்தானங்கள். அவைகளைக் கற்று அறிவு பெற்றமைக்காக நன்றிக்கடனாக நாம் செய்வது, வேதம் முதலானவற்றை ஓதிக்கொண்டிருத்தலும் அந்த முனிவர் முதலானோரை நினைத்து வணங்குதலும். (4) மனுஷ்யயஜ்ஞம் - இறைவனால் படைக்கப்பட்ட மற்ற மனிதர்களிடமும் தெய்வ பாவனையுடன் அவர்களுக்கு உதவுதல், உணவிடுதல், கோவில் குளம் கட்டுதல் முதலியவை. (5) பூதயஜ்ஞம் – நம்மைக் காட்டிலும் தாழ்ந்த பிறவியினராக மதிக்கப்பெறும் பிராணிகள், மரம், செடி முதலானவற்றிற்கு உதவுவது. இந்த யஜ்ஞங்களால் தேவர்கள், பித்ருக்கள், ரிஷிகள், மனுஷ்யர்கள், பிராணிகள் முதலானோரை வழிபடுகிறோம். வழிபடப்பெறுபவர்கள் நம்மைவிடப் பெரியவர்கள். காக்கைக்கு அன்னமிடுவதும் மரத்திற்குத் தண்ணீர் வார்ப்பதும் பூதயஜ்ஞமாகும். அவைகளிடம் தேவதை மனப்பான்மைகொண்டு அர்ப்பணம் செய்வதாக இவை அமையவேண்டும். அதிதிக்கு உணவளிக்கும் போது, அவனது பசியை ஆற்ற உதவுகிறோம் என்ற எண்ணம் கொள்ளாமல், நம்மிடமுள்ள உணவை ஏற்கத் தேவியே நம்மிடம் கருணையால் அதிதிவடிவில் வந்துள்ளாள் என்ற பாவனையுடன் அர்ப்பணம் செய்யவேண்டும். அப்போதுதான் அது யஜ்ஞம்–வேள்வியாகும். அகந்தை மமதை அழியவே யஜ்ஞங்கள் கூறப்பட்டுள்ளன. அந்த யஜ்ஞங்களில் ஈடுபாடு உள்ளவள் தேவி. (பா. 2961, 3045)

2820–03 ஐந்து பொறிகளால் மணம் சுவை ஒளி தொடு உணர்ச்சி ஒலி என்ற ஐந்தை அனுபவிக்கிறோம். அந்த அனுபவங்களையே தேவிக்கு அர்ப்பணம் செய்வது ஞானயஜ்ஞம், முக்கால்

உணரும் மணத்தை நாம் அனுபவிக்கிறோம் என்று அஹந்தை கொள்ளாமல், நமது அந்தர்யாமியாக உள்ள தேவி உணர்கிறாள் என்ற பாவனை கொள்ளுதல் யஜ்ஞமாகும். அத்தகைய ஈசுவரார்ப்பண புத்தியுடன் உள்ள பாவனையில் திருப்தி அடைபவள். (769)

2821-01 ப்ரிய-வ்ரதா. விரதங்களில் விருப்பமுள்ளவள்.

2821-02 உடலும், பொறிகளும், மனமும் அடங்கித் தேவியிடமோ, மற்ற தேவதைகளிடமோ மனம் ஈடுபடுவதற்காக உணவிலும் நடைமுறையிலும் ஏற்கப்படும் கட்டுப்பாடுகளும் சடங்குகளும் விரதங்கள் எனப்படும். மனமடங்கப் பயன்படும் நியமங்களில் மிகுந்த விருப்பம் கொண்டவள் தேவி. (770)

148 दुराराध्या दुराधर्षा पाटलीकुसुमप्रिया । 773
महती मेरुनिलया मन्दारकुसुमप्रिया ॥ 776

துராராத்த்யா துராதர்ஷா பாடலீகுஸுமப்ரியா 1
மஹதீ மேருநிலயா மந்தாரகுஸுமப்ரியா 11

2822-01 துர்-ஆராத்த்யா. கடுமையான முறைகளால் ஆராதிக்கத்தக்கவள்.

2822-02 பொறிகளும் மனமும் அடங்காதவர்களால் அவள் எளிதில் அடையத்தக்கவள் அல்ல. ("தரல கரணாநாம் அஸுலபா" ஸௌந்தர்ய லஹரீ-சு. 95) அப்படிச் சபல மனமுள்ளவர்கள் அவளைத் திருப்திப்படுத்த முடியாது. அவள் நிறைவுள்ளவள். அவளுக்கு எதிலும் நாட்டம் கிடையாது. அதனால் நாம் அளிக்கும் பொருளால் அவளைத் திருப்திப்படுத்த இயலாது. மனத்தின் தூய்மையையும் அன்பின் வலிமையையும் கண்டு கருணையால் மனம் நெகிழ்ந்து நாம் அர்ப்பணம் செய்வதைத் திருப்தியுடன் ஏற்றுக் கொள்வாள். (771)

2823-01 துர்-ஆதர்ஷா. வசப்படுத்தமுடியாதவள்.

2823-02 திருப்தி உண்டாக்கியும் தேவியை வசப்படுத்த இயலாது. வலிவால் அடக்கியும் வசப்படுத்தமுடியாது. (ஆதர்ஷ:- வலிவால் அடக்கி வசப்படுத்துதல்) (772)

2824-01 பாடலீ - குஸும - ப்ரியா. பாதிரிப்பூவில் விருப்பமுள்ளவள்.

2824-02 பிறரால் வசப்படுத்தமுடியாத பெருமனமும் பெரு வலிவும் கொண்ட தேவி நெகிழ்ந்து வசமாகும் பொருள்களும் உண்டு. பாதிரிப்பூவில் அவளுக்கு நாட்டமதிகம். அதனை அன் புடன் அளிக்க அவள் திருப்திப்படுவாள். கண்ணனிடம் யாரும் நெருங்கமுடியாது. குசேலன் அன்புடன் அளித்த ஒரு பிடி அவல் கண்ணனுக்கு மிகவும் உவப்பாயிற்று. அன்பால் ஏற்படும் நெருக்கம் அத்தகையது. (773)

**2825-01 மஹதீ. மிகப்பெரியவள்.**

2825-02 மிகப் பெரிது என்ற அளவிற்கும் அப்பாற்பட்ட பெரியவள். எந்த அளவுகோலாலும் அளவிடமுடியாத பெருமை கொண்டவள். மஹத் என்ற உலகின் ஆதித்தோற்றமாயிருப்பவள். (பா. 1708-02).

2825-03 நாரதரது வீணை மஹதீ என்ற பெயருள்ளது. அந்த வீணையாயிருப்பவள். (பா. 0816-02) (774)

**2826-01 மேரு-நிலயா. மேருவில் வசிப்பவள்.**

2826-02 மேரு தேவி வசிக்குமிடம். (பா. 0904-02, 0911-03-28) மேரு மலையிலுள்ள ஸ்ரீநகரம், மேரு வடிவில் முக்கோணங்களும் தளங்களும் மண்டலங்களும் சதுரச்ரமும் கொண்ட யந்திரம், மேரு தண்டம் எனும் முதுகின் முள்ளந்தண்டில் அமைந்த குண்டலினி தங்கும் சக்கிரங்கள். இவைகளைத் தமது இருப்பிடமாகக் கொண்டவள்.

2826-03 அக்ஷ மாலை முதலிய ஜபமாலைகளில் நடுவில் தொங்கும் மணிக்கு மேரு எனப் பெயர். அதனைத் தாண்டாமல் எண்ணி வந்த வரிசையிலேயே திரும்பவும் எண்ணுவது முறை. 50 மணிகள் மாலையாயின் 1 முதல் 50 வரை எண்ணியதும், 50வதாக எண்ணிய மணியை ஒன்று என எண்ணி 49ஆவதை இரண்டாக எண்ணி முதலாவதாக முதலில் எண்ணியதை 50ஆவதாக எண்ணி மறுபடி அதனையே ஒன்றுவதாக எண்ணத் தொடங்குவது. இதன் முறையில் மேரு எனும் நடுமணியைத் தாண்ட நேரிடாது. (பா-2175-02) கைவிரல்களில் உள்ள கணுக்களைத் தொட்டு எண்ணு வதும் உண்டு. பவித்திர விரலின் நடுக்கணு, கீழ்க்கணு, சுண்டு விரலின் கீழ்க்கணு, நடுக்கணு, மேற்கணு, பவித்திர விரலின் மேற் கணு, நடுவிரலின் மேற்கணு, சுட்டுவிரலின் மேற்கணு, நடுக்கணு, கீழ்க்கணு என்ற வரிசையில் எண்ண 10 எண்கள் ஆகும். மறுபடி

சுட்டு விரலில் கீழ்க்கணு, நடுக்கணு, மேற்கணு, நடுவிரலின் மேற்கணு, பவித்திர விரலின் மேற்கணு, சுண்டு விரலின் மேற்கணு, நடுக்கணு, கீழ்க்கணு, பவித்திர விரலில் அடிக்கணு, நடுக்கணு என எண்ண 20 எண்கள் ஆகும். மறுபடி பவித்திர விரலின் நடுக்கணுவில் தொடங்கி எண்ணுவது முறை. இந்த எண்ணும் முறையில் நடுவிரலின் அடிக்கணுவாகிய மேருவைத் தாண்டுவதில்லை. 'அ' முதல் 'க்ஷ' வரை உள்ள 51 எழுத்துக்களை, எண்ணுவதற்கு அக்ஷமாலையாகப் பயன்படுத்துவதுண்டு. 'அ' முதல் 'ள' வரை உள்ள 50 எழுத்துக்கள் எண்ணப் பயன்படுபவை. 'க்ஷ' மேருவான நடுமணி. அ நமச்சிவாய, ஆ நமச்சிவாய...ஸ நமச்சிவாய, ஹ நமச்சிவாய, ள நமச்சிவாய என சொல்லிக்கொண்டு வந்தால் 50 தடவை ஜபித்ததாகிவிடும். 'க்ஷ'வைச் சொல்லாமல் மறுபடி ள நமச்சிவாய ஹ நமச்சிவாய, ஸ நமச்சிவாய எனத் தொடங்கி அ நமச்சிவாய எனத் திருப்பிச் சொல்லி முடித்தால் 100 எண்ணிக்கை நிறைவுறும். க்ஷ என்பது மேரு. இதனைத் தாண்டி மறுபடி அ நமச்சிவாய என ஆரம்பிக்கக்கூடாது. மேரு தேவியின் இருப்பிடம். அதனால் இந்த மூன்று விதமான எண்ணும் முறையிலும் மேருவைத் தாண்டுவதில்லை. (775)

**2827-01** மந்தார-குஸும-ப்ரியா. மந்தாரைப் பூவில் நாட்டமுள்ளவள்.

**2827-02** மந்தாரம் என்று கல்பக விருக்ஷங்களில் ஒன்று. தேவியின் சிந்தாமணி கிருஹத்தைச் சுற்றியுள்ள பிரகாரங்களில் மந்தார மரங்களின் தோட்டமும் உள்ளது. (பா-0911-07) மந்தாரப் பூவில் நாட்டமுள்ளவள். (776)

149 वीराराध्या विराड्रूपा विरजा विश्वतोमुखी । 780
प्रत्यग्रूपा पराकाशा प्राणदा प्राणरूपिणी ॥ 784

வீராராத்யா விராட்ருபா விரஜா விச்வதோமுகீ ।
ப்ரத்யக்ருபா பராகாசா ப்ராணதா ப்ராணருபிணீ ॥

**2828-01** வீர-ஆராத்யா. வீரர்களால் ஆராதிக்கத் தக்கவள்.

**2828-02** தனது சிறந்த வலிவை நெருக்கடியில் காட்டக்கூடிய தகுதிபெற்று அவ்வலிவைப் பயன்படுத்துபவர்கள் வீரர். வீரர்கள் அனைவரும் வெற்றி பெறத் தேவியை ஆராதிக்கிறார்கள். உயர்ந்த பண்பாட்டைப் பின்பற்றுபவர்கள், தம் பண்பாட்டைத் தொடர்ந்து

வம்ச வழியில் வந்த ஸந்ததிகளைப் பின்பற்றச் செய்திருப்பின் வீரர்கள் எனப்படுவார்கள். தான் சரியெனக் கருதிய பண்பாட்டில் தன் சந்ததிகளையே பழக்கப்படுத்த முடியாவிடில் தான் சரியான முன்மாதிரியாக நடந்துகொள்ளவில்லை என்று பொருள். தந்திர நூல்களின்படி, மனத்தை வெளிப்பொருள்களில் நாட்டம் கொள்ளாமல் தடுத்து 'நான்' இடத்தில் கரையவிட்டு ஆத்மானந்தத்தை அனுபவிப்பவன் வீரன். "அஹமி ப்ரலயம் குர்வந் இதம: ப்ரதியோகிந: I பராக்ரமம் பரோ புங்க்தே ஸ்வாத்மாநம் அசிவாபஹம்". 'நான்'இல், 'அது' 'இது' என்பதைக் கரைத்துப் பிறகு 'நான்'ஐ 'பர அஹம்' ஆக உள்ள தேவியிடம் கரைப்பவன் வீரன். 'என்னுடையது' என்பதை 'நான்'இல் கரைத்துக் குறுகிய 'நான்'ஐ பெரும் 'நான்'இல் கரைக்கிறான். எதிரியை அடக்குபவன் வீரன். ஞானிக்கு எதிரி மனத்தின் நாட்டத்தைப் பறிக்கும் பொருள்கள். அவைகளை அடக்குவதென்பது அதன் இழுப்பிலிருந்து விடுபட்டுத் தன்னைக் காப்பாற்றிக்கொள்வது. மனத்தையும் பொறிகளையும் அடக்கும் சக்தி படைத்த ஞானி அதனால் வீரனாகிறான். அந்த ஞானியான வீரனால் ஆராதிக்கத்தக்கவள். (777)

**2829-01 விராட்-ரூபா. விராட் வடிவினள்.**

2829-02 பஞ்சீகரணம் அடைந்த ஸ்தூல பூதங்களாலான உலகின் வடிவம் பிரும்மாண்டமாகிறது. அதில் அபிமானமுள்ள ஈசுவரன் விராட் எனப்படுவார். வைச்வாநரன் என்றும் பெயர் உண்டு. (பா-1708-21, 1709-02) அந்த விராட்டின் வடிவிலுள்ளவள் தேவி. (778)

**2830-01 வி-ரஜா. மாசற்றவள்.**

2830-02 அவித்யையால் ஏற்படக்கூடியதும் விக்ஷேபம் (திரிபு-வேறுபாடு) செய்யக்கூடியதுமான ரஜோகுணம் மாசுபடுத்தும். எதை எப்படி அறியவேண்டுமோ அப்படி அறியவிடாமல் ரஜோகுணம் தடுக்கும். அந்த ரஜோகுணமும், ரஜோகுணத்தால் ஏற்படும் மாசும் அற்றவள்.

2830-03 விரஜா எனும் நதி வைகுண்ட மார்க்கத்தில் இருப்பதாகச் சொல்வர். ஒரிஸ்ஸாவில் விரஜா நதி இருக்கிறது. இந்த நதி வடிவில் உள்ளவள். (779)

**2831-01 விச்வத:-முகீ. எங்கும் முகமுள்ளவள்.**

2831-02 உபாசிப்பவர்கள் தியானிக்குமிடமெல்லாம் தோன்றுபவளானதால் எங்கும் முகம் உள்ளவளாக இருக்கிறாள். உலகி

லுள்ள எல்லாவற்றின் முகமாகவும், அவள் இருக்கிருள். தேவி இவராக இருக்கிருள் என்ற பாவனையுடன் எவருக்கு உணவிட்டாலும் அது அவளிடம் போய் சேர்கிறது. முகம் செயலாற்றும் துறை. அவள் செயலாற்றும்துறை எங்கும் காணப்படுகிறது. (780)

**2832-01 ப்ரத்யக்-ரூபா. உள்நோக்குபவர்களால் காணப்படுபவள்.**

2832-02 பொறிகள் வெளிநோக்குடனிருக்கையில் பராக் எனவும், உள்நோக்குடனிருக்கையில் பிரத்யக் எனவும் கூறுவர். வெளிப்பொருளில் ஆனந்தமிருப்பதாகக் கண்ட பொறிகள் அதை நாடிச் செல்கின்றன. ''ஆனந்தம் பொருளிலில்லை. 'நான்' ஆக இருப்பதன் ஸ்வரூபம் அது'' எனக் கண்டுகொண்ட மனமும் பொறிகளும் அந்த 'நான்'ஐ நோக்கித் திரும்புகின்றன. அந்நிலையில் அறியக்கூடிய ஸச்சிதானந்த வடிவிலுள்ள ஆத்மாவாக இருப்பவள் தேவி. (781)

**2833-01 பர-ஆகாசா. பெருவெளியாயிருப்பவள்.**

2833-02 ஆகாசதே இதி ஆகாச:. எங்கும் விளங்கும் பொருள் ஆகாயம். அது விளங்காமலில்லை; விளங்குகிறது; இருப்பதாக உணரமுடிகிறது; ஆனுல் புலப்படுவதில்லை; புலப்படுவதற்குரிய பரப்பால் ஏற்படும் குறுகல் அதில் இல்லை. புலப்படாததால் ஸூக்ஷ்மமானது ஆகாசம். இந்த ஆகாசத்தையும் தோற்றுவித்த பரம்பொருள் பெருவெளி-பராகாசமாகும். பரமஸூக்ஷ்மமானது. அந்த வடிவில் உள்ளவள் தேவி.

2833-03 பஞ்சீகரணமடைந்த (பா. 1708-07) ஆகாசமெனும் ஸ்தூலபூதத்திற்குக்காரணமான தந்மாத்திர நிலையிலுள்ள ஆகாசம் பராகாசம் எனச் சிலர் கூறுவர். அந்த வடிவில் உள்ளவள்.

2833-04 நம் உடலிலுள்ள ஸஹஸ்ராரம் பராகாசமாகும். அதன் வடிவில் உள்ளவள்.

2833-05 எட்டாத இடத்தில் உள்ளது பரம். இதயத்தினுள் உள்ள மிகச்சிறுவெளி தஹர-ஆகாசம். தேவி அங்கு அந்த ஆகாச உருவில் இருக்கிருள். அந்த வெளி நமக்கு எட்டாதாகையால் பராகாசம். (782)

**2834-01 ப்ராண-தா. பிராணசக்தியை அருள்பவள்.**

2834-02 உடலிலுள்ள ஒவ்வொரு அணுவும் பிராணசக்தியால் இயங்குகிறது. அந்தப் பிராண சக்திக்கு ஆதாரம் பிராணவாயு.

அது ஐந்து வடிவங்களில் செயலாற்றுகிறது. பிராணவாயுவாக வெளியிலுள்ளப் பிராணசக்தியை உள்ளே இழுத்துக்கொள்கிறது. அபானவாயுவாகப் பயன்படுத்தப்பட்டு மலமான சக்தியை வெளிப் படுத்துகிறது. வியானவாயுவாக உள்ளிழுக்கப்பட்டப் பிராண சக்தியை உடலின் ஒவ்வோர் அணுவிலும் ரத்தக்குழாய்கள்மூலம் பரப்புகிறது. ஸமானவாயுவாகப் பரவி நிற்கும் பிராணசக்தியை அந்தந்த பகுதிக்கேற்பப் பக்குவப்படுத்தித் தருகிறது. உதானனுக பிராணன் முழுவதும் வெளியேறும் வரை பிராணசக்தியைச் சேமித்துத் தருகிறது. இந்த பிராணசக்தியின் பலத்தால் பத்து இந்திரியங்களும் இயங்குகின்றன. அந்த பிராணசக்தியைத் தருப வளும் அவளே. (ப்ராணுன் ததாதி). அதனைத் துண்டித்து நிறுத்துபவளும் அவளே. (ப்ராணுன் த்யதி) (783)

**2835-01** ப்ராண-ரூபிணீ. பிராணசக்தியாயிருப்பவள்.

2835-02 பிராண சக்தியாயிருப்பவளும் அவளே. அந்தப் பிராணசக்தி பரம்பொருளாகிய தேவியின் ஓரம்சத்தின் வடிவமே. (784)

150 मार्तण्डभैरवाराध्या मन्त्रिणीन्यस्तराज्यधूः । 786
त्रिपुरेशी जयत्सेना निस्त्रैगुण्या परापरा ॥ 790

மார்த்தண்டபைரவாராத்த்யா மந்த்ரிணீந்யஸ்தராஜ்யதூ: 1
த்ரிபுரேசீ ஜயத்ஸேநா நிஸ்த்ரைகுண்யா பராபரா 11

**2836-01** மார்த்தண்ட - பைரவ - ஆராத்த்யா. மார்த்தண்ட பைரவரால் பூஜிக்கத்தக்கவள்.

2836-02 ஸ்ரீபுரத்தில் 22-23 மதில்களின் நடுவில் உள்ள சூர்யப்பிரகாரத்தில் பன்னிரெண்டு உபாஸகர்களில் (பா. 1640-02) ஒருவரான சாயாதேவியுடன் கூடிய சூரியன் மார்த்தண்டபைரவன் என்ற பெயருடன் தேவியை உபாசிக்கிறுர். மணிமல்லன் என்ற அசுரனைக் கொன்றதால் மல்லாரி என்றும் அவரைக் குறிப்பிடு வார்கள். ஸுர்யனுக்கு மார்த்தண்டன்-செத்த முட்டையிலிருந்து தோன்றியவர் என்ற பெயர். அதிதியும் கசியபரும் ஸுர்யமண்ட லத்தின் நடுவிலுள்ள பரம்பொருளை வழிபட்டுப் பிள்ளைவரம் பெறு கிறுர்கள். கருவுற்ற அதிதி கடும் விரதம் ஏற்றுக் கொள்கிறுள். உடலில் சக்தி குறைந்த நிலையில் பிள்ளைப்பேறு ஏற்பட்டு அது உயிரற்றப் பிண்டமாக வெளிவந்தது. அதிதியும் கசியபரும் பரம் பொருளை வேண்ட அந்த பிண்டம் உயிர்பெற்றெழுந்தது. ஸுர்ய

மண்டலத்தில் உள்ள பரம்பொருளாக வழிபட்டதால் ஸூர்ய சக்தி பெற்று ஸூரியனாக விளங்கினர் எனப் புராணம் கூறும். தேவி உபாஸனையில் அதிதி கடும் விரதத்திலிருந்ததால் அவள் பெற்ற குழந்தை பயங்கரத் தோற்றம் பெற்றதன் காரணமாகப் பைரவர் ஆனர். அந்த மார்த்தண்ட பைரவரால் ஆராதிக்கப்பெற்றவள்.

2836-03 வடுகபைரவர் முதலிய பல பைரவர்கள் உண்டு. பெண்களின் கூட்டத்திற்கும் பயந்தவர்களின் கூட்டத்திற்கும் பைரவம் எனப் பெயர். (பீருணாம் ஸமூஹ:) ஸூர்யன், பைரவர்கள், பெண்கள், பயந்தவர்கள் இவர்களால் வணங்கப் பெற்றவள்.

2836-04 விடாமுயற்சிக்குப் பைரவம் எனப் பெயர். சூரியனைப் போன்று அது மோகமெனும் இருட்டைப் போக்க வல்லது. விடா முயற்சியுடன் ஆராதிக்கத் தக்கவள். (785)

2837-01 மந்த்ரிணீ-ந்யஸ்த-ராஜ்ய-தூ:. மந்திரிணீ தேவியிடம் அரசின் பொறுப்பை ஒப்படைத்தவள்.

2837-02 மந்திரிணீ—அரசை நிர்வகிக்கும் ரகசிய ஆலோசனைகளைத் தரும் பெண் மந்திரியான ராஜச்யாமளா தேவி. [பா. 1006-02-03] அவளிடம் ஸ்ரீநகரஸாம்ராஜ்யத்தை நிர்வகிக்கும் பொறுப்பைத் தேவி ஒப்படைத்துள்ளாள். (786)

2838-01 த்ரிபுர-ஈசீ. முப்புரங்களின் தலைவி.

2838-02 மேருவில் உள்ள ஸ்ரீநகரம் தன்னைச் சுற்றி மூன்று புரங்களைக் (பிரும்ம-விஷ்ணு-ருத்திரர்களின் நகரங்களை) கொண்டது. அதனல் அது த்ரிபுரம். அறிவு முப்புரங்களைக் கொண்டது. (அறிபவன், அறியப்படும் பொருள், அறிவு என.) அவைகளுக்குத் தலைவி. ஸர்வாசா பரிபூரக சக்கிரத்தின் தலைவிக்குத் திரிபுரேசீ எனப் பெயர். (பா. 0911-19) அவள் தேவியின் வடிவம். (787)

2839-01 ஜயத்-ஸேநா. வெல்லும் படைகளுள்ளவள்.

2839-02 எதிரிகளை எளிதில் வெல்லும் திறமையுள்ள தேர்-குதிரை-யானை-காலாட் படைகளுடன் கூடியவள். (பா. 2608-02) (788)

2840-01 நிஸ்-த்ரைகுண்யா. முக்குணங்களைக் கடந்தவள்.

2840-02 அஹங்காரம் எனும் தத்துவம் மாயையிடமிருந்து தன்வரை வந்த குணத்தை மூன்ருகப் பிரித்து உலகைப் படைக்கப்

பயன்படுத்திற்று. முக்குணங்களாகப் பிரிந்த அஹங்கார நிலைக்கு முன்னுள்ளவள் தேவி. உலகை ஒடுக்கும்போதும், முக்குணங்கள் அஹங்காரத்தில் அடங்கி, அஹங்காரம் மஹத்தில் அடங்கும். முக்குணங்களாக இருந்த நிலை அடங்கிய மஹத்து முதலிய தத்துவங்களாக உள்ளவள். (பா. 1708-02) பிரும்ம - விஷ்ணு-ருத்திரர்கள் முக்குணங்களால் தொழில் புரிபவர்கள். முக்குண நிலையைக் கடந்த சுத்த ஸத்துவத்தால் தொழில் புரிபவர்கள் ஈச்வரனும் ஸதாசிவனும். (பா. 1724-02) அந்தத் துரீய - துரீயாதீத வடிவில் உள்ளவள் தேவி. (789)

2841-01 பர-அபரா. பரமாயும் அபரமாயும் இருப்பவள்.

2841-02

| பரம் | அபரம் |
|---|---|
| வேறுபட்டது | தன்னைச் சார்ந்தது |
| சத்ரு | நண்பன் |
| தூரத்திலுள்ளது | நெருங்கியுள்ளது |
| உயர்ந்தது | தாழ்ந்தது |
| சக்தி | சிவன் |
| பர ஆகாசம் | ஸ்தூல ஆகாயம் |
| பிரும்ம வித்யை | மற்ற வித்யைகள் |
| ரஹோயாகம் | வெளிப்படையான ஹோமம் |
| பரம்பொருள் | உலகம் |
| பரா எனும் ஒலி வடிவம் | பச்யந்தீ, மத்யமா, வைகரீ என்ற மற்ற ஒலி வடிவங்கள். |
| துரீய நிலை | முக்குண நிலை |
| மந்திர வடிவம் | ஸ்தூல வடிவம் |
| பராசக்தி | தனி மனிதனின் சக்தி |

இப்படிப் பரமாயும் அபரமாயும் உள்ள பல நிலைகளில் உள்ளவள் தேவியே. (790)

151 सत्यज्ञानानन्दरूपा सामरस्यपरायणा । 792
कपर्दिनी कलामाला कामधुक् कामरूपिणी ॥ 796

ஸத்யஜ்ஞானனந்தரூபா ஸாமரஸ்யபராயணு I
கபர்த்திநீ கலாமாலா காமதுக் காமரூபிணீ II

2842-01 ஸத்ய-ஜ்ஞான-ஆநந்த-ரூபா. ஸத்திய-ஞான-ஆனந்த வடிவினள்.

2842-02 பரம்பொருள் வடிவமற்றது. அதனை அடையாளம் காட்டுபவை ஸத்யம், ஜ்ஞானம், ஆனந்தம் எனும் மூன்று பிரும்ம ஸ்வரூபங்கள். அந்த ஸத்தியமாயும் ஞானமாயும் ஆனந்தமாயும் இருப்பவள் தேவி. (பா-2617-02) (791)

2843-01 ஸ்ாமரஸ்ய-பர-அபநா. ஸமரஸத்தை நிலையாகக் கொண்டவள்.

2843-02 ஸாமரஸ்யம்-எவ்வகையிலும் ஏற்றத்தாழ்வற்ற நிலையில் ஈடுபாடு. அதனையே தன் சிறந்த இயற்கை நிலையாகக் கொண்டவள் தேவி. சிவனுக்குச் சக்தி ஸமமானவள். சக்திக்குச் சிவன் ஸமமானவர். அதனை ஐந்து வகையில் இருவரும் காட்டுகிறார்கள். (பா-1208-02-09) (792)

2844-01 கபர்திநீ. சடையனான சிவனின் மனைவி.

2844-02 சிவபெருமானின் சடைக்குக் கபர்தம் எனச் சிறப்புப் பெயர். அப்பெயர் கங்கை ஜலப்பெருக்கைத் தடை செய்து தூய தாக்கியதால் வந்தது. (கஸ்ய கங்காஜலஸ்ய பூரம் ப்ரவாஹம் தாபயதி கண்டயதி சோதயதி இதி கபர்த:) சிவபெருமான் கங்கையைச் சடையில் தேக்கியது அதனைத் தூயதாக்கவே. கபர்தம் கொண்ட சிவனின் பத்தினி தேவி. சகலாண்டம் எனும் க்ஷேத்திரத்தில் கோவில் கொண்ட சிவனுக்குக் கபர்த்தீ எனப்பெயர். அவரது தேவி.

2844-03 கபர்தி-சோழியாலான மாலை. அதனை அணியாகக் கொண்டவள். சிவன் மைராலராகத் தோன்றியபோது தேவி மதாலஸா என்ற பெயருடன் சோழிகளாலான அணிகளை அணிந்து தானும் உடனிருந்தாள்.

2844-04 தேவி சடை முடியுடன் உள்ள நிலைகளும் உண்டு. லகுஸ்தவத்தில் 'ஆர்ப்பட்யா சசிகண்ட மண்டித ஜடாஜூடாம்' என்று 11-வது சுலோகத்தில் பிறையணிந்த சடையுள்ள தேவியின் வடிவம் தியானத்திற்காகக் கூறப்பட்டுள்ளது. 'சரத்ஜ்யோத்ஸ்நா சுத்தாம் சசியுதஜடாஜூட மகுடாம்' எனப் பிறையணிந்த சடையுள்ள வடிவத்தில் வாக்தேவியாக தேவியைத் தியானம் செய்யும்படி ஸௌந்தரியலஹரீ (சு-15) கூறுகிறது. சடையுடன் கூடிய கேச பாசமுள்ளவள் தேவி. (793)

2845-01 கலா-மாலா. கலைகளின் வரிசையாக இருப்பவள்.

2845-02 அறுபத்திநான்கு கலைகளின் வரிசையாக இருப்பவள். கலைகளுக்கு அழகு ஊட்டுபவள். (கலா நாம் மாம் லாவண்யம் லாதி). அழகையும் ஒளியையும் தருபவள். (கலாம் சோபாம் மாம் ச லாதி). (794)

**2846-01** காம-துக். விரும்பியதை வழங்குபவள்.

2846-02 காமதேனு போன்றோ, காமதேனுவாக இருந்தோ, நம் மனோரதங்களை நிறைவேற்றி வைப்பவள். (795)

**2847-01 காம-ரூபிணீ. காமேசுவரர் வடிவில் இருப்பவள்.**

2847-02 காமேசுவரரின் வடிவில் இருப்பவள் தேவி. காமன் மன்மதன். காமம்-விரும்பும் சக்தி, இச்சா சக்தி, உலகைப் படைக்கத் தேவி கொண்ட ஸங்கல்பம். இவைகளின் வடிவில் உள்ளவள். விரும்பியபடி வடிவெடுத்துத் தோன்றுபவள். (796)

152 कलानिधिः काव्यकला रसज्ञा रसशेवधिः । 800
पुष्टा पुरातना पूज्या पुष्करा पुष्करेक्षणा ॥ 805

கலாநிதி: காவ்யகலா ரஸஜ்ஞா ரஸசேவதி: ।
புஷ்டா புராதநா பூஜ்யா புஷ்கரா புஷ்கரேக்ஷணு ॥

**2848-01** கலாநிதி:. கலைகளின் நிதி.

2848-02 கலா – அறுபத்திநான்கு கலைகள், சந்திரனின் 16 கலைகள், மற்றும் சூரியன், அக்கினி, பிரும்மா. விஷ்ணு முதலானோரின் கலைகள், விழிப்பு முதலிய நிலைகளின் கலைகள், பரம்பொருளின் கலை அம்சமாக உள்ள ஜீவர்கள். இவைகளின் சேமிப்புக் கூடமாயிருப்பவள் தேவி. கலாநிதி–சந்திரன். அவன் வடிவில் உள்ளவள். (நா-236, 327, 611, 612).

2848-03 கலைகள், சீரிய செயல் முறைகள். அவைகளின் முடிவிடம், செயலாற்றலால் அடையும் பயனாக இருப்பவள். (797)

**2849-01** காவ்ய-கலா. அழகிய காவியங்களை இயற்றும் ஆற்றலாயிருப்பவள்.

2849-02 தேவியின் அருளால் அழகிய காவியங்களை இயற்றும் சக்தியை மூகர், காளிதாஸர், கூத்தர் பெருமான், காளமேகப்புலவர் முதலிய கவிகள் பெற்றனர். அந்த காவிய சக்தியாயிருப்பவள்.

2849-03 காவியர்–சுக்கிராசாரியர். அவர் வழிபட்ட மிருதஸஞ்ஜீவநீ (மாண்டவனைப் பிழைக்க வைக்கும்) மந்திர வடிவினள். (798)

2850-01 ரஸ-ஜ்ஞா. காவியச்சுவையறிந்தவள்.

2850-02 காவியங்களில் கூறப்படும் சிருங்காரம் வீரம் முதலிய ஒன்பது காவியச் சுவைகளேயும் அறிந்தவள். அந்தச் சுவைகளே அறியும் சக்தியாயிருப்பவள். இனிப்பு முதலிய சுவைகளே அறியும் நாக்கு எனும் பொறியாயிருப்பவள். (799)

2851-01 ரஸ-சேவதி:. பிரும்மானந்தத்தின் இருப்பிடம்.

2851-02 சுவைக்கப்பெறும் ஆனந்தங்களுக்குள் பெருமை பெற்றது பிரும்மமாக ஆகி ஆனந்தமாயிருப்பது. "ரஸோவை ஸ:- அதுவல்லவோ ரஸம்" என உபநிடதத்தால் புகழப்பெற்றது. அதன் காப்பகமாயிருப்பவள் தேவி. (800)

2852-01 புஷ்டா. நிறைவுற்றவள்.

2852-02 எல்லாம் நிரம்பியிருப்பது – புஷ்டியுள்ளது. எங்கும் எதிலும் ஏதேனும் குறையிருக்கும். 36 தத்துவங்கள் உண்டு. இவை அனைத்தும் ஏற்றத்தாழ்வில்லாமல் ஒன்றில் நிரம்பியிருக்காது. தேவியிடத்தில் அந்தக் குறை காணமுடியாது. எல்லா தத்துவங்களுக்கும் தோற்றுவாயான அவள் புஷ்டியுள்ளவள். ஆனந்தமுள்ளவன் புஷ்டியுடன் காணப்படுவான். நிறைவைத் தருவது ஆனந்தம். பிரும்மானந்த வடிவினள் தேவி. அதனுல் புஷ்டா. (801)

2853-01 புராதநா. பழம்பொருள்.

2853-02 எல்லோருக்கும் மூத்தது உலகப்படைப்பில் முதலில் தோன்றிய ஸூக்ஷ்மமான ஆகாயம். அதற்கும் மூத்த அஹங்காரம், மஹத், அவ்வியக்தம், மூலப்ரகிருதி இவை அனைத்தும் தேவியிடமிருந்து தோன்றியவை. அதனுல் முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப்பழம் பொருள் தேவி. (802)

2854-01 பூஜ்யா. வழிபடத்தக்கவள்.

2854-02 வயதிலும் கல்வியிலும் தவத்திலும் பெரியோர்களேச் சிறியோர் வணங்குவர். அப்படி வணங்குபவரையும் சிலர் வணங்குவர். இப்படி வணங்கப்பெறுபவர் வணங்குபவர் என்ற இரு நிலேகள் எல்லோரிடத்திலும் இருக்கும். ஆனுல் தேவியிடம் வணங்கப்பெறுபவள் என்ற நிலேமட்டும்தான் உண்டு. எல்லோருக்கும் முன்னவளானதால் அவள் யாரையும் வழிபடத் தேவையில்லே. அப்படி எல்லோராலும் வழிபடத்தக்கவள். (803)

**2855-01** புஷ்கரா. புஷ்டியைத் தருபவள்.

**2855-02** புஷ்டியைத் தருபவள், புஷ்டிமிக்கவள், புஷ்கரம் எனும் திவ்விய தீர்த்த வடிவிலுள்ளவள் தேவி. ர-ல என்ற எழுத்துக்கள் பல இடங்களில் மாறிமாறி வரும். புஷ்கலா என்றும் சொல்லலாம். புஷ்கலா என்று ஐயனாரின் மனைவியரிருவரில் (பூர்ணா, புஷ்கலா) ஒருவள். இரண்டு பெயர்களும் நிறைவுள்ளவள் என்ற பொருள் தருபவை. **(804)**

**2856-01** புஷ்கர - ஈக்ஷணா. தாமரைபோன்ற கண்கள் உள்ளவள்.

**2856-02** தாமரை போன்ற குளிர்ந்த இதமான பார்வை உள்ளவள். விசாகத்தில் சூரியனும், கிருத்திகையில் சந்திரனும் சேரும் நாள் புஷ்கரம் என்ற யோகம். அதில் குறிப்பாகத் தோன்றுபவள். இந்த உலகம் தோன்றும்போது தாமரை வடிவில் இருந்து பின் மலர்ந்தது. அதன் மலர்ச்சிக்காகக் காத்திருப்பவள். (க்ஷண: -வேறு செயலில் நாட்டமின்றி குறிப்பிட்ட செயலுக்காக நேரத்தை ஒதுக்கிக் காத்திருப்பது.)

2856-03 புஷ்கரம் என்று ஒரு தீவு உண்டு. (உலகம் ஏழு தீவு (துவீபம்)களாலானது. நாமிருப்பது ஜம்பூத்துவீபம். நாவல் மரத்தால் அடையாளமிடப்பட்டது. ப்லக்ஷத்துவீபம் (இச்சி), சால்மலீதுவீபம் (காரிலவு) குசத்துவீபம் (குசப்புல்) க்ரௌஞ்சத்துவீபம் (க்ரௌஞ்சம் எனும் மலை) சாகத்துவீபம் (தேக்குமரம்) புஷ்கரத்துவீபம் (தாமரை) என. அவைகளை அடையாளம் காட்டுபவைகளைக் கொண்டு பெயரும் அமைந்துள்ளது. தாமரையால் அடையாளம் காட்டப்பெற்றபடியால் புஷ்கரத்துவீபம் என அத்தீவிற்குப் பெயர்) அதில் விளங்குபவள். புஷ்கரம் என நிறைவுமிக்க ஆலமரத்திற்குப் பெயர். அது பெற்றுள்ள நிறைவால் மரக்கூட்டத்திற்குத் தலைவனாக, வனஸ்பதியாக இருக்கும் பெருமைபெற்றது. ஆலிலையில் படுத்திருக்கும் பாலமுகுந்தனுக்குப் புஷ்கரன் எனப் பெயர். கல்பங்களின் முடிவில் உலகம் நீரில் மூழ்கி நிற்கும்போது அதில் மிதக்கும் ஓர் ஆலிலையில் படுத்துக் கையால் கால் கட்டைவிரலைப் பிடித்து வாயினுட் செலுத்தி மகிழ்ந்திருப்பவரான பாலமுகுந்தனிடத்தில் கிருபை கூர்ந்து பிரும்மதத்துவத்தைத் தேவி உபதேசித்தாள் எனத் தேவீபாகவதம் கூறும். அப்படிப் பாலமுகுந்தனுக்கு உபதேசிப்பதற்காக நேரத்தை ஒதுக்கியவள் தேவி. 'புஷ்கரம் -உலகை மூழ்கவைத்த ஜலம். உலகைத் தோற்றுவிப்பதற்காக அதனிடத்தில் (ஈக்ஷணா) கண் நாட்டம் உள்ளவள், குறிப்புள்ளவள் தேவி. **(805)**

153 परंज्योतिः परंधाम परमाणुः परात्परा । 809
पाशहस्ता पाशहन्त्री परमन्त्रविभेदिनी ॥ 812

பரம் ஜ்யோதி: பரம் தாம பரமாணு: பராத்பரா ǀ
பாசஹஸ்தா பாசஹந்த்ரீ பரமந்த்ர விபேதிநீ ǁ

2857–01 பரம் ஜ்யோதி:. பேரொளி.

2857–02 லோகம்–உலகம். ஒளியால் உணரப் பெறுவதால் லோகம். (லோக்யதே இதி). ஒளியற்ற நிலை இருட்டு. உள்ளே ஒளியற்ற நிலை அறியாமை எனும் இருட்டாகிறது. வெளியே ஒளி யற்ற நிலை இருட்டாகிறது. இரு நிலைகளிலும் பரந்த உலகம் உணரப்படுவதில்லை. உணர்வை உண்டாக்குபவை சூர்யன் சந்திரன், நக்ஷத்திரங்கள், நெருப்பு முதலிய ஒளிமண்டலங்கள். வாக்கும் ஒளி வடிவமே. இருட்டில் பேச்சால் அறிந்துகொள்கிறோம் அல்லவா? 'வாசைவாயம் ஜ்யோதிஷா ஆஸ்தே' 'வாக்காகிற ஒளியால் இருப்பதை அறிகிறோம்'. என உபநிடதம் கூறும். இத்தனை ஒளிகளும் உலகை விளக்குவது, ஆத்மா எனும் ஒளி உள்ளும் புறமும் துலங்கும்போதுதான். அவ்வொளியில்லாவிடில் மற்றவை இருந்தாலும் பயனில்லை. 'நான்' இல்லாவிடில் பார்ப் பதேது? அந்த 'நான்' உம் பார்ப்பது, எல்லா 'நான்' உக்கும் மூல மான பராஹந்தர (பெரிய நான்) வடிவான தேவி எனும் பரம் பொருளாகிய ஒளியால்தான். அந்த பரம் பொருளாகிய ஒளி (ஜ்யோதிஸ்) யாக இருப்பவள் தேவி (806)

2858-01 பரம் தாம. பெரும் நிலை.

2858-02 தாம–நிலை, அடைய வேண்டிய இடம், அடங்குமிடம். வேறொன்றின் எதிர்பார்வையுமற்ற சேரிடமாகிய பரம்பொருள். "ந தத் பாஸயதே ஸூர்யோ ந சசாங்கோ ந பாவக:ǀ யத் கத்வா ந நிவர்த்தந்தே தத் தாம பரமம் மம. " அவ்விடத்தை விளக்கச் சூரியனும் சந்திரனும் அக்கினியும் சக்தியற்றவர்கள். அங்கு சென்றவர் திரும்புவதில்லை. அதுதான் என் சிறப்பிடம்" (கீதை 821)

2858–03 விழிப்பில் 'நான்' அடங்குமிடம்-தாம, காரணம் ஸூக்ஷ்மம், ஸ்தூலம் என்ற மூன்று தேகங்களாகும். ஸ்வப்னத்தில் ஸூக்ஷ்ம–காரண சரீரங்கள் 'நான்' உக்குத் தங்குமிடமாகின்றன. ஸுஷுப்தியில் காரண தேகமாகிய அஜ்ஞானத்திடம் 'நான்' ஒளிந் திருக்கும். இம் மூன்று நிலைகளிலும் ஸாக்ஷியாகத் தனித்திருந்து

பார்க்கும் துரீயனுன ஆத்மா அஜ்ஞானத்தில் மறையாத தாம. (பா. 1715-02) அது பரம் தாம. அந்த வடிவில் இருப்பவள். (807)

**2859-01** பரம-அணு:. மிக நுண்ணிய அணுவாக இருப்பவள்.

2859-02 மிக நுண்ணிய-உருவமுள்ளதெனக் கொள்ளமுடியாத பொருள் அணு. அதிலும் நுண்ணியதாக இருப்பவள் தேவி. மிக ஸூக்ஷ்மமான மந்திர சக்தியாக இருப்பவள். (808)

**2860-01** பராத்-பரா. மேலானதற்கும் மேலானவள்.

2860-02 பரன் - பிரும்மா, விஷ்ணு அல்லது ருத்திரன். அவர்களுக்கும் மேம்பட்டவள். பரம் எனும் பிரமனின் ஆயுள். அந்தக் காலவரை உலகம் அறிந்த காலவரைகளுக்குள் பெரிது. (பரம்) (பா. 1724-04-05) அதனைவிடப் பெரியவள்-காலவரையைக் கடந்தவள். (809)

**2861-01** பாசஹஸ்தா. பாசத்தைக் கையில் கொண்டவள்.

2861-02 பாசத்தை இடது பின் கையில் கொண்டுள்ளவள். பாசத்தைக் கையாள்பவள். பாசம் இரு முனைகளும் கைகளில் அடங்கிய கயிறு. (சுருக்குக் கயிறு அல்ல) (பா. 0705-03-06) (810)

**2862-01** பாசஹந்த்ரீ. பாசத்தை அழிப்பவள்.

2862-02 வினை எனும் பாசத்தால் கட்டுண்டவனை அவனது வினை தீர்த்து வினையால் ஏற்பட்ட தளைகளை அகற்றுபவள். (1880-02-06) நாக பாசம் முதலிய அஸ்திரங்களால் கட்டப்பட்ட அநிருத்தன் முதலான வீரர்கள் தேவியின் அருளால் தளையிலிருந்து விடுபட்டார்கள் எனப் புராணம் கூறும். (811)

**2863-01** பர-மந்த்ர-விபேதிநீ. எதிரியின் ஏவல் முதலான அபிசாரகாரியங்களை அழிப்பவள்.

2863-02 பரன்-எதிரி. அவன் தனக்கு எதிரியாக உள்ளவனைத் தனது அபிசார மந்திரங்களால் நோய், மனக்கலக்கம் முதலானவற்றிற்கு உட்படுத்தி அழிப்பது உண்டு. அல்லது எதிரி அறிய முடியாதபடி ரகசிய ஏற்பாடுகளைச் (மந்த்ரம்)செய்து தந்திரத்தால் ஏமாற்றி அழிப்பது உண்டு. இப்படிப்பட்ட எதிரியை அழிக்கும் முயற்சிகள் தேவியைச் சரணடைந்தவர்களிடம் பலிக்காது. தேவி அந்த முயற்சிகளைப் பலன் தராமல் செய்துவிடுவாள்.

2863–03 பரமந்திரங்கள்-உயர்ந்த மந்திரங்கள், ஸ்ரீ வித்யை முதலானவை. அவைகளைத் தக்க மஹான்களின் மூலம் வெளிப் படுத்துபவள். மனு சந்திரன் முதலான பன்னிருவர் மூலம் தனது மந்திரத்தைக் கருணையுடன் வகுத்துத் தந்தவள். (பா. 1640-02) பர-மந்த்ரு-அவி-பேதிநீ. தனது உயர்ந்த ஸ்ரீ வித்யை மந்திரங்களை ஜபிப்பவரது பாபத்தைப் போக்குபவள். (அவி-பாபம்) (812)

154 मूर्ताऽमूर्ताऽनित्यतृप्ता मुनिमानसहंसिका । 816
सत्यव्रता सत्यरूपा सर्वान्तर्यामिणी सती ॥ 820

மூர்த்தா(அ)மூர்த்தா(அ)நித்யத்ருப்தா
முனிமாநஸஹம்ஸிகா I
ஸத்யவ்ரதா ஸத்யரூபா ஸர்வாந்தர்யாமிணீ ஸதீ II

2864–01 மூர்த்தா. உருவுடைய பொருளாயிருப்பவள்.

2865–01 அமூர்த்தா. உருவமற்ற பொருளாயிருப்பவள்.

2865–02 பரம்பொருள் இரண்டு வடிவங்கள் கொண்டது. ஒன்று ராமன், கிருஷ்ணன், துர்க்கை, லலிதா என உருவமுள்ளது; அறிவிற்கும் எண்ணத்திற்கும் புலனுக்கும் அகப்படுவது. புத்தி, மனம், பொறிகள் இவைகளால் கண்டு உணரக்கூடியது. அதனல் உபாஸனைக்கு உரியது. பலவாருன தோற்றம் கொண்டது. இது ‘மூர்த்தா’. மற்ருென்று உருவமற்றது, அறிவு முதலானவற்றிற்கு அப்பாற்பட்டது. புத்தி முதலியவற்ருல் கண்டுகொள்ளமுடியாதது. அதனல் உபாஸனை முதலிய கிரியைகளுக்கு இடமளிக்காதது. சிரவணம், மனனம், நிதித்யாஸனம் என்ற ஸாதனத்தால் தியான வழிக்குக் கொணர்ந்துத் தியானிக்கத் தக்கது. ஒன்றேயானது. இது அமூர்த்தா. அந்த இருவகை பிரும்மமாகவும் இருப்பவள் தேவி.

2865–03 நெருப்பு, ஜலம், பூமி என்ற உருவம் கொண்ட பூதங்களாகவும், ஆகாசம், வாயு என்ற உருவமற்ற பூதங்களாகவுமிருப் பவள். அஹங்காரத்திலிருந்து தோன்றிய தந்மாத்திர நிலையி லுள்ள உருவமற்ற பூதங்களாகவும் பஞ்சீகரணமடைந்த ஸ்தூல பூதங்களாகவும் இருப்பவள் தேவி. (பா–1708)

2865-04 தோன்றும் உலகமாகவும் தோன்ருத பரம்பொருளாக வுமிருப்பவள். ‘பாசஹஸ்தா’ ஆகவும் ‘பாசஹந்த்ரீ’ ஆகவும் வரும் தேவி, சிலசமயம் நாம் அறியும் வகையில் ‘மூர்த்தா’ ஆக வந்து உதவுவாள். சிலசமயம் எந்த உருவில் வந்தாள் என்பதே அறிய்

முடியாதபடி 'அமூர்த்தா' ஆக வந்து உதவியிருப்பாள். உதவி கிடைத்த பின்னரே யாரோ உதவியிருக்க வேண்டும் என்ற ஊகம் ஏற்பட்டு, அப்படித் தேவி தான் உதவியிருக்கக்கூடும் என்று உணரப்படுபவள் தேவி. (813-814)

**2866-01 அநித்ய-திருப்தா. நிலையற்ற பொருள்களாலான வழிபாட்டிலும் திருப்தி அடைபவள்.**

2866-02 தேவியை 'நித்யத்ருப்தா'வாக அறிவோம்.(பா-2332) அவளை இப்படித்தான் இருப்பாள், அப்படி அல்ல என்று நிர்ணயித்துக் கூற முடியாதே! அதனால் அநித்யத்ருப்தாவாகவும் இந்த நாமம் அறிமுகப்படுத்துகிறது. (நித்யத்ருப்தா பக்தநிதி: என அங்கு சொற்றொடர். மூர்த்தா அமூர்த்தா அநித்யத்ருப்தா என இங்கு சொற்றொடர்). அநித்தியமான வழிபாட்டாலும் திருப்தி அடைவாள். அவளை நித்யத்ருப்தா எனச் சொல்லவும் முடியாது. நித்யத்ருப்தாவாக இல்லாதவளும் கூட.

2866-03 'ந த்ருப்தா—அத்ருப்தா. இதி அத்ருப்தா—இத்யத்ருப்தா. ந இத்யதிருப்தா அநித்யத்ருப்தா என்றும் இதனை விளக்கலாம். இந்த வகையில் வழிபட்டால்தான் திருப்தி அடைவாள் எனச் சொல்லக்கூடுமானால் 'இதித்ருப்தா' எனலாம். இவ்வகையில் வழிபட்டால் கட்டாயம் திருப்தியடையமாட்டாள் எனச் சொல்லக்கூடுமானால் 'இத்யத்ருப்தா' எனலாம். அப்படியும் சொல்லமுடியாதே! அதனால் அவள் அநித்யத்ருப்தா. இவ்வகையில் வழிபட்டால் திருப்தியடையாதவள் என நிர்ணயித்துக் கூறமுடியாதவள். அதனால் எதனாலும் திருப்தியடையக் கூடியவள் என்று பொருள். நேரிடையாகச் சொல்ல முடியாததால் சுற்றி வளைத்துச் சொல்லப்படுகிறது. நித்தியமான அன்பும் ஞானமுமில்லாவிட்டாலும், செம்பரத்தம்பூவையும், மந்தாரைப் பூவையும் போன்ற (பா-2824, 2827) அநித்தியப்பொருள்களாலும் அவளைத் திருப்தி செய்விக்கலாம். (815)

**2867-01 முநி-மாநஸ-ஹம்ஸிகா. முனிவர்களின் மனமாகிற மானஸ ஓடையில் அன்னப்பேடாக ஸஞ்சரிப்பவள்.**

2867-02 முநி-மனத்தையும் புலன்களையும் அடக்கியவர், வெளிநாட்டமில்லாதவர், பற்றற்றவர்; மானஸம் - மனம், 'கைலாஸ மலையின் பக்கத்திலுள்ள ஓடை. முனிவரின் மனம் கலப்பற்ற தெள்ளத்தெளிந்த நீருள்ள மானஸ ஓடைபோல் கலக்கமற்றுத்

தெளிந்துள்ளது. தெளிந்த தூய நீரை மட்டுமே நாடும் அன்னப்பேடு மானஸ ஓடையைத் தன் இருப்பிடமாகக் கொண்டது. அதனை விட்டு வேறிடம் செல்லாது. தேவியும் அந்த அன்னப்பேடுபோல் முனிவரின் மனத்தை விட்டகலுவதில்லை. அந்தத் தெளிந்த மனங்களைவிடத் தூயதும் தெளிந்ததுமான இடம் அவளுக்குத் கிடைக்காது. அதனல் அங்கேயே தங்குபவள். தேவியைக் காண்பதற்காகவே அவர்கள் முனிவர்கள் ஆனர்கள். வெளி வெளிச்சத்தில் பழகிய கண்களுக்குக் குகையினுள் உள்ள பொருள் துலங்காது. வெளிவெளிச்சப் பழக்கமின்றி சிறிது அமர்ந்து உற்று நோக்கினல் குகையினுள் வெளிச்சம் தெரியும். நம்முன் தோன்றும் பேரொளியை உணர புறப்பொருள் நாட்டமும் புறவெளிச்சமும் குறையவேண்டும். அப்படிக் குறைத்துக்கொண்ட முனிவர்களின் மனத்தில் அன்னப்பேடு போல் சுற்றி வருபவள் தேவி. (816)

2868-01 ஸத்ய-வ்ரதா. ஸத்யத்தை விரதமாகக் கொண்டவள்.

2868-02 வ்ரதம் - நல்லதெனக்கண்ட லக்ஷ்யத்தை அடைவதற்குத் தேவையானதும் உடலும் மனமும் உவந்து ஏற்றுக்கொண்டதுமான கட்டுப்பாடு; எண்ணம், சொல், செயல் என்ற மூன்றும் லக்ஷ்யத்தை அடைவதற்கு உதவும்படி அமைத்துக் கொண்ட கட்டுப்பாடு. மனத் தளர்ச்சியால் இந்த கட்டுப்பாடுகள் சில சமயம் நழுவக்கூடும். அப்படி இன்றி நிலைத்த விரதம் கொண்டவள். அப்படி நிலைத்த விரதங்கள் கொண்டவரின் வடிவிலுள்ளவள். ஸத்யம்-உண்மை பேசுதல். அதனையே விரதமாகக் கொண்டவள், ஸத்தியத்தை விரதமாகக் கொண்டவர்களின் வடிவில் தோன்றுபவள்.

2868-03 அவளை வழிபட ஏற்றுக்கொண்ட விரதங்கள் அவளது அருளால் உண்மையாகப் பலிக்கும். கோபிச் சிறுமியர் கண்ணனைப் பதியாக வரித்து, அதற்கு உதவி அருளும்படி தேவியை வழிபடத் தேவியின் அருளால் விரதமிருந்தவர் அனைவரும் விரும்பியதை அடைந்தனர்.

2868-04 ஸத்யவிரதன் என்பவன் ஒன்றுமறியாப் பேதை. தனித்துக் காட்டிலிருந்தான். காட்டுப் பன்றி அவனை விரட்டியது. பயத்தால் ஐ! ஐ! எனக் கூவினன். பன்றி மறைந்தது. ஐ ஐ எனக் கூவினல் பயமில்லை என உணர்ந்தான். பிறகு அவ்விதம் சொல்வதால் நினைத்த காரியம் கைகூடுவதை உணர்ந்தான்.

ஐ என்ற தேவியின் பீஜாக்ஷரத்தை ஜபித்த புண்யத்தால் தேவியுடன் இரண்டறக்கலந்தான். அந்த ஸத்யவிரதனுக ஆனவளும் தேவியே. (817)

**2869-01 ஸத்ய-ரூபா. நிலேத்த தோற்றமுள்ளவள்.**

2869-02 தோற்றம் எனும்போதே தோன்றும் பொருள் அழியுமென்று நினைப்போம். அழிவுறக் கூடிய தோற்றம் எப்படி முக்காலும் நிலேத்திருக்கும் என ஐயம் எழும். தேவியின் தோற்றத்திலுள்ள தனிச் சிறப்பு-தேவி எப்போதும் இருப்பவள், அவள் தோன்றுவதென்பது நம் கண்களில் படுவதாகும். நம் கண்களில் படும்போதுதான் அவள் இருக்கிருள் என்பதில்லே. அதனுல் அவள் ஸத்தியமான முக்காலும் நிலேத்த தோற்றம் உள்ளவள். லலிதாவாகவும் துர்க்காவாகவும் பண்டாஸுரன் அல்லது துர்க்கமனே அழிப்பதற்கெனத் தேவி தோன்றிஞள். அந்தத் தோற்றம் அக்காலத்தில் மட்டும் இருந்ததுதானே. ராவணனே அழிக்க ராமன் தோன்றிஞர்; பின்னர் மறைந்தார்; அதனுல் அது தாற்காலிகம் தானே ! ஸத்யம் என்பது எப்படி ! என்று ஐயம் எழும். அங்ஙனம் மறைந்திருந்தால் திருவையாற்றிலிருந்த தியாகராஜருக்கும் பத்திராசலத்திலிருந்த ராமதாஸருக்கும் மதுராந்தகத்திலிருந்த ஆங்கிலேயருக்கும் ராமனின் அதே வடிவில் காட்சி கொடுத்திருக்க முடியுமா ? அதனுல் அந்தத் தோற்றங்களும் தாற்காலிகமல்ல. எக்காலத்திலும் உள்ளவையே. நம் கண்களில் படுவதுதான் தாற்காலிகம். அதனுல் ஸத்யமான வடிவங்களுள்ளவள் தேவி. (818)

**2870-01 ஸர்வ - அந்தர்யாமிணீ. எல்லோருள்ளத்திலுமுள்ள அந்தர்யாமியாயுள்ளவள்.**

2870-02 எல்லாவற்றிலும் (ஸர்வேஷாம் அந்தர்யாமிணீ) அந்தர்யாமியாயிருப்பவளும், எல்லாமாயிருந்து கொண்டு (ஸர்வா அந்தர்யாமிணீ) அந்தர்யாமியாயும் இருப்பவளும் அவளே. நம்முன் இருந்துகொண்டு மூன்று தேகங்களேயும் அததற்குகந்தபடி ஆட்டிவைத்துக்கொண்டு (அந்த: யமயதி-அந்தர்யாமிணீ) அவைகளின் பாதிப்பால் பாதிப்புருதவள். (819)

**2871-01 ஸதீ. பதிவிரதை.**

2871-02 சிவனது பதிவிரதையான பத்தினீ. ஸதீ எனத் தக்ஷனின் பெண்ணுக இருந்தபோது தேவியின் நாமம். ஸதீ-முக்காலத்திலும் இருப்பவள், ஸத் எனும் பிரும்மஸ்வரூபமாயிருப்பவள். (820)

# அதிகாரம் 29

# தேவியின் உலகராஜ்ய நிர்வாஹம்

155 ब्रह्माणी ब्रह्म जननी बहुरूपा बुधार्चिता । 825
प्रसवित्री प्रचण्डाऽऽज्ञा प्रतिष्ठा प्रकटाकृतिः ॥ 830

ப்ரும்ஹாணீ ப்ரம்ஹ ஜநநீ பஹுரூபா புதார்ச்சிதா ।
ப்ரஸவித்ரீ ப்ரசண்டா(ஆ)ஜ்ஞா ப்ரதிஷ்ட்டா ப்ரகடாக்ருதி: ॥

**2901-01** ப்ரம்ஹாணீ. பிரும்ம சக்தி.

**2901-02** அணீ, ஆணீ-கூரான ஆணி முனை. ஆனந்தமய கோசம் என்பது காரண சரீரம், மாயா தத்துவம். அது ஆத்மாவை நன்கு அறிய முடியாதபடி வாளை மறைக்கும் உறைபோல் மறைப்பதால் கோசமாகிறது. ஆத்மாவின் இயற்கையான ஆனந்தம் இதில் பிரதிபலித்து ஆனந்தம் உணரப்படுவதால், இது ஆனந்தமயகோசம். இதனை ஆராயும்போது இதற்கு வால்போல் இதனைத் தொடரும் சுத்தப் பிரும்மத்தைப்பற்றியும் சிறிது அறிய நேரிடுவதால் அதனை புச்சப்பிரும்மம் (வால் போல் பின்தொடரும் பிரும்மம்) என்பர். கூரான முனையைப்போல் ஸூக்ஷ்மமாயிருப்பது முதலில் தென்பட்டதால் பிரும்மத்தின் அணீ (ஆணி) என இதனைக் கூறுவர். அதன் வடிவில் இருப்பவள்.

**2901-03** பிரும்மத்தை அதன் இச்சா சக்தி வடிவிலிருந்து விளக்குவதாலும், மாயையால் வடிவெடுக்கச் செய்வதாலும் ப்ரம்ஹாணீ (ப்ரம்ஹ ஆநயதி). பிரம்மாவை அவரது ஸிருஷ்டி சக்தியாக நின்று செயலாற்றச் செய்வதால் ப்ரம்ஹாணீ (ப்ரம்ஹாணம் ஆநயதி) ஸரஸ்வதி தேவி. (பா-2578-02) (821)

**2902-01** ப்ரம்ஹ. பிரும்மம்.

**2902-02** தேக பந்தமற்றவர்களால் நிஜஸ்வரூபமெனக் கண்டு கொள்ளப்பட்டதும், வேற்றுமையற்றதும் ஸத் சித் ஆனந்தம் என்ற மூன்ருகத் தியானத்தால் உருவகப்படுத்தக்கூடியதும் தன்னுணர்வாக மாத்திரம் அனுபவிக்கக் கூடியதுமான பரம்பொருள். பரம்பொருள்வேறு, அதன் சக்திவேறு என்ற சிந்தனைக்கிடமில்லை. (822)

**2903-01** ஜநநீ. உலகைத் தோற்றுவித்தவள்.

**2903-02** தாய்க்கு 5 பெயர்கள் உண்டு. ஜநநீ-தகப்பனுல் தன் சரீரத்தில் சேர்க்கப்பட்டதற்குக் கருவாக உருக்கொடுப்பவள்;

மாதா-கருவைத் தன்னுள் அடக்கி வைத்து அடைகாப்பவள். ப்ரஸவித்ரீ-ஸவித்ரீ-கருவாகத் தாங்கியதை வெளியில் வளர்க்கத் தக்க தருணம் வந்ததும் வெளியிடுபவள். தாத்ரீ-சிசுவைப் போஷித்து வளர்ப்பவள். அம்பா-ஆபத்து வேளையில் தானே வந்து காப்பவள். தேவி இந்த ஐந்து செயல்களையும் செய்வதால் ஐந்து பெயர்களையும் அடைகிருள். (நா-1, 457, 826, 337, 985, 1000). பிரும்மத்திடம் ஏற்பட்ட ஸங்கல்பமாக இச்சா சக்தியாக விளங்கின தேவி மூலப் பிரகிருதியாக ஆகி உலகத்தின் கருவைத் தன்னுள் கொண்டு, அவ்யக்தம் மஹத் என்ற நிலையில் அடைகாத்து அஹங்கார நிலையில் அதனைப் பெற்று வெளியில் கொணர்ந்து பிரும்ம-விஷ்ணு-ருத்திரர்கள் வடிவில் அதன் வளர்ச்சியில் பங்குபெறுகிருள். (பா-1708). இந்த நிகழ்ச்சி நிரலில் ஜநநீ எனும் நிலை முதலில் தோன்றுகிறது. உலகின் தோற்றத்திற்கான கருவை உருவாக்கியவள். (823)

2904-01 பஹு-ரூபா. பல உருவங்களுள்ளவள்.

2904-02 எல்லோரையும் படைப்பதற்காகப் பற்பல தாயுருவங்களைப் பெற்றவள். அவ்யக்தம், மஹத், அஹங்காரம், தன்மாத்திரம் முதலிய பல உருவங்களையுடையவள் (பா-1708). ‘பஹுஸ்யாம், ப்ரஜாயேய’ ‘பலவாக ஆவேன், பெருகுவேன்’ (தைத்திரீய உபநிஷத்) என்ற ஸங்கல்பப்படி தேவர், மனிதர், கால்நடை, புல், பூண்டு, மரம் முதலிய பலவாக ஆனவள். லலிதா, துர்க்கா முதலிய பல தோற்றங்கள் உள்ளவள். (824)

2905-01 புத-அர்ச்சிதா. அறிவாளிகளால் வழிபடப் பெற்றவள்.

2905-02 ஆத்ம ஞானம் பெற்றவர்களும், ஆத்ம ஞானம் பெற விரும்பி வேதாந்த நூல்களின் பரிசீலனையில் ஈடுபட்டவர்களும் அறிவாளிகள். அவர்கள் தேவியின் அருளால் உலகம் தோன்றும் அதிசயத்தையும், அவளது பல தோற்றங்களையும் கண்டு வியந்து மேலும் மேலும் அவளைப்பற்றி அறிய விழைகிருர்கள். (ஜிஜ்ஞாஸு) அவர்களாலும் புதனென்ற கிரகத்தாலும் வணங்கப்பட்டவள். (825)

2906-01 ப்ர-ஸவித்ரீ. சிறப்பு மிக்க தாய்.

2906-02 ஆகாசம், வாயு முதலியவற்ருல் விரிந்த வடிவமுள்ள (பிரபஞ்சம்) இந்த உலகைப் பெற்று வெளிக் கொணர்ந்தவள். (பா-2903-02). (826)

**2907-01** ப்ர-சண்டா. அதிகக் கோபம் உள்ளவள்.

**2907-02** தன்னிடமிருந்து தோன்றிய பல வடிவங்களுள்ள உலகம் ஒரே சீராக இயங்குவதற்காகக் கடுமையான நடவடிக்கை களில் ஈடுபடுகிருள் தேவி. தம்மிடம் யாவரும் பயப்படும்படி நடந்து கொள்கிருள். "பீஷா அஸ்மாத் வாத: பவதே! பீஷா உதேதி ஸூர்ய:! பீஷா அஸ்மாத் அக்நிச்ச இந்த்ரச்ச! ம்ருத்யுர் தாவதி பஞ்சம:!" "பரம்பொருளிடமுள்ள பயத்தால் வாயு ஓடுகிருன்; ஸூரியன் உதிக்கிருன். அக்கினியும் இந்திரனும் தம் தம் பணி களில் ஈடுபடுகிருர்கள். யமனும் பயப்படுகிருன்." (தைத்திரீய உபநிஷத்) என்றவாறு அதிகாரச் சிறப்புபெற்ற தேவர்களே பயந்து தத்தம் பணிகளில் ஈடுபடுகிருர்கள். அதிகாரத்தின் தலைமை பீடத் தில் இருப்பவர்கள் நடுங்குவதைக்கண்டு மற்றவர் தாமே அடங்கி நடப்பர். அப்படிப் பிறர் நடுங்கும்படி கோபத்தைக் காட்டுபவள் தேவி. (827)

**2908-01** ஆஜ்ஞா. அரச உத்தரவு வடிவினள்.

**2908-02** செய்யவேண்டியவைகளையும் தவிர்க்கவேண்டியவை களையும் பற்றிய கடும் உத்தரவுகளாக வரும் வேத வாக்கியங்களாக இருப்பவள். கடுமையான நடவடிக்கைகளின் பலத்தில் நடை முறைகளைச் சீராக வகுத்து அதற்கான நியமங்களைத் தனது ஆஜ்ஞையாகப் பிறப்பித்தவள் தேவி. ஆஜ்ஞா எனும் சக்கிர வடிவில் உள்ளவள். (828)

**2909-01** ப்ரதி-ஷ்ட்டா. நிலைத்த நிர்வாஹ சக்தியாயிருப்பவள்.

**2909-02** கடும் நடவடிக்கைகளைக் கொண்டும் நியமங்களைக் கொண்டும் நடக்கும் நிர்வாகத்தில் எதிர்ப்பு சக்திகளால் நிலைகுலை யாதவாறு இருக்க அழுத்தமான அடிப்படை பலம் தேவை. அந்த ஆதாரசக்தியாக தேவி நின்று நிர்வகிக்கிருள்.

2909-03 பஞ்சபூதங்களின் கலைகளான நிவ்ருத்தி, பிரதிஷ்டா, வித்யா, சாந்தி, சாநத்யதீதா என்ற ஐந்தில் பிரதிஷ்டா எனும் ஜலதத்துவத்தின் கலையாயிருப்பவள். (புறப்பொருள் நாட்டத்தி லிருந்தும் திரும்புதல் நிவ்ருத்தி—பிருதிவீதத்துவத்தின் கலை. பரம்பொருளிடம் கொண்ட நாட்டத்தால் அதனிடம் நிலைத்திருப்பது பிரதிஷ்ட்டா-ஜலதத்துவத்தின் கலை. பரதத்துவத்தைப்பற்றிப் பகுத் தறிதல் வித்யா-அக்னிதத்துவத்தின் கலை. அறிவால் மனம் அமைதி

யுற்றுப் பரம்பொருளிடம் லயமடைதல் சாந்தி-வாயுவின் கலே. பிரும்மானந்த அனுபவம் சாந்த்யதீதா—ஆகாசத்தின் கலே என ஐந்து கலேகள் சைவ நூல்களில் விளக்கப்பெறுகின்றன.) (829)

**2910-01** ப்ரகட - ஆக்ருதி:. வெளிப்படையாக எங்கும் தோன்றுபவள்.

2910-02 அரசன் எங்கோ இருக்கிறன் என்ற எண்ணம் நிர்வாகத்தில் தளர்ச்சியை உண்டாக்கும். அதனுல் எல்லோரும் எங்கும் காணும்படியாக (ப்ரகடா-ஸர்வை: அனுபூயமாநா) பல வடிவங்களே வெளிப்படையாகக் கொள்பவள் தேவி. அங்கிங்கெனுதபடி எங்கும் நிரம்பி ஒன்றை மற்றென்ருக நின்று கட்டுப்படுத்துபவள். பிரகடா எனும் யோகினிகளின் வடிவினள். (0911-12-01) (830)

156 प्राणेश्वरी प्राणदात्री पञ्चाशत्पीठरूपिणी । 833
विशृङ्खला विविक्तस्था वीरमाता वियत्प्रसूः ॥ 837

ப்ராணேச்வரீ ப்ராணதாத்ரீ பஞ்சாசத்பீடரூபிணீ ।
விச்ருங்கலா விவிக்தஸ்த்தா வீரமாதா வியத்ப்ரஸூ: ॥

**2911-01** ப்ராண-ஈச்வரீ. பிராணனுக்கு ஈச்வரீ.

2911-02 ப்ரகர்ஷேண அண:- சிறப்புள்ள இயக்கம். உலகத்தின் சிறப்பான இயக்கத்தை முன் நின்று தன்னிஷ்டப்படி நடத்துபவள். ஸூக்ஷ்மசரீர ஸமஷ்டியில் சேர்ந்த பிராணசக்தியைக் கட்டுப்படுத்துபவள். கர்ம இந்திரியங்களின் ஸமஷ்டி சக்தி பிராணன். (பா. 2834, 2835) அதனே நிர்வகிப்பவள். ப்ராண:- ப்ரக்ருஷ்ட: அண:, உயர்ந்த சொல்வடிவமான வேதம். அதன் தலேவி. (831)

**2912-01** ப்ராண-தாத்ரீ. பிராண சக்தியை அளிப்பவள்.

**2912-02** உலகிற்கு உயிர் ஊட்டி வாழ்வளிப்பவள். (832)

**2913-01** பஞ்சாசத் - பீட - ரூபிணீ. ஐம்பது பீடங்களாக இருப்பவள்.

2913-02 பஞ்சாசத்-ஐம்பது என்பது ஏறக்குறைய ஐம்பது எனப் பொருள்படும். 51 பீடங்கள் கூறப்படுவதால் பஞ்சாசத் என்ற சொல்லிற்கு லக்ஷணேயாக 51 என்று இங்கு பொருள். ஷோடா நியாஸங்களில் ஐந்து நியாஸங்கள் முன்பு (பா. 0214-05, 2201-2265) விளக்கப்பட்டுள்ளன. அதில் பீட நியாஸங்கள் இங்கு விளக்கப்படுகின்றன. 'அ'-முதல் 'க்ஷ' வரை 51 அக்ஷரங்கள்—

மாத்ருகைகள் எனப்படுபவை. தேவியின் சக்தி பீடங்கள் 51. அவைகள் பாரத தேசத்தின் பல்வேறு பகுதிகளில் உள்ளவை. சக்தி பீடங்கள்-சக்தி அமைந்த இடங்கள். சக்தி அமைந்த அந்த இடங்களாக நமது உடல் ஆகவேண்டுமென அந்த சக்தி பீடங்களில் உறையும் தேவியைத் தியானித்து உடற்பகுதியைத் தொட்டுத் தேவதா சக்தி அங்கு உட்புகுந்துவிட்டதாகப் பாவனை செய்கிறோம். இது பீட நியாஸம்.

2913-03 சக்தி பீடங்கள்-தக்ஷனின் பெண்ணாக ஸதீ என்ற திருநாமத்துடன் தேவி தோன்றினாள்; பரமசிவனை மணந்தாள். பரமசிவனிடம் முன்வினைப் பயனாகத் துவேஷம் கொண்ட தக்ஷன் சிவனுக்கு வேள்விகளில் பங்கில்லாமல் செய்ததால், சிவத் துவேஷியானவனுக்குத் தான் மகளாக இருக்க விரும்பாமல் யோகாக்கினியால் தேவி தன் உடலை எரித்துக் கொண்டாள். தனது கோபத்திலிருந்தும் வீரபத்திரனைத் தோற்றுவித்துத் தக்ஷயாகத்தை அழித்த சிவன் எரிந்துகொண்டிருக்கும் ஸதியின் உடலைத் தன் தோளில் சுமந்து பித்தனாகச் சென்றுகொண்டிருந்தார். விஷ்ணு தனது அம்புகளால் ஸதியின் உடலைத் துண்டு துண்டுகளாக்கி வீழ்த்தினார். 'சித்கலா' ஆன தேவியின் உடற்பகுதிகள் வீழ்ந்த இடங்கள் சக்தி பீடங்களாயின. அவை 51. அந்த பீடங்களே தேவியின் வடிவங்களாகும்.

2913-04 இந்த சக்தி பீடங்களையும் மாத்ருகாக்ஷரங்களையும் இணைத்து நியாஸம் செய்வது வழக்கம். பீடங்கள், நியாஸத்தில் தொடவேண்டிய உடற்பகுதிகள் என்ற வரிசையில் இங்கு தரப்பட்டுள்ளன.

1. காமரூபம் (தலை)
2. வாராணஸீ (முகம்)
3. நேபாளம் (வலது கண்)
4. பௌண்டிரவர்த்தனம் (இடது கண்)
5. புரஸ்திர காச்மீரம் (வலது காது)
6. கான்யகுப்ஜம் (இடது காது)
7. பூர்ணசைலம் (வலது மூக்குத்துளை)
8. அர்புதசைலம் (இடது மூக்குத்துளை)
9. ஆம்ராதகேச்வரம் (வலது மென்னி)
10. ஏகாம்ரம் (இடது மென்னி)
11. த்ரிஸ்ரோதஸ் (மேலுதடு)
12. காமகோடி (கீழ் உதடு)

13. கைலாஸம் (மேல் பல்வரிசை)
14. ப்ருகுநகரம் (கீழ் பல்வரிசை)
15. கேதாரம் (நாக்கின் நுனி)
16. சந்திரபுஷ்கரிணீ (முன் கழுத்து)
17. ஸ்ரீபுரம் (வலது புஜம்)
18. ஓங்காரம் (வலது முழங்கை)
19. ஜாலந்தரம் (வலது மணிக்கட்டு)
20. மாலவம் (வலது கை விரல் அடிப்பகுதி)
21. குலாந்தகம் (வலது கை விரல் நுனிப் பகுதி)
22. தேவீகோடம் (இடது புஜம்)
23. கோகர்ணம் (இடது முழங்கை)
24. மாருதேச்வரம் (இடது மணிக்கட்டு)
25. அட்டஹாஸம் (இடது கை விரல் அடிப்பகுதி)
26. விரஜா (இடது கை விரல் நுனிப்பகுதி)
27. ராஜகேஹம் (வலது தொடை)
28. மஹாபதம் (வலது முழங்கால்)
29. கோலாபுரம் (வலது கணுக்கால்)
30. ஏலாபுரம் (வலது கால் விரல் அடிப்பகுதி)
31. காலேச்வரம் (வலது கால் விரல் நுனி)
32. ஜயந்திகா (இடது தொடை)
33. உஜ்ஜயிநீ (இடது முழங்கால்)
34. சித்ரா (இடது கணுக்கால்)
35. க்ஷீரிகா (இடது கால் விரல் அடிப்பகுதி)
36. ஹஸ்திநாபுரம் (இடது கால் விரல் நுனி)
37. உட்டீசம் (வலது விலா)
38. ப்ரயாகம் (இடது விலா)
39. ஷஷ்டீசம் (முதுகு)
40. மாயாபுரீ (தொப்புள்)
41. ஜலேசம் (வயிறு)
42. மலயம் (இதயம்)
43. ஸ்ரீசைலம் (வலது தோள்)
44. மேரு (கழுத்தின் பின்புறம்)

45. கிரிவரம் (இடது தோள்)
46. மஹேந்த்ரம் (இதயம் முதல் வலது கை விரல் நுனி வரை)
47. வாமநம் (இதயம் முதல் இடது கை விரல் வரை)
48. ஹிரண்யபுரம் (இதயம் முதல் வலது கால் விரல் வரை)
49. மஹாலக்ஷ்மீபுரம் (இதயம் முதல் இடது கால் விரல் வரை)
50. ஒட்டியாணம் (இதயம் முதல் குறி வரை)
51. சாயாச்சத்திரம் (இதயம் முதல் தலைவரை)

இந்த 51 பீடங்களாக இருப்பவள் தேவி. (இவைகளின் விளக்கத்தை அனுபந்தத்தில் காண்க.) (833)

**2914-01 விச்ருங்கலா. தளைகளற்றவள்.**

2914-02 கட்டுவதற்கான உலோகத்தாலான சங்கிலி-ச்ருங்கலா, அதனால் ஏற்பட்ட தளைகள் இஷ்டப்படி செயலாற்றுவதைத் தடை செய்யும். வினைகள் தளையாக நின்று மனிதனைத் தடை செய்கின்றன. பாபமாயின் இரும்புச் சங்கிலிபோல், புண்ணியமாயின் தங்கச் சங்கிலி போல்; ஆனால் பிணைப்பு இரண்டிலும் சமமே. வினையாலான தளைகள் தேவிக்கு இல்லை. தேவியின் அடியார்களிடமும் அத்தளைகள் பயனற்றவை.

2914-03 பெண்கள் இடுப்பில் ஆடை தரித்து நிற்பதற்காகச் சங்கிலி வடிவில் மேகலையை அணிவர். திரஸ்கரிணி என்ற தேவியின் வடிவம் ஆடையற்றது. அந்த வடிவில் ஆடையில்லாததால் அதற்கான சங்கிலிமேகலையையும் அவள் அணியவில்லை. திரஸ்கரிணீ-மறைக்கும் சக்தி. அதற்கு ஒரு மறைப்பு எதற்கு? மறைப்பற்றவளாதலால் மறைப்பைப் பிடித்துக்கொள்ளும் சங்கிலியுமில்லை. (834)

**2915-01 விவிக்த-ஸ்தா. தனிமையில் இருப்பவள்.**

2915-02 விவிக்தம்-பகுத்தறிந்து தேர்ந்தெடுத்த இடம், தூய இடம், தனிமையுள்ள இடம். புறச் சூழ்நிலையும் தூயதாய், அமைதியும் தனிமையுமுள்ள இடம் விவிக்தம்-தெய்விக சிந்தனைக்கேற்றதாகத் தேர்ந்தெடுக்கப்படும். தனிமையற்றிருந்தும் தூய மனமுள்ளவர்-ஒரே சிந்தனையுள்ளவர் நிரம்பிய இடம் விவிக்தமானதே. வேறு சிந்தனைகளால் மனக்கலக்கம் ஏற்படாதாகையால் அதுவும் ஒரு வகையில் தனிமையுள்ள இடமே. மனித ஸஞ்சாரமற்ற தனிமையுள்ள இடமாயினும் புறத்தூய்மைக்கும் மனத்தூய்மைக்கும்

இடமல்லவெனில் அது விவிக்தமாகாது. விவிக்தமான இடத்தில்–தனிமையும் தூய்மையும் தெய்விகமும் நிரம்பிய இடத்தில் இருப்பவள்.

2915-03 விவிக்தர்கள் – பகுத்தறிவுள்ளவர்கள். ஆத்மா அனாத்மா என்ற இரண்டையும் விவேகத்தால் பகுத்தறிந்தவர்கள். ஆத்ம சிந்தனையுள்ளவர்கள். அவர்களிடம் தேவி வசிப்பாள். (835)

**2916-01** வீர-மாதா. வீரர்களின் தாய்.

2916-02 வீரர்கள், தான் தனது என்ற நினைவின்றிச் செயல்படுபவர்கள். (பா. 2828-02). அவர்களைத் தன் வயிற்றில் கருவைக் காக்கும் தாய் போல் காப்பாற்றுபவள். (பா. 0601, 2177, 2903). வீரபாஹு முதலான நவவீரர்களை முருகனுக்குத் தம்பிகளாகத் தனது குமாரர்களாக ஏற்ற தாய். (836)

**2917-01** வியத்-ப்ரஸூ:. ஆகாசத்தைப் பெற்றெடுத்தவள்.

2917-02 ப்ரஸூ:–ப்ரஸவித்ரீ-பெற்று வெளிக்கொணரும் தாய், (பா. 2903-02) வியத் – ஆகாசம். நாம் நெருங்க நெருங்க நம்மைவிட்டு விலகிச் சென்றுகொண்டிருப்பதால் ஆகாசம் வியத்-(வ்யேதி இதி) ஆகிறது. உலகப் படைப்பு தொடங்குகையில் முதலில் தோன்றியது ஆகாசதத்துவம். சிசுவைப் பெற்று வெளிக்கொணரும் தாய்போல் தன்னுள் உருவற்றிருந்த உலகிற்கு உருவமும் அவயவப்பிரிவும் தந்து உரிய வளர்ச்சி பெற்றுத் தனித்திருக்கும் தகுதி பெற்றதும் ஆகாயமாகவும் (மற்ற ஏனைய பூத தத்துவங்களாகவும்) வெளிப்படுத்தியவள். (பா. 1708) (837)

**157 मुकुन्दा मुक्तिनिलया मूलविग्रहरूपिणी । 840**
**भावज्ञा भवरोगघ्नी भवचक्रप्रवर्तिनी ॥ 843**

முகுந்தா முக்திநிலயா மூலவிக்ரஹரூபிணீ ।
பாவஜ்ஞா பவரோகக்ந்ீ பவசக்ரப்ரவர்த்திநீ ॥

**2918-01** முகுந்தா-முக்தி அளிப்பவள்.

2918-02 முகு-முக்தி. அதனைத் தருபவர் முகுந்தன்–கோவிந்தன். அவனது வடிவில் இருப்பவள். தானே முக்தியைத் தருபவள். " தேவி ஒரு சமயம் ஆண் வடிவம் கொள்ள நினைத்தாள். அவள் எடுத்த வடிவம் கண்ணன். புல்லாங்குழலிலிருந்து வெளியான ஒலியால் உலகை வசப்படுத்தினாள். தன் சக்திகளைக் கோபிகளாக்கி அவர்கள் சூழ அழகாக விளங்கினாள் " எனத் தந்திரராஜம் கூறும். (838)

2919-01 முக்தி-நிலயா. மோக்ஷத்திற்கு இருப்பிடம்.

2919-02 மோக்ஷம் ஐந்து விதம். ஸகுண உபாஸனேயால் கிடைப்பது நான்கு விதம், ஸாலோக்யம், ஸாமீப்யம், ஸாரூப்யம், ஸாயுஜ்யம். நிர்குண ஞானத்தால் அடைவது நிர்வாணம். (பா. 2110-02, 2653-02) அந்த முக்திக்கு நிலயம்-அவளிடம் இருப்பதைப் பிறர் அறியாதபடி சேமித்து வைத்துள்ள இடம்.

2919-03 ஸாலோக்கியம் ஸாமீப்பியம் ஸாரூப்யம் ஸாயுஜ்யம் எனும் முக்திகள் அபர முக்திகள் எனப்படும். இங்கு மூன்று தேகங்களிலிருந்தும் விடுதலே என்ற அளவில் முக்தி கிட்டுகிறது. ஆனுல் ஸகுண மூர்த்தி என்ற உபாதியுடன் கூடிய பிரும்மத்துடன் ஐக்கியம் ஏற்பட்டுள்ளது. நிர்வாணம் எனும் ஐந்தாவது முக்தி பரமுக்தி. உபாதியற்ற குணமற்ற விசேஷங்களற்ற பிரும்மத்துடன் ஐக்கியம் என்பது அதில் விசேஷம். இவைகளைத் தகுதிக்கேற்ப வழங்குவதற்கெனத் தன்னிடம் வைத்திருப்பவள் தேவி. (839)

2920-01 முல-விக்ரஹ-ரூபிணீ. முலவிக்கிரக வடிவினள்.

2920-02 தேவி பல தோற்றங்களில் காணப்பெறுகிருள். துர்க்கா, ஸரஸ்வதீ, லக்ஷ்மீ, பாலா, அன்னபூர்ணு முதலிய தேவியின் பல தோற்றங்களுக்கும் மூலம் ராஜராஜேசுவரியான ஸ்ரீ லலிதாதேவி. அந்தத் தோற்றத்திற்கும் மூலம் பரப்பிரும்மம். அந்த மூலவடிவையும், தன்னே எளிதாக அறியும்படி அந்த மூலம் எடுத்துக்கொண்ட பல விக்ரகங்களேயும் - தோற்றங்களேயும் தன் வடிவங்களாகக் கொண்டவள் தேவி. மூலமாயுள்ள பரம்பொருளாகிய தன்னே எளிதாக அறியும்படி எடுத்துக்கொண்ட நான்கு கைகள் கொண்ட திருவுருவமாக விக்ரஹமாக இருப்பவள் தேவி. (நா. 4-11) (840)

2921-01 பாவ-ஜ்ஞா. கருத்தை அறிபவள்.

2921-02 பாவம் எனும் சொல் உள்ளுணர்வு, எண்ணம், இயற்கையாக அமைந்த ஸ்வபாவம், செயல், பிறப்பு (அதிலிருந்து தொடங்கும் தோற்றம், வளர்ச்சி, மாறுபாடு, தேய்வு, அழிவு என்ற நிலேகள்) பிறவியால் ஏற்படும் இன்ப துன்பங்கள் எனப் பல பொருள்கள் கொண்டது. அத்தகைய பாவங்கள் அனேத்தையும் தேவி அறிவாள். (அதற்கேற்ப நடப்பாள்) பவன்-சிவன்; அவரது அடியார்கள் பாவர்கள். அவர்களேத் தன்னேச் சேர்ந்தவர்கள் என அவள் நன்கு அறிவாள். (841)

**2922-01** பவ-ரோக-க்க்நீ. பிறவிப் பிணியை அழிப்பவள்.

**2922-02** ரோகம் – பிணி, வேதனை தருவது – அமைதியளிக்காதது. பிறவி ஒரு பிணி. அது வளர்ச்சி தேய்வு அழிவு என்று மாறிமாறி விரும்புபவைகளுடன் விரும்பத்தகாத நிலைகளையும் வினைகளின் பயனைச் சேர்த்துத் தருவதால் வேதனை தருகிறது. தேவி பிறவியால் ஏற்படும் வேதனையை அழிப்பவள். அடுத்த பிறவி உயர்ந்ததாக அமையவோ, பிறப்பற்றுப் போகவோ இப்பிறவி காரணமாக அமைந்தால் அப்போது அது வேதனை தருவதாக ஆகாது. வேதனை தராதபடி பிறவியை அமைத்து முன்வினையால் விளைந்த வேதனையையும் அகற்றுபவள். (842)

**2923-01** பவ - சக்ர - ப்ரவர்த்திநீ. ஸம்ஸாரமெனும் சக்கிரத்தைச் சுழற்றுபவள்.

**2923-02** உலகத்தில் தோன்றிய பொருளனைத்தும் ஒன்றுக்கொன்று பொருந்துபவையாக ஒரே சீருடன் இயங்குகின்றன. ஒருவரது வாழ்வின் கோணங்கள் மற்றொருவரது வாழ்வின் கோணத்துடன் பொருந்திச் சக்கிரம்போல் இயங்குகின்றன. பொதுவாக, இது அதனை இயக்குவது போலவும் அது இதனை இயக்குவது போலவும் தோன்றினாலும் இந்த இயக்கங்களுக்குக் காரணமாக இவைகளின் சக்திக்கு அப்பாற்பட்டதும் இவைகளை மீறிய சக்தியுள்ளதுமான ஒன்று இருப்பதை ஊகிக்க முடிகிறது. அப்படி ஊகிக்கப்படுபவள் தேவி. சக்கிரச் சுழலைச் சீராக நடத்துபவள் தேவி.

**2923-03** ஆஜ்ஞா என்ற நெற்றியில் அமைந்த சக்கிரம் சிவனைச் சேர்ந்தது. பவன் - சிவன். அவரது சக்கிரமான ஆஜ்ஞையை இயக்குபவள் குண்டலினீ வடிவில் உள்ள தேவி. (பா. 1201-09) ஸ்ரீ சக்கிரத்தில் கிழக்கு நோக்கி அமைந்த முக்கோணங்கள் நான்கும் சிவசக்கிரங்கள். மேல் நோக்கிய முக்கோணங்கள் சக்தி சக்கிரங்கள். (பா. 0911-15) பிந்து, எட்டு தளம், பதினாறு தளம், விருத்தம் மூன்று, பூபுரம் என்ற ஐந்தும் சிவசக்கிரங்கள். திரிகோணம், எட்டு கோணம், பத்து கோணங்கள இரண்டு, பதினான்கு கோணம் என்ற ஐந்தும் சக்தி சக்கிரங்கள். சிவசக்கிரங்களை இயக்கும் சக்தி சக்கிரங்களாக இருப்பவள் தேவி.

**2923-04** மனம் சக்கிரம் போன்று எப்போதும் சுழன்றுகொண்டிருப்பதால் சக்கிரம். பவனது (சிவனது) மனமாகிய சக்கிரத்தை இயக்குபவள் தேவி. (''சலஸ்வரூபம் அத்யந்தம் ஜவேந அந்தரிதாநலம் I சக்ரஸ்வரூபம் ச மநோ தத்தே விஷ்ணு: கரே ஸ்திதம்''

''எப்போதும் சுழன்றுகொண்டேயிருப்பதும், வேகத்தால் ஏற்பட்ட நெருப்பை இடைவெளிகளில் கொண்டதும் சக்கிரவடிவில் உள்ளதுமான மனத்தை விஷ்ணு கையில் ஏந்தியிருக்கிருர்.'' விஷ்ணு புராணம்.) (843)

158 छन्दःसारा शास्त्रसारा मन्त्रसारा तलोदरी। 847
उदारकीर्तिरुद्दामवैभवा वर्णरूपिणी॥ 850

சந்தஸ்ஸாரா சாஸ்த்ரஸாரா மந்த்ரஸாரா தலோதரீ I
உதாரகீர்த்திருத்தாமவைபவா வர்ணருபிணீ II

2924-01 சந்தஸ்-ஸாரா. வேதத்தின் சாரமாக இருப்பவள்.

2924-02 மூன்று வேதங்களின் சாரமாக அமைந்தது காயத்திரீ. காயத்திரியின் பொருளாகச் சாரமாக அமைந்தது பஞ்சதசாக்ஷரீ என்ற மந்திரம். காயத்திரி மந்திரமாகவும் பஞ்சதசாக்ஷரீ மந்திரமாகவும் இருப்பவள். வேதத்தின் ஸாரம்-முக்கியப்பகுதி உபநிடதம். அதன் வடிவிலுள்ளவள். வேதத்தின் சாரமாக அதனூடே பரவி நிற்பவள். சந்தஸ் என்பது செய்யுள் இலக்கணம். விருத்த அமைப்பைப்பற்றி அறிவிக்கும் நூல். அதனல் அறியப்படும் விருத்தங்களில் சாரம்-முக்கியமானது காயத்திரீ என்ற இருபத்திநான்கெழுத்துக்கள் கொண்ட விருத்தம். அந்த விருத்த வடிவினள் தேவி.

2924-03 சந்தஸ்-விருப்பம். தேவி உபாசனையில் ஈடுபட்டுத் தன் மனத்தைத் தேவியின் மனமாகவே ஆக்கிக்கொண்ட பெரியோர்கள் சிலர் உண்டு, துர்வாஸர் போன்றவர்கள். அவர்களது நடவடிக்கைகளைக் காணும்போது உலகியல்புப்படி தர்மம் என்றும் அதர்மம் என்றும் கொண்டவைகளை அவர்கள் மதிக்காமலிருப்பதாகத்தோன்றும். அவர்கள் மனம் எதில் ஈடுபடுகிறதோ அது தர்மம்; எதில் ஈடுபடவில்லையோ அது அதர்மம். அவர்கள் மனம் போன போக்குபடி நடப்பவர்களெனத் தோன்றும். அவர்களது உள்ளத்தை இயக்கிவைக்கும் தேவியின் விருப்பப்படி நடப்பவர்களானதால் அவர்களது செயல்கள் தர்மத்திற்கு உட்பட்டவையே. அத்தகைய சித்தப்போக்கு சிவன் போக்கு என வாழும் சிறப்புள்ள பெரியோர்களின் விருப்பத்தை ஸாரமாக – நியாயத்திற்கு உட்பட்டதாக ஆக்குபவள் தேவி.

2924-04 சந்தஸ் – இச்சாசக்தி, அதனைத் தன் பலமாகக் கொண்டவள். (844)

**2925–01** சாஸ்த்ர - ஸாரா. சாஸ்திரங்களைப் பலமாகக் கொண்டவள்.

2925-02 'செய்' 'செய்யாதே' எனக் கூறி நடைமுறையைக் கட்டுப்படுத்துபவை சாஸ்திரங்கள், வேதமும் வேதவழியில் விளக்கம் தரும் தர்சனங்களும் சாஸ்திரங்கள். அவை தெய்விகமான வாழ்வு அமைவதற்காகவே இந்தக் கட்டுப்பாடுகளைப் போதிக்கின்றன. சாஸ்திரங்களின் ஸாரமான தெய்விக வாழ்விற்கான உபதேசங்களாயிருப்பவள் தேவி. சாஸ்திரங்களின் ஸாரமாக, அவைகளினுள், பல தத்துவங்களின் வடிவில் பரவி மறைந்திருப்பவள். (845)

**2926–01** மந்த்ர - ஸாரா. மந்திரங்களைப் பலமாகக் கொண்டவள்.

2926-02 மந்த்ரம் – மந்திரங்கள், மந்திரங்களைப் போதிக்கும் நூல்கள், அரசியல் யோசனைகள். மந்திரங்களுள் சக்தியாக இருப்பவள், மந்திரங்களைத் தன் சக்தி வடிவாகக் கொண்டவள், மந்திர நூல்களின் ஸாரமான ஸ்ரீவித்யையாக இருப்பவள், ஆள்பவர்களின் ரகசியத் திட்டங்களைப் பலமாகக் கொண்ட அரசி. (846)

**2927–01** தல-உதரீ. உள்ளடங்கிய வயிறு உள்ளவள்.

2927–02 கைத்தலம் போல் நடுவில் உள்ளடங்கிய-மேடிடாத வயிறு உள்ளவள். (847)

**2928–01** உதார–கீர்த்தி:. பெரும் புகழுள்ளவள்.

2928-02 சிறுமை தரும் பொருளுடன் தொடர்பைக் கொள்ளாமல், பெரும்பொருளுடன் தொடர்பு கொள்பவன் பெரியவன்– உதாரன். அழியும் செல்வத்தில் நாட்டமின்றி அதனை வாரி வழங்கும் வள்ளலும் உதாரன். அவர்களது புகழ்வடிவில் உள்ளவள். பெருமைமிக்க கீர்த்தி உள்ளவள். (உத்–ஆ–அர) எளிதில் பரவும் சிறந்த புகழைத் தருபவள்.

2928-03 "நோய் எதிரிகள் முதலியவைகளால் துன்பமடைந்தவன், துன்பம் தீர ஆண்டவனை வேண்டுகிறான். அவ்விதமே பேரறிவு பெற விரும்புபவனும், பொருளை நாடுபவனும், ஞானியும் ஆண்டவனை வேண்டுகிறார்கள். தன் நலனை அடைய வேறு வழியிருந்தும் அதனை நாடாமல் ஆண்டவனே எதனையும் சாதித்துத் தருவான் என்ற நம்பிக்கையுடன் அவர்கள் ஆண்டவனை நம்பியிருப்பவர்கள். அதனால் அவர்கள் மஹான்களே" என்று கீதையில்

கண்ணன் கூறுகிருர். "சதுர்விதா: பஜந்தே மாம் ஜநா: ஸுக்ரு திநோ அர்ஜுந l ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுர் அர்த்தார்த்தீ ஜ்ஞாநீ ச பரதர்ஷப l உதாரா: ஸர்வ ஏவ ஏதே" (7, 16-18) அப்படித் தேவி யைப் புகலிடமாக அடைந்து தன் விருப்பங்களைத் தேவியின் அரு ளால் பெற முயலும் மஹான்களின் புகழ் வடிவில் உள்ளவள் தேவி. (848)

2929-01 உத்தாம-வைபவா. அடங்காப் பெருமை கொண் டவள்.

2929-02 உத்தாம-கட்டுக்கடங்காத. (தாம-பிணைக்கும் கயிறு) விபு-எங்கும் நீக்கமற நிறைந்திருந்தும் எளிதில் வெளிப்படா திருப்பது. அதன் தன்மை, பெருமை, வைபவம். இவ்வளவென்று அளவிட முடியாத பெருமை உடையவள். (849)

2930-01 வர்ண-ரூபிணீ. எழுத்து வடிவினள்.

2930-02 வர்ணம்-எழுத்துக்கள்-அ முதல் ஹ வரை, ஒலியைத் தாங்கும் வடிவம். வர்ணம்-நிறம், ரூபத்தை விளக்குவது. இவ் விரண்டின் வடிவமாயிருப்பவள். (850)

159 जन्ममृत्युजरातप्तजनविश्रान्तिदायिनी । 851
सर्वोपनिषदुद्घुष्टा शान्त्यतीतकलात्मिका ॥ 853

ஜந்மம்ருத்யுஜராதப்தஜநவிச்ராந்திதாயிநீ l
ஸர்வோபநிஷதுத்குஷ்டா சாந்த்யதீதகலாத்மிகா ll

2931-01 ஜந்ம-ம்ருத்யு-ஜரா-தப்த-ஜந-விச்ராந்தி - தாயிநீ. பிறப்பு, இறப்பு, மூப்பு இவற்ருல் வாடிய மக்களுக்கு ஓய்வளிப்பவள்.

2931-02 பிறப்பும் இறப்பும் மூப்பும் நீங்காப் பிணிகள். விருப் பத்திற்கேற்ப அமையாதவை. வினையால் விளைந்தமையால் அனுப வித்துத் தீர்க்க வேண்டியவை. அனுபவித்துத் தான் தீர வேண்டு மென்ற நிலை ஏற்படின் சுகமே துக்கமாகிவிடும். துக்கமாயின் கொடும் துக்கமாகிவிடும் இம்மூன்றும் கட்டாயமாக அனுபவிக்க வேண்டியவை என்ற நிலையில் அனலைப்போல் வாட்டி வதைக் கின்றன. அவற்ருல் வாட்டப்பட்டவர்கள் தன்னைச் சரணுகப் பற்றும்போது அவர்களின் தாபத்தை அவள் போக்கி பிறப்பெனும் பிணியிலிருந்தும் ஒய்வு தருகிருள். இனிப் பிறப்பில்லை. அதனுல் இறப்பும் அதன் முன்னேடியான மூப்பும் இல்லை. இது இடைவெளி

அற்ற ஓய்வு, விச்ராந்தி. பிறப்பையும் இறப்பையும்விட மூப்பு தாபம் மிக்கது. பயம் தரும் மரணத்தை எதிர்பார்க்கும் நிலே. பிறப்பையும் இறப்பையும் விட நீண்ட நேரம் அனுபவிக்கத்தக்கது. இதனுல் தாபம் அதிகம். இம்மூன்றிலிருந்தும் இரு வகையில் ஓய்வு உண்டு. ஒன்று தாற்காலிகம், மரணத்திற்குப் பின் பிறக்கும் வரை ஏற்படும் ஓய்வு. மற்றென்று நிலேத்தது-மோக்ஷம் எனப்படுவது. அதுவே விச்ராந்தி-சிறப்புள்ள ஓய்வு. அதனைத் தருபவள். (851)

2932-01 ஸர்வ-உபநிஷத்-உத்குஷ்டா. எல்லா உபநிடதங்களிலும் சிறந்தவள் என பறைசாற்றப்பட்டவள்.

2932-02 உபநிடதங்கள் பரம்பொருளேப் பற்றிய ரகசியத்தை விளக்குபவை. ஸகுணப்பிரம்ம வடிவில் பரம்பொருளே விளக்கவந்த நூல்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு ஸகுண வடிவைச் சிறந்ததெனக் கூறும். ஆனுல் நிர்குணமான பேதமற்ற பிரும்ம ஸ்வரூபத்தைக் காட்ட வந்த உபநிடதங்கள் பிரும்ம ஸ்வரூபிணியான தேவியைப் பற்றிச் சிறப்பாகப் பறை சாற்றுகின்றன. (852)

2933-01 சாந்தி-அதீத-கலா-ஆத்மிகா. சாந்தியதீதகலே.

2933-02 பஞ்ச பூதங்களின் கலேகளில் (பா. 2909-03) ஆகாச தத்துவத்தின் கலேயாக இருப்பவள் தேவி. சாந்தி வரையிலுள்ள நான்கு கலேகளுக்கும் இது அப்பாற்பட்டும் விளக்க முடியாமலுமிருப்பதால் சாந்தி-அதீதா என இதனைக் குறிப்பிடுவர். இது ஸதாசிவ தத்துவத்தை விளக்க வந்தது. (ஈசுவரன் துரீயன், ஸதாசிவன் துரியாதீதன் என்ற முன் விளக்கம் இங்கு காணத்தக்கது. பா. 1724, 1725) (853)

160 गंभीरा गगनान्तस्स्था गर्विता गानलोलुपा । 857
कल्पनारहिता काष्ठाऽकान्ता कान्तार्धविग्रहा ॥ 861

கம்பீரா ககநாந்தஸ்ஸ்த்தா கர்விதா காநலோலுபா I
கல்பநாரஹிதா காஷ்ட்டா (அ) காந்தா காந்தார்த்த
விக்ரஹா II

2934-01 கம்பீரா-ஆழங்காண முடியாதவள்.

2934-02 எல்லேயற்ற பெரு வடிவம் கொண்டவள் ஆனதால் இத்தன்மையவள் எனக் குறிப்பிட முடியாத பெருமை கொண்டவள். சிவசக்தியை ஆழம் காண முடியாத நீர்தேக்கமாகக் (மஹாஹ்ரதம்) குறிப்பிடுவர். தெளிந்த ஆழமுள்ள நீர்தேக்கத்தில் அடித்தளம்

அருகிலிருப்பதாகப் புலப்பட்டாலும் உள்ளே செல்லச் செல்ல ஆழம் அண்ட முடியாதிருப்பதுபோல் தேவியின் பெருமையும் ஆழம் காண முடியாதது. (854)

**2935–01** ககந-அந்தஸ்-ஸ்த்தா. ஆகாசத்தின் நடுவில் இருப்பவள்.

**2935–02** நாம் காணும் ஆகாசம் பூத ஆகாசம். நம் இதயத்தின் உள் உள்ளது சிதம்பரம் எனும் தஹர ஆகாசம். (பா. 2512) ஆகாசத்தையும் தோற்றுவித்த பரம் பொருள், பரவெளி-பராகாசம் இந்த மூன்றின் நடுவிலும் (அந்த:) எல்லை வரையிலும் (அந்த) உள்ளும் புறமும் இருப்பவள். பிரளயத்தில் ஆகாசம் அஹங்காரமாக மாறும் நிலை உண்டு. அந்த ஆகாசத்தின் முடிவு (அந்த) நிலையிலும் இருப்பவள் தேவி. (855)

**2936–01** கர்விதா. கர்வமுற்றவள்.

**2936–02** உலகைத் தோற்றுவித்து நடத்திப் பின் தன்னுள் அடக்கிக்கொள்ளும் பேராற்றலால் செருக்குற்றவள். தனித்தனி ஜீவனிடம் காணும் 'நான்' என்ற உணர்வின் ஸமஷ்டி வடிவமும் இத்தனை 'அஹம்-நான்' களுக்கும் மூலவடிவமுமானது பர அஹங்காரம் - பர அஹந்தா எனப்படும். அந்தப் பேரஹங்கார வடிவினள். (856)

**2937–01** காந-லோலுபா பாட்டில் ஈடுபாடுள்ளவள்.

**2937–02** வாய்ப்பாட்டு, வாத்திய சங்கீதம், ஸாமவேதகானம் முதலியவற்றைக் கேட்பதில் தன் வயமிழந்து ஈடுபடுபவள். கர்வம் ஒருபுறமும் (நா. 854) பேதைமை ஒரு புறமும் தேவியிடம் காணப் படுகின்றன. (857)

**2938-01** கல்பநா-ரஹிதா. கற்பனையற்றவள்.

**2938–02** மிகச் சிறிதளவில் அறிந்த ஒன்றை அடிப்படையாகக்கொண்டு, அறியாத பொருளை ஊகித்து மனக்கண்முன் காட்டப்பெறும் எண்ண அலைகள் கற்பனையாகும். தேவியைப் பற்றி அத்தகைய கற்பனை செல்லாது. கற்பனைக்கு அடிப்படைத் தேவையான சிறிதளவில் உள்ள அறிவு கூடத் தேவியைப் பற்றியதாக ஏற்பட முடியாது. அதனால் கல்பநா-ரஹிதா. தேவியாலும் எதனையும் கற்பனை செய்யமுடியாது. தேவி அறியாதது எதுவுமில்லை. நன்கு அறிந்த பொருளில் கற்பனை ஏற்பட இடமில்லை.

2938-03 கல்ப-நார-ஹிதா. கல்பம் எனும் காலவரை முடிந்து பிரளயம் ஏற்பட்டதும் தன்னுள் அடங்கிய ஜீவர் (நாரர்) களின் ஹிதத்தைச் செய்பவள். அனுக்ரஹதா. (பா. 1726) (858)

**2939-01 காஷ்ட்டா. காஷ்ட்டா எனும் காலவரையாயிருப்பவள்.**

2939-02 ஒரு நாளின் காலவரை பற்றிய அட்டவணை :

எட்டுயாமங்கள்—ஒரு நாள் (24 மணி நேரம்)
6 முகூர்த்தங்கள்—1 யாமம் (3 மணி நேரம்)
2 நாடிகள்—1 முகூர்த்தம் (30 நிமிஷங்கள்)
15 லகுக்கள்—1 நாடி (15 நிமிஷங்கள்)
15 காஷ்டைகள்—1 லகு (1 நிமிஷம்)
5 க்ஷணங்கள்—1 காஷ்டை (4 செகண்டுகள்)
3 நிமேஷங்கள்—1 க்ஷணம் ($\frac{4}{5}$ செகண்டு)
3 லவங்கள்—1 நிமேஷம்
3 வேதங்கள்—1 லவம்
100 த்ருஷ்டி—1 வேதம்

என்ற கணிதநூல்களில் குறிப்பிட்டுள்ள நுண்ணிய காலவரைகளில் காஷ்டா எனும் காலவரையாக இருப்பவள் தேவி. (18 நிமேஷங்கள் கொண்டது காஷ்டா எனக் கூறுகிறார் பாஸ்கர ராயர்),

2939-03 காஷ்டா-மரமஞ்சள், தோல் உட்புறம் எல்லாவற்றிலும் மஞ்சள் நிறமுள்ள ஒரு சிறு மரம். தொப்புள்கொடி போன்றுமுறுக்குள்ள வடிவிலமைந்திருப்பதால் சிவசக்தியம்சமாகப் பாவித்து இதை வணங்குவர்.

2939-04 வேதாந்த வாக்கியங்களின் முடிந்த முடிவான பொருளாக இருப்பதால் காஷ்டா-(முடிந்த முடிவு). பரமசிவனின் வடிவங்களில் ஆகாச தத்துவ வடிவான பீமதேவரின் பத்தினி, திக்தேவதை வடிவில் இருப்பவள். (காஷ்டா-திக்குகள்). திக்குகளின் எல்லை-காஷ்டா. அந்த எல்லை வரை எல்லாவற்றிலும் வியாபித்து நிற்பவள். திக்குகளுக்கு ஓர் எல்லை கிடையாது. நெருங்க நெருங்க எட்டிப் போகும். எனினும் எல்லையிருப்பது போல் தோன்றும். அதுபோல் எட்ட முடியாத எல்லையாயிருப்பவள்.

2939-05 காஷ்டா-பட்டுப்போன மரம். சிவனை ஸ்தாணு என்பர். கிளைத்துப் பலவாறாக விரிவடையும் மரம் போல் அல்லாமல் பட்டுப்போன மரமாக இருப்பது ஸ்தாணுவும் காஷ்டாவும். வளர்ச்சி முதலிய மாறுபாடுகள் அற்றவள். (859)

2940-01 அகாந்தா. பாபத்தைப் போக்குபவள்.

2940-02 அகம்-பாபம், பாபத்தின் விளைவாக ஏற்பட்ட துக்கம். இரண்டையும் அழிப்பவள் தேவி. காஷ்டாகாந்தா என்ற சொற்ருெடரை காஷ்டா அகாந்தா என இரு நாமங்களாகப் பிரிக்கிறோம். முன்பு 'காந்தா' 329வது நாமமாக வந்துள்ளது. (860)

2941-01 காந்த-அர்த்த-விக்ரஹா. மணாளனைப் பாதி உடலாகக் கொண்டவள்.

2941-02 பரமசிவனைத் தனது பாதி உடலாகக் கொண்டவள். அல்லது பரமசிவனது பாதி உடலாக உள்ளவள் தேவி.

2941-03 காந்தம்-க என்ற எழுத்தின் அடுத்த எழுத்து க² ख ஆகும். (பா-1410-03). அது ஆகாயத்தைக் குறிக்கும் ஆகாயத்தைத் தன் வடிவின் பகுதியாகக் கொண்டவள். (861)

161 कार्यकारणनिर्मुक्ता कामकेलितरङ्गिता । 863
कनत्कनकताटङ्का लीलाविग्रहधारिणी ॥ 865

கார்யகாரணநிர்முக்தா காமகேலிதரங்கிதா ।
கநத்கநகதாடங்கா லீலாவிக்ரஹதாரிணீ ॥

2942-01 கார்ய-காரண-நிர்முக்தா. காரிய-காரணப் பொருள்களிலிருந்தும் விடுபட்டவள்.

2942-02 பிரகிருதி, பிரகிருதிவிகிருதி, விகிருதி என மூன்று விதமாகப் பரம்பொருளிலிருந்து தோன்றியவற்றைப் பிரிப்பர். (பா. 1708) அவற்றில் மூலப் பிரகிருதி எனும் பிரகிருதி எப்போதும் காரணமாக இருப்பது. பிரகிருதிவிகிருதியும் விகிருதியும் காரணமாயும் காரியமாயும் உள்ளவை. மண்ணிலிருந்து குடம் உண்டாயிற்று. இதில் குடம் காரியம், மண் காரணம். அதுபோல் மஹத் எனும் தத்துவத்திலிருந்து, தோன்றிக்கொண்டிருக்கும் உலகம் வரை அனைத்தும் தனக்குக் காரணமாயிருப்பதற்குத் தான் காரியமாயும் தன்னிடமிருந்து தோன்றியதற்குத் தான் காரணமாயுமிருக்கும். தேவியோ காரணமாகவோ காரியமாகவோ உள்ளவற்றிற்கப்பாற்பட்டவள். அவைகளிடமிருந்து விலகியிருப்பவள். எல்லாவற்றிற்கும் காரணமான மூலப்பிரகிருதிக்கும் முன்னிருப்பவளானதால் காரண-காரியப் பிரபஞ்சத்தினுள் அவள் அகப்படவில்லை. எல்லாமாயிருப்பவளாகத் தேவியைப் பார்க்கும்போதும் காரணமாயிருப்பதும் அவளே; காரியமாயிருப்பதும் அவளே. தானே தனக்குக் காரணமாகவோ காரியமாகவோ இருக்க

முடியாதாகையால் காரியகாரண நிலையினுள் தேவி கட்டுப் படுவதில்லை. (862)

**2943-01** காம-கேலி-தரங்கிதா. காமேசுவரனுக்கு அலைபோல் இடையறுது கேளிக்கைகளைத் தருபவள்.

2943-02 தேவியைக் கண்டதும் காமேசுவரனின் மனம் குதூகலம் கொள்கிறது. அதனுல் காமேசுவரன் தேவியுடன் புதிது புதிதாகப் பல கேளிக்கைகளில் தொடர்ந்து ஈடுபடுகிருர். (கேலீ தரங்கிதா என்றும் பாடமுண்டு. பொருள் அதே.) (863)

**2944-01** கநத்-கநக-தாடங்கா. தங்கக்காதோலைகளுள்ளவள்.

2944-02 தேவி காமேசனுடன் கேளிக்கைகளில் ஈடுபடுகையில் ஆட்டத்திலும் பாட்டிலும் தலை அசையும்போது காதுகளில் அணிந்த தங்கக் காதோலைகளும் மின்னல்போல் ஒளியுடன் விளங்குகின்றன. (864)

**2945-01** லீலா - விக்ரஹ - தாரிணீ. விளையாட்டாகப் பல வடிவங்களை ஏற்பவள்.

2945-02 விளையாட்டாக, விளையாட்டிற்கெனவே தேவி பல தோற்றங்களில் வெளிப்படுவாள். அவை தேவியின் உண்மை நிலையை (விக்ரஹ) நன்கு விளக்கக்கூடியவை. (865)

162 अजा क्षयविनिर्मुक्ता मुग्धा क्षिप्रप्रसादिनी । 869
अन्तर्मुखसमाराध्या बहिर्मुखसुदुर्लभा ॥ 871
அஜா க்ஷயவிநிர்முக்தா முக்தா க்ஷிப்ரப்ரஸாதிநீ ।
அந்தர்முகஸமாராத்யா பஹிர்முகஸுதுர்லபா ॥

**2946-01** அஜா. பிறக்காதவள்.

2946-02 பல தோற்றங்கள் கொள்ளும் தேவி தக்ஷன், ஹிமவான், கதா், மதங்கர் முதலிய பலருக்குப் பெண்ணுகத் தோன்றுகிருள். எனினும் அவள் பிறப்பற்றவள். இதுவரை புலப்படாதிருந்தவள் அப்படித் தோன்றுகிருள். முன் இல்லாதிருந்து இப்போது பிறப்பதில்லை. (866)

**2947-01** க்ஷய-விநிர்முக்தா. முடிவிலிருந்தும் விடுபட்டவள்.

2947-02 பிறந்ததற்கு முடிவுண்டு. பிறக்காதவளானதால் தேவி முடிவுமற்றவள். தேவியை அண்டியவர்களுக்கும் முடிவில்லை. க்ஷயம்-வீடு. தேவியை அண்டியவர்கள் முக்திபெறக் காட்டிற்குச் செல்லவேண்டியதில்லை. வீட்டில் சகல சுக அனுபவங்களுக்கிடையே அவர்கள் தேவியின் அருளால் முக்தியையும் பெறுவார்கள். (க்ஷயே

க்ருஹே ஏவ விநிர்முக்தா: யயா). வீட்டில் தங்கிச் சுகமனுபவிப்ப தால் மனிதன் தேய்வு அடைகிறான். அதனால் தேய்விற்கு இட மளிக்கும் விட்டை க்ஷயம் என்பர். தேவியின் அருள் பெற்ற வீடு தேய்விலிருந்தும் விடுபடும். (867)

2948-01 முக்த்தா. அழகி.

2948-02 கபடமற்றுத் தெளிந்து நிறைந்த மனத்தை வெளிக் காட்டுவதால் அழகாயிருப்பவள் முக்த்தா. கலப்பற்ற மகிழ்ச்சியை யும் அறிவு மலராமல் மொட்டாகி இருப்பதையும் கள்ளமற்ற தெளிந்த மன நிலையையும் அழகிய முகத்தில் தெளிவாகிக் காட்டிச் சிரிக்கும் குழந்தை முக்த்தா. குழந்தையிடம் உள்ள பேரன்பால் அசடாகி நிற்கும் தாய் முக்த்தா. அப்படி முக்த்தாவாகத் தேவி தோன்றுகிறாள். (868)

2949-01 க்ஷிப்ர-ப்ரஸாதிநீ. விரைவில் அருள்பவள்.

2949-02 ப்ரஸாத:-பக்தனின் விஷயத்தில் கோபம் முதலிய வைகளால் கலங்காமல் தெளிந்திருப்பது, முன்னர் நடந்தவற்றால் பாதிப்புறாமலும் தவறுகளைப் பொருட்படுத்தாமலுமிருத்தல், உதவு வதில் திருப்தி காண்பது, பக்தன் அடையும் மகிழ்ச்சியால் தானும் மகிழ்ந்திருத்தல், அருள் புரிவது என்ற பல பொருள்கள் கொண்டது. ப்ரஸாதிநீ-பிரஸந்நா, ப்ரஸாதத்தைக் கொண்டவள். 'முக்த்தா' வானதால் எளிதில் மகிழ்ந்து தனது பிரஸாதத்தைக் காட்டுகிறாள். குறைகாணாத தாயுள்ளம் பெற்றவளானதால் விரை வில் பிரஸன்னையாகிறாள். (869)

2950-01 அந்தர்-முக-ஸமாராத்த்யா. உள்நோக்குள்ளவர் களால் நன்கு ஆராதிக்கத்தக்கவள்.

2950-02 அந்தர் முகர்கள்-வெளியில் உள்ள பொருளில் நாட்டம் குறைந்து, உள்ளே உள்ள ஆத்ம அனுபவத்தைப் பெறும் பேராவலில் மனமும் பொறிகளும் குவிந்து உள்ளே நோக்கத் தொடங்கித் தன் சக்தி அனைத்தையும் உட்புறமாக செலுத்தியவர் கள், ஆத்ம அனுபவத்தைப் பெற்றவர்கள். அவர்கள் ஆத்ம ஸ்வரூபி ணியான தேவியையே தன் ஆத்மாவாகக் கண்டதால் தேவியை எளிதாயும் நன்கும் வழிபடத் தகுதி பெறுகிறார்கள். எளிதில் அருள்பவள் என்பதால் அவளது பெருமைக்குக் குறைவில்லை. தெளிவும் ஆழமும் கொண்ட பெரும் நீர்த்தேக்கம்போல், எளிமையும் பெருமையும் ஒருங்கே அமைந்தவள் தேவி. (870)

2951-01 பஹிர்-முக-ஸுதுர்லபா. வெளிநாட்டமுள்ளவர்களால் எளிதில் அடைய முடியாதவள்.

2951-02 வெளியிலுள்ள பொருளை மனம் பத்து பொறிகளாலும் அடைய முற்படுகிறது. மனம் அதனை அடைய விருப்பம் கொண்டது. அதனைப் பெற்றால்தான் சுகமெனக் கருதிற்று சுகம் அந்தப் பொருளிடம் உள்ளதாக நினைத்தது. அந்தப் பொருளையே பெரிதென மதிக்கும் மனமுள்ளவர் பஹிர்முகர். அந்தப் பொருளை அடைவதற்காகத் தேவியின் அருளை அவர்கள் நாடுவதும் உண்டு. தேவியின் அருளால் தேவியையே அடையக்கூடும். எனினும் அந்த அருளின் உதவிகொண்டு ஈனமான பொருளை அவர்கள் நாடுவதால், தேவியின் அருளை அவர்கள் அவ்வளவு எளிதில் பெற முடிவதில்லை.

2951-03 ஸுதராம் துர்லபா-கட்டாயம் அடைய முடியாதவள் எனப் பொருளும் உண்டு. ஆனால் 'ஸ்ரீ மாதா' என ஆரம்பித்து 'அவ்யாஜ கருணாமூர்த்தி:' என முடிக்கவிருக்கும் நாமத்தொடரில் 'அடையமுடியாதவள்' என்பதற்கு அழுத்தம் 'ஸு' என்பதால் கொடுப்பது பொருந்தாது. 'தக்ஷிணாதக்ஷிணாராத்யா' (பண்டிதனும் பாமரனும் இவளை ஆராதிக்கலாம்) என்றோர் நாமமும் வரவிருக்கிறது. பாமரன் (அதக்ஷிணன்) புலனை அடக்கத் தெரியாத மூடன் தானே! ஆராதிக்கலாம், ஆனால் பலனிராதென்றால் பொருந்துமா? அதனால் கட்டாயம் அடைய முடியாதவள் என்பது பொருந்தாது. தாயாக அவள் எளிதில் அடையத்தக்கவளாயினும் அடைய விருப்பவன் 'பஹிர்முகன்' வெளிநாட்டமுள்ளவனாகையால் அவளது நெருக்கத்தை உணராமல் திண்டாடுவான் எனப் பொருள் கூறுவது தான் அதிகம் பொருந்தும். அதனால் ஸு. ஸுகேந, சுகமாக துர்லபா – துக்கேந லப்தும் யோக்யா-கஷ்டப்பட்டு அடையத் தக்கவள். சுகமாக அடைவது கஷ்டமே; ஒருக்கால் தேவியின் அருளால் கிட்டவும் கூடும் எனப் பொருள் அதிகமாகப் பொருந்துகிறது. இந்த நாமத்தை விளக்க வந்தாற்போல் உள்ள 'தரள கரணாநாம் அஸுலபா என்ற ஸௌந்தரிய லஹரீ சுலோகமும் (சு.95) 'சஞ்சலமான பொறிகள் உள்ளவர்களுக்கு எளிதில் கிடைக்கக் கூடியவள் அல்ல'–அ-ஸு-லபா என்றே கூறுகிறது. அவள் எப்போதும் 'ஸுலபா. ஆனால் ஸாதகனது 'தரள கரண'த் தன்மை – 'பஹிர் முகத்' தன்மை அங்கு இடையூறாக இருந்து சுலபத்தைத் துர்லபமாக்குகிறது. இக்குறை தேவியுடையது அல்ல. பண்டிதனும் பாமரனும் செய்யும் ஆராதனையைச் சமமாகத் தேவி ஏற்று ஒரே விதமான பலனையும் தருகிறாள். ஆனால் பண்டிதன்

அதனை முழுவதும் பெறுகிறுன். பாமரன் தேவியின் அருளாகப் பெருமல் அழியும் சுகப்பொருளாகப் பெறுகிறுன், அதனிடமுள்ள நாட்டத்தால். நல்ல மதிப்புள்ள முத்தைப்பெற்ற பாமரன் அதனை மட்டவிலைக்கு விற்றுவிடுவான். வியாபாரி அதன் மதிப்புக்கேற்ற விலைக்கு விற்பான். மதிப்பை உணர்ந்து விற்க மனமின்றித் தானே வைத்துக்கொள்ளவும் கூடும். தேவியின் மதிப்பை அறிந்தவன் வெளிநாட்டம் கொள்ளமாட்டான். (871)

163 त्रयी त्रिवर्गनिलया त्रिस्था त्रिपुरमालिनी । 875
निरामया निरालंबा स्वात्मारामा सुधासृतिः ॥ 879

த்ரயீ த்ரிவர்க்கநிலயா த்ரிஸ்தா த்ரிபுரமாலினீ 1
நிராமயா நிராலம்பா ஸ்வாத்மாராமா ஸுதாஸ்ருதி: 11

**2952–01** த்ரயீ. மூன்று வேத வடிவானவள்.

2952-02 ருக்வேதம், யஜுர்வேதம், ஸாமவேதம் என்ற மூன்றும் தேவியின் வடிவம். (அதர்வண வேதத்தைச் சேர்த்து வேதங்கள் நான்கு. அதர்வ வேதத்தின் உபநிடதங்கள்–பிரச்நம்–முண்டகம்-மாண்டுக்யம் முதலியவை) ஆத்மவித்யையைப் போதிப்பதில் மற்ற மூன்றின் உபநிடதங்களுக்கு ஒப்பானவையே. எனினும் அதில் இம்மைக்கு உதவும் பொருள்களை அடைவதற்கான காமிய கர்மங்களைப் பற்றிய பூர்வ காண்டத்தின் பகுதி மிகமிக அதிகமாயுள்ளது. அவை துர்விநியோகமாகக் கூடும் என்பது பற்றி அதர்வ வேதத்தை அதிகம் கையாளாமல் மற்ற மூன்றையுமே உபயோகிப்பது வழக்கமாகி த்ரயீ என்ற வழக்கேற்பட்டுவிட்டது. பாலாவாக உள்ள தேவியின் வாக்பவகூடம் ஐ என்ற அக்ஷரம் கொண்டது. ருக்வேதம் 'அக்னிமீடே' என 'அ'வில் தொடங்குகிறது. யஜுர்வேதம் 'இஷே த்வா' என 'இ'யில் தொடங்குகிறது. ஸாமவேதம் 'அக்ன ஆயாஹி' என 'அ'வில் தொடங்குகிறது. அந்த முதல் மூன்றக்ஷரங்களையும் சேர்க்க (அ+இ=ஏ, அ+ஏ=ஐ) வாக்பவ பீஜமாகிறது. அந்த பீஜ வடிவினள். (872)

**2953–01** த்ரி-வர்க்க-நிலயா. அறம், பொருள், இன்பம் இவற்றுள் மறைந்திருப்பவள்.

2953–02 அறம், பொருள், இன்பம் என்ற இம்மூன்றையும் த்ரிவர்க்கம் என்பர். இவை ஒவ்வொருவரது நிலைகளுக்கேற்ப மாறுபடுமாதலால் மாறுபட்ட பலவற்றின் தொகுப்பு-வர்க்கம் என்பர். இவைகளை முறைப்படி அடைவது புருஷார்த்தம். முறைப்படி தர்மத்தையோ, பொருளையோ, இன்பத்தையோ அணுகும்போது, தேவி அவைகளின் வடிவில் இருந்து அருள்புரிகிருள். (2811) (873)

2954-01 த்ரி-ஸ்த்தா. மூன்ருகக் கணக்கிடப் பெற்றவைகளில் இருப்பவள்.

2954-02 மூன்று உலகங்கள், ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்கள், நேற்று, இன்று, நாளை என்ற காலவரை, பிரும்மா, விஷ்ணு, ருத்திரன் என்ற மும்மூர்த்திகள், தக்ஷிணுக்னி, ஆஹவநீயம், கார்ஹபத்யம் என்ற வேள்வி அக்கினிகள், ஸூர்யன், சந்திரன், அக்னி என்ற ஒளி மண்டலங்கள், ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்ற தேகங்கள், விழிப்பு, கனவு. தூக்கம் என்ற உணர்வு நிலைகள், இரவு, பகல், சந்தி என்ற வேளைகள், வாக்பவம், காமராஜம், சக்தி என்ற கூடங்கள் என்றிவ்வாறு மூன்ருகக் கணக்கிடப் பெறுபவை அனைத்திலும் உறைந்திருப்பவள். மூன்று என்ற எண்ணில் அவளுக்கு நாட்டம் அதிகம். திருதீயை திதி தேவிக்குகந்த திதியாகும். (பா-2513-04) (874)

2955-01 த்ரிபுரமாலிநீ. திரிபுரமாலினி வடிவினள்.

2955-02 ஸ்ரீ சக்கிரத்தில் ஆருவது ஆவரணமாகிய (அந்தர் தசாரம்) ஸர்வரக்ஷாகர சக்கிரத்தில் நிகர்ப்பயோகினிகளின் தலைவியாயிருப்பவள் திரிபுரமாலிநீ. அவளும் தேவியின் தோற்றமே. (875)

2956-01 நிர்-ஆமயா. நோயற்றவள்.

2956-02 உடலையும் மனத்தையும் துன்புறுத்துபவை ஆமயங்கள். தவருன உணவு நடைமுறை முதலியவற்ருல் ஏற்படுபவை. அவை ஏற்படத்தக்க உடலும் மனமும் அற்றவளானதால் தேவி நோயற்றவள். அவளை அண்டியவர்களும் தேகப்பற்று அற்றவரானதால் நோயற்றவர்களே. (876)

2957-01 நிர்-ஆலம்பா. பிடிப்பற்றவள்.

2957-02 எல்லாவற்றிற்கும் ஆதாரமாயும் (பா-1401) ஆசிரயமாயும் (பா-1416) உள்ள தேவிக்கு வேறு பிடிப்பு தேவை என்பது பொருந்தாது. ஜீவனுக்கு அவனது வினை உடலுடன் பிணைக்கும் பிடிப்பாகிறது. அதனுல் அவனுக்குப் பலவற்றில் பிடிப்பு ஏற்படுகின்றது. வினை தேவியின் அருளால் அகன்றதும் தளைகள் நீங்கிய வனுக வேருென்றையும் பிடிப்பாகக் கொள்ளாதவனுகிருன். அப்படி தம்மைச் சார்ந்தவர்களையும் பிடிப்பற்றவர்களாக்குகிருள். (877)

2958-01 ஸ்வ-ஆத்ம-ஆராமா. தன்னுேடு விளையாடுபவள்.

2958-02 தேவி எல்லாமானவள். அவளைத் தவிர வேருென்றில்லை. அந்நிலையில் விளையாட வேறு ஒருவரில்லாததால் தன்னுடனேயே தேவி விளையாடிக் கொண்டிருப்பாள். விளையாடுவது அலை

பாயும் மனத்திற்கு ஒய்வும் அமைதியும் ஆனந்தமும் அளிப்பதற்கே. தன்னையே பரம்பொருள் ஆணும் பெண்ணுமாக்கி விளையாடிற்று என உபநிடதங்கள் கூறும். ஆணும் பெண்ணும் தானே ஆன தால் 'தான்' 'தன்'னோடு விளையாடுவதாயிற்று. (ஸ வை நரேமே ...ஸ இமமேவாத்மாநம் த்வேதா பாதயத் தத: பதிச்ச பத்நீ ச அபவ தாம்'', பிருஹதாரண்யகம் 1-4-3) தன்னிடத்தில் உலகமாகிய பொழுதுபோக்கிடத்தைக் கொண்டவள். அவனவனுக்கு அவன வனது ஆத்மாவாகிய ஒய்வும் அமைதியும் ஆனந்தமும் தரும் கேளிக்கைப் பொருளாக இருப்பவள். (878)

2959-01 ஸுதா-ஸ்ருதி:. அமுதப்பெருக்காக உள்ளவள்.

2959-02 ஒரே சீராகத் தாரையாக ஓடுவது ஸ்ருதி. ஸஹஸ் ராரத்திலிருந்து தேவியின் சரணங்களிலிருந்தும் பெருகும் அமுதப்பெருக்கு குண்டலினீ செல்லும் பாதையிலுள்ள சக்கிரங் களிலும், அங்குள்ள யோகினீ சக்திகளிடத்திலும் ஒரே சீராகப் பரவி அவைகளை உயிர்ப்பிக்கின்றது. அந்த அமுத தாரையாக உள்ளவள். (பா. 1201-10, 1217-02). தேவியைத் தன் வடிவி லிருந்து ஒளிக்கிரணங்களாகிய அமுத தாரைகளைப் பெருக்குபவ ளாகத் தியானிப்பதால் கடும் ஜ்வரம் நீங்கும், விஷம் அகலும் என "கிரந்தீம் அங்கேப்ப்ய:" என்று தொடங்கும் ஸௌந்தரியலஹரீ சுலோகம் (சு. 20) கூறும்.

2959-03 நமது உடலில் சந்திரமண்டலமாக ஸஹஸ்ராரம் அமைந்து அமுதத்தைப் பெருக்குவது போல், உலகிற்கு அமுதம் அளிக்க சந்திரமண்டலம் அமைந்திருக்கிறது. உலகை நடத்தி வரும் தேவதைகள் அந்த அமிருதத்தைப் பருகுகின்றனர். சுக்ல பக்ஷத்துப் பிரதமையிலிருந்து பௌர்ணமிவரை சந்திரமண்டல மாகிய அமுதக் கோப்பையில் தேவீ சரணங்களிலிருந்து பெருகும் அமுதம் தாரையாக நிரப்பப்படுகிறது. அதனைக் கிருஷ்ண பக்ஷத்துப் பிரதமை முதல் அமாவாசை வரை, தினம் ஒருவராக (1) அக்கினி, (2) சூர்யன், (3) விச்வேதேவர்கள். (4) வருணன் (5) வஷட்காரம், (6) இந்திரன், (7) தேவர்ஷிகள், (8) அஜ ஏகபாத் எனும் ருத்திரன், (9) யமன், (10) வாயு, (11) மாத்ரு கணம், (12) பித்ருகணம், (13) குபேரன், (14) பசுபதி, (15) பிரஜாபதி என்ற வரிசையில் தேவதைகள் பருகுகின்றனர். அதனால் உலக நிர்வாஹத்தில் திறமையுடன் ஈடுபடுகின்றனர். (ஸௌந்தரியலஹரீ (சு. 94) அவர்கள் பருகும் அமுத தாரையா யிருப்பவள். (ஸுதாஸ்ருதி: (स्रुतिः), ஸுதாஸ்ருதி: (स्रुतिः)

என்றிரண்டு பாடமுமுண்டு. முதல் பாடத்தின்படி தாரை, பெருக்கு என்றும் இரண்டாம் பாடத்தின்படி கசிவு, சீராகப் பரவும் நீரோட்டம் என்றும் பொருள்.) (879)

164 संसारपङ्कनिर्मग्नसमुद्धरणपण्डिता । 880
यज्ञप्रिया यज्ञकर्त्री यजमानस्वरूपिणी ॥ 883

ஸம்ஸாரபங்கநிர்மக்நஸமுத்தரண பண்டிதா ।
யஜ்ஞப்ரியா யஜ்ஞகர்த்ரீ யஜமாநஸ்வரூபிணீ ॥

**2960–01 ஸம்ஸார – பங்க-நிர்மக்ந – ஸமுத்தரண-பண்டிதா. ஸம்ஸாரமாகிய சேற்றில் அழுந்தி முழ்கியவனைத் தூக்கி வெளியே விடுவதில் திறமையுள்ளவள்.**

2960–02 ஸம்ஸாரமாகிய சேறு எல்லையற்றதாகப் பரவியுள்ளது. அதன் நடுவே மாட்டிக்கொண்டவன் தன் முயற்சியால் விடுபடமுடியாது. சேற்றிலிருந்து ஒரு காலை விடுவிக்க முற்படும்போது மற்றொரு கால் ஆழப்பதிந்து விடுகிறது. சேற்றிலிருந்து விடுவித்த காலைச் சேறில்லாத இடத்தில் பதியவைத்து மற்றொரு காலையும் விடுவிக்கவேண்டும். சேறில்லாத இடமே இல்லாததால் மறுபடி சேற்றிலேயே காலைப் பதிக்க நேரிடுகிறது. இதனை நன்கு பதித்து மற்றொரு காலை விடுவிக்க முனையும்போது, ஏற்கனவே அழுந்தியுள்ள ஒருகாலும் தற்போது பதித்த மற்றொரு காலும் சேற்றில் ஆழப்பதிந்து இனி மீளமுடியாது என்ற நிலை தோன்றுகிறது. அப்போது தேவி அவனை அப்படியே மேலே வலிவுடன் தூக்கிச் சேறற்ற இடத்தில் கொண்டு சேர்க்கிறாள். அதை அவள் மிகத் திறமையுடன எளிதாகச் செய்கிறாள். சேற்றில் பதியாத ஒருவனால் தான் சேற்றில் பதிந்தவனை மீட்கமுடியும். தேவிக்கு ஸம்ஸாரபந்தம் கிடையாது. அவளைத் தவிர வேறு யாரும் ஸம்ஸாரச் சேற்றிலிருந்து நம்மை மீட்க முடியாது. (880)

**2961–01 யஜ்ஞ-ப்ரியா. வேள்விகளில் விருப்பமுள்ளவள்.**

2961–02 வேள்விகள் பலவகை. (பா. 2820–02). அவை அனைத்திலும் தேவிக்குத் தனிப்பட்ட விருப்பம் உண்டு. யஜ்ஞன் என விஷ்ணுவிற்குப் பெயர். அவரிடத்தில் பிரியமுள்ள ஸகோதரியாக இருப்பவள்.

2961–03 தன்னுடையதென்கிற அபிமானத்தை விடுவதற்கு வேள்விகள் உதவுவதால் தேவியை அடையத்தக்க சித்த சுத்தியைத் தருகின்றன. நாம் அறிந்த தெய்வ வடிவங்கள் அக்கினியும் ஜலமும். அக்கினி வடிவமுள்ள தெய்வத்திடம், நம் பொருளிலுள்ள

நமது என்ற எண்ணத்தை விட்டு நம்பொருளை அளிக்கிறோம். (ஸ்வாஹா-ந-மம) நாம் அளிப்பதைப் பெறுபவர் தெய்வத்தன்மை பெற்றவர் என மதித்து அவருக்கு அர்ப்பணம் செய்வது யஜ்ஞம். அதில் நாட்டம் கொண்டவள் தேவி. (பா-2820) (881)

**2962-01** யஜ்ஞ-கர்த்ரீ. யாகத்தைச் செய்பவளாக இருப்பவள்.

**2962-02** யாகத்தை நிறைவேற்றுவதற்கு யாக முறை அறிந்த பல வேதியர்களது உதவி தேவை. யாகம் நிறைவேறுவதற்கு உதவும் வேதியரது வடிவமுள்ளவள் தேவி. யாகத்தைச் செய்பவனது மனைவிக்கும் அதில் பங்கு உண்டு. அவள் வடிவில் உள்ளவளும் தேவியே. (882)

**2963-01** யஜமான-ஸ்வரூபிணீ. வேள்வியைச் செய்து கொண்டிருப்பவனின் வடிவிலுள்ளவள்.

**2963-02** யாகத்தை நடத்த எண்ணம் கொண்டு தன் பொருள் முதலியவற்றை அதற்காகச் செலவிட்டுத் தக்கவர்கள் மூலம் வேள்வியை நடத்திக்கொள்பவன் யஜமானன். (பலரது உதவி கொண்டு குடும்பத்தையோ தொழிற்சாலை முதலியவற்றையோ நடத்துபவனையும் யஜமானன் என்கிறோம். யஜ-வேள்விபுரிதல், யஜமானன்-வேள்வி புரிந்துகொண்டிருப்பவன் என்பதுதான் இதன் முக்கிய பொருள்.) அவன் வடிவில் உள்ளவள் தேவி.

**2963-03** நாம் யாகங்கள் புரிவதால் தேவதைகள் திருப்தி அடைந்து மழை முதலியவற்றால் நம் வாழ்க்கையை வளப்படுத்துகிறார்கள். தேவர்களுக்கென நாம் யாகம் புரிவதும், நமக்கென தேவர்கள் மழை முதலியவற்றை அளிப்பதும் கூட்டுறவாகத் தெய்வக் கட்டளைப்படி அமைபவை. காலக்கொடுமையால் வேள்விகளில் சிரத்தை குறைந்தபோது மக்கள் மழை முதலியவை இல்லாமல் வாட்டமடையக்கூடும். அதனைத்தடுக்க சிவபெருமான் யஜமானன் என்ற தனது எட்டாவது வடிவத்தால் எப்போதும் வேள்விகளை நடத்திவருகிறார். சூரியன், சந்திரன், பஞ்சபூதங்கள் யஜமானன் என்ற எட்டு வடிவங்கள் கொண்டு சிவபெருமான் உலகைக் காக்கிறார். யஜமானன் என்ற அவரது வடிவிற்கு உக்கிரன், ஈசானன் என்ற பெயர்களும் உண்டு. உக்கிரன் என்ற சிவனது பத்தினியாகவும் தீக்ஷா என்ற திருநாமத்துடன் தேவி விளங்குகிறாள்.

**2963-04** சூரியன் எனும் தேவதைக்கு அவர் உதிக்கும் போதும் மறையும்போதும் நடுப்பகலிலும் அர்க்கியம் கொடுப்பது வழக்கம். சூரியனது சக்தியை நம்மிடம் பரவாமல் செய்வதற்காக

மந்தேஹர்கள் (ஆற்றலை மந்தப்படுத்துபவர்கள்) எனும் அசுரர்கள் சூரியனின் பாதையில் குறுக்கிடுகின்றனர். காயத்திரி எனும் பிரும்ம சக்தி கொண்ட மந்திரத்தை ஜபித்துக் கொடுக்கப்படும் அர்க்க்யம் வஜ்ராயுதத்தின் வலிவு பெற்று அவ்வசுரர்களை மாய்க்கின்றது. அதனால் அர்க்க்யம் கொடுப்பது மூவர்ணத்தினரின் கடமை, முக்கியமாகப் பிராமணனின் கடமை. இவர்கள் தெய்விகச் செயல் முறையில் உதவுவதற்காகவே இந்த மந்திரோபதேசம் பெறுகின்றனர். தெய்விக விதிப்படி இவர்கள் நடந்துகொள்ளாவிடினும் சூரியனின் பணி நின்றுவிடாதிருக்கச் சூரியனோடு அவன் முன் செல்பவர்களாக வாலகில்யர் என்ற ருஷிக்கூட்டம் இப்பணியைச் செய்து தெய்விகச் செயல் திட்டத்தில் குறை ஏற்படாது உதவுகின்றனர். அந்த முறையில் தெய்விகச் செயல் முறையில் உதவுகின்ற யஜமானர்களின் வடிவில் உள்ளவள் தேவி. (883)

165 धर्माधारा धनाध्यक्षा धनधान्यविवर्धिनी । 886
विप्रप्रिया विप्ररूपा विश्वभ्रमणकारिणी ॥ 889

தர்மாதாரா தநாத்த்யக்ஷா தநதாந்யவிவர்த்திநீ ।
விப்ரப்ரியா விப்ரரூபா விச்வப்ப்ரமணகாரிணீ ॥

**2964–01** தர்ம-ஆதாரா. தர்மத்திற்கு ஆதாரமாயிருப்பவள்.

2964–02 அந்தந்த தேசத்திற்கேற்றவாறு, சுயநோக்கின்றி நெறி வழுவாது நடப்பவர்கள் பல தலைமுறைகளாக நன்மை பயப்பதாகக் கண்டு வேதத்தில் கூறியுள்ள விதி-நிஷேதங்களைச் (செய்ய வேண்டியவை, விலக்கவேண்டியவை) கவனித்து அமைத்துக் கொண்ட வாழ்க்கை நடைமுறை தர்மமாகும். அந்த தர்மத்தைத் தெய்விக அரசின் நிர்வாகத்திற்கு ஆதாரமாகக் கொண்டவள் (தர்ம: ஆதாரோ யஸ்யா:). அந்த தர்மத்திற்கு ஆதாரமாயிருப்பவள். (தர்மஸ்ய ஆதாரபூதா) தொடர்ந்து சீராக எங்கும் தடையின்றிப் பெருகும் தர்மத்தின் பரந்த தாரையாக உள்ளவள். (தர்மஸ்ய ஆ தாரா), தர்மத்தை அனைத்திற்கும் ஆதாரமாக்கியவள். (தர்ம: ஆ தார: யயா) (884)

**2965–01** தந-அத்த்யக்ஷா. செல்வத்தைக் கண்காணிப்பவள்.

2965–02 செல்வம் சேரவேண்டிய இடத்தில் சேர்ந்து பயன் படத்தக்க முறையில் பயன்படுவதைக் கண்காணிப்பவள். தநாத்யக்ஷன்-குபேரன், பன்னிரு உபாஸகர்களில் ஒருவர். உபாஸனை பலத்தால் தேவியாகவே ஆகிவிட்டபடியால் அவர் வடிவில் இருப்பவள் தேவியே. (பா. 1640–02) (885)

2966-01 தந - தாந்ய - விவர்த்திநீ. செல்வத்தையும் தான்யத்தையும் பெருக்குபவள்.

2966-02 செல்வம் மிகுந்திருந்தும் நிறைவற்றவர் சிலர். தானியம் மிகுந்திருந்தும் உணவின்றித் தவிப்பர் சிலர். தெய்வ அருளின்மையே அதற்குக் காரணம். அவை அவர்களுக்குப் பயன் படவில்லை. தெய்வ அருள்பெற்றவனுக்குப் பயன்படும்படி செல்வத்தையும் தானியங்களையும் கொழிக்கச் செய்பவள் தேவி. (886)

2967-01 விப்ரப்ரியா. வேதியரிடத்தில் பிரியமுள்ளவள்.

2967-02 பிறப்பினால் பிராம்மணன். அவனுக்குரிய சுத்தி முறைகளை ஏற்றுத் தூய வாழ்க்கை வாழ்பவன் துவிஜன். வேதம் ஓதி அதன்படி நடப்பவன் விப்ரன். மூன்றிலும் நிறைவு பெற்றுப் பற்றற்றிருப்பவன் (அகாமஹதன்) சுரோத்திரியன். அத்தகைய விப்ரனாக வாழும் வேதியனிடத்தில் பிரியமுள்ளவள் தேவி. அத்தகைய வேதியன் தேவியின் திருவடிகளில் மட்டுமே நாட்டம் கொண்டிருப்பான். (விப்ராணாம் ப்ரியா ஆத்மத்வாத்) (887)

2968-01 விப்ர-ரூபா. வேதியர் வடிவினள்.

2968-02 வேதமோதித் தெய்விக வாழ்க்கை முறையைக் கடைப்பிடித்து வாழும் வேதியர் வடிவில் தோன்றுபவள் தேவி. பிறப்பால் மட்டும் பிராம்மணனாயிருப்பவனை, உபநயனம் முதலிய சுத்தி முறைகளால் தூயவனாக்கி, வேதமோதச் செய்து, அதன்படி நடக்க சிரத்தை வடிவில் நின்று உதவி, மனத்தைத் தெளிய வைத்துப் பற்றற்ற வாழ்க்கை நடத்தும் திடத்தை அளிப்பவள் தேவி. அந்த தெய்வீக அருள் பெற்ற வேதியனைப் பிறர் யாரேனும் அவமதித்தால் அவன் தவம் வளரும். மேலும் பற்றற்று உலகியலை விட்டு ஒதுங்கித் தெய்விக வாழ்வில் அதிகம் ஈடுபடுவான். அவனது பெருமை கண்டு பிறர் வணங்கி மதிக்கத் தொடங்கினால் அகங்காரம் ஏற்பட்டு அவன் தவம் குன்றும். அதனை உணர்ந்த வேதியன் பாராட்டுதல், வணக்கம் முதலியவற்றை எதிர்பார்க்காமல் ஒதுங்கித் தன் தவத்தை வளர்க்க முற்படுவது தேவியின் அருளால் மட்டும் எளிதாகும். வேதியர்களைத் தவச்சிலர்களாக்கி உருக்கொடுப்பவள் தேவி. (விப்ரான் ரூபயதி ஆப்யாயயதி.) (888)

2969-01 விச்வப்-ப்ரமண-காரிணீ. உலகை இயங்கச் செய்பவள்.

2969-02 உலகம் ஒரு நிலையில் இல்லாமல் எப்போதும் சுழன்று கொண்டே இருக்கிறது. அந்தச் சுழலுக்குத் தேவிதான் காரணம்.

உலகத்திலுள்ள சூரியன் சந்திரன் முதலானதும் ஒரே சீராக இயங்குவதும் தேவியின் சக்தியால் தான். உலகம் தோன்றுவதும் இருப்பதும் மறைவதும் மறுபடித் தோன்றுவதுமென சக்கிரம்போல் நியதிக்குட்பட்டு சுழல்வது அவள் ஸங்கல்பத்தால். ஒவ்வொருவரது உள்ளத்திலும் அந்தர்யாமியாயிருந்து ஆட்டுவிப்பவளும் அவளே.

2969-03 விஷ்ணு பகவான் ஆகாயப்பாதையில் காமாக்யா என்ற அஸம் தேசத்திலுள்ள (அஸம-மேடுபள்ளம் நிறைந்த-சமமற்ற தேசம். அஸ்ஸாம்) சக்தி பீடத்தின் மேல் சென்றதால் நிலை தவறிச் செய்வதறியாமல் திகைத்து நின்றார். அப்படி விச்வன் எனும் விஷ்ணுவைப் பிரமிக்கச் செய்தவள் தேவி. (விசுவன் என விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் முதல் திருநாமம்). பின்னர் லக்ஷ்மியானவள் தேவியை வழிபட்டதால் விஷ்ணு அக்கலக்கம் நீக்கப் பெற்றார் எனக் காளிகா புராணம் கூறும். (889)

166 विश्वग्रासा विद्रुमाभा वैष्णवी विष्णुरूपिणी । 893
अयोनिर्योनिनिलया कूटस्था कुलरूपिणी ॥ 897

விச்வக்ராஸா வித்ருமாபா வைஷ்ணவீ விஷ்ணுரூபிணீ I
அயோநிர் யோநிநிலயா கூடஸ்த்தா குலரூபிணீ II

**2970-01** விச்வ-க்ராஸா. உலகை விழுங்குபவள்.

2970-02 விச்வம்-காணப்படும் ஸ்தூல உலகம். (பா-1708, 1709) அதனை விழுங்குபவள். (பா-2803, 2804). இயக்கமுள்ளதும் (சரம்) இயக்கமில்லாததும் (அசரம்) ஆன உலகமனைத்தையும் விழுங்கித் தன்னுள் தேவி ஒடுக்கிக்கொள்கிறாள். பெருந்தீனியாகக் கொள்பவள் கொள்ளும் உணவு விச்வம். (890)

**2971-01** வித்ரும-ஆபா. பவழம் போன்ற காந்தி உள்ளவள்.

2971-02 பவழம் போன்ற மேனியின் நிறமும் காந்தியும் உள்ளவள். வித்-த்ரும-ஆபா-அறிவாகிய மரம் கிளைத்துத் தழைத்து விளங்கச் செய்பவள். (891)

**2972-01** வைஷ்ணவீ. விஷ்ணு சக்தியாயிருப்பவள்.

2972-02 விஷ்ணு-எங்கும் நீக்கமற நிரம்பியுள்ள பரம்பொருள். அதன் சக்தியாக உள்ளவள். விஷ்ணு-நாராயணன்; அவரது சக்தியான லக்ஷ்மி, அல்லது அவரது சகோதரியான நாராயணியாக உள்ளவள். (பா-1824) வைஷ்ணவீ என்ற திருநாமம் கொண்ட துர்க்கை சங்கு சக்கிரம் தாங்கியவள். விஷ்ணுவைப் படைத்த தாய். (892)

2973-01 விஷ்ணு-ரூபிணீ. விஷ்ணு வடிவினள்.

2973-02 விஷ்ணுவாகத் தோன்றியவள். எங்கும் பரவிய வடிவம் உள்ளவள். பரம்பொருள் எங்கும் நீக்கமற நிறைந்துள்ளதை நிரூபிப்பவள் (விஷ்ணும் ரூபயதி). பெண் வடிவில் லலிதாவாகவும் ஆண் வடிவில் நாராயணனுகவும் பராசக்தி தோன்றுகிருள். அப்படி ஆண் வடிவில் விஷ்ணுவாகத் தோன்றியவள். (893)

2974-01 அயோநி:. காரணமற்றவள்.

2974-02 தேவியின் ஸங்கல்பத்தால் மூலபிரகிருதி முதலான உலகம் தோன்றிற்று. உலகின் காரணம்-யோநி, தேவி. அவளுக்கும் காரணம், பிறப்பிடம் என ஒன்றில்லை. தேவி பிறப்பற்றவள். அதனுல் அயோநி. யோநி:-இடம், இருப்பிடம். தேவி, எங்குமுள்ளவளானதாலும் அவளே அனைத்திற்கும் ஆதாரமானதாலும் அவளை ஒரு இடத்தில் இருப்பதாகக் குறுக்க முடியாது. அ-விஷ்ணு. அவரது தாய்-அயோநி:. (894)

2975-01 யோநி-நிலயா. உலகனைத்திற்கும் தோற்றுவாயாகவும் ஆதாரமாயுமிருப்பவள்.

2975-02 யோநி - பிறப்பிடம், நிலயம் - ஒய்வு பெறுமிடம். இரண்டாயுமிருப்பவள் தேவி. மூலப் பிரகிருதியாக ஆகி உலகைத் தோற்றுவித்தவள். பின் ஆதார சக்தியாக இருந்து உலகனைத்தையும் தாங்கிப் பின் தான்மட்டும் மீதமாகி மற்றதைத் தன்னுள் அடக்கி அமைதியுறச் செய்தவள்.

2975-03 யோநி-மாயை. அதனிடம் பிரதிபலித்து அதனைத் தன் இருப்பிடமாகக் கொண்டவள்.

2975-04 யோநி-திரிகோணம். ஒன்பதாவது ஆவரணமாகிய திரிகோணத்தில் பிந்து வடிவில் தங்கியிருப்பவள். (பா. 0911-25).

2975-05 யோநி - ஏ எனும் எழுத்து. (பா. 1806-3) அது சக்தி அக்ஷரம். (பா. 1104-03) அதில் வசிப்பவள்.

2975-06 பிரும்மா முதலிய ஐந்து தொழில் புரிபவர் ஐவரும் உலகத்திற்கு யோநி-காரணமாக இருப்பவர்கள். அவர்கள் ஒடுங்குமிடம் தேவி. (பா. 0907-03, 1701-02) (895)

2976-01 கூட-ஸ்த்தா. பட்டரைக்கல் போல் அசையாதிருப்பவள்.

2976-02 கூடம் ஏமாற்று சக்தி உள்ளது; மலைச்சிகரம், கொல்லரின் பட்டரைக்கல், கூட்டம், கூறு, பாதுகாப்புள்ள அரண்மனை வாயில், 'நான்' என்பதன் தன்னிலையான ஆனந்தத்தை மறைத்து

ஆனந்தம் வெளியிலிருப்பதாகக் காட்டும் அஜ்ஞானம்-அவித்யை, கூடமாகும். அதனைக் கண்காணிப்பவளாக அதன்மேல் இருப்பவள். கூடம் எனும் அஜ்ஞானம் இருப்பதையே தேவியை அறிந்த பிறகு தான் உணர்கிறோம். அப்போது அந்த அஜ்ஞானத்தின் இருப்பிட மாகவும் ஆகிறாள் தேவி. கூடம்-மலைச்சிகரம். மலைச்சிகரம் காற்று மழை முதலியவற்றால் பாதிப்புறுதிருப்பதுபோல், எதனாலும் பாதிக் கப்படாதவள். கொல்லர் பட்டரையின்மேல் உலோகப் பொருளை வைத்துச் சம்மட்டியால் அடிப்பர். அதனால் அடிபடும் அந்த உலோ கப்பொருள் நீண்டு சிதைந்து உருமாறும். ஆனால் அடியைப் பெறும் உலோகத்தைத் தாங்கி நிற்கும் பட்டரைக்கல் சிறிதும் உரு மாறாது. உலகம் பல்வேறு மாறுதல்களுக்கு உட்படுகையில் அதற்கு ஆதாரமாயுள்ள தேவி பட்டரைக்கல் போல் மாறுதலற்றி ருப்பாள். (கூடவத் திஷ்டதி). கூடம்-கூட்டம். கூடியுள்ள அனேக பிரும்மாண்டங்கள் நிலைத்திருக்க அவைகளின் ஆதாரமா யிருப்பவள். (கூடாநாம் ஸ்த்தா ஸ்த்திதி: யஸ்யாம்) வாக்பவம் காம ராஜம் சக்தி எனப்பெறும் கூடங்களில் இருப்பவள். (பா. 1101-03) ஸ்ரீநகரத்தின் வாயில்களாக அமைந்த சக்தி முக்கோணங்களில் உள்ளவள். (பா. 0911-15). ஜீவனிடமுள்ள சைதன்யத்திற்கு ஆதாரமாயுள்ள மூலசைதன்யமாயிருப்பவள். (896)

2977-01 குல-ரூபிணீ. குலவடிவினள்.

2977-02 கௌல மார்க்கம்-வெளிப்படையான வழிபாட்டு முறை. அதனை வடிவமாகக் கொண்டவள். தாய் தந்தை தனயன் என்ற மூன்று, ஆசாரியன் சீடன் கல்வி என்ற மூன்று, அறிபவன் அறியப்படும் பொருள் அறிவு என்ற மூன்று என்று இவ்வாறு முக்கோணவடிவில் ஒன்றோடொன்று தொடர்பு கொண்ட குலம், வம்சவழியில் வந்த ஆசாரம், நெருக்கம் மிக்க தொடர்பு, இடையறாத போதனை முறை இவை அனைத்தும் குலமாகும். இவைகளின் வடிவில் இருப்பவள் தேவி. (897)

167 वीरगोष्ठीप्रिया वीरा नैष्कर्म्या नादरूपिणी । 901
विज्ञानकलना कल्या विदग्धा बैन्दवासना ॥ 905

வீரகோஷ்ட்டீப்ரியா வீரா நைஷ்கர்ம்யா நாதரூபிணீ ।
விஜ்ஞாநகலநா கல்யா விதக்தா பைந்தவாஸநா ॥

2978-01 வீர – கோஷ்ட்டீ - ப்ரியா. வீரர்களின் கோஷ்டியில் பிரியமுள்ளவள்.

2978-02 வீரர்கள்-பெரிய லக்ஷ்யத்திற்காக உடல் பொருள் ஆவி எனும் அஹங்கார-மமகாரங்களில் பற்றற்றவர்களாக முழு மனத்துடன் ஈடுபடுபவர்கள்-பக்தர்கள், ஞானிகள். (பா. 2220, 2916) கோஷ்டீ-பலவிதக் கருத்துக்களும் பேச்சுகளும் கலந்து கொள்ளுமிடம்-ஸபை (காவ:–பஹுவிதா வாச: யத்ர திஷ்டந்தி.) அதில் தேவியைப் பற்றிய பலவகைக் கருத்துக்கள் பரக்கப் பேச படும். அதில் விருப்பமுள்ளவள். (898)

2979-01 வீரா. வீரியமுள்ளவள்.

2979-02 வீரியமுள்ளவள்; வீர கோஷ்டியில் ஈடுபடும் வீரா வாக அல்லது வீரர் வடிவில் இருப்பவள்; நல்ல துணையாக நிற்கும் கணவரும் புத்திரர் முதலானோரும் கொண்டவள் வீரா எனப் படுவாள். (899)

2980-01 நைஷ்கர்ம்யா. கர்மத் தொடர்பற்றவள்.

2980-02 கர்மம்-வினை, புண்யம் பாபம் எனப்படுபவை. அவைகள் தேவியிடம் ஒட்டா. (பா. 1403-02) வினைத் தொடர் பற்றவள். ஈச்வர அர்ப்பண புத்தியுடன் செய்யப்படும் வினை புண்ய பாபத் தொடர்பற்றது. அப்போது அது வினைத்தன்மையையே இழந்துவிடுவதால் நைஷ்கர்ம்யமாகிறது. அதனால் அடையப் பெறுபவள், அந்த ஈசுவரார்ப்பண புத்தியுடன் வினைபுரியும் மனப் பான்மையாயிருப்பவள் தேவி. அவளருளின்றி அம்மனப்பான்மை சித்திக்காது. (900)

2981-01 நாத-ரூபிணீ. நாத வடிவினள்.

2981-02 நாதம்-ஓங்காரம் முதலியவற்றின் முடிவில் 'ம்'-ன் ஒலி நீட்சியாக-கார்வை ஒலியாக ஒலிக்கும் நாதஒலி. (பாரா-1825) அநாஹதஸ்தானமான இதயத்தில் மோதாமல் ஏற்படும் ஒலி அநாஹதமெனும் நாதம் (பா-1905). யோகிகளால் உணரக்கூடிய ஒலி வடிவம். உள்நோக்கிய மனத்தால் அதனை உணர்பவர்கள் கண்கள் கசிய மயிர் கூச்செரிய ஆனந்த அனுபவத்தில் மூழ்கியிருப் பார்கள். அந்த நாதத்தால் (ரூபிதம்) உணரப்படும் ஆனந்த வடிவில் உள்ளவள் தேவி. (901)

## அதிகாரம் 30

# தேவியின் அருளைப் பெற வழிகள்

**3001-01** விஜ்ஞான-கலநா. விஜ்ஞானத்தைப் பெருக்குபவள்.

**3001-02** பதினான்கு அல்லது பதினெட்டு விதமான வித்யா ஸ்தானங்களின் (பா-0118-03, 1882-03) சிறந்த பயிற்சியை உண்டாக்கி, அதனால் ஏற்பட்ட விஜ்ஞானத்தை-விஷய வாரியான அறிவைப் பலவகைகளில் பெருக்கி அழகுபடப் பயன்பெறச் செய்பவள் தேவி. (கலனம்-பெருக்குதல்-அழகுபடப் பயன்படுத்துவது). விஜ்ஞானம்-பரம்பொருளின் அனுபவம்-பிரும்மஸாக்ஷாத்காரம் எனப் படுவது ; அதனை அமைத்துக் கொடுப்பவள். (902)

**3002-01** கல்யா. கலைகளில் திறமை பெற்றவள்.

**3002-02** விஜ்ஞானம் விஷய வாரியான அறிவைத் தந்து வாழ்க்கைக்கு அழகாகப் பயன்படும்போது அதன் முறைகள் கலைகளாக அமைகின்றன. அத்தகைய அழகிய விஜ்ஞான நடைமுறைகளில்-கலைகளில்-கைதேர்ந்தவள் தேவி. கலநம்-கற்பனைக் கண் கொண்டு உருவகப்படுத்துவது. அப்படிக் கற்பனையால் உருவகப் படுத்தக் கூடியவள் கல்யா. கல்யம்-விடியற்காலை, மனதிற்குத் தெளிவும், உற்சாகமும் தரும் நேரம் ; அந்த வேளையாக இருப்பவள். கல்யா-நோயற்றவள், செயலில் திறமையுடன் ஈடுபடுபவள், மங்களமான பேச்சாக இருப்பவள். (பா-1850) (903)

**3003-01** விதக்தா. சாதுரியமுள்ளவள்.

**3003-02** செய்யும் செயலில் சாதுரியம்-செயல் நேர்த்தி துலங்கும்படி செய்பவள். (904)

**3004-01** பைந்தவ-ஆஸநா. பிந்துவைத் தன்னிருப்பிடமாகக் கொண்டவள்.

**3004-02** ஸ்ரீசக்கிரத்தில் நடுவிலுள்ள முக்கோணத்தில் உள்ள சிறு வட்டம் பிந்து (பா-0911-26, 2009-02). ஆஜ்ஞாசக்கிரத்தின் இடையே புருவங்களுக்குமேல் உள்ள சுழி பிந்து. மூன்றுமூன்றாகச் சேருபவை அனைத்தும் பிந்து (பா-2954-02). இந்த பிந்துக்களாலான ஆஸனத்தைக் கொண்டவள் தேவி. (905)

168 तत्त्वाधिका तत्त्वमयी तत्त्वमर्थस्वरूपिणी। 908
सामगानप्रिया सोम्या सदाशिवकुटुम्बिनी॥ 911

தத்த்வாதிகா தத்த்வமயீ தத்த்வமர்த்தஸ்வரூபிணீ ।
ஸாமகாநப்ரியா ஸோம்யா ஸதாசிவகுடும்பிநீ ॥

3005-01 தத்த்வ-அதிகா. தத்துவங்களுக்கு அப்பாற்பட்டவள்.

3005-02 முப்பத்தாறு தத்துவங்கள் உலகமாகத் தோன்றுகின்றன. தோன்றும் உலகம் அநித்தியம். உலகத் தோற்றத்திற்கு ஆதாரமான அந்தத் தத்துவங்கள் பிரளய காலம் வரை நித்தியமானவை. பிரளய காலத்தில் மாயையில் அவை மறைந்துவிடுகின்றன. மூலப்பொருளாக, ஸ்ருஷ்டி தொடங்கி பிரளய காலம் வரை இருந்து, வெவ்வேறு தோற்றங்களைப் பெறுபவை தத்துவங்கள். தத்துவங்களாலான சரீரங்கள் முதலியவை மாறுதலடைபவை. அதனுல் அநித்யம். சரீரம் முதலியவை அழிவதென்பது இயற்கை நிலையான தத்துவங்களாகப் பிரிந்து நிற்பதே. மறுபடி தத்துவங்கள் கூடி உருப்பெறுகின்றன. அத்தகைய தத்துவங்களுக்கப்பாற்பட்டவள், அவை மாயையில் மறையும்போதும் இருப்பவள், அவைகளின் தோற்றத்திற்குக் காரணமான மூலப் பிரகிருதிக்கும் முற்பட்டவள். தத்துவங்களில் மிகப்பெரிது பரசிவ தத்துவம். அதனையும் விளக்கவல்ல சித்சக்தி. (906)

3006-01 தத்த்வமயீ. தத்துவமாக இருப்பவள்.

3006-02 ஸத் எனும் ஆத்மதத்துவம், சித்தெனும் வித்யா தத்துவம், ஆனந்தம் எனும் சிவ தததுவம் இம் மூன்று தத்துவங்களின் ஸமஷ்டியாயும், வியஷ்டியாயும் இருப்பவள். பூமி முதல் மாயை வரையிலுள்ள தத்துவங்கள் ஆத்மதத்துவம், ஸதாசிவன் வரை வித்யாதத்துவம், சக்தியும் சிவனும் சிவதத்துவம். இவை எல்லாவற்றின் ஸமஷ்டி துரீயம். பிருமத்தின் ஸத் சித் ஆனந்தம் என்ற மூன்றில் சிவதத்துவமாகிய சிவசக்திகளிடத்தில் ஆனந்த அம்சமும், ஸதாசிவன், ஈச்வரன், சுத்தவித்யை என்ற வித்தியா தத்துவத்தில் சித் அம்சமும், மாயை முதல் பூமிவரை உள்ள ஆத்ம தத்துவத்தில் ஸத் அம்சமும் அதிகமாக வெளிப்படையாகக் காண்கின்றன. சிவதத்துவத்தில் மற்ற இரு அம்சங்களும் மறைவதில்லை. ஆனுல் ஆனந்தத்தின் அளவு மற்ற இரண்டும் வெளிப்படுவதில்லை. வித்யாதத்துவத்தில் சித் அம்சம் நன்கு வெளிப்படும். அதைவிடக் குறைந்த அளவில் ஸத் அம்சம் வெளிப்படும். ஆனந்த அம்சம்

மறைந்திருக்கும். மாயா தத்துவங்களில் ஸத் அம்சம் மட்டுமே வெளிப்பட்டிருக்கும். மற்ற இரண்டும் மறைந்திருக்கும். தேவி பரப்பிரும்மமே. (2902-02) அவள் மூன்று தத்துவங்களின் தோற்று வாய். ஸத்-சித் ஆனந்தம் என்ற மூன்று அம்சங்களும் பூர்ண மானவள். (பா. 2144) தத்துவங்கள் பிரளயம் வரை அழியாதிருப் பதற்குக் காரணம், அவை 'தத்'எனும் பரம்பொருளின் அம்சமாக இருப்பதால்தான். அத்தகைய தத்துவமாக இருப்பவள். (தத்த்வமயீ என இங்கு ஒரே நாமம். தத், த்வம், அயீ என (நா. 425-427) அங்கு பிரிந்துள்ளது.) (907)

3007-01 தத்-த்வம்-அர்த்த-ஸ்வரூபிணீ. பரமாத்ம-ஜீவாத்ம ஐக்கியத்தைக் கூறும் தத்த்வமஸி என்ற மஹாவாக்கி யத்தின் பொருளாயிருப்பவள்.

3007-02 தர்மங்களை விட்டு லக்ஷணையால் தர்மியை மட்டும் 'தத்', 'த்வம்' என்ற சொற்களுக்குப் பொருளாக்கி, அந்த நிர்விசேஷ மான சுத்தமான பிரும்மமே நிர்விசேஷமான சுத்தமான நீயாக இருக்கிறாய் எனத் தத்வமஸி என்ற மஹாவாக்கியத்தின் பொருளாக அனுபவத்தால் உணரப்படுபவள். (பா-1889, 2145, 2146) (908)

3008-01 ஸாம-கான-ப்ரியா. ஸாமவேத கானத்தில் விருப்ப முள்ளவள்.

3008-02 வேள்விகளில் அவி (ஹவிர்ப்பாகம்) பெற வரும் தேவதைகளின் பெருமைகளைக் கானமாகப் பாடும்படி மந்திர-ஸ்வர அமைப்பு கொண்டது ஸாமவேதம். தேவதைகளின் திருப்திக்கென நடைபெறும் வேள்வி வடிவில் இருப்பவளும் (பா-2820) வேள்வி களில் ஈடுபாடு கொண்டவளும் (பா-2961, 2962) ஆன தேவி வேள் விகளில் பாடப்பெறும் ஸாமகானத்தை மிகவும் விரும்புகிறாள். பிரும்மநிலை எய்தியவன் மனக்களிப்பு மேலீட்டால் பாடும் பாட்டு ஸாமகானம். அதில் திருப்தி அடைபவள். ("ஏதத் ஸாம காயந் ஆஸ்தே", தைத்திரீய உபநிடதம்.) ஸாமவேதத்திலும் கானத் திலும் விருப்பம் கொண்டவள். (909)

3009-01 ஸோம்யா. சந்திரனைப்போல் மனத்திற்கு இதமா யிருப்பவள்.

3009-02 ஸோமன்-சந்திரன், பச்சைக் கற்பூரம், உமையுடன் கூடிய பரமசிவன், ஸோமயாகம். சந்திரனைப்போல் மனத்திற்கு இதமாக ஆனந்தம் தருபவளாக இருப்பவள். பச்சைக்கற்பூரம் போல் குளிர்ச்சி தருபவள். உமையுடன் கூடிய பரமசிவனைத் தன் பகுதியாகக் கொண்டவள், சிவனைச் சார்ந்தவள், ஸோமயாகத்தில்

பங்குகொள்பவள். 'ஸௌம்யா' என்றும் பாடமுண்டு. பொருள் இதே. மிக்க அன்புடன் தனக்குப் பிரியமானவரை அழைக்கும் போது ஸௌம்ய என்று கூப்பிடுவது உண்டு. அத்தகைய அன்பிற்கு உகந்தவள். (910)

**3010-01** ஸதாசிவ-குடும்பிநீ. ஸதாசிவனது மனைவி.

3010-02 எப்போதும் மங்களமான சொல்லும் செயலும் எண்ணமும் கொண்டவர் ஸதாசிவன். அவரது குடும்பத்தைத் தன் குடும்பமாகக் கொண்டவள் தேவி. அவரது செயலையும் சொல்லையும் எண்ணத்தையும் தன் செயலாகவும், சொல்லாகவும் எண்ணமாகவும் கொண்ட மனம் ஒருமித்த இல்லாள். (911)

169 सव्यापसव्यमार्गस्था सर्वापद्विनिवारिणी । 913
स्वस्था स्वभावमधुरा धीरा धीरसमर्चिता ॥ 917

ஸவ்யாபஸவ்யமார்க்கஸ்த்தா ஸர்வாபத்விநிவாரிணீ 1
ஸ்வஸ்த்தா ஸ்வபாவமதுரா தீரா தீரஸமர்ச்சிதா 11

**3011-01** ஸவ்ய - அபஸவ்ய - மார்க்க - ஸ்த்தா. வலத்திலும் இடத்திலும் வழியிலும் உள்ளவள்.

3011-02 தேவி வலத்திலும் இடத்திலும் வழியிலும் துணையாக நின்று உதவுகிருள். ஸவ்யம்-படைத்தல், அபஸவ்யம்-ஒடுக்குதல், மார்க்கம் - இவைகளுக்கு இடையேயுள்ள காத்தல் இம் மூன்று தொழில்களின் வழியிலும் உள்ளவள். ஸவ்யம்-வேதமுறையில் வழிபாடு, ஸமயாசாரம். அபஸவ்யம்-தந்திர முறையில் வழிபாடு, கௌலம். இவ்விரண்டு வழிகளாலும் வழிபடத்தக்கவள்.

3011-03 சூரியன் செல்லும் பாதை மூன்று. 27 நக்ஷத்திரங்கள் 9 வீதிகளாக அமைகின்றன :—

1. நாகவீதி—அச்விநி, பரணி, கார்த்திகை.
2. கஜவீதி-ரோகிணி, மிருகசிர்ஷம், திருவாதிரை.
3. ஐராவதவீதி-புனர்பூசம், பூசம், ஆயில்யம்,
இம்மூன்று வீதிகள் உத்தரமார்க்கம்.
4. ஆர்ஷதவீதி-மகம், பூரம், உத்தரம்.
5. கோவீதி-ஹஸ்தம், சித்திரை, ஸ்வாதி.

6. ஜாரத்கவவீதி-விசாகம், அனுஷம், கேட்டை,
இவை மூன்றும் மத்தியமமார்க்கமாகும்.

7. அஜவீதி-மூலம், பூராடம், உத்தராடம்.

8. மிருகவீதி-திருவோணம், அவிட்டம், சதயம்.

9. வைச்வாநரவீதி-பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி,
இவை மூன்றும் தக்ஷிணமார்க்கமாகும்.

இம்மூன்று மார்க்கங்களிலும் இருந்து சூரியன் முதலியவர்களின் ஸஞ்சாரத்தைக் கட்டுப்படுத்துபவள்.

3011-04 ஸவ்யம் - தேவயானம், அபஸவ்யம் - பித்ருயானம். இவ்விரு வழிகளின் நடுவில் இருந்து அவ்வவ்வழி செல்பவர்களைக் காப்பவள். வேதத்தின் ஞான காண்டத்தில் கூறப்பட்டுள்ள ஆத்மஸாதனத்தால் சரீரத்தின் முடிவில் சரீரத் தொடர்பைவிட்டு பஞ்சபூதங்களின் தொடர்புள்ள உலகங்களைத் தாண்டிச் செல்லுதல் நிர்வாணம் எனும் மோக்ஷமாகும். அதைத் தேவயானம்-ஒளிமிக்க வழி என்பர். அது ஸவ்யமார்க்கம். மற்றொன்று வேதத்தின் கர்ம காண்டத்தில் கூறப்பட்டுள்ள கர்மாக்களைச் செய்து உடலைப் பெற்றதற்கான கடமைகளை நிறைவேற்றி மேலுலகங்களுக்குச் செல்வது. திரும்பப் பிறவி தரும் வழியானதால் புகையடைந்த வழி. இது அபஸவ்யமார்க்கம். இவ்விரு வழிகளாலும் அடையத் தக்கவளாக இவ்வழிகளில் உள்ளவள்.

3011-05 வழிபாடுகளில் முக்கியமாக வழிபடப் பெறும் தேவதையை ஒட்டிப் பல அங்க தேவதைகளை வழிபடவேண்டிவரும். வேதத்திலும் ஸ்மிருதிகளிலும் கூறப்பட்ட கர்மங்களில் பல தேவதைகளை வழிபட நேரும். அவைகளை வேதம் முதலியவை கூறியபடி வழிபடுவது தக்ஷிணமார்க்கம் ஆகும். இதன்படி தேவர்கள், ருஷிகள், பித்ருக்கள் என்ற மூவருக்கும் திருப்தி ஏற்படும். இம்மூவரும் நமது வாழ்க்கைக்கு உதவியவர்கள். மழை முதலியவற்றால் உணவு முதலியவை நல்லமுறையில் கிடைக்க உதவியதால் தேவர்களுக்கும், அறிவூட்டும் நூல்களை வெளியிட்டு அறிவொளி தந்ததால் ருஷிகளுக்கும், வாழையடி வாழையாக வம்சம் துலங்க உதவியதால் பித்ருக்களுக்கும் நாம் ஒவ்வொருவரும் கடன்பட்டுள்ளோம். தக்ஷிணமார்க்கத்தால் கருமங்களைச் செய்ய இக்கடனிலிருந்தும் விடுபடுகிறோம். வாமமார்க்கம் இந்த தக்ஷிணத்திலிருந்தும் வேறுபடுகிறது. வேதம் முதலியவற்றில் கூறிய கருமங்களைச் செய்யும் போது, மற்ற அங்கதேவதைகளை வழிபடாமல் முக்கியமாகத் தனது

உபாஸனுமூர்த்தியான தேவதையே உலகத்தைக் காக்கிறது என்ற நம்பிக்கையுடன் அதனை எல்லாவற்றிலும் வழிபடுவது வாமம். சூர்ய னுக்கோ வாயுவிற்கோ ருஷிகளுக்கோ பித்ரு தேவதைகளுக்கோ ஹோமம் செய்யவேண்டிய இடத்திலும் தன் தேவதையையே பாவித்து வழிபடுவது வாமமாகும். இதில் முன் கூறிய கடன்களி லிருந்து விடுதலை பெருத பாபம் நேரிடும்.

3011-06 ஜனுதிபதி பல அதிகாரிகளை நியமித்துத் தன் பணிகளை அவர்களிடம் பங்கிட்டுக் கொடுத்து தேசத்தை ஆள்கிருர். நம்மோடு தொடர்பு கொள்பவர்கள் இவ்வதிகாரிகளே. ஜனுதிபதி தான் ஆள்கிருர்; இவர்களுக்குத் தனித்து ஆளும் அதிகாரமில்லை என்பது உண்மையே. எனினும் இவ்வதிகாரிகளை மதிக்காமல் எதற்கும் நேரிடையாக ஜனுதிபதியுடன் தொடர்பு கொள்வதால் சித்தி எளிதில் கிடைக்காது. தாமதமாகலாம். இவ்வதிகாரிகளை மதிக்காதிருப்பது தன்னை மதிக்காததாகும் என ஜனுதிபதி கருதுவ தற்கும் இடமுண்டு. வாமமார்க்கம் இத்தகைய சிக்கல்கள் கொண்டது. பெற்ற தாயை மதிக்கிரும். அவளையே தேவதை யாகவும் வழிபடலாம். வழிபாட்டு முறையில் இது எளிதாகலாம். ஆனுல் தாயைத் தாயாக மதித்து அவளுடைய அன்பைப் பெற்ற மைக்காகச் செய்யவேண்டிய கடமைகளைச் செய்யவேண்டியது அவசியம். தேவதையாக வழிபடும்போது இந்த அன்புக் கடமையி லிருந்தும் தவறுகிரும். அதுபோல் தேவர்கள் முதலியவர்களுக்கு நாம் ஆற்றவேண்டிய கடமைகளாகிற கடன்கள் விலகாததால் முக்திபெறுவதில் இடையூறுகள் நேரும். வாமம் குறுக்குவழி. உபாஸனை ஒரே தேவதையைப் பற்றியதானதால் செயலளவில் எளிதானது. ஆனுல் பலன் கிடைப்பதில் தாமதம் ஏற்படலாம். தக்ஷிணம்-நேர்வழி, சிக்கலின்றி முறைப்படி செல்வதால் செயலள வில் சற்று நீண்டதாயினும் பலன் சீக்கிரமாகக் கட்டாயம் கிடைக் கும். இவ்விரு வழிகளாலும் தேவியை வழிபடலாம். ருசிக்கேற்ப அவரவர் ஒரு முறையைப் பின்பற்றுவர்.

3011-07 திரிபுரபைரவீ முதலிய சில தேவதைகளின் உபாஸனை வாமமார்க்கத்திலேயே அமைந்துள்ளது. சாரதா முதலிய சில தேவதைகளின் உபாஸனை தக்ஷிண மார்க்கத்திலேயே அமைந்துள்ளது. அந்தந்த தேவதைகளை அததன் வழியிலேயே உபாசிப்பதுதான் முறை. அவ்வவ்வழிகளால் உபாசிக்கத்தக்க பல வடிவங்கள் கொண்டவள் தேவி.

3011-08 குண்டலினீ சக்தி முதுகின் முள்ளந்தண்டில் உள்ள மூன்று நாடிகள் மூலம் இயங்குகிறது. இடை என்ற இடது பக்கத்து நாடி சந்திரதத்துவத்தால் ஆனது. பிங்களை என்ற வலது பக்கத்து நாடி சூரியதத்துவத்தால் ஆனது. நடுவில் உள்ள ஸுஷும்நா எனும் நாடி குண்டலினி மேல் சென்றிறங்கும் பாதை. வலது மூக்கால் சுவாசத்தை உள்ளிழுத்து இடது மூக்கால் வெளியே விட சூர்ய சக்தி கூடும். இடது பக்கத்தால் சுவாசத்தை உள்ளிழுத்து வலது மூக்கால் வெளியேவிட சந்திர சக்தி கூடும். இந்த மூன்று நாடிகளிலும் ஸஞ்சரிக்கும் பல்வேறு சக்திகளாக இருப்பவள் தேவி. (912)

**3012-01 ஸர்வ-ஆபத்-விநிவாரிணீ. எல்லா ஆபத்துகளையும் தடுப்பவள்.**

3012-02 வாம-தக்ஷிண மார்க்கங்களில் உபாஸனை செய்யும் வாய்ப்பு பெருதவர்களும் அவளது பெயரைக் கூறுவது, அவளை நினைப்பது முதலிய சிறிய ஸேவைகளால் அவளது அருளைப் பெறலாம். அவர்களுக்கு எதிர்பாராமல் நேரும் துன்பங்களை விலக்குகிருள் தேவி. (ஆ-ஸமந்தாத்-நான்கு புறங்களிலிருந்தும் எதிர்பாராமல்; பத்யதே-விருப்பத்திற்கெதிராக தவிர்க்கமுடியாதபடி நேர்கிறது என்பதால் ஆபத்-எதிர்பாராத துன்பம்.) (913)

**3013-01 ஸ்வ-ஸ்த்தா. தன் நிலையில் உள்ளவள்.**

3013-02 துன்பமும் பயமும் உணரப்படுவதால் தன்நிலை கெடுகிறது. தன்நிலை கெடுவதால் நோய். தன்நிலையில் இருப்பது ஆரோக்கியம். ஸத், சித், ஆனந்தம் என்ற தன் நிலையில் நிலைத்திருக்கும் தேவி துன்பத்திற்கும் பயத்திற்கும் நோய்க்கும் உட்படமாட்டாள்.

3013-03 ஸ்வ:-மேலுலகம். அதிலுள்ளவள். ஸ்வம் - தனது இடம், பெருமை, அதில் நிலைத்திருப்பவள். மற்றவர்கள் இருப்பதற்கு ஆதாரமான இடம் தேவை. தேவி தன்னிடமே நிலை பெற்றிருக்கிருள். அவளைத் தவிர வேறிடமில்லை. (914)

**3014-01 ஸ்வ - பாவ - மதுரா. இயற்கையாக இனிமையாக இருப்பவள்.**

3014-02 மற்றென்றின் சேர்க்கையால் இனியதாயிருப்பவை பல. தேவி இயற்கையாகவே இனியவள். ஸ்வ-பாவ:-அவளது தன் நிலை, அது எப்போதும் இனியதே. அதனுல் அவளுக்கு மற்றொரு இனியதின் தேவை இல்லை.

3014-03 ஸ்வ-பாவ:-தனது சொந்த இருப்பிடம். மதுரையைத் தனதுசொந்த இருப்பிடமாகக் கொண்டவள் (மீனுக்ஷி). (915)

3015-01 தீரா. புத்தியைச் செலுத்துவதில் வல்லவள்.

3015-02 புத்தியைத் தன் விருப்பப்படி குறிப்பிட்ட பணியில் ஒரே முனைப்புடன் செலுத்துவதில் வல்லவள் தீரா. (தியம் ஈரயதி) தன் விருப்பப்படி செல்லும் புத்தியைக் கோருபவர்களுக்குத் தருபவள் தீரா. (தியம் ராதி–ததாதி) தைரியமுள்ளவள், வல்லவள். புத்தியைத் தரும் தசமி எனும் திதியாயுள்ளவள். (916)

3016-01 தீர-ஸமர்ச்சிதா. தீரர்களால் வழிபடப்பெற்றவள்.

3016-02 தீரர்கள் ஒருமுனைப்புடன் தேவியை வழிபடுவார்கள். அவள் நரகத்தில் தள்ளினுலும், உலக ஸாம்ராஜ்யத்தை ஆளும்படி செய்தாலும் பாதிப்புருதபடி அவளது திருவடிகளைப் பற்றி நிற்பார்கள். தன்னை மீட்கும் பொறுப்பு தேவியினுடையது. தன் புத்தி கலங்காமல் நல்வழியில் நின்று தேவியிடம் அளவுகடந்த பக்தி கொள்வதற்காகவும் தேவியையே வழிபடுவார்கள். (திய: ஈராய-ஈரணுய ஸமர்ச்சிதா.) (917)

170 चैतन्यार्घ्यसमाराध्या चैतन्यकुसुमप्रिया । 919
सदोदिता सदातुष्टा तरुणादित्यपाटला ॥ 922

சைதந்யார்க்க்யஸமாராத்த்யா சைதந்யகுஸுமப்ரியா ।
ஸதோதிதா ஸதாதுஷ்டா தருணுதித்ய பாடலா ॥

3017-01 சைதன்ய-அர்க்க்ய-ஸமாராத்த்யா. சுய உணர்வையே அர்க்க்யமாகக் கொடுத்து வழிபடப் பெறுபவள்.

3017-02 சைதன்யம் (சேதனு-சித்) நிராகாரஜ்ஞானம், அறிபவன், அறியப்படும் பொருள், அறிவு என்ற த்ரிபுடியை எதிர்பாராததும் திரிபுடியால் ஏற்படும் அறிவிற்குக் காரணமாயிருப்பதுமான உள்ளறிவு, சுய உணர்வு, ஸ்வானுபூதி எனப்படுவது. அர்க்க்யம்-வழிபடப்பெறும் தேவதையை வரவேற்று (ஆவாஹனம்) திருவடிகளை அலம்பிப் (பாத்யம்) பின் கைகளை அலம்புவதற்காக நீர்வார்ப்பது அர்க்க்யமாகும். (அர்க்க்யம்–மதிப்புள்ளது, விலை உயர்ந்தது, சிறந்தது) மிகச் சிறந்த நீரில் அருகம்புல், தாமரை, சந்தனம், அக்ஷதை சேர்த்துக் கையலம்புவதற்காக அளிப்பது அர்க்க்யம் எனும் உபசாரம். தேவி வழிபாட்டில் ஸாமான்யார்க்க்யம்

விசேஷார்க்க்யம் என்ற இருவகைப்பட்ட தூய நீரை வைத்திருப்பர். வழிபாடெல்லாம் முடிந்த பிறகு தேவதை பூர்ண திருப்தி அடைந்து விட்டதாகப் பாவித்துக் கடைசியில் பால் முதலியவற்ருல் திருப்தி ஊட்டுவதும் அர்க்க்யமாகும். வெளிப்படையான உபசாரங்களைவிட மானஸமான உபசாரங்களால் வழிபடுவது மிகச் சிறந்தது. அதை விடச் சிறந்தது நமது உள்ளுணர்வுகளையே பொருளாகக்கொண்டு வழிபடுவது–பாவனு மார்க்கம். இதைப் பராபூஜா என்பர். பாவனோ பனிஷத்தில் இதன் விளக்கத்தைக் காணலாம். "கூர்த்த மெய்ஞ் ஞானத்தால் கொண்டுணர்வார் தம் கருத்தின் நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே" என்று திருவாசகம் (சிவபுராணம்) கூறும். அந்த முறையில் நுண்ணிய உள்ளுணர்வாகிய சைதன் யத்தையே அர்க்க்யமாக அளிப்பதால் தேவி திருப்தி அடைகிருள். அவளருளால் பெற்ற அந்தப் பேரறிவை அவளுக்கே அளிப்பதால் அவளைத் திருப்தி செய்துவிடலாம்.

3017–03 புவனேச்வரீ மந்திரத்திற்குச் சைதன்யமென்ற பெயர் உண்டு. அதுவே அர்க்க்யம்–விலைமதிப்பற்ற மந்திரம். அதனுல் வழிபடத்தக்கவள் தேவி. (918)

**3018-01 சைதன்ய-குஸும-ப்ரியா, சைதன்யமென்ற பூவை நாடுபவள்.**

3018–02 பூ காயாகிப் பழமாகும். அதுபோல் உள்ளுணர்வு மலர்ந்து புத்தி மனம்வழியே வெளிப்பட்டுப் பொறிகள் மூலம் பிரிந்து பரவி, பல உணர்வுகளை நமக்குத் தருகிறது. அவ்வுணர்வுகளைக் கட்டுப்படுத்தி நல்லுணர்வுகளாக மாற்றித் தருகிருள் தேவி. அவை எட்டு. அஹிம்சை, புலனடக்கம், பொறுமை, தயை, அறிவு, தவம், ஸத்தியம் இவைகளுக்கு அடிப்படையான நல்லெண்ணம். இவ்வெட்டும் சைதன்ய மலர்ச்சியால் விளைந்த பூக்கள். இவைகளை தேவியிடம் அர்ப்பணம் செய்யும்போது, நம் வாழ்க்கையில் அவை களைக் கடைப்பிடித்து அந்த வாஸனை மிகுந்த பூக்களாகிய உள்ளு ணர்வுகளைத் தேவியிடம் சேர்க்கும்போது, அந்த பூக்களால் தேவி மிகவும் சந்தோஷப்படுகிருள். (919)

**3019-01 ஸதா-உதிதா. எப்போதும் உதித்த நிலையில் இருப் பவள்.**

3019–02 உத்யத்பானுஸஹஸ்ராபா–எனத் தேவியின் உருவ விளக்கம் தொடங்கியது. (நா. 6) உதிக்கும் சூரியன் பகலில் கொடும் வெப்பமுள்ளவனுகி மாலையில் மங்கி மறைவதைப் பார்க்கிறோம்.

தேவி உதிக்கும் சூரியனுக்கொப்பானவள். ஆனால் நடுப்பகலில் உள்ள கடும் ஒளி, மாலையில் மங்கல், மறைவு என்ற வளர்ச்சியும் தேய்வுமற்றவளாகையால் (பா. 1870-02) எப்போதும் உதித்த நிலையிலேயே இருப்பாள். ஸத்-ஆ-உதிதா-ஸாதுக்கள் விஷயத்தில் எப்போதும் எங்கும் ஒளிமயமாக இருப்பவள். (920)

**3020–01** ஸதா-துஷ்டா. எப்போதும் மகிழ்ச்சியுள்ளவள்.

3020–02 சந்தோஷம் உண்மையில் வெளிப் பொருளால் ஏற்படுவதல்ல. மனம் ஒன்றைச் சந்தோஷம் தரவல்லது எனக் கொள்வதால் அது சந்தோஷத்தைத் தருகிறது. ஸந்தோஷம் ஆத்மாவின் சுய உருவம். தேவி ஆத்மஸ்வரூபிணியானதால் எப்போதும் ஸந்தோஷத்துடனிருக்கிறாள். ஸத்-ஆ-துஷ்டா, நல்லவர்களிடம் எப்போதும் ஸந்தோஷமாக இருப்பவள். (921)

**3021–01** தருண - ஆதித்ய – பாடலா. முதிர்ந்த சூர்யனைப் போன்ற ஒளி உள்ளவள்.

3021–02 காலைக்கதிரவன் நடுப்பகலை அடையும்போது செம்மை குறைந்து வெண்மை கூடிக் காணப்படுவான். பாதிரிப் பூவின் நிறத்தை ஒத்திருப்பான். தேவியும் சில தோற்றங்களில் நடுப்பகலை அடையவிருக்கும் சூரியனைப் போல் வெண்ணிறம் கலந்த மஞ்சள் நிறத்தில் இருப்பாள். மோக்ஷத்தை நாடுபவர் வெண்ணிறத்தவளாகவும், பணம் பெருக மஞ்சள் நிறத்தவளாகவும், சிருங்கார ரஸம் பெருகவும் வசியம் செய்யவும் விரும்பும்போது பாதிரிப்பூ நிறத்தவளாகவும் தேவியின் மேனி நிறத்தைப் பாவிப்பது முறை. அப்படிப் பாதிரிப் பூ நிறத்தில் பாவிக்கப்பெறுபவள். (922)

**171 दक्षिणादक्षिणाराध्या दरस्मेरमुखांबुजा । 924**
**कौलिनीकेवलाऽनर्घ्यकैवल्यपददायिनी ॥ 926**

**தக்ஷிணாதக்ஷிணாராத்யா தரஸ்மேரமுகாம்புஜா ।**
**கௌலிநீகேவலா (அ) நர்க்யகைவல்யபததாயிநீ ॥**

**3022–01** தக்ஷிண–அதக்ஷிண–ஆராத்யா. படித்தவர்களாலும் பாமரர்களாலும் ஆராதிக்கத்தக்கவள்.

3022–02 தக்ஷிணர்–செயலாற்றும் திறமையுள்ளவர்கள், அறிவாற்றல் மிக்கவர். அதக்ஷிணர் - அறியாதவர்கள், பாமரர். இவ்விருவர்களாலும் ஆராதிக்கப்படுபவள். தக்ஷிணம்-வாமம் என்ற

இருமார்க்கங்களால் வழிபடப்பெறுபவள். (பா. 3011) கர்மமார்க்கத்தில் செல்பவர் தக்ஷிணர், பிரும்மஜ்ஞானி அதக்ஷிணர், இருவராலும் வழிபடப் பெறுபவள். (923)

**3023–01** தர-ஸ்மேர – முக – அம்புஜா. புன்சிரிப்பால் சிறிது மலர்ந்த முகத்தாமரையுள்ளவள்.

3023–02 தாமரைப்பூ மலரும்போது தளங்கள் சிறிது விரிந்த நிலையில் உள்ளே உள்ள அதன் நிறம் மனத்தைக் கவரும். புன்சிரிப்பால் தேவியின் முகம் சற்று மலர்ந்து விரிந்த தாமரைபோல் அழகாயுள்ளது. (தரம்–சிறிது) தரம்–சங்கு. சங்கு போலுள்ள கழுத்தின்மேல் மலர்ந்த தாமரைபோல் புன்சிரிப்புள்ள முகமுள்ளவள். தரம்-பயம். மற்றவர்கள் பயந்து நடுங்கும் வேளைகளில் இவள் புன்சிரிப்புடன் இருப்பாள். (பா. 2505) பிரளயத்தில் உலகம் அழியும்போதுள்ள பயங்கர நிலையில் தான் அதனால் பாதிப்புறுமல் சாக்ஷியாக நின்று அதனைப் புன்சிரிப்புடன் பார்த்து ரசிப்பவள். (பா. 1634, 2337) தரம்–ஆதரவு. பக்தர்களை ஆதரிக்கும்போது புன்சிரிப்புள்ள முகமுள்ளவள். (924)

**3024–01** கௌலிநீ–கேவலா. கௌலமும் கேவல ஞானமும் இசையப்பெற்றவள்.

3024–02 கௌலிநீ – குலதர்மம் உள்ளவள். அறிபவன், அறியப்படும் பொருள், அறிவு என்ற மூன்றும் பிரதிபலிக்கும் அறிவு குலஜ்ஞானம். தர்மத்தோடு தர்மியை அறியும் ஞானமாகும். கேவலா – தர்மஸம்பந்தமற்ற நிராகார ஞான வடிவிலுள்ள பரம்பொருள். கேவலம் – தனித்தது, முக்கியமானது, உயர்ந்தது. பரப்பிரும்மம். (1707-05, 1889–02, 2145–02, 2526–02). தேவி இரண்டாகவுமிருப்பவள். குல்ஜ்ஞானத்தை கேவலஜ்ஞானமாக மாற்றுபவள். சிற்றறிவைப் பேரறிவாக்குபவள்.

3024–03 கௌலிநீ (நா. 94) கேவலா (நா. 623) என்ற இரு நாமங்கள் முன்னர் வந்துள்ளன. இங்கு கௌலிநீ கேவலா என்ற ஒரே சொல்லாக அமைந்த நாமம். (925)

**3025–01** அநர்க்ய – கைவல்ய - பத – தாயிநீ. விலைமதிக்கவொண்ணாத மோக்ஷத்தைத் தருபவள்.

3025–02 கைவல்யம் – கேவலமாக, பரப்பிரும்மமாகி இருக்கும் தன்மை. அதுவே நிர்வாணம் எனும் மோக்ஷம். (பா. 2110, 2653, 2654, 2919). அது அநர்க்யம்-விலைமதிக்கவொண்ணாதது. எதனையும் விலையாகக் கொடுத்துவாங்க முடியாதது. அதனை அடையவும்

முடியாது. அடைவதற்கு அடைபவனும் அடையப்படும் பொருளும் தனித்துத் தேவை. இங்கு மோக்ஷத்தில் அடைபவனே அடையப் படும் பொருளாகிறுன். மிகச் சிறந்த ஞானி மட்டுமே இதனை உணர்ந்து அதுவாகி அனுபவிக்கமுடியும். தேவி தன் கருணையால் அதனையும் வைகுண்டம் ஸ்வர்க்கம்போல் அடையக்கூடிய இட மாக்கி (பதம்) எளிதாக்கி வழங்குகிருள்.

3025-03 கைவல்யபததாயிநீ எனும் நாமம் (625) முன்வந் துள்ளது. இங்கு அநர்க்க்யகைவல்யபததாயிநீ என்று நாமம் மாறுபடுகிறது. (926)

172 स्तोत्रप्रिया स्तुतिमती श्रुतिसंस्तुतवैभवा। 929
मनस्विनी मानवती महेशी मङ्गलाकृतिः॥ 933

ஸ்தோத்ரப்ரியா ஸ்துதிமதீ ச்ருதிஸம்ஸ்துதவைபவா ।
மநஸ்விநீ மாநவதீ மஹேசீ மங்களாக்ருதி: ॥

3026-01 ஸ்தோத்ர-ப்ரியா. ஸ்தோத்திரத்தில் பிரியமுள்ளவள்.

3026-02 எல்லா குணங்களையும் மனம் உருவகப்படுத்த முடியாத நிலையில் மனத்தால் உருவகப்படுத்த முடிந்த சில குணங் களை மட்டும் கூறுவது தேவியின் ஸ்தோத்திரம். இது இல்லாத தைச் சொல்வது அல்ல. ஸ்தோத்திரம் ஆறுவிதம்: (1) தேவியின் பெருமையைப்பாடி வணக்கம் தெரிவிப்பதாக அமைவது; (2) வாழ்த் துவது (3) தேவியின் தத்துவங்களை விளக்குவது; (4) தேவி எதிரிகளை வென்ற வீரத்தைப் புகழ்வது; (5) தேவி லீலையாக எடுத்த பல தோற்றங்களைப் புகழ்வது; (6) நமது கோரிக்கைகளைத் தெரிவிப்பது. உதாஹரணமாக இந்த ஆறுவகை ஸ்தோத்திரங்களை யும் இந்த ஆறு நாமங்களில் முறையாகக் காணலாம். (1) த்ரிஜகத் வந்த்யா (நா. 627). (2) 'ஸ்வஸ்திமதீ' (நா. 448) (3) மித்யா ஜகத் அதிஷ்ட்டாநா. (நா. 735) (4) பண்டாஸுரேந்த்ர நிர்முக்த சஸ்த்ரப்ரத்யஸ்த்ரவர்ஷிணீ. (நா. 79) (5) இச்சாசக்தி ஞானசக்தி கிரியாசக்தி ஸ்வரூபிணீ (நா. 658) (6) ஸாம்ராஜ்யதாயிநீ (நா. 692) இந்த ஆயிரம் நாமங்களும் அறுவகை ஸ்தோத்திரங் களில் அடங்கும். இந்த நாமபாராயணத்தால் தேவிக்குப் பிரிய மான ஸ்தோத்திரத்தைச் செய்தவர்களாகிருர்கள். வேதத்தி லுள்ள தேவீபரமான ராத்திரி ஸூக்தம் முதலியவை ஸ்தோத் திரங்கள். அவைகளைப் பாடுவதை விரும்புபவள். (927)

3027-01 ஸ்துதி-மதீ. தோத்திரங்கள் உள்ளவள்.

3027-02 தேவியின் புகழ்பாடும் வைதிகமாயும் லௌகிகமாயும் உள்ள துதிகள் பல உள்ளன. அவளது துதியால் புத்தியும் செல்வமும் கிடைக்கின்றன. (ஸ்துத்யா மதிச்ச ஈ ச யஸ்யா:) (928)

3028-01 ச்ருதி - ஸம்ஸ்துத - வைபவா. வேதம் போற்றும் வைபவம் உள்ளவள்.

3028-02 வைபவம் - பெருமை, முழுவதும் அறியமுடியாதபடி எங்கும் பரந்து நிற்கும் தேவியின் மகத்துவம். அவைகளை அறிய உதவும் ஒரே நூல் வேதம். அதனுலும் முழுவதும் அறியமுடியாதிருப்பதால் ஸ்தோத்திரம் என்ற வகையில் அவளது பெருமைகளில் சில பகுதிகள் மட்டும் குறிப்பிடப்படுகின்றன. அப்படி வேதத்தால் புகழப்பட்ட வைபவம் உள்ளவள்.

3028-03 சுருதி - வேதம்; அது நான்கு என்ற எண்ணைக் குறிக்கும், வேதம் நான்கு ஆனதால். நிவ்ருத்தி, பிரதிஷ்டா, வித்யா, சாந்தி என்ற நான்கு புகழ்பெற்ற கலைகளை மூர்த்திகளாகக் கொண்டவள். (929)

3029-01 மநஸ்விநீ. தனக்கு அடங்கிய மனம் கொண்டவள்.

3029-02 தேவியின் மனம் தேவியின் வசத்தில் உள்ளது. அதனுல் மனம் கொண்டவள். நம்மை நம் மனம் அடிமைப்படுத்தித் தன்னுடையதாகக் கொண்டுவிட்டது. அதனுல் நாம் மனஸ்விகளாக இருக்கமுடியவில்லை. உள் மனம் சொல்வதை வெளி மனம் கேட்பதில்லை. தேவி அப்படி அல்ல. மனத்தைத் தன் வசப்படுத்திக் கொண்டவள். (930)

3030-01 மாநவதீ. உயர்ந்த மனம் கொண்டவள்.

3030-02 மனத்தைத் தன் வசப்படுத்தியது மட்டுமல்ல. பெருமனமாகவும் அதை வைத்திருப்பவள். மானம் - தற்பெருமை, நியாயமான தற்பெருமை கொண்டவள். தனித்து இயங்கச் சுதந்திரமில்லாத நாம் தற்பெருமை கொள்வதில் பொருளில்லை. தேவி தனித்து இயங்குபவள். எல்லா இயக்கங்களும் அவளது அருளால் நடக்கின்றன. அதனுல் அவளது தற்பெருமை மிகநியாயமானதே.

3030-03 மானம்-ஆதரவு. தன்னை அண்டியவர்களிடம் ஆதரவு கொண்டவள். மாநம்-தனக்கு மிக வேண்டியவனும் அன்புக்குரியவனும் தவறிழைக்கும்போது அதனைப் பொறுக்காதிருப்பது. தேவி

அப்படித் தனது சிறந்த பக்தர்களிடம் ஏதேனும் தவற்றைக் காட்டி அதனை மன்னிக்க இயலாதிருப்பதையும் காட்டுவாள். அப்படி பிரியமுள்ளவர்களின் தவற்றைச் சுட்டிக்காட்டும் ஸ்வபாவ முள்ளவள். (931)

3031-01 மஹா-ஈசீ. மஹேசுவரி.

3031-02 ஈசுவரர்-பிரும்மா முதலானோர். அவர்களுக்குள் பெருமை மிக்கவர் மஹேசர் பரமசிவன், அவரது மனைவி. (932)

3032-01 மங்கள-ஆக்ருதி:. மங்கள வடிவினள்.

3032-02 தியானிக்கத்தக்க வடிவம் ஆக்ருதி. அது மங்கள மானது. நினைத்தாலே மங்களம் தரக்கூடியது. (933)

173 विश्वमाता जगद्धात्री विशालाक्षी विरागिणी । 937
प्रगल्भा परमोदारा परामोदा मनोमयी ॥ 941

விச்வமாதா ஜகத்தாத்ரீ விசாலாக்ஷீ விராகிணீ 1
ப்ரகல்ப்பா பரமோதாரா பராமோதா மனோமயீ 11

3033-01 விச்வ-மாதா. உலகை ஈன்ற அன்னை.

3033-02 உலகை மூலப் பிரகிருதியாக இருந்து பெற்ற அன்னை. உலகைத் தன் கருவறையில் அடக்கி வைத்திருந்து ஊட்டம் அளித்துத் தானே புஷ்டி பெறும் தகுதி வந்ததும் வெளியிட்டவள். (934)

3034-01 ஜகத்-தாத்ரீ. உலகைத் தாங்குபவள்.

3034-02 தாத்ரீ-தானே பெற்றெடுத்த சிசுவை வளர்க்கும் தாய். தாயைப் போல் அன்புடன் பேணி வளர்க்கும் செவிலித் தாயும் தாத்ரீ. உலகைத் தாங்குவதில் தாயைப் போல் கருணையு டனும் அன்புடனும் ஈடுபடுபவள். தாத்ரீ-தாங்குபவள். உலகிற்கு ஆதார சக்தியாக நின்று தாங்குபவள்; தாத்ரீ-பூமி. ஜகத்-எப் போதும் இயங்கிக்கொண்டிருக்கும் பல்வகை உயிரினங்கள். பூமி யாக இருந்து உயிரினங்களைத் தாங்குபவள். அனைவற்றிற்கும் வாழ வகை அளித்துக் காப்பாற்றுபவள். (935)

3035-01 விசால-அக்ஷீ. அகன்ற கண்கள் உள்ளவள்.

3035-02 விசாலம்-(விகதா சாலா யஸ்மாத்) தடையற்றவை. பாதையின் இருமருங்கிலும் ஒதுங்குவது நல்லதல்ல என்று காட்ட

கற்களாலான தடைகளை வைத்துச் செல்லவேண்டிய பாதையை வரையறுத்திருந்தால் அது சாலா. நான்கு புறங்களிலும் சுவர் முதலிய தடை அமைத்துக் குறிப்பிட்ட பணிக்காக அமைக்கப்பட்ட கூடம் சாலா. (பாகசாலா, ஹோமசாலா, யாகசாலா). இத்தகைய தடையற்றது விசாலம். தேவியின் கண்களின் பார்வைக்கு எத்தகையத் தடைகளும் இல்லை. அது எங்கும் எதனையும் எவ்வகையிலும் பார்க்கவல்லது. அத்தகைய கருணையால் விரிந்த கண்களுள்ளவள். விசாலாக்ஷி என்ற பெயருள்ள காசி விசுவனுதரின் சக்தி. வாராணஸி சக்தி பீடத்தில் உள்ள தேவி.

3035-03 விசாலம்-பதரிகாச்ரமம் முதல் நேபாளம் வரை விரிந்த ஹிமாலயத்தின் பகுதி. நேபாளத்தில் உள்ள விசால பீடத்தைக் கண்களாகக்கொண்ட குஹ்யேச்வரி. அந்த பீடத்திற்கான நியாஸம் வலது கண்ணில் செய்யப்படுகின்றது. (பா-2913-04) (936)

3036-01 வி-ராகிணீ. பற்றற்றவள்.

3036-02 வெறுப்பால் ஒதுக்காமல், நாட்டமின்மையால் போகங்களை ஒதுக்குவது வைராக்கியம். அப்படிப் பற்றற்றிருப்பவள். ஆனால் உலகைக் காப்பது, விசாலாக்ஷியாக இருப்பது, கருணையால் தான், பற்றால் அல்ல.

3036-03 வி-ராகிணீ-மிகச் சிவந்தவள். பற்றின்மையையும் சிவப்பு காட்டுகிறது. துறவி உடுத்தும் காஷாயமும் சிவந்ததே. அது அவரது பற்றின்மையைக் காட்டுகிறது. வி-ராகத்தை-பற்றின்மையைக் காட்டவல்ல-விராக-தனிப்பட்ட சிவப்பு நிறமுள்ள ஆடை முதலியவற்றைத் தாங்கும் துறவிகள் வடிவில் வருபவள். (விராகி-பைராகி). (937)

3037-01 ப்ரகல்ப்பா. துணிவும் திறமையும் கொண்டவள்.

3037-02 மிகச்சிரமம் தரக்கூடிய பணிகளில், உலகைப் படைப்பது முதலியதில் துணிவும் திறமையும் காட்டி ஈடுபடுபவள். (938)

3038-01 பரம-உதாரா. சிறந்த வள்ளல்.

3038-02 உதாரா-பெரியவள், வள்ளல், (பா. 2929-02). உதாரர்களுக்குள்ளே பெரியவள், சிறப்பு மிக்கவள். எக்காலும் எவ்விடத்திலும் தேவியைவிடச் சிறந்த உதார எண்ணம் கொண்டவரைப் பார்க்க இயலாது. (939)

3039-01 பர-ஆமோதா. பெரும் ஆனந்தம் கொண்டவள்.

3039-02 ஆமோதம்-மனக்களிப்பு, நறுமணம், புகழ். இவைகளைப் பெருமளவில் கொண்டவள். (940)

3040-01 மனோ-மயி. மனோமயகோசமாயிருப்பவள்.

3040–02 ஞானேந்திரியங்களையும் மனத்தையும் கொண்டு இயங்கும் ஸூக்ஷ்ம சரீரம் மனோமயகோசம். (பா. 2148) அதன் வடிவில் இருப்பவள். பரம்பொருளின் மனமாயிருந்து உலகை ஆள்பவள். அறிவைப் பெறுவதில் முக்கிய ஸாதனமான மனமாக இருப்பவள். (941)

174 व्योमकेशी विमानस्था वज्रिणी वामकेश्वरी । 945
पञ्चयज्ञप्रिया पञ्चप्रेतमञ्चाधिशायिनी ॥ 947

வ்யோமகேசீ விமாநஸ்த்தா வஜ்ரிணீ வாமகேச்வரீ ।
பஞ்சயஜ்ஞப்ரியா பஞ்சப்ரேதமஞ்சாதிசாயிநீ ॥

3041-01 வ்யோம–கேசீ. ஆகாசத்தையே கேசமாகக் கொண்ட விராட் வடிவினள்.

3041-02 ஆயிரம் கால்கள் கண்கள் கைகள் கொண்ட விராட் வடிவில் (ஸ்தூல தேக ஸமஷ்டி வடிவம் பா. 1708, 1808, 1809, 1810) ஆகாயத்தையே கேசமாகக் கொண்டவள். விராட்டின் வடிவை மனித உருவில் கற்பனை செய்து, மனித உருவிற்கான அவயவங்களாக உலகாக மாறவிருக்கும் பல்வேறு கூறுகளைக் கற்பனையால் அமைத்த வடிவில், திக்குகள்-காது, சூரிய சந்திரர்கள்-கண், விண்வெளி–தலை, அக்கினி-முகம் என்ற வரிசையில் ஆகாசம்-கேசம் எனப்புராணங்கள் கூறும். விரித்த செஞ்சடையாளராக ஆகாயமளாவி நிற்கும் சடையுள்ள பரமசிவன் வ்யோமகேசர். அவரது பத்தினி. ஆகாசமளாவிய கேசமுள்ளவள். (பா. 2844) (942)

3042–01 வி–மான–ஸ்த்தா. அளவு கடந்த நிலையில் இருப்பவள்.

3042-02 ஆகாயத்தில் செல்ல உதவும் ஊர்தி விமானம். தரையில் செல்லும் ஊர்திகள் தாம் செல்ல வேண்டிய பாதைக்குள் மற்றவற்றின் போக்குவரத்திற்கு இடமளித்துச் செல்ல வேண்டியிருப்பதால் குறிப்பிட்ட அளவிற்குள் அடங்க வேண்டியிருக்கும். ஆகாயத்தில் செல்லும் ஊர்திக்கு அந்த அளவுக் குறுக்கீடு தேவையில்லை. அதனால் மானம்–அளவால் வரையறுப்பு அற்றது விமானம். (விகதம் மானம் யஸ்மாத்) எத்தனை பேர்கள் ஏறுகிறார்களோ, அந்த அளவிற்கு விரிவடையக்கூடியது. தேவர்கள் செல்லும் ஊர்தி விமானம். அதில் இருப்பவள் விமானத்தின் மூலம் செல்பவள்.

3042-03 வி-மா-அந-ஸ்த்தா. சிறப்பான ஒளியுள்ள சக்கிர ராஜ ரதம், கிரிசக்கிர ரதம், கேயசக்கிர ரதம் முதலியவற்றில் வீற்றிருப்பவள். வி-மான-ஸ்த்தா-பெருமாதரவு பெறுமிடங்களில் தங்குபவள். அளவற்ற பரம் பொருளிடம் சக்தியாக விளங்குபவள். சிறப்பு மிக்கப் பிரமாண நூல்களாகிய வேதம் முதலியவற்றில் தர்ம வடிவிலும் பிரும்ம வடிவிலும் விளக்கப் பெறுபவளாக இருப்பவள். (943)

**3043-01 வஜ்ரிணீ. இந்திரனின் சக்தி.**

3043-02 இந்திரனின் சக்தியான மாஹேந்திரீ; இவள் பிராம்மீ முதலிய மாதாக்களில் ஒருவள் (பா-0911-18). இந்திரனின் மனைவியான சசீதேவியாயிருப்பவள்.

3043-03 வஜ்ரம் எனும் ஆயுதத்தைத் தாங்கியவள். வஜ்ர மெனும் ரத்தினம் வைரம், அதனாலான அணிகளைப் பூண்டவள். வஜ்ரேசுவரீ தேவியாயிருப்பவள் (பா-2188-02). வஜ்ரம்-சூரியன் முதலானவர்களைப் பயமுறுத்தி உலகை ஆட்டுவிக்கும் பிரும்மத் திடமுள்ள பயம் தரும் சக்தி. அதன் வடிவினள். (944)

**3044-01 வாமக-ஈச்வரீ. வாமமார்க்கத்தினரின் தலைவி.**

3044-02 வாமகர் வாம மார்க்கத்தில் ஈடுபட்டவர்கள், வாம கேசுவர தந்திரம் எழுதிய பரமசிவன். உலகைப் பரப்பும் பிரஜாபதி (மக்கள் தலைவர்)களான தக்ஷன் முதலானவர். அவர்களின் தலைவி. வாமகேசுவரம் எனும் தந்திர நூலில் முக்கிய தேவதையாக விளக்கப் படுபவள். (பா-1877) (945)

**3045-01 பஞ்ச-யஜ்ஞ-ப்ரியா. ஐந்து வகை வேள்விகளில் பிரியமுள்ளவள்.**

3045-02 தேவயஜ்ஞம், பித்ருயஜ்ஞம், மனுஷ்யயஜ்ஞம், பூதயஜ்ஞம், பிரும்ம(வேத)யஜ்ஞம் என ஐந்து தினந்தோறும் நடத்த வேண்டிய வேள்விகள் (பா-2820-02). அக்னிஹோத்ரம், தர்சபூர்ண மாஸம், சாதுர்மாஸ்யம், பசுபந்தம், ஸோமம் என்ற வேதம் கூறும் வேள்விகள், பரார்த்த யஜனமெனும் பிறர்க்காகத் தெய்வத்தை வழிபடுவதற்கான முறைகளில் (திருக்கோவில்களில் நடைபெறுவது) அபிகமனம், உபாதானம், இஜ்யா, ஸ்வாத்யாயம், யோகம் என்ற பாஞ்சராத்திராகமத்தில் கூறப்பட்டுள்ள வழிபாட்டு முறைகள். உடலை விட்டு வெளியேறிய ஜீவன், வானவெளி, மேகம், பூமி, ஆண் மகன், பெண்ணின் கருவறை என்ற ஐந்திடங்களில் ஹோமம் செய்

யப்பட்டு மறுபிறவி எடுக்கிருன் என்று உபநிடதங்கள் ஜீவகதியைப் பற்றிய விளக்கம் தருகையில் கூறும் ஐந்து வேள்விகள். இவை களில் விருப்பமுள்ளவள். (946)

3046–01 பஞ்ச-ப்ரேத-மஞ்ச-அதிசாயிநீ. ஐந்து பிரேதர்களா லான உயர்ந்த ஆஸனத்தில் வீற்றிருப்பவள்.

3046–02 பிரும்மா, விஷ்ணு, ருத்திரன், ஈச்வரன் என்ற நால்வர் தத்தம் தொழிலே விட்டு, தன் தனித்தன்மையும் இழந்து, தேவியிடம் ஒடுங்கியவர்களாகத் தேவி வீற்றிருக்கும் உயர் ஆசனத் தின் கால்களாக விளங்குகின்றனர். ஸதாசிவனும் அப்படியே மஞ்சத்தின் விரிப்புப் பலகையாக இருக்கிருர். இவர்களேயே ஆஸன மாகக்கொண்டு ஒய்யாரமாகச் சாய்ந்து உட்கார்ந்திருக்கிருள் தேவி. (பா-0907, 1701, 1702) உலகைப் படைப்பதற்கான ஸங்கல்பத்தால் விரிந்து பல தோற்றங்களேப் பெற்ற தனது சக்திகளேத் தன்னுள் அடக்கிக்கொண்டு பரம்பொருளாகத் தான் மாத்திரம் தனித்திருப் பவள். (947)

175 **पञ्चमी पञ्चभूतेशी पञ्चसंख्योपचारिणी ।** 950
**शाश्वती शाश्वतैश्वर्या शर्मदा शंभुमोहिनी ॥** 954

பஞ்சமி பஞ்சபூதேசீ பஞ்சஸங்க்க்யோபசாரிணீ ।
சாச்வதீ சாச்வதைச்வர்யா சர்மதா சம்புமோஹினீ ॥

3047–01 பஞ்சமீ. வாராஹியாயிருப்பவள்.

3047–02 தேவியின் சேனைத்தலேவி வாராஹி. (பா. 1007–02) அவளுக்குப் பஞ்சமீ என்று தனிப் பெயர். பிராம்மீ முதலிய எட்டு மாதாக்களில் ஐந்தாவதாக வருபவள். (0911–08) பூமியைத் தாங்கும் ஆதிவராஹரின் சக்தி. ஐந்து ரத்னும்பிகைகளில் இவள் ஐந்தாமவள். (பா. 0911–26) ஆனதால் அவளுக்குப் பஞ்சமீ எனப் பெயர். ஐந்தொழில் புரிபவர்களில் ஐந்தாமவர் (பஞ்சமர்) ஸதா சிவர். அவரது பத்தினி பஞ்சமீ.

3047–03 ஐந்தாவதாகிய துரியாதீதம் என்ற நிலேயாயிருப் பவள். ஐந்து மகாரங்களேத் தன் வழிபாட்டிற்குரிய பொருள் களாகக் கொண்டவள் பஞ்ச – மீ. ('ம'வை முதல் எழுத்தாகக் கொண்டவை மது, (தேன்) மாம்ஸம், மத்யம், மத்ஸ்யம், மைதுனம், என). நிர்வாணம், கைவல்யம் எனப்படும் ஐந்தாவது முக்தியாக இருப்பவள். (பா. 2919-02) (948)

3048–01 பஞ்ச-பூத-ஈசீ. ஐந்து பூதங்களுக்கும் ஈச்வரி.

3048-02 நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்ற சூட்சும பூதங்களுக்கும் அவை சேர்ந்து பஞ்சீகரணமான ஸ்தூலபூதங்களுக்கும் ஈசுவரி. ஐந்தாகத் தொகுக்கப்பட்டுள்ளவை, ஐந்தாக ஆனவை, ஐந்தாக இருப்பவை, அனைத்தும் தேவியின் வடிவமே. (949)

**3049-01** பஞ்ச-ஸங்க்ய-உபசாரிணீ. ஐந்துவகை உபசாரங்களுள்ளவள்.

3049-02 சந்தனம், பூ, தூபம், தீபம், நைவேத்யம் என்ற ஐந்து உபசாரங்களால் வழிபடப் பெறுபவள் தேவி. இவை லம் இத்யாதி பஞ்சபூஜை எனப்படும். (பா. 0405-406) (950)

**3050-01** சாச்வதீ. நிலைத்திருப்பவள்.

3050-02 சச்வத்-அடிக்கடி; அடிக்கடி தோன்றியும் மறைந்தும் காணப்படுவதால் நிலைத்திருப்பவளாக அனுமானிக்கப்படுபவள். நித்யையான அவளை இடையருது காண்பவர் இல்லாததாலும் அடிக்கடி பல தோற்றங்களில் காண்பதாலும் அவள் நடுநடுவே புலப்படாதிருந்தாலும் தொடர்ந்திருப்பவள் என அறிகிறோம். (951)

**3051-01** சாச்வத-ஐச்வர்யா. நிலைத்த ஐசுவரியமுள்ளவள்.

3051-02 தேவி உலகையும் அதற்கப்பாற்பட்டவைகளையும் ஆள்பவள். அந்த ஆளும் சக்தி அவளைப்போல் நடுநடுவே புலப்படாதிருந்தாலும் நித்யமானதே. (952)

**3052-01** சர்ம-தா. சுகமளிப்பவள்.

3052-02 சர்ம-நிலைத்த சுகம். வேதனையைப் பின் விளைவாகக் கொள்ளாதது. அதனை அளிப்பவள் தேவி. (953)

**3053-01** சம்பு-மோஹிநீ. சிவனை மயங்கச் செய்பவள்.

3053-02 சம்-மங்களம். அதன் உற்பத்தி இடம் சம்பு:-சிவன். அவரை மோஹினீ வேடத்தில் மயக்கியவள். (பா. 2328) (954)

176 धरा धरसुता धन्या धर्मिणी धर्मवर्धिनी । 959
लोकातीता गुणातीता सर्वातीता शमात्मिका ॥ 963

தரா தரஸுதா தந்யா தர்மிணீ தர்மவர்த்திநீ ।
லோகாதீதா குணுதீதா ஸர்வாதீதா சமாத்மிகா ॥

**3054-01** தரா. தாங்குபவள்.

3054-02 உலகனைத்தையும் தாங்குவதால் தரா. பூமி வடிவினளானதால் தரா. 'லம்' எனும் பூமி பீஜத்தின் வடிவினள். தாங்குவதற்கு இன்றியமையாத பொறுமை, பூமியின் தனிச்சிறப்புப் பெற்ற குணமாய் அமைந்தது. அந்தப் பொறுமை எனும் குணமாயிருப்பவள். (955)

3055-01 தர-ஸுதா. மலைமகள்.

3055-02 பூமியைத் தாங்குவது மலை. அதனால் தரம், பூதரம், மஹீதரம் எனப் பெயர் பெற்றது. ஆணிவேராகப் பிடிப்புக்குத் தேவையான திடம் கொண்டது மலை. அந்தப் பிடிப்பால் பூமி நிலைத்து நிற்கிறது. மலையின் பெண்ணாகத் தோன்றித் தேவியின் தகப்பன் என்ற பெருமையை மலைக்குத் தந்தவள் தேவி. (956)

3056-01 தன்யா. செய்யவேண்டியதனைத்தையும் செய்து நிறைவு பெற்றவள்.

3056-02 கடமைகளைச் செவ்வனே செய்து நிறைவேற்றிய பின் ஏற்படும் நினைவு, 'நான் தன்யனானேன்' என்பது. தேவி அந்த நினைவு வடிவில் இருப்பவள். செவ்வனே கடமைகளை நிறைவேற்றியவளும் கூட.

3056-03 பரம்பொருளை நாடுவதில் உதவும் விரதங்கள் கதைகள் தத்துவங்கள் பற்றிய நினைவு, பந்தமின்றி மோக்ஷமடைவதில் உள்ள நாட்டம், ஐம்புலன்கள் அடங்கியிருத்தல், உயிரினத்திடம் தயை முதலிய நல்லெண்ணங்கள் உயிர் பிரியும்போது ஏற்பட்டால் இத்தகைய கடைசி நினைவுகளை தன்யா ஸ்ம்ருதி:-அதிருஷ்ட வசத்தால் ஏற்பட்ட நினைவாகக் கூறுவர், இந்த நினைவு "கொடுத்து வைத்திருந்தால் கிடைக்கும்". வாழ்நாள் முழுவதும் இந்த சிந்தனை வலுத்திருந்தால் தான் உயிர் நீங்குமுன் அந்தச் சிந்தனை ஏற்படும். தேவகதியை அளிக்கவல்ல அந்த 'தன்யா' எனும் நினைவாக இருப்பவள்.

3056-04 செல்வம் சேர உதவுபவள். (தநாய ஹிதா). தன்யம் எனச் சோதிடத்தில் கூறப்படும் சிறந்த யோகமாயிருப்பவள். (957)

3057-01 தர்மிணீ. தர்மத்துடன் கூடியவள்.

3057-02 ஆனந்த அனுபவம், நித்யத்தன்மை முதலிய தனிச் சிறப்புள்ள நிலைகளோடு கூடியவள். (958)

3058-01 தர்ம-வர்த்திநீ. தருமத்தை வளர்ப்பவள்.

3058-02 புலனடக்கம், தூய்மை, இறைவனிடத்தில் பக்தி, மங்களமான சொல்லிலும் செயலிலும் எண்ணத்திலும் நாட்டம் முதலிய சிறந்த தருமங்களை மனிதனிடம் வளர்த்து அவனை மேம்படச் செய்பவள். (959)

3059-01 லோக-அதீதா. உலகைக் கடந்தவள்.

3059-02 பதினான்கு உலகங்கள் தேவியால் படைக்கப் பட்டவை. (பா. 1820-02) தேவி அவைகளுக்கு அப்பாற்பட்டவள். லோகர்கள்-புலன்கள் மூலம் விஷய அறிவு பெறும் ஜீவர்கள். அவர்களைக் கடந்தவள் பேரறிவு வடிவினளான தேவி.(பா. 1860-02) (960)

3060-01 குண-அதீதா. முக்குணங்களுக்கும் அப்பாற் பட்டவள்.

3060-02 முக்குணங்கள் அஹங்காரத்தின் தொடர்பு கொண்டு பஞ்ச பூதங்கள், பொறிகள், மனம், பிராணன் முதலியவற்றைப் படைத்து இவ்வுலகிற்கும் லோகர்களாகிய ஜீவர்களுக்கும் காரண மாயின. (பா. 1708) தேவி முக்குணங்கள் தோன்றுவதற்கு முன் னுள்ள மூலப்பிரகிருதிக்கும் காரணமானவள். அதனால் குண-அதீதா. குணங்கள் ஒன்றோடொன்று வேறுபடும் விதத்தைப் பிரித்துக் காட்டுபவை. பிரிவுக்குட்படாதவளும் பிரிவேற்படும் நிலைக்கு முற்பட்டவளுமானவள் தேவி. (961)

3061-01 ஸர்வ-அதீதா. எல்லாவற்றையும் கடந்தவள்.

3061-02 பெயரும் வடிவமும் (நாம ரூபங்கள்) பெற்றமையால் தனித்தவையாகக் காண்பவையும் கூறப்படுபவையுமான எல்லாவற் றிற்கும் அப்பாற்பட்டவள். அவளது நிலையில் பெயராலும் வடி வாலும் ஏற்படும் வேற்றுமைக்கு இடமில்லை. (962)

3062-01 சம-ஆத்மிகா. எல்லாமடங்கிய நிலையாயிருப்பவள்.

3062-02 சமம்-பிரபஞ்ச உபசமம் என உபநிடதங்கள் கூறும் பிரும்மநிலை. பிரபஞ்சம்-பெயராலும் வடிவாலும் விரிந்துகொண்டே போகும் உலகம். அது அடங்கிப் பெயருருத்தெரியாத வண்ணம் மறையுமிடம் பிரும்மம். 'ப்ரபஞ்ச உபசமம் சிவம் அத்வைதம் சதுர்த்தம் மன்யந்தே''. (மாண்டூக்யம்) அந்த சிவமாக மங்களமாக ('சம்-ஆத்மிகா') இருப்பவள் தேவி. (963)

177 बन्धूककुसुमप्रख्या बाला लीलाविनोदिनी । 966
सुमङ्गली सुखकरी सुवेषाढ्या सुवासिनी ॥ 970

பந்தூககுஸுமப்ப்ரக்க்யா பாலா லீலாவிநோதிநீ ।
ஸுமங்கலீ ஸுககரீ ஸுவேஷாட்ட்யா ஸுவாஸிநீ ॥

3063-01 பந்தூக-குஸும-ப்ரக்க்யா. மஞ்சள் வேங்கைப்பூ போன்ற மேனி ஒளி உள்ளவள்.

3063-02 வேங்கையில் மஞ்சள் நிறமுள்ள வகை பீதஸாரம் எனப்படுவது. வங்க தேசத்தில் அதிகமாகக் காணப்படுவது. அதன் பூ நல்ல மஞ்சள் கலந்த சிவப்பு நிறமுள்ளது. அதனைப் போன்ற மேனி நிறமுள்ளவள். (964)

3064-01 பாலா. பாலா திரிபுரசுந்தரி.

3064-02 தேவியின் குமாரியாக வந்தவள். தேவியே சிறு பெண் (பாலா) வடிவில் எடுத்த தோற்றம். பண்டனின் புத்திரர்களை மாய்த்தவள். எப்போதும் ஒன்பது வயதினளாகத் தோன்றுபவள். மலர்ந்த கழுநீர்ப் பூவின்மேல் அமர்ந்திருப்பவள். அருணனது போன்ற செவ்வொளி படரும் மேனியுடையவள். அபய-வரதமுத்திரை, ஜபமாலை, புத்தகம் தாங்கிய நான்கு கைகளுள்ளவள். (பா-1011-02, 03, 04, 05) (965)

3065-01 லீலா-விநோதிநீ. பிரபஞ்ச லீலையில் மனஉவகை கொள்பவள்.

3065-02 உலகின் தோற்றத்திலிருந்து மறைவு வரை எங்கும் எப்போதும் நடக்கும் இயக்கங்களைத் தனது லீலையாக்கி அதனால் மனக்களிப்பை அடைகிறாள் தேவி. (966)

3066-01 ஸுமங்கலீ. சுமங்கலி வடிவினள்.

3066-02 மங்களப்பொருள்கள் இவர்களை அடைந்து அழகைப் பெறுவதால் கணவனோடு முறைப்படி சுகமாக வாழும் மனைவியரை ஸுமங்கலிகள் என்பர். அப்படி வாழும் ஸுமங்கலிகளின் வடிவில் தேவி விளங்குகிறாள். ஸு-மங்களமான, மங்களம், மங்களத்திற்கு மங்களத்தன்மை தரும் பரம்பொருள். அதுவே இவள். சிறந்தவைகளை நடைமுறையில் அமைத்து, சிறப்பற்றவைகளைத் தவிர்த்து வாழ்வது மங்களமான வாழ்க்கை. அவ்வாழ்க்கை வடிவில் உள்ளவள் தேவி. (967)

3067-01 ஸுக-கரீ. சுகத்தை வழங்குபவள்.

3067-02 சுகத்தைத் தரும் அவள், சுகத்தைத் தருவதற்காகக் கையில் கொண்ட (ஸுகம் கரேயஸ்ய) சங்கரனது பத்தினி. அஸுகத்தை-துக்கமாக உணரப் பெறுவதை சுகமாக்கித் தருபவளும்கூட. (அஸுகம் ஸுகம் கரோதி). (968)

**3068-01 ஸுவேஷ-ஆட்ட்யா. அழகான அணிகள் நிரம்பியவள்.**

**3068-02** மங்களமான வடிவம் பெற்ற தேவி மங்களத் தன்மையை ஒளிவிட்டுப் பிரகாசிக்கச் செய்யும் நல்லாடை, ஆபரணங்கள் முதலியவற்றை மனநிறைவு ஏற்படுமளவிற்கு அணிந்துள்ளாள். (969)

**3069-01 ஸு-வாஸிநீ. பதியுடன் கூடி வாழ்பவள்.**

**3069-02** பெண்ணிற்குப் பதியுடன் கூடிவாழ்வதே நல்வாழ்வு, ஸுவாஸம். தேவி சிவனை விட்டு என்றும் அகலாதவள். அதனால் ஸுவாஸம் பெற்றவள்-ஸுவாஸிநீ. கணவனுடன் கூடி நல்வாழ்வு வாழும் பெண்கள் தான் நல்லாடை உடுத்த முடியும். (ஸுஷ்டு வாஸாம்ஸி யஸ்யா:). அத்தகைய சிறந்த ஆடையாபரணங்கள் அணிந்த ஸுமங்கலியாயிருப்பவள். ஸுமங்கலிகள் வடிவில் உள்ளவள் தேவி. (970)

178 सुवासिन्यर्चनप्रीताऽऽशोभना शुद्धमानसा। 973
बिन्दुतर्पणसन्तुष्टा पूर्वजा त्रिपुरांबिका॥ 976

**ஸுவாஸிந்யர்ச்சநப்ரீதா(ஆ)சோபநா சுத்தமாநஸா ।**
**பிந்துதர்ப்பணஸந்துஷ்டா பூர்வஜா த்ரிபுராம்பிகா ॥**

**3070-01 ஸுவாஸிநீ-அர்ச்சன-ப்ரீதா. ஸுவாஸினிகளின் அர்ச்சனையால் மகிழ்பவள்.**

3070-02 ஸுவாஸினிகளான பெண்கள் செய்யும் அர்ச்சனையில் தேவி மிகவும் மகிழ்ச்சியடைகிறாள். அங்ஙனமே ஸுவாஸினிகளைத் தேவியாக வழிபட்டு அவர்களுக்குச் செய்த அர்ச்சனைகளால் திருப்தியடைவாள். (971)

**3071-01 ஆ-சோபநா. எங்கும் அழகானவள்.**

3071-02 அவளது அழகு எங்கும் பரவியுள்ளது. அவளைச் சுற்றியும் அழகு நிரம்பியுள்ளது. (முன் சோபநா (நா. 462) என்றும் சோபநா ஸுலபா கதி: (நா. 683) என்றும் இரு நாமங்கள் வந்துள்ளன. இங்கு ஸுவாஸிந்யர்ச்சனப்ரீதா ஆசோபநா என்று பிரித்துச் சொல்கிறோம்.) (972)

3072-01 சுத்த-மாநஸா. தூய மனமுள்ளவள்.

3072-02 மனத்தின் தூய்மை வாஸனைகளால் கெடுகிறது. பல பிறவிகளில் மனம் நாடியவற்றில் ஏற்பட்ட இன்பதுன்பத் தொடர்பு தடமாகி நின்று மனத்தைக் கெடுக்கும் வாஸனையாக இப்பிறவியில் தொடர்கிறது. தேவியின் மனத்தில் இத்தடம் இடம் பெறுவதில்லை. இன்பதுன்ப உணர்விற்குத் தேவி அப்பாற்பட்டவளாயிற்றே. அதனால் தூயமனமுள்ளவள். (973)

3073-01 பிந்து - தர்ப்பண - ஸந்துஷ்டா. பிந்துதர்ப்பணத்தால் மகிழ்பவள்,

3073-02 ஸ்ரீசக்கிரம் மேரு இவைகளில் நடு முக்கோணத்தினுள் அமைந்த ஸர்வாநந்தமய சக்கிரமாகிய பிந்துவில், வழிபடுபவர் தகுதிக்கேற்பப் பால் நெய் தேன் மது இவற்ருல் முறைப்படி செய்யப் படும் தர்ப்பணம் பிந்து தர்ப்பணம். தர்ப்பணத்திற்கான பால் முதலியவை பிந்துவாக-சொட்டாக பிந்துவில் விழுவதாலும் பிந்து தர்ப்பணம். அது பிந்து அளவில் இருந்தாலும் தர்ப்பணம், மன நிறைவைத் தருவது. அந்த பிந்து தர்ப்பணத்தால் ஸந்தோஷமடைபவள். (974)

3074-01 பூர்வ-ஜா. எல்லாவற்றிற்கும் முன்னதாக உண்டானவள்.

3074-02 அவ்யக்தம் எனும் பிரகிருதி எல்லோருக்கும் முன் உண்டானது. அதன் வடிவில் உள்ளவள். (உண்டானவள்- தோன்றியவள்.) முன் இல்லாமலிருந்து உண்டானவள் அல்ல; முன் புலப்படாமலிருந்து இப்போது தனித்திருந்த பிரும்மத்திடம் சக்தியாகவும் ஸங்கல்பமாகவும் முதலில் பிரிந்து தோன்றியவள். (பா. 1708). (975)

3075-01 த்ரிபுர-அம்பிகா. திரிபுராம்பிகை.

3075-02 ஸ்ரீசக்கிரத்தின் எட்டாவது ஆவரணத்திலுள்ள யோகினிகளின் தலைவி திரிபுராம்பிகை எனப்படுபவள். அவளது வடிவில் தேவி விளங்குகிருள். (பா. 0911-25) விழிப்பு, கனவு, தூக்கம் என்ற மூன்று நிலைகள்; பாலியம் யௌவனம் மூப்பு என்ற மூன்று தசைகள்; ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்ற மூன்று தேகங்கள்; இவை முப்புரங்கள் எனப்படும். இவைகளை உண்டாக்கும் தாய். வாமா ஜ்யேஷ்டா ரௌத்திரி என்ற மூன்று சக்திகளுக்கும் தாயான அம்பிகாவாக இருப்பவள். (976)

179 दशमुद्रासमाराध्या त्रिपुराश्रीवशङ्करी । 978
ज्ञानमुद्रा ज्ञानगम्या ज्ञानज्ञेयस्वरूपिणी ॥ 981

தசமுத்ராஸமாராத்த்யா த்ரிபுராஶ்ரீவசங்கரீ I
ஜ்ஞானமுத்ரா ஜ்ஞானகம்யா ஜ்ஞானஜ்ஞேய
ஸ்வரூபிணீ II

3076-01 தச-முத்ரா-ஸமாராத்த்யா. பத்து முத்திரைகளால் வழி படத்தக்கவள்.

3076-02 தேவியின் வழிபாட்டில் ஐம்பதுக்கும் மேற்பட்ட முத்திரைகள் பல சந்தர்ப்பங்களில் செய்யப்படுகின்றன. நவா வரண பூஜை செய்யும்போது காட்டப்பெறும் முத்திரைகள் பத்து. அவை ஸர்வஸம்க்ஷோபிணீ, ஸர்வவித்ராவிணீ, ஸர்வாகர்ஷிணீ, ஸர்வ வசங்கரீ, ஸர்வோந்மாதிநீ, ஸர்வமஹாங்குசா, ஸர்வகேசரீ, ஸர்வபீஜம், ஸர்வயோநி, ஸர்வத்ரிகண்டா என. இவை சக்தி வடிவில் ஶ்ரீ சக்ரத்தின் பூபுரத்தின் உட்கோட்டில் இருக்கின்றன. (0911-18) இவர்களில் முதல் ஒன்பது முத்திரா சக்திகளும் முறையே ஒவ்வொரு ஆவரணத்தின் மேற்கு துவாரத்திலும் வரிசையாக துவாரமுத்ரா சக்திகளாக (வழியைப் பூட்டித் திறப்பவர் களாக) அமர்ந்திருக்கிருர்கள். முதல் ஆவரணத் துவாரத்தில் ஸர்வஸம்க்ஷோபிணீ இரண்டாவது ஆவரணத் துவாரத்தில் ஸர்வ வித்ராவிணீ என்றவாறு ஸர்வத்ரிகண்டா என்பவள் தேவியின் ஆஸனத்தின் எதிரே மற்ற 9 முத்திராசக்திகளின் ஸமஷ்டி வடிவில் இருக்கிருள். ஆவரண பூஜை செய்யும்போதும் அதனதன் துவா ரத்தில் அந்தந்த முத்திரா தேவிகளை வணங்கிப்பின் அந்தந்த முத்திரைகளைக் காட்டிக் கடைசியில் யோநி முத்திரையால் வணங் குவது வழக்கம். முத்ராசக்திகள் தேவியின் தத்துவத்தை மூடி மறைத்து வைத்துத் தேவையுள்ள போது திறந்து தருபவர்கள். (வாயில் காப்போன் இருப்பது வாயில் வழியே பிறர் செல்வதைத் தடை செய்வதற்கல்ல. அவ்வழியில் போவோர் வருவோரைக் கண்காணிக்கவே.)

3076-03 முத்திரா—மூடி மறைப்பது-அரக்குப் பதித்து அடை யாளமிடுவது, (சீல்) சந்தோஷத்தைக் கொடுப்பது. (முதம் ராதி). இரண்டு கைகளையும் அதன் பத்து விரல்களையும் கோர்த்துத் தனிப்பட்ட முறையில் அதில் ஒரு வடிவத்தைக் காட்டி அதன் பொருளை உணர்ந்து அந்த பாவனையுடன் வழிபடுவது முத்தி ரையின் பொருள். யோநி முத்திரை காட்டும்போது ஒன்றின்

உள்ளே மற்ருென்ருகப் பல யோநி வடிவங்களை-முக்கோணங்களை அமைக்கிருேம். ஆணவத்தைக் காட்டும் ஆட்காட்டி விரலும் உயர்வைக் காட்டும் நடுவிரலும் அடக்கப்படுகின்றன. உலகிற்குக் காரணமான யோநியான தேவி இதன் காரணம் அது, அதன் காரணம் மற்ருென்று எனக் காரண வடிவில் குவிந்து மூல காரண மாகி நிற்கிருள். அவள் எதிரில் ஜீவனின் தனித்தன்மை உணர்வோ ஆணவமோ பொருளற்றது என்ற பாவனைகள் அலைஅலையாக எழுவதால், இதுகாறும் புரியாதிருந்த ரகசியமான தத்துவங்கள் விளங்கி ஆனந்தம் ஏற்படுகிறது. இந்த பாவனைகள் வெளிப்படையாஞல் வேஷமாகிவிடும். அதனுல் ரகசியமாக முத்திரைகளை இடுவதும் பாவனை செய்வதும் அவசியம். மனம் வாக்கு காயம் என்ற மூன்று கரணங்களும் ஒருங்கே நிலைத்துப் பாவனை வடிவில் வழிபாடு அமைய இம்முத்திரைகள் உதவுகின்றன.

3076-04 உடலின் பகுதிகளில் கைகளுக்கு ஒரு தனிச் சிறப்புண்டு. 'அயம் மே ஹஸ்தோ பகவான் அயம் மே பகவத்தர:' என ருத்திரம் கூறும். பரமசிவனுக்கு ருத்ரத்தால் அபிஷேகம் செய்விக்கும்போது அந்தக்கை அடைந்துள்ள பெருமை இணையற்றது. 'இந்த எனது கை பகவானே' என்கிறது வேதம். பகவான் ருத்திரனைப் பற்றிக் கூறுவதால் மந்திரம் ருத்திரம். பகவானை பூஜை செய்யும் கைகளும் பகவானே. அதில்கூடத் திருப்தி இல்லை. "இந்த எனது கை பகவானைவிட மேம்பட்டது" என்கிறது வேதம். சிவனும் பகவான், கையும் பகவான். இருவரில் எவர் உயர்ந்தவர் எனில் என்கையே உயர்ந்தது, பகவத்தர :. இறைவனை இறைவன் வழிபட முடியாது. இறைவனது வடிவைத் தன் பணிவிடையால் குளிர்விப்பதால் கையானது இறைவனைத் தனக்கு அடங்கியவஞகச் செய்கிறது. அப்போது இறைவனைவிட இதுவே மேம்பட்டதென்கிறது வேதம். அந்தக் கைகள் பல ரகசியங்களை அவிழ்த்து உணர்த்தி தேவியைப் பிரகாச வடிவினளாக நம் கண்முன் முத்திரைகள் மூலம் நிறுத்துகின்றன. அத்தகைய முத்திரைகளால் வழிபடத்தக்கவள் தேவி. (977)

3077-01 த்ரிபுராஶ்ரீ-வசங்கரீ. த்ரிபுராஶ்ரீயைத் தன் வசத்தில் வைத்திருப்பவள்.

3077-02 ஶ்ரீசக்கிரத்தின் ஐந்தாவது ஆவரணத்திலுள்ள யோகினிகளின் தலைவி த்ரிபுராஶ்ரீ (பா-0911-22). அந்த யோகினி, தேவியின் வசத்திலிருந்து தேவியின் ஆணைகளை நிறைவேற்று

கிருள். (த்ரிபுராஸ்ரீ: வசங்கரீ யஸ்யா:) திரிபுரம் எனும் முப்புரங்களால் சிற்றறிவால் பெறக்கூடிய இன்பமனைத்தையும் ஸாதகனின் வசப்படுத்துபவள் தேவி. (த்ரிபுராச்ரியம் வசேகரோதி) (978)

**3078-01 ஜ்ஞான-முத்ரா. சின் முத்திரை வடிவினள்.**

3078-02 வலது கைப் பெருவிரலுடன் சுட்டுவிரலை இணைப்பது ஞானமுத்திரை, சின்முத்திரை. ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியின் வலது கையில் காணப்படும் முத்திரை. தனிமனிதனின் அஹந்தையானது பராஹந்தையுடன் இணைந்து அதனுள் தான் அடங்கிவிட்டதைக் காட்டும் அடையாளம். ஈசுவர தத்துவத்துடன் ஜீவ தத்துவம் இணைவதையும், நடுவிலிருந்த பேதங்கள் அனைத்தும் அகன்றுவிட்டதையும் இது குறிக்கும். அந்த முத்திரையைத் தன் வடிவமாகக் கொண்டவள், அறிவால் ஆனந்தம் தருபவள், (ஜ்ஞானேன முதம் ராதி) ஞானத்தில் ஆனந்தத்தை மறைத்துள்ள தக்ஷிணாமூர்த்தி வடிவம். (ஜ்ஞானே சிதம்சே முதம் ஆனந்தாம்சம் த்ராவயதி ஆவ்ருணோதி). ஆனந்தத்தில் ஞானத்தை மறைத்துவிட்ட வடிவம் நடராஜப்பெருமான். (979)

**3079-01 ஜ்ஞான-கம்யா. ஞானத்தால் அடையத்தக்கவள்.**

3079-02 ஞானத்தால் அறியக்கூடிய பொருள்களனைத்தும் தேவியே. தேவியை மற்ற உபாயங்களால் அறிய முடியாது. ஞானத்தால் மட்டுமே அடைய முடியும். பேதமற்றிருக்கக் கூடிய 'தான்' ஆக உள்ள பொருளை வேறென்று அறிவுறுத்த முடியாது. நான் 'நான்'தான் என்றறிவதன் மூலமாகத்தான் 'நான்'ஐ அடைய முடியும். தேசத்தாலோ, காலத்தாலோ, வஸ்துவாலோ வேற்றுமைக்கு இடமிருந்தால் வேறென்றால் அதனை அடையமுடியும். 'நான்' ஆக இருக்கும் பொருளை அடைய வேறென்றும் பயன்படாது. அதனால் ஜ்ஞானகம்யா. (980)

**3080-01 ஜ்ஞான-ஜ்ஞேய-ஸ்வரூபிணீ. அறிவும், அறியப்படுவதுமாயிருப்பவள்.**

3080-02 அறிபவன் 'நான்'. அறியப்படும் பொருள் 'நான்'. அதன் அறிவும் 'நான்'ஏ. அறிபவன் அறியப்படும் பொருள் அறிவு இவற்றின் ஐக்கியத்தால் ஏற்படும் நிராகாரமான சித்ஸ்வரூபம் இதே. (981)

180 योनिमुद्रा त्रिखण्डेशी त्रिगुणाम्बा त्रिकोणगा । 986
अनघाऽद्भुतचारित्रा वाञ्छितार्थप्रदायिनी ॥ 989

யோநிமுத்ரா த்ரிகண்டேசீ த்ரிகுணாம்பா த்ரிகோணகா ।
அநகா(அ)த்புதசாரித்ரா வாஞ்சிதார்த்தப்ரதாயிநீ ॥

**3081-01 யோநி-முத்ரா. யோநி முத்திரை வடிவினள்.**

3081-02 பத்து முத்திரைகளில் ஒன்பதாவதான ஸர்வயோநி முத்திரையாகத் தத்துவத்தை மறைத்தும் வெளிக்காட்டியும் உதவி ஆனந்தத்தைத் தருபவள். பிந்து ஸ்தானத்தில் தேவியை வழிபட அதனை மூடும் முத்திரையாக உதவுபவள். ஆவரணத் தேவதைகளை அந்தந்த ஆவரணத்தின் முத்திரையால் ஆவரண பூஜையின்போது வழிபட்டு, பிந்து மண்டலத்தில் ஆவரண தேவதைகளின் ஸமஷ்டி தேவதையான தேவியை யோநி முத்திரையால் வணங்குவது வழக்கம். பிந்து மண்டலத்தில் தேவியை வழிபடும் முத்திரை யோநி முத்திரை. (பா. 3076-02) மந்திரஜபம் எளிதில் ஸித்திக்க, யோக முறையில் ஆஸனத் துவாரத்திற்கும் குறிக்குமிடையே அமுத்தம் ஏற்படுத்திப் பிராணனைக் கட்டுப்படுத்தும் முறை யோநி முத்திரை. அதன் வடிவில் தேவி இருப்பாள். (982)

**3082-01 த்ரிகண்டா-ஈசீ. திரிகண்டா முத்திரையின் தலைவி.**

3082-02 ஸர்வத்திரிகண்டா முத்திரை முத்திரைகளில் பத்தாவது. (பா. 3076-02) ஒன்பதாவது ஆவரண பூஜைக்குப்பின் யோநி முத்திரையால் பிந்துவில் உள்ள ஸ்ரீலலிதா மஹாசக்கிரேசுவரியை வணங்கியபின் ஷோடசீ மந்திரத்தால் வழிபடுவராயின் ஸர்வத்திரிகண்டா முத்திரையையும் காட்டி வணங்குவர். அந்த ஸர்வத்திரிகண்டா முத்திரையால் வணங்கப்பெறும் ஈச்வரி தேவி.

3082-03 சந்திர கண்டம், ஸூர்ய கண்டம், அக்னி கண்டம் என ஆக்ஞை முதலிய ஆறு சக்கிரங்களை மூன்று கண்டங்களாகப் பிரிப்பர். (பா. 1211-03) அந்த கண்டங்களுக்குத் தலைவி (த்ரிகண்ட ஈசீ) தேவி. (983)

**3083-01 த்ரிகுணா. முக்குணங்கள் உள்ளவள்.**

3083-02 ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களுக்கும் தோற்றுவாயான இருப்பிடம் மூலப்பிரகிருதி. திரிகுணங்களை வெளிப்படுத்தும்அஹங்காரத் தத்துவமாக விளங்குபவள். (பா. 1708) (984)

**3084-01 அம்பா. முக்குணங்களுக்கும் தாய்.**

3084-02 ஸத்வம் முதலிய முக்குணங்களின் தாய், மந்திரங்களின் ஜீவசக்தியாயிருப்பவள். எல்லா உலகிற்கும் பொதுவான

தாய். ஆபத்து வேளையில் காப்பாற்றுவதற்காக, வேறுஎதிர்பார்வை யின்றியும், ஆபத்திற்குட்பட்டவனின் கோரிக்கையை எதிர்பாரா மலும் தானே வலிய வந்து அக்கரையுடன் உதவும் தாய். கஷ்டம் நேரும்போதும் களைத்திருக்கும்போதும் உயிரினம் அனைத்தும் அறியாமல், தானே வாய் வசமின்றிக் கூறும் சொல் அம்பா—அம்மா. அந்தத் தாய் வடிவினள். தாயின் மற்ற நிலைகளுக்கேற்றத் தனிச் சிறப்புப் பெயர்களுடன் இதனையும் சேர்த்துக் கொள்ளலாம் (பா. 2903–02). (985)

**3085–01 த்ரிகோணகா. முக்கோணத்தில் இருப்பவள்.**

3085–02 ஸ்ரீ சக்கிரத்தில் நான்காவது ஆவரணம் 14 திரி கோணங்கள் கொண்டது. 5 வதும் 6 வதும் 10–10 திரிகோணங்கள் கொண்டவை. ஏழாவது 8 திரிகோணங்கள் கொண்டது. எட்டாவது ஒரு திரிகோணம் கொண்டது. 43 திரிகோணங்களிலும் முக்கியமாக எட்டாவதிலுள்ள திரிகோணத்திலும் தேவி இருக் கிருள். இந்த 43 கோணங்களுக்கும் மூலமான சக்திகோணங்கள் ஐந்திலும், சிவத்திரிகோணங்கள் நான்கிலும் உள்ளவள். நம் சிற்றறிவும் முக்கோணம் உள்ளது. அறிவாகி அதன் நடுவே இருப்பவள். (986)

**3086–01 அநகா. பாபமற்றவள்.**

3086–02 அகம்-பாபம், பாபத்தால் விளைந்த துக்கம், குறை இவை அனைத்தும் தேவியிடம் இல்லை. வினைத்தொடர் பற்ற ஆத்மஸ்வருபத்தில் வினையால் விளையும் பாபம் முதலியவை யாதொரு பாதிப்பையும் விளைவிக்க முடியாது. (987)

**3087–01 அத்புத–சாரித்ரா. அற்புதமான செயல்முறையுள் ளவள்.**

3087–02 'அநகா' ஆக இருப்பதை வேறுவகையில் விளக்கு கிருர்கள். எல்லாச் செயல்களுக்கும் பின் விளைவு உண்டு. நல்ல தாயின் நல்ல பின் விளைவு. கெட்டதாயின் கெட்ட பின் விளைவு. ஏதேனும் ஒரு பின் விளைவின்றி ஒரு செயலை நம்மால் செய்ய முடியாது. தேவியின் செயல் முறையில் உள்ள விசேஷம் இந்தப் பின் விளைவில்லாதிருப்பது. அது விந்தையல்லவா ? நான் எனது என்ற பற்று இல்லாதவனை வினை பின்தொடராது எனலாம். எல்லா 'நான்' களுக்கும் நான் தான் 'நான்' எனக் கூறும் தேவி பராஹந்தா வடிவினள். அத்தனை அஹந்தை உள்ளவளையும் வினை பற்ருது எனில் விந்தையல்லவா ? அத்தனை தனிச் சிறப்புற்ற விந்தையான செயல்முறை உள்ளவள் தேவி.

3087-03 கெட்டவர்களை அழிக்கவும் நல்லோர்களைக் காக்கவும் தேவி புரியும் விசித்திர லீலைகள் (சாரித்ரம்) மிகவும் விந்தையாகத் தோன்றுபவை.

3087-04 திடீரெனத் தொடங்கிக் கெட்ட பலன்களைத் தரும் உற்பாதங்களிலிருந்தும் காப்பாற்றுபவள். (அத்புத-சாரி-த்ரா) (988)

3088-01 வாஞ்சித-அர்த்த-ப்ரதாயிநீ. விரும்பிய பொருளைத் தருபவள்.

3088-02 தர்மம், அர்த்தம், காமம் (அறம், பொருள், இன்பம்) எனும் புருஷார்த்தங்களில் எதனைக் கோரி வழிபட்டாலும் அதனை நன்கு வழங்குவது தேவியின் இயல்பு. (989)

181 अभ्यासातिशयज्ञाता षडध्वातीतरूपिणी। 991
अव्याजकरुणामूर्तिः अज्ञानध्वान्तदीपिका॥ 993

அப்ப்யாஸாதிசயஜ்ஞாதா ஷடத்த்வாதீதருபிணீ 1
அவ்யாஜகருணாமூர்த்தி: அஜ்ஞாநத்வாந்ததீபிகா 11

3089-01 அப்ப்யாஸ – அதிசய – ஜ்ஞாதா. அப்பியாசத்தின் மிகுதியால் அறியப்பட்டவள்.

3089-02 திரும்பத் திரும்ப மாறுதலின்றி ஒருமுனைப்போடு செய்யப்படும் செயலும் சொல்லப்படும் சொல்லும் அப்பியாஸமாகும். தூங்கித் தன் வசமிழக்கும்வரை, இறந்து அறியும் உபகரணங்கள் கைவிடும்வரை திரும்பத்திரும்பத் தேவியைச் சிந்திப்பதும் அவளை வழிபடுவதும் அவளை புகழ்ந்து பாடுவதுமான அப்பியாஸம் தேவை. அந்த அப்பியாஸத்தையும் செயல் நேர்த்தியுடன் அளவுகடந்த ஈடுபாட்டுடன் செய்வது அப்பியாஸாதிசயம் ஆகும். வாழ்நாளில் உணவு முதலிய பலவற்றின் அப்பியாஸங்கள் ஏற்பட்டுள்ளன. அவைகளின் அப்பியாஸத்தைவிட இது சிறந்ததாக அதிசயமான அப்பியாஸமாக அமையவேண்டும். அப்படி ஏற்பட்டால் அது அதிசயமே. அப்படி விந்தையான எளிதில் கைகூடாத அப்பியாஸத்தால் தேவியை அறியலாம். (990)

3090-01 ஷட்–அத்த்வா-அதீத–ருபிணீ. அறுவழிகளைக்கடந்த வடிவினள்.

3090-02 தேவியை உபாஸனை செய்யும் வழிகள்-அத்த்வாக்கள் ஆறு. அவை வர்ணத்த்வா, பதாத்த்வா, மந்த்ராத்த்வா,

கலாத்த்வா, தத்த்வாத்த்வா, புவனுத்த்வா என்பன. வர்ணம் பதம் மந்திரம் எனும் மூன்றும் சொல் வடிவானவை. விமர்சருப மானவை. கலா தத்துவம் புவனம் எனும் மூன்றும் பொருள் வடிவானவை. பிரகாசருபமானவை.

3090-03 'அ' முதல் 'க்ஷ' வரையுள்ள அக்ஷரங்களின் சக்தியைப் பற்றி அறிவது வர்ண-அத்த்வா. அக்ஷரங்களைச் சேர்த்துப் பொருளுள்ளதாக அமைத்தது பதம். அதன் சக்தியை விளக்குவது பதாத்த்வா. அந்தப்பதங்களையோ அக்ஷரங்களையோ கொண்டு, தனித்து அக்ஷரத்திற்கும் அதன் கூட்டான பதத்திற்கும் சக்தி கொண்டதாக அமைத்தது மந்திரம். அதன் சக்தியை விளக்குவது மந்திராத்த்வா. நிவிருத்தி, பிரதிஷ்டா, வித்யா, சாந்தி, சாந்தி யதீதா என்ற (பா. 2167) பஞ்சபூத 'பஞ்சபிரும்ம' கலைகளைப்பற்றி விளக்குவது கலாத்த்வா. சிவன் முதல் பூமி ஈருன 36 தத்துவங்களுக்கான விளக்கம் தத்துவாத்த்வா. (சைவாகமங்கள்படி 36, மற்ற சாஸ்திரங்களின்படி தத்துவங்களின் எண்ணிக்கை மாறுபடும்) புவனங்கள் ஐந்து. ஆகாச புவனம், வாயு புவனம், அக்னி புவனம், ஜலபுவனம், பூமிபுவனம் என. இந்த புவனங்களைப் பற்றியது புவனுத்த்வா. இந்த ஆறு வழிகளால் உணரப் பெறுபவையே உலகம். அண்டமாகிய பிரும்மாண்டத்திலும் பிண்டமாகிய தனி மனிதனின் சரீரத்திலும் இவைகள் உள்ளன. சிஷ்யனுக்கு மந்திரம் உபதேசிக்குமுன் மந்திரத்தால் தேவியுடன் ஐக்கிய பாவனை பெறத் தகுதி இந்த ஆறு வழிகளும் சுத்தமாக இருந்தால் தான் அமையும் என்பதற்காக ஷடத்த்வசோதனம் என்ற ஒரு சடங்கு உண்டு. ஆறு வழிகளையும் அதனுல் சுத்தி செய்த பின்னரே சுத்தசைதன்யமான மந்திர தேவதை உடலினுள் தங்கும். (சாரதா திலகம்-5,77-96) இந்த ஆறு அத்த்வாக்களால் விளக்கப்பெறுவதும் அவைகளுக்குள் அடங்காததுமான வடிவமுள்ளவள் தேவி.

3090-04 சைவம், வைஷ்ணவம், சாக்தம், ஸௌரம், காணபதம், கௌமாரம் (கௌமாரத்தினிடத்தில் ஜைனம் எனச் சிலர்; காபாலிகம் எனச் சிலர்) என்ற ஆறுவகை தேவதை வடிவங்களின் வழிபாட்டிற்கான முறையாலும், அதனைக்கடந்த தேவி உபாஸனை முறையாலும் வழிபடத்தக்கவள். தேவியின் ஸகுண வடிவங்களாகத் தனித்தனியாகத் தோன்றும் தேவதைகளை வழிபடுவதால் சித்த சுத்தி ஏற்பட்டுப் பின் பிறவிகளில் தேவியின் ஸ்ரீவித்யா ஸ்ரீ சக்கிர உபாஸனை செய்யும் தகுதி ஏற்படும். (991)

**3091-01** அவ்யாஜ-கருணா-மூர்த்தி:. எதிர்பார்வையற்ற கருணை வடிவினள்.

3091-02 பிறருக்காகவோ தனக்காகவோ செய்யப்படும் செயலால் என்ன லாபம் விளையக்கூடும் எனச் சிந்தித்து லாபத்தை எதிர்பார்த்துச் செயல்படுவது இயற்கை. செய்யும் செயலைவிட அதனால் கிடைக்கும் லாபம் சற்று அதிக மதிப்புள்ளதாக இருக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பது உண்டு. கொடுத்த பணத்தைத் திருப்பி வாங்கும்போது வட்டி பெறுவது போல். வட்டி போன்ற அதிக லாபம் வ்யாஜம் எனப்படும். [வட்டி (வ்யாஜம்) கிடைக்காமல் வட்டிக்காக வழக்காடுவது வியாஜ்ஜியம்]. எதிர்பார்த்த பலன் அல்லது லாபம் வ்யாஜம். நமது கருணைக்கும் அப்படி வியாஜ எதிர்பார்வை இருக்கும். ஆனால் தேவி காட்டும் கருணை எதிர்பார்வையற்றது. மகன் என்ன செய்வான் என்பதை எதிர்பாராமல் கருத்தரித்துப் பெற்று வளர்த்து ஆளாக்கும் தாயின் கருணை தேவி காட்டும் கருணையின் ஓர் அம்சமே. வியாஜம்–காரணம். காரணமின்றித் தானே பெருகும் கருணை. தேவியின் கருணை எனச் சொல்வது கூடச் சரியில்லை. தேவியே கருணை. கருணையே உருவானவள் கருணாமூர்த்தி:. (“ஜயதி கருணா காசித் அருணா”. “செந்நிறமுள்ள கருணை (தேவி) ஒருவள் விளங்குகிறாள்” ஸௌந்தரிய லஹரீ-சு. 93) (992)

**3092-01** அஜ்ஞாந-த்த்வாந்த-தீபிகா. அறியாமை எனும் இருளைப் போக்கும் அழகான தீபம்.

3092-02 இருட்டும் வெளிச்சமும்போல் அறியாமையும் ஞானமும். இருட்டிலிருந்தவன் திடீரெனப் பேரொளி கண்டால் கண்கள் இருண்டு பார்க்கும் திறனை இழந்துவிடும். அதற்காக இரவின் இருட்டைப் போக்கச் செவ்வொளி பரப்பும் கதிரவன் ஒளி குறைந்தவனாகத் தோன்றுகிறான். தேவி கதிரவனைவிடக் கருணை மிக்கவள். அழகிய சிறுதீபம்போல் அறியாதவனை நெருங்குகிறாள். அவனுக்கு ஏற்பட்டுள்ள அறியாமை எனும் இருள் அல்லது மறைப்பு, சாதாரண இருளைப்போல் உலகத்தைக் காண முடியாததால் வேதனை தருவதல்ல. உலகைக் கண்டு தன்னைக் காணமல் தடுக்கும் மறைப்பு அது. அவனுக்கு ‘அவனை’ச் சுற்றி மட்டும் காட்டி ‘அவனை’ உணர்த்தி உதவுவதற்காகச் சிறு தீபமாக, அவனுடைய அறிவுக்கேற்பப் பார்க்கவேண்டியதில் மட்டும் ஒளிபாய்ச்சும் அழகிய தீபமாகத் தேவி வருகிறாள். அஜ்ஞானம் எனும் இருள் தீபத்தைக் கண்டதும் தானே மறைகிறது. அஜ்ஞானத்தைப் போக்கத் தேவிக்குத் தனிமுயற்சி தேவைப்படவில்லை. (993)

182 आबालगोपविदिता सर्वानुल्लंघ्यशासना । 995
श्रीचक्रराजनिलया श्रीमत्त्रिपुरसुन्दरी ॥ 997
183 श्रीशिवा शिवशक्त्यैक्यरूपिणी ललितांबिका ॥ओं॥ 1000

ஆபாலகோபவிதிதா ஸர்வாநுல்லங்க்ய சாஸநா 1
ஸ்ரீசக்ரராஜநிலயா ஸ்ரீமத்த்ரிபுரஸுந்தரீ ll
ஸ்ரீசிவா சிவசக்த்யைக்யரூபிணீ லலிதாம்பிகா ll

**3093-01** ஆ-பால-கோப-விதிதா. சிறுவர் இடையர் உட்பட அனைவராலும் அறியப்பட்டவள்.

**3093-02** சிறுவர்கள் அறிவு முதிர்ச்சியின்மையால் தெய்வ உணர்வின் இயல்பை அறியாதவர்கள். ஆடுமாடுகளைப் பேணி வளர்ப்பதையே தொழிலாகக் கொண்டு தெய்வீகநெறி பற்றிச் சிந்திக்க நேரமும் வாய்ப்புமற்ற இடையர்கள். இவர்கள் கூடத் தேவியைத் தெய்வமாக அறிவார்கள்.

**3093-03** ஸதாசிவனுக்கு அடங்கியவர்கள் பிரும்மா முதலான மும்மூர்த்திகள். அதனல் ஸதாசிவனுக்குப் பாலர்கள். உலகைக் காப்பவர்களானதால் கோபர்கள். (கோ-பூமி, உலகம்). அவர்களால் அறியப் பெற்றவள்.

**3093-04** பாலனுகக் கோபனுக வேடம் போட்டவன் கண்ணன். பாலன்-சிறுவன், கோபர்-பசுபதியான சிவனும் கோபாலனன கண்ணனும், இவர்களிலிருந்து சிறுவர்களும் இடையர்களும் வரை எல்லோராலும் தெய்வமென உணரப்பட்டவள். (ருத்திரம் எனும் வேதப்பகுதி தெய்வம் எது என்ற கேள்விக்குச் சூரியனைக் காட்டித் தெய்வம் அது எனப் பதில் கூறுகிறது. "உதைநம் கோபா அத்ருசந் அத்ருசன் உதஹார்ய:. உதைநம் விச்வா பூதாநி" இடையர்கள் இவரை அறிவார்களே! வெகுதூரத்திலிருந்து நீர்கொணரும் பெண்கள்கூட இவரை அறிவார்களே! ஏன்! உலகிலுள்ள உயிரினங்களனைத்தும் இவரை அறிவார்களே என). அந்த வடிவம்தான் தாயான தெய்வம் ஸ்ரீமாதா. (நா-1) (994)

**3094-01** ஸர்வ-அநுல்லங்க்ய-சாஸநா. எவராலும் மீறமுடியாத கட்டளைகளுள்ளவள்.

**3094-02** பிரும்மா விஷ்ணு முதலானோர்கூட அவள் இட்ட பணிகளை அப்படியே நிறைவேற்றுகிறார்கள். யாரும் அவளது கட்டளைகளை மீறமுடியாது. புருவநெரிப்பாலேயே கட்டளையிடுவாள் தேவி. அதனைப் பிரும்மா முதலானோர்கூட மீறமுடியாது.

ஆனால் அதே சமயத்தில் பாமரனிடமுள்ள கருணையால் அவனிடம் தன் கட்டளைகளை வற்புறுத்தாமல் கருணையால் சிறுவன் செய்யும் தவற்றைத் தாய் பொருட்படுத்தாதிருப்பதுபோல் அவன் செய்யும் தவறுகளைத் தேவி பொருட்படுத்துவதில்லை. அவள் கருணை மூர்த்தி அல்லவா! அதற்குக் "கட்டளையை மீறலாம். கண்டிப்பு கிடையாது" என்ற பொருளல்ல. அவளது கட்டளையை யாரும் மீற முடியாது. ஏனெனில் அவள் ஸ்ரீமஹாராஜ்ஞீ. (நா-3) (995)

3095–01 ஸ்ரீ-சக்ர-ராஜ-நிலயா. ஸ்ரீ சக்கிரத்தை இருப்பிடமாகக் கொண்டவள்.

3095–02 ஒன்பது ஆவரணங்கள் கொண்ட ஸ்ரீசக்கிரம் சக்கிரங்களுக்குள் சிறப்புற்று விளங்குவது, ஸ்ரீ சக்கிரராஜம். அதனைத் தன் இருப்பிடமாகக் கொண்டவள். சிவனும் சக்தியும் இணைந்து உறையும் உடலாக ஸ்ரீசக்கிரத்தைப் பாவனை செய்வர். உடலில் ஜீவன் தங்குவதுபோல் தேவியும் சிவனும் இதனுள் உறைகிறார்கள் ஸ்ரீசக்ரராஜமெனும் ரதத்தில் இருப்பவள். (பா–1005-02) (996)

3096–01 ஸ்ரீமத்-த்ரிபுர-ஸுந்தரீ. சிறப்புமிக்கத் திரிபுரரின் அழகிய மனைவி.

3096–02 த்ரிபுரர் - பரமசிவன். பிரும்மா, விஷ்ணு, ருத்திரன் என்ற மூன்று உடல்கள் கொண்டவர். "பரசிவனது இச்சை காரணமாக அவருக்கு மூன்று உடல்கள் தோன்றின. மேற்பகுதியில் பிரும்மா, நடுப்பகுதியில் விஷ்ணு, கீழ்ப்பகுதியில் சிவன் என. ஐந்துமுகங்களும் நான்கு கைகளும் தாமரை கேஸரம் போன்ற மஞ்சள் கலந்த வெண்மை நிறமும் உள்ள மேனி பிரும்மா. ஒரே முகமும் சங்கு சக்கிரம் கதை தாமரை ஏந்திய நான்கு கைகளும் கருத்த நிறமுமுள்ள மேனி விஷ்ணு; ஐந்து முகங்களும் நான்கு கைகளும் ஸ்படிகக்கல் அப்பிரகத்தகடு போன்ற வெண்ணிறமும் பிறை சூடிய தலையும் கொண்ட மேனி சிவன். இந்த முப்புரங்களும்-மூன்று மேனிகளும் கொண்டதால் பர சிவன் திரிபுரன் ஆனார் எனக் காலிகாபுராணம் கூறும். ஸ்ரீமத்-பெருமைமிக்க, த்ரிபுர–திரிபுரரின், ஸுந்தரீ–அழகிய மனைவி.

3096–03 ஸ்தூலம் ஸூக்ஷ்மம் காரணம் என்ற மூன்று தேக (புர)ங்களுக்குள்ளும் விளங்கும் சிறப்புமிக்க அந்தர்யாமியாக விளங்கும் சுந்தரி, தன் அழகால் முப்புரங்களையும் சிறப்புமிக்கதாகவும் அழகு மிக்கதாகவும் செய்பவள். புரம்-நிலை. விழிப்பு, கனவு,

தூக்கம் என்ற மூன்று நிலைகளிலும் ஸாக்ஷியாக இருந்து அவைகளை சிறப்பும் அழகும் உள்ளவையாகச் செய்பவள். மூவுலகங்களிலும் சிறப்புமிக்க அழகி. (997)

**3097–01** ஸ்ரீ சிவா.

**3097–02** பரசிவனது ஸௌந்தரி என்பதால் இருவருக்கிடையே வேற்றுமை இருப்பதாகக் கொள்ளக்கூடாது. சிவனும் சிவையும் 'ஒருவரே'. ஒருடல் பெற்ற ஒருவரே. (பா. 0902–01) சிறப்புமிக்க சிவா. மங்களவடிவினள். (998)

**3098–01** சிவ-சக்தி-ஐக்க்ய-ரூபிணீ. சிவனும் சக்தியும் ஒன்றாயிருப்பதை நிரூபிப்பவள்.

**3098–02** விளக்கும் ஒளியும், சொல்லும் பொருளும் போல் ஒன்றால் மற்றொன்று விளக்கம் பெறுவதும், ஒன்றிருப்பதாலேயே மற்றொன்றிருப்பதை உணர முடிவதும் ஐக்கியத்தை நிரூபிப்பவை. எள்ளினுள் எண்ணெய்போன்று சிலசமயம் சக்தி வெளிப்படாதிருக்கலாம். வேகமாகச் சுழலும் சக்கிரத்தில் சுழல்வதை மட்டும் உணர்வதுபோல் சிவன் வெளிப்படாமல் சக்தி மட்டும் வெளிப்படலாம். பழுக்கக் காய்ச்சிய இரும்பு நெருப்பாக உணரப்படுவதுபோல் சக்தி மட்டும் இருப்பதாக உணரப்படலாம். சக்தியும் சக்திமானான சிவனும் ஸமரஸம் பெற்றவர்கள். (பா. 1208, 02–09) பிரும்மமும் அவரது சக்தியும் ஒன்றே என்பதை நிரூபிக்க, 'சிவ-காமேச்வராங்கஸ்த்தா' (நா. 52) வாக, 'தக்ஷிணாமூர்த்திரூபிணி'யாக, (நா. 725) 'ஏகாகிநீ' (நா. 665) யாக 'கேவலா' (நா. 623) வாக 'காந்தார்த்த விக்ரஹா' (நா. 861) வாக ஸ்ரீ சிவாவாக (நா. 998) தேவி விளங்குகிறாள்.

**3098–03** சிவ-சக்தி-ஐக்கியம்–உண்மைப் பொருளாகிய சிவம் ஆகிய பரப்பிரும்மம் குணமும் குறியுமற்றது. எக்காலத்தும் தன்னுடைய தனிப்பெருமையில் நிலைத்திருப்பது. எவ்வித அளவைகளாலும் பகுத்தறிய வொண்ணாதது. எப்பொருளையும் அறிகின்ற அறிவு அதனிடம் செயலற்றுவிடும். மனம் விருத்தி வடிவில் பொருளின்மீது படர்ந்து உணரும் சக்தி கொண்டது. உருவற்றதானபடியால் விருத்திக்ககப்படாத பரம் பொருளை அதுவும் கண்டுகொள்ளாது. மனமும் புத்தியும் ஒடுங்கிய சமாதி நிலையில் பிரும்மானுபவம் பெற்ற யோகிகள் அதனை அபரோக்ஷமாக-நேரிடையாக அனுபவிப்பர். அந்த நிர்குணப் பிரும்மம் தன் மாயா பலத்தால் ஸகுண வடிவைத் தாங்கும். ஸகுண நிர்க்குண நிலைகளிடையே பேதமில்லை. ஸகுண மூர்த்தியாக வெளியே நான்கு

கைகள் முதலிய அடையாளங்களுடன் கருணை முதலிய குணச் சிறப்புக்களுடன் தோன்றும் தேவியும் பிரும்மமே. அந்த பிரும்மமே தர்மி தர்மம் என்று பிரிக்கமுடியாதிருந்த நிலையிலிருந்து பிரிந்து சிவமே காமேசுவரனுகி அமர்ந்திருக்க அவரை அதிஷ்டானமாகக்கொண்டு அவரது தர்மமான சக்தியாக அவரது மடியில் தேவி விளங்குகிருள். பிரும்மமாக நிர்க்குணமாக இருந்த நிலையில் சக்தியாக உள்ளடங்கியிருந்த தேவி, ஸகுண நிலையில் 'காமேச்வராங்கமத்த்யஸ்த்தா'வாக இணைந்து விளங்குகிருள்.

3098-04 ரத்னத்ரய பரிக்ஷை எனும் நூலில் அப்பய தீக்ஷிதர் என்ற மகான் இதனை அழகாக விளக்குகிருர். "நித்யம் நிர்த்தோஷகந்தம் நிரதிசய ஸுகம் ப்ருமஹ சைதந்யமேகம் தர்மோ தர்மீ இதி ரூபத்வயம் அயதி ப்ருதக்பூய மாயாவசேந. தர்மஸ் தத்ர அநுபூதி: ஸகல விஷயிணீ, ஸர்வகார்யானுகூலா சக்திச்ச இச்சாதிரூபா பவதி குணகணச் சஆச்ரயஸ்து ஏகஏவ. கர்த்ருத்வம் தஸ்ய தர்மீ கலயதி ஜகதாம் பஞ்சகே ஸ்ருஷ்டி பூர்வே தர்ம:பும் ரூபமாப்த்வா ஸகல ஜகதுபாதான பாவம் பிபர்த்தி. ஸ்த்ரீரூபம் ப்ராப்ய திவ்யா பவதி ச மஹிஷீ ஸ்வாச்ரயஸ்யாதிகர்து: ப்ரோக்தௌ தர்மப்ப்ரபேதாவபி நிகமவதாம் தர்மிவத் ப்ரும்ஹகோடீ".

3098-05 தேவியின் பல தோற்றங்களில் ஸ்ரீசக்கிரமும் குண்டலிநியும் ஸ்ரீவித்யையும் தேவியின் வடிவங்கள். ஸ்ரீசக்கிரத்தில் ஐந்து சக்தி சக்கிரங்களும் நான்கு சிவசக்கிரங்களும் இணைந்து 43 முக்கோணங்களாக வடிவம் பெறுகின்றன. ஸ்ரீசக்கிரமாகப் பார்க்கும் போது சக்தி சக்கிரம், சிவசக்கிரம் எனும் பேதம் மறைந்துவிடுகிறது. அப்படிப் பேதமற்று இணைந்த சிவசக்தி ஐக்யத்தை ஸ்ரீசக்கிரமான தன் உருவில் விளக்குகிருள். (0911-15)

3098-06 நடுவிலுள்ள திரிகோணம் சக்தி; அதன் நடுவிலுள்ள பிந்து சிவவடிவம். இரண்டும் இணைந்து காணப்படுகின்றன. திரிகோணம், எட்டுகோணம், இரு பத்து கோணங்கள், 14 கோணம் இவை சக்திசக்கிரங்கள். பிந்து, எட்டுதளத்தாமரை, 16 தளத்தாமரை, சதுரச்ரம் என்ற நான்கும் சிவசக்கிரங்கள். நடு திரிகோணமும் பிந்துவும்; அஷ்டகோணமும் அஷ்டதளமும்; இரு பத்து கோணங்களும் பதினுறு தளமும்; பதினுன்கு கோணமும் பூபுரமும் ஒன்ருேடொன்று இணைப்புள்ளவை. இப்படியும் சிவசக்திகளின் ஐக்கியம் விளக்கப்பெறுகின்றது.

3098-07 மூலாதாரத்திலிருந்து ஆஜ்ஞை வரை பரவும் குண்டலினிக்கு ஆதாரமாகவும் மூடியாகவும் இருப்பவை, சிவசக்கிரங்கள் (இரண்டு அகுலசக்கிரங்கள்) எனப்படுபவை. சக்தி சக்கிரங்கள்

மூலாதாரம் முதலிய ஆறு. இவை ஒன்ருேடொன்று இணைந்தவை. ஒவ்வொரு சக்கிரத்திலும் சிவனும் சக்தியும் ஐந்து வித ஸாம்யங்களை காட்டுகின்றனர். (பா. 1201-05, 1205-02, 1207-02, 1208). தேவி யின் பஞ்சதசாக்ஷரியில் க ஹ என்ற இரு எழுத்துக்கள் சிவாம்ச முள்ளவை. ஏ, ஈ, ல, ஸ என்ற நான்கெழுத்துக்கள் சக்தியம்சம் பெற்றவை. ஹ்ரீம் என்பது சிவசக்தியம்சம் பெற்றது. (பா. 1104-03) இவை இணைந்து தேவியின் மந்திர வடிவை விளக்குகின்றன.

3098-08 சிவனுக்கு ஐந்து சக்திகள் உண்டு. ஆகாயத்தில் 'விப்வீ' (எங்கும் பரந்திருப்பது) வாயுவில் 'ஸ்பந்தா' (அசைவது) அக்கினியில் 'பாஸ்வதீ' (ஒளி) ஜலத்தில் 'ஹ்லாதா' (திருப்தி-புஷ்டி அளிப்பது) பூமியில் 'தூமாவதீ' (புகைபோல் மறைப்பது) என. அந்த சிவசக்திகள் ஐந்தும் ஒருங்கிணைந்த வடிவம் தேவி.

3098-09 சிவனது சக்திகள் ஐந்து-ஸ்ருஷ்டிகர்த்ரீ (நா. 264) கோப்த்ரீ (நா. 266) ஸம்ஹாரிணீ (நா. 268) திரோதானகரீ (நா. 270) அனுக்ரஹதா (நா. 271) என. அவைகளின் ஒருங்கிணைந்த வடிவ மானவள் தேவி. (999)

**3099-01** லலிதா-அம்பிகா. அழகிய தாய்.

3099-02 ஆயிரம் நாமங்களில் கடைசி நாமம். ஸ்ரீ மாதா-சிறப்புமிக்க அழகிய தாய் எனத் தொடங்கிய நாமங்களின் வரிசை ஸ்ரீலலிதா அம்பிகா-அழகிய தாய் என்ற நாமத்துடன் நிறைவு பெறு கிறது. வாக்தேவிகள் தனது தோற்றத்திற்குக் காரணமானவளும் வாக்கு சக்தியை அருளும் சக்தி பெற்ற வாக்தேவிகளாக இருக்க அருள் புரிந்தவளும் மாட்சிமை மிக்கவளுமான தேவியை அறிமுகப் படுத்துவதற்கு முதல் நாமமாக 'ஸ்ரீமாதா'வைத் தேவியின் பல கோடி நாமங்களிலிருந்தும் தேர்ந்தெடுத்தார்கள். அந்த நாமா வளியை-நாமங்களின் வரிசையை நிறைவு பெறச்செய்ய அதனைக் காட்டிலும் சிறந்த நாமம் கிடைக்காமல் கடைசி நாமமாக அதே பொருளுள்ள லலிதா அம்பிகா என்ற நாமத்தைத் தேர்ந்தெடுத்தி ருக்கிருர்கள்.

3099-03 உலகைத் தோற்றுவித்துக் காத்து ஒடுக்கும் பரநிலை யில் உலகைத் தம் கருவில் தாங்கிய 'மாதா'வாக ஸ்ரீமகாராஜ்ஞீயாக ஸ்ரீமத்ஸிம்ஹாஸனேச்வரியாகத் தேவியின் அளவிலடங்காப் பெருமை கொண்ட தாயின் வடிவத்தில் தொடங்கி துயர்நீங்கக் கருணையுடன் தானே வலியவந்து ஆட்கொள்ளும் அம்பிகாவாக உள்ள அழகிய தாயின் வடிவில் நாமங்கள் நிறைவு பெறுகின்றன. துயருறும் நிலையில் அன்புடன் அணைக்கும் தாய் அழகற்றவளா

யினும் அழகியாகக் காணப்பெறுவாள். குழந்தைக்குத் தன் தாய் எப்போதும் அழகியே. துயருற்ற நிலையில் அணைப்பவள் பரிவால் அழகு மிகுந்து காணப்படுவாள். அதனால் லலிதா-அம்பிகா.

3099-04 லலிதா-அழகானவள். அவளது அழகு ஈர்க்கும் தன்மை உள்ளது. அதன் விளையாட்டுகள் சிறிது சிறிதாக மலர்ந்து கொண்டிருக்கும். மனத்தைக் கடைந்து புதுப்புது கற்பனைகளுக்கு இடம் கொடுக்கும். உணவைக் கண்டதும் நாவில் நீர் ஊறுவது போல் கல் மனத்திலும் இளக்கம் காணச்செய்யும். மறுபடி மறுபடி காணத் தூண்டும். நெருங்கி நின்று பார்த்தால் நல்லது என்ற ஆவலைத் தூண்டும். அழகே நம்முடன் பேசுவதை உணர்வோம். அந்த அழகு மென்மையானதும் மழமழப்புள்ளதுமான மேனியில் மேல்படர்ந்து பலதரப்பட்ட பாவங்களை வெளியிட்டுக் கொண்டிருக்கும். உடல் அசைவிலும் மிடுக்கிலும் மின்னும் அது. அந்த அழகு லலிதம் எனப்படும். "லோகாந் அதீத்ய லலதே லலிதா தேந ஸா உச்யதே" எனப் பத்மபுராணம் இந்த நாமத்தை விளக்கும். உலகில் உள்ள அழகிகள் அனைவரிலும் அவள் அழகி. லோகா:- புலப்படும் பொருள்கள். ஸ்தூல-ஸூக்ஷ்ம தேகங்களைத்தாண்டி உள்ளே அந்தர்யாமியாக, ஸ்தூல ஸூக்ஷ்ம தேகங்களுக்கே அழகூட்டுபவளாக விளங்குபவள். லோகா:-புலப்படும் கிரணங்கள். தேவியின் மேனியிலிருந்து வெளியாகும் செவ்வொளிக் கதிர்கள். அவை ஆவரண தேவதைகளாக விளங்குபவை. ''அணிமாதிபி: ஆவ்ருதாம் மயூகை:'' (0404) கிரணங்கள் வடிவிலுள்ள அணிமாதி தேவதைகளை உள்ளடக்கிக்கொண்டு பிந்துவில் விளங்குபவள். தேவியிடம் உள்ளதனைத்தும் லலிதம்-மென்மையும் மழமழப்பும் மிக்கவை, ஆவரண தேவதைகள், கரும்பும் பூவும் ஆசையும் அறிவுமான ஆயுதங்கள் முதலானவை.

3099-05 லலிதா-பிரயாகையில் பீடரூபிணியாக உள்ளவள், லலிதாவெனும் நதிவடிவினள். மங்கள சண்டிகா என்ற தேவியின் வடிவில் இருப்பவள். வரத அபய முத்திரைகள் கொண்ட இரு கைகள், வெண்மையான மேனிநிறம், சிகப்புப் பட்டாடை, புன் சிரிப்புடனுள்ள முகம், அழகிய முகம், புதுமை அழியாத யௌவனம் மிளிரும் களை, அழகிய உடல் அமைப்பு இத்துடன் தியானிக்கத் தக்கவள் மங்கள சண்டிகா. லலிதா எனும் ராக வடிவினள்.

3099-06 ஓங்காரத்துடன் தொடங்கிய நாமங்கள் ஓங்காரத் துடன் நிறைவு பெறுகின்றன.

एवं श्रीललितादेव्याः नाम्नां साहस्रकं जगुः ।।

ஏவம் ஸ்ரீலலிதாதேவ்யா: நாம்நாம் ஸாஹஸ்ரகம் ஜகு: ll

3099-07 இப்படித் தேவி ஸ்ரீலலிதையின் ஆயிரம் நாமங்களை வசிநீ முதலான வாக்தேவிகள் பாடினர்.

3099-08 எளிதில் நினைவில் கொள்ள ஒவ்வொரு நூறு நாமங்களின் முதல் நாமங்கள். (1) ஸ்ரீமாதா, (101) மணிபூராந்தருதிதா, (201) ஸத்கதிப்ரதா, (301) ஹ்ரீங்காரீ, (401) விவிதாகாரா, (501) குடாந்நப்ரீத மாநஸா, (601) தராந்தோலித தீர்க்காக்ஷீ, (701) தேசகாலாபரிச்சிந்நா, (801) புஷ்டா, (901) நாதரூபிணீ என.

3099-10 மஹாலாவண்யசேவதி: (நா. 48), குணநிதி: (நா. 604) ஆத்மா (நா. 617) ரோகபர்வத தம்போளி: (நா. 748) என்ற நான்கும் புல்லிங்கச் சொற்கள். தத் (நா. 425) ஸாது (நா. 711), பரம்ஜ்யோதி: (நா. 806) பரம்தாம (நா. 807) ப்ரம்ஹ (நா. 822) என்ற ஐந்து நாமங்கள் நபும்ஸகலிங்கச் சொற்கள். ஸ்வாஹா (நா. 535), ஸ்வதா (நா. 536) என்ற இரு நாமங்கள் விகுதியுடன் கூடாத அவ்யயச் சொற்கள். மற்றவை ஸ்திரீலிங்கச் சொற்கள். இவைகளில் பொருளை வேறுபடுத்திக் கூறுவதால் 535, 536 நாமங்களை ஸ்திரீலிங்கச் சொற்களாகக் கொள்வதும் உண்டு. பரம்ஜ்யோதி:, பரம் தாம என்ற இரு நாமங்களும் இரண்டு பதம் கொண்டவை. பரம் என்பதை அவ்யயமாகக் கொண்டு ஒரே பதமாகச் சொல்வதும் உண்டு. ஸ்வாஹா-நம: (ஸ்வாஹாயை நம:) ஸ்வதா நம: (ஸ்வதாயை நம:) பரஸ்மை ஜ்யோதிஷே நம!, (பரம்ஜ்யோதிஷே நம:,) பரஸ்மை தாம்நே நம: (பரம்தாம்நே நம:) என்றவாறு இரண்டுவிதமாகவும் அர்ச்சனையில் சொல்லலாம்.

ஆயிரம் நாமங்களின் விளக்கம் நிறைவு பெற்றது.

# அதிகாரம் 31

# ஜபவிதானம்-முடிவில் நியாஸங்கள்

## उत्तरन्यासः

करन्यासः — ओं ऐं अंगुष्ठाभ्यां नमः+करपृष्ठाभ्यां नमः।
अंगन्यासः— ओं ऐं हृदयाय नमः+अस्त्राय फट्।
ओं भूर्भुवस्सुवरोमिति दिग्विमोकः॥
ध्यानं— सिन्दूरारुणविग्रहां+परामम्बिकाम्॥
अरुणां करुणा+विभावये भवानीम्॥
वन्दे पद्मासन+सर्वसंपत्प्रदात्रीम्॥
सकुंकुमविलेपनां+स्मरास्यम्बिकाम्॥

लमित्यादि पञ्चपूजा—लं पृथिव्यात्मिकायै+सर्वोपचारपूजाः समर्पयामि॥

गुह्यातिगुह्यगोप्त्री त्वं गृहाणास्मत्कृतं जपम्।
सिद्धिर्भवतु देवेशि त्वत्प्रसादान्मयि स्थिरा॥
ओं तत्सत् श्रीललितापरमेश्वर्यर्पणमस्तु।

கரந்யாஸம்-ஓம் ஐம் அங்குஷ்ட்டாப்ப்யாம் +கரப்ருஷ்ட்டாப்யாம் நம:
அங்கந்யாஸம்–ஓம் ஐம் ஹ்ருதயாய + அஸ்த்ராய பட்.
ஓம் பூர்வஸ்ஸுவரோமிதி திக் விமோக:
தியானம்–ஸிந்தூராருண + பராமம்பிகாம்.
அருணும் + விபாவயே பவாநீம்.
வந்தே பத்மா + ஸம்பத்ப்ரதாத்ரீம்
ஸகுங்கும விலேபநாம் + அம்பிகாம்.
லமித்யாதி பஞ்சபூஜா–லம் ப்ருதிவ்யாத்மிகாயை +ஸர்வோபசார பூஜாஸ் ஸமர்ப்பயாமி
குஹ்யாதிகுஹ்யகோப்த்ரீ த்வம் க்ருஹாணஸ்மத் க்ருதம் ஜபம்
ஸித்திர் பவது தேவேசி த்வத் ப்ரஸாதாந் மயி ஸ்த்திரா
ஓம் தத்ஸத் ஸ்ரீ லலிதாபரமேச்வர்யர்ப்பணமஸ்து.

3101-01 கரநியாஸம் அங்க நியாஸம் தியானம் லமித்யாதி பஞ்ச பூஜை பற்றிய விபரங்கள் 30-33 பக்கங்களிலும் அவை பற்றிய விளக்கங்கள் 0301-0406 பாராக்களிலும் தரப்பட்டுள்ளன. ஜபம் முடிந்த பின்னர் மறுபடி இவைகளைச் செய்கிறோம். கரநியாஸத்தைச் சிலர் செய்வதில்லை. நியாஸம் செய்வதற்கான தகுதி கைகளுக்குக் கிடைக்க இது செய்யப்படுவதால் பின்னரும் அவசியம் செய்யப்படவேண்டும் எனச் சிலர் கூறுவர்.

3101-02 ஜபம் ஆரம்பிக்குமுன் நாம் ஜபம் செய்யும் வரை மந்திர தேவதா சக்தி நம்மை விட்டகலாதிருக்கும்படி திக்பந்தம் செய்து கொண்டோம். நமது உடலைச் சுற்றி வலமாக வலக்கையால் சுற்றிப் பாதுகாப்பிற்காக மந்திரத்தால் நம்மைக் கட்டிக் கொண்டோம். ஜபம் முடிந்ததும் அந்தக் கட்டை விலக்கிக் கொள்வதற்காக ஓம் பூர்ப்புவஸ்ஸுவரோம் என வலது கையால் இடமாகச் சுற்றி (கட்டிய முறைக்கு எதிராக) திக்விமோகம், திக்குகளிலிருந்தும் ஏற்பட்ட கட்டை விலக்கிக் கொள்கிறோம்.

3101-03 பஞ்ச பூஜை முடிந்ததும் இதுவரை செய்த நாம பாராயணத்தைத் தேவியிடம் அர்ப்பணம் செய்து அந்த ஜபம் நற்பயனைத் தர தேவியின் அருள் வேண்டுகிறோம். "குஹ்யாதி+ ஸ்திரா" என்ற சுலோகத்தால்.

3101-04 ஸமர்ப்பணம். குஹ்யாதிகுஹ்யகோப்த்ரீ ... ... தேவீ! ரஹஸ்யத்திலும் அதிரஹஸ்யமாக மறைத்து வைத்துள்ள உனது தத்துவங்களை நல்மனம் படைக்காதவர்கள் அறியா வண்ணம் மறைத்து நீ பாதுகாக்கிறாய். அதனால் தத்துவமறியாமல் நான் நாமபாராயணம் செய்துள்ளேன். இதனை நீ ஏற்றுக் கொள்வாய். எனக்குப் பாராயணம் செய்ததன் பலன் உன் அருளால் நிலைத்திருப்பதாகக் கிட்டட்டும்." எனக் கோரிப் பாராயணம் செய்த நாமம் 'அவளே'. 'ஓம் தத் ஸத்'. 'அதுதான் நித்யமானது. அதனை ஸ்ரீ லலிதா பரமேசுவரியிடம் அர்ப்பணம் செய்கிறேன்' எனத் தேவியின் இடது கையில் ஜலத்தை ஸமர்ப்பணம் செய்வதாகப் பாவனை செய்து இந்த நற்பணியைப் பூர்த்தி செய்து கொள்கிறோம்.

# அதிகாரம் 32

# फलश्रुतिः

## பலச்ருதி

1 इत्येवं नामसाहस्रं कथितं ते घटोद्भव ।
रहस्यानां रहस्यं च ललिताप्रीतिदायकम् ।
अनेन सदृशं स्तोत्रं न भूतं न भविष्यति ॥

இத்யேவம் நாமஸாஹஸ்ரம் கதிதம் தே கடோத்பவ ।
ரஹஸ்யாநாம் ரஹஸ்யம் ச லலிதாப்ரீதிதாயகம் ।
அநேந ஸத்ருசம் ஸ்தோத்ரம் ந பூதம் ந பவிஷ்யதி ॥

2 सर्वरोगप्रशमनं सर्वसम्पत्प्रवर्धनम् ।
सर्वापमृत्युशमनं कालमृत्युनिवारणम् ॥

ஸர்வரோகப்ரசமநம் ஸர்வஸம்பத்ப்ரவர்த்தநம் ।
ஸர்வாபம்ருத்யுசமநம் காலம்ருத்யுநிவாரணம் ॥

3 सर्वज्वरार्तिशमनं दीर्घायुष्यप्रदायकम् ।
पुत्रप्रदमपुत्राणां पुरुषार्थप्रदायकम् ॥

ஸர்வஜ்வரார்த்திசமநம் தீர்க்காயுஷ்யப்ரதாயகம் ।
புத்ரப்ரதமபுத்ராணாம் புருஷார்த்தப்ரதாயகம் ॥

4 इदं विशेषाच्छ्रीदेव्याः स्तोत्रं प्रीतिविधायकम् ।
जपेन्नित्यं प्रयत्नेन ललितोपास्तितत्परः ॥

*இதம் விசேஷாத் ஸ்ரீதேவ்யா: ஸ்தோத்ரம் ப்ரீதிவிதாயகம் ।*
*ஜபேந்நித்யம் ப்ரயத்நேந லலிதோபாஸ்திதத்பர: ॥*

3201. ஸ்ரீஹயக்ரீவர் கூறினார் :—தேவியின் ஆயிரம் நாமங்களை உமக்குக் கூறினேன். இவை ரகசியங்களுக்குள் ரகசியமானவை. தேவிக்கு மிகப்பிரியமானது இதைப் போன்றத் துதி வேறொன்றில்லை. நோய்களைப் போக்கும்; செல்வத்தை அளிக்கும். அபமிருத்யுவை நீக்கும். நீண்ட ஆயுள் தரும். பிள்ளைப்பேறில்லாதவர்களுக்குப் பிள்ளைச் செல்வம் தரும். இதனைச் சிரத்தையுடன் படிக்க வேண்டும் (1-4)

5 प्रातः स्नात्वा विधानेन सन्ध्याकर्म समाप्य च ।
पूजागृहं ततो गत्वा चक्रराजं समर्चयेत् ॥

ப்ராத: ஸ்நாத்வா விதாநேந ஸந்த்யாகர்ம ஸமாப்ய ச ।
பூஜாக்ருஹம் ததோ கத்வா சக்ரராஜம் ஸமர்ச்சயேத் ॥

6 विद्यां जपेत् सहस्रं वा त्रिशतं शतमेव वा ।
रहस्यनामसाहस्रमिदं पश्चात्पठेन्नरः ॥

வித்யாம் ஜபேத் ஸஹஸ்ரம் வா த்ரிசதம் சதமேவ வா ।
ரஹஸ்யநாமஸாஹஸ்ரம் இதம் பச்சாத் படேந் நர: ॥

7 जन्ममध्ये सकृच्चापि य एतत्पठते सुधीः ।
तस्य पुण्यफलं वक्ष्ये शृणु त्वं कुम्भसम्भव ॥

ஜந்மமத்த்யே ஸக்ருச்சாபி ய ஏதத் படதே ஸுதீ: ।
தஸ்ய புண்யபலம் வக்ஷ்யே ச்ருணு த்வம் கும்பஸம்பவ ॥

8 गङ्गादिसर्वतीर्थेषु यः स्नायात्कोटिजन्मसु ।
कोटिलिङ्गप्रतिष्ठां च यः कुर्यादविमुक्तके ॥

கங்காதிஸர்வ தீர்த்தேஷு ய: ஸ்நாயாத் கோடி ஜந்மஸு ।
கோடிலிங்க ப்ரதிஷ்டாஞ்ச ய: குர்யாதவிமுக்தகே ॥

9 कुरुक्षेत्रे तु यो दद्यात्कोटिवारं रविग्रहे ।
कोटिं सौवर्णभाराणां श्रोत्रियेषु द्विजन्मसु ॥

குருக்ஷேத்ரே து யோ தத்யாத்கோடிவாரம் ரவிக்ரஹே ।
கோடிம் ஸௌவர்ணபாராணாம் ச்ரோத்ரியேஷு த்விஜந்மஸு ॥

10 यः कोटिं हयमेधानामाहरेद् गाङ्गरोधसि ।
आचरेत्कूपकोटीर्यो निर्जले मरुभूतले ॥

ய: கோடிம் ஹயமேதாநாம் ஆஹரேத் காங்கரோதஸி ।
ஆசரேத் கூபகோடீர் யோ நிர்ஜலே மருபூதலே ॥

3202 காலையில் ஸ்நானம், ஸந்தியாவந்தனம், ஸ்ரீ சக்ரபூஜை, ஸ்ரீவித்யாஜபம் இவைகளை முடித்துக்கொண்டு ஸஹஸ்ரநாம பாராயணம் செய்யலாம். கங்கை முதலிய நதிகளில் பல தடவை முறைப்படி நீராடுதல், காசியில் அவிமுக்த க்ஷேத்திரத்தில் கோடி லிங்கப் பிரதிஷ்டை, குருக்ஷேத்திரத்தில் கிரஹண காலத்தில்

11 दुर्भिक्षे यः प्रतिदिनं कोटिब्राह्मणभोजनम् ॥
श्रद्धया परया कुर्यात्सहस्रपरिवत्सरान् ॥

*துர்ப்பிக்ஷே ய: ப்ரதிதிநம் கோடிப்ராஹ்மணபோஜநம் ।*
*ச்ரத்தயா பரயா குர்யாத் ஸஹஸ்ரம் பரிவத்ஸராந் ॥*

12 तत्पुण्यं कोटिगुणितं लभेत्पुण्यमनुत्तमम् ।
रहस्यनामसाहस्रे नाम्नोऽप्येकस्य कीर्तनात् ॥

*தத்புண்யம் கோடிகுணிதம் லபேத் புண்யமநுத்தமம் ।*
*ரஹஸ்யநாம ஸாஹஸ்ரே நாம்நோப்யேகஸ்ய கீர்த்தநாத் ॥*

13 रहस्यनामसाहस्रे नामैकमपि यः पठेत् ।
तस्य पापानि नश्यन्ति महान्त्यपि न संशयः ॥

*ரஹஸ்யநாமஸாஹஸ்ரே நாமைகமபி ய: படேத் ।*
*தஸ்ய பாபாநி நச்யந்தி மஹாந்த்யபி ந ஸம்சய: ॥*

14 नित्यकर्माननुष्ठानात् निषिद्धकरणादपि ।
यत्पापं जायते पुंसां तत्सर्वं नश्यति ध्रुवम् ॥

*நித்யகர்மாநநுஷ்ட்டாநாத் நிஷித்த கரணாதபி ।*
*யத்பாபம் ஜாயதே பும்ஸாம் தத்ஸர்வம் நச்யதி த்ருவம் ॥*

15 बहुनात्र किमुक्तेन शृणु त्वं कुम्भसम्भव ।
अत्रैकनाम्नो या शक्तिः पातकानां निवर्तने ।
तन्निवर्त्यमघं कर्तुं नालं लोकाश्चतुर्दश ॥

*பஹுநாத்ர கிமுக்தேந ச்ருணு த்வம் கும்பஸம்பவ ।*
*அத்ரைகநாம்நோ யா சக்தி: பாதகாநாம் நிவர்த்தநே ।*
*தந்நிவர்த்யமகம் கர்த்தும் நாலம் லோகாச்சதுர்தச ॥*

16 यस्त्यक्त्वा नामसाहस्रं पापहानिमभीप्सति ।
स हि शीतनिवृत्त्यर्थं हिमशैलं निषेवते ॥

*யஸ் த்யக்த்வா நாமஸாஹஸ்ரம் பாபஹாநிமபீப்ஸதி ।*
*ஸ ஹி சீதநிவ்ருத்யர்த்தம் ஹிமசைலம் நிஷேவதே ॥*

தானம், தங்கதானம், கங்கைக் கரையில் அசுவமேதம் செய்தல், நீர்வசதியற்ற இடங்களில் கிணறுகள் வெட்டுதல், அன்னதானம் முதலியவைகளைவிடச் சிறந்த புண்ணியமளிக்கவல்லது. ஏதேனும்

17 भक्तो यः कीर्तयेन्नित्यमिदं नामसहस्रकम् ।
तस्मै श्रीललिता देवी प्रीताऽभीष्टं प्रयच्छति ॥

*பக்தோ ய: கீர்த்தயேந் நித்யம் இதம் நாமஸஹஸ்ரகம் 1*
*தஸ்மை ஸ்ரீலலிதா தேவீ ப்ரீதா(அ)பீஷ்டம் ப்ரயச்சதி 11*

18 अकीर्तयन्निदं स्तोत्रं कथं भक्तो भविष्यति ।

*அகீர்த்தயந்நிதம் ஸ்தோத்ரம் கதம் பக்தோ பவிஷ்யதி 1*

19 नित्यं सङ्कीर्तनाशक्तः कीर्तयेत्पुण्यवासरे ।
संक्रान्तौ विषुवे चैव स्वजन्मत्रितयेऽयने ॥

*நித்யம் ஸங்கீர்த்தநாசக்த: கீர்த்தயேத் புண்யவாஸரே 1*
*ஸங்க்ராந்தௌ விஷுவே சைவ ஸ்வஜந்மத்ரிதயே(அ)யநே 11*

20 नवम्यां वा चतुर्दश्यां सितायां शुक्रवासरे ।
कीर्तयेन्नामसाहस्रं पौर्णमास्यां विशेषतः ॥

*நவம்யாம் வா சதுர்தச்யாம் ஸிதாயாம் சுக்ரவாஸரே 1*
*கீர்த்தயேந் நாமஸாஹஸ்ரம் பௌர்ணமாஸ்யாம் விசேஷத: 11*

21 पौर्णमास्यां चन्द्रबिम्बे ध्यात्वा श्रीललिताम्बिकाम् ।
पञ्चोपचारैः सम्पूज्य पठेन्नामसहस्रकम् ॥

*பௌர்ணமாஸ்யாம் சந்த்ரபிம்பே த்யாத்வா ஸ்ரீலலிதாம்பிகாம் 1*
*பஞ்சோபசாரைஸ்ஸம்பூஜ்ய படேந் நாமஸஹஸ்ரகம் 11*

ஒரு நாமத்தை சிரத்தையுடன் சொல்வதால் பாபம் நீங்கும். பாபத்தை நீக்குவதில் நாமத்திற்குள்ள சக்தி இணையற்றது. பாபத்தை நீக்க இதனை விட்டு வேறு உபாயம் தேடுபவன் முட்டாள். இதனைப் பாராயணம் செய்பவனுக்குத் தேவி விரும்பியதை அளிப்பாள், இதனைப் பாராயணம் செய்யாதவன் தேவியிடம் எங்ஙனம் பக்தி வைப்பான்? (5-18).

3203 தினமும் பாராயணம் செய்யமுடியாவிடினும், புண்ய நாட்கள், மாதப்பிறப்பு, [1]ஜன்ம-அனுஜன்ம-த்ரிஜந்ம நக்ஷத்திரங்கள், அயனபுண்யகாலம், நவமீ, சதுர்தசி, பௌர்ணமி வெள்ளிக்கிழமை, இவைகளிலாவது பாராயணம் செய்யலாம். (19-20).

22 सर्वे रोगाः प्रणश्यन्ति दीर्घमायुश्च विन्दति ।
अयमायुष्करो नाम प्रयोगः कल्पनोदितः ॥

*ஸர்வே ரோகா: ப்ரணச்யந்தி தீர்க்கமாயுச்ச விந்ததி ।*
*அயமாயுஷ்கரோ நாம ப்ரயோக: கல்பநோதித: ॥*

23 ज्वरार्तं शिरसि स्पृष्ट्वा पठेन्नामसहस्रकम् ।
तत्क्षणात्प्रशमं याति शिरस्तोदो ज्वरोऽपि च ॥

*ஜ்வரார்த்தம் சிரஸி ஸ்ப்ருஷ்ட்வா படேந் நாமஸஹஸ்ரகம் ।*
*தத்க்ஷணாத் ப்ரசமம் யாதி சிரஸ்தோதோ ஜ்வரோபி ச ॥*

24 सर्वव्याधिनिवृत्त्यर्थं स्पृष्ट्वा भस्म जपेदिदम् ।
तद्भस्मधारणादेव नश्यन्ति व्याधयः क्षणात् ॥

*ஸர்வவ்யாதி நிவ்ருத்த்யர்த்தம் ஸ்ப்ருஷ்ட்வா பஸ்ம ஜபேதிதம் ।*
*தத்பஸ்மதாரணாதேவ நச்யந்தி வ்யாதய: க்ஷணாத் ॥*

25 जलं सम्मन्त्र्य कुम्भस्थं नामसाहस्रतो मुने ।
अभिषिञ्चेद्ग्रहग्रस्तान्ग्रहा नश्यन्ति तत्क्षणात् ॥

*ஜலம் ஸம்மந்த்ர்ய கும்பஸ்த்தம் நாமஸாஹஸ்ரதோ முநே ।*
*அபிஷிஞ்சேத் க்ரஹக்ரஸ்தாந் க்ரஹா நச்யந்தி தத்க்ஷணாத் ॥*

26 सुधासागरमध्यस्थां ध्यात्वा श्रीललिताम्बिकाम् ।
यः पठेन्नामसाहस्रं विषं तस्य विनश्यति ॥

*ஸுதாஸாகரமத்யஸ்த்தாம் த்த்யாத்வா ஸ்ரீலலிதாம்பிகாம் ।*
*ய: படேந் நாமஸாஹஸ்ரம் விஷம் தஸ்ய விநச்யதி ॥*

3204 பௌர்ணமியன்று சந்திரபிம்பத்தில் தேவியைத் தியானம் செய்து வழிபட்டு இதனைப் படிக்க நோய்கள் நீங்கும். நீண்ட ஆயுள் பெறலாம். இதனை ஆயுஷ்கரப்பிரயோகம் என்பர். ஜ்வரநோயுள்ளவனின் தலையைத் தொட்டுக் கொண்டு இதனைப் படிக்க ஜ்வரம் நீங்கும். திருநீற்றைத் தொட்டுக்கொண்டு இதனைப் பாராயணம் செய்த பின் அந்தத் திருநீற்றை இட்டுக்கொள்ள எல்லா நோய்களும் நீங்கும். குடத்தில் ஜலம் நிரப்பி அதனைத் தொட்டுக்கொண்டு இதனைப் பாராயணம் செய்து அந்த நீரால் ஸ்நானம் செய்துவைக்க பூத-பிரேத-பிசாச உபாதைகள் விலகும்,

27 वन्ध्यानां पुत्रलाभाय नामसाहस्रमन्त्रितम् ।
नवनीतं प्रदद्यात्तु पुत्रलाभो भवेद्ध्रुवम् ॥

*வந்த்யாநாம் புத்ரலாபாய நாமஸாஹஸ்ரமந்த்ரிதம் ।*
*நவநீதம் ப்ரதத்யாத்து புத்ரலாபோ பவேத் த்ருவம் ॥*

28 देव्याः पाशेन सम्बद्धामाकृष्टामङ्कुशेन च ।
ध्यात्वाभीष्टां स्त्रियं रात्रौ जपेन्नामसहस्रकम् ॥

*தேவ்யா: பாசேந ஸம்பத்தாமாக்ருஷ்டாமங்குசேந ச ।*
*த்யாத்வாபீஷ்டாம் ஸ்த்ரியம் ராத்ரௌ ஜபேந் நாமஸஹஸ்ரகம் ॥*

29 आयाति स्वसमीपं सा यद्यप्यन्तःपुरं गता ।
राजाकर्षणकामश्चेद्राजावसथदिङ्मुखः ॥

*ஆயாதி ஸ்வஸமீபம் ஸா யத்யப்யந்த:புரம் கதா ।*
*ராஜாகர்ஷணகாமச்சேத் ராஜாவஸத திங்முக: ॥*

30 त्रिरात्रं यः पठेदेतच्छ्रीदेवीध्यानतत्परः ।
स राजा पारवश्येन तुरङ्गं वा मतङ्गजम् ॥

*த்ரிராத்ரம் ய: படேதேதத் ஸ்ரீதேவீத்யாநதத்பர: ।*
*ஸ ராஜா பாரவச்யேந துரங்கம் வா மதங்கஜம் ॥*

31 आरुह्यायाति निकटं दासवत्प्रणिपत्य च ।
तस्मै राज्यं च कोशं च ददात्येव वशं गतः ॥

*ஆருஹ்யாயாதி நிகடம் தாஸவத் ப்ரணிபத்ய ச ।*
*தஸ்மை ராஜ்யம் ச கோசம் ச ததாத்யேவ வசம் கத: ॥*

32 रहस्यनामसाहस्रं यः कीर्तयति नित्यशः ।
तन्मुखालोकमात्रेण मुह्येल्लोकत्रयं मुने ॥

*ரஹஸ்யநாமஸாஹஸ்ரம் ய: கீர்த்தயதி நித்யச: ।*
*தந்முகாலோகமாத்ரேண முஹ்யேல் லோகத்ரயம் முநே ॥*

அமுதக் கடலின் நடுவில் உள்ளவளாகத் (நா. 61) தேவியைத் தியானம் செய்து இதனைப் படிக்க விஷம் நீங்கும். வெண்ணெய்யை இதனால் மந்திரித்துக் கொடுக்கப் பிள்ளைப் பேறு கிட்டும். (21–26)

33 यस्त्विदं नामसाहस्रं सकृत्पठति भक्तिमान्।
तस्य ये शत्रवस्तेषां निहन्ता शरभेश्वरः॥

*யஸ்த்விதம் நாமஸாஹஸ்ரம் ஸக்ருத் படதி பக்திமாந் I*
*தஸ்ய யே சத்ரவஸ்தேஷாம் நிஹந்தா சரபேச்வர: II*

34 यो वाभिचारं कुरुते नामसाहस्रपाठके।
निवर्त्य तत्क्रियां हन्यात्तं वै प्रत्यङ्गिरा स्वयम्॥

*யோ வாபிசாரம் குருதே நாம ஸாஹஸ்ரபாடகே I*
*நிவர்த்ய தத்க்ரியாம் ஹந்யாத் தம் வை ப்ரத்யங்கிரா: ஸ்வயம் II*

35 ये क्रूरदृष्ट्या वीक्षन्ते नामसाहस्रपाठकम्।
तानन्धान्कुरुते क्षिप्रं स्वयं मार्तण्डभैरवः॥

*யே க்ரூரத்ருஷ்ட்யா வீக்ஷந்தே நாமஸாஹஸ்ர பாடகம் I*
*தாநந்தாந் குருதே க்ஷிப்ரம் ஸ்வயம் மார்த்தண்ட பைரவ: II*

36 धनं यो हरते चोरैर्नामसाहस्रजापिनः।
यत्र कुत्र स्थितं वापि क्षेत्रपालो निहन्ति तम्॥

*தநம் யோ ஹரதே சோரை: நாமஸாஹஸ்ரஜாபிந: I*
*யத்ர குத்ர ஸ்திதம் வாபி க்ஷேத்ரபாலோ நிஹந்தி தம் II*

37 विद्यासु कुरुते वादं यो विद्वान्नामजापिनः।
तस्य वाक्स्तम्भनं सद्यः करोति नकुलेश्वरी॥

*வித்யாஸு குருதே வாதம் யோ வித்வாந் நாமஜாபிந: I*
*தஸ்ய வாக்ஸ்தம்பநம் ஸத்ய: கரோதி நகுலேச்வரீ II*

38 यो राजा कुरुते वैरं नामसाहस्रजापिनः।
चतुरङ्गबलं तस्य दण्डिनी संहरेत्स्वयम्॥

*யோ ராஜா குருதே வைரம் நாமஸாஹஸ்ரஜாபிந: I*
*சதுரங்கபலம் தஸ்ய தண்டிநீ ஸம்ஹரேத் ஸ்வயம் II*

3205 ஸ்திரீவசியம், ராஜவசியம், லோகவசியம், சத்ருவசியம் செய்யவும், ஆபிசாரம், பார்வை தோஷம், திருட்டால் பொருள் நாசம் முதலியவைகளுக்குப் பரிஹாரமாகவும் இதனைப் பாராயணம் செய்யலாம். தேவிபக்தனிடம் வாதிடுபவரை நாகுலீ வாக்ஸ்தம்பம் (பேசமுடியாமல்) செய்து அடக்கிவிடுவாள். அரசனே ஸேனைகளுடன் எதிர்த்தாலும் தோல்வியுறுவான். ஸஹஸ்ரநாமத்தின் சக்தி அத்தகையது. (27-38)

39 यः पठेन्नामसाहस्रं षण्मासं भक्तिसंयुतः ।
लक्ष्मीश्चाञ्चल्यरहिता सदा तिष्ठति तद्गृहे ॥

ய: படேந் நாமஸாஹஸ்ரம் ஷண்மாஸம் பக்திஸம்யுத: I
லக்ஷ்மீச் சாஞ்சல்யரஹிதா ஸதா திஷ்டதி தத்க்ருஹே II

40 मासमेकं प्रतिदिनं त्रिवारं यः पठेन्नरः ।
भारती तस्य जिह्वाग्रे रङ्गे नृत्यति नित्यशः ॥

மாஸமேகம் ப்ரதிதிநம் த்ரிவாரம் ய: படேந் நர: I
பாரதீ தஸ்ய ஜிஹ்வாக்ரே ரங்கே ந்ருத்யதி நித்யச: II

41 यस्त्वेकवारं पठति पक्षमेकमतन्द्रितः ।
मुह्यन्ति कामवशगा मृगाक्ष्यस्तस्य वीक्षणात् ॥

யஸ் த்வேகவாரம் படதி பக்ஷமேகமதந்த்ரித: I
முஹ்யந்தி காமவசகா ம்ருகாக்ஷ்யஸ் தஸ்ய வீக்ஷணாத் II

42 यः पठेन्नामसाहस्रं जन्ममध्ये सकृन्नरः ।
तद्दृष्टिगोचराः सर्वे मुच्यन्ते सर्वकिल्बिषैः ॥

ய: படேந்நாமஸாஹஸ்ரம் ஜந்ம மத்யே ஸக்ருந்நர: I
தத் த்ருஷ்டிகோசரா: ஸர்வே முச்யந்தே ஸர்வகில்பிஷை: II

43 यो वेत्ति नामसाहस्रं तस्मै देयं द्विजन्मने ।
अन्नं वस्त्रं धनं धान्यं नान्येभ्यस्तु कदाचन ॥

யோ வேத்தி நாமஸாஹஸ்ரம் தஸ்மை தேயம் த்விஜந்மநே I
அந்நம் வஸ்த்ரம் தநம் தாந்யம் நாந்யேப்ப்யஸ்து கதாசந II

44 श्रीमन्त्रराजं यो वेत्ति श्रीचक्रं यः समर्चति ।
यः कीर्तयति नामानि तं सत्पात्रं विदुर्बुधाः ॥

ஸ்ரீமந்த்ரராஜம் யோ வேத்தி ஸ்ரீசக்ரம் ய: ஸமர்ச்சதி I
ய: கீர்த்தயதி நாமாநி தம் ஸத்பாத்ரம் விதுர்புதா: II

3206 ஆறுமாதங்கள் தொடர்ந்து படிக்க லக்ஷ்மீ அவன் வீட்டில் நிலைத்துத் தங்குவாள். ஒரு மாதம் தினம் 3 தட்வை படிக்க வாக்தேவி அவன் நாக்கின் நுனியில் தாண்டவமாடுவாள். பாராயணம் செய்பவன் திருஷ்டிபட்டால் பாபம் நீங்கும். (39-42)

45 तस्मै देयं प्रयत्नेन श्रीदेवीप्रीतिमिच्छता ।

தஸ்மை தேயம் ப்ரயத்நேந ஸ்ரீதேவீப்ரீதிமிச்சதா ।

46 न कीर्तयति नामानि मन्त्रराजं न वेत्ति यः ।
पशुतुल्यः स विज्ञेयस्तस्मै दत्तं निरर्थकम् ।
परीक्ष्य विद्याविदुषस्तेभ्यो दद्याद्विचक्षणः ॥

ந கீர்தயதி நாமாநி மந்த்ரராஜம் ந வேத்தி ய: ।
பசுதுல்ய: ஸ விஜ்ஞேய: தஸ்மை தத்தம் நிரர்த்தகம் ।
பரீக்ஷ்ய வித்யாவிதுஷ: தேப்யோ தத்யாத் விசக்ஷண: ॥

47 श्रीमन्त्रराजसदृशो यथा मन्त्रो न विद्यते ।
देवता ललितातुल्या यथा नास्ति घटोद्भव ॥

ஸ்ரீமந்த்ரராஜ ஸத்ருசோ யதா மந்த்ரோ ந வித்யதே ।
தேவதா லலிதாதுல்யா யதா நாஸ்தி கடோத்பவ ॥

48 रहस्यनामसाहस्रतुल्या नास्ति तथा स्तुतिः ।
लिखित्वा पुस्तके यस्तु नामसाहस्रमुत्तमम् ॥

ரஹஸ்யநாமஸாஹஸ்ரதுல்யா நாஸ்தி ததா ஸ்துதி: ।
லிகித்வா புஸ்தகே யஸ்து நாமஸாஹஸ்ர முத்தமம் ॥

49 समर्चयेत्सदा भक्त्या तस्य तुष्यति सुन्दरी ।
बहुनात्र किमुक्तेन शृणु त्वं कुम्भसम्भव ॥

ஸமர்ச்சயேத் ஸதா பக்த்யா தஸ்ய துஷ்யதி ஸுந்தரீ ।
பஹுநாத்ர கிமுக்தேந ச்ருணு த்வம் கும்பஸம்பவ ॥

50 नानेन सदृशं स्तोत्रं सर्वतन्त्रेषु विद्यते ।
तस्मादुपासको नित्यं कीर्तयेदिदमादरात् ॥

நாநேந ஸத்ருசம் ஸ்தோத்ரம் ஸர்வதந்த்ரேஷு வித்யதே ।
தஸ்மாதுபாஸகோ நித்யம் கீர்த்தயேதித மாதராத் ॥

3207 பாராயணம் செய்பவனுக்கு அன்னம் வஸ்திரம் முதலிய வைகளைக் கொடுத்தால் தேவி திருப்தியடைவாள். ஸ்ரீவித்யையைப் போல் மந்திரமோ, ஸ்ரீலலிதாதேவியைப் போல் தேவதையோ,

51 एभिर्नामसहस्रैस्तु श्रीचक्रं योऽर्चयेत्सकृत् ।
पद्मैर्वा तुलसीपुष्पैः कल्हारैर्वा कदम्बकैः ॥

ஏபிர் நாமஸஹஸ்ரைஸ்து ஸ்ரீசக்ரம் யோ(அ)ர்ச்சயேத் ஸக்ருத் 1
பத்மைர்வா துளஸீ புஷ்பை: கல்ஹாரைர் வா கதம்பகை: 11

52 चम्पकैर्जातिकुसुमैः मल्लिकाकरवीरकैः ।
उत्पलैर्बिल्वपत्रैर्वा कुन्दकेसरपाटलैः ॥

சம்பகைர் ஜாதிகுஸுமை: மல்லிகாகரவீரகை: 1
உத்பலைர் பில்வபத்ரைர்வா குந்தகேஸரபாடலை: 11

53 अन्यैः सुगन्धिकुसुमैः केतकीमाधवीमुखैः ।
तस्य पुण्यफलं वक्तुं न शक्नोति महेश्वरः ॥

அந்யை: ஸுகந்திகுஸுமை: கேதகீமாதவீமுகை: 1
தஸ்ய புண்யபலம் வக்தும் ந சக்நோதி மஹேச்வர: 11

54 सा वेत्ति ललितादेवी स्वचक्रार्चनजं फलम् ।
अन्ये कथं विजानीयुर्ब्रह्माद्याः स्वल्पमेधसः ॥

ஸா வேத்தி லலிதாதேவீ ஸ்வசக்ரார்ச்சநஜம் பலம் 1
அந்யே கதம் விஜாநீயு: ப்ரஹ்மாத்யா: ஸ்வல்பமேதஸ: 11

55 प्रतिमासं पौर्णमास्यामेभिर्नामसहस्रकैः ।
रात्रौ यश्चक्रराजस्थामर्चयेत्परदेवताम् ॥

ப்ரதிமாஸம் பௌர்ணமாஸ்யாம் ஏபிர் நாம ஸஹஸ்ரகை: 1
ராத்ரௌ யச் சக்ரராஜஸ்தாமர்சயேத் பரதேவதாம் 11

56 स एव ललितारूपस्तद्रूपा ललिता स्वयम् ।
न तयोर्विद्यते भेदो भेदकृत्पापकृद्भवेत् ॥

ஸ ஏவ லலிதாருபஸ் தத்ருபா லலிதா ஸ்வயம் 1
ந தயோர் வித்யதே பேதோ பேதக்ருத் பாபக்ருத்பவேத் 11

இதனைப்போல் ஸ்துதியோ உலகில் இல்லை. இந்த நாமங்களால் ஸ்ரீ சக்கிரத்தில் தாமரை, துளசி, கழுநீர்ப்பூ, கடம்பம்பூ, சம்பகப்பூ, ஜாதிப்பூ, மல்லிகைப்பூ, அரளிப்பூ, அல்லிப்பூ, பில்வதளம்,

57 महानवम्यां यो भक्तः श्रीदेवीं चक्रमध्यगाम् ।
अर्चयेन्नामसाहस्रैस्तस्य मुक्तिः करे स्थिता ॥

மஹாநவம்யாம் யோ பக்தः ஶ்ரீதேவீம் சக்ரமத்யகாம் 1
அர்ச்சயேந் நாமஸாஹஸ்ரைः தஸ்ய முக்திः கரே ஸ்திதா 11

58 यस्तु नामसहस्रेण शुक्रवारे समर्चयेत् ।
चक्रराजे महादेवीं तस्य पुण्यफलं शृणु ॥

யஸ்து நாமஸஹஸ்ரேண சுக்ரவாரே ஸமர்ச்சயேத் 1
சக்ரராஜே மஹாதேவீம் தஸ்ய புண்யபலம் ச்ருணு 11

59 सर्वान्कामानवाप्येह सर्वसौभाग्यसंयुतः ।
पुत्रपौत्रादिसंयुक्तो भुक्त्वा भोगान्यथेप्सितान् ॥

ஸர்வாந் காமாநவாப்யேஹ ஸர்வ ஸௌபாக்ய ஸம்யுதः 1
புத்ர பௌத்ராதி ஸம்யுக்தோ புக்த்வா போகாந் யதேப்ஸிதாந் 11

60 अन्ते श्रीललितादेव्याः सायुज्यमतिदुर्लभम् ।
प्रार्थनीयं शिवाद्यैश्च प्राप्नोत्येव न संशयः ॥

அந்தே ஶ்ரீலலிதாதேவ்யாः ஸாயுஜ்ய மதிதுர்லபம் 1
ப்ரார்த்தநீயம் சிவாத்யைச்ச ப்ராப்நோத்யேவ ந ஸம்சயः 11

61 यः सहस्रं ब्राह्मणानामेभिर्नामसहस्रकैः ।
समर्च्य भोजयेद्भक्त्या पायसाऽऽपूपषड्रसैः ॥

யः ஸஹஸ்ரம் ப்ராஹ்மணாநாம் ஏபிர் நாம ஸஹஸ்ரகைः 1
ஸமர்ச்ய போஜயேத் பக்த்யா பாயஸாபூப ஷட்ரஸைः 11

முல்லைப்பூ, பாதிரிப்பூ, தாழம்பூ, மல்லிகை முதலிய மணமுள்ள பூக்களால் அர்ச்சனை செய்ய தேவியின் அருள் எளிதில் கிட்டும். பௌர்ணமி இரவு, மஹாநவமி (ஸரஸ்வதி பூஜை நாள்), வெள்ளிக் கிழமை இந்நாட்களில் ஶ்ரீசக்கிரத்தில் தேவியை இந்த நாமங்களால் அர்ச்சனை செய்ய தேவி அவனுக்கு எல்லா விருப்பங்களையும் நிறைவேற்றுவாள். (43-62)

62 तस्मै प्रीणाति ललिता स्वसाम्राज्यं प्रयच्छति ।
न तस्य दुर्लभं वस्तु त्रिषु लोकेषु विद्यते ॥

*தஸ்மை ப்ரீணுதி லலிதா ஸ்வஸாம்ராஜ்யம் ப்ரயச்சதி ।*
*ந தஸ்ய துர்லபம் வஸ்து த்ரிஷு லோகேஷு வித்யதே ॥*

63 निष्कामः कीर्तयेद्यस्तु नामसाहस्रमुत्तमम् ।
ब्रह्मज्ञानमवाप्नोति येन मुच्येत बन्धनात् ॥

*நிஷ்காம: கீர்தயேத் யஸ்து நாம ஸாஹஸ்ர முத்தமம் ।*
*ப்ரஹ்மஜ்ஞாந மவாப்நோதி யேந முச்யேத பந்தநாத் ॥*

64 धनार्थी धनमाप्नोति यशोऽर्थी प्राप्नुयाद्यशः ।
विद्यार्थी चाप्नुयाद्विद्यां नामसाहस्रकीर्तनात् ॥

*தநார்த்தீ தநமாப்நோதி யசோர்த்தீ ப்ராப்நுயாத் யச: ।*
*வித்யார்த்தீ சாப்நுயாத் வித்யாம் நாமஸாஹஸ்ர கீர்த்தநாத் ॥*

65 नानेन सदृशं स्तोत्रं भोगमोक्षप्रदं मुने ।
कीर्तनीयमिदं तस्माद्भोगमोक्षार्थिभिर्नरैः ॥

*நாநேந ஸத்ருசம் ஸ்தோத்ரம் போகமோக்ஷ ப்ரதம் முநே ।*
*கீர்த்தநீயமிதம் தஸ்மாத் போகமோக்ஷார்த்திபிர் நரை: ॥*

66 चतुराश्रमनिष्ठैश्च कीर्तनीयमिदं सदा ।
स्वधर्मसमनुष्ठानवैकल्यपरिपूर्तये ॥

*சதுராச்ரம நிஷ்டைச்ச கீர்த்தநீயமிதம் ஸதா ।*
*ஸ்வதர்ம ஸமநுஷ்டான வைகல்ய பரிபூர்த்தயே ॥*

3208 யாதொரு விருப்பமின்றி தேவிப்பிரீதிக்கெனவே பாராயணம் செய்ய பிரும்ம ஜ்ஞானத்தை அருளிப் பந்தத்திலிருந்தும் விடுவிப்பாள். செல்வத்தை விரும்புபவன் செல்வத்தையும், புகழை விரும்புபவன் புகழையும், கல்வியை நாடுபவன் கல்வியையும் பெறுவான். இம்மையில் சுகத்தையும் மோக்ஷத்தையும் ஒருங்கே அளிக்க வல்ல சிறந்த ஸாதனம் இது. தத்தம் தருமங்களை ஒழுங்காகக் கடைபிடிக்க இயலாதவர், தர்மத்திலிருந்து வழுவியதால் ஏற்படும் பாபம் நீங்கி தர்மானுஷ்டானம் நிறைவுற இதனைப் பாராயணம் செய்வது நல்லது. கலியில் இதனை விடச் சிறந்த பற்றுக்கோல் வேறில்லை. (63-67)

67 कलौ पापैकबहुले धर्मानुष्ठानवर्जिते ।
नामानुकीर्तनं मुक्त्वा नृणां नान्यत्परायणम् ॥

கலௌ பாபைக பஹுளே தர்மாநுஷ்டாந வர்ஜிதே ।
நாமாநுகீர்த்தநம் முக்த்வா ந்ருணும் நாந்யத் பராயணம் ॥

68 लौकिकाद्वचनान्मुख्यं विष्णुनामानुकीर्तनम् ।
विष्णुनामसहस्राच्च देव्या नामैकमुत्तमम् ॥

லௌகிகாத் வசநாந் முக்யம் விஷ்ணுநாமாநுகீர்த்தநம் ।
விஷ்ணுநாம ஸஹஸ்ராச்ச தேவ்யா நாமைக முத்தமம் ॥

69 शिवनामसहस्राच्च देव्या नामैकमुत्तमम् ।
देवीनामसहस्राणि कोटिशः सन्ति कुम्भज ।

சிவநாமஸஹஸ்ராச்ச தேவ்யா நாமைகமுத்தமம் ।
தேவீநாம ஸஹஸ்ராணி கோடிச: ஸந்தி கும்பஜ ॥

70 तेषु मुख्यं दशविधं नामसाहस्रमुच्यते ।
रहस्यनामसाहस्रमिदं शस्तं दशस्वपि ॥

தேஷு முக்க்யம் தசவிதம் நாமஸாஹஸ்ர முச்ச்யதே ।
ரஹஸ்யநாமஸாஹஸ்ரம் இதம் சஸ்தம் தசஸ்வபி ॥

71 तस्मात्सङ्कीर्तयेन्नित्यं कलिदोषनिवृत्तये ।
मुख्यं श्रीमातृनामेति न जानन्ति विमोहिताः ॥

தஸ்மாத் ஸங்கீர்தயேந் நித்யம் கலிதோஷ நிவ்ருத்தயே ॥
முக்யம் ஸ்ரீமாத்ருநாமேதி ந ஜாநந்தி விமோஹிதா: ।

72 विष्णुनामपराः केचिच्छिवनामपराः परे ।
न कश्चिदपि लोकेषु ललितानामतत्परः ॥

விஷ்ணுநாமபரா: கேசித் சிவநாமபரா: பரே ।
ந கச்சிதபி லோகேஷு லலிதாநாம தத்பர: ॥

3209 மற்ற தேவதைகளின் ஸஹஸ்ரநாமங்களைக் காட்டிலும் தேவியின் மற்ற ஸஹஸ்ரநாமங்களைக் காட்டிலும்[2] இது சிறந்தது. ஆயிரம் நாமங்களிலும் ஸ்ரீமாதா என்ற நாமம் மிகச் சிறந்தது. புண்ய பலத்தால்தான் இதனைப் பாராயணம் செய்யும் வாய்ப்பு கிட்டும். கடைசிப் பிறவியாக இருந்தால் மட்டுமே ஸ்ரீவித்யா ஜபமும்

73 येनान्यदेवतानाम कीर्तितं जन्मकोटिषु ।
तस्यैव भवति श्रद्धा श्रीदेवीनामकीर्तने ॥

*யேநாந்யதேவதாநாம கீர்த்திதம் ஜந்மகோடிஷு 1*
*தஸ்யைவ பவதி ச்ரத்தா ஸ்ரீதேவீநாமகீர்த்தநே 11*

74 चरमे जन्मनि यथा श्रीविद्योपासको भवेत् ।
नामसाहस्रपाठश्च तथा चरमजन्मनि ॥

*சரமே ஜந்மநி யதா ஸ்ரீவித்யோபாஸகோ பவேத் 1*
*நாமஸாஹஸ்ரபாடச்ச ததா சரமஜந்மநி 11*

75 यथैव विरला लोके श्रीविद्याचारवेदिनः ।
तथैव विरलो गुह्यनामसाहस्रपाठकः ॥

*யதைவ விரளா லோகே ஸ்ரீவித்யாசாரவேதிந: 1*
*ததைவ விரளோ குஹ்யநாமஸாஹஸ்ரபாடக: 11*

76 मन्त्रराजजपश्चैव चक्रराजार्चनं तथा ।
रहस्यनामपाठश्च नाल्पस्य तपसः फलम् ॥

*மந்த்ரராஜ ஜபஸ்சைவ சக்ரராஜார்ச்சநம் ததா 1*
*ரஹஸ்யநாமபாடஸ்ச நால்பஸ்ய தபஸ: பலம் 11*

77 अपठन्नामसाहस्रं प्रीणयेद्यो महेश्वरीम् ।
स चक्षुषा विना रूपं पश्येदेव विमूढधीः ॥

*அபடந் நாமஸாஹஸ்ரம் ப்ரீணயேத் யோ மஹேச்வரீம் 1*
*ஸ சக்ஷுஷா விநா ரூபம் பச்யேதேவ விமூடதீ: 11*

78 रहस्यनामसाहस्रं त्यक्त्वा यः सिद्धिकामुकः ।
स भोजनं विना नूनं क्षुन्निवृत्तिमभीप्सति ॥

*ரஹஸ்யநாம ஸாஹஸ்ரம் த்யக்த்வா ய: ஸித்திகாமுக: 1*
*ஸ போஜநம் விநா நூநம் க்ஷுந்நிவ்ருத்திமபீப்ஸதி 11*

ஸஹஸ்ரநாம பாராயணம் செய்யவும் வாய்ப்பு கிட்டும். பெருந் தவத்தின் விளைவாக அந்தக் கடைசிப் பிறவி கிட்டியிருக்கும். வேறு வழிபாட்டு முறைகளால் தேவியைத் திருப்திப்படுத்த முடியாது. அதனால் இதனைத் தினமும் பக்தியுடனும் சிரத்தையுடனும் பாராயணம் செய்ய வேண்டும். (68-80)

79 यो भक्तो ललितादेव्याः स नित्यं कीर्तयेदिदम् ।
नान्यथा प्रीयते देवी कल्पकोटिशतैरपि ॥

யோ பக்தோ லலிதாதேவ்யா: ஸ நித்யம் கீர்த்தயேதிதம் ।
நாந்யதா ப்ரீயதே தேவீ கல்பகோடிசதைரபி ॥

80 तस्माद्रहस्यनामानि श्रीमातुः प्रयतः पठेत् ।
इति ते कथितं स्तोत्रं रहस्यं कुम्भसम्भव ॥

தஸ்மாத் ரஹஸ்யநாமாநி ஸ்ரீமாது: ப்ரயத: படேத் ।
இதி தே கதிதம் ஸ்தோத்ரம் ரஹஸ்யம் கும்பஸம்பவ ॥

81 नाविद्यावेदिने ब्रूयान्नाभक्ताय कदाचन ।
यथैव गोप्या श्रीविद्या तथा गोप्यमिदं मुने ॥

நாவித்யாவேதிநே ப்ரூயாந் நாபக்தாய கதாசந ।
யதைவ கோப்யா ஸ்ரீவித்யா ததா கோப்யமிதம் முநே ॥

82 पशुतुल्येषु न ब्रूयाज्जनेषु स्तोत्रमुत्तमम् ।
यो ददाति विमूढात्मा श्रीविद्यारहिताय तु ॥

பசுதுல்யேஷு ந ப்ரூயாத் ஜநேஷு ஸ்தோத்ரமுத்தமம் ।
யோ ததாதி விமூடாத்மா ஸ்ரீவித்யாரஹிதாய து ॥

83 तस्मै कुप्यन्ति योगिन्यः सोऽनर्थः सुमहान्स्मृतः ।
रहस्यनामसाहस्रं तस्मात्सङ्गोपयेदिदम् ॥

தஸ்மை குப்யந்தி யோகிந்ய: ஸோ(அ)நர்த்த: ஸுமஹாந்
ஸ்ம்ருத: ।
ரஹஸ்யநாமஸாஹஸ்ரம் தஸ்மாத் ஸங்கோபயேதிதம் ॥

84 स्वतन्त्रेण मया नोक्तं तवापि कलशोद्भव ।
ललिताप्रेरणेनैव मयोक्तं स्तोत्रमुत्तमम् ॥

ஸ்வதந்த்ரேண மயா நோக்தம் தவாபி கலசோத்பவ ।
லலிதாப்ரேரணேநைவ மயோக்தம் ஸ்தோத்ரமுத்தமம் ॥

3210 ஸ்ரீ தேவியிடம் பக்தியற்றவன், ஸ்ரீ வித்யை அறியாதவன், மிருகத் தன்மை கொண்டவன், இவர்களுக்கு இதனை உபதேசிக்கக் கூடாது. இதனை ரகசியமாகக் காப்பாற்ற வேண்டும். (81-83)

85 कीर्तनीयमिदं भक्त्या कुम्भयोने निरन्तरम् ।
तेन तुष्टा महादेवी तवाभीष्टं प्रदास्यति ॥

*கீர்த்தநீயமிதம் பக்த்யா கும்பயோநே நிரந்தரம் 1*
*தேந துஷ்டா மஹாதேவீ தவாபீஷ்டம் ப்ரதாஸ்யதி 11*

श्रीसूत उवाच—

86 इत्युक्त्वा श्रीहयग्रीवो ध्यात्वा श्रीललिताम्बिकाम् ।
आनन्दमग्नहृदयः सद्यः पुलकितोऽभवत् ॥

*ஸ்ரீஸூத உவாச—*

*இத்யுக்த்வா ஸ்ரீஹயக்ரீவோ த்த்யாத்த்வா ஸ்ரீலலிதாம்பிகாம் 1*
*ஆநந்தமக்நஹ்ருதய: ஸத்ய: புலகிதோ(அ)பவத் 11*

**इति श्रीब्रह्माण्डपुराणे ललितोपाख्याने श्रीहयग्रीवागस्त्यसंवादे श्रीललितारहस्यनामस्तोत्रं संपूर्णम् ।**

3211 தேவியின் அருளின்றி இதனைப் பெற முடியாது, நான் எனது சுய விருப்பத்தால் இதனை உமக்கு உபதேசித்தவனல்ல. தேவியின் ஆணை கிட்டியதாலேயே உபதேசித்தேன். இதனைப் பக்தியுடன் இடைவிடாமல் பாடி வாரும். தேவி மகிழ்ந்து நீர் கோரியதனைத்தையும் அருள்வாள். (84-85)

3212 ஸ்ரீ ஸூதர் கூறினார்: இவ்வாறு கூறி வந்த ஹயக்கிரீவர் தேவியை உள்ளத்தில் கண்டவராக ஆனந்தப் பெருக்கில் அமிழ்ந்த உள்ளத்தினராக உடல் முழுவதும் மயிர் கூச்செரிந்தவராக ஆனார். (86)

**பிரும்மாண்ட புராணத்தில் லலிதோபாக்கியானத்தில் ஹயக்கிரீவர்-அகஸ்தியர் ஸம்வாதமாக அமைந்ததில் ஸ்ரீ லலிதாரஹஸ்ய ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம் முற்றிற்று.**

---

1. அசுவினி ஜன்ம நக்ஷத்திரமானால் அதிலிருந்து 10-வது நக்ஷத்திரமான மகமும் 19-வது நக்ஷத்திரமான மூலமும் முறையே அனுஜன்ம த்ரிஜன்ம நக்ஷத்திரங்கள். அப்படியே மற்ற நக்ஷத்திரங்களுக்கும் அனுஜன்ம திரிஜன்ம நக்ஷத்திரங்களைக் கணக்கிடலாம்.

2. கங்கா, காயத்ரீ, சியாமளா, லக்ஷ்மீ, காளீ, பாலா, லலிதா, ராஜராஜேசுவரி, ஸரஸ்வதி, பவானீ என்ற 10 அவை. இங்குள்ள லலிதாஸஹஸ்ரநாமம் வேறு, வசினீமுதலிய வாக்தேவிகள் கூறிய இந்த ஸஹஸ்ரநாமம் ஸ்ரீ லலிதா ரஹஸ்யஸஹஸ்ர நாமம் என்ற சிறப்புப் பெயர் பெற்றது.

# அதிகாரம் 33

## இணைப்பு 1

# श्रीसहस्राक्षरविद्यास्तोत्रम्

# ஸ்ரீ ஸஹஸ்ராக்ஷர வித்யா ஸ்தோத்திரம்

3301 முகவுரை: ஸ்ரீ சக்ரராஜத்தில் அமர்ந்துள்ள ஸ்ரீ லலிதாம்பிகையை ஆவரண தேவதைகளுடன் சேர்த்து ஐக்கிய பாவனையுடன் துதிக்க இது ஏற்ற ஸ்தோத்திரமாகும். இதனைத் தேவீ கட்கமாலா எனச் சிலர் கூறுவர். தேவீகட்கமாலாவானது, லலிதா பரிசிஷ்டம், வாமகேசுவரம் முதலிய தந்திரங்களில் உள்ளது. ஸஹஸ்ராக்ஷரவித்யையைப் போல் அதுவும் சற்றேறக்குறைய ஆயிரம் அக்ஷரங்கள் (1031 அக்ஷரங்கள்) கொண்டதே. ஸௌபாக்ய ஹ்ருதயம், சுத்த மாலா, சுத்த சக்தி ஸம்புத்த்யந்த மாலா என்று வேறு பெயர்களும் அதற்கு உண்டு. பெரும்பாலும் அமைப்பில் ஒற்றுமை காணப்பட்டாலும் சில அக்ஷரங்களில் மாறுபாட்டைக் கொண்டே இரண்டும் வேறுபட்டதென அறிந்தவர் கூறுவர்.[1] விரிந்த பிரயோக முறைகள் கொண்ட அது தந்திர வழிபாட்டிற்கு மிகவும் ஏற்றது. இங்கு கொடுக்கப்படும் ஸஹஸ்ராக்ஷர வித்யா ஸ்தோத்திரம் லலிதா ஸஹஸ்ரநாமத்தை வெளியிட்ட பிரும் மாண்ட புராணத்தின் லலிதோபாக்கியானத்தில் உள்ளது. ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமத்தின் பூர்வபாகத்தில் குறிப்பிட்டபடி (பா. 0203) புரச்சரணப் பகுதியில் சிஷ்யனுக்குத் தீக்ஷை செய்து மந்திரத்தை உபதேசிக்குமுன் தேவியை ஷோடச உபசாரங்களால்[2] வழிபட்டுப் பின் பிரார்த்தனையுடன் அவளது அருள் கோரிப் புஷ்பாஞ்சலி செய்யப் பயன்படுத்தும்படி இதனை அகத்தியருக்கு உபதேசிக்கிறார் ஹயக்கிரீவர். "அத புஷ்பாஞ்சலிம் தத்யாத் ஸஹஸ்ராக்ஷர வித்யயா". ஸ்ரீ வித்யாஜபம், ஸ்ரீ சக்கிரத்தில் நவா வரண பூஜை முதலியவை முடிந்ததும் பிரார்த்தனா-புஷ்பாஞ்சலிக் காக இதனைக் கூறுவது வழக்கம்.

3302 ஸ்ரீ சக்கிரத்தில் அல்லது மேருவில் ஒன்பது ஆவரணங் களிலுமுள்ள சக்திகளுடன் தேவியை வழிபடுவது நவாவரண பூஜை

---

1. தேவிகட்கமாலையின் முழுவிளக்கத்தை ஸ்ரீ வித்யா நித்யாந் ஹிகம் எனும் நூலில் புரச்சரணப் பிரகரணத்தில் காணலாம்.

2. ஆவாஹனம், ஆஸனம், பாத்தியம், அர்க்க்யம், ஆசமனம், ஸ்நானம், வஸ்திரதாரணம், ஆபரணதாரணம், சந்தனதாரணம், புஷ்ப தாரணம், தூபம், தீபம், நைவேத்யம், தாம்பூலம், பிரதக்ஷிணம், நமஸ் காரம் என 16 உபசாரங்கள்.

யாகும். அந்தப் பூஜையின் கிரமத்தை ஒட்டியே இந்த ஸ்தோத்திரம் அமைந்துள்ளதால் ஐக்ய பாவனையுடன் ஆவரண தேவதைகள் சூழக் கொலுவிருக்கும் தேவியின் பூர்ண வடிவத்தை நினைவிற் கொள்ளச் சிறந்த ஸ்தோத்திரமாகும். தீரனும் சூரனுமான ஒரு வீரனுக்குக் கத்தி பகைவரை வென்று ஸாம்ராஜ்யத்தை நிர்வகிக்க உதவுவதுபோல், தேவீகட்கமாலேயும் ஆத்யாத்மிக-ஆதிபௌதிக-ஆதிதைவிக ஸாம்ராஜ்யத்தைப் பகைவரின் இன்னலின்றி ஆள உதவும் என அதன் பலச்ருதியும் தியானமுமாய் அமைந்த சுலோகம் கூறும். ('தாத்ருசம் கட்கம் ஆப்நோதி யேந ஹஸ்தஸ்திதேந வை l அஷ்டாதசமஹாத்வீப-ஸம்ராட் போக்தா பவிஷ்யதி) கத்திபோல் உதவுவதால் கட்கமாலா என்ற பெயர். 15 வகையில் அதன் பிரயோகங்கள் விரிவுபடுவதால் பஞ்சதசமாலா. அந்த கட்கமாலேயை ஒத்த இந்த ஸஹஸ்ராக்ஷரவித்யையும் அதைப்போலவே தேவியின் அருளால் எல்லா விருப்பங்களேயும் நிறைவு பெறச் செய்யக் கூடியது.

3303 தேவியின் ஆவரண பூஜை செய்பவர்கள் அந்தந்த தளங்களிலும் வாயில்களிலும் சக்கிரங்களிலும் உள்ள யோகினிகளேப்பற்றி நன்கு அறிவர். அந்த பூஜை முறை அறியாதவரும் ஸ்ரீசக்கிர படத்தில் தேவியை வழிபடுவது உண்டு. அவர்களும் எளிதில் அறியும் வகையில் ஆவரணங்களின் வரைபடங்களேத் தனித்துக்காட்டி யோகினி முதலானவர்களின் இருப்பிடங்கள் எண்களால் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. தேவீ கட்கமாலேயில் உள்ள பாடபேதங்களே அறியும் வகையில் கட்கமாலேயில் மாறுபடும் பகுதிகளேமட்டும் மூலத்தில்* என்ற இரு குறிகளிடையே அடக்கி அடிக்குறிப்பில் மாறுபடும் பகுதிமட்டும் தரப்பட்டுள்ளது. மற்ற பகுதிகள் ஸஹஸ்ராக்ஷரவித்தையில் உள்ளபடியே எனக் கொள்ளவேண்டும். மந்திரத்தில் ஓர் அக்ஷரம் மாறுபட்டாலும் வேறுபட்டதெனக் கருதுவது முறை.




3304 இதனேத் தொடங்குமுன் பா. 0911-08-26ல் உள்ள ஸ்ரீசக்கிரவிளக்கத்தைப் படித்து மனத்திற்கொள்ளுதல் உதவும். இந்த சக்கிரங்களில் திசையைப் பற்றிக் குறிப்பிடும்போது புத்தகப் பக்கத்தின் கீழ்புறம் மேற்கு, இடதுபுறம் வடக்கு மேல்புறம் கிழக்கு, வலதுபுறம் தெற்கு. ஸ்ரீசக்கிரம் முதலானவற்றில் மேற்கு நோக்கி தேவி அமர்ந்திருக்கிருள். கிழக்கு

